Vol. XXXIII 1958—1959



# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு

முப்பத்துமூன்றாம் சிலம்பு

சு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

௧௯௫௮—௧௯௫௯

The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly, Ltd.,
Tirunelveli. :: Madras-1.

 [Price Rs. 6-00

## ‘செந்தமிழ்ச் செல்வி’

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்
### EDITORIAL BOARD MEMBERS

# உள்ளுறை

# படங்கள்

நூல் நிலையத்தைத் திறந்துவைத்து அமைச்சர் உயர்திரு எம். பக்தவத்சலம் அவர்கள் பேசுதல் ௩

நூல்நிலையப் பார்வையாளர் ஏட்டில சென்னை மாநில ஆளுநர் தம் கருத்தை எழுதுதலும், அமைச்சர் வருகையாளா பதிவேட்டில் கைெயழுத்திடுதலும் ௪

நூல்நிலைய முனகூடத்தில் அம்பலவாணர் திருவுருவததின் முன் மாண்பமை ஆளுநர், டாக்டர் அரங்கநாதனார், அமைச்சர், செயலாளர்.

பாகனேரி, தமிழ்ப் புரவலர், திருவாளர் மு காசிவிசுவநாதன் செட்டியாரும் அவர்தம் மனைவியாா திருவாட்டி இலக்குமி ஆச்சியாரும். ௫௭

பெருஞ்சொல் விளககனார், சிவத்திரு அ. மு சரவண முதலியாரவர்கள். ௱௨௫

பேராசிரியர், செகதீசு சந்திரபோசு ௧௫௪

பேராசிரியர், ம. கி. சண்முகனா ௫௪௭

மணிவிழாச் செல்வர், சிவத்திரு வே மாணிக்கவாசகம் பிள்ளையவர்களும் அவர்தம்வாழ்க்கைத் துணைவியார் திருவாட்டி சுப்புலட்சுமி அம்மையாரும் ௨௱௧

மாண்பமை ஆளுநர் விட்ணுராம் மேதி அவர்கள் தலைமையுரை நிகழ்த்துதல். ௧

முன்னாள் மேயர் டி செங்கல்வராயன் அடிகளைப் பாராட்டிப் பேசுதல் ௧

ராவ்சாகிப் கு. கோதண்டபாணிப் பிள்ளை சொற்பொழிவாற்றுதல் ௧

வைரவிழாக் கொண்ட குடந்தை சைவத் திருவாளர் பு. து. இரத்தினசாமிப் பிளளையவர்களும் அவா தம் துணைவியார் கலியாணத்தம்மாளும். ௧௧()

## மறைமலையடிகள் நூல்நிலையத் திறப்பு விழா



அமைச்சர் உயர்திரு எம். பக்தவத்சலம் அவர்கள் நூல்நிலையத்தைத் திறந்துவைத்தல்



சென்னை மாநில ஆளுநர் மாண்பமை விட்ணுராம் மேதி அவர்கள்
விழாப் பந்தலுக்கு வரும்போது செயலாளர் வ. சுப்பையா பிள்ளை
வரவேற்று மாலையிடல்



சங்கீதவாணி எம். எல். வசந்தகுமாரி இறைவணக்கம் பாடுதல்



சங்கச் செயலாளர் திரு. வ. சுப்பையா பிள்
வரவேற்புரை நிகழ்த்துதல்



காலை நிகழ்ச்சிக்கு வந்திருந்த பெருமக்களுள் ஒரு பகுதியார்



மாண்பமை ஆளுநர் விட்ணுராம் மேதி அவர்கள்
தலைமையுரை நிகழ்த்துதல்



நூல்நிலையத்தைத் திறந்துவைத்து
அமைச்சர் உயர்திரு எம். பக்தவத்சலம் அவர்கள் பேசுதல்



நூல்நிலையக் கட்டட முன்கூடத்தில் அமைந்துள்ள அம்பலவாணர் திருவுருவத்தின்முன் மாணபமை ஆளுநர், டாக்டர் அரஙகநாதனார், அமைசசா, செயலாளர்



நூல்நிலையக் கட்டட மாடியில்
சென்னை மாநில ஆளுநர் பார்வையாளர் ஏட்டில் தம் கருத்தை எழுதுதலும்
அமைச்சா வருகையாளர் பதிவேட்டில் கையெழுத்திடுதலும்



ஆளுநர் அவர்களைக் கூட்டத்திற்கு வந்திருந்த மக்கள் வழியனுப்புவித்தல்
(நூல்நிலையக் கட்டடம், விழாப்பந்தல், மல்லிகேசுரர் திருக்கோவில்



அறிஞர் சி. என். அண்ணாத்துரை சொற்பொழிவாற்றுதல்



முன்னாள் மேயர் டி. செங்கல்வராயன் அடிகளைப் பாராட்டிப் பேசுதல்



ராவ்சாகிப் கு. கோதண்டபாணிப் பிள்ளை சொற்பொழிவாற்றுதல்

## திருவாசக ஆங்கில மொழிபெயர்ப்பு
## வெளியீட்டு விழா

தலைவர் சென்னை மாநில ஆளுநர் மாண்புமை விட்ணுராம் மேதி,
உள்நாட்டமைச்சர் பக்தவத்சலம், அறநிலையப் பாதுகாப்பாளர்,
திரு. உத்தண்டராமன், மணலி இராமகிருட்டிண முதலியார் முதலியோர்

மொழிபெயர்ப்பாளர் K. M. பாலசுப்பிரமணியம் சொற்பொழிவாற்றல்




சிலம்பு ௩௩ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௯, ஆவணி
செப்டம்பர், 1958 | பரல் ௧

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தின்
ஆதரவில் நடைபெற்ற

# மறைமலையடிகள் நூல்நிலையத் திறப்புவிழா

இவ்விழா 1958 ஆகஃச்டு 24-ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமை காலை 9 மணியளவில் சென்னை, இலிங்கிச்செட்டித தெரு, 105 எண்ணுள்ள கண்கவா வனப்பினதாகிய வளமனையின் முன்னர்ச் சிறப்புற அமைக்கப்பட்ட அழகுமிக்க பெரிய பந்தர்க்கண் தொடங்கப் பெற்றது.

**பந்தற் சிறப்பு**

வளமனையினைச் சார்ந்து வடகீழ்பால் மூத்த பிள்ளையார் திருக்கோவில். இதன் வடபால் மலலிகேசுரர் திருக்கோவில். திருக்கோவில் தொட்டு வளமனையின் தென்பால் எல்லைகடந்து அகன்ற நெடுந்தெரு முற்றும் பரந்த பெரு நிலைப்பந்தல். பந்தல் மேற்கட்டியின் மேன்மையாலும் வாழை மாவிலை, பூவேலையமைந்த கொடி வகைகள், தோரணங்கள், பூமாலைகள், பல்வகை மின் விளக்குகள் இவற்றாலும், அழகிய இருக்கைகளாலும் கவினெய்தி மிக்க அழகுடன் பொலிந்து திகழ்ந்தது.

மூத்தபிள்ளையாரின் திருக்கோவிலை யொட்டிக் கிழக்கு முகமாக அழகிய மேடை அமைக்கப பெற்றுள்ளது மேடை அழகிய விரிப்புக்களாலும், எழுத்துப் பீடமாகிய மேசையினும், அம் மேசையின் விரிப்பினும், சிறந்த அழகிய பொன் பொலி இருக்கைகளாலும், பேச்சுக் கருவிகளாலும் பெரிதும்

அணிபெற்றுப் பொலிந்தது. பலவகை வாழ்த்தியங்கள் முழங்கின. ஊர்காவற்றுறையினரும், தொண்டர் குழுவினரும் நிரல்பட ஆங்காங்கே சீர்பெற நின்று சிறப்பித்தனர்.

வரவேற்பு

குறித்த நேரத்திற் சென்னைமாநில ஆளுநர்தம் நல்வரவினை எல்லாரும் உளங்கலந்த அன்பினுடன் வளமுற நகைமுகத்துடன் எதிர்நோக்கிய வண்ணம் நின்றனர். ஆளுநர் தம் அழகிய நிலப்பொறியூர்தியும் வந்தது. வருதலும் கழகத் தலைவர், ஆட்சித் தலைவர், இயக்குநர்குழு முதலியோர் புடைசூழ ஆளுநராகிய விழாத் தலைவரைக் கழக ஆட்சித் தலைவர் திரு. வ. சு. அவர்கள் பொன்னரி மாலைசூட்டி நன்முறையில் வரவேற்றனர். அதுபோல் சென்னை உள்நாட்டமைச்சர் அவர்களையும் பொன்னரிமாலை சூட்டி வரவேற்றனர். வாழ்த்தியங்கள் முழங்கின.

அனைவர்களும் மேடையின்மீது பீடுற அமர்ந்தனர். நடுவணதாகச் சென்னை மாநில ஆளுநர் மாண்பமை விட்டுணுராம் மேதி அவர்கள் தலைவராக வீற்றிருந்தனர். அவர்தம் வலப்பால் சென்னை உள்நாட்டமைச்சர் உயர்திரு. எம். பக்தவத்சலம் அவர்கள் அமர்ந்திருந்தனர் அதுபோல் இடப்பால் நூல்நிலைய நுண்கலை பேராசிரியர் பத்மஸ்ரீ எஸ். ஆர் அரங்கநாதன் அவர்கள் அமர்ந்திருந்தனர்.

பேரவைக்கண் பெருமிதத்துடன் அமர்ந்த பெருமக்களுட் சிலர் திருப்பெயர் வருமாறு :

..ச் சட்டமன்றத் தலைவர் டாக்டர் யு. கிருஷ்ணராவ்; நகரவைத் துணை ஆணையர் என். சங்கரன்; சரசுவதி பாண்டுரங்கம், எம். எல். சி; உயர்நீதி மன்ற நடுவர் கணபதியாபிள்ளை; நகரவை முன்னாள் ஆணையர் வி. என். சுப்பராய முதலியார்; தியாகராய கல்லூரி முதல்வர், எம். கே. சண்முகம்; அட்வகேட் வி. இராச கோபால முதலியார்; நகரமைப்பு அதிகாரி தி. வை. சபாபதி; சொ அமிர்தகணேச முதலியார்; இராவ்சாகேப் கு. கோதண்டபாணிப்பிள்ளை; ஆசிரியர் இளவழகனார்; பல்கலைக் கழக நூல் நிலையப் பேராசிரியர் சனார்த்தன நாயுடு; யூனியன் கம்பெனிப் பொறிவலர் கே. கே. விசுவநாதன், பி. இ; நெடுஞ்சாலைப் பொறிவலர் பா. நமசிவாயம், பி. இ முதலியோராவர்.

பேரவையின் பெருமக்கள் கூட்டம் பந்தல் முற்றும் நிறைந்து பந்தலின் இருபுறங்களிலும் நெடுந்தொலைவரைப் பெருவெள்ளமாக நின்றது. பெண்பாலார் கூட்டமும் பெருகியிருந்தது. அமைதியும் இருந்தது.

துவக்கம்

கடவுள் வாழ்த்துடன் விழாத் துவங்கப்பெற்றது. கடவுள் வாழ்த்து இசைச் செல்வி, எம். எல். வசந்தகுமாரியால் "அருள்புரிவாய் கருணைக் கடலே" என்னும் செந்தமிழ்ப்பாப் பாங்கமை பண்ணுடன் ஒங்குமென் குரலில் தேங்கும் அமிழ் தெனப் பாடப் பெற்றது. அவையினரனைவரும் எழுந்து நின்று நினைவொருங்கி மகிழ்வுறக் கேட்டு இன்புற்றனர். விழாத் துவங்கப் பெற்றது. மீண்டும் விழாத் தலைவரவர்கட்கும், திறப் பாளர் பேச்சாளர்கட்கும் மணமிகு மலர்மாலை திரு. வ. சு. அவர் களால் சூட்டப்பெற்றன.

சைவசித்தாந்த சங்கச் செயலாளர்

திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் நிகழ்த்திய

## வரவேற்புரை

பெரியோர்களே! தாய்மார்களே!!

மாண்பு மிக்க சென்னைமாநில ஆளுநர் விட்ணுராம் மேதி அவர்களே வருக! வருக! உங்கள் வரவு நல்வரவாகுக. மேதி அவர்களுடைய தகுதி நோக்கியே மைய அரசினர் சென்னை மாநில ஆளுநராகத் தேர்ந்தெடுத்து அனுப்பியிருக்கின்றனர். மேதி அவர்கள் அஸ்ஸாம் மாகாணத்தில் பிறந்து, கல்கத்தாவில் கல்லூரிப் படிப்பை முடித்துப் பட்டம்பெற்று அஸ்ஸாமில் கௌகதி நகரில் வழக்கறிஞராகச் சில ஆண்டுகள் தொழில் புரிந்து தமது முப்பதாம் ஆண்டளவில் ஒத்துழையாமை இயக் கத்தில் ஈடுபட்டு நாலைந்துமுறை சிறைசென்று பின்னர் சட்ட சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு 1946-ஆம் ஆண்டில் வரித் துறை, நிதித்துறைகளின் அமைச்சராகவும், பின்னர் 1957-ஆம் ஆண்டு முடிய முதலமைச்சராகவும், மக்கள் மனங்கவர ஆட்சி செலுத்தி வந்தனர். இப்படிப்பட்ட பெருந்தகுதி வாய்ந்த மேதி அவர்கள் நமக்கு ஆளுநராக வந்தமை நாம்பெற்ற பெரும் பேறாகும். தமிழ்மொழியின் தொன்மை, சிறப்பு, தமிழர் நாகரிகம், தமிழ் நாட்டிலுள்ள கலைகள் இவற்றைக் கண்டு பெரு மைப் படுவதோடு, இவற்றின் வளர்ச்சிக்கு மேலும் உதவிபுரி வார்களென்று நம்புகிறோம். மேதி அவர்கள் பல்லாண்டுகள் வாழ்கவென வாழ்த்துவோம்.

சென்னை உள்நாட்டு அமைச்சர் உயர்திரு. பக்தவத்சலம் அவர்களே வருக! வருக! உங்கள் வரவு நல்வரவாகுக. அமைச் சரவர்களுக்கும் ஆளுநரவர்களுக்கும் ஓர் ஒற்றுமை காணப்படு கின்றது. ஆளுநரவர்களைப்போலவே அமைச்சரவர்களும் தமது முப்பதாம் வயதில் அரசியல் வாழ்க்கையில் ஈடுபட்டுப் பின்னர் 1946 முதல் அமைச்சவையில் அமைச்சராக இருந்து நாட்டுக்கு

நற்றொண்டு புரிந்து வருகின்றனர். முதற்கண் உணவுப்பொருள்களுக்கு மூலகாரணமாயுள்ள நீர்ப்பாசனத்துறை, மின் ஆற்றல் துறைகளின் அமைச்சராக இருந்து பின்னர், மக்கள் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத பயிர்த்தொழில் அமைச்சராகி இப்போது உடற்பாதுகாவற்றுறை, உயிர்நலத் (அறநிலையம்) துறைகளின் அமைச்சராக இருந்து வருகின்றமை நமக்குப் பெருமகிழ்வினைத் தருவதாகும். முதலமைச்சர் திரு. காமராசர் அவர்கள் மறைமலையடிகள் நூல்நிலையத்தைத் திறப்பதற்கு முதற்கண் ஒத்துக்கொண்டார்கள். பின்னர் இத்திங்கள் தொடக்கத்திலே குடியரசுத் தலைவர் இங்கே வந்தமையால் தமது வெளியூர்ப் பயணத்தை மாற்றியமைக்கவேண்டியதாயிற்று என்றும், திரு. பக்தவத்சலம் அவர்களைக்கொண்டு திறப்பிக்கச் செய்யுங்களென்றும் கூறினார்கள். உடனே உயர்திரு. பக்தவத்சலம் அவர்களைக் கண்டு கேட்கவே மறுக்காமல் ஒப்புக்கொண்டார்கள். அவர்கள் ஒப்புக்கொண்டது எதிர்பாராது கிடைத்த பெரும்பேறெனமதிக்கின்றேன். ஏனெனில் 1946-இல் எட்டையபுரத்தில் பாரதி மண்டபம் திறப்பிக்கப்பெற்ற அன்று மாலையில் திருநெல்வேலிக் கூடலில் நகராட்சிப் பூங்காவிலே எம் ஏ ,எம். எல்., தாகூர் சட்ட விரிவுரையாளர் உயர்திரு கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் வரலாறு பொறிக்கப்பட்ட நடுகல்லை நம் அமைச்சரவர்கள் நாட்டினார்கள். உயர்திரு. எம். எல் பிள்ளை அவர்கள் சட்டக் கல்லூரியில் நம் அமைச்சரவர்களின் ஆசிரியர் ஆவர். அஃதொரு பொருத்தமல்லவா? உயர்திரு. எம் எல். பிள்ளை அவர்கள் உருவப்படம் மாலையில் இங்கே திறந்து வைக்கபபெறும்.

அரசியல் தலைவராய்ப் புகழ்பெற்று விளங்கியவரும், நம் அமைச்சரவர்களின் மாமனாருமாகிய உயர்திரு. சி. என். முத்துரங்க முதலியாரவர்கள் சென்னை கிறித்தவக் கல்லூரியில் மறைமலையடிகளாரின் மாணவர் ஆவர். மறைமலையடிகளாரின் நூல்நிலையத்தைத் திரு பக்தவத்சலம் அவர்கள் திறந்துவைக்கும்படி ஏற்பட்டது மிக்க பொருத்தமாகக் காணப்படுகின்றதல்லவா? திரு. அமைச்சரவர்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழ்கவென வாழ்த்துவோம.

இனி, நூல்நிலைய நுண்கலையில் உலகப்புகழ்பெற்ற பெரும் பேராசிரியர் பத்மஸ்ரீ எஸ். ஆர். அரங்கநாதன் அவர்களே வருக! வருக! உங்கள் வரவு எங்களுக்கு மிக்க பெருமை தருகின்றது. நூல்நிலைய நுண்கலையைப் பற்றி ஐம்பதுக்கு மேற்பட்ட நூல்களும், ஆயிரத்துக்கு மேற்பட்ட கட்டுரைகளும் தாங்கள் எழுதி வெளியிட்டமையை நினைத்து நினைத்து இறும்பூதெய்துகின்றோம். சென்னை மாநிலக் கலைக்கல்லூரியில் கணிதப்பேராசிரிய

ராக இருந்து பின்னர் 1924 முதல் 1944 வரை சென்னைப் பல்கலைக் கழக நூல்நிலையத் தலைவராகப் பணியாற்றி அதன்பின் காசிப் பல்கலைக் கழக நூல்நிலையத் தலைவராயும், டில்லி நூல் நிலையத் தலைவராயும் அமர்ந்து பணிபுரிந்து இப்போது பல்கலைக் கழகப்பொருட்கொடை நிலையத்தின் (University Grants Commission) நூல்நிலையக் குழுத் தலைவராயிருக்கின்றமை எங்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சி தருகின்றது.

சென்னைமாநில ஆளுநர் தலைமையில் உள்நாட்டமைச்சர் திறந்துவைக்கும் மறைமலையடிகள் நூல்நிலையத் திறப்பு விழா வின்போது சொற்பொழிவாற்றுவதற்குப் பெருந்தகுதியுடைய வர் நூல்நிலையப் பேராசிரியராகிய டாக்டர். அரங்கநாதன் அவர்களே ஆவர் எனக்கருதி அவர்கள் பெங்களூரில் தங்கியிருக்கிறார்கள் எனக்கேள்வியுற்று எழுதிக்கேட்டேன். அவர்கள் பேரன்புடன் இசைவு தெரிவித்து எந்தப் பொருள்பற்றிப் பேசவேண்டுமென்று உசாவினார்கள். 'நூல்நிலையத் தொண்டு' என்னும் பொருள்பற்றிப் பேசவேண்டினேன். அதனை முன்னதாக எழுதி அனுப்புமாறு கேட்டபடி அவர்களும் இசைந்து எழுதி அனுப்பியுள்ளார்கள். அஃது அச்சிடப்பட்டு வெளிவந்திருக்கின்றது. அவர்கள் இருமுறை நூல்நிலையக் கட்டடத்திற்கு வந்து நூல்நிலையத்திற்கேற்றவாறு இக்கட்டடத்தைச் சீர்திருத்தி அமைப்பதற்கேற்ற சிறந்த கருத்துக்களைத் தெரிவித்தார்கள். இந் நூல்நிலையம் பல்லாற்றானும் சிறந்து விளங்குவதற்குத் தம்மாலான உதவிகளை எப்போதும் செய்வதாக உறுதி கூறியுள்ளார்கள். இவர்களுடைய தியாகத்தைப்பற்றி ஒன்று தெரிவிப்பது முதன்மையாகின்றது. சென்ற ஆண்டில் நடைபெற்ற சென்னைப் பல்கலைக் கழக நூற்றாண்டு விழாவின்போது ஒரு நூறாயிரம் வெண்பொற் காசுகளை நூல்நிலையப் பட்டப்படிப்பின் பொருட்டு நன்கொடை அளித்துள்ளார்கள். அது மிகமிகப் போற்றுதற்குரிய அரிய செயலாகும். தாம் குடியிருக்கும் திருவல்லிக்கேணியிலுள்ள பழைய வீட்டிலேயே எளிய வாழ்வை நடத்திக்கொண்டு தாம் ஈட்டிய பொருளில் பெரும்பகுதியை நன்கொடையாக வழங்கியதை நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் எல்லையற்ற மகிழ்ச்சி பெருகுகின்றது. நூல்நிலையப் பேராசிரியரே வாழ்க! வாழ்க! வென வாழ்த்துவோம்.

இனி, மறைமலையடிகள் நூல்நிலையம் இங்கே அமைக்கப் பெறுவதுபற்றிச் சில சொல்ல விரும்புகின்றேன். மறைமலையடிகளார் நாகப்பட்டினத்திலே பிறந்து கல்விபயின்று 1898-ஆம் ஆண்டில் சென்னைக்குப் போந்து கிறித்தவக் கல்லூரியில் 1911-வரை தமிழாசிரியராக இருந்து பின்னர் பல்லாவரம் சென்று

தங்கி நூல் எழுதுவதிலும், நூல் ஆராய்வதிலும் ஈடுபட்டார்கள். தமது ஆராய்ச்சிக்கெனத் தமிழ் ஆங்கிலம் ஆரியம் என்ற மும்மொழிகளிலும் நாலாயிரத்துக்கு மேற்பட்ட நூல்களை வாங்கித் தொகுத்து வைத்திருக்கின்றனர். அவர்கள் வாங்கிய நூல்களில் படிக்காத நூல் ஒன்றும் இருக்காது. நூல்கள் அனைத்திற்கும் மேல்உறையிட்டே வைத்திருக்கின்றனர். நூல்களை உயிர்போல் போற்றிவந்தனர். 15-9-1950-இல் அடிகள் இறையடி சேர்வதற்குச் சில நாட்களுக்குமுன் கருத்து நிறைவேற்றத் தாள் (உவில்) எழுதியதில் தமது மணிமொழி நூல்நிலையத்தைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரிடம் ஒப்புவித்துத் தமது பெயரால் பொதுமக்களுக்குச் சென்னையிலேயே தகுந்த இடத்தில் அமைத்து இலவசமாக நடத்தும்படி குறிப்பிட்டுள்ளார்கள். உவில்பற்றிய அப்பீல் வழக்கு 30-4-1957-இல் செயற்குழுவினர் பக்கமாக முடிவாயிற்று 25-4-57-இல் இந்த நூல்நிலையக் கட்டடம் எங்கள் கழகத்திற்கு வாங்கப்பட்டது. அடிகளார் கருத்தின்படி சிறந்த இடத்திலே அமைந்துள்ள இக்கட்டிடத்தில் நூல்நிலையம் திறக்கப்பெறுவது எல்லாரும் போற்றி மகிழ்தற்குரியது. எங்கள் கழகம் தமிழ்நாட்டிலே நூல்வெளியீட்டுக்கென முதன்முதல் தோன்றிய பப்ளிக் கம்பெனியாகும். பங்கு ஒன்றுக்கு ரூ. பத்து வீதம் 5,000 பங்குகளுக்கு ரூ. 50,000-ம் இக் கழகத்துக்கு முதலீடாகும். இதுகாறும் 950 க்கு மேற்பட்ட நூல்களைப் பல துறைகளில் வெளியிட்டிருக்கின்றது. ஆண்டுதோறும் கிடைக்கும் மிச்ச லாபத்தில் பேர்பாதி அறச்செயல்களுக்காக வழங்கி வருகின்றது. தமிழ் வளர்ச்சிக்காகத் தென்னிந்திய தமிழ்ச் சங்கமும், சமய வளர்ச்சிக்காகத் தென்னிந்திய சைவசித்தாந்த சங்கமும், இக்கழகத்தின் அறநிலையங்களாகும். தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தின் சார்பில் இந்நூல்நிலையக் கட்டிடம் வாங்கப்பெற்று மறைமலையடிகள் நூல்நிலையம் இங்கே திறப்பிக்கப்படுகின்றது. அடிகளார் நூல்களோடு கழகம் தொகுத்துவைத்த ஐயாயிரத்துக்கு மேற்பட்ட நூல்கள் இங்கே காணப்பெறும். இந்தக் கட்டிடம் ரூ. 57,000க்கு வாங்கப்பெற்றுச் சீர்திருத்தவகைக்காக ரூ. 20,000க்கு மேல் செலவு செய்யப்பட்டிருக்கின்றது. இந்த நூல்நிலையத்திலுள்ள நூல்கள் சாதாரண அறிவுடையவர்க்குப் பயன்படா. மொழி, வரலாறு, தத்துவம் ஆகிய மூன்று துறைகளிலும் ஆராய்ச்சி செய்ய விரும்புபவர்க்கு வேண்டிய அரிய நூல்களெல்லாம் இங்கே இடம்பெற்றிருக்கின்றன. ஆராய்ச்சி செய்ய வருபவர்களுக்கு இங்கே வசதிகள் செய்து தரப்படும் இதனை 'ஆராய்ச்சி நூல்நிலையம்' என்று கருதுதல் மிகையாகாது.

இங்கே குழுமியுள்ள அறிஞர்களும், பொதுமக்களும், தாய்மார்களும் அமைதியோடிருந்து விழாவைச்சிறப்பிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். சென்னை மாநில ஆளுநரவர்களே! இவ்விழாவிற்குத் தலைமை தாங்கித் தொடங்குமாறு தங்களைப் பணிவுடன் வேண்டிக் கொள்ளுகிறேன்.

## நூலகத் திறப்பு விழாவில் சென்னை மாநில ஆளுநர் மாண்பமை விட்ணுராம் மேதி அவர்கள் ஆற்றிய தலைமையுரையின் தமிழ்ச் சுருக்கம்

அன்புடையீர்,

இந்நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்க அழைத்த சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினருக்கு முதற்கண் என் நன்றிகலந்த வணக்கத்தைத் தெரிவிக்க விரும்புகின்றேன். இந்த நிகழ்ச்சியில் இலக்கியத் துறையிலும் நூலகத் துறையிலும் விருப்புள்ள பலர் பங்கெடுத்துள்ளதை அறிந்து மகிழ்ச்சியடைகிறேன். என்னைப் பொறுத்தவரை இங்குத் திரு. பக்தவத்சலமும், டாக்டர், அரங்கநாதனும் பொதுவாக இந்நூலகத்தைப் பற்றியும் நூலகத் தொண்டைப்பற்றியும என்ன கூறப் போகிறார்களோ அதையே நான் கேட்பதற்கு மிகவும் விருமபுகின்றேன் டாக்டர் அரஙக நாதன் நூலகத துறையில் தலைசிறந்தவர். அதனால் நூலகத்தைப் பற்றியும நூலக இயக்கத்தைப் பற்றியும அவரையே விளக்க விட்டுவிடுகிறேன். தாங்கள் அளித்த அன்புகலந்த வரவேற்பிற்கு என் நன்றி.

மறைமலையடிகள் நூல் நிலையத்தைத் திறந்து வைக்க நாம் இங்குக் கூடியுள்ளோம். சுவாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகள் தமிழ்நாடு முழுவதும் அறிந்த ஒருவர். தமிழ்க் கலை, பண்பாடு, இலக்கியம, சமயம் இவற்றோடு நெருங்கிய தொடர்புடையவர். அவருடைய வாழ்க்கையிலிருந்தும் அவருடைய நூல்களில் காணப்படும் சிறந்த கருத்துக்களிலிருந்தும் புத்துணர்ச்சி ஊக்குவிப்பதற்கு இஃது ஒருநல்ல வாய்ப்பாகும்.

மறைமலையடிகள் தஞ்சை மாவட்டத்தில் 1876-இல் பிறந்தவர். அவருடைய இளமையில் பெற்றோர் செழிப்பில்லாத நிலையில் இருந்தனர். பள்ளியில் பயிலும் பொழுதே தமிழ் இலக்கிய இலக்கணஙகளைத் தகுந்த பெரும் புலவர்களிடம் பாடம் கேட்டுவநதார். அது மொழி வளத்தைப் பெருக்கிக் கொள்ள அவருக்குப் பேருதவி செய்தது. இறுதியாக, கிறித்தவக் கல்லூரியில் அவர் விரிவுரையாளராக அமைநதபோது தம்முடைய ஆற்றலையெல்லாம் வெளிப்படுத்த வாய்ப்பெடுத்துக்

கொண்டார்- ஞானசாகரம் என்ற தமிழ்த் திங்கள் வெளியீ டொன்றை வெளியிட்டார். "சைவ சித்தாந்த மகா சமாசம்" நிறுவுவதற்கு முதற்கருவியாக அமைந்தார்.

தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மூன்று மொழி இலக் கியங்களிலும் அறிஞராக விளங்கினர். இப்பொழுது திறந்து வைக்கும் இந்நூலகத்திற்குக் காரணமாயிருப்பவர் மறைமலை யடிகளே. அவர் 1950-இல் இவ்வுலகை நீத்தபொழுது தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மூன்று மொழிகளிலும் தாம் சேர்த்து வைத்திருந்த ஏறக்குறைய நான்காயிரம் நூல்களையும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரிடம் கொடுத்துப் பொது நூல்நிலையம் ஒன்றை நிறுவ வேண்டினர். அவ்வாறே இக்கழகத் தினரும் தாம் சேர்த்து வைத்துள்ள ஐயாயிரத்திற்கு மேற்பட்ட நூல்களையும் இணைத்துள்ளனர். இவர்களிடம் ஆராய்ச்சி வல்லு நர்க்கு வேண்டிய பல அரிய நூல்கள் உள்ளன.

மறைமலையடிகள் ஏறக்குறைய ஐம்பது நூல்கள் இயற்றி யுள்ளார். கட்டுரைகள், மொழிபெயர்ப்பு, ஆராய்ச்சி நூல்கள், புதினம் போன்ற பல துறைகளில் அவர் நூல்கள் இயற்றியுள் ளார். இந்நாட்டின் சமயம், பண்பாடு ஆகியவை வளர அவர் பெருந்தொண்டாற்றியுள்ளார்.

மறைமலையடிகள் தம் வாழ்க்கையில் இவ்வளவு அரிய நூல் களைத் தொகுத்து ஒழுங்காகப் போற்றிவந்த நல்ல பழக்கம் பாராட்டத் தக்கது. அவர் ஒவ்வொரு சிறு செயலையும் தவறாது செய்வார் என்பதை அவருடைய வாழ்க்கை வரலாற்றைப் படித்தபோது உணர்ந்தேன். ஒரு நூலைக் குறிப்பிட்ட ஓர் இடத்தில் வைத்து அதை எடுத்துப் படித்தபின் அதை அதற் கென்று குறிப்பிட்ட இடத்திலேயே வைப்பதைப் போன்ற சிறு செயல்களில் கூட ஒழுங்கைக் கடைப்பிடித்திருக்கிறார். பொது வாக நம் வாழ்க்கையில் நாம் இத்தகைய சிறு செயல்களை எண்ணிச் செய்வதில்லை இப்பழக்கம் வாழ்க்கையில் முன்னேறு வதற்கு முறைகளை வகுத்துக்கொடுக்கின்றது.

எடுத்துக்காட்டாக நூலகமொன்றில் ஒரு நூல் அதற் கென்று குறிப்பிடப்பட்ட இடத்தில் இல்லை என்றால் எவ்வளவு இடையூறாக இருக்கின்றது? இவை சிறு செயல்களாக இருந் தாலும் சமூகத்திற்குப் பணிபுரியும் ஒருவருடைய பண்பை உருவாக்குகின்றன. ஒரு குறிக்கோளையோ அல்லது நல்லெண் ணத்தையோ நிறைவேற்றுவதற்காக வாழ்ந்த பேரறிஞரான மறைமலையடிகளுக்கு என் நன்றியறிதலையும் பாராட்டுதலையும் அளிக்க விரும்புகிறேன். சிறப்பு மிக்க இத்தறுவாயில் தமிழ்

இலக்கியம், நாடு, கலை, பண்பாடு, இவற்றிற்கு அவர் ஆற்றிய அரும்பணியை நினைத்து அவரைப் பாராட்டவேண்டியது நம் கடமையாகும்.

கழகம் இந் நூலகத்தைப் பொது நூலகமாக்கி இலக்கியத்தை விரும்புவோர் அனைவருக்கும் அவர்கள் அறிவை மேலும் வளர்க்க உதவும் என்பதில் ஐயமில்லை. நூலகத்திலுள்ள நூல்களை மக்கள் பலமுறை எடுத்துப் பயன்படுத்தல்வேண்டும். நூல்களைச் சேமிப்பாகச் சேர்த்துவைப்பது மட்டும் நூலகத்தின் நோக்கமன்று. நூல்கள் பலமுறை பல்லோராலும் எடுத்துப் படிக்கப்படல் வேண்டும் என்பதே முதல் நோக்கமாகும். நூலகத்தைத் திறமையாக நடத்துவது நூலக அலுவலரை மட்டுமல்லாது நூலகத்தைப் பயன்படுத்துவோரையும் சாரும்.

எனவே இந் நூல்நிலையம் இன்று திறக்கப்படுகின்றது. உங்கள் எல்லோருடைய வாழ்த்துக்களுடன் திறக்கப்படும் இந் நூலகம் மறைமலையடிகள் கொண்ட நோக்கத்தை நிறைவேற்றும் என்று எதிர்பார்க்கிறேன். இந்த நல்லதொரு முயற்சியில் ஈடுபட்ட கழகத்தாரை நான் பாராட்டுகிறேன். திரு. பக்தவத்சலம் அவர்களை இந் நூல்நிலையத்தைத் திறந்துவைக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

## நூல்நிலையத் திறப்பு

பின், உள்நாட்டமைச்சரவர்கள் "நூல்நிலையத் திறப்புரை" யினைச் செந்தமிழ் வளம் துளும்ப நாநவில் நலத்துடன் நவின்றனர். அதன் சுருக்கம் வருமாறு:

தமிழ்மொழி நம் தாய்மொழியாகும் கல்வியின் அருமை பெருமைகளை நம் முன்னோர் உணர்ந்திருந்ததுபோல் உலகத்தில் வேறெவரும் உணர்ந்ததாகத் தெரியவில்லை. அவ்வுண்மையினை அதற்கமைந்துள்ள 'கல்வி' என்னும் சொல்லே கட்டுரைக்கும். தமிழ்த் தாய்மொழிதானே எல்லாங் கற்றுவிட்டோம்; இனி ஏதுங் கற்கவேண்டுவதில்லை என்று சிலர் எண்ணுகின்றனர். அது தவறு. கல்விக்கு எல்லை இல்லை. "கற்றது கைம்மண்ணளவு கல்லாததுலகளவு" என்பது நம் நாட்டுப் பழமொழி. மேலும் கல்வியினைத் தெய்வமாகக் கருதி அதற்குச் சிறப்பான விழை தக்க வியன்வழிபாடு செய்து வருவதும் நம் தமிழ்நாடு ஒன்றில் மட்டும்தான் உள்ளது. வேறு நாடுகளில் இம் முறையில் இல்லை. அங்கெல்லாம் "தசரா" என்று கொண்டாடுகிறார்கள். கல்வியின் தெய்வமாகிய நாமகளுக்குத் திருக்கையில் ஏட்டுச்சுவடி ஒன்றினை இயைத்துள்ளார்கள்.

அதனாலேயே மேலும் மேலும் நாம் கற்கும் கருத்துடைய ராகவேண்டுமென்பது உறுதி. தமிழிலேயே நாம் கற்கவேண்டும் நூல்கள் அளவிறப்ப உள்ளன. பிறமொழிகளையும் கற்றல் வேண்டும். முன்பெல்லாம் அச்சிற் பதித்த சுவடிகள் கிடையா. அக்காலத்தில் ஏட்டுச்சுவடிகளே உள்ளன. அவற்றை நம் முன்னோர்கள் நன்கு பேணிவைத்துள்ளார்கள். அவர்களை நாம் பாராட்டுதல் வேண்டும். பழங்காலத்தில் இதுபோன்ற நூல்நிலையங்கள் கிடையா. திருக்கோவில்களில் பல வரலாற்றுச் செய்திகளைக் கல்லிற் செதுக்கியுள்ளார்கள். அவைகளே அக்காலத்து நூல்நிலையங்களாகத் திகழ்கின்றன. அவற்றையும் திருக்கோவில்களையும் நாம் காத்தோம்புதல் வேண்டும்.

மறைமலையடிகளார் மும்மொழி வல்லவர். அவர் தமிழுக்குச்செய்த தொண்டு அளவிறந்தன. அவர்கள் திருப்பெயரால் நிறுவப்படும் இந்நூல்நிலையம் மேன்மேலும் சிறந்து பொது மக்களுக்குப் பெரும்பயன் விளைக்குமாக.

தமிழ் நூல்கள் எளிய நடையில் எழுதப்படுதல் வேண்டும். எல்லாரும் எளிதாக வாங்கிக் கற்குமாறு மலிவான விலையில் வெளியிடுதல் வேண்டும். நூல்நிலையமும் விழாவும் சிறப்புற வாழ்த்துகின்றேன்.

## நூல்நிலையத் தொண்டு

பின் நூல்நிலையப் பேராசிரியர் டாக்டர் பத்மஸ்ரீ எஸ். ஆர். அரங்கநாதன் அவர்கள் "இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் நூல் நிலையத் தொண்டு" என்னும செவிககுணவாம சிரிய விருந்தமிழ் தினைத்திருந்திய திந்தமிழாற சுவைபெறச் செப்பி அனைவர்களையும் மாந்தி இன்புறச் செய்தனர்.

இன்றைய எனது பேருரையின் தலைப்பு "நூலகம்" அன்று, நூலகப்பணி. நான் வலியுறுத்தும் இவ் வேறுபாட்டுக்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்றுசிறப்பு. மற்றது பொது.

### 1. சிறப்புக் காரணம்

சிறப்புக் காரணம் இன்றைய பேருரைக்கு வழிவகுக்கும் நிகழ்ச்சியிலேயே அடங்கியுள்ளது.

இன்று நாம் ஒரு மிகமுக்கியமான விழாக்கொண்டாடுகிறோம். ஏடுகளைப் பயன்படுத்துவதில் பெரும் பேரார்வம் கொண்ட ஒருவரால் பல ஆண்டுகளாகச் சிறுகச் சிறுகத் தொகுத்துருவாக்கப்பட்ட ஒரு நூல் தொகுதியை நாம் இன்று

பொதுமக்கள் எல்லாரும் பயன்படுத்தும்படியாக நூலகமாகத் திறந்துவைக்கிறோம். இடைஇருட் காலக் கனதனவான்கள் தம் மதிப்புக்குரிய சின்னங்களாக நூல்கள் தொகுத்துவைத்ததுண்டு. நம் மறைமலையடிகள் செய்தி இதுபோன்றதன்று. அவர் நூல்களை யெல்லாம் முற்கால ஊழிகளின் காலங்கடந்த மதிப்புடைய கருத்துக்களின் திருவுருக்கள் என்றே கருதினார். அவற்றை அந் நிலையிலே பயன்படுத்துவதற்கு அவர் விதிர் விதிர்ப்புக்கொண்டார். தான் பயன் படுத்தியதன்பின், அவர் இதனைச் சேர்த்துத் தொகுத்துவைத்தமுறை சுவையுடைய கனி கிழங்குகளைத் திரட்டி வைத்த சபரியின் செயலையே நினைவூட்டுவதாகும். சிராமன், இலக்குமணன் ஆகியவர்கள் சேவையிலீடுபட்டு அவர் களுக்கு அளிப்பதற்காகவே சபரி அவற்றைத தொகுத்துவைத் தாள். மறைமலையடிகள் இத்தொகுப்பைத திரட்டியதும் இது போலப் பொதுமக்கள் சேவையை உளத்தில் கொண்டேதான் என்பது குறிப்பிடத்தக்கது.

அடிகள் ஏடுகளைத் திரட்டிச்சேர்த்த வகை கடவுளின் திரு வுணவுக்காகக் கண்ணப்பர் உணவு தேர்ந்தெடுத்துச் சேர்த்த முறையை ஒப்பதாகும். முதலில தான்தின்று சுவை பார்த்துக் கடவுளுக்கேறற தென்று கருதாத எதனையும கண்ணப்பர் கடவு ளுக்குப படைக்க முன்வந்ததிலலை மறைமலையடிகள் செயலும் இதுபோன்றதே. தொகுதியிலுள்ள நூல்களில் அவர் முற்ற முழுக்க வாசிக்காதது, வாசித்து, இது மக்களுக்கு அளிக்கும் தகுதியுடையது என்று அவர் தேர்ந்தெடுக்காதது ஒன்றுகூடக் கிடையாது. ஏடுகள் ஒவவொன்றுக்கும் அவர் தனித்தனியாக அட்டையுறை இட்டுத தூசுபடாமல் உன்னிப்பாகக காத்து வைத்த முறையையும்; ஏடுகள் ஒவ்வொன்றையும் வரிவரியாக முழுதும் வாசித்துப் பயன்படுத்திய பின்னும் புத்தம்புதியன போல அவற்றைப் பேணிய வகையையும் காண்போர் வியப்படை யாமலிருக்கமுடியாது. ஏடுகளை அவர் வருங்காலப் பொதுமக்கள் பயனீடு நோக்கியே பேணி வைத்திருந்தாரென்பதற்குச் சான்று கள் தேவைப்படுமேயானால், அதற்கு இஃது ஒன்றே போதியது ஆகும். புத்தகங்கள் பயனீட்டுக்கே உரியவை என்ற எனது நூலகததுறையின் முதல் ஒழுஙகை அடிகள் தம் நோக்கத்தில் அன்றே கொண்டிருந்தார் என்பது தெளிவு.

### இணை ஒத்த இருசெய்திகள்

நம்கால இந்திய வாழ்விலே அடிகளின் இவ்வியத்தகு சிறப் புக்கு இணையாக இரண்டே இரண்டு செய்திகளைத்தான் நம்மால் எடுத்துக்காட்டமுடியும். ஒன்று சென்னையிலேயே சர். பி. எஸ். சிவசாமி ஐயர் தொகுத்துவைத்த சீரிய ஏட்டுத் தொகுப்பு.

அவரும் தம் ஏட்டுத் தொகுப்பில் ஒன்றுகூட வாசிக்காது விட்டு வைத்தவர் அல்லர். உண்மையில் அவர் புத்தகக் கடையிலேயே முழுவதும் வாசித்துப் பார்த்துவிட்டு, பிறருக்குப் பயன்படும் தகுதியுடையதாயிருந்தால் மட்டுமே அதை வாங்கி அந்நோக்கத் துக்காகச் சேமித்து வைப்பது வழக்கமாம். தம் ஏட்டுத்தொகுதி தமக்குப்பின் மெய்யாகவே பொதுமக்கள் சேவைக்குச் செயல் முறையில் வழங்கப்படுமா என்பதுபற்றி வாழ்வின் பிற்பகுதியில் அவர் எவ்வளவோ கவலைப்பட்டதை நான் அறிவேன்.

நூல் தொகுதிகளின் மிகமிகப் பெரிதான மற்றொன்று உண்டு—அந்நாட்களில் தேசத்தில் பல பல்கலைக் கழகங்களின் நூலகங்களில் இருந்துவந்த நூல் தொகுதிகளைவிட அது மிகப் பெரிதாகவே இருந்தது. இதனைச் சேமித்தவர் கல்கத்தாவுக்குரிய சர் அசுடோஷ் முகர்ஜி ஆவர். 1934-இல் நான் இதனைச் சென்று பார்வையிட அழைக்கப்பட்டிருநதேன். புத்தகங்கள் பெரும் பாலானவற்றிலும் ஓரங்களில் சர் அசுடோஷ் கைப்படக்குறித்த குறியீடுகளும் ஓரக்குறிப்புக்களும் நிரம்பியிருப்பதை நான் கண்டேன். இந்தப் புத்தகங்களைப் பொதுமக்கள் சேவைக் குரியனவாக்குவது எவ்வாறு என்பதே அவர் வாழ்வுக்குப்பின் பெருமாட்டி முக்கர்ஜிக்கும் அவர் புதல்வருக்கும் உரிய மிகப் பெருங் கவலையாயிருந்தது. நல்லகாலமாக, கல்கத்தாவிலுள்ள தேசிய நூலகம் அத்தொகுதியை ஏற்றுப் பேண முன்வநதபின் இந்தக்கவலை எளிதில் தீர்ந்தது.

மறைமலைத் தொகுதி

மறைமலைத் தொகுதிபற்றி நான் மிகவும் பெருமைப்படு கிறேன். சர் பி. எஸ். சிவசாமியையரையோ, சர் அசுடோஷையோ போன்றவரல்லர் அவர்—அவர் செல்வ வளமிக்க வழக்கறிஞராய் வாழவில்லை. ஏழைக் கல்வியாசிரியராகவே வாழ்ந்தார். சென்னை கிறித்தவக்கல்லூரியில்—நான் பயின்ற கல்லூரியும் அதுவே— இந்திய மொழியகத்தின் தலைவராய்ப் பணியாற்றியவர் அவர். ஆயினும் நாம் ஒப்பிட்டுக்காட்டிய மூன்று ஏட்டுத் தொகுதிகளி லும் மிகவும் வாய்ப்பு வளமிக்க தொகுதி மறைமலையினதே யாகும். அவரே தோற்றுவிக்கக் காரணமாயிருந்த தென்னிந்திய சைவசித்தாந்தக் கழகமென்ற வெளியீட்டகம் தன் அமைப்பு விதி களினடிப்படையிலேயே இத் தொகுதியைப் பேணி மேன்மேல் வளர்க்கும் கடப்பாடும் ஆற்றலும் உடையதாய் அமைந்துள்ளது. இம்முறையில் இத்தறுவாயில் நான் ஒரு தனி வேண்டுகோள் விடுக்க விரும்புகிறேன். இலவசப் பொதுமக்கள் சேவைக்கே செலவிடப்படுகிற சைவசித்தாந்த நூல்வெளியீட்டுக் கழகத்தின் சேமிப்பிலும் தன் 'தசைப்பங்'கை விடாப்பிடியாகக் கோரும்

மைய வருமானக்குழுமத்தாரின் (Central Board of Revenue) கண்மூடிக் கண்டிப்பு, உண்மையில் நாட்டுநல முன்னேற்றத்துக்கு உகந்ததன்று என்பது அவர்கள் எண்ணிப்பார்த்துணர வேண்டிய ஒரு செய்தியாகும். சட்டசபை அரசாங்க வரிசையில் இருப்பவருள் நாட்டியல்வாதியாகிய எவரேனும் இதில் குறுக்கிட்டு ஒரு நல்ல ஆணை பிறப்பித்துதவவேண்டுமென்றே கருதுகிறேன். பொதுமக்கள் சேவைக்கு என ஒதுக்கிவைக்கப்படும் நிதிகளிலும் பொதுநிதித்துறையினர் இறையுரிமை பற்ற எண்ணுவதென்பது தட்டான் தன் மனைவிக்குரிய நகை செய்வதிலும் மறைவாகப் பொன் எடுத்துக் கொள்ள முனைந்த பழங்கதையுடனொத்த பரிசேயாகும்.

**வாய்ப்பான நற்கூறுகள்**

மறைமலைத் தொகுப்புக்குக் கிட்டியுள்ள வாய்ப்புவளம் நிலவரமான நிதி ஆதாரவளம மட்டுமன்று இன்று அதற்கென ஒரு மனையிடமும் அளிக்கப்படுகிறது. அதற்குரிய தனித தன்மையும் சிறப்பும் இதனால் முற்றிலும் காக்கபபடுகின்றன. அத்துடன் மறைமலையடிகள் தம் கடைசி மூச்சுவரையிலும் தம் வாழ்நாள் முழுவதும்—அறிவுடன் உயிர்த்துடிபபுடைய உழைப்பும் எப்போதும் நிரம்பிப பொங்கிபபொதுளிக்கொண்டிருந்த அவர் வாழ்வில் என்றுகூடக கூறுவேன்—இடைவிடாது ஈடுபட்டுச் செயலாற்றி வந்த அதே புலமை சான்ற பணியைத் தொடர்ந்து செய்வதற்குரிய மையஇடமாக இது விளஙக இருக்கிறது.

இநத இடததில நான ஒரு செயதியை விடாது குறிககக் கடமைப்பட்டுள்ளேன். மறைமலையடிகளாரின் உடனுழைப்பாளாகள்—சிறப்பாகத் திரு. சுப்பையாபிள்ளையவர்கள்—எவ்வளவோ ஆர்வத்துடனும் இடைவிடா அரு முயற்சியுடனும் இந்நிலையத்துக்குரிய திட்டங்களை நுணுக்கவிரிவாகத் திட்டமிட்டு வந்திருக்கிறார்கள். சென்ற ஆண்டு இக்கட்டடத்தைப் பார்வையிடுவதற்காக அவர் என்னை அழைத்தபோது இந்தப் பழமைக் கட்டடத்தைத் தம் புதிய பயனீட்டுக்காக என்னென்ன வகையில் திருத்தியமைக்கலாம் என்பது பற்றிய என் கருத்துரைகளைக் கேட்க அவர் எவ்வளவு ஆவலுடையவராயிருந்தார் என்பதை நான் மறந்துவிடவில்லை. அச்சமயம் அவரிடம் காணப்பட்ட ஆர்வத்துடிப்பு, வருங்காலத்தில் இந்நிலையம் இலக்கிய வளர்ச்சிக்கும் பண்பாட்டுக்கும் உதவும் முறையில் என்ன என்ன நடைமுறைகள் திட்டமிடப்படவிருக்கின்றன என்பது பற்றிய அவர் விளக்கத்தின் உறுதித் தொனி ஆகிய இவற்றை நான் இன்னும் என் மனக்கண்முன் காண்கிறேன். நூலகத்தில் நுழையும்போதே

நுழைபவர்முன் காட்சிதரும் பொன்வேய்ந்த அம்பலவாணர் திருவுருவின் குமிண் சிரிப்பு திட்டமிடப்பட்ட இந் நூலகத்தின் சேவையையும அதன் மூலம் இயக்கப்படவிருக்கும் புததறிவுப் படைப்பின் அலையெழுசசியையும் குறித்துக்காட்டுவதாகும்.

(இப் பேச்சு அடுத்த இதழில் தொடரும்)

பின்பு நூல்நிலையம் சென்னை உள்நாட்டமைச்சர் தம் திருக் கையால் வெள்ளித் திறவுகோல் கொண்டு உள்ள மகிழ்வுடன் திறக்கப் பெற்றது.

ஓம்

**மறைமலையடிகள் நூல்நிலையம்**

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த சங்க ஆதரவில்
சென்னை மாநில ஆளுநர்
மாண்பமை விட்ணுராம் மேதி அவர்கள்
தலைமையில்
சென்னை உள்நாட்டமைச்சர்
உயர்திரு எம். பக்தவத்சலம் அவர்களால்
விளம்பி ஆண்டு ஆவணித்திங்கள் அ-ஆம் நாள்
திறநது வைக்கப்பெற்றது.
(24-8-1958)

| தலைவர் : | செயலாளர் : |
|---|---|
| மு. காசிவிசுவநாதன். | வ. சுப்பையா. |

எனக் கண்கவர் வனப்பமை பளிங்குக் கல்லில் கைபுனை வல்ல சிற்பியினால் அழகுறப் பொறிக்கப் பெற்று அகமதிலின்கண் பதிப்பித்துள்ள எழுத்துக் கல்லினையும் விழுப்பமுறத் திறந்து வைத்தனர். ஆளுநர் உள்ளிட்ட பெருமக்கள் அனைவர்களும் மங்கலப் பொருளுடன் வரவேற்க உட்புகுவாராயினர்.

புக்கதும் பொன்மேனியுடன் பொலியும் அம்பலவாணரின் அடியிணைப் போற்றித் தொழுதனர். மாடிமீதிவர்ந்தனர். நூல கத்தையும், நூற்பேழைகளையும், நூற்களையும் நுண்ணிதின் நோக்கினர்; உண்ணிதின் மகிழ்ந்தனர். உற்றுரை வரைந்தனர்.

பின் திரு. வ. சு. அவர்களால் நன்றியுரை நவிலப்பெற்றது. அருட்கவி சேதுராமன் அவர்களால் "வாழ்க அந்தணர்" என்னும் செந்தமிழ்த் திருமறை பாடப்பெற்றது.

இத்துடன் முற்பகற் கூட்டம்

## பிற்பகல் நிகழ்ச்சி

மாலை ஐந்துமணிக்கு மிக்க சிறப்புடன் துவங்கப் பெற்றது. தலைமை தாங்கி நடத்தும் நிலைமைக்கு இசைந்துள்ள திருப்பெருந் திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள் நிலப பொறியூர்தி வழி யாகச் செல்லும் எல்லையில் எதிர்பாராத வண்ணம் சிற்றிடர் ஒன்று வந்துற்றது அதனால் அவர்கள் வருதற்கியலவில்லை

உயர்திரு. சைவப்பாதிரியார் ச சச்சிதானந்தம் பிள்ளை பி.ஏ., எல்.டி., அவர்கள் தலைமை தாங்கப் பிற்பகற் கூட்டம் மிக்க சிறப்புடன் துவங்கப் பெற்றது. பேரவைப் பெருமக்களும் முற்பகல் போன்றே பெருவெள்ளமாகக் குழுமியிருந்தனர்.

காஞ்சீபுரம், தேவார இசைப் புலவர் திரு. சாரங்கபாணிச் செட்டியாரவர்கள் கடவுள் வாழ்த்துப் பாடப் பேரவை தொடங் கப்பெற்றது. திரு வ. சு. அவர்கள் வரவேற்புரை வழங்கினர். அது வருமாறு:

உங்கள் அனைவருக்கும் என் அன்புகலந்த வணக்கம். இன்று காலையில் சென்னை மாநில ஆளுநர் மாண்பமை விட்ணுராம் மேதி அவர்கள் தலைமையில் சென்னை உள்நாட்டமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் அவர்கள், செந்தமிழ்ச்செல்வர், மும்மொழிப் புலமைசேர் மறைமலையடிகள் அவர்கள் நூல்நிலையத்தைத் திறந்து வைத்ததைக் கண்டீர்கள் உலகப புகழ்பெற்று மேலை நாடுகளெல்லாம் சென்றுவநத டாக்டர். எஸ். அரங்கநாதன் அவர்கள் "இந்தியாவிலும் அயல்நாடுகளிலும் நூல்நிலையத் தொண்டு" என்பதைப்பற்றிப் பேசினார்கள்.

நம்முடைய தமிழ்மொழிக்கு இருகண் எனத்திகழும் மறை மலையடிகள், பேராசிரியர். கா. சுப்பிரமணிய பிள்ளை இருவருடைய படங்கள் திறந்துவைக்கப்படவிருக்கின்றன. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் படத்தைத் திரு. மொ. அ. துரைஅரங்கனார் அவர்கள் திறநதுவைக்க இசைந்துள்ளார்கள். துரைஅரங்கனார் பல்கலைக் கழகத்தில் வாசகராகப் பணியாற்றுபவர். சச்சிதா னந்தம் பிள்ளை அவர்கள் என் அண்ணனார் திரு. திருவரங்கம பிள்ளை அவர்கள் படத்தைத் திறந்து வைப்பதாக இருந்தது. குன்றக்குடி அடிகளார் வாராமையால் அவர்கள் தலைமை தாங்குகிறார்கள். ஆதலால் என் தமையனார் படத்தைத் திரு. கா. அப்பாத்துரைப் பிள்ளை அவர்கள் திறந்துவைப்பார்கள். திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள் வரமுடியாமை தெரிவித்துக் கடிதம் எழுதியுள்ளார்கள். நீங்கள் அனைவரும் அமைதியாக இருந்து கூட்டத்தைச் சிறப்பிக்குமாறு மிகப் பணிவன்புடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

தலைவரவர்கள் மறைமலையடிகளார் திருவுருவப் படத்தினைத் திறந்து வைத்துத் தக்கதோர் முன்னுரையும் மொழிந்தனர். அதன் சுருக்கம்:

## திரு. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் ஆற்றிய தலைமையுரையின் சுருக்கம்

மறைமலையடிகள் நூல்நிலையத்தைத் திறந்துவைக்கும் இந் நாள் ஒரு சிறந்த நாள். காலை நிகழ்ச்சியின்போது பல அறிஞர்கள் சொற்பொழிவாற்றினர் இப்போதும் பல அறிஞர்கள் பேச முன்வந்துள்ளனர் இந் நிகழ்ச்சிக்குத் திரு. குன்றக்குடி அடிகளார் தலைமை தாங்குவதாக இருந்தது. அவர்களுக்கேற்பட்ட இடையூற்றை அறிந்து வருத்தப்படாமலிருக்க முடியாது அவர்கள் இடத்தில் என்னை அமரும்படி கேட்டுக்கொண்டார்கள்.

மறைமலையடிகளைப் பற்றிப் பலர் பேசுவார்கள். பெரும்பணியாற்றிய பெருமக்களைப் போற்றுவதால் சாதாரண மக்களுக்கும் பெருமக்களாகும் வாய்ப்பு ஏற்படுகின்றது

மறைமலையடிகளை அறிந்தவர்கள் பலருள் திரு. வி. க. ஒருவர். திரு. வி. க. மறைமலையடிகளாரைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது "அற்றை நக்கீரரும் இற்றைச் சிவஞானமுனிவரும் ஓர் உருக்கொண்டு வேதாசலமானர் போலும்" என்று கூறியுள்ளார். அவர் இருவரும் ஓர் உருக்கொண்டு தமிழை வளர்க்கின்றார். "அவர்தம தமிழ் உடலும், தமிழ் உருவும, தமிழ்ப் பொருளும என்னை அவருடைய தோழனுக்கின. தொண்டனுக்கின" என்றும் திரு வி. க. கூறியுள்ளார்.

மறைமலையடிகள் தமிழ் வானில் தூய திங்களாக விளங்கியவர். அத்தகைய சிறந்த பண்பாடுடைய மறைமலையடிகளின் வரலாற்றைப் புலவர் அரசு அவர்கள் எழுதியுள்ளார்கள். "மறைமலையடிகள்" என்பது நூலின் தலைப்பு நூல் எளிய இனிய நடையில் இயற்றப்பெற்றுள்ளது. அந்நூலைச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் செம்மையாகவும் அழகாகவும் பதித்து வெளியிட்டுள்ளார்கள் என மொழிந்தனர்.

சித்திரகவி திரு. அப்துல்கபூர் சாகிப் அவர்கள் விழா நிகழ்ச்சியனைத்தையும் அழகிய பாமாலையாக யமைத்துப் பாடி எல்லாரையும் மகிழ்வித்தனர். அப் பாட்டு மற்றோர் பக்கத்திற் காண்க.

## சோமசுந்தர நாயகர் படத்திறப்பு

இரண்டாவதாக மாம்பாக்கம் குருகுல ஆசிரியர் உயர்திரு இளவழகனர் அவர்களால் சோமசுந்தர நாயகர் அவர்கள் திரு

வுருவப்படம் திறக்கப்பட்டது. பின் அரியதொரு விரிவுரையும் நிகழ்த்தினார்கள். அதன் சுருக்கம வருமாறு :

மறைமலையடிகள் நூல்நிலையத் திறப்பு விழாவில் அவர் ஆசிரியர் சோமசுந்தர நாயகரின் உருவப்படத்தை மறைமலையடிகளின் மாணவனாகிய என்னைக்கொண்டு திறந்துவைப்பதில் ஒரு முறை இருக்கிறது. மறைமலையடிகளுக்குத் தந்தையார் திரு. சோமசுந்தர நாயகர். ஆகையினாலே சோமசுந்தர நாயகர் எனக்குப் பாட்டனார். பாட்டனாருடைய படத்திறப்பைப் பெயரனாகிய என்னைக்கொண்டு திறக்க வைப்பது சரியான முறையே. அடிகள் விழாவில் அவர் படத்திறப்புஞ் சரியே.

மறைமலையடிகளுடைய அருள் தந்தை சோமசுந்தர நாயகர். பிள்ளைகளைக்கொண்டுதான் பெற்றோர் சிறப்படையவேண்டும். அப்பொழுதுதான் தலைமுறை தலைமுறையாக நாடு உயரும். சோமசுநதர நாயகர் மறைமலையடிகட்கு அகமருவிய ஆசிரியர். மறைமலையடிகளை நாயகர் மகன்போல வளர்த்தார்கள். அடிகளாருடைய இல்லத்திற்கு நாயகர் அவர்கள் அடிக்கடி செல்வதுண்டு. நாயகர் அவர்களுடைய மகன் அவ்வளவு அறிவிற் சிறந்தவனல்லன். அதனால் மறைமலையடிகளையே தம் சொந்த மகனாக நாயகர் எண்ணி வநதார். அறிவறிந்த மக்கட்பேறாக அடிகள் விளங்கினார்.

அக்காலத்தில் நாயகர் என்றாலே சோமசுந்தர நாயகரைத் தான் குறிக்கும் நாயகர் என்ற சிறப்புப்பெயர் இயற்பெயரை விடச் சிறப்பாக விளங்கியது. நாயகர் என்ற பெயர் எந்தக் காலத்திலும் யாரையாவது குறித்துக்கொண்டே நிற்கின்றது. நக்கீரர் என்பதில் 'ந' என்ற எழுத்து நன்மைப் பொருளையும் சிறப்புப் பொருளையும் உணர்த்தி நிற்கின்றது! 'ந' நன்மைப் பொருளுக்கு ஒரு சுருக்கெழுத்து நாயகம் என்றால் தலைமைப் பொருளை உணாத்தும். அது மருவி நாயகர் என நிற்கலாயிற்று. நாயகர் என்பது நன்மைப்பொருளையும் சிறப்புப் பொருளையும் தலைமைப்பொருளையும் உணர்த்துகின்றது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த சோமசுந்தர நாயகரவர்களின் வரலாற்றைச் சிறநத ஆராய்ச்சி முறையிலே அவருடைய மாணவரான மறைமலையடிகளார் எழுதியுள்ளார். அது அரைகுறையாகவே நின்றுவிட்டது. வாழ்க்கை வரலாற்றை அடிகளார் முற்ற முடிக்குமுன் அவர்கள் வாழ்க்கை முடிந்துவிட்டது. எனவே அஃது அவ்வாறே சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்பட்டுள்ளது.

ஒவ்வொரு நாட்டிற்கும் ஒவ்வொன்றைப் பாடிய ஔவையார் தொண்டை நாட்டிற்கு மட்டும் ஏன் சான்றோர் உடைத்து என்று பாடினார். ஏதோ காரணம் இருக்க வேண்டும். சேர சோழ பாண்டியராய மூன்று நாட்டினருடைய பெருமையையும் தொண்டை நாடுதான் வெளிப்படுத்தியது. பாண்டி நாட்டிலே பிறந்து பிறநாடுகள் அனைத்தையும் சுற்றிவந்த மாணிக்கவாசகர் நிறைந்த பண்பைப் பெற்றது தொண்டை நாட்டில்தான். தன்னலத்தோடல்லாது தொண்டு செய்வதில் சிறந்த நாடு

திரு சோமசுந்தர நாயகர் அவர்களின் வரலாற்றைப் படித்த எனக்கு அவருடைய மூன்று பண்புகள் சிறப்பாகத் தோன்றின. ஒன்று அவருடைய அறிவு. இரண்டு அவர்தம ஆற்றல். மூன்றாவதாக உண்மை. நாயகர் சிறந்த அறிவு வாய்ந்தவர் உரிமையை நிலைநாட்டும ஆற்றலைப பெற்றிருந்தார். நடுநிலை தவறாது உண்மையை உரைக்கும் பண்பாளர் அவர். இம மூன்று திறங்களையும் நாடிச்செல்லும் உண்மையான அறிவு அவரிடம் இருநதது.

திரு. டி. செங்கல்வராயனவர்கள் பேச்சு

பின் சென்னை முன்னாள் நகராட்சித் தலைவர், அட்வகேட் உயர்திரு, டி. செங்கல்வராயன் அவர்கள், மறைமலையடிகளாரின் மாண்பு பற்றி விழைதக்க விரிவுரை குழைவுறக் கூறினார்கள். சுருக்கம் வருமாறு :

இந்த மறைமலையடிகள் நூல் நிலையத் திறப்புவிழாவில் என்னையும் வந்து பேசும்படி வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கேட்டுக்கொண்டார்கள். தகுதியும மிகுதியும் வாய்ந்த பல தலைவர்கள் இந்த விழாவில் கலந்துகொள்ளும்போது நான் ஏன் கலந்துகொள்ள வேண்டுமென்று கேட்டதற்கு மறைமலையடிகளாருடன் நேராகத் தொடர்பு கொண்டவராதலால் கலந்துகொள்ளவேண்டும் என்று கூறினார்கள்.

நான் மறைமலையடிகளை நீண்டநாள் சந்திக்கவில்லை. இரண்டு மூன்று நாள் சந்தித்திருக்கிறேன். அடிகளாருடைய மகனாராய மறை. திருநாவுக்கரசு, என்னை ஒருமுறை அவர் தந்தையாரிடம் அழைத்துச் சென்றார். அப்பொழுது அடிகளார் இறைவழிபாட்டில் ஈடுபட்டிருந்தார் அதனால் நான் இருந்த இடத்தை ஒரு முறை சுற்றிப் பார்த்தேன். அஙகிருந்த பல படங்களில் என்னுடைய பாட்டனாரின் படமும் இருந்தது. இறைவழிபாட்டை முடித்து வந்த மறைமலையடிகள், “உங்களை எங்கோ

பார்த்திருப்பதாக நினைவு" என்று கூறினார்கள். நான், "என்னைப் பார்த்திருக்கமாட்டீர்கள், என் பாட்டனாரைப் பார்த்திருப்பீர்கள்" என்று கூறினேன் "ஆம், உங்கள் பாட்டனாருடன் ஒன்றரை ஆண்டு தங்கியிருந்தேன். அவர் கிறித்துவக் கல்லூரியில் வேலை வாங்கித் தந்தார்" என்று உரைத்தார்.

மறைமலையடிகளைப் பாராட்டும் இவ் விழாவில் என்னைப் போன்றவர்கள் கலந்துகொள்ளாவிடில் எங்கள் பிறப்பு வீணே. அடிகளாருடைய அறிவின் அகலமும், சிந்தனையின் சிகரமும், ஆராய்ச்சியின் ஆழத்தையும் யார்தான் சொல்ல முடியும்?

அடிகள் மூன்று வகையாகத் தமிழுக்கு அரிய தொண்டு ஆற்றினார்கள். பழைய பண்பைப் புத்துணர்ச்சி கலந்துகொடுத்தார்கள். தமிழருடைய பண்டைய பண்பாட்டை மறந்துபோக முடியாதபடி புத்துணர்ச்சியைக் கலந்து அவைகளைப் புதுமெருகேற்றி மக்களுக்குத் தந்தார்கள். பழைய நூல்களுக்குப் புத்துரை கண்டார்கள்.

அடிகள் தமிழ்த் தொண்டாற்றும் பொழுது அதனுடன் சமயத் தொண்டையும் இணைத்து இரண்டையும் ஒன்றாகச் செய்தார்கள். ஏனெனில் தமிழைப் பிரித்தால் சமயம் இல்லை சமயத்தைப் பிரித்தால் தமிழ் இல்லை.

தமிழ் மொழியின் அறிவையும் பிற மொழிகளின் மூலம் பெற்ற அறிவையும் கலந்து தமிழில் கொடுத்தார். அப் பணி அவர் ஒருவரால்தான் முடியும். தமிழின் பெருமையையும் பிற மொழிகளின் தன்மைகளையும் எடுத்து ஆராய்ந்து தமிழ் மொழியே சிறந்தது என்று கூறினார்.

அவர் பெயரில் இன்று நூல் நிலையம் ஒன்று திறந்து வைத்திருக்கிறார்கள். மறைமலையடிகள் இன்று இருந்திருந்தால் என்ன நினைத்திருப்பார்? அவர்களே மக்கள் நூறாண்டு வாழ்வதெப்படி என்னும் நூலை ஆக்கியுள்ளார்கள். நானும் அதைப் படித்திருக்கிறேன். அவர்கள் இன்று வாழ்ந்திருந்தால் தமிழ் மொழி எவ்வாறு இன்று பரவியுள்ளது, தமிழ் நாடு எவ்வளவு முன்னேறியுள்ளது என்பதைப் பார்த்து மகிழ்வார். தமிழன்னை அரியாசனம் ஏறியபொழுது எனக்கு மறைமலையடிகளின் நினைவு தான் வந்தது. இவை யாவும் அவருடைய தொண்டு.

## பேராசிரியர் சுந்தரம்பிள்ளை படத்திறப்பு

**தமிழ்க்கலை மன்றச் செயலாளர் ராவ்சாகிப், கு. கோதண்டபாணிப் பிள்ளை, பி. ஏ. அவர்கள், பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்**

களின் உருவப் படத்தைத் திறந்து வைத்துத் தக்க விரிவுரை நிகழ்த்தினார்கள். சுருக்கம் வருமாறு :

"பேரறிவாளர், அரும்பெரும் புலவர், தமிழ் மொழிக்கும் தமிழ் இலக்கியத்திற்கும் பெருந் தொண்டாற்றிய தமிழ்த் தொண்டர் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்கள் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகத் தமிழ் இலக்கியத் துறையில் இருந்துவந்த பெருங் குறையை நீக்கி, மனோன்மணீயம் என்னும் சிறந்த நாடகநூலை இயற்றிய பெருமகனாரைத் தமிழ்நாடு என்றும் போற்றக் கடமைப்பட்டுள்ளது இன்று நாம கொண்டாடுவது மறைமலை யடிகள் நூல்நிலையத் திறப்பு விழா. இவ்வடிகளாருக்கும் சுந்தரம பிள்ளை அவர்களுக்கும் நேர்ந்த தொடர்பை எடுத்துக்காட்டுவதே இவ்விழாவிற்கும் இப் படத்திறப்பிற்கும் மிகப் பொருந்துவ தாகும். இததொடர்பை விளக்குமுன் மறைமலை அடிகளின் அரிய செயல்களுள் ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன். அது, அவர் எழுதிவைத்துச் சென்ற இறுதி முறி. தாம் அரும்பாடு பட்டுத் தேடிய சொத்தின் பெரும்பகுதியையும் தம் சொந்தச் செலவில் சேர்த்துக் காப்பாற்றிய நாலாயிரத்திற்கு மேற்பட்ட விலைஉயர்ந்த நூல்களையும் இறுதி முறியின்படி பொதுமக்களுக்கு உரியவை யாக்கினார். இவற்றின் மதிப்பு சுமார் ஒரு இலட்சம் ரூபாய் ஆகும் என்பர். அடிகளாரோ பெரிய செலவர் அல்லர். அவர் மக்களும் எளிய நிலையிலே வாழ்பவர்கள். அவ்வாறிருந் தும் தாம் தேடிய சொத்தைப் பொதுமக்களுக்கு விட்டுச் சென்ற மனப்பான்மையைக் கருதுஙகள். அவர் தொண்டாற்றிய காலத்தில் பொதுமக்கள் அடிகளாருக்குப் போதிய ஆதரவு அளித்தாரல்லர். அடிகளாரைப் போற்றினாரும் அல்லர். போற்றுததுமட்டுமோ? அடிகளாரைத தூற்றவும் செய்தனர். தமக்கு ஆதரவு அளிக்காத பொதுமக்களுக்கு, தம்மைப் போற்றுத பொதுமக்களுக்கு, தம்மைத் தூற்றிய பொதுமக்க ளுக்குத தம் சொத்தை உரிமையாக்கிச் சென்றார் என்றால் அடிகளாரின் அன்பையும் அருளையும் என்னென்று கூறுவது! இதுவன்றோ செயற்கரிய செயல்! 'தியாகம்' என்பது இதனின் வேறுண்டோ! இவவாறு தஙகள் சொத்தைப் பொதுமக்களுக்கு விட்டுச் சென்றவர்கள், உரோமாபுரியை ஆண்ட சீசர் எனனும் அரசர், பிரான்சு நாட்டு அரசர் நெப்போலியன் என்பர். இப் பேரரசர்கள் செய்த பெருஞ் செயலைத் தமிழ்நாட்டில் ஒரு புலவர் பெருமகனார் செய்தார். அடிகளாரின படம இந்நூல் நிலையததில் மட்டுமா இடம் பெறுவது? ஆளுநர் படஙகளோடு, அமைச்சர் கள் படங்களோடு அரசாங்க மண்டபங்களில் அடிகளாரின் படம் இடம் பெறல்வேண்டும். ஒவ்வொரு தமிழன் இல்லத்திலும்

இடம் பெறல் வேண்டும். அப்போதுதான் அடிகளார் செய்த பேருதவிக்கு ஒருவாறு கைம்மாறு செய்தோர் ஆவோம்.

இனி, சுந்தரம்பிள்ளை அவர்களின் தொடர்பு அடிகளாருக்கு மிக இளமையிலேயே, 19-ஆம் அகவையிலேயே, ஏற்பட்டது. அடிகளார் கடிதமாக எழுதியனுப்பிய ஆசிரியப்பாவைக் கண்டு பிள்ளை அவர்கள் மகிழ்ந்தார். அடிகளாரைத் தம்மிடம் வருவித்தார்; ஆசிரியராகச் சில திங்கள் பணியாற்றவும் செய்தார். பிள்ளையவர்கள் அடிகளாரின் ஆழ்ந்த படிப்பையும் சிறந்த அறிவையும் பாராட்டி நற்சான்று ஒன்றும் அளித்தார். (நற்சான்றுக் கடிதம் படிக்கப்பட்டது) இந்த நற்சான்றில் கண்டவாறே அடிகளார் சிறந்த ஆசிரியரானார், எழுத்தாளர் ஆனார், ஆராய்ச்சி ஆளரும் ஆனார். விவேகானந்தருக்கு இராமகிருட்டிணர் அமைந்ததுபோல அடிகளாரின் சமயத்தொண்டிற்குச் சோமசுந்தர நாயகர் அமைந்தார்; தமிழ்த் தொண்டிற்குச் சுந்தரம் பிள்ளை அவர்கள் அமைந்தார் "'ஆரியம்போல் உலகவழக்கு அழிந்து ஒழிந்து சிதையாவுன் சீரிளமை', 'பத்துப்பாட்டாதி மனம் பற்றினார் பற்றுவரோ, எத்துணையும் பொருட்கிசையும் இலக்கணமில் கற்பனையே', 'வள்ளுவர் செய் திருக்குறளை மறுவற நன்குணர்ந்தோர்கள், உள்ளுவரோ மனுவாதி ஒரு குலத்துக் கொருநீதி' எனப் பிள்ளை அவர்கள் பாடிய மூன்று கருத்துக்களை நினைவுகொள்ளுங்கள். இம்மூன்றின் விரிவுரையாக அமைந்தவை: அடிகளாரின் பேச்சு, அவர் எழுத்து, அவர் நூல்கள், அவர் தமிழ்த்தொண்டு. இத்தகு தொண்டுகளைத் தூண்டிய பிள்ளை அவர்களின் தொடர்பைப் போற்றுவோம். பிளளை அவர்களின் படத்தை அமைத்து 'மகிழ்ந்து நிதம், பாடி இனிது போற்றுவமே'".

## அறிஞர் அண்ணாத்துரை பேச்சு

அறிஞர் சி என். அண்ணாத்துரை, எம்.ஏ., எம்.எல்.ஏ., அவர்கள் தண்டமிழ் மழைபொழியத் துவங்கும்போது வான்மழையும் தான் வரவிரும்பியது போன்று மின்னும் தூறலும் துன்னி வந்தன. மக்கள் அதனைப் பொருட்படுத்தாது நிற்கவே அவ்விரண்டும் மகிழ்ந்து வானம செவ்வையுற விளங்கின. சொற்பொழிவும் பொற்புறப் பொழியப்பட்டது. சுருக்கம் வருமாறு :

காலையில் துவக்கப்பட்ட மறைமலையடிகள் படிப்பகத் துவக்க விழாவையொட்டி, இப்போது நடைபெறும் இந்தக் கூட்டத்தில் பல தமிழறிஞர்கள், தமிழர்களுக்குத் தரவேண்டிய கருத்துக்களைத் தந்திருக்கிறார்கள். இப்படிப் பலரும் ஒன்றுகூடிக்

கருத்துக்களைத் தருவது, தமிழர்களுக்குச் சில வேளைகளில் மட்டுமே கிடைக்கக் கூடியதாகும்.

எனவே, இங்குப் பெறுகிற கருத்துக்களைத் தமிழர்கள், நன்கு பயன்படுத்திக்கொள்ள வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.

மறைமலையடிகளாரின் மாண்பினை — எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் வியக்கத்தக்க மாண்பினை அவரோடு நெருங்கிப் பழகிய பலரும் எடுத்துரைத்திருக்கிறார்கள். நான் அவரோடு அதிகம் நெருங்கிப் பழகியவன் அல்லன்; அவரோடு எங்களுக்கு ஏற்பட்ட தொடர்பெல்லாம், இநத நாட்டில் முதல் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டததின் போதுதான்.

மறைமலையடிகளாரது புலமை, இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த எங்களுககெல்லாம் பெரும் அரணாக அமைந்திருந்தது. இந்தி தமிழகததிற்குத் தேவைதானா? அது தமிழகத்திற்குப் பொது மொழியாகத்தான் வேண்டுமா? அப்படிப் பொது மொழியானால் தமிழுக்கு ஏற்படககூடிய தீமைகள் என்னென்ன என்பதை எல்லாம் மறைமலையடிகளார் ஏடுகளின் வாயிலாக எடுத்துக் காட்டிவந்தார்கள்.

இதைப்போல, அவர் மேற்கொண்டிருந்த பல்வேறு முயற்சிகள் இன்று காலத்தால் கனிந்து வருகின்றன.

மறைமலையடிகளது திருப்பெயர்—பெற்றோரிட்ட பெயர் 'வேதாசலம்' என்பதாகும். அதனை அவர் மறைமலை அடிகள் என மாற்றிக்கொண்டபோது பலருக்கு ஐயப்பாடு! சிலர், 'இது என்ன புதியதோர் ஆபத்து?' என்று கேட்டனர்.

ஆனால், மறைமலையடிகளாரோ 'தமிழனுக்கு எனத் தனிப் பண்பு உண்டு; மொழி உண்டு' என்பதை நிலைநாட்டுவதில் மிக்க அக்கறை காட்டினார். 'இந்தப் பண்பும் மொழியும் காப்பாற்றப் படாவிடின், நாளாவட்டத்தில் தமிழர்கள் இநத மொழியையும், பண்பையும் மறந்து, தங்களுக்கென உள்ள சீரிய தன்மையை இழந்துவிடுவர்; உலகில் இன்றுள்ள வாழ்விழந்த இனத்தாரோடு தமிழரும் சேர்க்கப்பட்டுவிடுவர்; எனவே, தமிழர்கள், தங்கள் மொழியையும் பண்பையும் மறந்துவிடக்கூடாது' என்பதற்காக மறைமலையடிகளார் தனித் தமிழ் இயக்கம் என்ற பெயரால் சீரியதோர் முயற்சியை மேற்கொண்டார்கள்.

இந்த இயக்கத்தை அவர் தோற்றுவித்தபோது, 'இது வெற்றி பெறுமா?' என்று சிலரும், 'இது தேவைதானா?' என்று வேறு சிலரும், 'இதனால் தமிழகத்திற்கும, தமிழர்களுக்கும்

என்ன இலாபம்?' என மற்றும் சிலரும் வினவத் தொடங்கினார்கள்.

ஆனாலும் இன்று, யார் நடத்துகின்ற ஏடானாலும்—தனித் தமிழ் இயக்கத்தை எதிர்த்தவர்கள் ஏடானாலும் அதில் தனித் தமிழ் நடை கையாளப்படுவதை நாம் காணுகிறோம்.

மறைமலையடிகள், தமது புலமையும் திறமையும் சாதாரணமாக வெளிப்பட்டால் மட்டும் போதாது; அந்தப் புலமையும் திறனும் தமிழர்களுக்கு வாழ்வளிக்கும நோக்கமுடையவாயிருக்கவேண்டும் என்று கருதினார்.

அத்தகைய பெருந்தகை—பெரும் புலவர் தம் வாழ்நாளில் தொட்டுத் தொட்டுப் பார்த்து, எடுத்து எடுத்துப் படித்த ஏடுகளைக் கொண்ட நூலகத்தை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் இன்று திறந்துவைத்துள்ளனர். தமிழர்களுக்கு நல்ல ஆராய்ச்சித் திறனைத் தரவல்லதாகும் மறைமலையடிகளாரின் இந்நூலகம்.

இன்று நாட்டில், 'படிப்பது தேவைதானா?' என்ற ஒரு விசித்திரமான கேள்வியும் எழுப்பப்படுவதைக் கேட்கிறோம்.

'கல்லின் ஓசையிலிருந்தும் கருத்துப் பெறலாம்; ஓடும் ஆற்றிலிருந்தும் கருத்துப் பெறலாம்' என்று ஷேக்ஸ்பியர் கூறியதைப்போல, 'பெரியவர்கள் சொல்வதைக் கேட்பதாலும், காட்டும் தெளிவைக் காண்பதாலும், அறிவு பெறமுடியாதா?' என்று கேட்கப்படுகிறது. இத்தகையோருக்கு, ஆயிரம் ஷேக்ஸ்பியர்களின் அறிவுக் கதிர்களும் பயன்படமாட்டா.

இந்தக் கேள்வியையும் தாண்டி, 'படிக்கவேண்டும்' என்ற ஆர்வம் மெள்ள அரும்பியிருப்பதைக் காண்கிறோம்.

ஆனால் அதே நேரத்தில், தமிழர்கள் செய்யவேண்டிய காரியஙகள் இரண்டு உண்டு; ஒன்று—படித்த சிலவற்றை மறக்கவேண்டும்; படிக்க மறந்துவிட்ட பலவற்றைப் படிக்கவேண்டும். இவைதாம் தமிழாகள் ஒரே நேரததில் செய்யவேண்டிய இரண்டு காரியங்கள்.

எதையோ ஒன்றைப் புகுத்தவேண்டும் என்ற நோக்கமுடைய நூல்கள் இருக்கின்றன. எதையோ சிந்தித்துப் பார்க்கத் தூண்டும் நூல்கள் இருக்கின்றன.

இதை உணர்ந்த மறைமலையடிகள்—தமிழர்களுக்கு அவர்களது தனி நாகரிகம் எது? அவர்கள் வணங்கத் தக்கன எவை? அவர்கள் மொழியின் மாண்புகள் என்னென்ன?—

என்பதையெல்லாம் ஆராய்ந்து, மக்கள் மன்றத்திற்கு எடுத்துச் சொன்னார்கள். அவர்தம் கருத்துக்களை அறிகிறவர்கள், படிக்கத் தக்க நூல்கள் எவை என்பவற்றை அறிந்துகொள்ள முடியும்; சிந்திக்கத் தூண்டும் நூல்கள் எவை என்பதைப் புரிந்துகொள்ள முடியும்.

இப்படிச் சொல்லும்போது, 'அண்ணாத்துரை! மறைமலை யடிகள், சமயத்துறையில்—சைவத்தில் நம்பிக்கை வைத்திருந் தாரே, உங்களுக்கு அது சம்மதமா?' என்று சிலர் கேட்கக் கூடும். 'அன்பும் அருளுமே சைவம்' என்று மறைமலையடிகள் கூறியதுதான் சைவம் என்றால்—நான் மிகச் சிறந்த சைவன். 'ஆண்டவன் ஒருவனே' என்பதுதான் சைவம் என்றால்—நான் மிகச் சிறந்த சைவன்.

இன்று உலகில் மார்க்கத்தை மட்டுமல்ல—எல்லாவற்றை யுமே, 'இது எனக்கு என்ன பயன்தரும்?' என்ற நோக்கில் தான், உலகம் காண முற்பட்டிருக்கிறது. இதை ஆங்கிலத்தில் Utilitarian Philosophy என்று கூறுவார்கள்.

'மனிதனுக்கு இருக்கிற காலம் மிகக் குறைவானது; இந்தக் குறைந்த காலத்திற்குள் இதைத்தான் செய்யவேண்டும்—அதை இப்படிச் செய்யவேண்டும்' என்பதை எளியவர்களுக்கும் விளங் கக்கூடிய வகையிலும், பயன்படக்கூடிய வகையிலும் எடுத் துரைக்கவேண்டும்.

தத்துவ நூலகளிலிருந்து கறக்கவேண்டிய முறைப்படி கருத்துக்களைக் கறந்து, கழனிகளில் பணிபுரியும் உழவர்க்கும், ஆலைகளில் அவதியுறும் தொழிலாளருக்கும், ஆசைக்கும் அச் சத்திற்குமிடையில் ஊசலாடிக்கொண்டிருக்கும் நடுத்தர மக்க ளுக்கும் பயன்படத்தக்க—புரியத்தக்க வகையில் தரவேண்டி யுள்ளது. பசுவினிடத்தில் பால் இருக்கிறது என்றால், பசுவின் உடல் முழுதும் நாம் பாலைத் தேடிச் செல்வதில்லை. கறக்க வேண்டிய இடத்தில் முறைப்படி கறந்தால்தான் பால் கிடைக் கும்—அதனால் பலன் கிடைக்கும். அதைப் போல, தமிழ் இலக்கியங்கள், தத்துவ நூல்களிலிருந்தெல்லாம் கருத்துக்களை முறைப்படி கறந்து தரவேண்டியது, தமிழ்ப் புலவர்களின் வேலை யாகும்.

இப்படி, பயன்படத்தக்க வகையில் எல்லாவற்றையுமே நோக்கிப் பயன் படைத்தவர்கள் மேலைநாட்டவர். 18, 19-ஆம் நூற்றாண்டு இறுதியிலேயே அவர்கள், பயன்படுத்தும் நோக்கத் தோடு காரியமாற்றத் துவங்கிவிட்டனர். நாம் இன்னும் அந்தப் பயன்படுத்தும் நோக்கத்தைப் பெறவில்லை.

தேங்காயை நாம் பயன்படுத்துவதற்கும் மாங்காயைப் பயன்படுத்துவதற்கும் வேறுபாடு இல்லையா? தேங்காயில் மேலே உள்ள நாரையும், ஓட்டையும் நீக்கிவிட்டு, உள்ளே உள்ள பண்டத்தைத் தின்கிறோம். மாங்காயில், மேலே பழம்—உள்ளே கொட்டை; பழத்தைத் தின்றுவிட்டுக் கொட்டையை வீசி எறிந்து விடுகிறோம். அதைப் போல, தமிழ் இலக்கியங்களிலும், எதை எதை, எந்த எந்தக் காரியங்களுக்குப் பயன்படுத்துவது—எப்படிப் பயன்படுத்துவது என்று முறைமைப்படுத்தி, வரிசைப் படுத்தி—வகைப்படுத்தித்தர வேண்டாமா? அப்படித் தந்தாலன்றி, மக்களிடையே பொது அறிவு வளருவது எப்படி? எவை எளிதாக நல்ல பயன் தரத்தக்கன என்று கருதுகிறார்களோ, அவற்றை மக்கள் ஏற்றுக்கொள்ளுவார்கள்.

பயன் தரத்தக்க நோக்கு வேண்டும் என்பதினால்தான், நாங்கள் சில இலக்கியங்களைத் தாக்கவேண்டியவர்களானோம்; சிலர், அவற்றைத் தாஙகித்தீர வேண்டும் என்று கருதினார்கள்.

இப்படி எங்கள் தாக்குதலுக்கும்—சிலரின் தாங்கித் தீர வேண்டிய நிலைக்கும இடைப்பட்ட நூல்கள் இருக்கின்றனவே, அவைதான், தமிழருக்குப் பயன் தருமநூல்கள் என்றுகூறலாம்.

எக்காலத்திலும் பயன்படக்கூடிய நூல்கள் தமிழில் ஏராளம் உண்டு அவற்றில் எல்லாம் நல்ல புலமை பெறறிருந்த மறைமலையடிகள், பல்வேறு கருத்துக்களை—தமிழன், தனியானதோர் மாண்புக்கு—பண்புக்குச சொந்தக்காரன் என்பதை வலியுறுத்தும் கருத்துக்களை—மிக்க துணிவோடு எடுத்துச் சொன்னார்.

தமிழனின் பண்பு தனிச் சிறப்புப் பெற்றது என்பதை மறைமலையடிகள், காரண காரியங்களோடு விளக்கியிருக்கிறார். கருத்துக்களை, பதப்படுத்தி—பக்குவப்படுத்தி ஏடுகள் வாயிலாகத்தந்திருக்கிறார்.

சைவசித்தாந்தக் கழகத்திலுள்ள என் நண்பர் சுப்பையா அவர்கள், மறைமலையடிகள் பெயரால் ஏற்பாடு செய்துள்ள இந்தப் படிப்பகம் மறைமலையடிகளின் கருத்துக்களை அறிந்து தமிழர்கள் நல்ல பயன்பெறுவதற்கு, உபயோகப்படும் என்பதில் சந்தேகம் இல்லை.

ஒருகாலத்தில், 'தமிழில் எத்தனை புத்தகங்கள் இருக்கின்றன?' என்று சிலர் கேட்டதுண்டு; ஆனால் இன்றைக்கு ஓர் ஐயாயிரம் ரூபாய் எடுத்துக்கொண்டு சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகத்துக்குப் போனால், அத்தனைக்கும் தமிழ்ப்புத்தகங்கள் வாங்கிக்கொண்டு திரும்பமுடியும். அந்த அளவு, தமிழில் இன்று புத்தகங்கள் வெளிவந்திருக்கின்றன.

சீரிய கருத்துக்களைத் தரும் வண்ண ஏடுகள் ஆங்கிலத்தில் மட்டுமே இருந்தன; ஆனால், இன்று தமிழிலும் இருக்கின்றன. அந்த ஏடுகள் இன்னும் பல வெளிவரவேண்டும்.

நம்முடைய இலக்கியக் கருத்துக்கள் எல்லாம், நல்ல வண்ணங்களோடு ஏராளமாக வெளிவரவேண்டும். வண்ணம் பற்றி நான் வலியுறுத்திச் சொல்வதற்குக் காரணம், இங்கே வண்ணத்தை விரும்பும் வாலிபர்கள் ஏராளமாக இருப்பதினால்தான். என்னதான் நல்ல கருத்துக் கருவூலமானாலும், அதில் வண்ணம் கூட்டப்பட்டால், நம்மையும் அறியாமல் அதனை எடுத்துப் புரட்டிப் பார்க்கத் தூண்டும். புரட்டியதும் சுவைதட்டிவிட்டால், பின் அந்தக் கருத்துக் கருவூலம், வெளிவந்த பயனை எய்திவிடும்.

தமிழ்ப் பெருங்குடி மக்கள், கிடைத்த கருத்துக்களை—பெற்ற கருவூலங்களை எல்லாம் ஒரே பாண்டத்தில் போட்டு வைத்துவிட்டனர். இன்றைக்குள்ள தமிழ்ப் புலவர்கள் அவற்றை எல்லாம் எடுத்து நல்ல கருத்துக்களையும், ஆராய்ச்சிக்கு நிற்கக்கூடியவற்றையும், வெறுங் கற்பனையை மட்டுமே கொண்டவற்றையும், ஒரே பாண்டத்திலிருப்பதைப் பிரித்தெடுத்து, முறைப்படுத்தி வரிசைப்படுத்தித் தரவேண்டும். இதைச் செய்வதற்கு இதுதான் தக்க காலம் என்று நான் கருதுகிறேன்.

குறள் இருக்கிறது; என்னைப் பொறுத்தவரையில், இன்னதைச் செய்யவேண்டும், இன்னதைச் செய்தால் நல்லது; இன்னதை இன்னார் செய்தார்கள் என்று அந்த நல்லற நூலில் கருத்துக்கள் பிரிக்கப்பட்டிருப்பதைக் காணுகிறேன். 'இன்னதைச் செய்யுங்கள்' என்று கட்டளையும், 'இன்னதைச் செய்தால் நலம்' என்ற சிபாரிசும் குறளில் இருக்கின்றன. இதுபோல, தமிழ் இலக்கியங்களை எல்லாம் முறைப்படுத்தலாம்.

எனவே, தமிழ் இலக்கியங்களை முறைப்படுத்தி—வகைப்படுத்தித் தரவேண்டிய பொறுப்பு தமிழ்ப் புலவர்களுக்கு இருக்கிறது. அதற்கு இதுவே தக்க காலம்; ஏனென்றால் இப்போது அதற்கான விழிப்புணர்ச்சியும், ஆற்றலும் நிரம்ப இருக்கின்றன.

அந்தக் காரியம் நடைபெற்றால்தான் தமிழின் தொன்மையும், தமிழின் இனிமையும், பெருமையும், தமிழர்களால் சரிவர உணரப்பட முடியும்; தமிழ் இனம், தமிழ்ப் பண்பு, தமிழ் அரசு தழைக்க முடியும்

இந்த வகைக்குத் திறக்கப்பட்டுள்ள மறைமலையடிகள் நூலகம் பயன்பட வேண்டும் என விரும்பிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்த விழாவில் கலந்துகொள்ளுவதில், நாம், மறைமலையடிகளிடத்தில் கொண்டுள்ள மதிப்பைக் காட்டிக்கொள்கிறோம் என்பதையும் கூறிமுடிக்கிறேன்.

## திருவாட்டி சவுந்தரம் கைலாசம் அம்மையார் பேச்சு

திருவாட்டி சவுந்தரம் கைலாசம் அம்மையாரவர்கள் அரியதொரு விரிவுரை இனிமையுற ஆற்றினார்கள். சுருக்கம் வருமாறு:

மறைமலையடிகளை நேரில் ஒரே ஒருமுறை சந்தித்து அவர்கள் ஆசியைப் பெறும் பாக்கியம் பெற்றிருந்தால்கூட அவர்தம் இதயத்தின் வளப்பினை, சிறப்பினைப் பெருமளவு எழுத்தின் மூலம அறிந்துள்ளேன்.

மறைமலையடிகளை அறியாதவர்கள் இருக்கவே முடியாது. அவர்கள் தமிழுக்குச் செய்த தொண்டு மறக்கமுடியாததொன்று. பொன் எனப் போற்றும் சங்கப் பூநதமிழ்ப் பாக்களுக்குப் புத்துரை கண்டவர் அவர். சாகும்வரை தமிழுக்குத் தொண்டாற்றினார். அடிகளின் உடல் எரிந்தபொழுது சாம்பல்கூடத் தமிழ்மணம் வீசியிருக்கும் என்று எண்ணுகிறேன். இன்பத் தமிழால் இதயத்தைக் கவர்வது அவர்தம எழுத்து மட்டுமல்லாது அவர்தம் இனிய குரலும் காற்றோடு கலந்து மங்கிவிடாது நெஞ்சத்தை விட்டு என்றும் நீங்காது நிற்பது என்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறேன்

மறைமலையடிகள் இறுதிவரை தமிழுக்குப் போராடியதால் தமிழுலகம் அவரை நன்கறியும். முதுமை, வயதிலே அவருக்கு ஏற்பட்டாலும் தமிழையே உயிராகக் கொண்டதால் புதுமை உள்ளத்திலும் உடம்பிலும் பொங்கி வழிந்தது. தமிழின் சுவையைத் தாம் மட்டும் அனுபவியாது யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்று சங்கப்பாக்களின் கனிரசத்தை நூல்களிலே வடித்துத் தந்தவர் அவர். வண்டுகளுக்குத் தம் தேனை வாரியிறைத்த வண்ண மலர்போல விளங்கினார். தோன்றிற் புகழொடு தோன்றுக என்பதற்கு இலக்கியமாய் விளங்கும் மறைமலையடிகள் பெயரில் இன்று நூல் நிலையம் திறக்கப்படு

அடிகள் பத்திமலையின் ஏறு. தமிழர்க்கு வழி காட்டிய கலங்கரை விளக்கம். அவர்கள் நூல்கள் இங்குள்ளன. மக்கள் அன்புநெறிகாண வேண்டுமெனில் ஆர்வத்துடன் எல்லோரும் கற்க முயலவேண்டும். அன்பு கனிந்த கனிவே சத்தி. தமிழோடு அறிவும சேர்ந்துவிடுமானால் இன்பம் பெருகும். எல்லோரும கற்க வேண்டும் கசடற. தோண்டத் தோண்ட நீர் ஊறுவது

போலப் படிக்கப் படிக்க அறிவு பெருகுகின்றது. அறிவு பெருகப் பெருக இன்பமும் அன்பும் பெருகுகின்றது. தூய எண்ணம் கொண்ட வாழ்வு சிறக்க நாம் படிக்கவேண்டும். ஏழ்மையினால் தமிழர்கள் படிக்காதுபோய்விடப் போகின்றனர் என்ற எண்ணத்தில் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் இந்நூல் நிலையத்தைத் திறந்து வைத்துள்ளார்கள். இதை நான பாராட்டுகின்றேன்.

## பேராசிரியர் கா. சு. பிள்ளை படத்திறப்பு

டாக்டர். துரையரங்கனாரவர்கள், எம்.ஏ., எம்.எல்., தாகூர் சட்ட விரிவுரையாளர் திருவாளர் கா சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் உருவப் படத்தினைத் திறந்து வைத்து உருக்கமான விரிவுரை ஒன்று ஆற்றினார்கள். சுருக்கம் வருமாறு:

எதிர்பாராத ஒருவர் படத்தை எதிர்பாராத ஒருவன் திறந்து வைக்கிறேன்.

ஒரு மாணவன் பி. ஏ. பட்டம் பெற்றபின் நல்ல ஊதியம் தரும் வேலையில் அமர்கிறான். உறப்பு நலமனைத்தும் வாய்ந்த மங்கை யொருத்தியை மணக்க வேண்டுமென்று எண்ணுகின்றான். எண்ணியவாறே அடைந்து இல்லறத்தை நல்லறமாக நடத்துகின்றான். எண்ணியவாறு அடைவதற்கு அவன் இடைவிடாது முயன்றான். வெற்றி பெற்றான். அவ்வாறே கா. சுப்பிரமணிய பிள்ளையவர்களும் எண்ணியதை எண்ணியாங்கு முடிக்க இடைவிடாது முயற்சி செய்வதில் தளராதவர்.

மக்கள் என்னதான் படித்தாலும் பயனில்லை உட்கார்ந்து சிந்திககவேண்டும். படித்தபின் அமைதியுடன் ஆராய வேண்டும். மனத்தை ஒழுங்குபடுத்துவதற்கு முன்னோர்கள் சமயத்தைப் பயன்படுத்தினார்கள். சமயம் அமைதியுடன் ஒழுங்கு நெறியையும் தவறாமல் மக்களுக்கு அளித்தது. கா. சு. பிள்ளையவர்கள் ஆங்கிலக் கல்வி சிறப்பான முறையிலே கற்றவர். சென்னைச் சட்டக் கல்லூரியில் சட்டப் படிப்புப் படித்தவர்கள். தாகூர் சட்டப் பரிசு பெற்ற முதல் தமிழர் அவர். எனினும் அவர் சமயத்தை என்றுமே கைவிட்டது கிடையாது தம்முடைய வாழ்க்கையிலே அமைதியை ஏற்படுத்திக்கொள்ளச் சமயததைக் கடைப்பிடித்தவர். அவருடைய தந்தையும் சிவநெறி தவறாத செல்வர். கா. சு. பிள்ளை அவர்கள் மாணிக்கவாசகர் இயற்றிய திருவாசகத்தையும் தாயுமானவரையும் தலைமேல் வைத்துப் போற்றினார்கள். 'தாயுமானவர் வரலாறும நூலாராய்ச்சியும்' என்ற நூல் ஒன்றும் எழுதியுள்ளார்கள். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் அதை வெளியிட்டுள்ளனர்.

## திரு. வ. திருவரங்கனார் படத்திறப்பு

உயர்திரு. கா. அப்பாத்துரைப் பிள்ளை எம்.ஏ.,எல்டி., அவர்கள் கழக அமைச்சர் வ. திருவரங்கனார் அவர்கள் உருவப் படத்தினைத் திறந்து வைத்து ஆர்வமிக்க சொற்பொழிவொன்று ஆற்றினார்கள். சுருக்கம் வருமாறு :

திரு. வ. திருவரங்கனார் படத்தைத் திறந்து வைக்க நான் முன்வந்துள்ளேன். சடங்கு, சம்பிரதாயம் போன்ற எல்லாவற்றிற்கும் அகப்பண்பு, புறப்பண்பு என்ற இரண்டு உண்டு. இங்குள்ள படங்களனைத்தும் அறிஞர்களுடைய படங்கள். திறந்து வைத்தவர்கள் அனைவரும் அறிஞர்கள். சிலர் அகத்தையும் கொண்டார்கள். சிலர் புறத்தையும் கொண்டார்கள். திருவரங்கனார் செயல் வீரர். அவர்கள் இல்லையானால் மறைமலையடிகளே இல்லையென்று கூறலாம். தமிழ்ச் சமுதாயத்தை அமைக்கச் செங்கற்கள்போல் அறிஞர்கள் அமைந்திருந்தனர். ஆனால் பச்சைச் செங்கல்லும் சுட்ட செங்கல்லும் ஒன்று சேராததுபோல தமிழறிஞர்கள் தம்முள் மனவேறுபாடு கொண்டிருந்தனர் தமிழ் மக்களையும் அறிஞர்களையும் இணைத்துக் கூரை, சுவர்கள், தாழ்ப்பாள், பூட்டு இவை நன்றாக அமைந்த வீடுபோல், நல்ல சமுதாயமொன்றை உருவாக்கினார் திருவரங்கனார்.

தமிழன் பிறரைப் பற்றியே என்றும் சிந்தித்துக்கொண்டிருந்தால் போதாது. அவன் தன்னைப் பற்றியும் எண்ண வேண்டும். பிறரைப் பற்றியும் சிந்திக்கவேண்டும். இந்த இரண்டு மனப்பான்மைகளும் தமிழர்க்கு வேண்டும். இரண்டுக்கும் நடுநிலை ஏற்படுத்தியவர் திருவரங்கனார் அவர்கள்.

பேரறிஞர்கள் முற்காலத்திலே இருந்தார்கள். பலர் இருக்கின்றனர்; இன்னும் தோன்றுவார்கள். அவர்கள் அனைவரும் நல்வாழ்க்கை வாழச் சிறப்புற்ற வகையில் உதவியில்லை திருவரங்கனார் போன்ற செயல் வீரர்கள் பலர் பல காலத்தில் இல்லாத காரணத்தினால் பெரும் பெரும தமிழறிஞர்களுடைய புகழ் மங்கி விட்டது. திருவரங்கனார் அவர்கள் மறைமலையடிகள் பல்லாவரத்தில் பொருள் முட்டுப்பாட்டினால் சோர்வுற்றிருந்தபொழுது அவரை இலங்கைக்கு வரவழைத்து விரிவுரைகளாற்றச் செய்து பொருள் திரட்டிக்கொடுத்து உதவி செய்தார்கள். அவர் திராவிட மொழி ஐந்தினையும் போற்றி வளர்க்க எண்ணினார். 1930-32-இல் திராவிடம் என்ற வார இதழை நிறுவ எண்ணினார். திருவரங்கனாரைப் போலவே இன்று அவருடைய தம்பியாரான வ. சுப்பையா பல தமிழறிஞர்களைப் போற்றி வருகின்றனர்.

தலைவரவர்களின் முடிப்புரை சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் முறையில் நன்றாகவும் தெளிவாகவும் ஆற்றப் பெற்றது.

## திரு. வ. சு. அவர்கள் நிகழ்த்திய நன்றியுரை

தலைவரவர்களே, அன்பர்களே!

இங்கே ஐந்துபெரியோர்களின் படங்கள் திறந்துவைக்கப் பெற்றன. அவை ஒரு தொடர்புபற்றியே நிகழ்ந்தன. மறைமலையடிகளின் சமயகுரவர் சோமசுந்தர நாயகர். மறைமலையடிகள் சோமசுந்தர நாயகரைப் பற்றிப் பேச ஆரம்பித்தவுடனேயே அவர் கண்களில் நீர் தேங்கிவழிந்துவிடும். அவரைத் தம் தந்தையாகப் பாவித்தார். அவருடைய வரலாற்றைக்கூட நூலாக எழுதியுள்ளார் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அடிகளாரின் அறிவுத் திறனைப் பாராட்டி நற்சான்றிதழளித்துக் கிறித்துவக் கல்லூரியில் வேலை வாங்கித் தந்தார். அடிகளாரைத் திருவனந்தபுரத்திற்கு அழைத்துப் பாராட்டி அவர்களின் விளக்கத்துக்கு உதவியவர்.

என் தமையனார் மறைமலையடிகளுக்குப் பெருமுதவி செய்துள்ளார்கள். அடிகள் ஒவ்வொரு நூலிலும் 200 அல்லது 300 படிகள்தான் அச்சிடுவார். அவை அனைத்தையும் என் தமையனார் விற்றுக்கொடுப்பார். தமையனார் அப்பொழுது இலங்கையில் இருந்தமையால் அடிகளாரை இலங்கைக்கு வரவழைத்துச் சொற்பொழிவுகள் ஆற்றச்செய்து பொருள் திரட்டித் தந்தார். வணிகரிடம் நிலையாக திங்கள்தோறும் பொருள்பெற்றுத் தந்தார். தமிழ்நாடு அடிகளாரை நன்கு உணர்ந்து போற்றாத காலம். தமையனார்தான் உணர்ந்து போற்றினார். என் தமையனார் அடிகளாரின் மருமகனாராவர்.

அடுத்துத் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் கொள்கை வழிநின்றே கழகம் நூல்களை வெளியிட்டு வருகின்றது. கழகம் எத்தனையோ வழிகளில் சிறந்து விளங்குகின்றது என்பதை நீங்கள் அறிவீர்கள். இந்தி எதிர்ப்பு இயக்கத்தின்போது அரிய கருத்துக்களைக் கழகம் வாரிவாரித் தந்தது. இப்பொழுதுள்ள தமிழ்க்கொடியைக் கழகந்தான் தோற்றுவித்தது.

மறைமலையடிகள் ஏறக்குறைய நாலாயிரம் நூல்களைத் தொகுத்து வைத்துள்ளார்கள். அவை முழுவதும் அவர் கையாலேயே உறையிட்டுவைக்கப்பட்டுள்ளன. அவர் எந்த ஒரு நூலையும் படிக்குமுன் பேழையில் வைப்பதில்லை. இன்ன கருத்தை இன்ன நூலில் இந்த இடத்தில் படித்தோம் என்று அவர்கள்

நினைவில் வைத்திருப்பார்கள். சொற்பொழிவாற்றும்போதும் முடிவுரையில் தாம் பேசிய கருத்தனைத்தையும் தொகுத்துக் கூறுவார்கள். அது கேட்க இனிமையாயிருக்கும். அவர்களுடைய குரலும் கீச்சுக்குரல். மிக இனிமையாகவிருக்கும்

இக் கட்டடத்தை வாங்கிய பின்னர் இதைச் சீர்திருத்துவதற்கு உதவிய நகராமைப்பதிகாரி திரு டி. வி. சபாபதி அவர்களுக்கும் அவருக்கு உதவியாக இருந்து நமக்கு உதவிய கட்டடக் கலைவல்ல திரு. செல்லையா அவர்களுக்கும் என் நன்றி. மற்றும் முகப்பு வாயிலையும் நடராசர் உருவச் சிலையையும் உருவாக்கித் தந்தவர்களுக்கும் என் நன்றி.

இக் கூட்டத்தைத் தலைமை தாங்கிச் சிறப்பித்த திரு. சச்சிதானந்தம் பிள்ளை அவர்களுக்கும், இதிற் கலந்து சொற்பொழிவாற்றிய அறிஞர்கள் அனைவருக்கும் என் நன்றி. இவ் விழாவைச் சிறப்புற நடத்தித் தந்த உங்களுக்கும் நன்றி. வணக்கம்!

சென்னை வானொலி நிலையத்தார் காலை முதல் வந்திருந்து ஒலிப்பதிவு செய்தனர். அப்பதிவினை இரவு $9\frac{3}{4}$-$10\frac{1}{2}$ மணிக்கு ஒலிபரப்பினா. இங்ஙனம் ஒலிபரப்பிச் சிறப்பாகத் தமிழகத்திற்கும் பொதுவாக வெளியுலகங்கட்கும் இந்நிகழ்ச்சியினை அறிவித்துதவிய வானொலி நிலையத்தா தொண்டு நனிமிகப் பாராட்டற்குரிய தொன்றும். அந்நிலையத்தார்க்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

நிழலுருவப் படப்பிடிப்பினர் பலர் அவ்வப்போது இன்றியமையாத இடங்களினெல்லாம் பல்வேறு நிலைகளினின்று படம் பிடித்தனர். அவற்றுட்சில இச் செல்வியின்கண் வந்துள்ளன காண்க.

தேவார இசைப்புலவர், திரு. சாரங்கபாணிச் செட்டியாரவர்கள் கடவுள் வாழ்த்து ஓதக் கூட்டம் இரவு ஒன்பது மணிக்கு இனிது நிறைவுற்றது.

---

கற்றபெருங் கல்வியினைக் காத்து வளர்ப்பிக்கும்
உற்றகளம் நூல்நிலையம் ஓர்ந்துணர்வு—பெற்ற
அடிகள் மறைமலையார் நூலகம் வாழி
படியில் பயனெடுபல் லூழ்.

சித்தாந்த பண்டிதர், ப. இராமநாத பிள்ளை.

---

# மறைமலையடிகள் நூல்நிலையத் திறப்பு விழா

# வாழ்த்துப்பாக்கள்

*மாண்பு மறைமலையார் நூல்நிலையம் மாண்புடனே*
*காண்பரிய காட்சியுடன் கண்டனனால்—மீண்டுதமிழ்*
*அம்மை தனிச்சிறப்பை ஆய்ந்துலகம் உய்ந்திடவே*
*எம்பெருமைச் சுப்பையவேள் நாடு.*

—இ. மு. சுப்பிரமணிய பிள்ளை,
*அமைச்சர், சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம.*

*நித்தம் சிவபூசை நேர்மையுடன் ஆற்றிநனி*
*சித்தம் சிவமாகச் சேர்ந்திட்ட—பத்தர்*
*மறைமலைநன் மாதவத்தோர் பேர்புனைந்த ஓர் நூல்*
*நிறைநிலையம் தோன்றியதே நேர்.*

—திருவாசகமணி, திரு. கே. எம் பாலசுப்பிரமணியம்,
*பி.ஏ., பி.எல்.,*

.... .... .... .... ....
*மக்களின் அறிவு வளர்ச்சி நிலையமாய்த்*
*தக்கநூ லனைத்தும் தகவொடு தந்து*
*மிக்கநற் புகழினை மேவியிப் பூவில்*
*நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமாய்*
*வளர்ந்திட இறைவன் மாணருள் செய்க!*

—கோம்பை. அ. சுருளியாண்டிப்பாவலர்.

...

*மறைமலை அடிகளார் மாண்புறு பெயரால்*
*நிறுவிடும் நூலகம் நெடும்பய னளித்து*
*மதுரை வையை மணலினும்*
*வாழி வாழி வளமுற வாழியே!*

—*மதுரை*, பேராசிரியர். அ. கி. பரந்தாமனர்.

*ஆரியம் நன்று தமிழ்தீ தெனவுரைத்த*
*பூரியர்தம் நாத்தடிப்பைப் போக்கிய—சீரியநற்*
*சான்றோர் வழிவந்த தண்டமிழ்நற் றொண்டினையே*
*நன்றோர் நிலையி லிருந்தாற்றி—வான்றோய்ந்து*
*வந்தவிசை மேய மறைமலை நூல்நிலையம்*
*எந்தமிழ்போல் வாழ்க வினிது.*

—*பவானி*, புலவர் குழந்தை.

அருளார் மறைமலைப்பே ரண்ணல் தொகுத்த
பொருளார்நூன் மன்றத்திற் புக்குத்—தெருளாரும்
நூல்கள் தமையாய்ந்து நுண்ணறிவு பெற்றறிஞர்
சால்புடனே வாழ்க தழைத்து.

—வியாசர்பாடி, சுவாமி முக்தானந்தா

மறைமலை யடிகள் மனமென வவர்தம்
குறைவில்நூல் நிலையம் குவலய மதனில்
குறைவற நிலவக் குகனடி வணங்கி
நிறைவுறு கெனவே நினைமன மினிதே.

—மயிலம், வித்துவான், ஆ. சிவலிங்கனார்.

திருவார் மறைமலைச் சீரிய அடிகள்
உருவார் கலைநூல் உளவாம் நிலையம்
கலையறி வதனில் நிலைபெறும உளத்தினர்க்
கரும்பய னுதவியிவ் வாழிசூழ் உலகில்
என்றுஞ் சிறப்புடன் இனிது மிளிர்ந்திடக்
குன்றுதோ றாடும் குமரவேள் அருள
நன்றவன் அடியை நனிவணங் குதுமே.

—கருப்பக்கிளர், சு. அ. இராமசாமிப்புலவர்.

வடமொழியும் ஆங்கிலமும் வண்டமிழும்
 தேர்ந்துதமிழ் வளமார் தூய
நடையெழுதிச் சிவநெறிகொள் நல்லமறை
 மலையடிகள் நாளுந் தேர்ந்தே
உடலுயிராய்ப் பேணியுளம் ஒப்பித்த
 நூல்களெலாம் ஒருங்கே தேர்ந்து
மடமகல நூல்நிலையம் அமைத்த நெ(ல்)லைக்
 கழகத்தார் மன்னி வாழி!

—கரந்தைத் தமிழ்ச் சங்கக் கல்வி நிலையங்களின் ஆசிரியர்கள்.

உறைமலைப் பேரிமயம் உறை உத்தமன் செஞ்சடையான்
நிறையருள் பெற்றொளிரும் சைவம் நீடுசித் தாந்தமெனும்
முறைவளர் நற்கழகம் முந்து முத்தமி ழால்வளர்க்கும்
மறைமலை நூலகமே மன்னி வாழிய நீடுழி!

—உதகை, நாவலர்மணி, நாராயண பாரதி.

ஆங்கிலமும் பைந்தமிழும் ஆரியமும் பன்மொழியும்
பாங்குறவே கற்றுணர்ந்த பைந்தமிழன்—ஓங்கு
மறைமலையின் நூல்நிலையம் மக்களுக்குத் தந்தார்
நிறைந்ததமிழ் வாழ நினைந்து.

—காரைக்குடி, வித்துவான், பெரியகருப்பன், பி.ஏ.

... .... .... ... ....

அன்னார் பெயரால் அழகொழுக நின்றிலங்கும்
நன்னூல் நிலையத்தால் நற்றமிழர்—தன்னேரில்
தொண்டு பலசெய்க தோலாத் தமிழ்நெறியை
எண்டிசைக்கும் காட்டி இனிது.

—நெல்லை, பொ. முத்தரசு, பி.ஏ., எல்.டி.,

செந்தமிழ் தனக்கு மறைமலை யடிகள்
செய்பெரும் பணிகளை எல்லாம்
இந்தநல் லுலகி லுள்ளபே ரறிஞர்
என்றுமே மறந்திடா வண்ணம்
அந்தமாய் அவர்செய் நூல்களை எல்லாம்
நிலையமாய் அமைததமை கேட்டுச்
சிந்தையே மகிழ்ந்தோம் அப்பெரு நிலையம்
செழிப்புடன் நீடுவாழ் குகவே.

—அடையாறு, வடிவேல் முதலியார் தமிழ்ப்பண்டிதர்.

மன்னு மறைமலையாம் மங்காப் புகழ்விளக்காம்
நன்று தமிழன்னை நன்மகவாம்—பன்னல்சால்
அண்ணல் பெயரா னமையவெழும் நூலகந்தான்
வண்மையெலாம் பெற்றுவாழ் க !

—திருவாரூர், கி. சண்முகம், தமிழாசிரியர்.

மால் நிலைக்கும் மனத்தினரை மாண்புறுநல்
மனத்தினராய் மருவச் செய்யும்
நூல் நிலையத் தின்பெருமை தனையுணர்ந்து
மறைமலைவேள் நுவல்நூல் யாவும்
மேல் நிலையத் தினுக்குவழி காட்டுமெனத்
துவக்கிவைத்தார் மேலோர் கொள்சீர்
போல் நிலையம் வாழ்ந்திடுக அறிஞர்செயல்
ஓங்கிநிதம் பொலிந்து வாழி !

—விழுப்புரம், புலவர், நா. ஆறுமுகம்.

உவந்துவந் தொப்பில் கேள்வி
யுணர்கலைப் பெருமான் உற்ற
தவந்தரு பயனாய் வந்த
தனித்தமிழ் மூலம் போற்றிச்
சிவந்திகழ் உலக மூய்யச்
செந்தமிழ்ச் சித்தாந் தப்பேர்
நவந்திகழ் கழகம் நல்கும்
வணமைநல் நலமே வாழி !

—சேந்தை, ரா. மாணிக்கவாசகன்.

மும்மொழியும் மும்மதமும் மூதறிவும் வீறுபெறப்
பம்பியுயர் ஞாயிறெனப் பல்காலும்—நம்புபவர்க்
காசான் மறைமலையாம் அன்புருவி னம்மடிகள்
மாசிலருள் செய்திடுக மற்று.

—திருப்பதி, கோ. பாலசுந்தர நாயகர், எம்.ஏ.,

மறைமலை யடிகள் பேரால்
மன்னுநூ லகமஎந் நாளும்
மறைமலை யடிகள் எண்ணம்
மாநில மீது பூக்க
வரையறை யில்லா நூல்கள்
வகைவகை யாகக் கொண்டே
இறையரு ளதனால் நன்றே
இனிதுநீ டூழி வாழ்க!"

—வெண்பாவூர், பொ. திருஞானம்.

தலைவணங்காத் தமிழ்த்திறமும் தனிக்கொள்கை
வீறுமுயர் சான்றாண் மையும்
அலையலையாய்ப் புதுக்கருத்தும் அறிவுவளர்
பெருஞ்சிறப்பும் அடுக்கல் போல
நிலைகுலையா நேர்மையொடு பிறநாடும்
நினையும்வணம் நிகழ்த்தும் தெய்வ
மலையென்னு மறைமலையார் நூல்நிலையம்
பேருலகில் வாழ்க நன்றே.

—பட்டுக்கோட்டை, புலவர், க. சுப்பிரமணியம்.

மறைமலைச் செம்மல் மனமகிழ் பன்னூல்
நிறைதமிழ் நல்குக நின்று

—நாகைத் தமிழ்ச் சங்கத்தார்.

உவகையிற் சென்னை உயர்நக ரத்தே
மறைமலை யடிகள் மாணூல் நிலையம்
நிறுவிய செயலை நினைந்து
உறுமகிழ் வெய்துவன்; ஓங்குக நிலையமே!

—திருத்தங்கல், வித்துவான், பெ. கோவிந்தன்.

முப்பொருளும் மேதினியில் தான்விளங்கித் தோன்றுமே
முப்பொருள் வல்ல மறைமலையார் நாமத்தால்
செப்பிய செந்தமிழ் நூல்நிலையம் நாளுமே
ஒப்பிலா முத்துப்போல் ஊங்கு.

—குன்னூர், புலவர், த. தமிழ்மணி.

மறைமலையார் நூலகந்தான் மன்றுள்நட மாடும்
மறைமலையான் தண்ணருளால் மாண்பு—நிறைவுடைய
நூலால் தமிழர் நுவலும் சிறப்பற்று
மேலாக வாழ்ந்திடுக வே.

—திருவாரூர், புலவர், க. மீனாட்சிசுந்தரம்.

மங்கலமார் மேலோன் மறைமலைவேள் நூல்நிலையம்
துங்கமுடன் வாழ்ந்திடுக தொல்லுலகில்—தங்கிநிதம்
கற்றுணர்வோர் வாழ்க! கவிஞர் குழுவினர்கள்
எற்றைக்கும் வாழ்க இயைந்து.

—திருவாமாத்தூர், வித்துவான், தி. மு. சங்கரலிங்கம்.

தமிழ்கூறு நல்லுலகில் தனிப்பெரும் புலவனும்
அமிழ்தூறு நூல்கள்பல ஆக்கிய செம்மலாம்
மறைமலை யடிகளின் மாண்புறு நூல்களைத்
திறமையுறத் தொகுத் திலங்கு நூல்நிலையத்
திறப்பு விழாவிலே தேர்ந்த நல்லறிஞர்
சொற்கேட் டுவக்கச் சுப்பையா ஆற்றும்
நற்செயல் கண்டு நானிலம் வியக்குமே.

—மாயூரம், வித்துவான், எஸ். குஞ்சிதபாதம்.

வாழ்க மறைமலைப்பேர், மன்னும் அடிகள்புகழ்
வாழ்க அவர்தொகுத்து வைத்ததமிழ் நூல்நியம்!
வாழ்க தமிழ்மொழிக்கு வாய்த்ததொண்டு செய்யுமவர்
வாழ்க தமிழ்நாடு! வாழ்க தமிழ்மொழியே.

—திருவாமாத்தூர், தி செ. முருகதாச பிள்ளை.

மயங்கிசைக் கோச்சகக் கலிப்பா

தண்டமிழின் சுவைநூலும் தகுசைவத் துறைநூலும்
குண்டுகடல் கடந்துநிதி கொழிக்கவரு மாங்கிலமும்
வடமொழியின் அருநூலும் வகையுறவே இனிதுணர்ந்த
கெடலருஞ்சீர் மறைமலையே கேழ்கிளரும் ஒளிநிலையே
தமிழுலகம் புரிதவத்தால் தழைத்தவொரு பயன்மரம்போல்
அமிழ்தனைய தமிழ்நூலாம் அருங்கனிகள் அளித்தனையால்

இஃது ஆறடித் தரவு

தாய்மொழியில் அரியபல தகவுடைய நூல்களுக்கும்
ஆய்வுரைகள் வகுத்திட்டே அறியாமை களைந்தனையால்
பொங்கோத முண்டதமிழ் பொலிவுறவே பலவுரைநூல்
மங்காத மதிநலத்தால் மாண்புறவே இயற்றினையால்
சைவத்தின் நிலைதழைக்கச் சித்தாந்த வுரைநூல்கள்
மெய்வைத்த விரிவுரைகள் மிகப்பலவே செய்தனையால்

இவை மூன்றும் தாழிசை

ஆங்கதனால்,

இது தனிச் சொல்

தமிழ்நூல்கள் புரந்தோய் நீ
தண்டமிழைக் காத்தோய் நீ
அருஞ்சைவம் வளர்த்தோய் நீ
அருளுள்ளம் படைத்தோய் நீ

இவை முச்சீரோரடி நான்கம் போதரங்கம்

அன்பு நீ  தமிழும் நீ
அருளு நீ  தவமு நீ
புகழு நீ  அமிழ்து நீ
புனித நீ  அறிவு நீ

இவை இருசீரோரடி எட்டம் போதரங்கம்

அதனால்,

இது தனிச்சொல்

நின்பெயர் கொண்டு நிலவுநூல் நிலையம்
பன்னெடுங் காலம் பயனுற
மன்பதை யுலகில் மன்னிவா ழியரோ

இது சுரிதகம்.

—ஆடுதுறை, புலவர், சு. வடிவேலன்.

(வெண்டாழிசைக் கண்ணிகள்)

சீராருந் தமிழ்நாடாம் சென்னையிலே மறைமலையார்
பேராரும் நூல்நிலையம் பீடுபெறத் திறந்திடுநாள்
ஆயிரத்துத் தொளாயிரத்தைம் பத்தெட்டில் ஆகஸ்டு
ஞாயிறறு நான்கதிலே நல்லதுலா லக்கினத்தில்
சென்னை தனி லணிலிங்கிச் செட்டிதெரு நூற்றைந்தாம்
எண்ணுள்ள கட்டிடத்தில் எழிற்சென்னை மாநிலத்தை
மேலாக ஆளுநராம் விட்ணுராம் மேதியென்ற
பாலான மனம்படைத்த பண்புடையார் தலைமையிலே
வாணிசங்கி தத்தில்எம்.எல். வசந்தகு மாரியென்பாள்
வாணிதனைப் போற்கடவுள் வாழ்த்திசையாற் பாடிடவே
உத்தமராம் உயர்சென்னை உள்நாட்டின் நல்லமைச்சர்
பக்தவத் சலம்நிலையம் பரிவுடனே திறந்திடவும்
சுந்தரஞ்சேர் செயலாளர் சுப்பையா பிள்ளையவர்

வந்தவரை முகமலர்ந்து வரவேற்றே உபசரிக்க
இந்தியா வெளிநாடும் ஏற்றுயர் நூல் நிலையமதைச்
சந்ததமுங் கலைவளரத் தக்கபணி செய்வதனை
ஆய்ந்தபத்ம ஸ்ரீ.எஸ்.ஆர். அரங்கநாதர் நாமமுள்ளார்
வாய்ந்தமொழி யால்விளக்கி மழைபோல எடுத்துரைக்க
அன்றையத் தினம்மாலை ஆறுமணி நேரமதில்
மன்றதனி லேசச்சி தானந்தம் பிள்ளையவர்
திருமலிந்த மறைமலையார் திருவுருவப் படந்திறந்தே
பெருமழைபோற் சொன்மழையைப் பெய்தவையை மகிழ்
நற்சோம சுந்தரப்பேர் நாயகரின் படந்திறந்தே [விக்க
சொற்பொழிவு தூயதமிழ் இளவழ கனார்பொழிய
பேரார்பே ராசிரியர் சுந்தரம் பிள்ளைபடம்
சீரார்கு. கோதண்ட பாணிபிள்ளை திறந்திடவும்
திருக்கழக அமைச்சர்வ. திருவரங்க னார்படத்தை
அருமைப்பன் மொழிப்புலவர் அப்பாத் துரைதிறக்க
விண்புகழ்தா கூர்ச்சட்ட விரிவுரையார் கா.சுப்ர
மண்யபிள்ளை படம்டாக்டர் துரையரங்க னார்திறக்க
மங்களஞ்சேர் மறைமலையார் மாண்பதனை வக்கீல்டி.
செங்கல்வ ராயனொடு செந்தமிழிற் சீர்மிகுத்த
தவமணி திருவாட்டி சவுந்திரம் கைலாசம்
அவனிபுகழ் அறிஞர்அண்ணுத் துரையிவர்கள்எடுத்துரைக்க
இத்துணைபேர் குழுமிடவும பேசிடவும் ஈடில்லாச்
சுத்தமனச் சுப்பையா பிள்ளைசெய்த பணியாமே
ஆங்கிலமுஞ் ஆரியமும் தமிழும்நா லாயிரநூல்
தாங்கிநிற்கும் நூல்நிலையம் தமிழருக்கோர் களஞ்சியமே
கழகமதில் பதிப்பித்த கதிர்போ லையாயிரநூல்
அழகுபெருந் தமிழருக்கோர் அரியகலைப் பொக்கிசமே
மாண்பான நூல்களைநன் மாணவர்கள் கற்றுணர்ந்தே
ஆண்சிங்கம் போல்நடக்க அன்னவரை வாழ்த்துதுமே
மறைமலையார் படமுதலா மற்றவர்கள் படந்திறந்தே
திறம்படவே சொற்பொழிவு செய்தோர்கள் வாழியவே
நிறைமனமும் அறநெறியும் நியமமதில் தவறாத
மறைமலையார் புகழ்மேரு மலைபோல வாழியவே.

—திருவையாறு, சித்திரகவிச்சரபம், பி. வி. அப்துல்கபூர் சாஹிப்.

## நேரிசை யாசிரிப்பா

மறையுரு வன்ன மறைமலை யடிகள்
மாண்பெய ரிலங்க மாநிலந் தன்னிற்
சீர்பெரு நகராஞ் சென்னை யம்பதியில்
மம்மர் அறுக்கும் மருந்தெனுங் கல்வி

அறிவினை யளிக்க ஆருயி ருலகிற்
கெழிற்பெரு நூல்நிலை யந்தனை யினிதே
சான்றோர் நிறைதென் னிந்திய சைவசித்
தாந்தநற் சங்கந் தகைபெற நின்றே
வியனலம் விளைக்கும் விளம்பியாண் டுற்ற
ஆவணித் திங்களாம் நாளெட் டதனில்
அமைத்ததாம் அம்ம! அவ் வடிகளார் பெயரில்
சென்னை மன்பதை சீருடன் ஆருநர்
வீறுசால் ஆண்டகை விட்டுணுராம் மேதி
பெயரிய பேரிறை பெட்புடன் தலைமை
தலமது வியக்கத் தந்துமே நிற்க
உண்ணாட் டமைச்சர் பக்தவத் சலமே
துவலவே யொண்ணு நூல்நிலை யந்தனை
நல்லிசைப் பல்லியம் நலமுடன் ஆர்க்கச்
சான்றோர் வாழ்த்தொலி சால்புடன் தழைக்கத்
திறந்துவைத் தனனே ! சென்னைமா நகரில்
அதனால் ;
உலகமுள் ளளவும் ஊழி யூழியாய்
ஓங்கல்போல் நாளும் ஓங்கியே வளர,
பிறைதனைச் சூடும் பிஞ்ஞக அண்ணல்
அடிமல ரதனைக் கரமலர் குவித்து
தமிழ்மணம் நாளும் ஒளிர்கென
வணங்கி ! வாழ்த்துதும் ! ! வளமுற யாமே ! ! !

—குன்னூர், வித்துவான், வெ. சீனிவாசப் பிள்ளை.

மறைமலை யடிகள நூலகநிலை யவிழா
அழைப்பிதழ் கண்டேன் அகமகிழ் கொண்டேன்
மறைமலை யடிகளார் மாண்புடைப் பெரியவர்
அறிவில் வல்லவர் ஆற்றலில் நல்லவர்
எழுதிய நூல்கள் எல்லாம் தித்திக்கும்
தேனும்வாழ்வின் அமுதாம் அடிகள் நினைவில்
அறிஞரும் மேதையுமாம் “விட்டுணுராம் மேதியார்”
விழாவிற் றலைமையும் திறம்பல கொண்டு
அறம்பல காக்கும் அமைச்சர் அறிஞர்
பக்தவத் சலனார் திறந்து வைக்கவும்
அறிஞர் பலரும் ஆற்றும் நல்லுரைப்
பெருவிழா; வளரும் அறிவின் திருவிழா!
இனிதே நடக்க இதயங் கனிந்த
எனது வாழ்த்து!

—புதுக்கோட்டை, குமாரி. எஸ். பிருந்தாதேவி.

# வாழ்த்துரைகள்

மறைமலை அடிகளார் தமிழ்மொழிக்குச் செய்த பணிகள் பல. அவருடைய அரிய ஆராய்ச்சி நூல்கள் செந்தமிழ்த் திறத்தைச் சிறக்கக் காட்டுகின்றன. தெய்வத் தமிழிலக்கியங் கட்கு நல்ல ஆராய்ச்சி நூல்கள் எழுதித் தமிழுலகிற்கு அளித் துள்ளார். தமிழ் கூறும் நல்லுலகம் அடிகளார்க்குக் கடமைப் பட்டுள்ளது. அவர் பெயரால் திறக்கப்பெறும் இந்நூல் நிலையம் அவர் ஆராய்ச்சிக்குத் துணை நூல்களாக உள்ளவற்றைப் பெற் றிருப்பது சிறப்புடைத்து. அதன் திறப்புவிழா செந்தமிழ்ச் சொக்கர் திருவருளால் சிறப்புறுக.

—தருமபுரம், திருப்பெருந் திரு. சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்.

நீண்ட காலமாக எதிர்பார்க்கப்பட்ட மறைமலையடிகளார் நூல் நிலையம் 24-8-58-இல் உள்நாட்டு அமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் பி.ஏ., பி.எல். அவர்கள் திறக்கப்படுவதும், அவ் விழாவிற்குச் சென்னை ஆளுநர் மேதகு, விட்ணுராம் மேதி அவர்கள் தலைமை தாங்குவதும் ஆன செய்தி அறிந்து நாம் மகிழ்ச்சியடைகிறோம்.

இவ்விழா வெற்றிகரமாக நடைபெறவும், மறைமலையடிகளார் நினைவாக எழும் நூல் நிலையம் வாழவும் எமது வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

—மதுரை, திருப்பெருந்திரு. ஞானசம்பந்த தேசிகர்.

மறைமலையடிகள் நூல் நிலையத் திறப்புவிழா நன்கு நடை பெறுவதாக. அறிவு நூல்களின் பெரும் பயனை நன்கு அறிந் தவர் அடிகளார். ஆங்கில நூல்களையும் தமிழ்நூல்களையும் பயின்று பயின்று அவர் பெற்ற புலமையும் தெளிவும் அவர்தம் எழுத்துக்களில் மிளிர்கின்றன. அடிகளாரின் நெறியைப் போற்றி உணர்ந்து அறிவுச் செல்வத்தைப் பெருக்கிக் கொண்டு இளைஞர் பலர் பயன்பெறுவதற்கு இந் நூல் நிலையம் உறு துணையாகுக.

—டாக்டர். மு. வரதராசன், எம்.ஏ., பி.எச்.டி.

விழா இனிது நிறைவேற இறைவனை வழுத்துகின்றேன்.

மறைமலையடிகள் நூல் நிலையம் தமிழ் மக்கட்குப் பெரிய தொரு கருவூலமாகப் பன்னெடுங்காலம் இருந்து பயன் தரும் என்னும் நம்பிக்கை உடையேன்.

—டாக்டர். அ. சிதம்பரநாதன் செட்டியார், எம்.ஏ., எம்.எல். சி.

மறைமலையடிகள் நூல்நிலையத் திறப்புவிழா அழைப்பிதழ் இன்று கைவரப் பெற்றேன் தமிழ் மொழிக்கும், இலக்கியத்திற்கும், மக்களுக்கும் நற்றொண்டு ஆற்றிய பெருமக்களுள் என்றும் போற்றப்படுதற்குரிய சிறப்பு எய்தியவர் மறைமலை அடிகளாவர். அவர்கள் தொகுத்து வைத்திருந்த நூல்களுடன் கழகம் சேர்த்துள்ள நூல்களையும் மறைமலையடிகள் நூல்நிலையத்தில் காணப்பெறுதல் இயலும் எனும் செய்தி தமிழ்மக்களுக்கு இன்பம்தரும் நற்செய்தியாகும். சிறந்த நூல் நிலையங்கள் பல தேவையாக உள்ள இக் காலத்தில் மறைமலையடிகள் நூல்நிலையம் பலர்க்கும் பயன்பட்டு விளங்கும் என்பதில் ஐயம் இல்லை. மற்றவர்கள் என்றும் அடிகளாரைப் போற்றிக்கொள்ள அமையும் இந் நூல்நிலையம், மேலும் மேலும் வளர்ந்து சிறக்கவேண்டும். இந் நூல்நிலையம் சிறந்த ஆராய்ச்சி பல செய்தற்கு உதவியாகித் தமிழ்மொழியின் அருமையினையும், தமிழ் இலக்கியத்தின் பெருமையினையும் தமிழ் அறிந்தவரேயன்றிப் பிற மொழி வல்லாரும் அறிந்துணர வாய்ப்பளிக்கும் என நம்புகிறேன்.

—சிங்கப்பூர், பேராசிரியர், மு. இராசாக்கண்ணனூர்.

அடிகளும் சுந்தரம்பிள்ளையவர்களும் ஆராய்ச்சித் துறையில் எனக்கு வழிகாட்டியாக விளங்குபவர்கள். செய்வனவற்றைத் திருந்தச் செய்தவர்கள். அவர்கள் கட்டுரைகளும் நூற்களும் அவர்கள் மறைந்தும மறையாமல் தமிழகததில் உலவிவருவதே அதற்குச் சான்று.

—திருவனந்தபுரம், வி. ஐ. சுப்பிரமணியம், எம் ஏ., பி.எச்.டி.,

இன்று மாலை தவிர்க்கமுடியாத ஒரு அலுவல் ஏற்பட்டுவிட்டமையால், மறைமலையடிகள் பெயரால் அமையும் நூல் நிலையத் துவக்க விழாவுக்கு வர இயலவில்லை விழாச சிறப்பாக நடைபெறவும், நூல்நிலையம் வளர்ச்சியுறவும் பிரார்த்திக்கிறேன்.

—தமிழரசுக் கழகத் தலைவர், ம. பொ. சிவஞான கிராமணியார்.

அடிகளார் தாமே தொகுத்த தமிழ், ஆங்கிலம், ஆரியம் முதலான மொழிநூற் கருவூலமாம மறைமலையடிகள் நூல் நிலையம் தன்னை அணுகி கற்கும் அனைவோரையும் தம் தாய்மொழியாம் தமிழ் மொழியின் எழுத்தும், மரபும், இலக்கிய மாண்பும், தமிழர் தமக்கேயுரிய பண்பாடும் சிதைய—சிதைக்க—விடாது காக்கும் செம்மலோராக்கி ஊக்குவித்து வென்றித் திருவுடன் திகழ்வதாக என்று அம்பலவாணர் அம்மையார் திருவருளை வழுத்துதும்.

—சேலம், ஆ. மாணிக்கம்.

மறைமலையடிகள் திருநாமம் கொண்ட நூல் நிலையம் நிறுவியதை நான் வரவேற்கிறேன். அடிகள் தமிழுக்குச் செய்த தொண்டு அளவற்றன. திரு. சுப்பையா அவர்கள் இவ்விஷயத்தில் முன் நின்று செய்வதற்காக நான் அவரைப் போற்றுகிறேன்.

—புதுடில்லி, ஜெ. சிவசண்முகம் பிள்ளை.

தமிழ்மொழி தனித்தியங்கும் என்று கூறி, இனித்த நறுந் தமிழில் எழுதியும் பேசியும் வழிகாட்டிய தண்டமிழ்க்கடல் மறைமலையடிகளாரின் பெயரினைச் சூட்டி அமைக்கப்படும் இந் நூல் நிலையம் வளர்ந்து ஓங்கி நீடு நின்று நிலவத் தடங்கருணைப் பெருங்கடலை வேண்டி வழுத்துகின்றேம்.

மக்களினத் தொட்டிலாய் மலர்ந்து, தென்னவன் ஆட்சியிற் கிடந்து, முந்து நூல் கண்ட பழந்தமிழ்நாடாகிய இலங்கையிலே இன்று தமிழ் வாழுமோ என்று எண்ணி ஏங்குகின்றேம். இந்த நிலையில், தமிழ் ஆராய்ச்சிக்கான நூல் நிலையம் உருவாவது சாலச் சிறந்தது. தங்களையே நோக்கி வாழ்கின்றேம்.

—கொழும்பு, மு. கணபதிப் பிள்ளை.

மறைமலையடிகள் தமிழ் உணர்ச்சியின் தலையூற்று தன் நிலைக்களமே அவர்களின் நூற்கருவூலம். அது இனி ஊருணியாகப் பயன்தரப்போவதை யறிந்து பயன்மரம் நர்ப் பழுத்தது போல உவகை எய்துகின்றேன்.

நூற்கருவூலமும், அடிகளார் புகழும் தமிழ் உணர்ச்சியும் திருவருட்பொலிவும் என்றும் நின்று நிலவுக.

—அண்ணமலைப் பல்கலைக் கழகம், ச. தண்டபாணி தேசிகர்.

கழகத்தார் புரியும் செயல்களுள் ஒவ்வொன்றும் பலரும் பாராட்டக் கூடியதாய் என்றும் நிலைத்த புகழினை உடையதாய்த் திகழ்தல் கண்கூடு. அறிஞர் சுப்பையா பிள்ளை அவர்கள் ஆற்றலும் பிற பேரன்பர்களின் ஒத்துழைப்பும் பெரிதும் போற்றுதற்குரியன. செந்தமிழ்க் கடலாம் மறைமலை அடிகளார் திருப்பெயரால் நிறுவப்பெறும் நூல் நிலையம் உலகம் போற்றும் வண்ணம் நிலைத்து நின்று நம் தமிழ்நாட்டிற்குப் பேரும் புகழும் தரும் என்று நான் நம்புகின்றேன்.

—புலவர், மயிலை சிவமுத்து.

முதுபெரும் புலமையை நிலைக்களனாகக் கொண்டு பழுதிலா நூல்கள் பலவற்றைத் தமிழினமும் தமிழும் மாட்சிமையடைவான் வேண்டி எழுதின அம் மும் மொழிப் புலவர்தம் நினைவாக நூல் நிலையம் அமைதல் சிறப்புடைத்தே.

—புதுச்சேரி, வித்துவான், M. D. வேலாயுதனார்.

தனித்தமிழ் இயக்கத்துக்கு அடிகோலிய தன்னிகரில்லா மும்மொழிப்புலமை சேர் செம்மல் மறைமலையடிகளார் நுண்ணி தின் ஆய்ந்து தொகுத்து வைத்துள்ள ஆங்கிலம், தமிழ், ஆரியம் என்னும் மும்மொழிகளிலுமுள்ள நூலகளும், பிறநூல் களும் அடங்கிய நூல்நிலைய நூல்களின் தொகுப்பைப் பொது மக்கள் பலரும் கற்றுணருமாறு நூல்நிலயத்தில் வைப்பது சாலச் சிறப்புடையதாகும்.

—தஞ்சை, வித்துவான், அ. வடிவேலன்.

என்னுடைய பாட்டனுர் செய்த தமிழ்த் தொண்டு தமிழர் மனதில் என்ஞான்றும் நிலைத்திருக்க, தாங்கள் திறக்கும் நூல் நிலையம் மிக உதவியாக இருக்கும்.

—சேலம், மா மறைக்காடன்.

மறைமலையடிகள் தமிழருக்குச் செய்துள்ள தொண்டுகள் தமிழர்கள் என்றும் மறக்கொணுததாகும். அவர் எழுதியுளள நூல்கள் ஒவ்வொன்றும் விலைமதிக்க வொண்ணுத கருவூலங் களாகும.

—காஞ்சிபுரம், து. கு சிவன்.

ஆங்கிலமும், அருந்தமிழும்; ஆரியமும் ஐயமறக் கற்று அரிய ஆராய்ச்சித் திறன்பெற்றுப் பல்கலைக் கழகமாய் அடிகள் பாரினில் திகழ்ந்தனர். நூல்கள் பல இயற்றிச் சைவப் பணியும், செந்தமிழ்ப் பணியும் ஆற்றியவர் அடிகள் என்பதை ஐயமின்றிக் கூறலாம். ஐயம் என அணுகுவார் ஐயமகற்றியும், திரிபு என்று வருவர் திரிபு அகற்றித் தெளிவு பெறச் செய்தும், ஆரியச் சொல்லா அருந்தமிழ்ச் சொல்லா என்பதை ஆராய்ந்து அயலா ரும் ஏற்க அறுதி இட்டு உரைத்த அடிகளார் சென்னையிலே சிறிய நூல்நிலையமாக, தமிழ்நாட்டிலே நடமாடும் தன்னிகரற்ற நூல்நிலையமாகத் திகழ்ந்ததை எண்ணும்போது உள்ளத்திலே உவகை பொங்குகிறது.

—கோவை, ஈ. வே. சிங்காரவேலு.

மொழி, சமயம், அரசியல் துறைகளில் தாழ்ந்துகிடந்த தமிழகத்தைத் தம் தமிழ்த்தொண்டால் தமிழ்மொழி ஆட்சிப் பீடம் ஏற்றித் தரணியெல்லாம் பரணிபாடும் அளவுக்கு வள முறச்செய்து, தமிழர் தம் வாழ்வையுயர்த்திய தமிழ்த்தந்தை உயர்திரு மறைமலையடிகளார் அவர்களின் பெயரால் நூல் நிலையம் தோன்றுவது அவர் நம்மிடையே என்றும் நின்று நல்வழி காட்டுவதற்கொப்பாகும்.

—மதுரை, எம். தட்சிணுமூர்த்திக்கோன்.

அடிகள் உலக அறிவிற்கும் சிறப்பாகத் தமிழுக்கும் செய்துள்ள பேருதவி எவரும் செய்ததில்லை.

—கோவை, சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார்.

அறிவுச் செல்வம் பெருகப் பள்ளிகள் எவ்வளவு தேவையோ அவ்வளவு நல்ல நூல்கள் நிறைந்த நூல் நிலையங்கள் தேவை. பல்வேறு நிலப்பகுதிகளில் விளைந்த தானியத்தில் நன்மணிகளை மட்டும் திரட்டிச் சேமித்து வைத்த களஞ்சியம் பஞ்ச காலத்துப் பசிப்பிணி போக்குமாறுபோல, அரும்பெரும் புலவர் பெருமான் மறைமலையடிகளார் தொகுத்த நன்னூல்களும், பல ஆண்டுகளாகத் தமிழ்ப்பணி புரிந்துதவும் கழகம் தொகுத்த நூல்களும் சேமித்து வைக்கும் சிறந்த கருவூலமாக இந்நூல் நிலையம் விளங்கப்போவதறியப் பெருமிதங் கொள்கிறேன்.

—பெங்களூர், டி. கே. நாகாம்பாள் எம். ஏ.

தமிழின் சிறப்பே தனது குறிக்கோளாகக் கொண்டு அல்லும் பகலும் தமிழ்மொழியின் ஆக்கத்திற்கு உறுதுணையாக விருந்து தொண்டாற்றிய புலமைசேர் செம்மல் மறைமலையடிகளார் நினைவாகச் சென்னையில் மறைமலையடிகள் நூல் நிலையத் திறப்புவிழா நடைபெறுவது குறித்து மிக்க மகிழ்ச்சி. விழா இனிது நடைபெற விழைகின்றேன்.

நூல் நிலையம் தமிழ்மக்களுக்கு இன்பச் சோலையாகத் திகழ்ந்து மிளிர வேண்டுமென்று வாழ்த்துகின்றேன்,

—பி. தங்கராஜன், பி. எஸ்ஸி. (ஆனர்சு),
முதல்வர், செந்திக்குமார நாடார் கல்லூரி, விருதுநகர்.

மறைமலையடிகள் தமிழுலகிற் பெரியாராய் வாழ்ந்தவர்கள் கல்வியிற் பெரியார். அவர்கள் தாம் சேர்த்த நூல்களைத் தமிழுலகம் பயன்படச் செய்தது பற்றித் தமிழுலகம் நன்றி பாராட்டும்.

—கோவை, சம்பந்த சரணலயத் தம்பிரான்.

மறைமலையடிகள் பழமைக்குப் பழமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய்த் திகழ்ந்த தூய அறிவுப் பிழம்பு வடிவினர். அவருடைய அறிவால் தமிழ்மக்கள் கண்ட பழந்தமிழ் உண்மைகள் பல அவ்வுண்மைகள் தமிழ்மக்களின் உள்ளத்தில் யாண்டும் நிலவத்தக்கன. ஊருணி நீர்நிறைந்தாற்போல அவர் எழுதியும் திரட்டியும் வைத்திருந்த அறிவுநூல்கள் பலவும் மக்கள் படித்துப் பயன்பெறற்றய்யுமாறு அமைந்துள்ள மறைமலையடிகளாரின் நூல்நிலையம் நீடு வாழ்க.

—ஈரோடு, வித்துவான், வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர்.

மும்மொழிப் புலவரின் ஆராய்ச்சி நூல்களுடன், கழகம் தொகுத்துள்ள கருவூல நூல்களும் இணைய, நூல் நிலையம் சிறப் போடிலங்கி, மொழி வேற்றுமையின்றி, இனவேற்றுமையற்று அறிவொடு கலைகளும், அருந்தமிழும், பன்மொழியும் வளர வழிசெய்து, குன்றின் மேலிட்ட விளக்கென என்றும் நின்று விளங்கிச் செயலாற்ற வேண்டுகிறேன்

மொழியொடு மெய்ப்பொருள் வரலாறு மிளிர மக்கள் நல்வாழ்வு பெறுவர்.

—மாயூரம் கோ. ப. வேலன்.

அடிகளார் தமிழ்—ஆரியம்—ஆங்கிலம்—ஆகிய மும்மொழி களிலும் வல்லவர்; நூலியற்றல்—சொற்பெருக்காற்றுதல்—கற்பித்தல் ஆகிய புலவர்க்கின்றியமையாத முத்திறமும் வாய்ந்த வித்தகர்; சொல்லும் செயலும் ஒன்றுபட்ட தூயர்; எவரிடத்தும் புலமையைக்கண்டு பாராட்டும் பண்பினர்; நுண் மாண் நுழை புலமைக்கு எடுத்துக்காட்டாக இலங்கியவர். அவர்கள் இயற்றிய நூல்கள் தமிழணங்கை அலங்கரித்து விளங்குகின்றன.

—மேலூர், வித்துவான் வீ. குமாரசாமி ஐயர்.

ஐம்பது ஆண்டுகளுக்குமுன் அடிகள் சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியில் உதவி ஆசிரியராயிருந்தபோது முல்லா சாகிபு தெருவில் ஒரு வீட்டு மாடியில் குடியிருந்தார். அருகில் நான் குடியிருந்தேன். மாத முதலில் கல்லூரியில் பெற்ற ஊதியத்தில் (அப்போது அது சொற்பத் தொகையே) நான்கிலொரு பங்கு தந்து ஓர் ஆங்கில நூலை (on mesmerism) வாங்கிக்கொண்டு வீட்டுக்கு வந்து தம் ஊதியத்தின் மிச்சத்தொகையைத் தம் மனைவியிடம் தரும் சமயத்தில் நானும் என் நண்பரொருவரும் கண்டோம். அவரது தியாகத்தை மெச்சினோம்.

அதுபோன்ற பல அரிய நூல்களைக்கொண்ட இந்நூல் நிலையம் ஊருணி நிறைந்தாற் போலவும் உள்ளூர்ப் பயன் மரம் பழுத்தாற் போலவும் தமிழன்பர்களுக்குப் பயன் தருவதாக.

—பழனி, க. அரங்கசாமி முதலியார்.

மறைமலையடிகளார் நூல்கள் யாவும் நற்றமிழ்க் கருவூலங் கள். உலகெங்கும் இத் தெய்வீகத் தமிழைப் பரப்பி, மக்களை உய்விக்குமாறு, மறைமலையடிகள் நூல்நிலையம் திறக்கப்படுவ தால், இம்முனிவரின் அருளை நினைந்து, இந்நூல்நிலையம் என்றும் நிலைத்து ஓங்கிச் சிறப்புறுமாறு, முழுமுதற் கடவுளின் திருவடி களை மனமார வாயார வாழ்த்துகின்றேன்.

—பாளையங்கோட்டை, டாக்டர், D. R. அண்ணாமலை.

தமிழன் தன்மானங் காக்கும் தூய தமிழ்த் தந்தையாம் மறைமலையடிகளின் நினைவுக் குறியாக, என்றும் நின்று நிலவி வரக்கூடியவற்றுள் அறிவுக் களஞ்சியமாம் நூல்நிலயத்தினும் சிறந்ததொன்று காணமுடியுமோ? கழகம் மூலம், தமிழுக்கும் சைவத்துக்கும் தங்கள் அருமை அண்ணனார் தொடங்கிய பணிகளைப் பின்னும் பெருக்கமாகத் தாங்கள் செய்துவருவதனைத்தும் சிறந்து பலர்க்கும் உதவ எல்லாம்வல்ல ஆண்டவன் அருள்புரிவாராக.

—ராஜபாளையம், ஆர். ஜி. நல்லகுற்றாலம் பிள்ளை.

மறைமலையடிகளாரே ஒரு நூல்நிலையம்—ஒரு பல்கலைக் கழகம். அத்தமிழ்க் கடலின் பெயரால நூல்நிலையம் நிறுவப் பெறுவது சாலச் சிறந்தது அறிவுக் கருவூலத்தின் ஆராய்ச்சிக் கையெழுத்துக் குறிப்புகள் விலை மதிப்பிடமுடியாதன. ஷேக்ஸ்பியரை ஆங்கிலேயர்கள் போற்றுவதுபோல் அடிகளாரைப் போற்றவேண்டுவது தமிழர்களின் முதற் கடமை.

பெண்மைக் குரலிடத்தே ஆண்மை உயிர்ப்பையும் உணர்வையும் ஊட்டிய மாண்புசால் தலைவராவார்கள் அடிகளார். பேச்சுக் கலைக்கு ஒரு வரம்பு முறை அமைத்தவர் மறைத்திரு அடிகளார் ஆவார்கள் காவியுடுத்துங்கூட ஆவிபோம் மட்டும் அருந்தமிழிற்கே ஆக்கம் தேடிய தொண்டர் அடிகளார். தனித் தமிழியக்கத்திற்குத் தனி முதல் தலைவர்.

—சேலம், டாக்டர், எஸ். எம். நமசிவாயம்.

மறைமலையடிகளாரின் அருள் நிதியங்களாகிய அவரது நூல்நிலையம் தமிழ் மக்களுக்கும், ஆராய்ச்சியாளர்களுக்கும், ஓர் அறிவியற் கருவூலமாகும்.

—ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை, பி. ஏ., பி. எல்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

இந்நூல் நிலையம் பல்லாண்டுகள் இப்பாரிடை நற்றமிழ்த் தொண்டாற்றி என்றும் நின்று நிலவுக என உளநிறை நல் வாழ்த்து நவிலுவன்.

—வைரிச்செட்டிபாளையம், வி. அரங்கராசன், பி. ஏ., பி. டி.,

அடிகளாரைத் தமிழகம் எவ்வளவிற்கெவ்வளவு பாராட்டுகிறதோ அவ்வளவிற்கவ்வளவு தன்நிலையுணர்ந்து முன்நிலையுணர்ந்து முன் ஏறுகிறது என்பது பொருள்.

—திருக்குறள் கழகம், சேலம், மு. இரத்தினம் பி. ஏ. (ஆனர்சு)

மறைமலையடிகளின் தனித்தமிழ் உணர்ச்சியும் ஆரிய வெறுப்புணர்ச்சியும் தமிழ்நாடெங்கும் பரவட்டும்.

—சா. குருசாமி, ஆசிரியர், "விடுதலை" சென்னை.

இவ் விருபதாம் நூற்றாண்டில் இணையற்ற அறிவுக்குன்ற மென இலங்கிய மறைமலையடிகளார் ஈட்டியருளிய ஞானச் சுரங்கத்தைப் பேணிக் காக்கும் கழகத்தின் பெரும்பணி பெரிதும் போற்றற்குரியதாகும்.

அடிகளாரின் அறிவுக் கருவூலமாகிய நூல்நிலையத்தை அமைக்கும் இடம், சென்ற நூற்றாண்டில் அருள் ஞானச் செல்வராய்த் திகழ்ந்த திருவருட்பிரகாச வள்ளல் இராமலிங்க அடிகள் எழுந்தருளியிருந்து இன்னுரையாற்றிய பொன்னனைய நன்மாளிகை என்பதை எண்ணும்போது அஃது எல்லையற்ற உவகையினை அளிப்பதாகும்.

—நெல்லை, அ. க. நவநீதகிருஷ்ணன்.

மறைமலையடிகளார், "யான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்" என்பதற்கேற்ப, தாம் அரிதிற் சேர்த்து வைத்துப் படித்த புத்தகங்கள் அனைத்தும் பலருக்கும் பயன்படவேண்டும் என்று கருதி,

"இதனை யிதனு லிவன்முடிக்கு மென்றாய்ந்(து)
அதனை யவன்கண் விடல்"

என்ற பொய்யாமொழிக்கு ஏற்ப, அப்புத்தகங்களைத் தங்களிடம் ஒப்படைத்து ஒரு பொது நூல் நிலையம் திறக்கும்படி ஏற்பாடு செய்தது மிகவும் பாராட்டத்தக்கது. அடிகளாரின் திருவுள்ளப்பாங்கின்படியே தாங்கள் அந் நூல்நிலையத்தை ஏற்படுத்தியதை யான் மிகவும் பாராட்டுகின்றேன். திருவருட் பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் பெரிய புராண விரிவுரை நிகழ்த்திய பாளையம். சோமசுந்தர செட்டியார் அவர்கள் இல்லத்தில் இந்நூல் நிலையம் அமைந்தது மிகவும் பொருத்தமாகும்.

—தாம்பரம், பேராசிரியர், பூ. ஆலாலசுந்தரம் செட்டியார் எம்.ஏ.,

மறைமலையடிகள் உருப்படுத்திய நூல்களைத் தமிழர் அனைவரும் கண்டு கற்றுப் பயன் அடையும் பெருவாய்ப்பினைத் தந்துதவும் உங்களைத் தமிழுலகம் என்றும் மறவாது. வாழ்க மறைமலையடிகள் புகழ்! வாழ்க நூல் நிலையம்!

—பேராசிரியர், தெ. பொ. மீனுட்சிசுந்தரனர்,
அண்ணமலைப் பல்கலைக் கழகம்.

நாற்றிசையும் புகழ் மணக்க வாழ்ந்த வள்ளுவத்தின் இலக்கியமாம் மறைமலையடிகளார் திருப்பெயரினைத் தாங்கா நிற்கும் நூல்நிலையம் மொழிப்பணிக்கு முன்வரும் அனைவருக்கும் ஒரு கலங்கரை விளக்காக ஒளிவீசித் திகழும் என்பது உறுதி.

—தமிழ் மாணவர் மன்றம் கல்கத்தா, மு. நாராயணசாமி.

அடிகளாரின் கொள்கைகள் பூத்துக் காய்த்துப் பயன் அளித்துக்கொண்டிக்கும் உரிய காலத்தில் இவ்வரிய பணி புரிவதைக் காணின் தமிழ் உள்ளங்கள் பூரிக்கின்றன

—நக்கீரர் கழகம் [illegible] வ. [illegible]சுந்தரம்.

தமிழுக்கும் சைவத்திற்கும் அருந்தொண்டு புரிந்துள்ள அடிகளார் நினைவு கருதித் திறக்கப்படும் நூல்நிலையம் மக்களுக்கு அறிவுக்களஞ்சியமாகத் திகழ்வதாக

கலைமகள் கல்விநிலையம், ஈரோடு, எஸ். மீனாட்சிசுந்தரம், பி.ஏ.,எல்.டி.

[illegible] வளர்க்கும் நூல்நிலையம் தண்ணிய தொண்டாற்றித் தக்க பல நூல்களுடன் பெருகி வாழ்ந்து மக்கள் வாழ வழியமைக்குமென்று நம்புகிறோம். இத்தொண்டினைத் தொடங்கிய பெருமக்களைப் பாராட்டுகிறோம்.

—கரந்தைத் தமிழ்ச் சங்கம், சி. வேதாசலம், பி.ஏ., பி.எல்.

தமிழ், சமயம், அரசியல், சமுதாயத்துறைகள் அனைத்திலும் ஈடுபட்டு அப்பெரியார் ஆக்கிய நூல்கள் பலப்பல. அவர் எழுதியுள்ள நூல்கள் யாவும் பளிங்கு நீர்ப்பொய்கைகளாகும். அதில் எட்டிப் பார்ப்போர் முகமெல்லாம் நிழலாடும்.

—எம். எம். தேவராச செட்டியார்,
செயலாளர், மைசூர் மாகாணத் தமிழ்ச் சஙகம், பெங்களூர.

மன்னு புகழ்கொண்ட பொன்னனை நூல்களை மக்கள் யாவரும் நன்கு படித்துப் பயன்பெறுவார்கள் என நம்புகின்றேன். நூல்நிலையம் சிறந்து விளங்க எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவானாக.

—மன்னார்குடி இளங்கோ மன்ற அமைச்சர்.

தேன்மொழியாம் தமிழ்மொழியிலும், மற்றும் ஆங்கிலம், ஆரியம் இவற்றிலும் ஆயிரக்கணக்கில் அரிய நூல்களைப் படைத்து, இலக்கிய உலகில் இணையிலா இடத்தினைத் தமக்கெனத் தேடிக்கொண்ட பேரறிஞரின் நினைவு மக்கள் மனத்திலே பசுமையாக நின்று நிலவும் வண்ணம் அவர்தம் பெயரிலே நூல் நிலையம் நிறுவுவது சாலப்பொருத்தமே.

—தமிழர் மன்றம், மாதுங்கா, கு. க. சுந்தரம்.

## கீழ்க்கண்டவர்களிடமிருந்தும் வாழ்த்துரைகள் வந்துள்ளன

என். எஸ். ஏ. ஆர். அருணாசலன் செட்டியார், தியாகராயநகர்.
நடராசன், செயலாளர், ஸ்ரீ நடராசா கல்விக்கழகம். சென்னை.
அ. கிருஷ்ணசாமி வாண்டையார், எம் எல்.ஏ., பூண்டி.
பேராசியர், அ சீநிவாசராகவன், முதல்வர், வ. உ. சிதம்பரம் கல்லூரி, தூத்துக்குடி.
பி. சோ தண்டபாமன், ஸ்ரீ அரவிந்த ஆசிரமம், புதுச்சேரி.
கா சங்கரனார், நெல்லை.
கி. வெ. இராமன், நாகை.
டி ஆர் சுந்தரம், பப்ளிக் பிராசிகியூட்டர், கோவை.
ஆர். கந்தசாமி மூப்பனார், பி.ஏ.,பி.எல்., குடந்தை.
கொ. அ. அப்பாய் செட்டி, சேலம்.
பழ. நா. நாராயணன் செட்டியார், நேமத்தான்பட்டி.
மு. தெ. நாயகம், பாளையங்கோட்டை.
ஏ. சி. பால் நாடார், தூத்துக்குடி.
வி சி. சுப்பையா கவுண்டர், கோவை.
டி. எஸ். ஆதிமூலம், எம்.எல் ஏ , முக்கூடல், நெல்லை.
பேராசிரியர் அர. சு நாராயணசாமி, விருதுநகர்.
திருமுறைமணி, மு. கண்ணப்பன், பவானி.
ஆ முத்துக்குமாரசாமி பிள்ளை, செயலாளர், திருவள்ளுவர் கழகம், அம்பாசமுத்திரம்.
சு. திருஞானம், சபல்பூர்.
அ வேதரத்தினம், வேதாரண்யம்.
டி சி. பாலசுப்பிரமணியம், செயலாளர், திருவள்ளுவர் கழகம், விக்கிரமசிங்கபுரம்
புரிசை சு. முருகேசன், திருவண்ணாமலை.
பேராசிரியர், பாலூர், கண்ணப்ப முதலியார், சென்னை.
பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம், சென்னை.
வித்துவான், வீரசிவம், திருவாவடுதுறை ஆதீனம்.
புலவர், ஆர். ஏகாம்பர நாதன், அமைச்சர். கூட்டுறவுப் பதிப்பகம், தஞ்சை.
முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம், திருச்சி.
புலவர், ப. அரங்கசாமி, லால்குடி.
வித்துவான், பொ. சுப்பிரமணிய பிள்ளை, திருவிடைமருதூர்.

தசரத ராமசாமி, மதுரை.

நாவலர் இரா நெடுஞ்செழியன், எம் ஏ, சென்னை.

அ. திருமலை முத்துசுவாமி, எம. ஏ, பி டி., நூல்நிலையத் தலைவர், தியாகராசர் கல்லூரி, மதுரை.

என். சுப்பிரமணியம, 'சுகி', திருச்சி.

புலவர், வி சிவக்கொழுந்து, பெரியகுளம்

வித்துவான், ச. வ. முத்தையா, பி ஏ., நெல்லை.

வித்துவான், இரா. கண்ணன், காலமியாபுரம, திருச்சி.

மோகனசுந்தரம், தலைவர், மணவழகர் மன்றம். சென்னை

பெ. தூரன், தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை.

டாக்டர், வி. ஆர் மூர்த்தி. தலைவர், நகராண்மைக் கழகம், குடந்தை.

அகிலன், திருச்சி.

வித்துவான் மறை-திருநாவுக்கரசு, தூத்துக்குடி.

வ. பா. தாமரைக்கண்ணி, வல்லை. பாலசுப்பிரமணியம், சென்னை.

சு இராமச்சந்திரன், திருச்சி

டி. மாணிக்கவாசகம், மீனாட்சி மில்ஸ், மதுரை

பேராசிரியர், ந. சஞ்சீவி, எம். ஏ, காஞ்சிபுரம்.

டி. கே நாராயணசாமி நாயுடு, கூடலூர்.

சி காநதிமதிநாதன், டிபுடி பஞ்சாயத்து ஆபீசர், பெரியகுளம்.

கே என். சீனிவாசன், முன்னாள் நகராண்மைக் கழகத்தலைவர் சென்னை.

புலவர் க வெள்ளைவாரணனார், அண்ணாமலை நகர்

டி வி. சதாசிவப் பண்டாரத்தார், அண்ணாமலை நகர்.

வித்துவான, ஆர். தீர்த்த முதலியார், சென்னை.

கு. சிவமணி, எம். ஏ, எல் டி., கரந்தை, தஞ்சை.

டாக்டர், கே. எஸ். கிருஷ்ணன், டி. எஸ்ஸி, எஃப். ஆர் எஸ் தலைவர், பாரதி தமிழ்ச் சஙகம், மதுரை

ஓரியண்ட் லாங்க்மன்ஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை.

டாக்டர், இராகவன், நெல்லை

எஸ் வி சுவாமிநாத பிள்ளை, சென்னை.

குன்றக்குடி அடிகளார், குன்றக்குடி.

நா. ப. தணிகை அரசு, இந்துமத பாடசாலை, வாலாசாபாத்து.

அண்ணல் தங்கோ, வேலூர்.

ஆபிரகாம் அருளப்பன், பி. ஏ., பாளையங்கோட்டை.

## திருவாசக ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்

# வெளியீட்டு விழா

இவ்விழா, சென்னை "சென்னகேசவப் பெருமாள்" அறநிலையப் பாதுகாப்பினரால் 24—8—1958 மாலை ஆறு மணிக்கு அத்திருக்கோவில் திருமண்டபத்தின்கண் சிறப்புடன் தொடங்கப்பெற்றது. விழாவினுக்குச் சென்னை மாநில ஆளுநர் மாண்புமை விட்டுணுராம் மேதியவர்கள் ஆர்வமுறத் தலைமைபூண்டனர்

விழாத் திருமுறைத் திருமாமறைச் செந்தமிழ்த் திருப் பாட்டுத் திருமறை ஓதுவார் பண்ணுற ஓதத் துவங்கப்பெற்றது. மறைவல்லாரும், மெய்யடியாரும், நிறைபெரும் புலவரும், சான்றோரும், ஆட்சிமுதன்மையரும், செல்வரும், பெருமக்களும் பேரளவினராகக் குழுமியிருந்தனர். பெண்பாலாரும் பேரளவினராக வந்திருந்தனர்.

அத்திருக்கோவிலின் வழிவழி உரிமை அறங்காவலரும் அதுபோன்று பல திருக்கோவில்கள், பல பள்ளி, உயர்நிலைப் பள்ளி, கல்லூரி முதலிய மாணவர்கள் பன்னூற்றவர்கட்குப் பல வூர்களில் "மணலி விடுதி" என்னும் திருப்பெயரால் உண்டி, உறையுள், உறை முதலியன உவப்புடன் ஓவாது நல்கி உற்றுழியுதவும் நற்றவச்சாலைகள் முதலியவற்றிற்கு உரிமை அறங்காவலருமாகிய உயர்திரு. சி இராமகிருட்டிண முதலியார், பி.ஏ., அவர்கள், தலைவரவர்கட்கு ஒரு சிறந்த வரவேற்பு நன்மொழி படித்தளித்தனர்.

தலைவரவர்கள் சிறந்ததொரு தலைமையுரை ஆற்றினர் அதன் மொழிபெயர்ப்புச் சுருக்கம் வருமாறு :

திருக்கோவில்கள் சிறந்த சிற்பக்கலைகட்கு மட்டுமன்றி நமது பண்பாடு, நாகரிகம் முதலியவற்றை நன்கு விளக்கும் உறைவிடமாகவும் திகழ்கின்றன. உலகத்திலேயே மிகமிகப் பழமை வாய்ந்த மொழி தமிழ். இம்மொழி கிறித்து தோன்றுவதற்குப் பன்னூற்றாண்டுகளுக்கு முற்பட்டதாகும். இஃது இந்திய மொழிகள் எல்லாவற்றினும் மிக்க வளமுடையதாகும். தமிழில் பல இலக்கியங்கள் உள்ளன. அவை பல ஆண்டுகள் தொட்டு இன்றுகாறும் நன்கு பாதுகாத்துவைக்கப்பட்டுள்ளன. நம் இலக்கியங்கள் பெரும்பாலும் சமயக்கருத்துக்கள் நிறைந்துள்ளன. கடவுட்பற்றே நம்மவர்களின் நாடொறுமுள்ள

வாழ்க்கையின் தலைசிறந்த நோக்கமாக இருந்தது. முனிவர்களும் அடியவர்களும் பாடிவைத்துள்ள அருட்பாடல்கள் ஆருயிருய்யும் ஆன்மீகக் கருத்துடையன. உலகில் பல சமயங்கள் உள்ளன. ஆனால், அவையெல்லாம் ஒரே கடவுளை அடையும் வழியைத் தான் காட்டுகின்றன. சமயவேற்றுமைகளெல்லாம் வீண் மயக்கமேயன்றி வேறில்லை. எல்லாச் சமயங்களின் அடிப்படைக் கருத்து ஒற்றுமையேயாகும். திருவாசகம் போன்ற நூல்களில் காணப்படும் சமயம், ஒழுக்கம், உயர்கலை முதலியவற்றின் கருத்துக்களை அனைத்துலகும் அறியச்செய்தல் வேண்டும். அப் பொழுதுதான் மற்றவர்கள் இம்மூலநூலை அறிந்து பயன்கொள முடியும்.

திருவாசகத்தை ஆங்கிலத்தில் செவ்வையுற மொழி பெயர்த்த கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்களையும் அதற்கு ஆக்கம் அளித்த அறங்காவலர்களையும் பாராட்டுகின்றேன் என்பதாம்.

சென்னைமாநில உள்நாட்டமைச்சர் பக்தவத்சலனாரவர்கள் நூலை வெளியிட்டுப் பல அரிய கருத்துக்களை நவின்றனர். சுருக்கம் வருமாறு :

சமயம், கலை, இலக்கியம், பண்பாடு முதலியன பற்றிக் கூறும் பண்டை நூல்களை ஆராய்வதற்கென ஓர் ஆராய்ச்சி நிலையம் பழனியிலும் காவிரிப்பூம்பட்டினத்திலும் நிறுவப் படுதல்வேண்டும் சிறந்த தெய்வப் பனுவலுட் திருவாசகம் தலைசிறந்ததொன்றாகும். இந்நூல் ஆங்கில மொழிபெயர்ப்பாக வருவது உலகிற்குப் பெரும்பயன் விளைப்பதாகும். எல்லாரும் அறிந்து இன்புற ஏதுவாகும். திருக்கோவில்கள் தூய நிலையங்களாகும். அவ்விடங்கள் கலைமுதலிய பலவற்றிற்குந் தாயகமாகும். அவற்றைப் போற்றி வளர்ப்பதும் இன்றியமையாததாகும் என்பதே.

அறநிலையப் பாதுகாப்பு ஆணையர் திரு. உத்தண்டராம பிள்ளை ஐ ஏ. எஸ். அவர்கள் காமக்கோடாதிபதி சங்கராச்சாரிய சாமிகளிடமிருந்து வநத வாழ்த்துச் செய்தியைப் படித்தனர். அவர்கள் பாராட்டிப் பேசியதன் சுருக்கம் வருமாறு :

மாணிக்கவாசகரின் மாண்பினை நன்கு விளக்கினர். திருவாசகம் சைவசித்தாந்தக் கருத்துக்களைத் தன்னகத்துப் பொதிந்துள்ளது. கீதை, திருக்குறள், திருவாசகம் ஆகியவை இந்து சமயக் கருத்துக்களையும் மெய்ப்பொருளாம் தத்துவங் களையும் உள்ளடக்கியுள்ளன. திரு. பாலசுப்பிரமணியம் அவர்

களின் இம்மொழி பெயர்ப்புப் பணி தமிழன்பர்கட்கெல்லாம் ஊக்கம் அளிக்கக் கூடியதென்பதேயாம்.

தலைமை உயர்நீதிமன்றத்தின் முன்னாள் நடுவர் திரு. எம். பதஞ்சலி சாத்திரியாரவர்கள் பேசியதன் சுருக்கம் :

திரு. கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்களின் பணி இந்து சமயத்துக்குச் சிறந்த தொண்டாகும். கோவிற்சொத்துக்களை வேறு பணிகளுக்குப் பயன்படுத்த முயற்சிசெய்யப் படுகிறது. இது சரியல்ல இதனை யாம எதிர்த்தல்வேண்டும். கோவில் சொத்துக்களெல்லாம் பத்தியின் வளர்ச்சிக்கே பயன் படுத்தப்படுதல்வேண்டும். அப்படிச் செய்தால் மக்கள் அதனை வரவேற்பார்கள் தருமபுரம், திருப்பனந்தாள் போன்ற மடங்கள் திரு. பாலசுப்பிரமணியம் அவர்களின் தொண்டை நன்கு பயன்படுத்தி அப்பர், சுந்தரர், சம்பந்தர் ஆகியோரின் பாடல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தல் வேண்டுமென்பதே.

பின்னர் திரு. கே. எஸ். இராமசாமி சாத்திரி, திரு. கி. வ. செகந்நாதன், எம்.ஏ , முதலியோரும் பேசினார்கள்.

திரு. கே எம. பாலசுப்பிரமணியம அவர்கள் சுருக்க விளக்கமும், திட்பநுட்பமும், தெளிவும் இனிமையும் பொருளப் பேசினார்கள். அதன் சுருக்கம் வருமாறு :

முதன்முதலாக ஐம்பத்தெட்டு ஆண்டுகளுக்குமுன் இத் திருவாசகத்தை ஆங்கிலத்தில் அருமையும் பெருமையும் பொருந்த மொழிபெயர்த்த திருத்தகு சி. யூ போப்பையர் துரை மகனாரவர்கட்கு இம்மொழிபெயர்ப்பு நூலை யான் அன்புடன் ஒப்புவித்துரிமையாக்குகின்றேன் என்பதே.

திருக்கோவில் அறநிலைய நிறைவேற்றுச் செயலாளர் திரு. எல. பி. கந்தசாமி அவர்கள் நன்றிநவில விழா இனிது நிறை

குறிப்பு: இவ்வருமை வாய்ந்த திருவாசக ஆங்கில மொழிபெயர்ப்புத் தமிழ்த்திருமுறைகட்கோர் அரிய புதுமலர்ச்சியைத் தந்து திருக் கோவில் வழிபாட்டாளர்கட்குத் திருமுறைப் பெருமையினை நன் குணர்த்தி அப்பெருமாமறையான் அனைத்து வழிபாடும் தினைத்தனையும் வழுவின்றி நாளும் நயப்புடனியற்றப் பயனாப்பெருந் துணைபுரியுமென்ப துறுதி.

—ஆசிரியர்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) மயிலைத் தமிழ்ச்சங்கத் துவக்கவிழா

மயிலைத் தமிழ்ச்சங்கத் துவக்கவிழா 17-8-58-இல் மயிலை சினிவாச சாஸ்திரியார் மண்டபத்தில் நடைபெற்றது. விழாவை டாக்டர் சி. பி. இராமசாமி ஐயரவர்கள் துவக்கிவைத்தார். திரு டி. பசுபதியவர்கள் புறநானூற்றுப் பாடல் ஒன்றை இராகமாலிகையில் பாட விழாத் துவங்கிற்று. திருப்புகழ்மணி திரு. டி. எம். கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். விழாவிற்குப் பெருமக்கள் பலர் வந்திருந்தனர். டாக்டர் சி. பி. இராமசாமி ஐயரவர்கள் துவக்கவுரையில் கீழ்க்கண்ட கருத்துக்களைத் தெரிவித்தார்:—

" தமிழ் இலக்கியங்கள் மிகப் பெருமை வாய்ந்தவை. இதனாலேயே போப்பையர் போன்ற மேனாட்டறிஞர்கள் தமிழ்மொழி கலாசாரம் ஆகியவற்றில் பற்றும் ஈடுபாடும் கொண்டிருந்தனர். சேர சோழ, பாண்டிய மன்னர்கள் கொடைத்திறனும், அன்புள்ளமும் கொண்டவர்களாக வாழ்ந்தனர். பிற மொழிகளில் காணப்படாத சுவை மிகுந்த பொருட் செறிவுள்ள பகுதிகள் பல தமிழிலக்கியங்களில் காணப்படுகின்றன. மொழிகளில் எது உயர்ந்தது, எது தாழ்ந்தது என்ற வீண் போராட்டங்களில் இறங்குவது தவறு.

" அகநானூறு புறநானூறு ஆகியவை தொகை நூல்கள். அவற்றை இயற்றிய பழங்காலத் தமிழ்ப் புலவர்கள் வாழ்க்கையின் முழுத் தன்மையை உணர்ந்தவர்கள். அவர்கள் உலக வாழ்க்கையில் எல்லாப் பொருள்களைப் பற்றியும் எழுதியுள்ளனர். தமிழர் பண்பாடு என்பது வாழ்க்கையோடு இணைந்தது. பிறநாடுகளில் பண்பாடு என்பதே காணப்படாத நிலையில் தமிழ்நாட்டில் அது மேலோங்கி நின்றது. தெருக்களை அசுத்தப்படுத்துவது சோழ மன்னர் காலத்திலேயே குற்றமாகக் கருதப்பட்டது. தற்போது மேட்டூர் அணை கட்டப்பட்டுள்ள இடம் சோழர்கள் காலத்திலேயே அணைகட்டுவதற்கு ஏற்ற இடமாகக் குறிக்கப்பட்டிருந்தது. காஞ்சிமா நகரம் புத்த சமண கலாசாரங்களுக்கு இருப்பிடமாக இருந்திருக்கிறது. முதலாவது, இரண்டாவது தமிழ்ச் சங்கங்கள் கடல்கோளால் அழிந்து விட்டன. இம்மாதிரியான நிலைமைகள் எல்லாம் நன்கு ஆராயப்படவேண்டியவை" என்று பேசினார்.

**குறிப்பு:** திரு. சி. பி. இராமசாமி ஐயர் அவர்களைப் போன்ற பேரறிஞர்கள் இங்ஙனம் தமிழகத்தின் சிறப்பை இன்றேனும் உணர்ந்து அதனை நாடறியச் செய்யும் முயற்சி பாராட்டற்குரியது. இத்தகையோரின் பேச்சுக்களால் தமிழகத்தில் விழிப்புணர்ச்சி தோன்றும் என்பதில் ஐயமில்லை.

## (உ) ஆராய்ச்சியும் மொழிபெயர்ப்புமே அடிப்படைப் பணிகள்

கடந்த 31—8—58 இல் சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்க் கலைமன்ற உறுப்பினர் ஆண்டுக் கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு உயர் நீதிமன்ற நடுவர் திரு. என். சோம

சுந்தரம் அவர்கள் தலைமை தாங்கினார்கள். டாக்டர். மு. வரதராசனார், திருவாளர்கள் டி. இராமலிங்கம், பி திருஞானசம்பந்தம், எம். ஆர். பெருமாள், கு. கோதண்டபாணி பிள்ளை ஆகியோர் பேசினர். டாக்டர் மு வரதராசனார் அவர்கள் பேசகையில் டாக்டர் கால்டுவெல் அவர்களின் ஆராய்ச்சிகளைப் பாராட்டியும், சமஸ்கிருதத்திலிருந்து தமிழ் தோன்றியதாகக் கூறப்படும் கூற்றுக்களை மறுத்தும், கால்டுவெல் போன்ற ஆராய்ச்சியாளர்களின் நூல்களை மொழிபெயர்க்கும் முயற்சியில் மாநில அரசினர் அல்லது பல்கலைக் கழகம் ஈடுபடுதல் வேண்டுமென்றும், தமிழ் மாணவர்கள் ஆங்கிலமும் கற்றுத் தேர்ந்து முதன்மையான தமிழ் நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க வேண்டுமென்றும் கூறினார்கள். கல்லூரிகளில் தமிழைப் போதனமொழியாக்க எல்லோரும் ஒத்துழைக்க வேண்டுமென்று ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி முதல்வர் திரு. எம். ஆர். பெருமாள் அவர்கள் வலியுறுத்தினர். திரு. கு. கோதண்டபாணி பிள்ளையவர்கள் நன்றிகூறக் கூட்டம் முடிவுற்றது.

**குறிப்பு:** டாக்டர். மு. வ. அவர்களின் கருத்துரைகள் மிகமிகப் பயனுள்ளனவாகும். அரசியலார் இதுபோன்ற கருத்துக்களைச் செயல்முறைக்குக் கொண்டுவருவார்களாயின் கல்வித்துறையில் நாடு முன்னேறும் என்பதில் ஐயமில்லை. கல்லூரிகளில் தமிழ் போதனமொழியாதல் பற்றியும் அரசியலார் ஆவன செய்வார்களாக.

### (௯) ஒற்றுமைக்கு ஒரேவழி ஆங்கிலமே

'நாட்டு மக்களிடையே மாநிலப்பற்று வளர்ந்து வருகிறது. இந்நிலை நீடிக்குமானால் மாணவர்களும் அலுவலர்களும் தம் இடம் விட்டுப் பிறவிடங்களுக்குச் செல்ல விரும்பமாட்டார்கள். இதனால் இந்தியா சிறுசிறு நாடுகளாகத் தனித்தியங்கும் நிலை ஏற்படும். இம்மாதிரியான சிதைவுகள் ஏற்படாவண்ணம் காக்க மக்களிடையே ஒற்றுமையை உண்டுபண்ண, ஆங்கிலம் ஒன்றினால்தான் முடியும். ஆங்கில இதழ்கள் நாட்டில் பரவுவதால் மாநிலங்களுக்கிடையே ஏற்பட்டுள்ள தொடர்பினைக் கண்டேனும் அரசியலார் ஆங்கிலத்தின் இன்றியமையாமையை உணர்வார்களாக." என்று கடந்த 30—8—58-இல் இலக்குமிபுரம் இளைஞர் கழகச் சார்பிலும், மயிலை இளைஞர்கலைக் கழகச் சார்பிலும் நடைபெற்ற கூட்டத்தில் திரு சி இராசகோபாலாச்சாரியாரவர்கள் பேசியுள்ளார். கூட்டத்திற்குத் திரு. எம். இரத்தினசாமி தலைமை தாங்கினார் அவர் பேசிய காலை,

"ஆங்கிலத்தின் இன்றியமையாமைபற்றி நாங்களெல்லாம் பல தடவை எடுத்துக் கூறியும் அரசியலார் அதனைப் புறக்கணித்து வருகின்றனர் கட்சிப்பற்றுக் காரணமாகவும் மக்கள் அவையில் பெரும்பான்மைப் பலம் உள்ளது என்ற காரணத்தாலும் இந்திக்கு ஆதரவு தேடுவார்களானால் வடக்கு தெற்கு என்ற வேற்றுமை வளரும்; அது மேலும் நீடிக்குமானால் நாட்டின் ஒற்றுமையே கெடும்." என்று கூறினார்.

**குறிப்பு:** நல்ல அறிவுரைகள்! அதுமட்டுமன்று, இஃது அரசியலார்க்கு அறிஞர்கள் தந்துள்ள அறைகூவலுமாகும். இவர்களைப் போன்ற அரசியல் அறிஞர்களின் கருத்துக்களுக்கு மதிப்புத் தருவதைப் பொறுத்தே இருக்கிறது "ஏக இந்தியா" என்னும் பேச்சு.

# மதிப்புரை

"தென்னிந்திய தமிழ்ச் சாசனங்கள்"

[இதன் ஆசிரியர் திரு. வித்துவான் வ. தங்கையா நாடார் அவர்கள் (Senior Tamil Pandit, Cathedral High School, Palayamkottai) ஆவர். இதன் விலை ரூபா 3-50. கிடைக்குமிடம் தென்னிந்திய சைவசித்தாந்த கழகம், 1/140, பிராடுவே, சென்னை-1.]

இந்நூலின்கண் "நந்திவர்மன் சாசனம்" முதல் "வீரபாண்டியன சாசனம்" ஈறாக முப்பது சாசனங்கள் காணப்படுகின்றன. இவைகள் சென்னைப் பல்கலைக் கழகத்தாரால் வித்துவான் கீழ்க்கலைத் தேர்வுகளுக்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளன. 1954 முதல் பி. ஏ. ஆனர்சு, எம்.ஏ. தேர்வுகளுக்கும் இவைகள் பாடமாக இருந்து வருகின்றன.

இந்நூலாசிரியர் மிகுந்த உழைப்பெடுத்து எவ்வெவ்வகையாலெல்லாம் கற்கும் மாணவர்களுக்கு எளிதாகவும் விளக்கமாகவும் புரியும்படி ஆக்கலாமென்று செம்மையுற அமைத்துள்ளார்கள். எனவே இந்நூல் கற்பார்க்கு ஏனைய நூல்களிலும் பெருந்துணைபுரியும் வகையாக விளங்குகின்றது.

இதன்கண் ஒவ்வொரு சாசனத்தின் முன்னர் முன்னுரையொன்று காணப்படுகிறது. அஃது அச் சாசனம் தோன்றிய காலம், இடம், அரசர், மொழி, எழுத்துவகை வரி முதலியவற்றைத் தெளிவாக விளக்குகின்றது. மேலும் அடிக்குறிப்பில் அவ்வவ்வரசர் வரலாறுகளும், விளக்கங்களும், சாசனமுடிவில் சிறந்த பயிற்சி வினக்களும் காணப்படுகின்றன. இத்துணைச் சிறந்தநூல தமிழ்நாட்டு மெய்வரலாறுணர்ந்து நாடும் மொழியும் நன்னெறியும்பேணும் நன்னோக்கமுடைய நன்மாந்தர் பலர்க்கும் பெருந்துணைபுரியும் வரலாற்று விளக்கமாகும். அதனால் இந்நூல் பெருமக்களாலும், ஆசிரியாகளாலும், மாணவர்களாலும் வாங்கியும் வாங்குவித்தும் கற்றுப் பயனெய்துதற்கு உரிய சீரிய நூலாகும். இஃது இருநூற் றெழுபத்தாறு பக்கங்களைக்கொண்ட நல்ல பதிப்பாகும். ஆசிரியர் உரைநடையும் விளக்கமும் இனிமையும் எளிமையும் வாய்ந்தன. இன்றியமையாப் பல மேற்கோள்களும், தமிழ்ச சாசன வரலாறும் ஆராய்ச்சியும் காணப்படுகின்றன. இதனை எல்லாரும் பெற்றுக் கற்றுப் போற்றுதல் இன்றியமையாக்கடனாகும்.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.



பாகனேரி, தமிழ்ப்புரவலர்

திருவாளர் மு. காசிவிசுவநாதன் செட்டியாரும்

அவர்தம் மனைவியார்

திருவாட்டி இலக்குமி ஆச்சியாரும்




சிலம்பு 5வர் ஆண்டு கககூஅக, புரட்டாசி பரல
கூகூ அக்டோபர், 1958 உ

ஓம்

திருச்சிற்றம்பலம்

மணிவிழாக்கொள் மாண்புசேர்

பாகனேரித் தமிழ்ப்புரவலர் திருவாளர், வெ. பெரி. பழ. மு.

காசிவிசுவநாதன் செட்டியாரவர்களின்

# வரலாற்றுக் குறிப்பு

பாண்டிநாடே பழம்பதி, தென்பாண்டிநாடே சிவவுலகம் எனத் தொன்றுதொட்டு ஆன்றோர் போற்றிப் புகழ்வது உலகறியுண்மையாகும். அத்தகைய பாண்டிநாட்டுள் செல்வவணிகர் வாழ்நகரம் மிகவும் சிறப்புடையதென்ப. ஒருநாட்டுடன் பல நாட்டுக்குத் தொடர்புண்டாவதற்கும், ஒருநாட்டுப் பண்பாடு மற்றைய நாட்டிற் பரவுவதற்கும் வாயிலாகவுள்ளவர் காலினும் கலத்தினும் முறையே உள்நாடு வெளிநாடுகளிற் சென்று நூலின் முறை வழுவாது உலைவில் ஊக்கமுடன் தொலைவில் பல் பண்டம் தொகுத்துக் கொண்டு விலைசெய்யும் வணிகச் செல்வரே யாவர்.

திருவள்ளுவ நாயனாரும் நாட்டினைச் சிறப்புச் செய்வார் எவரெவரென உன்னுவார்க்கு உளங்கொள ஓதுவார் வேளாண் மாந்தரும், அறவோரும், தாளாண்மை மிக்க வணிகரும் என மிகுத்துக் கூறுவாராயினர். அது வருமாறு :

"தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு" (குறள் - எகூக.)

வணிகர் என்னும் சொல் வண்மை என்னும் அடியாகத் தோன்றி நாளும் நாட்டுக்கு வண்மை செய்வோர் எனப் பொருள் படும். வணிகர் இன்றேல் வளமும் இன்றாம். வளம் மாந்தரும் சிற்றுயிர்களும் இன்புற்றுவாழ ஆந்துணை புரிந்து ஆவன நல்கல். வணிகர் செய்யுந்தொழிலால் மட்டுமன்றி உய்யும் ஒழுக்கத் தாலும் ஒப்பில்லாதவராவர். அவ்வுண்மையினை வரும் பட்டினப் பாலை யடிகளானுணரலாம்:

“நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்ப நாடிக்
கொள்வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங் குறைகொடாது
பல்பண்டம் பகர்ந்து வீசும்
தொல்கொண்டித் துவன்றிருக்கை.” (வரி. ௨0௬ - ௧௨)

அத்தகைய பொய்யாவாய்மைச் செல்வமரபிற் பல்வளம் பெருகியது பர்கனேரி என்னும் ஊர்.

## பிறப்பு

அவ்வூர்க்கண் நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபினருள் வெ. பெரி பழனியப்பச் செட்டியார் மகன் பெரிய கருப்பன் செட்டியாரென்ற முத்தையச் செட்டியாரும், அவர்தம் கற்புறு மனைவியார் பொற்புறும் வள்ளியம்மை ஆச்சியும பண்டுதொட்டே செய்து போந்த அருந்தவபபேற்றால் நம் மணிவிழாத் தலைவர் அருமகவாய் விளம்பியாண்டு, புரட்டாசித்திஙகள் முதல்நாள் வியாழக்கிழமை (15-9-1898) உத்திர நாளில் தோன்றினர். யாவரும் உளங்கொளும் “பிள்ளையார்பட்டி” என்னும் திருக் கோவிலினைச் சேர்ந்தவர் இவர்

## நூலின் வேட்கை

1905-இல், அஃதாவது ஏழாண்டுப் பருவத்தில் பெரியம்மை நோய்கண்டது. நோய்த்துன்புடன் உணவுட்கொள்ளமுடியாத் துன்பமும் கூடுவதியற்கை அதுவும் வந்து பொருந்தியது அந் நிலையில உணவுட்கொளுமாறு வேண்டினார்பால் தாம் விரும் பிய நூலொன்றினை வாஙகித்தரின் தாம் உண்பதாக உளமுற மொழிந்தனர். அவர்களும் அவ்வாறு செய்யவே உணவு உண் டனர். மேலும் ஒருகால் இரங்கோனில் நூல் வாங்குவதற்குத் தம் பாட்டனாரால் சிறுதடை நேரலாயிற்று அப்பொழுது தாம் உயிரினும் மேலாக மதித்தொழுகும் நூல் வாஙகமுடியாத விடத்துத் தம்முயிரையே ஈடுசெய்யத் துணிந்தமையோர்ந்து

பாட்டனு ரிணக்கம் நல்கி நூல்வாங்கத் துணைபுரிந்தனரென்ப. இஃது எவராலும் செய்யவொண்ணுச் செயற்கருஞ் செயலாகும். அந்நாள்தொட்டு இந்நாள்காறும் அந்நூல் வேட்கை உணர்வுக்கு ஒப்பில் உணவாய் ஒன்றுபோல் நின்று நிலவுகின்றது. பூமாலையும் பொன்மாலையும் முறையே புகழும் மணமும் உடையனவல்ல. பாமாலையொன்றே புகழும் மணமும் உணர்வினைப் புல்லி ஒழியாது நிற்றலுமாகிய தன்மையுமுடையது. அவ்வுண்மை வரும் செந்தமிழ்ச் சிறப்புத் திருமாமறையான் உணரலாம்:

> "பூம்படி மக்கலம் பொற்படி மக்கல மென்றிவற்றால்
> ஆம்படி மக்கல மாகிலும் ஆரூ ரினிதமர்ந்தார்
> தாம்படி மக்கலம் வேண்டுவ ரேற்றமிழ் மாலைகளால்
> நாம்படி மக்கலஞ் செய்து தொழுது மடநெஞ்சமே."
>
> (ச. ௧0௩ - ௩)

தம்பெருமை அருமைத் தாயார் வள்ளியம்மை ஆச்சியார் 1909 சௌமிய ஆண்டு மார்கழித்திங்கள் பதினொராம் பக்கத்தில் இறையடி நீழல் எய்தினர் என்பதனால் நேர்ந்த இன்னலைச் சொல்லவும் ஒண்ணுமோ?

**கலத்திற்சென்று நலப்பொருளீட்டல்**

1911-விரோதிகிருது ஆண்டு ஆவணித்திங்களில் முதன் முதலாக இரங்கோன் சென்றனர். தம் மரபுக்குரிய வணிகப் பணிபுரிந்தனர் அத்துணை இளம்பருவத்தே முழுத்துணிவுடன் விழுமிய பொருளீட்ட மிகநெடுஞ் சேய்மைக்கண்ணும் கலத்திற் சேறல் பழுதில் தொல்குடியாம் செல்வவணிகர் குலப் பெருஞ் செயலாகும்.

**நூல் தொகுக்கும் சால்பு**

1913-ஆம் ஆண்டு இரங்கோனில் "நவீன கதாபுத்தக சாலையில்" முதன் முதலாகப் புத்தகங்கள் வாங்கித் தொகுக்கத் துவங்கினர். அக்காலத்து வாங்கித் தொகுத்த அரும்பெறல் நூல்கள் மிகச்சிறந்தன. அவை வருமாறு: திருவிளையாடற் புராணம், வில்லிபாரதம, கம்பராமாயணம், மூவர் தேவாரம், திருவாசகம் முதலியன. இவற்றுடன் இன்னும் பல நூல்களும் உள்ளன விரிவஞ்சி விடுக்கின்றும். நூல் தொகுப்போர் சிலர் போன்று "போற்றும் புலவராகமட்டும இராமல் பொருள் தெரிந்து தேறறும் புலவரு"மாகத் திகழ்ந்தனர். இஃது எவர்க்கும் மிக்க வியப்பினைத் தருவதொன்றாகும் மேலும் இவர்கள் நினைவாற்றல் மிக்கவர்களாய்த் தம் கட்டிளம் பருவத்தே விளங்

1914-ஆம் ஆண்டில் நல்ல நலத்துடன் தாய்நாடு திரும்பினர். உறவினர் முதலிய பலரும் மிக்க மனமகிழ்ச்சியுடன் வரவேற்றுப் பேணினர்.

திருமணம்

மாந்தர் வாழ்க்கையில் திருமண நிகழ்ச்சி சிறந்ததொரு தெய்வ நிகழ்ச்சியாகும். தவமிருந்து பெற்று வளர்த்துப் பேணிய இருமுது குரவரும தத்தம் செல்வச்சிறுவரை பெருமகனாக்கிப் பிறங்கச் செய்யும் வண்ணம் அருள்நிறை ஆசான்பால் ஒப்பிப்பர். ஆசானும் ஆண்டானருளாற் கற்றுவல்ல திறலோனாக்கி நற்றிறம் படர்ந்து நல்லொழுக்கந் தவறாச் சீலத்துடன் நல்லறவழியால் பொருளீட்டிச் செல்வத்தின் மிக்குயர்ந்து தக்கோராகுமாறு ஆன்றோர் கூட்டம் தழுவுவிப்பர்.

ஆன்றோர் பலரும் அறப் பெருங்காவலராய் நிற்பக் களிமகிழ் சுற்றம் போற்றக் கரணமொடு புணர்த்தும் திருமணக் காலத்தில் ஆசான், இருமுது குரவோர், ஆன்றோர், ஊரவர் யாவருங் கூடித் தெய்வநிலை வாழ்க்கையில் திகழச் செய்கின்றனர். அம்முறையே திகழும் மணமக்களாகிய ஆருயிர்க் காதலரிருவருள்ளும் காதலி தன் காதலனை நாளும் தெய்வமென நல்லுளத்தானுள்கி நற்றெய்வமாக்குகின்றனள். அதனாலேயே அவள் வாழ்க்கைத்துணை என அழைக்கப்படுகினறனள். வாழ்க்கை தெய்வ வாழ்க்கை. அதுவே அவட்குச் சிறந்த கற்பு. இப்பொருண்மை தோன்றத் திருவள்ளுவநாயனார் அருளிச் செய்த செந்தமிழ்ப் பொதுமறை வருமாறு :

> "தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் மழை." (குறள். ௫௫)

1915-இராட்சச ஆண்டில் திருமணம் மிக்க சிறப்புடன் நிகழ்ந்தது. இல்வாழ்க்கை நற்றுணையாய் வாய்த்த நாற்குணமும் நிரம்பிய நங்கை கற்பும் பொற்பும் ஒருங்கு வாய்ந்த சீதையாச்சியாராவர். சீதேவி எனினும் சீதை எனினும் ஒன்றே. இருவரும் காதலொருமித்த வுளளத்தராய் விருந்தும் ஈகையும் திருந்தப் பேணி, கடவுள் நினைவுடன் ஒப்புரவாற்றிச் செப்பமுடன் வாழ்க்கையினை நிகழ்த்தினர்.

பொருவரும் மகப்பேறு

இருவரும் புரிந்த அருந்தவப் பேற்றால் 1916-நள ஆண்டு ஆவணித் திங்களில் நல்லோரைக்கண் நல்லோர் போற்ற ஓர் ஆண் மகவு பிறைசூடும் பெருமான் திருவருளால் பிறந்தது. அம்

மகவுக்கு வெள்ளையப்பன் எனப் பெயர் சூட்டினர். நனிமிகப் பாராட்டி வளர்த்தனர்.

### ஆன்றோர் தொடர்பு

1918-இல் இரங்கோனிலிருக்கும்போது மறைமலையடிகளாரிடமிருந்தும், திருசங்கர் கம்பெனி முதல்வர் திருவாளர் வ. திருவரங்கம்பிள்ளை அவர்களிடமிருந்தும மெய்ம்மைச் செந்தமிழும் சிவநெறியும் தொன்மைபோற் செழித்து நன்மை மிகுதற்கு வாயிலாகிய நற்றமிழ்நூல் பலவும் அவ்வப்போது ஆராக்காதலுடன் வாங்கி வருவாராயினர். இத் தொடர்பும் தம்முடைய ஒத்த உணர்ச்சிக்கு வாய்ந்திருந்தமையால் நாளும் பிறைபோல் வளர்வதாயிற்று.

### பொதுநலத் தொண்டு

1920-ஆம் ஆண்டில் தம்மூராகிய பாகனேரியின்கண் "கருணை கடாட்சி வாசகசாலை" என ஒரு படிப்பகம் நகரத்தார்களின் ஆதரவில் ஏற்படுத்த வேண்டுவன புரிந்து உடனின்று ஊக்கி ஏற்படுத்தினர். அப் படிப்பகத்திற்குத் தம்பாலுள்ள ஏறத்தாழ மூவாயிரம் வெண்பொற்காசு மதிப்புள்ள ஆயிரத்தைஞ்ஞூறு தமிழ்ப் புத்தகங்களை அன்புடன் இன்பம்பெருக அளித்தனர். அதுமுதல் ஆண்டுதோறும் அப்படிப்பகத்திற்கு நன்காய்ந்து இன்றியமையாத நல்ல நூல்கள் பலவற்றையும் அவ்வப்போது வாங்கிக் கொடுத்துக்கொண்டு வருகிறார்கள்.

### நாட்டு நற்றொண்டு

1921-இல் முதன்முறை தமிழ்நாட்டின்கண் காரைக்குடிக்குக் காந்தியடிகளார் புன்முறுவல் பூத்த முகத்துடன் நன்மாந்தர் பலர்சூழ நாட்டுரிமையின் பொருட்டுப் போந்தருள்வாராயினர். அப்போது மெய்யமைமையுணர்ந்து ஐம்பு... துணிந்த துணிபால் அடிகளார் வரவேற்பில் கலந்துகொண்டு அருந்தொண்டாற்றினர். அந்நாட்டொட்டு ஐந்நான்காண்டு... ளுக்குமேல் கதராடை அணிந்து வந்துள்ளார்கள்.

### கழகத் தொடர்பு

1922-இல் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தில் நூறு பங்குகளுக்கு ஆயிரம் வெண்பொற் காசுகள் நல்கிப் பங்குரிமையாளராயினர். அந்நாளில் கழகம் பின்னாள் எந்நிலையினை எய்துமென்று சிறிதும எண்ணாது திருநெல்வேலி, திருவாளர், தி. செ. விசுவநாத பிள்ளையவர்கள், பி. ஏ., பங்கு நூறுக்கு ஆயிரம் வெண்

பொற்காசுகள் உளமுவந்து வழிய நல்கி ஊக்கிக் கழகத்தைத் துவக்கத் துணை புரிந்துள்ளார்கள் வேளாண் பெருஞ் செல்வ ராகிய இவர்கள் செயல் போன்று வணிகப் பெருஞ் செல்வராகிய இவர்களும் நூறு பங்கெடுத்துத் தொடர்புற்று நின்று நடை முறை வளர்ச்சிக்கு நன்கு ஊக்கியுள்ளார்கள்.

இருவர் திருப்பெயர்களும் விசுவநாதன் என அமைந்துள்ள ஒற்றுமையும் எண்ணி இன்புறுவதற்கேற்ற வொன்றாகும். அது மட்டுமன்று; இருபெருஞ் சான்றோர் தம இறையும மறவா இறை யுள்ளும் முறைசேர் மன எழுச்சி போன்று கழகமும் நாளும் வளர்ந்து எழுச்சியுற்றுத் திகழ்வதனை அவ்விருவரும் ஒருங்கு கண்டுகளிக்கும் பேறு கழகத்துக்கு வாய்த்தது ஒருநற்பேறே யாகும்

தம வாய்மைக்கருத்தாகிய "செந்தமிழும் சிவனெறியும் தேயமெலாம தொன்மைபோல் செழித்தோங்கும்" நன்முயற் சிக்குப் பெருவாயிலாகத் திகழ்வது கழகமெனத் துணிந்தனர் துணிவு தாழ்ச்சியுள் தங்குதல் தீதாகலால் உடனே பங்குரிமை பெற்றனர் இஃது இவர்தம் நுண்மாண் நுழைபுலச் செம்மையை யுணர்த்துவதாகும்.

நல்ல நினைவாற்றலுடன் நல்லுளப்பாங்கும் மிக்கவர். பிற ருளத்தை உள்ளவாறுணர்ந்தறியும் உளநூல் திறனுமுள்ளார். புலவர்தம் புலமையினையும் நலமுற அளந்தறிந்தாற்றும் அறிவின் மிக்காருமாவார். அடக்கமே வடிவமாகத திகழும் ஆண்மையர். அதனால் அவர்தம் புலமைச் செறிவு எல்லார்க்கும பொள்ளெனப் புலனாவதற்கில்லை. வாய்த்த இடங்களிலெல்லாம தாங்கற்ற அரும்பெறல் நூல்களின் செய்யுட்களை யாவரும் எளிதினுணர்ந்து பொருள் விளங்குமாறு தெளிவாகப் பொருந்திய இசையுடன் பாடிப் புலப்படுத்துவார்கள்.

செந்தமிழ்க்குப் பேரிடர் இழைக்கும் இந்திமொழி எதிர்ப் பில் இவர்கள் ஆற்றிய தொண்டு அளவிடற்பால தன்று. கழக நற்பணிகள் அனைத்திற்கும் வேண்டும் துணைகள் அவ்வப்போது புரிந்துள்ளார்கள். சிறப்பாக 1938 முதல் கழகச் செயற்குழு உறுப்பினராயும, 1948 முதல் கழகச் செயறகுழுத் தலைவராயும் அமர்ந்து கழக நற்பணிகட்கு உறுதுணை புரிந்து வருகின்றனர்.

மரபுத் தொண்டு

1924-ஆம் ஆண்டு "காரைக்குடித் தனவைசிய ஊழியர்சங்கத்" தில் சேர்ந்து திருவாளர்கள் சொ. முருகப்பச் செட்டியார், ராய.

சொக்கலிங்கஞ் செட்டியார், பிச்சப்பா சுப்பிரமணியம், வி. சா. காசிவிசுவநாதன் செட்டியார், கல்லுப்பட்டி மெ. சாமிநாதன் செட்டியார், வை. சு. சண்முகஞ் செட்டியார் முதலிய நண்பர்கள் பலருடன் சமூகத் தொண்டு பல புரிந்துள்ளார்கள்.

**சமயத் தொண்டு**

"காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தில்" உறுப்பினராகச் சேர்ந்து சமயத் தொண்டு பல புரிந்துள்ளனர். இச்சங்கச் சார்பில் "மாணிக்க வாசகர் முதலிய சமயகுரவர்" வரலாறுகளைச் சிறுசிறு புத்தகங்களாக வெளியிட்டுப் பரப்ப வேண்டும்பண வுதவி புரிந்துள்ளார்கள்.

சமயப் பாதுகாப்பிற்காக இச்சங்கச் சார்பில் ஒவ்வொரு வகையிலும் பன்னீராயிரத்தைஞ்ஞூறு படிகள் விழுக்காடாகப் பதினாறு துண்டு வெளியீடுகள் வெளியிட்டுப் பரப்பப் பணவுதவி செய்துள்ளார்கள.

1926-இல் காந்தியடிகளார் தென்னாட்டுச் சுற்றுச் செலவாகக் காரைக்குடிக்கு வநத ஞான்று திருவாளர்கள் மு நா. மு. சொக்கலிங்கஞ் செட்டியார், ராம. அ. அ சிவ. சிவராமன் செட்டியார், சுண மு மு சாத சாத்தபபச்செட்டியார் முதலிய நண்பர்களின் கூட்டுறவுடன் பாகனேரிக்குக் காந்தியடிகளாரைக் கண்கொளாக் காட்சியுடன் அழைத்து வந்து பொதுக்கூட்டத்தில் அறவுரை வழங்குமாறு ஆவனபுரிந்துள்ளார்கள். அரிசன நிதியின்பொருட்டுப் பொதுமக்களிடம் பணம் திரட்டியதுடன் தாமும் மிகுபொருள் வழங்கி ஐயாயிர வெண்பொற் காசுகள் அடங்கிய பண முடிப்பொன்று அன்புடன் அளித்துள்ளார்கள்.

1927-இல் முதல் மனைவியாக வாய்க்கப்பெற்ற சீதையாச்சியார் இறையடி நீழலினை எய்தினர்.

1928-இல் இரண்டாவது திருமணமாக இலக்குமி ஆச்சியாரை இறையருளால் நலமுறத் திருமணம் புரிந்தனர். அந்நாள் விபவ ஆண்டு தைத்திங்கள் பன்னிரண்டாம் நாள் என்ப.

1934-ஆம் ஆண்டில் "தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம்" ஒன்று பெருமுயற்சியுடன் தம்மூரின்கண் ஏற்படுத்தியுள்ளார்கள். இவ்வாண்டிலேயே "திருவள்ளுவர் நூல்நிலைய"மும் ஏற்படுத்தியுள்ளார்கள். முன் கருணை கடாட்சி வாசக சாலையிலுள்ள நூல்களையும் திருவள்ளுவர் நூல்நிலையத்துடன் ஒருங்கு சேர்த்துள்

ளார்கள். திருவள்ளுவர் நூல்நிலையத்துக்கென வாங்கி வழங்கிய தமிழ், ஆங்கிலம், வடமொழி நூல்களும் சேர்ந்து மொத்த நூல்களின் எண்ணிக்கை மூவாயிரத்தைஞ்ஞூறு; மதிப்புப் பதினாயிரம் வெண்பொற் காசுகள்.

1935-ஆம் ஆண்டு வைகாசித் திங்களில் இருவரும் இடையறாது செய்து போந்த அருந்தவப் பேற்றால் அடைதற்கரிய அருமணி போன்று ஓர் அருமகவு தோன்றிற்று. அம்மகவினை முருகப்பன் என்னும் திருப்பெயர் சூட்டி அழைப்பாராயினர்

## செந்தமிழ்ப் பரப்பும் சிவத்தொண்டும்

1935-ஆம் ஆண்டில் "தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கத்"தின் முதலாவது ஆண்டுவிழா வந்தது. அதற்குத் தலைமை தாஙகும் தக்கார் யாவர் என ஆய்ந்தனர். மாண்புறும மறைமலையடிகளார் ஒருவரே என மனத்துட் கொண்டனர். கொண்டு அடிகளாரையும் சீர்பெற வரவழைத்துச் சிறப்புற விழாவினை நிகழ்த்தினர்.

1936-ஆம் ஆண்டில் இச்சங்கத்தின் இரண்டாவது ஆண்டு நிறைவு விழாப் பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் அவர்கள் தலைமையில் சிறப்புற நிகழ்ந்தது.

பம்பாயில் நிகழ்ந்த "அகில இந்திய காங்கிரசுப் பேரவை"க்குத் தமிழ் நாட்டு ஆணையாளராக திருவாளர்கள் R. V. சுவாமிநாதன் அவர்கள், சி. உ. சுப. உடையப்பா அவர்கள், கண. மு. மு. சாத. சாததப்பச் செட்டியாரவர்கள் ஆகிய மூவருடன் தாமும் போய் அருந்தொண்டாற்றி வந்தார்கள். (ஆணையாளர்—பிரதிநிதிகள்.) இதுமுதல் ஆங்கிலப் புத்தகங்களையும் மிகுதியாக வாங்கத் துவங்கினர். பள்ளியிற் சேர்ந்து ஆங்கிலம் பயிலாவிடினும், இயல்பாக அமைந்துள்ள நினைவாற்றலாலும், பயிற்சி வயத்தாலும், உள்ள மிகுதியாலும் ஓரளவு ஆங்கிலம் தெரிந்துகொள்ளுவதற்கும், வாங்கிய ஆங்கிலப் புத்தகங்கள் இவை, வாங்க வேண்டிய ஆங்கிலப் புத்தகங்கள் இவை என மனதில் பதியவைத்துக் கொள்ளுதற்கும் வேண்டிய ஆங்கிலம் பயின்றுள்ளார்கள். அதனாலேயே வாங்கிய ஆங்கிலப் புத்தகங்களை மீட்டும் வாங்க நேராமலுள்ள வாய்ப்பு அவர்களுக்கு அமைந்துள்ளது.

இதுகாறும் நூல்நிலையத்தின்கண் தொகுத்துள்ள புத்தகங்களின் எண்ணிக்கை ஏறத்தாழ ஒன்பதினாயிரம் ஆகும். இவற்றின் மதிப்பும் முப்பதினாயிரம் வெண்பொற் காசுகளாகும்.

1937-இல் இந்தி எதிர்ப்புத் தமிழ் நாடெங்கணும் தக்க தலைவர்களாலும் சால்புமிக்க தொண்டர்களாலும் தொடங்கப் பெற்றுள்ளது. அதிலும் ஆர்வமுடன் கலந்து கொண்டனர். மறைமலையடிகளாரைக் கொண்டு "இந்தி பொதுமொழியா" என்னும் நூல் ஒன்றினை எழுதுவித்துப் பதினையாயிரம் படிகள் ஈழத்துச் சிவானந்த அடிகளாரைக்கொண்டு அச்சிடுவித்துப் பொதுமக்களுக்கு நன்கொடையாக வழங்கியுள்ளார்கள்.

1938-இல் பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கச் சார்பில் இந்தி எதிர்ப்பின் பொருட்டுத் "தமிழும் இந்தியும்" என்னுந் துண்டு வெளியீட்டை ஈழத்துச் சிவானந்த அடிகளாரைக் கொண்டும், "இந்தி பொதுமொழிப் பயிற்சியா" என்னும் வெளியீட்டைத் திரு சு. நடராசபிள்ளை, பி. ஏ., எல். டி., அவர்களைக் கொண்டும், "தமிழருக்கு இந்தி வேண்டுமா', என்னும் வெளியீட்டைப் புதுவை சுவாமி சுத்தானந்த பாரதியாரவர்களைக் கொண்டும் எழுதுவித்துப் பலவாயிரம் படிகள் அச்சிட்டு எங்கணும் பரப்பியுள்ளார்கள்.

1937-ஆம் ஆண்டு வைகாசித் திங்களில் பாகனேரியில் சென்னைத் திருவள்ளுவர் திருநாட்கழகச் சார்பில் திருவள்ளுவர் விழாவைக் கோவை சிவக்கவிமணி சுப்பிரமணிய முதலியார் அவர்கள் தலைமையில் மிகவுஞ் சிறப்பாக நடத்தித் தந்தார்கள். சொல்லின் செல்வர், உயர்திரு. டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் சொற்பொழிவாற்றியது குறிப்பிடத்தக்கது.

1938-இல் காரைக்குடியில் நிகழ்ந்த இராமநாதபுர மாவட்டத்து இரண்டாவது தமிழர் மாநாட்டில் வரவேற்புக்குழுத் தலைவராக இருந்து வரவேற்புரை நிகழ்த்திச் சிறப்பிததுள்ளார்கள்.

1938 ஜூன் திங்களில் பாகனேரித் தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கத்தின் ஆண்டுவிழா மிகவும் சிறப்புடன் நடைபெற்றது. இரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள் தலைமை தாஙகினார்கள். பண்டித நாவலர் வேங்கடசாமி நாட்டாரவர்கள், கல்கி ரா. கிருட்டிணமூர்த்தியவர்கள், வித்துவான், சோமசுந்தரம் முதலியோர் அரும்பொருள்கள் பல பற்றிப் பேசினார்கள். இவை நிகழ வேண்டுவனபுரிந்து முன்னின்றாற்றியுள்ளார்கள்

கொப்பனாபட்டிக் "கலைமகள் கல்லூரி" நிறுவலாளர் திரு. அ. மெய்யப்பச்செட்டியாரவர்கள் குறித்த கல்லூரியின் ஆட்சிக் குழுவினருள் ஒருவராகக் "கருத்து நிறைவேற்றத்தாள்" (Will) ஆகிய இறுதிமுறியின்கண் சேர்க்கப்பட்டுள்ளார்கள்,

இஃதொன்றே இவர் தம் பொதுநலத் தொண்டின் புகழ்மைக்குத் தக்க எடுத்துக் காட்டாகும். "தமிழ்ப் புரவலர்" என்னும் தனிப் பட்டம் எய்தியமையையும் எளிதின் விளக்கப் போதியதாகும்.

1943-இல் பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியாரவர் கட்கு மகா மகோபாத்தியாயப் பட்டம் கிடைத்தமையைப் பாராட்டும் பொருட்டுக் கூட்டப்பெற்ற கூட்டத்திற்கு மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவர் திருவாளர் டி பி. சீனிவாசையங்காரவர் கள் தலைமை தாங்கினார்கள் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் முதலியோர் பாராட்டுரை வழங்கினார்கள். இதுவும் இவர்தம் பெருமுயற்சியான் நிகழ்ந்ததே.

1948-இல் இரங்கோனுக்குச் சென்று வந்துள்ள தூதுக் குழுவினருள் ஒருவராகப் போய் வந்துள்ளார்கள்.

1952 முதலாக மூன்றரை ஆண்டுகள் வரை பாகனேரிக் கூட்டுறவுப் பண்டகசாலையின் ஆட்சிக்குழுவின் தலைவராக இருந்து தொண்டாற்றியுள்ளார்கள்.

**புத்தக வெளியீடு**

தந் தாயார் வள்ளியம்மை ஆச்சியின் நினைவுக்குறியாக நூல்கள் பல வெளியிட்டு நோன்மைத் தொண்டு பல புரிந்துள் ளார்கள். அவற்றுட் சில வருமாறு:

உயர்திரு பண்டித நாவலர் வேங்கடசாமி நாட்டாரவர்கள் எழுதிய உரையோடு கூடிய சிலப்பதிகாரம், மணிமேகலை, அகநானூறு ஆகிய நூல்களும், உயர்திரு ஆசிரியர் இளவழ கனார் எழுதிய விளக்கவுரையுடன் கூடிய கலித்தொகை நச்சி னார்க்கினியமும், திருவாசகம், தாயுமானவர் பாடல், பட்டினத் தார் பாடல், செயங்கொண்டார் சதகம், நாலடியார் பொழிப்புரை முதலிய நூல்களும் கழக வழியாக வெளியிடுதற்குப் பொருளுதவி புரிந்தனர். இவ்வெளியீடுகள் மீட்டும் மீட்டும் வெளியிடப் பெற்றுத் தனித்தமிழ்த் தொண்டுக்கோர் நல்லணியாகத் திகழ் கின்றன.

**மணிவிழாமாண்பு**

அறுபதாண்டின் நிறைவு என்று சொல்லப்படும் மணிவிழா 11-10-'58 சனிக்கிழமை நிகழ்ந்தது. இவ்வறுபதாண்டின் நிறைவுக்குறிப்பினை ஒருவாறு உய்த்துணரின் மாந்தர்க்குக் கோள் நூலின் கணக்கின்படி அகவை நூற்றிருபதாகும். அவற்றை இன்பம், பொருள், அறம், வீடு என்னும் உறுதிப் பொருள்கள் நான்கிற்கும் முறையே பகுப்பின் முதன்மையாக ஒவ்வொன்

றற்கும் முப்பது ஆண்டுகளாகும். இன்ப முதன்மையாகிய முதன் முப்பது ஆண்டுகளிலும் பொருளறம் வீடாகிய ஏனைப் பகுதிகள் அவர்கட்கு இல்லையென்பது கருத்தன்று அவைகள் அவர்கட்குத் துணைப் பகுதிகளாக நின்று துணைபுரியும். எடுத்துக் காட்டாக ஓர் உருளினைத் தாங்கி நிற்கும் ஆர்கால் நான்கனுள் ஒன்று மேற்பட்டு வருங்கால் ஏனைய மூன்றும் கீழ்ப்பட்டு அதற்குத் துணையாக நிற்கும் ஏனைய மூன்றும் அவ்வுருளினை விட்டு அகன்றேயொழியின் அவ்வொன்றனை மட்டும் கொண்டு அவ்வுருளும் நிலைநில்லாது இறங்குழியும் எனவே எல்லா நிலையிலும் எல்லாம் இயைந்தேயிருக்கும் என்பதனை நன்குணர்க. கற்றலும், கைப் பொருளீட்டலும், காதலியைக் கைபபற்றிக் கற்புடன் நிற்றலும் முதல் முபபதாண்டுகளுக்குரிய இன்ப முதன்மைப் பகுதியாகும். ஏனைய பொருளும் அறமும் வீடும் என்னும் மூன்றும் அதன் துணைப்பகுதிகளாகும் வீடு என்பது ஏனைய மூன்றனையும் விட்டு நீங்குவதன்று. ஆருளால் உண்மையுணர்ந்து உளப்பற்றற்று நேரும் பொருள்களில் வேண்டுமளவு ஒட்டியுறுவதேயாம். இவ்வுண்மை "பரனை நினைந்து இம்மூன்றும், விட்டதே பேரின்ப வீடு" என்னும் மெய்ம்மொழியான் உணரலாம். "விட்டதே பேரின்ப வீடு" என்பதன் பொருள் அம்மூன்றும பரனுக்கெனவே விட்டுவிடுவது பேரின்பத்திற்கு வாயிலாகிய வீடு எனக தனக்கேயுரிய வெனத் தப்பாகக் கொண்ட எண்ணம் மாறி அவை சிவபெருமானுக்கேயுரிய அவனருளாணை தருமளவு அவனை மறவா நினைவுடன் துய்க்கும் உரிமை மட்டும நமக்குரிய எனக் கோடலேயாம். மருத்துவமனை யகத்துள்ள மருநதுகளனைத்தும் மருத்துவர்க்கேயுரிய. ஆனல் அவற்றை அவர் உண்பதில்லை. நோயாளிகளேயுண்பர். ஆனல் மருத்துவர் அளந்து கொடுக்கு மளவே நோயாளியுண்டற்குரியர். இவ்வொபபினுலும் வீடென்பதனைத் தெளியலாம். மேலும் வினைபொருட்களை "வினையினீங்கி விளங்கியவறிவின் முனைவ" னுகிய முதல்வனுக்கு என விட்டுவிட்டால் அப்பொருள்களை முதற்கண் முதல்வனுக்குப் படைத்துக் குழைத்துப் பின்பு பலர்க்கும் பகுத்துத் தானும் உண்பது பண்பட்ட நாகரிகமாநதரின் இயல்பு. இதுவும மேலதற்கு ஒப்பாகும்.

ஏனைப்பொருளின் முதன்மைப்பகுதி அடுத்த முப்பதாண்டுகள் வரையாகும். ஈண்டுபபொருள் என்பது பொருட்பயன் எனக்கொண்டு உண்மை காண்க. இவ்வுண்மை "தாளாற்றித் தந்த பொருளெல்லாந தக்கார்க்கு, வேளாண்மை செய்தற் பொருட்டு" (உகஉ) என்னும் செநதமிழ்ப் பொதுமறையானுணர்க.

இனி அறுபதாண்டு நிறைவெய்தியதும் அறத்தின் முதன் மைப்பகுதி துவங்[illegible] தலைக கொண்டு வாழ்ந்த இருவரும் அப்பொறுப்பினை மக்கள்பால் ஒப்பு வித்து இதுகாறும் உடல் உயிர்த்தொடர்பாலுற்ற தங்குடும்பம் போன்று உயிர்க்குயிராம் உடையவன் தொடர்பால் உலகமனைத் தும் ஒரு குடும்பமெனவும் அவற்றுக்குத் தொண்டுபுரிவதே தம் கடமையெனவுங்கொண்டு சான்றோராய் அறமேற்கொண்டு திற முற வாழ்வதாகும். இதுவே உண்மை இறைபணியாகும் இவ் வுண்மைகள் வரும் செந்தமிழ்ப் பொதுமறையானுணர்க:

"அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொ
டைந்துசால் பூன்றிய தூண்.
இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு." (௯௮௩, ௯௮௭.)

இத்தகைய மணிவிழா நம் அரும்பெருந் தலைவர்க்குக் கீழ்க் கண்டவாறு அருளால் நனிமிகு சிறப்புடன் இனிமையுற மகா நல்லோரைக்கண் நிகழ்ந்துள்ளது.

மணிவிழாக் குழுவினரால் பாகனேரிப் பெருமாள் கோயிலின் முன்பு அமைக்கப்பெற்ற பந்தரின்கண் நடப்பித்த சிறப்புக்களும் வருமாறு:

தவத்திரு, குன்றக்குடி அடிகளார் அவர்கள். குழுவினரால் நம் மணிவிழாத் தலைவரவர்கட்கு அணிபெறப் பொன்னாடை போர்த்துப் புகழ்ந்து வாழ்த்தியுள்ளனர்.

தமிழ்ப் பெரும்புலவர் உயர்திரு ராய. சொக்கலிங்கஞ் செட்டியார் தலைமைதாங்கினார்கள். பிற்பகல் நான்கு மணிமுதல் இறைவணக்கம், வரவேற்புரை, தலைவர் உரை, விரிவுரை முதலியன வருமாறு நிகழ்ந்தன.

உயர்திரு. மு. கா. அவர்களின் உருவப்படத்திறப்பு—செந் தமிழ்க் காவலர் டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார் M. A., Ph.D., M. L. C. அவர்களால் திறந்துவைக்கப்பெற்றது.

பாராட்டும் வாழ்த்தும்

திரு. வித்துவான் வே. மணிக்கவாசகம்பிள்ளை அவர்கள்,

திரு. ஆர். வி. சுவாமிநாதன் அவர்கள்,

பேராசிரியை திருமதி. ந. சரோசனிதேவி, M. A. அவர்கள்,

திரு. உ. சுப்பிரமணியம் அவர்கள்,

திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்கள் ஆகிய இவ்விருவரும் திட்பநுட்பம் செறிந்த இனிய சொற்பொழிவுகள் "கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும், வேட்ப மொழிவதாம் சொல்" என்னும் தமிழ்மறையின்படி ஆற்றியுள்ளார்கள்.

மணிவிழாவின் சிறப்பணியாகத் திகழ்வது திருக்கோவி லின்கண் காணப்பெறும் கடவுளர்க்கு மஞ்சனச் சிறப்பும் ஒப்பனைச் சிறப்பும் விஞ்சுமாறு செய்வித்து அவர்களை எழுந் தருளப் பண்ணுவித்துத் தெய்வத்திருவுலாக் காட்சி கொண்டா டுதல். செந்தமிழ் மூதறிஞர் செய்துபோந்த அடிச்சுவடு மறவாது இஞ்ஞான்றும் மணிவிழாவினையொட்டித் தெய்வத் திருவுலாச் சிறப்பணி விழாவும் நிகழ்ந்தது மிகச் சீர்மையுற செந்தமிழின்மாட்டும் சிவநெறியின் மாட்டும் நீங்காது ஓங்கக் கொண்டுள்ள சிறந்த அன்பினைப் புலப்படுத்துவதாகும் இது.

**வாழ்த்து**

மணிவிழாக்கொள் மாண்பமை இருவரையும் மனமார வாழ்த்துவோமாக. அறமுதன்மையராய் அறுபதாண்டு நிறை வினை எய்தி மணிவிழாக்கொள்ளும் வள்ளால் நீவிர் அடியார் திருவடி முடியணியாக்கொண்டு படியெலாம் புகழப் பல்லூழி வாழியரோ.

இந்நாள் பெறும மணிவிழாப்போன்று நன்னாள் பலவும் நல முடன் வாழ்ந்து வயிரவிழா முத்துவிழா முதலிய பெருவிழாக் களும் பெற்றுப் பல்லுயிரோம்பிச் செந்தமிழும் சிவநெறியும் சிறக்க மைந்தர்பலர் போற்ற பல்லாண்டு வாழ்க. திருநீறும், சிவமணியும், ஐந்தெழுத்தும் முறையே உடல் உள்ளம் உயிராகக் கொண்டு திடமுற வாழ்க. வாழ்க, வாழ்கவென்று வாழ்த்துவம் பலவே.

" மாண்பார மணிவிழாக்கொள் காசி விசுவநாதன்
பூண்போற் றிகழும் இலக்குமியார்—காண்பாரக்
கினியராய் வாழ்ந்து இறையடிகள போற்றி
இனியராய் வாழ்க இசைந்து."

மணிவிழாவினைப் பாராட்டி வந்துள்ள வாழ்த்துரை அஞ்சல் கள் பல. அவைகளும், பாகனேரித் தன வணிக இளைஞர் தமிழ்ச் சங்கத்தார், பாகனேரி மணிவிழாக் குழுவினர், திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார், வாலாசாபாதது இந்துமத பாடசாலையார் அச்சிட்டு வழங்கிய நான்கு வாழ்ததுக்களும் படிக்கப்பட்டன. இவைகள் அடுத்த செல்வியில் வெளிவரும்.

# தமிழ்ப்பெரும் புலவர்களின் கடிதங்கள்

பண்டிதமணி,
மு. கதிரேசன் செட்டியார்
"சாரதாவிலாஸ்"

மகிபாலன்பட்டி,
(இராமநாதபுரம் மாவட்டம்)
19—2—1933.

திருவாளர், வ. திருவரங்கம் பிள்ளையவர்கள்,
அமைச்சர், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்.,
திருநெல்வேலி.

அன்புமிக்க நண்பரவர்களே,

நலம். தங்களரிய கடிதம் வரப்பெற்று மகிழ்ந்தேன். யான் தங்கள்பால் விடைபெற்று மீண்டபின் சில அயலிடங்களுக்குப் போய் வர நேர்ந்தமையால், இதுகாறும் கடிதம் எழுதத் தாழ்த்தன, மன்னிக்க.

யான் ஆங்கு வந்திருந்தபொழுது மிக்க அன்புரிமைகாட்டி என்னைச் சிறப்பித்து வேண்டுவனபுரிந்த தங்கள் நன்றியை யென்றும் மறவேன். தங்கள் இளவலாகிய திரு. சுப்பையா பிள்ளையவர்கள் இனிய முகத்தோடு என்னைப் பேணிய பெருந்தகைமை நினைவிற் பதிந்துளது. தங்கள் அன்புரிமை வாழ்க்கைத் துணைவியாரும் என் அரிய சோதரியாரும் கல்வியணிகலன்களால் விளங்குகின்ற செந்தமிழ்ச் செல்வியாருமாகிய செல்வி—நீலாம்பிகையம்மையார் என்னைக் கண்டுழிக் கூறிய இனிய மொழிகளும் என செவிக்கும் நாவுக்கும் இட்ட இனிய உணவுகளும் என்னை மிகவும் இன்புறுத்தின. "கல்வியே கற்புடைப் பெண்டிர்", என்பது தங்களுக்கமைந்த உண்மைப் பொருளுரையாயிற்று... .நும் இல்லறமே கல்வி நலம் வாய்ந்த நல்லறமாகுக! அருமை மக்களைப்பெற்ற ஆண்டின் முதிர்ந்த தங்களன்னையாரும் இளவலும், கல்விநலஞ்சான்ற கற்புடை மனைவியாரும், செல்வக் குழந்தைகளும் உடல் நலமுடையாராயிருத்தலை அடிக்கடி தெரிவிப்பீர்களாக. எல்லோர்க்கும் என் நினைவு கூறுக

சைவசித்தாந்த சபை ஆண்டு நிகழ்ச்சிகளைப் பத்திரிகைகளிற் கண்டின்புற்றேன். தாங்கள் என்பால் வைத்துள்ள உண்மையன்பைத் தங்கள் செயல்களால் உணர்ந்து உவகைபூத்தேன். திருவாசகம், பெரியபுராண நுண்பொருள்பற்றி விரைந்து வெளியிடமுயல்வேன் திருவருள் துணைசெய்யவேண்டும்

ஆண்டிலும் அறிவிலும் முதிர்ந்த சைவச்செல்வராகிய திருநெல்லையப்ப பிள்ளையவர்கள் பி. ஏ., என்பாற காட்டிய பேரன்பை மறவேன்; அவர்கள் வாழ்த்துரைகள் என் நலத்துக்கு ஏறறவைகளே. அவர்களுக்கு என் நன்றியறிவு, வணக்கம் கூறுக

தங்களன்பன்,
மு. கதிரேசன்.

பண்டிதமணி,
மு. கதிரேசன் செட்டியார்

அண்ணாமலைநகர்,
23—1—43.

தமிழ்ப்புலவர், திரு. இளவழகனுரவர்கள்,
சென்னை.

என் அன்பிற்சிறந்த நண்பரீர்,

நலம் எனக்குக் கிடைத்த சிறப்புப் பட்டத்தைக் குறித்துச் செந்தமிழ்ச் செல்வியில் நீங்கள் எழுதிய பாராட்டுரைகளைக் கண்டு பெரிதும் மகிழ்ச்சியடைந்தேன். தங்கள் எழுத்துக்களில் அன்பு ததும்புகின்றது. தங்கள் சிறந்த உளப்பாங்கு தெள்ளிதிற் புலப்படுகின்றது நுண்பொருள் முகிழ்த்து மணம் கமழ்கின்றது; சொற்களெல்லாம் சூத்திரங்கள் போல நின்று பொருட்பெருக்கத்தைக் கொண்டுள்ளன இதுவரை இதுபற்றிப் பரக்க எழுதிய உரைகளையெல்லாம் வென்று நிறகின்றன. காரணம் தங்கள் மொழிவன்மையும் என்பாலுள்ள அன்பின் சிறப்புமே.

என் தகுதிக்கு மேற்பட்டிருப்பினும் சொற்பொருட் சுவைகளில் ஈடுபடும் இயற்கையை எங்ஙனம் மாற்றுவேன் நன்றியறிவைப் புலப்படுத்துகின்றேன. நீடு வாழ்க.

தங்கள் அன்பன்,
மு. கதிரேசன்.

எம். நல்லதம்பி,
சீனியர் தமிழ்ப்பண்டிதர்,
ஜகிரா காலேஜ்,
(Zahira College)

கொழும்பு,
22—2—1938.

செந்தமிழ்ப் புலவர்,
திரு. திருவரங்க நீலாம்பிகையம்மையார், அவர்கட்கு,

செந்தமிழன்னையின் சீரிய புதல்வீ!

பண்டைப் பனுவல்கள் கிண்டிக் கிண்டிப் புதுமையின் விருந்தெனப் புலநெறி பெருக்கிப் பயனறிவாராப் பண்டித குழாங்களும் பற்றுமேம் படீஇய நற்றவப் புலவரும் தமிழ்வளம் பெருக்கலின் விழைவுமிக் குடையையாய்ச் செஞ்சொற் பொருணலந் தெரித்துத் தெரித்துப் பற்பல கட்டுரை பாங்குற வெழுதியும் பொருட்குவை பொதுளிய பொன்மொழி யுரைத்தும் பிறந்ததன் பயனைப் பெற்றனை யாயினை.

தெளிதமிழ்ச் சீர்வளத்துத் தீதுதீர் நிறையுளத்து நுண்மாணுழை புலத்து நோக்கு மெழில்வலத்துச் செவ்விய வினிய திருந்திய சான்றோர் தூய தமிழ்மணந் தொடுத்தனர் தெரித்தோர் சைவ நுண்பொருட்

டகைமை விளக்கியோர் அருட்பே ரெந்தையார் ஆன்ற நல்லடிகளார் மறைமலை பயந்த குறைவிலா விளக்கே! அன்று நீ யன்பா னன்று போக்கிய வடசொற் றமிழ்நூன் மங்ணிய மணியெனக் காட்சி தருமான் மாட்சிமிக் குடையோய்!

அதுமற் றம்ம மதிநலங் கெழுமித் தமிழினி யாவுஞ சாற்றுதல் காட்டி வயங்கு மான்மிக நயங்கொண் டென்க. வாய்க்குந் தொறுமென் மனத்தகப் படுவன சொற்க ளுண்டெனிற் றெருடுத்தனென் றருவென்.

தண்டமிழ்ச் செல்வன் சைவத் திருவினன் ஒண்டிறற் றலைவனும் பண்புறு மக்களும் ஒக்கலு நீயு முடனல முளநல நனகனம் பொருந்தி, நாளும் வாழ மங்கையொரு பங்கன் மலரடி வழுத்துவென் உடன்பிறப் பெனயா னுரிமையிற் கொள்ளு நீலாம்பிகை யெனுஞ் சால்பின செல்வீ! வாலிய நங்காய்! வளம்பொலி தங்காய்! வாழியை வாழியை மகிழ்தவச் சிறந்தே.

அன்புள்ள,
மு. நல்லதம்பி.

## மாடம்பாக்கம் சிவனை வழுத்திய
# திருப்பாடல்கள்

நாளுங் கோள்களும் நச்சுயிர் வினையும்
நலமி லாக்கொடுந் தீயவர் திறமுங்
கேளுங் கேளலார் கிறிகளும் இடருங்
கீழ வாகமேல் அடியரை நிறுவிக்
கீளும் வெண்பிறை கிளர்முடி யிருவிக்
கிட்டு காலனைப் பட்டிட நெரித்து
வாளும் வில்லுந்தன் னடியர்க்கு வழங்கி
மாடம் பாக்கத்தில் வைகிய சிவனே!

மாடும் பால்சுரந் தன்பினல் வணங்க
மக்க ளென்பவர் பொக்கமாம் உயிரைப்
பாடும் புன்மையிற் பயனின்றிக் கழிந்து
பாரும் விண்ணுமாய்ப் பரந்தநின் பெருமை
நாடுந் தன்மையில் நயனின்றிக் கழிவர்
நம்பர் பாலுறும் நன்றின்றி யொழிவர்
வாடு மன்பர்க்கு மழையென வழங்கும்
மாடம் பாக்கத்தில் வைகிய சிவனே!

**குறிப்பு:** ஆசிரியர் மறைமலையடிகளார் சிவபெருமானைப் பாடாது "இன்றிருந்து நாளை யிறக்குந் தொழிலுடைய, புன்றலைய மாக்க"ளைப் புகழ்ந்துபாடுதல் பெருங்குற்றமாம் என மேலனவற்றால் அறிவுறுத்தினறனர். மாடுவழிபட்டமையால் "மாடம் பாக்கம்" என வழங்குவதாகப் புலனுகின்றது.

## இந்தியாவிலும் வெளிநாடுகளிலும்

# நூல் நிலையத் தொண்டு

[டாக்டர், பத்மஸ்ரீ, எஸ. ஆர். அரங்கநாதன் அவர்கள்]

(செல்வி, சிலம்பு-௩௩, பரல்-௧, ௧௬-ஆம் பக்கத்தொடர்ச்சி)

### 2. போதுக்காரணம்

என் பேருரை நூலகம் என்று அமையாமல், நூலகப் பணி என்று அமைந்ததற்குரிய போதுக்காரணத்தில் இனிக் கருத்துச் செலுத்துவோம்.

நூலகம் என்ற சொல் குறிக்கும் பொருள்பற்றி நீண்டகால மாக நிலவிவரும் தவறான கருததே போதுக்காரணத்தைச் சுட்டிக்காட்டுவதாகும். நூல்களைச் சேமித்து வைக்கும் இடம் என்று இச்சொல் குறிப்பதாகவே கொள்ளப்பட்டு வருகிறது. எதிலும் 'கோட்டமே காணும் கோணங்கிகள்' இன்னும் ஒருபடி மேற்சென்று புத்தகஙகளை ஒளித்து வைக்கும் இடம் என்றுகூட அதற்கு விளக்கம் தரலாம. சிற்சில சமயங்களில் வறிதே தொகுத்துவைத்த ஏடுகளின் தொகுதியாகக்கூட அது கருதப் படுவதுண்டு.

நூலகத்துறையில் காணப்படும் சில முழுமோசமான நடை முறைப் பழக்கஙகளுக்கும் தவறான கோட்பாடுகளுக்கும் நூலகம் என்ற சொல்லின் இத் தவறான பொருளே காரணமாகியுள்ளன.

#### நூலகக்காப்பாளரின் தகுதிக்கூறுகள்

எடுத்துக்காட்டாக, நூலகக்காப்பாளர் புத்தகங்களின் காப்பாளராகக் கருதப்பட்டுவிடுகிறாரேயன்றி, அவற்றின் பயன் பெருக்குபவராகக் கருதப்படுவதில்லை. ஆண்டுக் கணிப்புப் பட்டியில் ஒருதுண்டுத்தாள்கூடப் பிசகாமல் எல்லாம் சரியாய் இருந்து விட்டால் காப்பாளர் உச்ச அளவில் புகழப்பட்டுவிடுகிறார். தூசி துடைப்பவனைத் தவிர வேறு எந்த மனிதரின் கரங்களும் என்றுமே படாமல் புத்தகங்கள் பாதுகாக்கப்பட்டிருப்பதாகத் தெரிந்தால்கூட எவரும் அவரைக் குறைகூற மாட்டார்கள். இதனை விரித்துரைக்கத் தேவையில்லை, என் அனுபவமே போதியது. நம் பல்கலைக் கழகத்தின் நூலகக்காப்பாளர் பதவி முப்பது ஆண்டுகளுக்குமுன் புதிதாக நிறுவப்பட்டபோது, அதற்கு நான் முற்றிலும் தகுதியற்றவனென்று ஒதுக்கப்பட்டுவிட இருந்தேன்.

இதற்குக்காரணம் புழுப்பூச்சி ஆய்வியல் துறையில் நான் பயிற்சி பெறுதவன் என்பதே பல்கலைக்கழக நூலகக காப்பாளரின் தலையான வேலை புத்தகங்களைப் புழுப்பூச்சிகளிலிருந்து பாது காப்பதுதான் என்று கூறப்பட்டது!

இப்போதுகூட, இந்தப் பாதுகாப்புக் காரியம் பொது ஊழியத்தேர்வு ஆணைக்குழுவினரின் உள்ளத்தில் முழுஇடம் வகிப்பது வேடிக்கையாகவே இருக்கிறது. நூலகக் காபபாளர் பதவி கோரி வருபவர்கள் புத்தகங்களைப் புழுப்பூச்சி, பாசி பொட்டுக்கள், மனித இனத்தின் கைவிரல்கள ஆகியவற்றி லிருந்து காததுப் பேணும் வகைகள் தெரிந்தவர்களா என்று தான் அவர்கள் தேர்ந்துகாண விரும்புகிறார்களேயன்றி, வாசிப் பவர் தொகையையும் எல்லையையும கூடுமானவரை விரிவுபடுத்திப் புததகஙகளின் பயனீட்டைப் பெருக்கும் திறமைத் தகுதி உடையவர்களா என்று தேர்ந்து பார்க்க எண்ணுவதில்லை.

மற்றும் இப் பாதுகாப்புக் கொள்கையடிப்படையாகவே, பள்ளிகளில் நூலகங்களின் பொறுப்பை உடற்பயிற்சியாசிரிய ரிடமே ஒப்படைக்கும் வழக்கம் இருந்து வந்தது - மாணவர்கள் அணுகுவதற்கு அஞ்சத்தகக உடல்வலுவுடையவராதலால் அவர் இயல்பான தகுதி உடையவராகக் கருதப்பட்டிருநதிருக்க வேண்டும் ஒருவேளை இத்தகைய 'பூச்சாண்டி'க் காப்பாளரைத் தேர்நதெடுப்பதற்கு இன்னொரு காரணமும இருநதிருக்கலாம் என்று நான் நினைககிறேன். இவர்கள் வேறுயாரும் நூல்களைத தொடாமல் காபபவர்கள் மட்டுமல்ல; எழுத்து வாசிப்பு மண மற்றவராதலால் தாமே வாசிப்பதற்காகக் கையாண்டு கெடுத்து விடும் குற்றத்துக்கு ஆளாகாதவர்கள் ஆவர். இத்தகையவரிடம் புத்தகங்கள் இரட்டிப்புப் பாதுகாபபு உடையவையாக விளங்கு வது உறுதி.

## எது பெரிய நூலகம்?

'எது பெரிய நூலகம்?' என்றால் ஏடுகளின் தொகுதி என்ற நீடிதத தப்பெண்ணப்பழக்கம் இதற்கும் தவறான விடையை எளிதில் தந்துவிடுகிறது. 'அமெரிககாவில் மிகப்பெரிய நூல கங்கள் இருக்கின்றன. மிக மிகப்பெரிய நூலகம் மாஸ்கோவில் இருக்கிறது' என்றெல்லாம் பேசப்படுவதுண்டு. இங்ஙனம பேசு பவர்கள் நூலகத்தின் பெருமையை எப்படிக் கணிக்கிறார்கள்? புத்தக அடுக்குகள் எத்தனை கல் தொலை நீளமுடையன, ஏடு களின் எண்ணிக்கை என்ன, கட்டடம் எவ்வளவு பாரியது - இவற்றையே அவர்கள் அளவைகளாகக் கொண்டுள்ளார்கள் என்பதில் ஐயமில்லை. பல நூலக மேலாளர்கள் இது காரணமாக

எழுத்துருவிலோ, அச்சுருவிலோ கண்ட கண்ட எவற்றையும் வாரித்திரட்டி அடுக்கிவைக்க முனைகிறார்கள். அவ்வுருவில் தரப் பட்டவை உயிர்க்கருத்துடையவையா, குப்பை கூளச்செத்தை களா எனபதைக்கூடக் கவனிக்காதவர்களாகிறார்கள்.

இதுமட்டுமோ? ஆண்டிறுதித் தணிக்கையின் பேரால் வாச கர்கள் வாசிப்பையே நாட்கணக்காக, மாதக்கணக்காக நிறுத்தி வைக்கவும் அவர்கள் தயங்குவதில்லை கருத்தின் இக்கோளாறு இந்திய அரசாங்கத்தையும் விடவில்லை - நூலகக்காப்பாளரின் ஊதிய அளவையோ, காப்பாளர்களின் எண்ணிக்கையையோ வரையறுப்பதில் அவர்கள் குறிப்பிட்ட அரங்கத்திலுள்ள ஏடு களின் எண்ணிக்கையையே ஆதாரமாகக்கொண்டு விடுகிறார்கள். ஏட்டுத் தொகுதி எததனை பேருக்குப் பயன்படுகிறது, எந்த அளவுக்குப் பயன்படுகிறது என்பதற்கோ, அதைப் பயன்படுத் தும் வகையில் நூலகத்தார் செய்யும சேவையின் அளவுக்கோ எத்தகைய முக்கியத்துவமும் அளிக்கப்படுவதில்லை.

ஏடுகளே தரும் விடை

'பெரிய நூலகம் எது?' என்ற கேள்விக்கு, ஏடுகளே தரும் விடை என்னவாயிருக்கக்கூடும்?

அவை இவ்வாறு கூறக்கூடும்.

பல கல்தொலை நீளமுள்ள அடுக்குத்தட்டுகளில் தட்டுகள் நெளிந்து குழுறும்படி நிலையான பளுவுடைய நூறுயிரக்கணக் கான புத்தக வரிசைகளையுடைய நூலகத்தைவிட, ஒரே ஒரு மேசைப் பலகையின் ஒருகோடியில் கையில் ஒரு புத்தகத்துடன் இருக்கும் ஒருவாசகர், மறுகோடியில் அவருக்குத் துணையாதரவு தருகிற ஒரே நூலகத்தார்—இதுவே மிகப்பெரிய நூலகம். ஏனெனில் முதல் நூலகத்தின் நூற்றுக்குத் தொண்ணூற்று ஒன்பது விழுக்காடு நூல்களும் "வாசகர்கள் கைகளில் சென் றமர்ந்து பயன்படும் நல்வாய்ப்பு நமக்கில்லையே, வாசகர்களைத் தேடிக்கொணர்ந்து வாசிக்கத்தூண்டும் தகுதியுடைய நூலகத்தா ரில்லையே" என்று மறுகிக்கொண்டுதானிருக்கமுடியும்.

'எது பெரிய நூலகம்?' என்ற கேள்விக்கு நம் தேசியக் கவிஞர் இரவீந்திரநாத தாகூர் முப்பது ஆண்டுகளுக்குமுன் சென்னை நூலகத்திருக்கூட்டம் வெளியிட்ட முதற்புத்தகத்தின் முதல் கட்டுரையிலேயே தந்த விடை இது.

உண்மை யாதெனில், நூலகத்துறை அறிவின் முதன்முதல் கட்டளை ஒழுங்கு யாதெனில், புத்தகங்கள் பயன்படுத்துவதற்

குரியன என்பதே. சென்னை நூலகத்திருக்கூட்டத்தினால் வெளி யிடப்பட்ட இரண்டாம் புத்தகத்தில் முதற் பக் ... ய ... ரிக்கப்பட்டுள்ளது. புத்தகத்தின் பெயரே 'நூலகத் துறை அறிவின் ஐந்து ஒழுங்கு முறைக் கட்டளைகள்' எனபது. 1931-இல் வெளியிடப்பட்ட இவ்வேடு நூலகப்பணிபற்றிய வரை யில் எல்லாவகையிலும் உலகில் ஒரு பெரும்புரட்சியை உண்டு பண்ணியுள்ளது. முதன் முதலாக, நூலக அறிவுத்துறையை ஓர் இயல்துறையாக்கி, அவ்வியல்துறைக்கு அடிகோலியதே அந்த ஏடுதான். அதன்பின், நூலகப்பணிபற்றிய எல்லாக் கருத்துக்களும் நூலக அறிவுத்துறையின் இந்தக் கட்டளைகளை அடிமரமாகக்கொண்டே கிளைத்துப் பரவியுள்ளன.

### திருத்தமும் வளர்ச்சியும்

பெரிய நூலகம் எது? என்ற கேள்விக்கு முதற்கட்டளை தரும் விடைக்கு மற்றக் கட்டளைகள் மேன்மேலும் ஆக்க விளக்கம் தருகின்றன.

இரண்டாவது கட்டளைப்படி, ஒரு நூலகம் பெரிது என்ற மதிப்புப்பெற வேண்டுமானால், அது ஒவ்வொரு வாசகருக்கும் ஒவ்வொரு நூல் உடையதாய் அமையவேண்டும். மூன்றாவது கட்டளை இதனுடன் அமையாது மேற்செல்கிறது. அதன்படி ஒவ்வொரு புத்தகத்துக்கும் உரிய ஒரு வாசகர் தேர்ந்து காணப் படவில்லையானால், அது பெரிதல்ல என்று கருதப்படும். நான் காவது கட்டளைப்படி, நூலகப்பணியாளர் குழு ஒவ்வொரு வாச கருக்கும் உதவுவதில் ஒருகணமும் வீணாக்காமல், அந்தக் கணத்தில் அந்த வாசகரின் தேவையை அந்தக் கணத்திலேயே ஊசிகுத்தும் நேரத்துக்குள் செய்யவில்லையானால் அந்த நூலகம் பெரிதன்று என வகுத்துவிடுகிறது.

இவ்வாறாக இந்நாளில் நூலகத்துறையில் மதிப்புப்பெறுவது நூலகமன்று, நூலகப்பணியே முழுநிறை மதிப்பும் பெறுவதற் குரியது ஆகிறது.

### மின் காந்தக் கலத்தின் விளக்கச்சான்று

இவை கடந்தும் நான் ஒருபடி மேற்செல்ல விரும்புகிறேன். என் புதிய கருத்தை நான் மின்காந்தக் கலத்தைச் சான்றாகக் கொண்டு விளக்கிக்காட்ட எண்ணுகிறேன்.

மின் காந்தக் கலத்துக்குரிய கருவிக்கூறுகள் ஒரு திருகு வளையக்கம்பி, தேனிரும்பாலான ஓர் உட்கட்டை, மின னோட்டம் ஆகிய மூன்றுமே. இம்மூன்றும் செயலற்ற சடப்-

பொருள்களே. ஆனால் மூன்றும் ஒரே திட்ட நோக்கத்துக்குக் கட்டுப்பட்டு நெருங்கிய செயல் தொடர்பெல்லைக்குள் கொண்டு வரப்பட்டவுடனே, உறுபெரும்பளுவுடையதாகக் கருதப்படும் பாரிய தொடர் ஊர்தியின் இயந்திரத்தையே எளிதில் தூக்க வல்ல வலிமையுடைய மின்காந்த ஆற்றல் திடுமெனச் செயற்படுவது காண்கிறோம்.

இவ்வுவமை நூலகத்தின் வகையிலும் முழுதும் பொருந்துவதாகும்.

நூலகத்துக்குரிய கருவிக்கூறுகள புததகஙகள, வாசகாகள, நூலகத்தார் ஆகிய முக்கூறுகளே. மூன்று கூறுகளும் தனித்தனி இருப்பதானால் - ஒரே அறையில் இருப்பதானால்கூட, நூலக முறையில் மூன்றுகூறுகளும் செயலற்ற கூறுகளே. மூன்றும் சேர்ந்துகூட நூலகம் செயல்உருப் பெறாது. முக்கூறுகளும் ஒரே திட்ட நோக்கத்துக்குக் கட்டுப்பட்ட முறையில் நெருங்கிய செயல் தொடர்புக்குக் கொண்டுவரப்பட்டபோதுதான் மனித உள்ளத்துக்கு ஒளியும் இன்பமும் ஒருங்கே ஊட்டி நல்லறிவார்வத்துடன் புதுக்கருத்து உருவாக்குவதற்கேற்ற உயிர்ப் படைப்பாற்றலுடைய நூலகம் உருவாகமுடியும்.

இக்கணததில நம முனனிருக்கும மறைமலை நூல
யும் அதற்கிடந்தரும் கட்டடமும் சேர்ந்துகூட ஒரு நூலகமாகி
வாசகர்கள் உள்ளே வந்து நூலகத்தாரின் துணைப்
பணி அவர்களுக்கு உதவும் நேரங்களில்தான் - அவ்வாதரவால் புத்தகங்களின் தொகுதியிலிருந்து தத்தம் ஆற்றலளவுக்கேற்ப, தத்தமக்கு இயன்ற வேகத்திலேயே அறிவும் அறிவார்வமும் பெற்று, தத்தம் பண்பு நிறைவு நோக்கித் தத்தம் முழுநிறை மலர்ச்சி நோக்கி முன்னேறும் தறுவாய்களில்தான் அஃது ஒரு நூலகமாக மிளிரும்.

### நூலகத்துறையில், 'எங்ஙனம்' என்ற கேள்வி

'நூலகம் என்றால் என்ன?' என்ற கேள்வி தரும் புதுக் கருத்து விளக்கத்தைக் கண்டோம். மின்காந்தக்கலம் சில நேரங்களில் மட்டுமே மின்காந்தக்கலமாகச் செயலாற்றுவது போல, நூலகமும் சில தறுவாய்களின்தான் உயிர் நூலகமாகச் செயலாற்றுகிறது என்றும், நூலகத்தின் உயிர் ஒரு நூல் தொகுதியோ, கட்டடமோ அல்ல, நூலகப்பணியே என்றும் இப்புதுக்கருத்து விளக்கம் தருகிறது. இப்புதுப்போக்கு நூலக மேலாண்மையாளரின் நோக்கிலும், நூலகத் தொழில்முறைத் துறையின் நடைமுறைப் பழக்கவழக்கங்களிலும் எத்தனையோ புரட்சிகரமான மாறுதல்களைத் தோற்றுவித்துள்ளது.

ஒருபுறம் வாசகர்களுக்கும் ஏடுகளுக்கும் இடையே இருந்து வந்த தொலையை இப்புதுத்திருப்பம் முற்றிலும் அழித்து வருகிறது. நூலகக்காப்பாளர் திருப்புன்கூர் நந்தியைப்போல அடுக்கு மேடைகளிலுள்ள புத்தகங்களுக்கும் அவற்றை நாடிவரும் வாசகர்களுக்கும் இடையே தடையாக நிற்கக்கூடாது. ஏனெனில் மேடையடுக்குகளில் உள்ள புத்தகங்கள் வாசகர்கள் எப்போது வாரியெடுதது அணைப்பார்களோ என்றுதான் ஏங்கிக் காத்துக் கிடக்கின்றன. அதுமட்டுமன்று; ஆச்சாள்புரத்தில் திருஞான சம்பந்தர் செய்ததுபோல, நூலகக்காப்பாளர், நூலகத்தைச் சுற்றிலும் உள்ள பகுதியில் வாழும் மக்கள் எல்லாரையும் வளைத்துப்பிடித்து நூலகத்துக்குள் கொண்டு வருவதற்குப் பாடுபடக் கடமைப்பட்டவர் ஆவர் நகரமக்களில் ஒருவர் விடாமல் ஒவ்வொருவரும் நூலகப்பணியின் முழுப்பயனுதவியும் பெறும்வரை, ஒன்றுவிடாமல் ஒவ்வொரு புத்தகமும் தத்தமக்குரிய வாசகர்களைச் சென்றடைந்து முழுப்பயன் நிறைவுறும்வரை நூலகத்தார் தம் பணியின் நிறைவுகாண இசையக் கூடாது.

ரரையுமம அவா சூழகுழா தைதயும விருநதன ராக ஏற்றபோது வசிட்டர் விருந்துக் குழாத்தினர் ஒவ்வொருவர் தேவைகளையும் அறிந்துதவ ஒவ்வொரு தனிமனிதரை ஈடுபடுத்தியதுபோல, வாசகர்களில் எவரும் துணையுதவியில்லாமல் இராதபடி போதிய அளவான நூலகத் துணைவர்களை நூலகமேலாளர் அமர்விக்க வேண்டும். நூலகக்கட்டடமும் எப்போதுமே விழாக் கோல முடையதாக, இன்பக் கவர்ச்சியுடையதாய் ஒப்பனை செய்யப் பெற்றதாகத் திகழ வேண்டும் அடுக்கு மேடைகளின் உயரம் கட்டடத்தின தள உயரத்துக் கேற்றபடி அமைந்து விடாமல் மனிதர் சராசரி உயரத்துக்கேற்றபடி அமைய வேண்டும். வாசகர்களுக்குரிய நாற்காலிகள் கரடுமுரடான அடியிருக்கையும் கிறல் வாய்ந்த பின்னணிச் சாய்வும் கொண்ட கடுஞ்சிறை இருக்கைகளாக விளங்காமல், காற்றுப்புகும வாய்ப்புடைய வில்லமைப்பு அல்லது மெத்தையிட்ட மெல்லடிகளும் முதுகின் போக்குக்கிசைந்த வளைவிசைவான சாய்மானங்களும் சந்தடி செய்யாத தொய்வக முனையுடைய கால்களும எளிதாக மேசையருகில் இழுத்துப் போடவுதவும்படி கைப்பிடிகளும் கைத்தாங்கல்களும் உடையதாகத் திகழ்தல் நலம்.

நூலகம் நூலகப்பணிக்குரியது என்பதைக் கண்டு கொண்டால் இத்தகைய நுட்ப நுணுக்க வாய்ப்புக்களை இன்னும் எவ்வளவோ நுணுக்க விரிவுபடுததிக் கூறலாம்.

இவற்றை இன்னும் சற்று விரிவாகத் தேர்ந்தாராய்வோம்.

### திறந்தவழி நூலகப்பணி வாய்ப்பு

முதலில் திருப்புன்கூர் நந்தி உவமையை எடுத்துக் கொள்வோம். சென்ற எழுபது ஆண்டுகளில் நூலகப்பணியின் பாங்கு புத்தக அடுககுமேடை வரிசைகளிலெல்லாம் காத்திருக்கும் புத்தகங்களை வாசகர்களே நேராகச்சென்று அணுகி அவற்றைச் சுற்றி உலாவவிடும் வாய்ப்பை நூலகந்தோறும் பெருக்குவதாகவே அமைந்துள்ளது. புல்வெளிகளில் தங்கு தடையின்றி மேயவிடப்படும் கன்று காலிகள் போல, அவர்கள் ஏடுகளை எடுத்துத் திறந்து மூடி நுகரலாம். எடுத்து முதற் பார்வையில் சுவை தேர்ந்து பதம் பார்த்துப் பின் நீடித்து நுகர்வு கருதின வாசிப்புப் புகுதிக்கோ, தங்கள் இல்லத்துக்கோ கொண்டு சென்று மனமார அருநதலாம். நூலகப் பணித் துறையில் திறந்தவழி வாய்ப்பு என்பது இதுவே.

பிரிட்டிஷ் இணையரசுகளிலும் அமெரிக்க இணை நாடுகளிலும் இத் திறந்தவழி முறையே கையாளப்படுகிறது. டென்மார்க்கிலும் மற்ற ஸ்காந்தினேவிய (நார்வே, ஸ்வீடன்) அரசுகளிலும உள்ள நிலை இதுவே. இந்நாடுகளிலுள்ள பொது நூலகங்களில் மாலை நேரஙகளில் வாசகர்கள் கும்பல் குமபலாக வந்து திரண்டு குழுமுகின்றனர் சிக்காகோப பொது நூலகத்தில் நான் ஒரு சமயம் எண்ணிப் பார்த்து வாசகர்கள் ஆயிரத்துக்கு மேலிருபபதைக் கண்டு வியப்படைந்தேன்.

நம் தேசத்திலேயே திறந்த வழிமுறையை முதல் முதல் வழக்கிற்குக் கொண்டுவந்த நூலகம் சென்னைப் பல்கலைக் கழக நூலகந்தான் மிக முற்பட்ட காலத்தில், 1928-லேயே எத்தகைய ஆரவாரமுமில்லாமல் இப்புது வழக்கைக் கொணர்ந்திருந்தேன். நம் மக்கள் இதனை நன்கு வரவேற்று ஆர்வம காட்டியதுடன் பெருமபொறுப்புணர்ச்சியுடனும் நடந்துகொண்டார்கள்.

நூலகம் 1936-ல் புதிய கட்டடங்களுககு மாறியபின் ஒரு தடவை ஒரே சமயத்தில் வாசிப்புக் கூடத்திலும் புத்தக அடுக்கு வரிசைக கூடங்களிலுமாக ஐந்நூறுக்கு மேற்பட்ட வாசகர்கள மொய்த்து உலாவியதை எண்ணிக் கணிக்க முடிந்தது. நூலகத்திலுள்ள என் தோழர்களுக்கு இஃது எல்லையற்ற உவகை தந்தது. அந்நாட்களில் அத்தகைய நேரங்களில் நூலகத் துணைவர்களின் முகங்கள் இன்பமிலவாடின.

### திறந்தவழிமுறையில் புத்தகங்களுக்குப் பாதுகாப்புண்டோ?

எல்லா மனிதருக்கும் எல்லா நிறுவனங்களுக்கும் ஏற்படுவதுபோல, திறந்தவழி முறைக்கும் எதிர்ப்பாளரும், குறைகூறுபவர்களும் ஐயப்படும் 'ஐயபபத் தம்பிரான்களும் உண்டு.

'திறந்தவழி முறையுமாச்சு, புத்தகங்களின் பாதுகாப்பும் போச்சு,' என்று அவர்கள் கூக்குரல் எழுப்புவர். இதுவகையில் ஏற்படாத இழப்புகளை ஏற்பட்டதாகக் காட்டவோ, பல மடங்கு பெருக்கிக் காட்டவோ, திறந்தவழி முறை பற்றி நூலக மேலாட்சியாளரிடம் பூச்சாண்டி காட்டவோ அவர்கள் தயங்குவதில்லை. ஆனால் இத்தகைய குறையிட்டுவாதிகளின் வாதமாயைகளைத் தாண்டி மேலையுலகின் நூலக ஆட்சியாளர்கள் நெடுந்தொலை முன்னேறி விட்டனர். வாசகர்கள் பயன்படுத்துவதனால் ஒருசில ஏடுகளை இழபபதென்பது நேர்முறையான செலவேயன்றி வேறல்ல என்று அவர்கள் விளக்கம் தருகின்றனர். புத்தகங்களைப் பரவலாகப பயன்படுத்தும் வகையில் ஒரு சில நூல்களின் இழப்பு இன்றியமையாததானால், அங்ஙனம் இழந்தேனும் அப்பணி செய்வதுதான் ஆதாயம் தருவது என்று அவர்கள் காண்கின்றனர்.

சேமித்துவைத்த புத்தகத்துக்குப் பயன் எதுவும் கிடையாது. இதனாலேயே அமெரிக்கர்கள் பயன்படுத்தும்படி வெளியே அனுப்பப்படும் புத்தகங்களில் 1000-க்கு இரண்டு விழுக்காடு வட்டச்செலவாகத் தள்ளிக் கழித்துவிட ஒருப்பட்டு விடுகின்றனர். அமெரிக்கர்களை விடச் சிறிது சிக்கனப் பாங்குடைய பிரிட்டிஷாரோ இவ்வாறு பயன்படுத்தப்படும் புத்தகங்களில் 1000-க்கு ஒன்று விழுக்காடாகத்தான் தள்ளிக் கழித்து விட இணக்கமளிக்கின்றனர். நேர்மையுணர்வுடைய நூலக ஆட்சியாளர் யாவரும் இந்தியாவிலும் இதுபோலத் தள்ளிக் கழித்துத் திறந்தவழி முறையைப் பேணி வளர்க்கவே முன் வருகின்றனர்.

காந்தி யூழிக்கு முற்பட்ட அரங்கமுறை ஆட்சிமரபுதழுவிய வல்லாள பரம்பரையினர் (கன்யூட் அரசரின் பண்பு மரபினர்) யாவருமே இவ்வகையில் மாறியே தீருவர் - திறந்த வழி யரங்க முறை என்னும் வெள்ளம் அலைபாய்ந்து இந்தியாவின் நூலகப் பணிக்கு நீருணவாவதை அவர்கள்கூட நெடிது தடுத்து நிறுத்த முடியாது.

### நூலக அகல் விரிவுப் பணி

இன்று நூலக மேலாட்சியாளருக்கும் நூலகப்பணித்துணைவர் குழுவுக்கும் தலைவலிதரும் புத்தகம ஆடாது அசையாது தூசுபடாமல் அடுக்குமேடையிலிருக்கும் புத்தகமே—அதில் ஒரு சிறிதும் தங்காமல் எப்போதும் வாசிக்கும் வாசகர் கைகளிலிருந்து வாசகர் கைகளுக்குமாறிச் சென்று பொலிவிழந்து, அவ்வாழ்க்கைப் பணியால் நேரான பயனீட்டுடன் அழுக்கேறிக்

கிழிந்த புத்தகமன்று! மனிதர்களில் சிறந்தவர்களுக்கு மட்டு மன்றிப் புத்தகங்களுக்கும் தன் மறுப்பின் வீரத்தழும்புகளைப் பூணாரமாகக் கொள்ளும் தகுதி உண்டு. மொத்தத்தில் எப்படியும் எந்தப் புத்தகமும் கல்லாலோ, எஃகாலோ செய்யப்பட்டதாயிருந்தாலன்றி ஒரு நூறுவாசகர்களுக்குமேல் கையாள்வதைத் தாங்கமுடியாது. இதை உணர்ந்து, இதில் உறுதிகொண்ட நூலகத்தார் சூழலிலுள்ள ஒவ்வொருவரையும் தம் நூலக எல்லைக்குள் கொண்டு வருவதில் எத்தகைய கடுமையையும் வருத்தத்தையும் பொருட்படுத்த மாட்டார்கள்.

நூலக அகல் விரிவுப்பணி என்பது அம்முயற்சியில் மேற்கொள்ளப்படும் வகை துறைகளுக்கான பெயரே. அதில் பேருரைகள, இசை நிகழ்ச்சிகள், பொருட் காட்சிகள், பைகளில் அல்லது வண்டிகளில் அல்லது இதற்கெனத் திட்டம் செய்யப்படும் நூலக உலாக்கலங்களில் ஏடுகளை எடுத்துக்கொண்டு வாசகர்கள் வீடுதோறும் உலாவரல் ஆகியவற்றுக்கான ஏற்பாடுகள் அடங்கும். பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் ஸ்காண்டினேவியாவிலும் வாரந்தவறுமல் நூலகச்சார்பான பொதுமேடைப் பேச்சுக்கள் நடைபெறுகின்றன. அதன் முடிவில் நூலகத்தின் ஏடுகள் காட்சிக்குத் திறந்துவைக்கப்பட்டு, வாசகர்கள், அடுக்கு வரிசைகளிடையே அவற்றைப் பார்வையிடும்படி அழைத்துச் செல்லப்படுகின்றனர்.

மாஞ்செஸ்டர் பொது நூலகத்தில் நூலகத்தலைமைக் கட்டடத்தில் நடுமையத்திலேயே நாள்தோறும காட்சி காட்டுவதற்குரிய ஒரு நாடகமேடை அமைந்துள்ளது. அகமதாபாது பொது நூலகம் ஏறத்தாழ ஆயிரம் புத்தகங்களடங்கிய தொகுதிகளை வகைவகையாக அடுக்கிக்கொண்டு தெருத் தெருவாகச் சென்று புத்தகம் வழங்கும் சுற்றுகலங்களைக் கொண்டுள்ளது. பிரிட்டனில் லங்காஷயர், லணர்க்ஷயர் ஆகிய மாவட்டங்களில் மாவட்ட நூலகங்களின் சுற்று கலங்களிலே நான் உடனிருந்து சுற்றிப்பார்த்திருக்கிறேன். நூலகச் சுற்றுகலத்தின் கூவிளி கேட்டவுடனே கிழிந்த கால்சட்டைகள், சகதியேறிய கால்புதையடிகளுடன் நாட்டுப்புற மக்கள் தாம் வேலை செய்யும் வேலைக் களங்களிலிருந்தும் நிலககளஙகளிலிருந்தும் ஓடிவரும் காட்சி காண்டற்கு காட்சியேயாகும்.

அமெரிக்க இணையரசில் டென்னசித் தாக்கில் நான் சிற்றூர்க்குப்பங்களிலெல்லாம் நூலகச்சுற்றுகலத்திலேயே சென்று பார்த்திருக்கிறேன். பலசரக்கு மளிகைகளிலோ இசை ஒப்பனையரங்குகளிலோ, காவலர் சாவடிகளிலோ திருக்கோயிலிலோ, தொடக்கப் பள்ளியிலோ அஞ்சலகங்களிலோ, சிறுசிறு தொகு

திகளாகப் புத்தகங்கள் பரிமாறப் பட்டு வருகின்றன. டென்மார்க்கில் நாட்டகத்தேயுள்ள சிற்றூர்களில் ஒன்றில் ஊர் மக்கள் ஒரு தொடக்கப் பள்ளியில் குழுமி வகைப்படுத்திவைக்கப்பட்ட ஒரு புத்தகக் குவையிலிருந்து தத்தமக்கு வேண்டிய புத்தகங்களைத் தேர்ந்தெடுப்பதைக் கண்டிருக்கிறேன். இங்கே தலைமையாசிரியரே தற்காலிக நூலகத்தாராகச் செயலாற்றினர். புத்தகக் குவை மாதந்தோறும் ஓர் உலா நூலகத்தால் ஆங்காங்கே கொண்டு விளம்பப் படுவது.

நல்ல பயிற்சிபெற்ற நூலகத்துணைவர் உதவிகொண்டுவாய்ப்பு வளமிக்க ஓர் அரசியலரங்கமே இந்த உலா நூலகத்தை நடத்துகிறது. நூலகத்துணைவர் யாவருக்குமே பயிற்சித் தகுதியோடு நூலகபபணியின் உயர்மதிப்பிலும் இன்றியமையாப்பயனிலும் ஆழ்ந்த ஊழியப் பற்றுறுதி இருந்தது கண்டேன் குடியாட்சி சரிவர இடர்ப்படாது நிலவவேண்டுமானல், ஆக்க நல சமுதாயத்தைக் கட்டமைத்தாக்கும் ஆட்சி முறையாக அஃது அமைய வேண்டுமானல், ஒருவர் தவருமல் எல்லாக் குடியுரிமையாளர்க்கும் பரவலாகச் சென்று சேரும் முறையிலும் முந்துற்று விரைவேகமாகச் செல்லும் முறையிலும் புத்தகங்களின் சேவை சென்றெட்ட வேண்டுவதன் விலக்க முடியாக் கட்டாயத் தன்மையை அவர்கள் நன்கு உணர்ந்திருந்தார்கள்.

**நூற்பணி ஓர் அரசியல் செயல்முறைத் திட்டம் ஆதல் வேண்டும்**

நூலகப்பணியின் புதுக்கோட்பாட்டின் விளைவான மற்றொரு புரட்சிகரமான மாறுதல் உண்டு. நாட்டுக் குடியுரிமையாளர் ஒவ்வொருவருக்கும் நூற்பணி இலவசமாகக் கொண்டு சேர்க்கப் பட வேண்டுமென்பதே அது உலகின் பல நாடுகளில் இது சட்ட மூலமாகவே நடைமுறைப்படுத்தப்படுகிறது. இதை முதலில் செய்த பெருமை இங்கிலாந்துக்குரியது. இங்கே நாட்டின் முதல் நூலகச் சட்டம் பாராளுமன்றத்தில் 1850-ல் நிறைவேற்றப் பட்டது. மௌண்ட்பாட்டன் பெருமகனர் தலைமையில் லண்டன் மாநகரில் கொண்டாடப்பட்ட இந்தச் சட்டத்தின் நூற்றூண்டு நிறைவுவிழாவின்போது நான் இத்தேசத்தின் பேராளாக அதில் கலந்துகொள்ளும் பேறு பெற்றிருந்தேன் அததுடன் 1948-லேயே சென்னை நூலகச் சட்டத்தைச் சட்டப் புத்தகத்தி லேறறியதன் மூலம் இந்தியாவிலும் நூலக வரலாற்றில் சென்னை தன் பெயர் பொறித்துள்ளது என்று பெருமையுடன் கூறிக்கொள்ளும் வாய்பபும் எனக்குக் கிட்டிற்று. இதைச் செய்து முடித்தற்கான எல்லாப்பெருமையும் திரு. அவிநாசிலிங்கத்துக்கே உரியது.

(தொடரும்)

# முல்லைப்பண் ஆராய்ச்சி

[இராவ்சாகேப் கு. கோதண்டபாணிபிள்ளை]

(செல்வி, சிலம்பு-௩௨, பரல்-அ, ௩அஎ-ஆம் தொடர்ச்சி)

இவ்வாராய்ச்சி, முன்பு, செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு ௩௨, பரல், எ, அ-களில் வெளியானது. இவ்வாராய்ச்சியைப் படித்த டாக்டர் மு. வரதராசனர் அவர்கள், இவ்வாராய்ச்சியின் முடிவைக் குறித்துத் தம் கருத்தைத் தெரிவித்ததைக் கீழே காண்க:

அன்புடையீர்,

தங்கள் 'முல்லைப்பண் ஆராய்ச்சி'யை ஆர்வமுடன் படித்தேன்.

'அவள், நட்பின் பின்றையைப் பாட்டெடுப்பாள்' என்பதற்கு 'அவள் நட்பின்பின் ஐயை (ஐக்குப்) பாட்டெடுப்பாள்' என்று பொருள்காண முயல்கிறீர்கள் 'நட்பின்' என்பது ஓரடியிலும் அதனோடு சாதலை உடைய 'பின்' என்னும் உருபு அடுத்த அடியிலும் வருதல் புலமை சான்ற இளங்கோவடிகள் போன்றாரின் பாவில் காணத்தக்கது அன்று.

மற்றொரு பொருளாகிய 'நட்பின் பின்பாட்டெடுப்பாள்' என்பதிலும் அக்குறை உளது, அன்றியும், அப்பொருளில் 'ஐயை' என்னும்சொல் பொருட் சிறப்பு இழக்கின்றது.

'பின்னை' என்ற இயற்பெயர் 'பின்றை' எனத் திரிந்ததாக அடியார்க்கு நல்லார் கூறுவதும் வழக்கிற்கு இயைந்ததாக இல்லை.

ஆதலின், 'பின்றை' என்பதைச் சொல்லாகக்கொண்டு, 'பின்னது' என்று பொருள் உணர்தல் தக்கது. முந்து முந்தை என்று ஆதல்போல், பின்று (பின்னது) பின்றை என்று ஐயீற்றுடைக் குற்றுகரச் சொல்லாகக் கொள்ளல் பொருந்தும். நட்பின் பின்னதைப பாட்டெடுபபாள், நட்பின் பின்னதாகிய கைக்கிளையை—கைக்கிளையில்—பாட்டெடுப்பாள் என்று பொருள் கோடல், தங்கள் ஆராய்ச்சிக்கு உறுதுணையாகும

மற்றும் இத்துறையில் தாங்கள் பெற்றுள்ள நுண்மாண் நுழைபுலமும், இளங்கோவடிகளின் இசைக்கலைக் குறிப்புக்களைத் தெளிவாக்க முயலும் ஆர்வமும் மிகப் போற்றத்தக்கன.

தங்கள் அன்புள்ள,

மு. வரதராசன்

'குரல மந்தமாக' என்னும் பாட்டில், இப் பேராசிரியர் கருத்தின்படியும் குறிப்பிடப்படும் சுரங்கள் ஐந்தே என்பதும், அவை குரல், துத்தம், கைக்கிளை, இளி, விளரியாகிய ஐந்துமே என்பதும் பெறப்படுகின்றன.

டாக்டர் மு. வ. அவர்கள் கூறியவாறு, 'பின்றை' என்பதற்கு ஏற்படும் பொருள் மாற்றத்தோடு, 'குரற்கொடி' என்பதற்கும் மற்றொரு பொருள் பொருந்துவதையும் கருதுதல் தகும். முன்பு 'குரற்கொடி' என்பதற்குக் குரலதுகொடி, குரலின்கொடி என ஆறும் வேற்றுமைத் தொகையாகப் பொருள் கூறப்பட்டது அவ்வாறன்றி 'குரற்கொடி' என்பதற்கு இரண்டாம் வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்க தொகையாகக் குரலையுடைய கொடி—குரலாகிய மாயவனைக் கணவனாக உடைய கொடி—எனவும் பொருள் கொள்ளல் தகும் எனத் தோன்றுகின்றது. இப்பொருளும் பாட்டின் ஏனைய பொருள்களோடு முற்றும் பொருந்துகின்றது. 'கொடுங்கோற் கோவலர்'[1] 'பைங்காற் கொக்கு'[2] எனச் சங்க நூலினும் ஆளப்பட்டவை காண்க. மேலே கூறிய உரைகளுள் எவற்றை மேற்கொள்ளினும், சுரவேறுபாடுகள் இல என்பதையும் கருதுக.

இம்முடிவு இராமநாதன் முடிவை ஒட்டியே அமையினும், அடிகளார் முடிவுக்கு மாறுகொள முடியினும், இம்முடிவைக் காண வழிகாட்டியது அடிகளாரின் யாழ் நூலேயாகும். தமிழ் இசைக்கும் துறவிகளுக்கும் பெருந்தொடர்பு உண்டு போலும். தமிழ் இசை இறந்து படாது, தம் நூலுள் இடம் இடங்கள் தோறும் பெய்து, அன்று காத்தளித்தவர், இளங்கோவடிகள் என்னும் துறவியார்; இன்று அது மறுமலர்ச்சிபெற, மீண்டும் உயிர்பெற, பேருதவி செய்கின்றதும், ஒரு துறவி இயற்றிய யாழ் நூலே யாகும்.

தமிழிசைப் பூங்கா மிக அழகியது, மிகமிகத் தொன்மை வாய்ந்தது. இங்குப் பூத்த பூக்களோ பற்பல, பல்வேறு வடிவின, பலவகை நிறத்தன, பலநறு மணத்தன என்பர். பல நூறு ஆண்டுகளாகப் பாதுகாப்பு அற்றதாயிற்று, இப்பூங்கா. ஆதலின், அதனுள் முட்டாட் டாழைகள், (முள் - தாள் - தாழைகள், முட்டாள் தாழைகளும்கூட) எங்கும் முளைத்துப் பரவிப்படர்ந்து பாதைகளை எல்லாம தூர்த்தன. அதனுள் யாரும் நுழைய அஞ்சினர், வழியே காணாது தங்கியனர். அதனுள் நுழைய, நுழைந்து காண, செந்நெறி கண்டவர் விபுலாநந்த அடிகளே

1. நெடுநல் வாடை, ௩.
2. „ ௧௫.

யாவார். சங்க இலக்கியங்களைக் காணப் பழைய உரையாசிரியரின் உரைகள் எவ்வாறு துணைபுரிந்தனவோ, அவ்வாறே தமிழ் இசைகளைக் காணத் துணைபுரிந்தது யாழ்நூல். உரையாசிரியரின் உரைகளைக் கொண்டே புதுப்புதுக் கருத்துக்கள் எழுந்தன; அவ்வாறே யாழ் நூலின் துணையைக்கொண்டே புதுப்புதுக் கருத்துக்கள் எழுந்தன, எழுகின்றன. அடிகளார் காலத்தில் தோன்றாத நூல்கள், இசையையும் இசை ஆராய்ச்சியையும் பற்றியவை, பற்பல அவர் காலத்திற்குப்பின் தோன்றின. அவர் காலத்தில் கிடையா நூல்கள், பிற்காலத்தே கிடைத்தன. ஆதலின், அடிகளார் காட்டிய குறிப்புக்களுக்கு மேலும் செல்லும் வாய்ப்புக்கள் உண்டாயின. இத் துறையில், துணையின்றி இறங்கி, அடிகளார் இயற்றிய தொண்டு அரியது, பெரியது, என்றென்றும் போற்றுதற்குரியது.

## ஆய்ச்சியர் குரவை இசை ஒத்திசையாகுமா?

ஆய்ச்சியர் குரவையில், 'குரல் மந்தமாக' என்னும் பாட்டுக் குறிப்பிடுவது ஒத்திசை என்பார் உளர். ஒத்திசை என்பது ஆங்கிலத்தில் 'பாலிபொனி' (Polyphony) அல்லது 'ஆர்மனி' (Harmony) எனப் பெயர்பெறும். பலாகூடி இசைவுகொண்ட பல சுரங்களின் இசையை ஒரே காலத்தில் (ஒருவர் மாற்றி ஒருவராக அன்று) ஒலிப்பது அல்லது பாடுவது ஒத்திசை எனப்படும். இத்தகு கூட்டிசையில் இன்பங்கண்டது மேல்நாடு மேல்நாட்டிலும் இவ்வொத்திசை என்பது இடைக்காலத்தே புகுந்த இசைமுறை என்பர். ஒத்திசை பாடுதற்குப் பலர் வேண்டும். ஒருவரே பாடுவது ஒததிசை யாகாது. இப்பாட்டில் பாடியவர் ஒருவரா பலரா என்பதைக் காணல் வேண்டும். மீண்டும் அப் பாட்டை இங்கு இழுத்து வருதல் நேர்கின்றது.

'குரல் மந்தமாக இளி சமனாக
வரன்முறையே துத்தம் வலியா—உரனிலா
மந்தம் விளரி பிடிப்பாள் அவள் நட்பின்
பின்றையைப் பாட்டெடுப்பாள்.'

இப் பாட்டின் எழுவாயையும் பயனிலையையும் காண்க. பிடிப்பாள் என்னும் ஒருமை எழுவாய், பாட்டெடுப்பாள் என்னும் ஒருமை வினைகொண்டு முடிகின்றது. குரல் மந்தமாக, இளி சமனாக, துத்தம் வலிவாக, விளரி மந்தமாக (சுரம்) பிடிப்பாள் பாட்டெடுப்பாள் என்பதே அதன் வினைமுடிவு. இங்குப் பலர் கூடிப் பாடியதாகவோ, ஒத்திசை பாடியதாகவோ கொள்ளச் சிறிதும் இடமின்று. "ஆய்ச்சியர் குரவையுள் நான்கு நரம்புகள் ஒத்திசைத்துப் பிறக்கும் ஒத்திசை (Harmony) என்னும்

இசைக்கிரியை கூறப்பட்டது'' எனவும் கூறுவர். இங்கு ஒலித்தவை நரம்புகள் அல்ல ஏழு நரம்புகள் நிற்கும் முறையில் எழுவர் மங்கையர் படைத்துக்கோள் பெயரிட்டு நிறுத்தப்பட்டனர். அவர்களுள் ஒருத்தியே சுரங்களைப் பாட்டில் கூறியவாறு பிடித்துப் பாட்டெடுத்தாள் என்பதே, இப்பாட்டு உணர்த்துகின்றது. இது தெளிவாக முன்பே விளக்கப்பட்டது.

## சுரங்களின் புதுப் பெயர்

இதுகாறும் செய்த ஆராய்ச்சி, குரல், துத்தம், கைக்கிளை முதலிய பழைய பெயர்களைக் கொண்டே நடைபெற்றது இப் பெயர்கள், தொன்றுதொட்டுத் தமிழ் நாட்டில் வழக்கில் இருந்தவை, இப்போது வழக்கிறந்தன. இவற்றிற்குப் பதிலாகப் புதுப் பெயர்கள் புகுந்தன. இப் புதுப்பெயர்களும் தமிழ் இசையில் இன்றோ நேற்றோ புகுந்தவைகளுமல்ல; 700, 800 ஆண்டுகளுக்கு முன்பே, இப்பெயர்கள் தமிழிசையில் புகுந்தவை ஆதல் வேண்டும். அடியார்க்கு நல்லாரின் சிலப்பதிகார உரையில் இவை மிக விரவிக் காணப்படுகின்றன. அவர் காலத்திலிருந்தே குரல் முதலிய ஏழிசைகளுக்கும், முறையே, சட்ஜம் முதலிய ஏழு பெயர்களும் கையாளப்பட்டன. ச.ரி.க ம.ப,த.நி. என்னும் எழுத்துக்களாலும் அவை உணர்த்தப்பட்டன. இவற்றின் விரிவை இராமனுதன் இயற்றிய சிலப்பதிகாரத் திசை நுணுக்க விளக்கம் என்னும் நூலில் காண்க.

இம்முறையே தக்கது, இப்பெயர்களே பழைய பெயர்களுக்கு நேரான பெயர்கள் எனத் தமிழ் இசைஅறிஞர் கையாண்டு வருகின்றனர். இப் பெயர்களையே நாமும் மேற்கொள்வது எளிதாகும். ஆனல், அடிகளார் இவற்றில் தவறு கண்டார்; இவற்றைத் திருத்தியமைத்தார். அடிகள் திருத்தியமைத்த முறையைக் கீழே காண்க:

| புதுப் பெயர் | பழைய பெயர் என இப்போது கொள்வது | அடிகளார் காட்டும் பெயர் |
|---|---|---|
| சட்ஜம் | குரல் | |
| இருஷபம் | துத்தம் | |
| காந்தாரம் | | தாரம் |
| மத்திமம் | உழை | குரல் |
| பஞ்சமம் | | துத்தம் |
| தைவதம் | | கைக் |
| நிஷாதம் | தாரம். | உழை. |

குரல் என்பதை இக்காலத்தவர் சட்ஜம் என்று கொள்கின்றனர். அடிகளார் சட்ஜம் என்பது குரல் அன்று இளியே எனக்

காட்டுகின்றார். மற்ற சுரங்களும் மேலே தந்த வரிசையின்படி மாறுவதாக அடிகளார் கருதுகின்றனர் இத்திருத்தம் இப்போது வழக்கில் இருக்கும் முறையை அடியோடு மாற்று வதால் அடிகளார் கூறும் காரணங்களை ஆராய்தல்வேண்டும்.

மாறுதல்களுக்கு அடிகளார் முதலிற் காட்டும் காரணங்கள், யாழ்நூல், பாயிரவியல், பக்கம் 4-ல் காணப்படுகின்றன. திவாகரம் பிங்கலந்தை முதலிய நூல்கள், ஏழு சுரங்களின் ஒலிக்கு ஒப்பவை, எனச் சில விலங்குகளின் ஒலியையும் பறவைகளின் ஒலியையும் குறிப்பிடுகின்றன. இவற்றுள் ஒற்றுமை வேற்றுமைகளைக் கண்டு, பொருந்துவன பொருதிப் பொருந்தாதவற்றை விலக்கிச்செய்யும் மாற்றங்களே, அடிகள் இப்பகுதியில் செய்யும் ஆராய்ச்சி ஆகும்.

## உழை நிஷாதம் ஆகுமா?

உழை என்பது மத்திமம் என, அடியார்க்கு நல்லார் காலத்திலிருந்தே, தமிழ் இசையில் வழங்கி வருகின்றது அடிகளாரின் ஆராய்ச்சியின்படி, உழை எனபது மத்திமம் அன்று, நிஷாதம என முடிகின்றது. நிஷாதம என்னும இக்கடைசி சுரத்தையே முதலில் அடிகள ஆராய்கின்றார். அவர் காட்டும் காரணங்களைக் கீழே காண்க:

(1) திவாகரம், பிங்கலந்தை, சூடாமணி நிகண்டு என்னும் நூல்களின்படி, உழை நரம்பின் ஓசை யானையின் ஒலியாகும். "நாரதசிக்ஷை சங்கீத ரத்னகரம் என்னும் வடமொழி நூலாசிரியர்கள் யானைஒலி நிஷாதத்திற்குரிய தென்பர். அங்ஙனமாதலின் உழை நிஷாதம் என்பது பெறப்பட்டது."

(2) "சாமவேத கானம் நிஷாத சுரத்தைத் தொடங்குமிடமாகக் கொண்டது. அது பற்றி யானைக்குச் 'சாமகா' என ஒரு பெயர் உண்டென வடமொழி நூலார் கூறுவர்." இரண்டாவதாகக் காட்டும் காரணம், முதலிற் கண்ட முடிவை வலியுறுததுகின்றது என்பது அடிகளார் கருத்துப்போலும். இக்காரணத்தை முதலில் ஆராய்வோம்.

அடிகள் சாமகானம் நிஷாதத்தில் தொடங்குகிற தென்பதற்குச் சான்றுகள் காட்டினார் இலர். இக்கால ஆராய்சசி சாமவேத கானம் மத்திமத்தில் தொடங்குவதாகக் கொள்கின்றது. டாக்டர் பர்னல் என்னும் சிறந்த வடமொழி ஆராய்ச்சியாளர் பிட்ச் பைப் (Pitch pipe) என்னும் இசையளவு கருவி கொண்டு, சாமகானத்தை அளந்து கண்டார். இவ்வாராய்ச்சி

இவர் அச்சிட்ட அர்ஷேய ப்ராமணம் என்ற வேத நூலுடன் காணப்படுகின்றது. இவர் அளந்து கண்டபடி, சாமவேதகானம் மத்திமத்திலேயே தொடங்குகிறது; நிஷாதத்தில் அன்று. நாரத சிக்ஷை 2-ம் அத்தியாயம் சாமவேத கானத்தின் முதல் சுரம் மத்திமத்திலேயே தொடங்குகின்றது எனக் கூறுகிறது என்பர்.[1] மத்திமத்தில் தொடங்கும் சாமவேதகான சுரத்திற்குப் பெயர் பிரதம அல்லது முதல்சுரம் என்று அச்சாமகானமே கூறுகின்றது, எனத் தாம் எழுதிய 'இசைமுறை அமைப்பைக்கற்க முன்னுரை' 'Introducton to the study of musical scale' என்னும் நூலில் அல்லன் தானியலு (Alain Danielu) என்னும் இசை அறிஞர் கூறுகின்றார். அவர் இதைக் குறித்து ஆங்கிலத்தில் எழுதியதை[2] அடிக்குறிப்பிற் காண்க. இசைப் பேரறிஞர் கோசுவாமி என்பவரும், அவர் எழுதிய 'இந்திய இசையின் கதை (The story of indian music) என்னும் நூலில் இவற்றைக்குறித்து எடுத்துக் காட்டுவனவும் இவையே. சென்னைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் சாம்பமூர்த்தி அவர்கள் எழுதிய தென் இந்திய இசை (The south indian music) நான்காம் புத்தகத்தில் சாமவேத கான சுரங்கள் ம, க, ரி, ச, நி, த, ப எனக் காட்டி, மத்திமத்திலேயே சாமகானம தொடங்குவதையும் குறிக்கின்றார். ஆதலின் சாமகானம் மத்திமத்தில் தொடங்குகின்றது என்பதே உறுதியாகின்றது. நிஷாதத்தில் தொடஙகுகின்றது என அடிகளார் கூறியது தவறாக முடிகின்றது. யானை சாமகா எனப் பெயர் பெற்றது, அதன் ஒலி, சாமவேதம் தொடங்கும் மத்திம சுரத்தை ஒத்திருப்பதால் என்பதும் ஏற்படுகின்றது. ஆதலின் யானையின் ஒலி உழை என்றும், உழை மத்திமம் என்றும் கண்டது எஃகு நுண்செவி. 'செவி நேர்பு வைத்த செய்வுறு திவவின் நல்யாழ்' நவின்று நவின்று ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகப் பண்பட்ட இசை நுண்உணர்வு உண்மையைக் கண்டது என சமகா என்னும் யானையின் பெயர் நிலைநாட்டுகின்றது. அடிகளார் சான்றுக்கு எடுத்த சாமகா என்னும் சொல்லே, அவர் கருத்திற்கு மாறான பொருளை உணர்த்துவதாயிற்று.

(தொடரும்)

1. "யா சாமகானம் பிரதம சர்வனோர் மத்யமஸ்வர" நாரத சிக்ஷை.

2. "In the classification of sama veda the notes are simply numbered starting from madyama which is called prathama (first)"

3. "Narada was the first man who identified the vedic notes into that of the folk music stating that the seven notes of the saman called pra thama dvithiya etc. are Madyama Ganthara etc of the folk music"

—Page 20. The story of Indian Music.

# பாரதியின் கவிதை நடை

[திரு. வை. தட்சிணுமூர்த்தி, பி.ஏ., (ஆனர்சு)]

கவிதை எது என்ற வினவினை எழுப்பினல் பலரும் பலவித மான கருத்துக்களை வெளியிடுகின்றனர். தொல்காப்பியர் காலம் முதல் இன்றுவரை எழுந்த கவிதைகளை ஆராய்ந்து பார்த்தால் அவை யாவும் ஒரே படித்தாய் அமையவில்லை சங்ககாலக் கவிதை கட்கும் இருபதாம் நூற்றுண்டுக் கவிதைகட்கும் மிகுந்த வேறு பாடு இவ்விருவகைக் கவிதைகளில் எது உயர்ந்தது என்ற வினவினை எழுப்பினல் விடையளிப்பது எளிதல்ல. கபிலரையும், பரணரையும் கவிஞரல்லர் என முடியாது. பாரதியையும், பாரதி தாசனையும் பாடத்தெரியாதவர்கள் என்றும் கூறமுடியாது. இவ்விருவகைக் கவிதைகளையும் உற்று நோக்கும்போது கவிதைக் கலையின் வளர்ச்சி தெரியும். உரையின் உதவியின்றிப் படிக்க இயலாதவை சங்கப் பாக்கள். இசையும், பொருளும் இணையக் கொண்டவை சமய மறுமலர்ச்சிப் பாக்கள். சந்தம் குலுங்கித் தனிநடை கொண்டன மணிப்பிரவாளக் கவிதைகள். பெருமித் நடையொடு மிகுந்து வளர்ந்தன காப்பியக் கவிதைகள். சிற் றின்பம் சொல்லிச சிறப்பற்றெழுந்தன பிரபந்தப் பாக்கள். இத்தனை வகையையும் கடந்து எண்ணியதை எண்ணி யாங்கு உணர்ச்சியுடன் எடுத்தியம்பும் ஓசை நயமும் பொருட் செறிவும் பெற்றன பாரதியை முதலாகக்கொண்ட இருபதாம் நூற்றுண்டுக் கவிதைகள்.

பாடும் பொருள், கவிதை இனிமை, நடை ஓட்டம் இவை அனைத்திற்கும் இடமளித்து வளர்ந்திருக்கும் பாரதியின் கவிதை கள் சங்கப் பாக்கள் பெற்ற பெருமையைவிட மிகுதியும் பெற் றன. பயனும் மிகுதியே. கவிதைகள் மக்கட்குப் பயன்படும் வகையில் மக்களை நோக்கி எழுந்து குடியரசு செலுத்திய காலம் பாரதியின் காலமாகும். இனி, பாரதியின் கவிதை நடையைக் கவனிப்போம்.

"நரம்பெழுந் துலறிய நிரமபா மென்றோள்.......முதியோள் சிறுவன்........மண்டமர்க் குடைந்தன னுயின் உண்டவென் முலையறுத் திடுவேன்" எனவரும் புறப்பாட்டு வீரச்சுவை மிகுதியும் உடையது. ஆனல், அப்பாட்டின் பொருளில் நாம் காணும் வீரத்தை, நடை ஓட்டத்தில் காணமுடியாது. பாரதி, 'வீழில் முப்பது கோடியும் வீழ் வோம்' என வஞ்சினம் கூறும்போது கவிஞனேடு நாமும் கலந்து விடுகிறோம். சங்கப் பாக்கள் படித்தால் சுவையை ஊட்டுவன. பாரதியின் பாக்கள் மனிதனைத் தன்வயமாக்கும் தன்மையன.

'தாயின் மணிக்கொடி பாரீர்' என்னும் கொடிவணக்கப்பாட்டை நினைக்கும்போதே நம்முன்னர் ஓங்கி வளர்ந்ததோர் கம்பம் தோன்றி நிற்கும். 'வேளாளன் சிறை புகுந்தான்' என்று வ. உ. சி.யை எண்ணிப் பாரதி பாடுவதைப் படிக்கும்போது நம் உள்ளம் நைந்துருகும். கவிதைக் கலை வளர்ச்சியின் பயன் இதுதான். கவிஞன் கருத்தை வெளியிடுவது எளிது. கருத்தை ஏன் வெளியிடுகிறுனே அதன் பயன் விரைவில் ஏற்படுவது அரிது. பாட்டைப் படித்தவுடன் கருத்தைப் புரிந்துகொண்டு கவிதை சொல்லும் வழி நாமும் செல்லுமாறு செய்யும் தனிச்சிறப்பே பாரதி கண்ட கவிதைக் கலையின் மேம்பாடு.

"வலிமையற்ற தோளினாய் போ போ போ"

"ஒளிபடைத்த கண்ணினாய் வா வா வா"

என்றெல்லாம் பாடும்போது போவது வருவதுபோன்ற உணர்ச்சி எளிதில் ஏற்பட்டுவிடுகின்றது கருத்து, கருத்துக்கேற்ற சொல், கருத்தை வெளிக்காட்டும் ஓசை இவையனைத்திற்கும் மெருகு தரும் கவிதை இனிமை இவை யாவும் ஒருங்கே அமையப்பெற்ற தால் பாரதியின் கவிதைகள் சக்தி மிகுந்தனவாகின்றன. கருத்தைக் கருதி அதற்கேற்ற சொற்குத் தேடி அலைந்து, அதைக் கொண்டுவந்து, படிப்பவன் தடுமாறுமளவு திரிபு, யமகம் முதலியவற்றைத் திணித்து, புரியும் தன்மையைக் குறைத்துவிடும் தன்மைகொண்ட கவிதைகள் பாரதியின் நோக்க மிகத் தாழ்ந்தவைகளாகின்றன. பாரதியின் களிலே சொல் ஜாலம் கிடையாது. தேவையற்றவற்றை விளக்கிப்பேசும் வீண் வேலையையும் பாரதியார் மேற்கொண்டதில்லை. கவிதைகள் மக்கள் உள்ளத்தில் குடிகொள்ளும் தகுதிபெற வேண்டும். பாரதியின் கவிதைகள் படித்தவுடன் எளிதில் மனத்தில் பதிந்துவிடும். பாரதியின் கவிதைகள் உரை நடைபோன்றன என்றெண்ணுவது மிகவும் தவறு. சொல்லால் பொருட்கிடனுகச் செய்வதே கவிதை என்பார் நன்னூலார். பொருளாழம் பாரதியின் கவிதைகளில் உண்டு. சிலவாய சொற்களால் செறிந்த பொருளை வெளியிடப் பாரதியின் கவிதைகள் தவறியதில்லை.

"சுடுதலும் குளிரும் உயிர்க்கில்லை
சோர்வு வீழ்ச்சிகள் தொண்டருக்கில்லை"

எனும் அடிகட்குப் பக்கம் பக்கமாக விளக்கம் எழுதலாம்.

"உள்ளத்தில் உண்மைஒளி யுண்டாயின்
வாக்கினிலே ஒளியுண் டாகும்
வெள்ளத்தின் பெருக்கைப்போல் கலைப்பெருக்கும்
கவிப்பெருக்கும் மேவு மாயின்

பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெலாம்
விழிபெற்றுப் பதவி கொள்வார்
தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்"………

என்ற கவிதை வாழ்க்கை, கலை, தத்துவம் இவை அனைத்தையும் இணைத்துக் காட்டுகின்றது. தமிழர் இன்புற அவர்கள் தமிழைச் சுவைக்கவேண்டும் தமிழறிவு மேம்படின் அறிவுமிக, அறியாமை நீங்கும். மக்கள் நிலையில் உயர்வர். மக்கள் நிலை உயர, கலையும் கவிதையும் பெருகவேண்டும். அவை பெருக உள்ளத்தில் உண்மை ஒளிகொண்ட உயர்ந்தோர் வேண்டும். உளளம் உயர்ந்தால்தான் வாக்கிலும் இனிமை உண்டாகும்; எனவரும் கருத்துக்களை வரிசைப்படுத்திக் காட்டும் திறன் பாராட்டத்தக்கது. கவிதையைப் படித்தவுடன் எளிமையாக நமக்குப் புரிவதுபோல் தோன்றினும் பொருள் ஆழம் திருப்பித் திருப்பிப் படித்தறிய வேண்டியிருக்கிறது. குழந்தைக்கு மருந்தை இனிப்போடு கூட்டித் தருவதுபோன்று பாரதியின் கவிதைகள் கருத்தைத் தருகின்றன. பாரதிக்கு எண்ணத்தில் தெளிவும் உலகியல் உண்மையை அறியும் நோக்கும் ஏற்பட்டுவிட்டது. அவரின் கவிதைகள் தரம் குறையாதிருப்பதற்கு அதுவே காரணம். பாரதி சொல்லுக்குத் தேடி அலைவதில்லை. கருத்தை வெளியிட வடமொழி, தென்மொழி என அவர் தேடிப் பார்த்ததில்லை. கருத்துக்கே முதன்மை, அதனூடே கவிதை அமைவது இயல்பு 'விடுதலை விடுதலை' என்று பாடும் அவரே 'வீரசுதந்திரம்' என்றும் வடமொழிச்சொல் கொண்டு பாடுகிறார். 'அறம் வளர்ந்திடுக' என வாழ்த்தும் அவரே 'தர்மமே வெல்லும்' எனப் பாடுகிறார். சொல்லைவிட்டுப் பொருளுக்கு முதன்மை கொடுத்ததால் அவர் கவிதைகள் விருப்பு வெறுப்பற்ற சாகாவரம் பெற்றன. பாரதி தாம் பிறந்த பார்ப்பன இனத்தையே பலமுறை குறைத்து எழுதுகிறார். பாரதி வெறி கொண்டு எதையும் செய்யாது தமிழுக்குச் சிறப்பிடம் தரும் போது பிறமொழியாளரைத் தூற்றுவதில்லை கம்பனையும், காளிதாசனையும் ஒன்றாகக் கருதுபவர் பாரதி. வள்ளுவர் கூறும் உறுதிப்பொருளும், பகவத்கீதை விளம்பும் பக்குவமும் அவருக்கு ஒன்றே.

"காலமாம் வனத்திலண்டக் கோலமா மரத்தின்மீது
காளிசக்தி யென்ற பெயர்கொண்டு—ரீங்
கார மிட் டுலவுமொரு வண்டு—தழல்
காலும்விழி நீலவன்ன மூலஅத்து வாக்களெனும்
கால்களா றுடையதெனக் கண்டு—மறை
காணுமுனி வோருரைத்தார் பண்டு………"

எனப் பாரதியார் பாடும் பாட்டின் பொருள் அவ்வளவு எளிதில் புரிந்துகொள்ள முடியாது. வேத சாத்திரங்களைப் பயின்ற அறிவின் பிழிவே இப்பாடல். பாரதி வேதாந்த சாத்திரங்களோடு ஐக்கியப்பட்டுவிட்டவரல்லர் உலகியலையும் நன்குணர்ந்த காரணத்தால்தான்,

> " ஆயுதம் செய்வோம்—நல்ல
> காகிதம் செய்வோம் "...... ..

எனப் பாடுகின்றார்.

பாரதியார் குழந்தைப் பாட்டில் கூடச் சாதாரணப் பொருள்களைப் பாட விரும்பவில்லை.

> " சாதிகள் இல்லையடி பாப்பா"

என்று பாடத் தொடங்குகிறார்.

> "உயிர்களிடத்தில்அன்பு வேணும்—தெய்வம்
>
> வயிர முடையநெஞ்சு வேணும்—இது
> வாழும் முறைமையடி பாப்பா.".

என்ற பாட்டில் வருகின்ற 'வேணும்' என்ற சொல்தான் எளியதேயன்றிப் பொருள் எளிதில்லை.

பாரதி உவமேய உவமானங்களைப் பொருத்திக் காட்டுவதிலும் பிற கவிஞர்கட்குத் தாழ்ந்தவரில்லை.

> " வெள்ளை நிறத்தொரு பூனை—எங்கள
> வீட்டில் வளருது கண்டீர்
> பிள்ளைகள் பெற்றதப் பூனை—அவை
> பேருக்கொரு நிறமாகும்"
>
> ... ... ... ... ...
>
> " வண்ணங்கள் வேற்றுமைப்பட்டால்—அதில்
> மானுடர் வேற்றுமை யில்லை
> எண்ணங்கள் செய்கைகள எல்லாம்
> யாவர்க்கும் ஒன்றெனல் கண்டீர்!"

என வேற்றுமையின்றி மக்கள் வாழப் பூனைக்குடும்பத்தை ஒப்பு நோக்கிக் காட்டுகிறா.

பாஞ்சாலி சபதத்தில்,

> " வேள்விப் பொருளினை யே—புலைநாயின் முன்
> மென்றிட வைப்பவர் போல்
> நீள் விட்டப் பொன்மாளி கை—கட்டிப்பேயினை
> சேர்ந்து குடியேற்றல் போல்

ஆள்விற்றுப் பொன்வாங்கி யே—செய்தபூணேயோர்
ஆந்தைக்குப் பூட்டுதல் போல்
கேள்விக் கொருவரில்லே—உயிர்த்தேவியைக்
கீழ்மக்கட் காளாக்கி ஞன் .. .....”

என்று தருமன் திரௌபதியை இழந்த நிலேயைப் பாடுகின்ருர். உவமைகள் மூன்றடுக்கி வருகின்றன. தருமனின் பொறுப்பற்ற தன்மை, துரியோதனின் இழிவு, திரௌபதியின் உயர்வு யாவும் உவமையிலே விளக்கப்பட்டன. பாரதியின் உவமைத் திறனுக்கு இது ஒன்றே போதும்.

பாரதியின் வருணனே ஆற்றலே விளக்கப் பாஞ்சாலி சபதத்தில் வரும் மாலே வருணனேயை மாதிரிக்குக் காட்டலாம். குயிற் பாட்டில் வரும் வருணனேயும் அதனே மிஞ்சுகிறது.

“பேடே திரவியமே பேரின்பப் பாட்டுடையாய்
ஏழுலகும் இன்பத்தீ ஏற்றும் திறமுடையாய்”

என்று குயிலே நோக்கிப் பாடுவதாகப் பாடுவதெல்லாம் எண்ணி எண்ணி இன்புறத்தக்கன.

அகத்துறை வகைகளாக வகுக்கப்படும் அத்தனே இன்பங்களேயும் கண்ணன் பாட்டில் காணலாம். கண்ணனேத் தோழன், தாய், தந்தை, சேவகன், அரசன், சீடன், குரு, குழந்தை, விளேயாட்டுப் பிள்ளே, காதலன், ஆண்டான், அடிமை, குலதெய்வம் என்று பாடும் கற்பனேப் பாடல்களில் காதற்சுவை சொட்டுவதைச் சுவைக்காத மனிதர் உளரோ ?

கம்பன், கவிதைக்கிலக்கணம் கூறும்போது, “சவியுறத் தெளிந்து தண்ணென் ஒழுக்கமும்” உடையதே கவிதை என்கிருர். பாரதியின் கவிதைகளில் தெளிவு, செவ்வெனச் செல்லும் ஒழுகிய நடை இவை இரண்டும் உண்டு.

“நாட்டு மக்கள் பிணியும் வறுமையும்
நையப் பாடென் ருெருதெய்வங் கூறுமே
கூட்டி மானுடச் சாதியை ஒன்றெனக்
கொண்டு வையம் முழுதும் பயனுறப்
பாட்டி லேயறங் காட்டெனு மோர்தெய்வம்
பண்ணில இன்பமும் கற்பனே விந்தையும்
ஊட்டி எங்கும் உவகை பெருகிட
ஓங்கும் இன்கவி ஓதெனும் வேருென்றே”

எனவரும் கவிதை மிகத்தெளிவுடையது. கருத்துத் தடையோ சிக்கலோ இன்றி ஆற்ருெழுக்காகக் கவிதை செல்கிறது. ஓசையோ, கருத்தோ தடைப்படாது செல்வதே சிறந்த

கம்பரின் கவிதைகளில் ஆழம் போன்ற பண்புகளோடு விரிவையும் காணலாம். நினைத்ததற்கெல்லாம் படலம் வரையும் ஆற்றல் கம்பருக்கிருந்தது. பாரதி இவ்வாற்றலும் உடையவர். பாஞ்சாலி சபதத்தைப் பெருங்காவியமாக இயற்ற எண்ணி முதலில் ஹஸ்தினபுர வருணனை, துரியோதனன் வருணனை போன்றவற்றை விரிவாகப் பாடிச்செல்கிறார். பின்னர் யாது காரணம் பற்றியோ போக்குச் சுருங்கிவிடுகின்றது.

சந்தத்திற்குப் பெருமை பெற்றது திருப்புகழ். அது போன்று சந்தமுடைய பாக்களையும் பாரதி இயற்றியிருக்கிறார்.

"வெடிபடு மண்டத் திடுபல தாளம் போட—வெறும்
வெளியி லிரத்தக் களியொடு பூதம் பாட—பாட்டின்
அடிபடு பொருளுன் அடிபடு மொலியிற் கூடக்—களித்
தாடுங் காளீ சாமுண் டீ!கங் காளீ!
அன்னை அன்னை ஆடுங் கூத்தை நாடச் செய்தாய் என்னை"

எனத்தொடங்கும் பாரதியின் ஊழிக்கூத்து கணபதிராயன் பாட்டும் நல்ல சந்தமுடையன.

பாரதி வெண்பா, கலித்துறை, விருத்தம், அகவல் முதலிய பாக்களாகப் பல இயற்றியுள்ளார். இவையன்றி கண்ணிகள் சிந்துகள் போன்றவற்றையும் இயற்றியுள்ளார். இசை, தாளம் போன்றன வரையறுக்கப்பட்டுப் பாடப்பட்ட பாக்கள் ஏராளம், ஒற்றை வரிகளில் ஆத்திசூடியும் செய்துள்ளார். இசையோடு கூடிய அவரின் இனிய கவிதைகளை இந்தியநாடு மறக்கமுடியாது. பாரதியின் கவிதைகளில் பிறபுலவரிடம் காணமுடியாத பெருமித நடை அமைந்திருக்கிறது. எளிமை, ஆழம், விரிவு போன்ற அனைத்துப் பண்புகளையும் ஒவ்வொரு கவிதையிலும் காணலாம். கவிதைக் கலையின் உயர்வே பாரதியிடம் காணலாம் எனில் மிகையாகாது. பாரதியார் பாப்பாப் பாட்டு முதல் படித்தோர் மட்டும் புரிந்துகொள்ளும் பக்திக் கவிதைகள் வரை தத்துவம், வாழ்க்கைபோன்ற பல துறைகளிலும் கவிதைகள் யாத்துள்ளார். கோமாளிப் பாட்டு, வண்டிக்காரன் பாட்டுப் போன்ற எளிய மக்கள் பாடும் பாடல்களையும் அவர் பாடத் தவறவில்லை. தொகைநிலையாகக் கோமகனார் வாழ்த்து முதல் கோமாளிப் பாட்டுவரை பாரதியின் பாடல்கள் அனைத்திலும் ஒரு தனித்தன்மை இயங்குவதைக் காணலாம். அதனைப் புரிந்து கொண்டு கவிதை எழுதுபவர்கள் பாரதியின் கவிதா மண்டலத்தைச் சேர்ந்தாராகின்றனர். பாரதியின் கவிதைகளில் இல்லாத பொருளில்லை என்பதே உண்மை.

# தேவந்தி

[வித்துவான், ஆ. சிவலிங்கனுர், மயிலம்]

தேவந்தி ஒரு பார்பபனி; கண்ணகியாரின் உயிர்த்தோழி. கண்ணகியார் வரலாற்றில் அவர் தெய்வமாயின பின்னர் இன்றி யமையாத நிகழ்ச்சிகளுக்குப் பயன்பட்டாள். முடிவாகக் கண்ணகியார்க்கே வழிபாடியற்றுபவளாக (பூசாரினியாக) அமர்த்தப்பட்டாள். கண்ணகியாரின் கற்பொழுக்கத்தை— தெய்வம் தொழாது கணவனைத் தொழுதெழும் மாண்பினை அறிய உறைகல் ஆயினுள் இவள்.

கணவனுகிய கோவலன் மாதவியிடம் பிரிந்த காரணத்தால் மனதில் உற்ற குறை கண்ணகியார்க்குண்டு என்பதை யறிந்த தேவந்தி வருந்தியவளாய்க் கண்ணகியாரிடம் சென்று "கணவ னெடு கூட்டம் பெறுக" என்றுள. அவ்வாறு எடுத்த எடுப்பி லேயே வாழ்த்தக் காரணம் உண்டு.

ஒருநாள் மாலதி என்ற பார்ப்பனி தன் மாற்றுள் குழந் தைக்குப் பாலூட்டினுள். குழந்தை பால் விக்கியிறந்தது. மாற் றுளும் அவள் சார்பாகக் கணவனும் தன்னை ஏலாதன கூறுவர் என்று அஞ்சிக் குழந்தையைத் தூக்கிக்கொண்டு பலதெய்வங் களையும் வேண்டி முடிவில், பாசண்டச் சாத்தன் என்ற தெய் வத்தின் கோயிலில், 'என்மகனை உயிர்ப்பித்துக்கொடு' என வரங்கிடந்தாள். அப்போது ஓர் இடாகினிப் பேய்வந்து "செய் தவம் இல்லோர்க்குத் தேவர் வரம்கொடார்" என்று கூறிக் கையிலிருந்த பிணத்தைப் பிடுங்கித் தான் உண்டு சென்றது அதுபொழுது மிக்க துயருற்றழுத மாலதியிடம் பாசண்டச் சாத்தன் அவளுடைய ஆண்குழந்தை வடிவாகி வந்து ஒரு புதர்ப் பக்கம் கிடந்து, 'அன்னையே உன் குழந்தையைக் காண்க' என்றுன். அதுகண்ட மாலதி மகிழ்ந்து குழந்தையுடன் வீடு வந்தாள். குழந்தையானவன் வளர்ந்தான். பெற்றோர் இறந் தனர். தாயத்தாருடன் வழக்குரைத்து வென்று பெற்றோர்க்குக் கடன் செலுத்தினன். தேவந்தியென்ற பார்ப்பனப் பெண்ணை மணந்தான். எட்டு ஆண்டுகள் உடன் இருந்தான். பின் தன் வடிவு காட்டி 'நீ என் கோயிலுக்கு வருக; நான் பல தீர்த்தம் படிந்து வருவேன்' என்றுகூறி மறைந்தான். அன்றுமுதல் அவள் அவன் கோயிலில் சென்று வணங்கி வந்தாள். அதனுல் கணவனையின்றி யிருப்போரின் வருத்தம் தனக்கு நன்கு தெரியு மாதலின் கண்ணகியாரிடம் சென்றபோதே, 'பெறுக கணவ னெடு' என்றுள்.

அதற்குக் கண்ணகியார் உள்ளன்போடு தேவந்தி கூறினளாதலின் அவள் வார்த்தையை மதித்தவராக "நின்சொற்படிப் பெறுகேன்" என்றுகூறிப் பின்னர் 'பெறுதற்கு நெஞ்சம் ஐயப்படும்; நான் கண்ட கனவு அதற்குக்காரணம்' என்று தான் கண்ட கனவைக் கூறினர். "என் கணவன் என் கைப்பிடித்துச் செல்ல இருவரும் ஒரு பெரிய நகரத்தையடைந்தேம். அந் நகரத்தார் எங்கள்மேல் ஒரு பெரும்பழியைச் சுமத்தினர். அதனல் கணவற்கு ஒரு தீங்குற்றது; அதுகேட்டு நகர அரசன் முன்சென்று வழக்கறியாத யான் வழக்குரைத்தேன். அதனல் அரசனெடு அந் நகருக்குத் தீங்கு நேர்ந்தது. அதை நினக்குக் கூறேன். பின்னர் எங்கள் இருவர்க்கும் ஒரு நற்பேறு கிட்டியது; அதனைக் கேட்பாயாயின் நினக்கு நகைதரும்" என்று தம் கனவைக் கூறினர்.

கேட்ட தேவந்தி அறிவுடையவளாதலின் கனவை விரிவாகக் கேட்க விரும்பவில்லை. அன்றியும் பெரியோர் தீய இழிந்த கனவு கண்டால் வெளியில் யாரிடமும் கூறார் என்ற உண்மையை உணர்ந்தவள்; ஆதலின், கண்ணகியார், 'நினக்குக் கூறேன்' என்றதற்கு மதிப்புக்கொடுத்து அதுபற்றி வினவாதிருந்தாள். கண்ணகியாரிடம் அவள் கொண்டிருந்த மதிப்பும் இதனல் விளங்கும். கண்ணகியாரின் கனவைப்பற்றியே அவள் கருதவில்லை. அவர்கூறிய "பெறுகேன்; நெஞ்சம் ஐயப்படும்" என்ற கூற்றிலேயே நின்றாள். அதனல் "கைத்தாயுமல்லை" (கணவனல் வெறுக்கப்பட்டாயுமல்லை) என்றாள். கண்ணகியாரின் கனவைக் கருதாதிருந்தமையைத் தேவந்தி பிறிதோரிடத்தில் கூறியுள்ளாள். கண்ணகியார்க்குக் கோயில் எடுத்துச் செங்குட்டுவன் வழிபட்ட காலத்தில் அங்குச் சென்ற தேவந்தி கண்ணகியாரை நோக்கியாற்றிய போது

"செய்தவ மில்லாதேன் தீக்கனக் கேட்டநாள்
எய்த வுணரா திருந்தேன்மற் றென்செய்தேன்"

என்றாள்.

அங்ஙனமாயின் பிரிவிற்குக் காரணம் யாதென்ற வினவினைத் தானே கொண்டு "கணவற்கு ஒருநோன்பு பொய்த்தாய் பழம்பிறப்பில்" என்றாள். கண்ணகியார் பழம்பிறப்பில் நோன்பு ஒன்று பொய்த்ததை எவ்வாறுணர்ந்தாள் தேவந்தி? இவளுக்குச் சாத்தன் அருள் இருந்தது. அவனருளின் வினைவால் உணர்ந்தோ உணராமலோ அவள் வாக்கில் அது வந்திருக்கலாம். அவள்பால் சாத்தன் ஆவேசித்தலும் உண்டு செங்குட்டுவற்குக் கடவுள் நல்லணி காட்டிய பின்னர்த் தேவந்திமேல் சாத்தன் ஆவேசித்து மாடல மறையவனைப் பார்த்து,

"பாசண் டன்யான் பார்ப்பனி தன்மேல்
மாடல மறையோய் வந்தேன்"

என்றாள். எனவே தேவந்தி பாசண்டனின் அருள் வாய்க்கப் பெற்றவளாதலின் கண்ணகியாரின் பழம்பிறப்பு நிகழ்ச்சியைக் கூறினாள் என்னலாம்.

அடுத்துக், "காவிரி கடலொடு கலக்கும் நெய்தற் கானலிடத்தில் சோமகுண்டம் சூரியகுண்டம் என்ற இரண்டு தடாகங்கள் உள்ளன. அவற்றில் மூழ்கிக் காமவேள் கோயில் சென்று காமவேளைத் தொழுதாராயின் அவர் இப் பிறவியில் தம் கணவரோடு பிரிவின்றி யின்புறுவர். மறுபிறவியிலும் போகபூமியில் அவ்வாறே யின்புறுவர். ஆதலின் நாமும் அக் குளங்களில் நீராடக்கடவேம்" என்றாள். அவள் கூறியதற்குக் கண்ணகியார் "பீடன்று" என்றார்.

'பீடன்று' என்பது கண்ணகியார் கூற்றாக இளங்கோவடிகள் கூறியது. இதற்கு அரும்பதவுரைகாரர் "குலத்திற் பிறந்தார்க்குப் பெருமையன்று" எனப் பொருள் உரைத்தார். அடியார்க்கு நல்லார், "துறை மூழ்கித் தெய்வம் தொழுதல் எங்கட்கு இயல்பன்று" எனப் பொருள் உரைத்தார். இருவர் உரையும் கண்ணகியார்க்கு உயர்வும் தேவந்திக்குத் தாழ்வும் குறித்தனவே. தெய்வம் தொழாஅர்கள் கொழுநற் றொழுதெழும் மாண்பு கண்ணகியார்க்கே உரியது. தேவந்திக்கு அஃதில்லை. அதற்கு அவள் கூறிய "துறைமூழ்குவேம்" என்றதே சான்று பகரும். அவள் வரலாற்றிலும் சான்று காணலாம். அவள் பாசண்ட சாத்தன் கோயிலில் பாடு கிடந்ததைப்பற்றி இளங்கோவடிகள்,

"தீர்த்தத் துறைபடிவேன் என்றவனைப் பேர்த்திங்ஙன்
மீட்டுத் தருவாய் எனவொன் றன் மேலிட்டுக்
கோட்டம் வழிபாடு கொண்டிருப்பாள்"

என்றார். 'தீர்த்தத் துறைபடிவேன் என்று சொல்லிச் சென்ற என் கணவனை மீட்டுத்தருவாய்' என்று வேண்டிக் கோட்டம் வழிபட்டாள் அவள். தன் கணவனைத் தரவேண்டித் தன் கணவனிடமே கேட்டாள். எனவே தன் கணவனையே தொழுதாள். என்றாலும் "ஒன்றன் மேலிட்டு" என்ற சொல்லைக் காணுதல் வேண்டும். உலகில் ஒன்றை மனதில் மேற்கொண்டு கோயில் தொழுதல் இயல்பு. அந்நிலையில் இவளும் கணவனை மீட்டுத் தருதலாகிய ஒன்றனைக்கொண்டு தொழுதாள். எனவே சாத்தன் தன்கோயிலுக்கு வருக என்றமையின் அங்கு வந்தாள் தேவந்தி; ஒருகால் சாத்தன் கணவன் அல்லனாயின்—பிறன் ஒருவன் கணவனாகித் தன்னைவிட்டு நீங்கினனாயின் அவனைப் பெற வேண்டி ஒருகோயிலில் அவ்வாறு வரங்கிடந்தே யிருப்பாள் என

நாம் அறியலாம். அதனாலன்றோ நாம் துறைமூழ்கிக் காமனை வணங்குவோம்; என்றாள்? அதனால் தேவந்தி தெய்வம் தொழா அள் கொழுநன் தொழுதெழும் மாண்பினள் அல்லள்; அல்ல ளாகவே குலத்தில் தோன்றிய பெருமையற்றவளானாள்.

தேவந்தி சோம குண்டம் சூரிய குண்டங்களில் யாம் ஒரு நாள் ஆடுதும் என்று கூறியது பொருந்துமா என்று காணுதல் வேண்டும். கண்ணகியார் சைனசமய ஒழுக்கத்தினர். இரவில் உண்ணாதவர். கோவலனைப்பற்றி இடைக்குல மடந்தை மாதரி என்பவள், "சாவக நோன்பிகள் அடிகள்" என்றாள். சாவக நோன்பு என்பதற்குத் "துறவாது விரதங்காத்தல்" என்றார் அடியார்க்கு நல்லார். "சாவக நோன்பிகளாதலின் இரவுண்ணார்" என்றார் அரும்பதவுரை காரர். எனவே கண்ணகியார் இரவுண் ணாத ஒழுக்கம் உடையவர் என்னலாம். அவ்வொழுக்கம் சமண சமய ஒழுக்கமாகும். சமண சமய வழியொழுகும் கண்ணகியார் அருகனையன்றிப் பிற தெய்வம் வணங்குவாரல்லர். இதனைத் தோழியாக இருந்த தேவந்தி அறிந்தேயிருப்பாள். அறிந்திருந் தும் அவள், 'காமவேள் கோட்டம் சார்ந்த குண்டங்களில் மூழ்கிக் காமவேளை வணங்குவோம்' என்று கூறியது அவர்பால் வைத்த அன்பினையே காட்டுகின்றது.

பூம்புகாரில் கோவலன் துயர்கேட்டு அவன் தந்தை மாசாத் துவான் துறப்பும், அவன் மனைவி யுயிர் இழப்பும் பிறவுமான துயர்கண்டு கண்ணகியாரின் செவிலித்தாயும் அடித்தோழியும் தேவந்தியுடன் புறப்பட்டுக் கண்ணகியாரைக் காணவேண்டி மதுரை வந்தனர். அங்கு நிகழ்ந்த தீச்செயல் கேட்டு மாதரி யிறந்தமையால் ஆதரவற்றிருந்த அவள் மகள் ஐயையுடன் சேர நாடு வந்தனர். கண்ணகியார்க்குக் கடவுள் மங்கலம் செய்த பின்னாளில் செங்குட்டுவனிடம் தம்மை யறிமுகப்படுத்திக் கொண்டு கண்ணகியார்ப் படிமம் அடைந்து வழிபட்டனர். அப்போது அம மூவரும் புலம்பிக் கோவலன் தந்தை மாசாத்து வானும் கண்ணகி தநதை மாநாய்கனும் துறந்தமையும் அவ் விருவர் மனைவியரும் உயிர் துறந்தமையும் மாதவிதுறவும் அவள் மணிமேகலை துறவும மதுரையில் மாதரி இறப்பும் பிறவும் கண்ணகியார்க்கு அறிவித்தனர். மணிமேகலையின் வரலாற்றைச் செங்குட்டுவன் கேட்பத் தேவந்தி விளக்கமாகக் கூறினாள் அங்கு.

"தேவந் திகையைச செவ்வி தின் நோக்கி
வாயெடுத் தரற்றிய மணிமே கலையார்
யாதவள் துறத்தற் கேதுவீங் குரை"

எனச் செங்குட்டுவன் கேட்டதாகவும் தேவந்தி முறையே மணி மேகலையின் துறவினைக் கூறி,

" பருவ மன்றியும் பைந்தொடி நங்கை
திருவிழை கோலம் நீங்கின ளாகலின்
அரற்றினென் "

என்று அரசற் குரைத்ததாகவும் இளங்கோவடிகள் பாடினர். வாழ்த்துக் காதையில் அடித்தோழியரற்று என்ற தலைப்பில்,

" காதலன் தன்வீவும் காதலிநீ பட்டதூஉம்
ஏதிலார் தாங்கூறும் எச்சுரையும் கேட்டேகிப்
போதியின்கீழ் மாதவர்முன் புண்ணியதா னம்புரிந்த
மாதவி தன்துறவும் கேட்டாயோ தோழி
மணிமே கலைதுறவும் கேட்டாயோ தோழி "

என்ற பாடல் காணப்பெறுகின்றது. இப் பாடல் தேவந்தியரற்றாக ஆகலாம். ஏனெனின் செங்குட்டுவன் தேவந்தியையே நோக்கி வாயெடுத்தரற்றிய மணிமேகலையார்; யாதவள் துறத்தற்கு ஏது? எனக் கேட்டமையும் அவள் அது கூறிவந்து முடிவில் " அரற்றினென் " என்றமையும் காணும்போது தேவந்தியே மேற்பாடலால் அரற்றினள் என்னலாம்.

செங்குட்டுவனிடம் தேவந்தி முதலிய மூவரும் தம்மையறிமுகப்படுத்திக் கொண்ட காலத்தில் அவரவர் கூற்றாக ஒவ்வொரு பாடல் இருப்பதற்கேற்ப அம் மூவர் அரற்றாக மூன்று பாடல்கள் அமைந்திருக்கலாம் என எண்ணிப் பிற்காலத்தார் " காதலன் தன்வீவும் " என்ற பாடலை அடித்தோழி யரற்றாகக் கொண்டனர்போலும் அரற்றான பாடல் நான்கு. அவை யாவுமே தேவந்தியின் அரற்றாகவும் இருக்கலாம். இவ்வரற்றின்பயன் கண்ணகியார் பேரொளியுடன் தோன்றி மறைந்தமையாம். தேவந்தியின்மேல் சாத்தன் ஆவேசித்தமையால் கோவலன் தாயும் கண்ணகியார் தாயும் அரட்டன் என்ற செட்டியின் இரட்டைப் பெண்களாய்ப் பிறந்தமையும், மாதரி என்ற இடைக்குல மடந்தை ஆடகமாடத் தரவணைக்கிடந்தோன் சேடக்குடும்பியின் சிறு மகளாயினமையும் வெளிப்பட்டன. சாத்தன் சொற்படி மாடலன், கையில் உள்ள-நீரை அம் முப்பெண்மணிகள் மீதும் தெளிக்க உண்மையை உணர்ந்தனர்.

செங்குட்டுவனால், ' கண்ணகியார்க்குப் பூவும் புகையும் மேவிய விரையும் செய்க ' என்று ஏவபபட்டாள் தேவந்தி. உண்மைத் தோழியாதலின் இவ் வாய்ப்பு அவட்குக் கிடைத்தது. இதனினும் பெருவாய்ப்பு ஒன்றுண்டு. கண்ணகியார் கோயிலினின்றும் மன்னர் தன்னடிபோற்றச் செங்குட்டுவன் சென்றபோது இளங்கோவடிகளும உடன் சென்றனர். அப்போது இளங்கோவடிகளின் துறவுபற்றிய செய்தியைக் கண்ணகியார் தேவந்திமேல் ஆவேசித்துக் கூறினர். இஃது பெருவாய்ப்பல்லவா?

# தமிழர் வீரம்

[வித்துவான் திரு. பெ. கோவிந்தனார்]

1. புலிகயல் விற்கொடி இமயப் பொருப்பில்
பொறித்தது யாவர் வீரம்
வலிமையும் திறமையும் முன்னெழும் எழுச்சியும்
வாய்ந்த தமிழர் வீரம்

2. குறுகா ரிருவர் தலைமேற் கல்லைக்
கொணர்ந்தது யாவர் வீரம்
எறிவாள் வேல்கொண் டேகிப் பகைவரை
எறிந்த தமிழர் வீரம்

3. கூடார் தலையில் கங்கைநீ ரேற்றிக்
கொணர்ந்தது யாவர் வீரம்
நாடாண் டேகி நாற்படை மறவரை
நடத்திய தமிழர் வீரம்

4. அணியொடு வந்த ஆரியப் படைகளை
அழித்தது யாவர் வீரம்
துணிவொடு சென்று பகைவரை வாளால்
துணித்த தமிழர் வீரம்

5. ஆற்றல் கொண்டு வாதா பியினை
அழித்தது யாவர் வீரம்
கூற்றென நடந்து பகைவ ருயிரைக்
குடித்த தமிழர் வீரம்

6. விரும்பாப் பகைவன் கலிங்க நாட்டை
வென்றது யாவர் வீரம்
வரும்படை தாங்கிப் பகைவரை வென்ற
மாண்புறு தமிழர் வீரம்

7. இருங்கடல் கடந்து கடாரம் சீயம்
எறிந்தது யாவர் வீரம்
விரும்பா மன்னரை வென்றர சாண்ட
விறல்மிகு தமிழர் வீரம்

8. இலங்கை சாவகம் ஏனை நாடுகள்
எறிந்தது யாவர் வீரம்
கலங்கள் கொண்டு கடல்கடந் தெதிரியைக்
காய்ந்த தமிழர் வீரம்

9. வருகை மொழிந்து மாற்று ரூர்போய்
மலைந்தது யாவர் வீரம்
பரிவுகொண் டறநெறி பற்றிப் பகைவரைப்
பணிவித்த தமிழர் வீரம்

10. தொடுபடை யில்லார் மாதர் மேற்படை
தொடாதது யாவர் வீரம்
கொடுமையெண் ணுமல் செருக்களத் தறத்தையே
கொண்ட தமிழர் வீரம்.

---

# செய்திகளும் குறிப்புக்களும்

### (க) பதினான்கு மொழிகளில் திருக்குறள்

திருவள்ளுவர் உலகிற்களித்த ஒப்பற்ற நூலாகிய திருக்குறளை இவ் விந்திய நாட்டில் முதனமையாக வழங்கிவரும் பதினான்கு மொழிகளில் மொழி பெயர்க்க இந்திய மைய அரசினைச சார்ந்துள்ள 'சாகித்திய அகாடமி' ஏற்பாடுகள் செய்து வருவதாக விஞ்ஞான ஆராய்சசித்துறை அமைசசா ஹுமாயூன் கபீர் அவர்கள் கடநத 24—9—58-இல் மக்கள் மன்றத்தில் பேசிய காலை குறிப்பிட்டாா. மககள மன்ற உறுப்பினர் திரு. கே. டி. கே. தங்கமணியவாகள கேட்ட கேள்விககு விடையிறுக்கு முகத்தான் மேற்கண்ட செய்தியை வெளியிட்டார்.

**குறிப்பு:** திருக்குறட் கருத்துக்களை இந்திய நாடெங்கும் பரவச செய்ய மைய அரசியலார் எடுத்துள்ள முயற்சி பாராட்டற்குரியதே. இதனை விரைவில் செய்து முடித்து வெற்றி காண்பார்களாக. இதே சமயத்தில் நாம் குறிப்பிட விழைவது யாதெனில், உலகப் பொது மொழியாகக் கருதப்படும் ஆங்கிலத்தில் குறள மொழிபெயர்ப்புக்கள் பல வெளிவந்துள்ளன. அவற்றைக கற்றோரிடையே பரவச செய்ய அரசியலார் வழிவகை காண்பார்களாயின் அரசினர் நோக்கம் நிறை வேற அஃதோர் சிறந்த வழியுமாகும்.

### (உ) திருமதி மேரி ஸ்டோப்ஸ் அம்மையார் மறைவு

குடும்பக் கட்டுப்பாடு பற்றிய பல நூல்களை இயற்றியவரும் கருப்பத் தடையின் இன்றியமையாமையை முதன் முதல் உலகிற்குணர்த்தியவரும் ஆண் பெண் தத்துவக்கலை ஆராய்ச்சியாளருமான திருமதி மேரி ஸ்டோப்ஸ் அம்மையாா கடந்த 2—10—58-இல் தமது 78-ஆம் அகவை யில் இலண்டனிலுளள தமது இல்லத்தில் காலமானார்.

**குறிப்பு:** அம்மையாரின் பணி துவக்க நாளில் அரசினராலும் பொது மக்களாலும் தூற்றப்பட்டதெனினும் காலப்போககில் அறிவுலகம் அதனை ஏற்றுப போற்றத துவஙகிறறு. அமமையாரின் நூலகள் இன்றும் என்றும் படிததுப் பயன்பெறத் தக்கவை.

### (ங) பாகிஸ்தான் அரசியல் நிலை

பாகிஸ்தான் அரசியல் சட்டத்தை நிறுத்தி வைத்து ஜெனரல் அயூப்கான் என்பவரை ராணுவசசட்டத்தை இயககும் பொறுப்பினராகச் செய்து பாகிஸ்தான் தலைவர் இஸ்கந்தர் மிாசா அண்மையில் ஓர் அறிககை வெளியிட்டுளளாா். அதில் இங்ஙனம் தாம் போர்வீரர் களிடம் ஆட்சியை ஒப்படைக்கச் சில காலமாக அரசியலில் காணப்பட்டு வந்த சீர்கேடுகளே காரணம் எனக் கூறியுள்ளாா.

**குறிப்பு:** போர்வீரர்களிடம் ஆட்சியை ஒப்படைப்பது மக்களாட்சி முறைக்கு மாறானது எனபர். ஆயினும் திரு. இஸ்கந்தர் மிாசா கூறும் காரணஙகளையும் ஆராயவேணடும. அரசியல் அறிஞர்கள் இதுபற்றி கூறுங் கூற்றுக்களையும் பிற சூழ்நிலைகளைக கொணடேமே பாகிஸ்தானின் இனறைய அரசியல அமைவுடைத்தா அன்றா எனபதை முடிவு செய்தல் வேண்டும்.

### (ச) சமக்கிருதம் மாநில மொழியாகாது

உத்திரப்பிரதேச உயர் நீதி மன்றங்கட்குட்பட்ட துணை நீதி மன்றங்கள் எதுவும் சமக்கிருதத்தில் எழுதப்பட்ட வழக்குகளை ஏற்றுக் கொள்ளமுடியாது என்று அலகபாத் உயர் நீதிமன்ற நீதிபதி திரு. சேம்ஃசு அவர்கள் அண்மையில் கூறினர். அவர்கள் கூறும் விளக்கம் வருமாறு: "அரசியல் சட்டத்தில் முந்நூற்றைம்பதாவது பிரிவுப்படி மாநிலத்தில் உபயோகிக்கப்படும் எந்த மொழியிலும் குறைபாடுகளைத் தெரிவித்துக் கொள்ளலாமென்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் சமக்கிருதமொழி இந்தப் பிரிவிற்கு ஒப்ப ஒரு மாநில மொழி அல்ல" என்பதை அவர் எடுத்துக் காட்டினர்.

**குறிப்பு:** பன்னெடுங்காலமாக ஓர் இராச்சியமாகிய மாநிலத்துக்கேனும் குறிப்பிட்ட ஒரு மக்கட் குழுவினர்க்கேனும் உரித்தல்லாததாய் நாட்டிலும் வீட்டிலும் வழக்கற்றதாய் ஏட்டில் மட்டும் இயங்குவதாயுள்ளது சமக்கிருதம். அதனால் அஃது உலக வழக்கழிந்தொழிந்த மொழிகளோடு ஒதுக்கிடம் பெற்றது. அதனை மீட்டும் உலக வழக்குள்ள மொழிகளுடன் ஒப்பக் கொண்டுவரவேண்டுமென்னும் தவறு உயிர் நீங்கிய உடம்பினை மீண்டும் உயிர்ப்பிக்க முயல்வதனை ஒக்கும் என்று உணர்வாராக. அதனை ஓர் உயர் நீதி மன்ற நீதிபதி வாயிலாக உணர்த்த நேர்ந்தவுண்மை சாலவும பொருத்தமுடைத்து.

### (ரு) திரு. பிராங் அந்தோணியாரின் இந்தி எதிர்ப்பு

"இந்தியை ஆட்சிமொழியாக நான் ஏற்கமுடியாது. ஏனெனில் ஆங்கிலோ இந்தியரின் தாய்மொழியாகிய ஆங்கிலத்தை அஃது அழித்துவிடும். மேலும் இந்தி பேசும் மாநிலங்களில் வாழும் சிறுபான்மையினரின் கலாசாரம, மொழிகள் அழிந்துபோகும். பிற மொழிகளின் மீதுள்ள வெறுப்பினுலேயே இந்தி வெறியர்கள் இந்தியை ஆட்சிமொழியாக்க விரும்புகின்றனர் என்பதில் ஐயமில்லை. முதலில் ஆங்கிலம் ஒழிந்தாலன்றி இந்தி ஆட்சிமொழியாக ஆகமுடியாது என்பதைப் பெயர்பெற்ற இந்தி வெறியர்கள் வெளிப்படையாகக் கூறிவிட்டனர். இதனால்தான் புது இந்தி மொழியை நான் ஆட்சிமொழியாக ஏற்றுக் கொள்ளமாட்டேன் என்று தெளிவாகக் கூறுகிறேன்". என்று மக்கள் மன்ற உறுப்பினர் திரு. பிராங அந்தோணி அண்மையில் புது டில்லியில் நடைபெற்ற அனைத்திந்திய ஆங்கிலோ இந்திய ஆண்டுக் கூட்டத்தில் பேசிய காலை குறிப்பிட்டார்.

**குறிப்பு:** சிறுபான்மையினர் கருத்துக்கும் மதிப்புத் தருவதுதான் மக்களாட்சி. இஃது உண்மையாயின திரு. பிராங் அந்தோணியாரின் அறிவுரை கேட்ட பிறகேனும் ஆட்சியாளர் மனந்திருந்துவார்களாக.

### (சு) போப்பாண்டவர் மறைவு

கிறித்து உலக கத்தோலிக்க 12-வது தலைவரான போப்பாண்டவரவர்கள் கடந்த 9-10-'58 காலை 8-22 மணிக்கு, தமது 82-ஆம் அகவையில் ரோம் நகரில் காலமானர்.

**குறிப்பு:** போப்பாண்டவரின் மறைவு குறித்து வருந்தும் கிறித்துவ சமயத் தலைவர்கட்கும் மக்கட்கும் எமது இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

### (எ) கரந்தைத் தமிழ்க் கல்லூரி மாணவர்க்கு முதற் பரிசு

கரந்தைத் தமிழ்க் கல்லூரி மாணவராகிய திரு. ஆர். கலிய பெருமாள் என்பவர், இவ்வாண்டு (1953-மார்ச்சு) நடைபெற்ற சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் இறுதி நிலைத் தேர்வில் முதல் வகுப்பு மாணவருள்ளும் முதல்வராகத்தோந்து ஐந்தாம் ஜாராஜ் நினைவுத் தமிழ்ப் பரிசாகத் திருப்பனந்தாள் மடாலயத்தார் வழங்கிவரும் ஆயிரம் வெண்பொற் காசுகளையும், பவாநந்தர்க் கழகப் பரிசினையும் ஒருங்கே பெற்றுள்ளார்.

**குறிப்பு:** முதற் பரிசினைப் பெற்றுத் தமக்கும் கரந்தைக் கல்லூரிக் கும் ஒருங்கே சிறப்பினைத் தேடித்தந்த திரு. கலியபெருமாள் அவர் கட்கு நம் வாழ்த்து உரித்தாகுக.

### (அ) பன்னிரு திருமுறைப் பாராயண விழா

திருவாவடுதுறை ஆதீனத்திற்குரிய திருவிடை மருதூர் திரு மகாலிங்கசாமி தேவத்தான பன்னிரு திருமுறைப் பாராயண விழாக் குறித்த திருக்கோவிலின் கண்ணுள்ள சமய விரிவுரை மண்டபத்தில் வள்ளுவர் யாண்டு ஆவணி ௩0-ஆம் நாள் முதல் மார்கழி உஎ-ஆம் நாள் முடிய (15—9—58 முதல் 11—1—59 முடிய) ஏறத்தாழ நான்கு திங்களுக்குப் பன்னிரு முறைகளையும் பதிகியுடன் காலை மாலை இரு வேளைகளிலும் ஓதப்பெறும் மேலாம் சிவ புண்ணியத் திருப்பணி நடந்து வருவது நமமனோர் தவப்பேறே இஃவோது முறையினை நல்லவாறு குருமகா சந்நிதானம் வகைப்படுத்தி அருளியுள்ளனர். சிவநேயச செல் வாகள் இருபாலாரும் பெரும்பாலாராகக் கலந்து பயனெய்துவார்களாக. இத் திருமுறைகளைப்பற்றி விரிவுரைகளும் நிகழும் எனத் தெரிகின்றது.

**குறிப்பு:** குருமகா சந்நிதானத்தின் இச சிவ புண்ணியப்பப்பணி எங்கும் விரிவதாக. நாள் விழா, சிறப்பு விழா, அருச்சனை முதலியவற்றி னும் பொலிவதாக.

### (க) கேரள நீதிமன்றங்களில் ஆங்கிலமே நீடிக்கும்

"அனைத்திந்தியப் பொதுமொழி யாது என்பது அறுதியிடப்படும் வரை நீதிமன்றத் தீர்ப்புக்கள், சட்டமன்றத்தில் நிறைவேற்றப்படும் சட்டங்கள் முதலியன தொடர்ந்து ஆங்கிலத்திலேயே எழுதப்படல் வேண்டும்" என்ற கருத்தை கேரள அரசினா நிறுவிய ஆட்சிமொழிக் குழுவினர் அண்மையில் தெரிவித்துள்ளனர். ஆனல் அதே நேரததில் மக்களின் அன்றாட வாழ்க்கையில் தொடர்பு கொண்டுள்ள 17 அரசியல் துறைப் பகுதிகளில் உடனடியாக ஆட்சிமொழி மலையாளமே ஆதல் வேண்டும் எனவும் அக் குழுவினர் முடிவுசெய்துள்ளனர்."

**குறிப்பு:** கேரள அரசினரின் தாய்மொழிப் பற்றினையும் காலம், சூழ்நிலை, உலகியல் ஆகியவற்றை அறிந்து ஆஙகிலத்தைப் போற்றும் பரந்த நோக்கமும் பாராட்டுதற்குரியனவே.

# மதிப்புரை

**"சைவமும் தமிழும்"**

[இதன் ஆசிரியர், பேராசிரியர் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் முத்தமிழ்வித்தகர், பண்டிதவித்துவான், தமிழ்த் துறைத் தலைவர் (கீழைக்கலைப்பகுதி) அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர். இஃது இளைஞர் அருள்நெறி மன்றம், மாரியம்மன் வீதி திருக்கோணமலை, இலங்கை, என்னும் மன்றத்தாரால் வெளியிடப் பெற்றது.]

திருப்பேராசிரியச் செட்டியாரவர்கள் 1944-ஆம் ஆண்டில் பள்ளத்தூரில் நடைபெற்ற சைவ இளைஞர் மாநாட்டில் நிகழ்த்திய சிறந்த தலைமையுரையினைத் தலைக்கொண்டு திகழ்வதிந்நூல். இதன்கண் சைவமுந் தமிழும் உயிரும் உடலும்போல் தொன்று தொட்டியைந்து வரும் மாண்பு நன்கு விளக்கப்பட்டுள்ளது. சமயப்பூசலின்றி அவரவர் சமயத்தை மேற்கொண்டு ஒற்றுமையுடன் வாழ வழிகாட்டியுள்ளது. சைவத்தின் மாண்பினைச் சங்கநூல்கள், பிற்காலநூல்கள், திருமுறை நூல்கள், சித்தாந்தநூல்கள் முதலிய எல்லா நூல்களினின்றும் தக்க மேற்கோள்கள் காட்டிச் செம்மையுற விளக்கியுள்ளார்கள். இதனைச் செந்தமிழ் அன்பர்களும், செந்நெறிச் செல்வர்களும் வாங்கிக் கற்றுப் பயன் எய்துவார்களாக.

**"திருக்குறண்மனைதீபவந்தாதி"**

[இதன் ஆசிரியர் திரு. ந. ஏ. ஏகாம்பரஞ் செட்டியாரவர்கள், வார்ப்பட்டி P. O. புதுக்கோட்டை வழி, திருச்சிராப்பள்ளி சில்லா.]

இந்நூல் உலகப் பொதுமறையாம் திருக்குறளிற் காணப்படும் ஆயிரத்து முந்நூற்று முப்பதருங்குறள்களின் முதல் நினைப்புகளையும் அதனதன் அதிகாரப்பெயர்களையும் முறைபிறழாமல் மிகவும் இனிமையும் எளிமையும் செம்மையுமுற மிக்க சீர்கள்கொண்ட பெரிய விருத்தங்களாகப் பதினைந்து விருத்தங்களுள் அமையப்பெற்றுக் கற்பார்க்குக் கழிபேருவகை தரும் பெற்றியதாய் விளங்குகின்றது. பாட்டுப்பாடுதலே அருகிவரும் இந்நாளில் பெரிய நூலாகிய திருக்குறளுக்கு நெட்டுருப் பண்ணிக் கற்பார் நெஞ்சில் மிக எளிமையாக நினைக்குந்தோறும் திருக்குறள் ஐயுறவின்றி வெளிப்படுந் தன்மைத்தாய்த் திரு. செட்டியாரவர்கள் பாடியுள்ளமை மிகவும் பாராட்டற்குரியது. வணிகத்துறையில் ஐந்தொகைபோன்று விளங்குவது இந்நூல். இது விலையின்றி எல்லார்க்கும் இலவசமாக வழங்கப்படுவது. ஆசிரியர் முகவரிக்கு எழுதி வேண்டுவோர் பெற்றுப் பயன் எய்துவார்களாக.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.



காரைக்குடி, தமிழறிஞர்

உயர்திரு. ராய. சொக்கலிங்கனூர் அவர்கள்




| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு கககூஅகூ, ஐப்பசி | பரல் |
| --- | --- | --- |
| ௩௩ | நவம்பர், 1958 | ௩ |

## மணிவிழா வனப்பமை தலைவர்
# ராய. சொக்கலிங்கனார்

*பிறப்பு*

*மணிவிழாத் தலைவர் ராய. சொ அவர்கள் நாட்டுக்கும், மொழிக்கும், நன்னெறிக்கும் பல்லாண்டுகளாக உள்ளத் தார்வமுடன் ஒவா துழைத்துவரும் ஒருபெருஞ் சான்றோராவர். அவர் தம் வரலாற்றுணர்ச்சி நன்னெறி யொழுகுவார்க்கு நல்வழி காட்டியாகும். அதனைக் காண்போமாக:*

*அறிஞர் ராய சொக்கலிங்கனார் அவர்கள் பாரையே வாழ்விக்கும் பல்வளம் கொழுமிய காரைக்குடியில் விளம்பி யாண்டு ஐப்பசித் திங்கள், கரு-ஆம் நாள் (30-10-1898) இருமுதுகுரவரும் ஒரு மனத்துடன் இடையறுதியற்றிய நடைமிகு பெருநோன்பாற பிறந்தனர் தந்தையார் இராயப்பச் செட்டியாராவர். தாயார் அழகம்மை ஆச்சியாராவர்.*

**கல்வி**

*பிள்ளைமைப் பருவத்தே சொக்கலிங்கனாரவர்கள் பிற்காலத்தோற்றப் பொலிவின் அறிகுறி பலவும் திகழ வளர்ந்தனர். பலர் பாராட்டப் பருவநிகழ்வுகளும் பாங்குற நிகழ்ந்தன: காரைக்குடியில் யாரையும் வனப்புறச் செய்யும் கல்வியினை ஆர்வமுடன் யாவர்க்கும் அவரவர் தம் இயல்பறிந்து இனிமையுறப் பயிற்றுவிக்கும் திண்ணைப்பள்ளி ஆசிரியர் சுப்பையா அவர்களிடம் ராய. சொ அவர்கள் மைஓலை பிடித்துத் தெய்வத் தமிழ்மொழியினைச் சீர்பெறப் பயின்றனர்.*

பின் பாலக்காட்டில் ஒன்பது ஆண்டுவரை கல்வி பயின்றனர். இவ்வூரின்கண் தந்தையார்க்கு வட்டிக்கடை ஒன்றிருந்தது. அது காரணமாக ஆங்குக் கல்விபயில நேர்ந்தது

பொருள்

செல்வவணிகர் சிறுமுயற்சியில பெரும்பொருளீட்டும் திறலோர். அவர்கள் தங்கட்கென நகரமைப்புக் கண்டு நகரத்தார் என நலப்பெயர் பூண்டனர் ஒருகுலமாய் ஒற்றுமையுடன் வாழ்ந்தனர் செந்தமிழ்மொழியும் சிவனெறியும் சிறக்க ஒல்லும் வகை உதவிப் பல்வளம் பெருகப் பல்லாற்றானும் பணிபுரிந்து வாழ்ந்தனர். காலிற் செல்வதினும் கலத்திற் சென்று ஈட்டும் பெருமபொருளில் பெருநோக்கங் கொண்டவர், அஞ்சா நெஞ்சினர்; துணிவினர்; எஞ்சாச் சூழ்ச்சியர். அன்றுபோல் இன்றும் அவ்வாறே யொழுகிவரும் ஆர்வத்தர்.

அம்முறையில் ராய. சொ. அவர்கள் தம் பதின்மூன்றும் அகவையில் பர்மாவுக்குச் சென்று பியாப்பம் எனற ஊரில் மூன்றேகால் ஆண்டு பலரும் பாராட்ட ஓவாதுழைத்தனர். நல்ல நலத்துடன் தாய்நாடு திரும்பினர். யாவரும் வரவேற்று மகிழ்ந்தனர்.

புலமை

காரைக்குடியில் தமிழாசிரியர் பண்டித திரு சிதம்பர ஐயரவர்களிடம் செந்தமிழ் இலக்கண இலக்கியங்களைச் செவ்வையாகத் தம் பதினெட்டாம அகவை முதல் இருபதாம் அகவை வரையில் கற்றனர் இந்நாளில் சமூகச் சீர்திருத்தத் தந்தை சொ முருகப்பா அவர்களின் தொடர்பு அமைந்தது.

திருமணம்

பள்ளத்தூரில் குணத்தாலும் குலத்தாலும் ஒத்த திரு. உமையாள் ஆச்சியைக் காளயுத்தி ஆண்டு ஆனித்திங்கள் அ-ஆம் நாள் (21-6-1918) நற்பொழுதில் ஊரவா, உற்றார், உறவினர், சான்றோர், நாவலர், பாவலா நனிமிகப பாராட்ட இயம்பல ஒலிப்ப மங்கல மகளிர் வாழ்த்தியம்ப இறையருளால் முறையுறத் திருமணம் புரிவித்தனர். இருவரும் காதலொருமித்துப் பொருவரும் மனையறம புகழுறப் புரிந்தனர்.

சமூகத்தொண்டு

காரைக்குடியில் பிங்கள ஆண்டு ஆவணித் திங்கள் உசு-ஆம் நாள் (10-9-1917) அன்பர் சொ. முருகப்பா பல அன்பர்களைச் சேர்த்துக்கொண்டு "இந்துமதாபிமான சங்க"த்தைத் தோற்றுவித்தனர். இச்சங்கத தோற்றததில் ராய. சொ. அவர்கள் பெரும் பங்கு எடுத்துக்கொண்டனர்.

அதன்பின் தனவைசிய சமூகமாகிய தம் மரபில் அறிந்தோ அறியாமலோ இடையிடையே செறிந்து வளர்ந்துள்ள குறைபாடுகளைச் சீர்திருத்தம் செய்யக் கருதினர். கருதிச் சித்தார்த்தி ஆண்டு ஆவணித் திங்கள்; ௨௬-ஆம நாள் (1-10-1919) "தனவைசிய ஊழியர் சங்கம்" எனப் பெயரிய ஒரு சிறந்த அமைப்பினை அமைத்தனர். இதிலும் ராய சொ. பங்குகொண்டு பணியாற்றினர். இதன் சார்பில் இரௌத்திரி ஆண்டு ஆவணித் திஙகள் ௨௪-ஆம் நாள் (8-9-1920) "தனவைசிய ஊழியன்" என்ற பெயருடன் ஒரு செய்தித்தாள் தொடங்கப் பெற்றது. இதன் தொடக்ககால ஆசிரியர் சொ. முருகப்பா ஆவர். இத்தா இரண்டாவது ஆண்டுத் துவக்கமுதல் ராய. சொ. அவர்களே ஆசிரியராகப் பணிபுரிந்து வந்தனர். அப்பொழுது அத்தாளின் கண் சமூகத்தொண்டினுக்கு மட்டுமே இடம் வாய்த்திருந்தது.

கொள்கை பரந்த அளவில் விரிவுபடுதல் நலமெனக்கருதி அததாளினை "ஊழியன்" என்ற பெயருடன் மாற்றி யமைதது எண்ணியவாறே கொள்கையினை விரிவுபடுத்தி நன்முறையில் ஏறத்தாழ இருபது ஆண்டுகள வீறுபெற நடததினர். இன்றுள்ள செய்திததாள உலகில் முன்னணியில் உள்ளவர்கள பலரும இந்த 'ஊழியனின' உதவியாசிரியராக இருநதுள்ளார்கள்.

### அரசியல்

ராய. சொ. சட்டமறுப்பு இயக்கத்தில் சேர்ந்து 9-1-1932-இல் ஓர் ஆண்டுச் சிறைத்தண்டனை அடைந்துள்ளார. நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபில் அரசியற் காரணமாக முதன்முதற் சிறைசென்றவர் ராய. சொ. ஒருவரே யாவர்.

வ. வே. சு ஐயர், கவியரசா பாரதியார், வ. உ. சிதம்பரம் பிள்ளை, சுப்பிரமணிய சிவா முதலிய நாட்டுத் தலைவர்கள் பலருடன் நல்ல முறையில் பழகியுள்ளார். ராய. சொ. மாசற்ற தேசபத்தர்; தீவிர காஙகிரசு வாதி; மௌலானா முகமதலி தலைமையில் நிகழ்ந்த காக்கிநாடாக் காஙகிரசுக்கும, காந்தியடிகள் தலைமை தாங்கிய பெல்காம் காங்கிரசுக்கும், இராசேந்திரப் பிரசாத தலைமை பூண்ட பம்பாய்க் காங்கிரசுக்கும் ராய. சொ. அவர்கள் வகையாளராகச் சென்றுள்ளார். (வகையாளர்-பிரதிநிதி.)

1938-முதல் 1141-வரை காரைக்குடி நகராண்மைக் கழகத் தலைவராக இருந்து எல்லாரு முவப்ப நல்லன புரிநது நாடும் ஊரும் புகழப் பீடுடைப் பெருமபெயர் பெற்றுள்ளார.

அனைத்திந்தியக் காங்கிரசுக் குழுவின் உறுப்பினராகவும், தமிழ்நாடு காஙகிரசுச் செயற்குழுவின் உறுப்பினராகவும்,

காரைக்குடி மாவட்டக் காங்கிரசுக் குழுவின் தலைவராகவும் இருந்து பொருந்திய பணிகள் திருந்த ஆற்றியுள்ளார்.

வெளிநாட்டுச் செலவு

கற்பும் பொற்பும், கனிவும் கடவுட்பற்றும், ஈவும் இரக்கமும் தாவின்றமைந்த மனைவி தனிபெருஞ்செல்வி உமையாள் ஆச்சியுடன் பர்மா, மலேயா, இலங்கை, சயாம், சுமத்திரா, இந்தோச்சைனு முதலிய நாடுகளில் வழிநடை சென்று மீண்டுள்ளார்கள்.

சமய வாழ்க்கை

சைவ வைணவப் பொதுநோக்கங்கொண்ட மெய்யன்பர் ராய. சொ. அவர்கள், நாயன் மார்களின் செந்தமிழ்ச் சிறப்புத் திருமறைத திருபபதிகஙகள் பெற்றுள்ள திருவூர்களுக்கும, ஆழ்வார்களின் பாசுரங்கள் பெற்ற திருப்பதிகளுக்கும் சென்று வணங்கும் தெய்வப்பணியினை மேற்கொண்டுள்ளார். இச்சீரிய பணியில் பாடல் பெற்ற சிவத்திருப்பதிகள் உஎச-ல் உசுசு திருப்பதிகளுக்கும், பாசுரங்கள் பெற்றுள்ள வைணவத் திருப்பதிகள் க0அ-ல் அச-திருப்பதிகளுக்கும் இதுகாறும் சென்று தொழுது மீண்டுள்ளார். ஏனையவும இறைவன் இன்னருளால் விரைவில் முற்றுறுமாக. இச்சீரிய தொண்டு நாட்டுப்பணிக்கும சமூகச் சீர்திருத்தப் பணிக்கும் புறம்பல்ல வென்றும், வேண்டத்தக்க தொனறென் றும் அனைவரும் விழைவுறுமாறு முற்காட்டும் நற்றொண்டாகும். தெய்வ உறுதியினர் செய்வனவே எய்யா உறுதிப்பணியாகும். இதனை, நடைமுறையிற் காட்டி நாட்டுக் குணர்த்தும் பெரியார் ராய. சொ. ஆவர்.

ராய. சொ. எழுதிய தொகுத்துள்ள நூல்கள்

௧. பெண்விலைக் கண்டனச் செய்யுட்கள் ௨. காந்தி பிள்ளைத் தமிழ் ௩. காந்தியிருபா ௪ காந்திபதி னெண்பா, ௫. காந்தி கலித்துறையந்தாதி ௬. புதுமைப் பாக்கள் ௭. தாலாட்டும் கும்மியும் ௮. காந்தியும் வள்ளுவரும் ௯. காதற் கடிதங்கள் ௧0. இன்பம் எது ௧௧. வள்ளுவர்தந்த இன்பம் ௧௨. காவேரி ௧௩. குற்றாலவளம் ௧௪. நாம் ஆர்க்கும் குடியல்லோம் ௧௫. காதற் பாட்டு ௧௬ தேனும் அமுதும் ௧௭. சேதுபதி விறலிவிடுதூது ௧அ. கூளப்ப நாயக்கன் விறலிவிடுதூது ௧௯. வருணகுலாதித்தன் மடல் ௨0-திருவாசகத்தேன் ௨௧. தேவாரமணி ௨௨. ஆழ்வார் அமுது ௨௩. பாவைப் பாட்டு ௨௪. பிள்ளைப்பாட்டு ௨௫. திருமணப் பாட்டு ௨௬. தெய்வப்பாமாலை ௨௭. முருகன் பாமாலை என்பன.

**மணிவிழாச் சிறப்பு**

தமிழறிஞர் திரு ராய. சொக்கலிங்கனார் அவாகட்கு அறுபதாண்டு நிறைவு மணிவிழா நிகழும் விளம்பி-ஐப்பசி-கரு-ஆம் நாள் (31-10-1958) வெள்ளிக்கிழமை யன்று மிக்க சிறப்பாக நடைபெற்றது. திரு. "மீனாட்சி பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் திரு. கருமுத்து. தியாகராசச் செட்டியாரவர்கள் தலைமையில்" மணிவிழாத் தலைவரவர்கட்குப் பட்டம், பொன்னாடை, பண முடிப்பு, வாழ்த்து முதலிய சிறப்புக்கள் செய்யப்பட்டன.

காலை ஒன்பது மணிக்குத துவங்கப் பெற்றது. முதற்கண் அனுகூல விநாயகர் வழிபாடு நிகழ்ந்தது பின் விழாவிற்கு அழைத்து வருதலும் இறை வணக்கமும நிகழ்நதன. தலைவர் முன்னுரைக்குப்பின் சிவத்திரு ஈசான சிவாச்சாரியாரால் பட்டம் வழங்கப்பெற்றது. திரு ம. பொ. சிவஞானக் கிராமணியார் பொன்னாடை போர்த்தினர். தவத்திரு குன்றக்குடி அடிகளார் வாழ்த்துரை வழங்கினர். அன்பர் சிலர் பாராட்டுரை பகர்ந்தனர். ராய. சொ. அவர்கள் அன்புரை நவின்றனர்.

மீண்டும் மாலை நாலேகால் மணிக்கு இறைவணக்கத்துடன் கூட்டம துவங்கப் பெற்றது திரு. ப. வ ராமகுழந்தையன் செட்டியாரவர்கள் பண முடிப்பு அளித்தனர். திரு. சோமசுந்தரத் தம்பிரான், T. புருடோத்தம முதலியார் எம. எல், சி., கி. ஆ. பெ. விசுவநாதம், திருமதி லீலாவதி ராமசுப்பிரமணியம், C. V. C. T. வேங்கடாசலம செட்டியார், அ. ச. ஞானசம்பந்தன், S. K. இராமராசன், ப. சீவானந்தம், பாலகவி வே. இராமனாதன் செட்டியார், டாக்டர் வ. சுப. மாணிக்கம், சா. கணேசன் முதலியோர் பாராட்டுரை வழங்கினர். ராய. சொ. நன்றியும் வணக்கமும் நவின்றனர் தக்கவாறு தலைவர் முடிப்புரை மொழிந்தனர். இரவு ஒன்பதரை மணிக்குக் "காநதி மகான் கதை" கொத்த மங்கலம் சுப்பு அவர்களால் செவ்விதின் நிகழ்த்தப் பெற்றது.

போற்று புலவராய்ப் பொய்யில் புரவலராய்ச
சாற்றுமொழி நாடு சமயமெலாம—போற்றிராய
சொக்கலிங்கர்க் கான்றோர்செய் தூய மணிவிழா
தக்கவா வாழ்கநலம் சார்ந்து.

அம்மையப்பர் ஆரருளால் மணிவிழாத் தலைவர் வயிரவிழா முத்துவிழா முதலிய செயிர்தீர் பல்விழாப் பெற்றுப் பணிபல புரிந்து உலகு பாராட்ட வாழ்கவென்று வாழ்த்துகின்றோம்.

---

# வைரவிழா (சதமுழுக்கு)

இவ் விழாவிற்குச் சிவபூசைத் திறலாரும், தமிழ் அறிஞரும் முதுபெரும் யோகாசனப் புலவரும், குடந்தை ரிடயர்டு ஹெட் போஸ்ட்மாஸ்டரும் ஆகிய உயர் சைவத் திருவாளர் பு. து. இரத்தினசாமிப் பிள்ளை அவர்கள் உரியர் ஆவார் அவரது இல்வாழ்க்கைத் துணையாளர் ஏகதார கலியாணத்தமமாள் ஆவர். இவர்களுடைய சதாபிஷேக மணிவிழா ஜூன் மாதம் 18உ புதன்கிழமை இரவு ஏழுமணிக்கு யாகசாலை குடநிறுவலும் செய்யப்பட்டு சிவாகமநெறி வழுவாது பூசை வெகுசிறப்பாக நடந்தேறியது. ஜூன் மாதம் 19உ வியாழக்கிழமை காலை 4 மணி முதல விழா துவக்கப்பட்டு இரண்டாம் கால பூசையும், யாகசாலை ஆரம்பித்து கடகலக்னத்தில் பல இன்னிசைகள் வேதஒலி முழங்க, திருமுறை ஓத, அடியார்கள் வாழ்த்தச் சதாபிஷேகம் வெகுசிறப்பாக நடந்தேறியது.



## 1. சிவபூசை மாநாடு

காலை 6 மணிக்கு திருக்குடந்தை சிவனடியார் கூட்டத் தலைவர் உயர் சைவத்திரு P. T. S. சிங்காரம் செட்டியார் அவர்களால் துவக்கப்பட்டு 20 சிவபூசைத் திறலோர்கள் இருக்கைகளில் அமர்ந்து துணைப்பொருள்கள் சிறிதும் குறைவின்றி வழங்க அவாகள் சிவபூசை செய்த காட்சி சிவவுலகக் காட்சியே என்று கண்ட பேர்கள் கூற நடந்தது. சிவபூசை விளக்கமும், சிவலிங்க தத்துவமும் பற்றிச் சொறபொழிவுகளும் நடந்தன.

## 2. குடந்தை யோகாசன இன்பநிலைய முதலாவது ஆண்டுவிழா

கும்பகோணம் பேட்டை நாணயக்காரத்தெரு இரத்தின நிலையத்தில் வெகு விமரிசையாக நடந்தேறியது. இறை வணக்கத்திற்குப்பின் மஞ்சக்குப்பம் தமிழறிஞரும், சிவபூசைத்

திறலாருமாகிய ஸ்ரீபோகநாதம் பிள்ளை அவர்கள் தலைமையில் திருநிறை S. சகுந்தலா, K. S. சகுந்தலா ஆகிய இவர்கள் நடனம் வெகு சிறப்பாக நடந்தது. இரண்டு குழந்தைகளுக்கும் இருக்கை (ஆசனம) செய்த குழந்தைகளுக்கும் பரிசுகள் வழங்கப்பட்டன. பின்னர், உயர் சைவத் திருவாளர் S. K. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் தலைமையில் சிறுவர்கள் இருக்கைகள் செய்து காட்டினர். குடந்தை, திருப்பனந்தாள் நிலைய அன்பர்கள் பலர் இருக்கைகள் செய்து காண்பித்தார்கள். பிறகு, இந்நிலைய ஆசிரியர் பல அரிய இருக்கைகள் செய்து காட்டியும், மிகக் கடினமான பூர்ணமச்சேந்தராசனம் வெகு எளிதாகப் பலரும் வியக்கும்படி செய்து காண்பித்தார்கள். இவரே சதமுழுக்காகிய வைரவிழாப் பெற்ற பெரியார். இவர் சதமுழுக்கில் ஈடுபட்டு முதல்நாளிரவு முதல் மறுநாள் மாலை 7 மணி வரையில் சதமுழுக்கிற்கு வேண்டிய நோன்புகளைக் கைக்கொண்டொழுகி வந்த போதிலும் இளைஞர்போல் களைப்படையாமல் இருக்கைகளைச் செய்தது மிகவும் பாராட்டத்தக்கது. பலர் அனுப்பிய வாழ்த்துக்கள் படிக்கப்பட்டன.

குறிப்பு: ஆயிரத்தெட்டுப் பிறைகண்டு வாழ்ந்தார வைர விழாவிற்குரியராவர் ஆயிரத்தெட்டுப் பிறை ஏறத்தாழ எண்பத்து நானகு அகவையாகும. ஆயிரம் பிறை கண்டார் எனக் கொண்டு அகவை எண்பதெனக் கூறுவாருமுளர்.

இவ் வைரவிழா முதல்வர் உடற்பயிற்சியுள் சிறந்ததும் நம் நாவலந்தீவிற்குரியதுமாகிய தொன்மை நன்மை இருக்கைப் பயிற்சியினை ஒல்லும்வகை மேற்கொண்டொழுகியது மட்டுமல்லாமல் உலகெஙகணும் பரவி எல்லாரும் நலமபெறவேண்டுமென்னும் நன்னோக்கத்துடன் தாமே வலிய முன்வநதும் தம பொருளால் நிலையம் அமைத்துப் பல்லாண்டுகளாகப் பலாககும பயிற்றுவித்து வருவது நனிமிகப் பாராட்டற்குரியது.

மேலும் அரசியலலுவலாளராயிருநதும சிவபூசைத் திறலோராகத் திகழ்வது பின்னும் பாராட்டத்தக்கதாகும இந் நிலைமை பண்டைச் சிவனடியார்களின் வாழ்க்கை நிலைமையினை மெய்ப்பிக்கும். இவர்கள் செந்தமிழ்க்கும் சிவநெறிக்கும் ஓர் எடுத்துக் காட்டாவார்கள். இவர்கள் எல்லாரும் நததும் முத்து விழா முதலிய பல விழாக்கள் பெற்றுப் பயன்பெரிதுடையராய்ப் பல நலத்துடன் பல்லாண்டு வாழத் திருவருள் புரியுமாறு அம்மையப்பர் அடியிணையினை அன்பொடு பணிகின்றாம்.

---

## முத்தானந்த அடிகள்

# இறையடி நிறைவிலொடுங்கல்

திருநெல்வேலி கார்காத்த வேளாளக் குடும்பத்தார் மதுரை அம்மன் சன்னதியில் செம்மையுற வாழ்ந்து வந்தனர் தந்தையார் திருமலைப் பிள்ளையும தாயார் அமமணியம்மாளும ஆற்றிய பெருந்தவப் பேற்றால் நம் முததானநத அடிகள கர யாண்டு பங்குனித் திங்கள் உந-ஆம் நாள் (ஏப்பிரல் 1891) வெள்ளிக்கிழமை தோன்றினர். முத்தையா எனப் பெயரிடப் பெற்றுப் பாராட்டுடன் வளர்க்கப் பெற்றனர்



சுவாமி முத்தானந்தர்

அகவை ஐந்தில் பள்ளி சேர்த்தனா. எட்டாண்டுகள் வரை நன்கு பயின்றனர். மாமனுருடன் கொழும்பு சென்று அரிசி வாணிபம் புரிந்தனர். பத்தொன்பதாம் அகவையில் மீண்டும் மதுரை வந்தனர். வந்து இறைவழிபாடு புரிந்து கொண்டிருநதார். உலக வாழ்வில் உவர்ப்புக் கொண்டார்.

துறவு நாட்டத்துடன் தில்லை வந்து சேர்ந்தனர். கூத்தப் பிரானை வணங்கினர் அந்தணர் அம்பலவாணாககு ஆட்டிய ஐநதமிழ்து நல்க அருநதினர். அன்றிரவு திருக்கோவிலிலேயே தங்கியிருந்தனர் மறுநாள் துறவி யொருவர் வாயிலாக ‘மௌன தேசிகர் ஆதீன’த்தில் அறிவாசிரியராக அமர்ந்துள்ள செல்லப்பஞான தேசிகர்பால் சேர்ந்தார். அவரும் அருளுடன் ஏற்று ஆதரித்தனர். அவர்பால் தொண்டு பூண்டொழுகிச் செந்தமிழின்கண் உள்ள சிறறிலக்கண இலக்கியக கல்வி முற்றுங் கற்றனர் பின் சங்கமருவிய நூல்களைக் கற்கவேண்டுமென்னுந் தணியாக் காதல் பெருகியது.

சங்க நூல்களைக் கற்க எண்ணிய தனிப்பெரு வேட்கையால் ஆசிரியர் திருவாணையுடன் செட்டி நாட்டில் கோநகர் எனப்படும்

கோனப்பட்டுப் போய்ச் சேர்ந்தனர். ஆண்டுள்ள "கற்பக விநாயக கலாசாலை"யில் கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளையவர்கள் ஆசிரியராக அமர்ந்து பாடம் பயிற்றிவந்தனர். அப் பேராசிரியர்பால் அடைந்து நான்காண்டுகள் நன்முறையிற் கல்வி பயின்று நலமுற்றனர். 1924-ஆம் ஆண்டில் ஆசிரியர் மறைந்தனர். கோநகரிலிருந்து திருமயிவந்த அடிகள் ஆசிரியர் மறைவு வரை மூன்றாண்டுகள் உடனிருந்து பணிபுரிந்தனர்.

சென்னையில் அந்நாளிலிருந்த வித்தியானந்த அடிகள்பால் வேதாந்த நூல்களை விழைவுறப் பயின்றனர் 1927-இல் வியாசர் பாடிக் கோதண்டராம முதலியார் என்னும் மெய்யன்பருடன் வடநாடு சென்று திரும்பினர் திரும்பியதும் சென்னைச் செங்கல்வராய விநாயகர் தோட்டத்தில் கரபாத்திர சிவப்பிரகாச அடிகள் தங்கியிருந்த தவவுறையுளில் 1928-ஆம் ஆண்டு தங்கினர். சென்னைச் செல்வர் கொடைவள்ளல் ப. இராமசாமியா பிள்ளை அடிகள்பால் திருக்குறள் முதலிய நூல்களைப் பாடங் கேட்டனர் அவர்தம துணையால் வடமொழிக் கல்லூரியும் வேதமொழி பெயர்ப்பும் நிகழ்ந்தன வடமொழிக் கல்லூரிக்கு அடிகள் ஆசிரியராகவும் தலைவராகவும் இருநது நடத்தினர். வேதமொழி பெயர்ப்புக்குக் காசிவாசி சிவானந்த யதீந்திரர் தலைபூண்டு நடத்தினர் பின்னர் இராமசாமிப பிள்ளைக்கும் அடிகளுக்கும் கருத்து வேற்றுமையுறவே வடமொழிக் கல்லூரி யும் வேத மொழிபெயர்ப்பு வேலையும் நின்றுவிட்டன. பின் வேப்பேரியில் ஒரு வள மனையில் தஙகியிருந்து வேதாந்தப் பாடம், இலக்கண இலக்கியப் பாடங்கள் கறபித்து வந்தனர்.

1947-ஆம் ஆண்டில் வியாசர்பாடி கரபாத்திர சிவப்பிரகாச அடிகளாரின் திருமடத்துக்குத் தலைவராக அமர்த்தபபட்டனர். அடிகளாரின் நன்முயற்சியால் மடம் சிறப்புப் பெற்றோங்கியது.

போதனாசாரியராக மட்டுமன்றி நூலாசிரியராகவும் விளங் கினர். "இராவணகிருத சிவதாண்டவ தோத்திரம" என்னும் வடமொழி நூலைத் தமிழில் மொழிபெயர்த்து வெளிப்படுத்தி யுள்ளார். அளவில்லாத தனிப்பாடல்கள் மிக்க சுவையுள்ளன வாக அவ்வப்போது பல பாடியுள்ளனர்.

1958-ஆம் ஆண்டு, அக்டோபர், இருபத்துநான்காம் நாள் இறையடி எய்தி இன்புற்றனர். திருச்சமாதியும், வழிபாட்டு நிறைவும் மாணவர் மெய்யன்பர் பெருந்திரளுடன் கூடி அளவிலாச் சிறப்புடன் உளமகிழ்ந்தாற்றினர். அடிகளார் இறை நீழலில் முடிவில் பேற்றுடன் வாழ வழுத்துகின்றோம்.

---

# இந்தியும் பிற மாநில மொழிகளும்

## இந்தி ஆதரவாளர்க்குப் பண்டித நேருவின் இடித்துரை

*கடந்த 1-11-58-இல் மத்திய பிரதேச 'இந்தி சாகித்திய சம்மேளன'த்தின் முதல் மாநாட்டைத் தொடங்கி வைத்த இந்திய முதல் அமைச்சர் பேசிய பேச்சின் சுருக்கம் வருமாறு:*

*"இந்தி ஆதரவாளர்கள் சிலர், மற்ற மொழி பேசுபவர்களைவிடத் தாமே உயர்ந்தவர்கள் என்று கருதுகிறார்கள். இது தவறு, இதனால் இந்தி மொழிக்கே கேடுவரும் இந்திய மொழிகள் அனைத்தும் உயர்ந்த மொழிகளே. மராத்தி, குஜராத்தி, வங்காளி, தமிழ், கன்னடம், தெலுங்கு, மலையாளம் முதலியன பழைய மொழிகள அவற்றுள் மிக மிகத் தொன்மை வாய்ந்தது தமிழ் அதனைச் சமக்கிருதத்திற்குத் தங்கை எனலாம். மொழிகளுக்குள் பகைமை உணர்ச்சி இருந்தல் கூடாது. இதனால் அமைதி கெடும்; ஆற்றல் குறையும் கற்றவர்கள் தமக்கோ தமது மொழிக்கோ நீதி வழங்க முடியாமற்போகும்.*

*தென்னாட்டில் இந்திக்கு எதிர்ப்பு இருந்து வருகிறது இதற்காகத் தென்னாட்டு மொழிகள் மீது பகையுணர்ச்சி கொள்வது சரியல்ல. தமிழும் மற்றுமுள்ள தென்னாட்டு மொழிகளும் முன்னேற உழைப்பது தான் தென்னாட்டின் எதிர்ப்பை வெல்லும் வழியாகும்*

*இந்தி நாட்டில் பெரும்பான்மையோரால் பேசப்பட்டும் புரிந்து கொள்ளப்பட்டும் வருவதால் அஃது அரசாங்க மொழியாக்கப்பட்டுள்ளது இதனால் இந்தி மற்றவர்கள்மீது ஆட்சி செலுத்துகிறது என்று சொல்லுதல் கூடாது*

*கடந்த பத்து ஆண்டுகளில் இந்திவேகமாக முன்னேறி வருகிறது. ஆனால், இந்தி ஆதரவாளர்கள் ஒன்றை உணரவேண்டும்: மொழிகளின் வளர்ச்சிக்குக் காரணம் அரசியல் திட்டமோ, சட்டமோ, அரசாங்க ஆணையோ அல்ல அந்தந்த மொழிகளின் வளத்தைப் பொறுத்தே அவற்றின் வளர்ச்சியும் உள்ளது எந்தச் சட்டத்தாலும் ஒரு மொழிக்கு உயிர் ஊட்டிவிட முடியாது. எனவே மற்ற மொழிகளின கருத்து எனனும் காற்று உங்கள்மீது வீச இடந் தாருங்கள்—இந்தி மொழியின் கதவுகளையும் சாளரங்களையும் திறந்து விடுங்கள் பேசுகின்ற மக்களின் எண்ணிக்கையைக் கொண்டு ஒரு மொழியைப் பெரியது என்றும் மற்றொரு மொழியைச் சிறியது என்றும் அளவிடுதல் தவறு. ஐஸ்லாந்தைப் பாருஙகள் அதன மக்கள் தொகை ஒன்றரை லட்சம்தான் ஆனால் அந்நாட்டைச் சேர்ந்த ஒருவர் இலக்கியத்தில் நோபல் பரிசு பெறறுள்ளார் அந்த அளவுக்கு அந்நாட்டு மொழி சிறந்துள்ளது எனவே ஒருமொழியின் சிறப்புக்கு மக்கள்தொகை அளவுகோலாகி விடாது."*

**குறிப்பு:** *பண்டித நேரு அவர்களின் கருத்துரை பாராட்டற்குரியதே எனினும் அவரது பேச்சில் வடமொழிக்கு உயர்வும், இந்திக்கு முதன்மையும் தரப்படுவது வருந்தத்தக்கது.*

---

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தலைவர்
உயர்திரு. பாகனேரி,
வெ. பெரி. பழ. மு. காசிவிசுவநாதன் செட்டியாரவர்களின்

# மணிவிழா வாழ்த்துக்கள்

1. எவர்சைவ சித்தாந்த கழகமது தொடங்குதற்கிங்
 கிரைஞ் ஞூறு
 கவர்வகையிற் றொகையளித்தன் றொருநூறு பங்கெடுத்த
 கண்ய ராவார்
 எவர்கழகச் செயற்குழுவில் உறுப்பினராய்ப் பத்தாண்டங்
 கிலகி னாரூர்
 எவர்கழகத் தலைவராய்ப் பத்தாண்டின் அளவாக
 இலங்கு கின்றூர்

2. எவர்சங்க நூலுரைகள் வெளியேறப் பொருளுதவி
 ஈந்து வந்தார்
 எவர்பாக னேரியெனும் தமதூரில் நூல்நிலயம்
 இனித மைத்தார்
 எவர்தமிழைச் சைவமதை இருகண்போற் பாவித்திங்
 கிருக்கின றூர்மற்
 றவர்காசி விசுவநா தப்பெயர்கொள்சீமானென்
 றறிவோம் நாமே.

—சென்னை, வ சு. செங்கல்வராயபிள்ளை.

### நேரிசை யாசிரியப்பா

திங்களும் கங்கையும் செறிசடைச் சிவபிரான்
மங்கலில் அருளால் மாண்பு மிகுந்த
தனவணி கர்குலம் தழைக்கத் தோன்றிப்
பாக னேரியைப் பயிலவுறும் இடமாக்
கொண்டு விளங்கும் குணக்குன் றன்னய் !
காசி விசுவ நாதன்என பெயரோய் !
அறமோ மாறு(து) ஆயினும் அறவினை
காலந் தோறும் மாறும் இயல்பறிந்(து)
இக்கா லத்தில் மக்களுக் கேற்ற
அறம்பல செய்யும் அன்பு வடிவோய் !
போலிப் பட்டம் நாளும் பல்கித்
தலைவிரித் தாடும்இத் தகவிலாக் காலத்துச்
"செந்தமிழ்ப் புரவலர்" என்னும் சீரிய
பட்டம் தகுதியாற் பெறறோய் நினது
மணிவிழா விற்கு வந்தென் புறக்கணால்
கண்டு மகிழ உண்டு பலதடை
எனினும் அவற்றுள் எதற்குமென் அகக்கணைத்

தடுக்கும் ஆற்றல் இல்லையத் தகவாற்
கண்டு களிப்பேன்; கவினுறு பெரும!
அறுபதாம் ஆண்டில் அழகுற நிறைந்து
வாழ்க: வள்ளால்! வாழ்க; பல் ஊழி
சூழ்கநின் புகழித் தொல்லுல கனைத்தும்
என்றே எனதிழி உளத்தும் இயங்கும்
வேண்டுவார் வேண்டுவ தீவான விழுமிய
பொன்னார் அடியைஎந் நாளும் வேண்டி
மனத்தால் மெய்யால் வாயால்
வழிபட் டென்றும் வாழ்த்துவன யானே.''

—திருச்சி, அ. மு. சரவண முதலியார்.

க. 'கழகப் பதிப்பே கவின்பதிப்பாம்;
காண்மின' என்று காசினியோர்
பழகித் துதிக்கும் பசும்புகழார்
பரிவார் நிலையந் தனதெழிலில்
அழகைச் செறிக்கும் அருட்செல்வன்
ஆண்டில் அறுபது நீண்டுயர்வோன்
மழவன் காசித் தலத்துறையும்
மதியார் சடையோன் திருப்பேரான்:

வேறு

உ. மணிவிழாக் கொண்டான் வாழி; மனையறம் நிறைந்து வாழி!
அணிவிழாத் தலைமை யேற்க அறிஞரும் சொக்கலிங்கன்,
தணிவிலாக் குன்றை வாழுந் தமிழ்முனி ஆடை போர்க்கத்
துணிவினர் சுப்பை யாவின துணைவனும் வாழி ஊழி!

—தருமபுரம், வித்துவான் சொ. சிங்காரவேலன்.

"சீராருந் தமிழ்ப்பணியே சிறந்திடுநற் பணியென்று
தெரிந்து தேர்ந்து
பேராருந் தமிழினொடு சைவமுந்தான் நாளுநாளும்
பெரிதும் ஓங்க
வாராரும் பணிபுரியும் வணிகர்குல திலகமெனும்
மணியே நல்ல
ஏராருங் காசிவிசுவ நாதநீ என்றென்றும்
இனிது வாழி.''

—கருப்பககிளர், சு. அ. இராமசாமிப் புலவர்.

பொன்னுக் குரையிட்டு நனகல மாக்கிய
பொற்பதுபோல்
தென்னந் தமிழுக் குரையிடச் செய்த
சிறப்புடையோன்
தன்னிகர் பாகையிற் காசி விசுவநா
தன்செட்டியார்
இன்னும்பல் லாண்டு நலம்பெற்று
வாழியர் இந்நிலத்தே.

—கலைமகள் ஆசிரியர், கி. வா. ஜகந்நாதன்.

ஆசி சொல்லப் பெரியோர்கள்
அறுபா ணுண்டு நிறைந்தவராம்
காசி விசுவ நாதனவர்
காண உலகுக் கோர்காட்டாய்
மாசில் பணிகள் பலசெய்தே
மாண்புற றனரே அவரைநிதம்
பேசிப் பெரிதும் வாழ்த்துவமே
பெரும்பே றனைத்தும் பெறவென்றே.

—மயிலம், வித்துவான் ஆ. சிவலிங்கனூர்.

சிற்பரன்நற் ருளிணையே நினைந்துருகும்
சிந்தையுளான, செந்த மிழ்க்கண்
பற்பலநன னூல்விளங்கத் தனபொருளாற்
பதித்தவள்ளல், பாக னேரிப்
பொற்புறுநற் கொழுகொம்பாய்ப் புலவர்படர்
விசுவநாத பூமன், ஈசர்
அற்புறுநல் வாடாத மலர்மங்கை
அருளாலே பெருகி வாழி!

—விருதுநகர், வித்துவான் அ. இராசக்கோட்டியப்ப பிள்ளை.

௧. தாய்மொழியாம் தமிழ்மொழியும் தக்கபுகழ்ச் சிவநெறியும்
தரணி தன்னில்
தூய்மையுடன் இலங்குதறகுத் தொண்டுபல இயற்றிடும்சீர்த்
தோனறலே! நல்
வாய்மொழியாங் குறளாதி வளர்சைவ நூல்களெலாம்
வகையாய்க் கற்று
வாய்மையுறும் திருக்காசி விசுவநா தப்பெரியோய்!
வாழ்க வாழ்க.

௨. நாட்டார்கள் உளங்கவரும் நற்சிலம்பு
அகம்முதலா நல்ல நூற்குத்
தேட்டங்கள் மிகஉதவி செந்தமிழ்க்கோர்
புரவலராய்த் திகழுஞ் செலவ!
நாட்டாரின் உரைநயத்தை நாட்டியசீர்க்
கலைவல்லோய்! நனறே என்றும்
ஈட்டுகநற் புகழ்ச்செல்வம் எந்நாளும்
இறையருளால் இனிது வாழக.

—மதுரை, தி. கி. சுந்தரமூர்த்தி.

௧. செல்வமிகப் பெற்றபயன செந்தமிழ்க்கும்
சிவநெறிக்கும் செலவு செய்தல்
நல்வகையில் அறிவுநலம் நாடுபெறத்
தொண்டாற்றல் நமக்கிங் கெனறு
கல்விமிகு சான்றோர்கள் கருத்தினிக்கச்
செய்காசி விசுவ நாத!
தொல்வளமை சால்வணிகத் தோன்றல்! அறச்
செம்மல்நலத் தூயோய் இங்கே!

உ. வலியகருத் தெளிமைவளம் இனிமையெழில்
ஓசைநயம் வயங்கும்,சங்கப்
பொலிவுறு நூல் நலமிகுநற் காப்பியத்துள்
பொருளுணர்ந்த புலவோ ராலும்
நிலையுணர்நா வலராலும் உரைவகுத்துப்
பதிப்பித்து உயர்ந்தோய் நாளும்
மலிவுடனம் மக்களெலாம் பெற்றுபயன்
கொளச்செய்த வள்ளால் வாழி!

—கரந்தை, ந. இராமநாதன்.

க. வாழி காசி விசுவ நாத வணிகர் கோவின் மணிவிழா
வாழி யவர்தம் மனைவி மக்கள் மற்றுமுள்ள சுற்றமும்
வாழி யாயி ரம்பி றைதொ ணங்கு நல்வி ழாச்செய
வாழி தமிழை வளர வைக்கும் வள்ளல் அவரின் உள்ளமே.

உ. பாக னேரி வணிக இளைஞர் பழகி யறிவு பெறுவதற்
காக நிறுவு செய்ய தமிழின அவைநி ரம்பு நூலகம்
மேக மென்ன வரைவிலாது வேண்டும் அறிவு நல்கியே
நாக நாடு வெல்க வெல்க நானி லத்து வளர்கவே.

—அண்ணாமலைப் பல்கலைக்கழகம், மு. அருணாசலம் பிள்ளை.

செந்தமிழும் சைவமுமே சீரா வளர்ந்தோங்க
நந்தம்கூப் பைய வேள் நண்பனுடன்—சிந்தைமகிழ்
காசீவிச்வ நாதன் கழகத் தமர்ந்திருந்தான்
மாசில் தலைவனாய் மாணபு (க)

—சென்னைமாகாணத் தமிழ்ச்சங்கம், இ. மு. சுப்பிரமணிய பிள்ளை.

தண்ணார் தமிழ்க்கு நற்றொண்டு
தணியா தாற்றுந் தவசெல்வா,
சமயந் தனையும் மறவாது
தமிழ்போல் வளர்க்கும் பெரியோயே,
நண்ணும் பாக னேரியிலே
நாளும் அறிவு பரவிடவே
நன்னூல் நிலையம் ஏற்படுத்தி
நடத்தி வாழும் புரவலனே,
எண்ணி மகிழ யாவருமே
இந்நாள் அறுப தாண்டுற்றோய்
இனிய தமிழை வளர்த்துவரும்
எழில்நூற் பதிப்புக் கழகத்தைக்
கண்ணாய்ப் போற்றி நடத்திவரும்
காசி விசுவ நாதவள்ளால்,
கடவுள் அருளால் பல்லாண்டு
கவினாய் வாழி வாழியவே!

—மதுரை, பேராசிரியர் அ. கி. பரந்தாமனார்.

கற்பகவி நாயகர்சீர் காட்டுமரு தீசரவர்
அற்புவா டாமலர்த்தா யாரருளால்—பற்பலசீர்
நண்ணுமெழிற் காசிவிஃச்வ நாதவேள் வாழியரோ!
கண்ணு மணிவிழாக் கண்டு.

—பாலகவி வயிநாகரம், வே. இராமநாதன் செட்டியார்.

வாழிய செந்தமிழ் வளர்த்துறுங் கழகம் !
வாழிய பாக னேரிவாழ் வள்ளல் !
சீர்சால் சைவசித் தாந்தக் கழகம்
பேர்பெற வளர்க்கும் பெருந்தகைத் தலைவர்
பாகுநோ தமிழ்நூல் பலவெளி யிட்டோர்
பாகனே ரியிலே பண்புற வாழ்வோர்
வாணிக நெறிநலம் பேணுறு செல்வர்
புலவர் போற்றும் பைந்தமிழ்ப் புரவலர்
நலமிகு காசி விசுவ நாதர்
ஆறுபத் தாண்டிங் கணிபெற வாழ்ந்து
பேறுசெந் தமிழுறப் பெரும்பணி பலவும்
எல்லா நெறியினும் இயலுறப் புரிந்தனர்
நல்லா ரமிவர் நலமெலாம் பெற்று
வேண்டும் பணிபல ஈண்டுறப் புரிந்து
வாழிய முருகன் அருளால் !
வாழிய நீடு ! வாழிபல் லாண்டே !

—சென்னை, புலவர் அரசு.

## எழுசீர்க்கழி நெடில் ஆசிரியம்

க. தென்னிந் தியசைவ சித்தாந்த நூற்பதிப்
புக்கழகத் தலைவரீ
பன்னுமதன் வளர்ச்சிகண் டுறப்பிளர் பங்குமுதல்
இரட்டிக்கப்பணணினை
சென்னைமா நிலமாட்சி செயமேதி தலைமையில்
சீர்மறை மலையடிகள்பேர்
மனனுநூல் நிலையமொன் றும்வகுத் தேதமிழ்
வளர்க்கவு முன்வந்தனை.

## வெண்பா

உ. பாகனேரி வாழ்வணிகக் காசீ விஸ்வ நாததமிழ்ப்
பாகமுணர் வாயிசைநற் பண்புணர்வாய்—நாகவன
நாதன் பெருநாவலனசொல் தமிழிசைபோல்
போதமுற வாழிநலம் பூத்து.

—நெல்லை, பு. சி. புன்னைவனநாத முதலியார்.

## நேரிசையகவல்

சீர்கொண்ட செந்தமிழ்த் தென்பாண்டி நாட்டிற்
பார்கொண்ட பல்வளம் பயில்பாக னேரி
நனனகர் வாழுஞ் செல்வ நலத்தோன்
மன்னுதன வைசியர் மாண்குல முதித்தோன்
செந்தமிழ்ப் புலமையிற் சிறந்தோ னன்றியும்
நந்தமிழ் மொழியை நாளும் புரந்து
புரவலர் என்னும் பட்டம் பூண்டோன்
இரவல ரெவர்க்கு மீந்தருள் வள்ளல்
சீர்த்தியே பொருளெனத் தேடிய செம்மல்
பார்த்தவர் முகமலர் விக்கும் பான்மையோன்

காசி விசுவ நாத னென்னப்
பேசும் பெயர்பெற் றுயர்ந்த பூமாற்கு
மூவிரு பானுண் டாயதை முன்னி
மேவும் விளம்பி கன்னித் திங்கள்
ஐயைந்து நீலனு ளதிலுத் திரமும்
செய்ய மகரலக் கினமுஞ் சேர்நாள்
நிறைநாள் விழாவை நிகழ்த்தக் கருதி
அறையுஞ் செய்தி யழைப்பிதழ் விடுத்துச்
சுற்றம் நண்பர் சூழ்ந்து வாழ்த்த
மற்றும் பல்வகை வாச்சிய முழங்க
மறித்தகை நோக்கின் மங்கையர் பாடக்
குறித்தநாண் மணிவிழாக் கொண்டா டினரால்
வெள்ளை யப்பமன் முருகப்பவே ளென
விள்ளும் பெயர்பெறு மேலோ ரன்னவன்
அருமைப் புதல்வ ரிருவரும் பெருமைசால்
மணிவிழாக் கண்ட வண்மைக் குரிசில்
எல்லாம் வல்ல விறைவ னருளாற்
பல்லாண்டு வாழியர் பார்மிசைச்
செல்வ மக்கள் சுற்றமொடு செழித்தே

—சென்னை, பண்டித வித்துவான், தி. சங்குப்புலவர்.

பாரில் புகழ்பெறு பாக னேரியில்
சீர்பெற் றிலங்கும் செந்தமிழ்ப் புரவலர்
மாசிலாச் சைவக் கழகத் தலைவர்
காசி விசுவ நாதன் செட்டியார்
அறிவும் அறனும் அரிய பல் நெறியும்
செறியும் சீரியர் தெய்வநற் றொண்டர்
அரும்பெரும் பொருளை அரிய நூல் நிலைக்கெனத்
தரும்பெரும் வள்ளல் தண்ணளி மிக்கோன்
அறுபதாம் ஆண்டு அமைவுறப் பெற்றோன்
மறுவிலா மணிவிழா மகிழ்வுடன் பொலிக.
மேலும் நூறாண்டு மேன்மையாய் வாழ்ந்து
சாலத் திருப்பணி சான்றோர் ஏத்த
ஆற்றி அறத்தொடு வாழ இறைவனைப்
போற்றி வாழ்த்தி வழுத்துதும் யாமே.

—நாகர்கோவில், ஆறுமுக நாவலர்.

கன்னித் தமிழ்புரக்கும் காசி விசுவநாத !
மன்னுந் தமிழ்ப் பணியால் மாண்புற்றாய்;—மின்னும்
மணிவிழாச் செல்வ! நீள் வாழ்நாள் பெருகி
அணிவிழாக் காண்க! அமர்ந்து.

காவலரும் நாவலரும் கற்றதவ மாமுனியும்
நாவன்மை யோடு நயந்தேத்தி—மேவரிய
பொன்னுடை போர்த்தும் பொலிவார் மணிவிழவை
என்னுவால் ஏத்தலெளி தே !

—நெல்லை, அ. க. நவநீதகிருட்டிணன்.

---

# வாழ்த்துரைகள்

*சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தலைவரும், தமிழ்ப்புரவலருமான உயர்திரு வெ. பெரி. பழ. மு காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களின் மணிவிழா அழைப்பிதழ் கிடைத்து மகிழ்ந்தோம். அன்னார் நமது சைவ சமயத்திற்கும், தாய்மொழிக்கும், இதுவரை செய்து வந்திருக்கும் சேவைகளைப் பெரிதும் பாராட்டுகிறோம் அங்கயற்கண்ணி பங்கனும் ஆலவாய் அண்ணலின் இன்னருளால் அவர்கள் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து நமது சமயமும் தமிழும் தழைத்தினிதோங்கப் பணிகள்பல புரிந்துவருமாறும் மற்றவர்களுக்கோர் எடுத்துக் காட்டாகத் திகழுமாறும், ஆசீர்வதித்த விபூதிப் பிரசாதம் இத்துடன் எழுந்தருளச் செய்திருக்கிறோம். எல்லோரும் திருவருட்கவசமாக அணிந்து இன்புறுவீர்களாக*

*மதுரையாதீனம் திருப்பெருந்திரு,*

**ஞானசம்பந்ததேசிக பரமாச்சாரிய சுவாமிகள்.**

*ஸ்ரீ சுந்தரேஸ்பரர் கிருபையால் வெள்ளையப்பன் எழுதிக் கொண்டது. இப்பவும் அவிடம் நாளது மீ 4 உ தங்கள் அறுபதாம் ஆண்டு திருமண விழாவிற்கு அன்புடன் அழைத்தனுப்பிய கடிதம் பார்த்து மிகமிக அகமகிழ்ந்தேன்.*

*பெரிய செட்டியாரவர்கள் நீண்ட ஆயுசுடனிருந்தும் செய்ய இயலாமலும் செட்டியாரவர்கள் செய்து கொள்ள இருக்க இயலாமலும் போய்விட்டதைத் தாங்கள் ஆயுசுடனிருந்து செய்து கொள்வதை உடன் பிறந்தவனாக இருந்தும் பார்க்கக் கொடுத்துவைக்கவில்லை என்ற வருத்த மதிகம் நான கொடுத்துவைத்தது அவ்வளவுதான்.*

*ஸ்ரீ இறைவனருளால் பெரியோர்களால் பார்த்த நேரப்படி தாங்கள் தம்பதி சமேதராயப் பெரியோர்களும் பந்து மித்திர சுற்றத்தார்களும் சிநேகிதர்களும் புத்திர பௌத்திர பௌத்திரிகளும் புடைசூழ இருந்து அறுபதாம் ஆண்டுத் திருமணவிழாவும் இனிதே சிறப்புடன் நடந்து தம்பதியுடனும் புத்திர பௌத்திரர்களுடனும் நீண்ட ஆயுளுடன் வாழும்படி எல்லாம்வல்ல முருகனைப் பிரார்த்திக்கிறேன.*

**—இரங்கோன், மு. வெள்ளையப்பன்.**

*கழகத்தலைவர் ஸ்ரீமான் காசிவிசுவநாதன் செட்டியார் அவர்கள் தமிழ்க் கலவிக்கும், தமிழ்நாட்டு மேன்மைக்கும், தமிழ்நாட்டுக் கிரந்தாலய சேவைக்கும் செய்துவரும் பணியை நாம் எல்லோரும் மெச்சுகிறோம். கடவுள் அவருக்கு நீண்ட வாழ்நாளையும், நம்நாட்டு ஊழியத்தில் ஈடுபடச் சாதனங்களையும் குறைவில்லாமல் அனுக்ரகம் செய்ய வேண்டும் என்பது பிரார்த்தனை*

**—டாக்டர், பத்மஸ்ரீ எஸ். ஆர். அரங்கநாதன்.**

*உயர்திரு செட்டியார் அவர்கள் சீரிய நல்லொழுக்கத்தினர்; தூய நெஞ்சினர்; தமிழார்வம் மிக்கவர். இவர்கள் அருந்தமிழன்னைக்குச் செய்துவரும் தொண்டு செல்வம் சிறந்தோர் பின்பற்றுவதற்குரிய மாண்பமைந்தது. அவர்கள் பல்லாண்டு வாழ முத்தமிழனனையின் திருவடிகளைப் பணிகிறேன்.*

**—சிங்கப்பூர், பேராசிரியர், மு. இராசாக்கண்ணனார்.**

பிறர்க்கென முயலும் பெருந்தகையீர்! கழிந்த அறுபானி யாண்டும் தாங்கள் இயற்றிவந்த நற்றொண்டுகளையே தொடர்ந்து செய்து வாழ திருவருள் புரியுமாறு அம்பலவாணர் பொன்னடிகளை வாழ்த்தி வணங்குகின்றேன்.

—பெருமழைப் புலவர், பொ. வே. சோமசுந்தரனார்.

சிலப்பதிகாரம், அகநானூறு, மணிமேகலை, கலித்தொகை ஆகிய இந்த நூற்களை நினைக்கும்போதும் பாடம் நடத்தும் போதும் காசி விசுவநாதரின் அருள் நிரம்பிய பெருந்துணை கையிலும் மனத்திலும் அருமையான நூல்களாக வந்து நிற்கின்றன பெருந்தகை காசிவிசுவ நாதர் மேலும் பலதொண்டுகள் புரிந்து பல்லூழிவாழ வாழ்த்துகிறேன்.

—பேராசிரியர், ந. சேதுரகுநாதன்.

'செந்தமிழ் மொழியின் செல்வி தெரிக்கும் நன்னூல் பலவற்றை நாவலர் நாட்டார் போனற பேரறிஞர்களின புத்துரையுடன பெரும் பொருட் செலவில் வெளியிடுவித்துத் தமிழணங்கின நெஞ்சம் தழைத் தோங்கச் செய்த பெரியார் வாழ்க பல்லாண்டு!' என மனமார வாழ்த்தி அமைகின்றேன்!

—வித்துவான், மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை.

தங்களுடைய செல்வத் தொண்டால் செந்தமிழ் நூல்கள் மிகப் பல உரை வெளியீடும் ஆராய்ச்சி விளக்கமும் பெற்றன. தங்களுடைய நன் முயற்சியால் பாகனேரி, உயர்ந்த மிகவும் அரிய நூல்கள் நிறைந்த நூல் நிலையம் பெற்றுப் புகழ் பெற்றது; தங்கள் தலைமையில் தென னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சிறந்த பணி புரிந்து திருவும் உருவும் பெற்றுத் திகழகிறது தங்களுடைய சிறப்பு மேன் மேலும் ஓங்குக எனத் திருவருளை வாழ்த்தி வணங்குகிறேன்

—சித்தாந்த கலாநிதி, ஔவை, சு. துரைசாமி.

கீழ்க்கண்டவர்களிடமிருந்தும் வாழ்த்துச் செய்திகள் வந்துள்ளன:

மயிலை சிவமுத்து, கழகப்புலவர் ப. இராமநாதபிள்ளை, பேரா சிரியர் இலக்குவனார், மதுரை கருமுத்து தியாகராசச் செட்டியார், இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகர், அ. மு. பரமசிவாநந்தம், பெரியார். ஈ. வே. ரா, கி. ஆ. பெ. விசுவநாதம், டி. வி சதாசிவ பண்டாரத்தார், டாக்டர் துரையரங்கனார், பேராசிரியர் எஸ். ஆறுமுக முதலியார், காரைக்குடி. ச கணேசன், வ. சுப. மாணிக்கம், சுப. சேவு மெ. மெய்யப்பச் செட்டியார், பண்டிதை கிருஷ்ணவேணி அம்மையார், மறை மாணிக்கவாசகம், மறை திருநாவுக்கரசு, மயிலை, சீனி வேங்கடசாமி, கரந்தை, சி. வேதாசலம், பி ஏ, பி எல். மற்றும் சிங்கப்பூர் இலங்கை முதலிய விடங்களிலிருந்தும் தமிழகப் பெருமக்கள் பலரிடமிருந்தும் தந்தி மூலமும் கடித மூலமும் நூற்றுக்கணக்கான வாழ்த்துக்கள் வந்துள்ளன.

## இந்தியாவிலும் வெளிநாடுகளிலும்

# நூல் நிலையத் தொண்டு

[டாக்டர், பத்மஸ்ரீ, எஸ். ஆர். அரங்கநாதன் அவர்கள்]

(செல்வி, சிலம்பு-௩௩, பரல்-௨, அ௨-ஆம் பக்கத்தொடர்ச்சி)

சென்னையில் இப்புது ஆக்கச்செயல் நிறைவேறிய வகை இதுவே. 1946-ஜூலையில் நான் சென்னை வரநேர்ந்தது. இங்கே அமைச்சரை (அந்நாளையக் கல்வியமைச்சர் அவிநாசிலிங்கனுரை) நான் சந்தித்தேன். 'விடுதலையுரிமையுடையவரானபின், நாம் நம் மக்களுக்கு நூலகப்பணியுரிமையும் தரவேண்டாமா?' என்று அவர் என்னிடம் கேட்டார். இத்தகைய ஒரு நல்ல வாய்ப்புக்கே நான் காத்திருந்தேன். நான் அவரிடம் ஒரு நூலகக் கருநிலைச் சட்டத்துக்கான முதல்நிலைப் படிவம் வகுத்தளித்தேன். அத்துடன் நூலக வளர்ச்சிக்கான திட்டமொன்றும் அது வகையான நிதிமுறை அறிவிப்பு முதலான துணைக்குறிப்புக்களும் வழங்கினேன். இதை அவர் ஆர்வத்துடன மேற்கொண்டார்.

பொறுக்குக்குழுப் படியில் சட்டமுதல்படிவம் எவ்வளவோ சிதைவுற்றுலும, அச் சட்டததின்படி யமையும் ஒழுஙகுமுறைகளை அவற்றின் கெடுவிளைவுகளுக்கு ஈடுசெய்யும் முறையில் வகுத்துத்தரும்படி அவர் என்னிடம கூறியிருந்தார். இநத ஒழுங்குமுறைகள் அரசியலாரின் ஒப்புதல்பெற்றன.

இப்போது இதே நூலகச் சட்டம் (முன்பு சென்னையின் பகுதியாக இருந்த) ஆந்திர அரசிலும் நடைமுறையில் உள்ளது. தென்கன்னடம், பெலலாரிப் பகுதிகள் வாயிலாக, அது மைசூர் அரசுக்கும் பரவியுள்ளது மலபார்ப்பகுதி வாயிலாக அது கேரளத்தாலும் மேற்கொள்ளப்பட்டுள்ளது. தவிர, அடுத்திருந்த பழைய ஐதராபாது அரசுக்கும் இத்தகைய ஒரு நூலகச் சட்டம் மேற்கொள்வதற்குரிய உயிர்த் தூண்டுதல் தரப்பட்டுளது. அங்குள்ள கல்வியமைச்சரான திரு ஏ்போடே கோபால ராவ் அவாகளின் வேண்டுகோளின்படி ஐதராபாதுக்குரிய நூலகச் சட்ட முதற்படிவத்தையும் நான் உருவாக்கிக்கொடுத்தேன்.

அணிமையில் வங்க நூலகத் திருக்கூட்டத்தின் வேண்டுகோளுக்கிணங்க நான் இன்னுமதுணிகரமாக முனைந்துசென்று, நாம் இலக்காகக்கொண்டு நாடும் ஒப்பியல் நெறியின் உருப்படிவத்துக்கு (சமதர்மச் சட்டம்) இசையும் வகையில் வங்கத்துக்

கான ஒரு நூலகச்சட்ட முதற்படிவமும் நூலகவளர்ச்சித் திட்டமும் வகுத்துள்ளேன்.

வங்கக் கல்வியமைச்சரான திரு. சௌதரி தாமே தம் தனிப்பட்ட முறையிலே நூலக வளர்ச்சியில் கருத்தும் செயலீடுபாடும் உடையவர். அவர் அதன் முன்னேற்பாடுகள் பற்றி என்னுடன் கலந்துபேசி இப்போது அதன் மீது மேல்நடவடிக்கைகள் எடுத்துவருகிறார்.

நடுமண்டலத்தில் (மத்தியப்பிரதேசத்தில்) சென்ற டிசம்பர்த்திங்களில் நடுமண்டல நூலகத் திருக்கூட்டம் நிறுவும் முயற்சியில் நான் பங்குகொண்டேன் அதற்கு என் வேண்டுகோள்மீது அம்மாகாண ஆட்சித்தலைவர் தலைவராயிருக்க இசைந்தார். அதன்பின் அம்மண்டலத்திலும் நூலகச் சட்டம் வகுக்கப்பட்டு நூலகச் சேவையை ஓர் அரசியல் பொதுச் சேவையாக்கும் நிலை குதிர்ந்தது. இவ்வரசுக்கும் நானே நூலகச்சட்ட முதற் படிவம் வகுத்தேன். திருவாளர்கள் திருவேதி, கான் ஆகிய என் இரு மாணவர்களும் இருபத்திரண்டு ஆண்டுகளுக்குரியதொரு நீண்டகால வளர்ச்சித்திட்டம் உருவாக்கி அதன் உதவியால் சட்டத்தை உறுதியுடனும் வளமான முறையிலும் செயல் முறையில் நிறைவேற்ற முன்வந்துள்ளனர்.

1951-இல் பாங்காக்கில் கூடிய யூனெஸ்கோவின் (உலகநாடுகள் கல்வி சமுதாயப் பண்பாட்டு அமைப்பின்) திணைநிலை மாநாட்டில் நூலகச் சேவை நூலகச் சட்ட உதவியுடன் அரசியல் பொதுமுறைத் திட்டமாகவேண்டுமென்று எல்லா உறுப்பு நாடுகளிடமும் இந்தியா கோரிக்கை செய்துள்ளது. உலகின் எல்லா நாடுகளிலும் இலவச நூலகப்பணி ஒரு பொது அரசியல் திட்டமாகவேண்டுமென்பதற்கு உலகநாடுகளின் நூலகத திருக்கூட்டங்களின் இணைப்புக் கழகம் (International Federation of Library Associations) ஆதரவு தெரிவித்துள்ளது. உலக நூலகத்தாரின் முதல் பேரவை (First World Congress of Librarians) 1955 செப்டம்பரில் பிரஸல்ஸ் மாநகரில் கூடிற்று அதில் இந்தியாவின் தூதுக்குழுவினர் என்ற முறையிலே உலகமக்களுக்கு இலவச நூலகப்பணி நலம் வழங்குவது அரசியல், பொருளியல், சமூகவியல் ஆகிய எல்லா வகைகளிலும் மிக அவசரமான தேவையாகும் என்ற முழுநிறைவிரிவான ஒரு தீர்மானத்தை நான் கொண்டுவந்து நிறைவேற்றினேன்.

இன்றுமுதல் செயல்தொடக்கம்பெறும் மறைமலையடிகள் நூலகம் உலக அடிப்படையில் விடுக்கப்பட்ட மேற்கண்ட வேண்டுகோள் நிறைவேறுவதற்கு மேற்கொள்ளப்பட வேண்டும்

பொறுப்பில் தென்இந்திய சைவசித்தாந்த நூற்பதிப்பு வரை நிலைக் கழகம் மேற்கொள்ளும் ஒரு பங்கு ஆகும. இவ்விடத்தி லுள்ள சென்னை நகர நூலக ஆட்சியுரிமையாளர் இதற்கு எல்லா வகை ஆதரவும தரக் கடமைப்பட்டவர். அத்துடன் நகரத்தி லேயே நூலகமுறைக்கு இதனை ஒரு தலை மாதிரிப்படிவமாகக் கொள்வதன்றி, அதன் தனித்தன்மையிலும் நடைமுறைகளிலும் வேறெவ்வகையிலும் தலையீடு ஏற்படாமல் அவர் பார்த்துக் கொள்ள வேண்டியவராவர்.

## துணையுதவிச் சேவையே இயக்க மையமாய் அமைதல்வேண்டும்

நூலகப்பணிபற்றிய ஒரு முக்கியமான தனி இயல்பை நம் திணை நிலை நூலக ஆட்சியாளரும், அரசியல் நூலக ஆட்சி யாளரும் கருத்தில் கொள்ளவேண்டும் படக்காட்சியும் நாடக மும் உணர்ச்சி வழி செயலாற்றி இயல்பாகச் செயல்பட்டு வரு கின்றன. நூலகம் இவைபோன்றதன்று. அது அறிவாற்றலின் செயலால் வினைப்படுவது. உணர்ச்சி விசையியக்க முடைய தென் பதை யாவரும் அறிவர். ஆனால் அறிவு உணர்ச்சி போன்ற விசைவேகமுடையதன்று. தூண்டுதலின்றி எளிதில் செயப் படாதது உணர்ச்சிகள் தாமாக முனைந்தியங்கும் கிளர்ச்சிச் செயலுடையன. இதன்வலு தேவைக்கும் மேற்பட்டு வலிப்பாகக் கூட மாறுவது. இதற்கு நேர்மாறாக, அறிவு பேரளவில் செய லின்மையுடன் தொடர்புடையது. அறிவாற்றலில் மனித சரா சரி எல்லை கடந்த மாபேரறிஞர்கள்கூட அதற்கிணையான மலை போன்ற மடிமையுமுடையவராயிருப்பதால் செயலற்றவராகவோ, செயலூரமற்றவராகவோ நிலவுவதை நான் கண்டிருக்கிறேன்.

மேலும் நூலகம் தீர்க்கவிரும்புவது அறிவுப்பசியை. இது உடற்பசியிலிருந்து பெரிதும் வேறுபட்டது. எது செய்தும் உணவு தேடிப்பெறும்படி உடற்பசி மனிதனைத் தூண்டவல்லது. ஆனால் அறிவுப்பசியோ இவ்வளவு முனைப்பானதும் அன்று. மின்னல்போல் கணந்தோன்றிக் கணத்தில் மறைவதும் கூட. அது தோன்றிய நேரத்தில் அன்பாதரவுடனும் மென்னயத்துட னும் யாராவது ஊட்டினாலன்றி அது நிறைவுறாது. அது அவ் வளவு சிறுபொழுது சிறிதளவு தோன்றி மறைந்துவிடுவது. எனவேதான் நூலகப்பணி மக்கள் விரும்பி ஏற்றுக்கொள்ளத் தக்கதாக அமையவேண்டுமானால், அறிவுப்பசி வரும்நேரமும் வாய்ப்பும் அறிந்து ஊட்டும் செவிலியர்களாக நன்குபயிற்சிபெற்ற நூலகத்துணைவர்களை உருவாக்கி, அவர்களைக்கொண்டு செய லாற்றுவது அவசியமாகிறது.

வறிதே நூலகச் சட்டம் நிறைவேற்றி நூலக வரியும் பிரித்து விட்டு, விதிகளையும் ஒழுங்கு முறைகளையும் பேணிக்காக்க

உணர்ச்சியற்ற ஒரு பணித்துறைவகுப்பை நிறுவிவிட்டால் போதும் என்று நினைப்பது நூலகச் சேவையின் உயிருக்கு உலை வைத்ததாகவே வந்துமுடியும்.

சென்ற டிசம்பரில் நான் விதர்ப்பதேசத்திலுள்ள மாவட்ட நூலகமேற்பார்வையாளர்களைச் சந்தித்தேன். அச்சமயம் 'உங்கள் முக்கிய வேலை என்ன?' என்று கேட்டேன். சூதுவாதற்ற அந்த மேற்பார்வையாளர்கள் 'நாங்கள் நூலகங்களை மேற்பார்வையிடுகிறோம்' என்றார்கள். 'என்னென்ன மேற்பார்க்கிறீர்கள்?' என்று வினவினேன். 'சேமப்பதிவேடு, வெளியீட்டுப்பதிவேடு, கணக்குப்பேரேடு முதலிய யாவும் மேற்பார்க்கிறோம்' என்பதே அவர்கள் விடையா யிருந்தது. 'அந்தோ பாவம்! அப்பாவி நூலகம், அப்பாவி நூலகத்தார்களே! எப்போதாவது நீங்கள் வாசகர்களைச் சந்திப்பதுண்டா?' என்று மீண்டும் கேட்டேன். 'இல்லை, அதற்கெல்லாம் நேரம் எங்கே இருக்கிறது! எங்கள் மேற்பார்வை வேலையே எங்கள் நேரத்தையெல்லாம் கொள்ளை கொள்கிறது' என்றனர் அவர்கள்.

இவர்களைக் குறைசொல்லிப் பயனில்லை. இவர்களால் வேறு எப்படித்தான் செய்ய முடியும்? பள்ளிக்கூடங்களின் துணைமை மேற்பார்வையாளர் குழாத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அவர்கள். மேலாண்மை நடத்துதல், பணிவு எதிர்பார்த்தல் முதலியவற்றிலேயே பழகிப்போனவர்கள் அவர்கள். அவற்றிலேயே ஊறித் தோய்ந்து முதுமைப்பட்டுவிட்டவர்கள். அன்பாதரவு, கனிவு நயம் ஆகியவற்றையே உயிரடிப்படையாகக் கொண்ட நூலகப்பணியைப் புதிதாகப் பயில்வதற்கு இத்தகையவர்களால் ஒருபோதும் முடிவதில்லை ஏனெனில் நூலகத்துணைவரின் முதல் இன்றியமையாத் தகுதி சமூகப்பணி, அதற்குரிய அன்புப்பாசம், புன்னகைதவழ்ந்த இன்முக உரையாடல் முதலிய பண்புகள் இயல்பாக அமையவேண்டுபவை, பயிறசியால் மட்டும் வருபவையல்ல. அத்துடன நூலக அறிவுத்துறையின் கட்டளைகள் வகையில் அவர்கள் சரியான உணர்வு விளக்கம்பெறறவரா யிருக்கவேண்டும். இறுதியாகச் சமூகப்பணிக்கேற்பப் புத்தகங்களைத் தேர்ந்தெடுத்தல், முன்னேற்பாடாக வகுத்துவைத்தல், வாசகர்களுக்குத் துணையுதவி செய்வதற்கு வேண்டிய முறையில் அவர்கள் உளப்பாங்குணர்தல் ஆகியவற்றின் நுணுக்கத்துறை நுட்பங்களில் அவர்கள் பயிற்சிபெற்றவராயிருத்தல்வேண்டும். இவை நீங்கலான வேறு எந்தத் தகுதிகளும் நூலகச் சட்டத்தின் நடைமுறையில் வந்து தலையிட்டு இந்த மூன்று உயிர்த்தகுதிக் கூறுகளையும் ஒதுக்கித்தள்ளிவிடாதபடி நம் அரசியல் நூலக ஆட்சி பார்த்துக்கொள்வது இன்றியமையாததாகும். இவ்

வுண்மை நூலகத் துணைவரிடையே கடைக்கோடிப் படியிலுள்ள துணைவருக்குமட்டும் பொருந்துவதல்ல. அதுபோலவே மறு கோடியில் நூலகங்களின் இயக்குநர் வகையிலும் பொருந்துவ தாகும்.

## நூலகத்துறையின் ‘ஏன்’ என்ற வினு

இன்று மேலாண்மை வகிப்பவர்களும் அனுபவமிக்க பணி முதல்வர்களும் பெரும்பான்மையாகத் தம் இளமையிலோ, இப் போதோகூட, நூலகப்பணியின் அனுபவம்பெறும் வாய்ப்பு அற்றவர்களே. 40 வயதுக்குமேற்பட்ட தரத்தினராகிய நம்மில் பலர் நம் போதாக்குறையால் இத்தகையவர்கள்தாம. பிரிட்டிஷ் ஆட்சியிலே நூலகப்பணியுரிமை மறுக்கப்பட்டிருந்தது இதற் குரிய முக்கிய காரணம் ஆகும். ‘நூலகப்பணியில் எவ்வளவு இழப்புநேரினும் அதனை ஏற்று அதை இலவசமாக்குவது அத னைத் திறந்தவழி யரங்குமுறைப்படுத்துவது, திணைநிலை ஆட்சித் துறைகளை (Local Bodies) கட்டாயப்படுத்தி மக்கள் ஒவ்வொரு வரையும், எல்லாரையும் வலியச்சென்றணுகியாவது அவர் களுக்கு இலவசமாக நூலகப்பணி அளிக்கும முறையில் நூலகச் சட்டம் இயற்றுவது, நூலக இயக்குநர்படியிலிருந்து கடைக் கோடி நூலகத்துணைவர் வரை பலபடியான நூலகப் பணியாளர் குழுவுக்குத் தனிப்பயற்சியளித்து அமர்விப்பது, பழைய பணித் துறை மேலாண்மை மரபும் பாங்கும் முற்றிலும் விலக்கிச் சமு தாயப்பணியின் பண்புநிரம்பிய நூலகப்பணிக்குழு அமைப்பது ஆகிய இவைபோன்ற செய்திகள் பற்றி இவ்வளவு பேச்சு ஏன் எழுகிறது’ என்று இத்தகையவர்கள் இப்போது வியப்படையவே இடமுண்டு ஆனல் இப்பெரு மாறுபாட்டுககான ஆழ்ந்த அடிப் படைக்காரணங்கள் உண்டு. இவற்றைச் சமுதாய, பொருளியல், அரசியல், கல்வித்துறைகளின் தளஙகளிலே சென்றுதான் காணவேண்டும்.

## நூலகப்பணியின் சமூகத்தேவை

ஆக்க நல அரசே நம் அரசியல் குறிக்கோள் என்று நம் அரசியல் சட்டம் கூறுகிறது. இது ஒரு பெருமைக்குரிய சமு தாய நோக்கம்தான். ஆனல் இனச்சமுதாயத்தில் ஒவ்வொரு குடிமகனும் இடைவிடாத அறிவுணர்வுடையவனுக இயங்கா விட்டால், சமுதாய ஆக்கம் ஏற்படுவது அரிதினும் அரிது. மக்களை அறிவுணர்வுடையவர்களாக்குவதற்குரிய வழிகளில் முயன்று பலவெற்றி தோல்வி அனுபவங்களினின்று கண்ட அனுபவத்தால் அவ்வழிகளில் இன்றியமையாச் சிறப்புடையது

இலவசப்பொது உதவிப்பணியே என்பதும், இது ஆணையாதிக்க அடிப்படையில் இயங்கமுடியாதது, அன்பு நயமான தூண்டுத லாலேயே முடிவது என்றும் காண்கிறோம்.

## பொருளியல் இன்றியமையாமை

மக்கள் பெருக்க நெருக்கடி ஒருபுறம், உணவு, உடை, உறையுள், மக்கள் போக்குவரவுச் சாதனங்கள் முதலியவற்றின் வகையில் தேவைப்படும் இயற்கை மூலப்பொருள்கள், இயற்கை சார்ந்த மூலப்பொருள்கள் ஆகியவற்றின் அளவு மற்றொருபுற மாக, இவற்றிடையே இருக்கவேண்டிய சரிஇசைவு நிலை படு மோசமாகச் சரிந்துள்ளது. இதைச்சரிப்படுத்த இன்னும் மிகுதி யான இயற்கைப் பொருள்களை உண்டுபண்ணியாகவேண்டும். இவற்றின் குறை நிரப்பிச் சரிசெய்யும் வகையில செயற்கையாக உருவாகும் பொருள்களும வேண்டப்படுகின்றன. இவ்விரண்டு வகைக்கும் புததாராய்ச்சியாளர், பொதுநிலைததொழில் ஊழியர் ஆகியவர்களிடையே அறிவார்நத ஒத்துழைப்பும் கூட்டுழைப்பும் அவசியமாகும். இத்துடன் ஆண்டுக்கு ஆண்டு புது நுணுக்கத் துறை முன்னேற்றங்களும், புதுத்தொழில் நுட்பங்களும் வகுக் கப்படவேண்டிவருகின்றன. தொடர்ந்து இவ் வகைமுறை அறி வைப் பெற ஒவ்வொருவருக்கும் வாய்ப்புக்கள் அளிககப்படுதல் வேண்டும். இன்றைய புதிய வழக்குத் தொடரில் கூறுவதானால், வளப்பெருக்க இயக்கத்தில் ஒவ்வொருவரும் பஙகுபெறவேண்டும். அவ்வாறு பஙகுபெறத் தம் அறிவையும் திறமையையும் ஒவ் வொருவரும் எல்லாத்தொழில் துறைகளிலும், வாணிகத்துறை களிலும், அரசியல் அரங்கங்களிலும, குடும்பத்திலும், வாழ்க் கைத துறைகளிலும் உள்ள உச்ச உயர்தரப்பணியாளர் முதல் கடைசிப்படிப் பணிமக்கள் வரை ஒவ்வொருவரும் பெற்றாக வேண்டும். இந்தப் பெருக்க வள இயக்கத்துக்குச் சிறந்த செயல் முறைக் கருவியாக நூலகத்தையன்றி வேறு எதையும் கூறமுடி யாது என்பதை நம் அனுபவம நமக்குக் காட்டுகிறது

இது இங்குமட்டுமன்று, உலகமெங்கும் உள்ள மெய்ந் நிலை இதுவே. உண்மையில் 1955 செப்டம்பரில் பிரசல்ஸ்மா நகரில் நடைபெற்ற உலக நூலகத்தார், எழுத்துமூலத்தார் பேர வையில் (World Congress of Librarians & Registrars) வாதிக் கப்பட்ட முக்கிய செய்தி ‘வளப்பெருக்க விசையியக்கத்தில் நூல கப்பணியில் பங்கு’ என்பதே. தவிர, இந்த உலகபபேரவையின் தொடர்பாக இலண்டன் மாநகரில் நடைபெற்ற உலக நாடுகள் ஆய்வுமாநாட்டில் இவ்‘வளப்பெருக்க இயக்க’த்துக்குத் தேவை யான நூலகத்துறை நுணுக்க வளர்ச்சியில் இந்தியாவுக்குரிய

பங்கு' என்ற ஒரு பொருள் மட்டுமே முழுநிறை வாதமாயிருந்தது. 1957 மேமாதம் நடைபெற்ற பிந்திய மாநாட்டில் திறப்பு விழா ஆற்ற நான் அழைக்கப்பட்டிருந்தேன். இவ்வாறு வளப் பெருக்க இயக்கவேகத்தை முடுக்குவதற்குக்கூட நூலகப்பணித் துறைக்குரிய இந்திய நுணுக்கத்துறை அறிவின் முழுப்பயனை நம் தேசம் பெறுதல் இன்றியமையாததாகும்.

## அரசியற் பொறுப்பு

தேசத்தின் அகநிலைவாழ்விலும் உலகின் தேசதேசங்களிடையேயும் அமைதியையும் இன்னலததையும் வளர்க்கும் வகையில் நூலகப்பணி வரவர மிகுதியான பங்கு வகித்து வருகிறது. வெளிநாட்டுப்போர்கள் இப்போது முன்போல அரண்மனையின் உணர்ச்சி மோதல்களிலிருந்து பிறப்பதில்லை. ஒருவருக்கொருவர், நாட்டுக்கு நாடு ஐயந்திரிபு மயக்கங்களால் அச்சம் பிறக்கிறது இந்த ஐயந்திரிபுமயக்கம் அறியாமையின் விளைவு; அளவில் சிறிதாயினும் முக்கியத்துவம் உடைய ஒரு நிகழ்ச்சி இவ்வகையில் என் நினைவுக்கு வருகிறது.

1928-ல் நான் லண்டனிலுள்ள இஸ்லிங்டன் பொது நூலகத்தைப் பார்வையிட்டேன். உதவி நூலகத்தலைவர் என்னை வரவேற்பதாயிருந்தது. அவர் ஒரு மாதரசி. அவா அறைக்கு நான் இட்டுச்செல்லப்பட்ட சமயம அவர் பெரிதும் கலவரநிலைப் பட்டவராயிருந்தார். ஆனால் சிறிது உரையாடலின்பின் அவர் முகத்தில் தெளிவும் ஒளியும் தோன்றின. அதன்பின் இநதியனாகிய என்னைச் சந்திப்பது பற்றி அவர் முதலில் பெரிதும் அச்சம் கொண்டிருந்ததாக அவரே ஒப்புக்கொண்டு விளக்கம் தந்தார். இநதியராகிய நாம் ஒரு முரட்டுக்கலவரக்கார இனம் என்று அவர் கேள்விப்பட்டிருந்ததே இதற்குக் காரணம்.

'நூலகத்தொடர்புடையவர் என்ற முறையில் தங்களுக்கு நல்ல சரியான தகவல் எட்டியிருக்கவேண்டுமே! அப்படியிருக்க, அச்சம் ஏற்படத்தக்க நிலை ஏற்படுவானேன்?' என்று கேட்டேன் நான். அவர் என்னைச் செய்தித்தாள்கள் இருக்கும் அறைக்கு இட்டுச்சென்றார். ஒவ்வொரு இதழிலும் அரைப்பத்திக்குக் குறையாமல் திருவல்லிக்கேணியில் நடைபெறுவதாகக் குறிக்கப்பட்ட இந்து முஸ்லிம் கலவரங்கள் பற்றிய கோரமான விளக்கவிரிவான செய்திகள் தரப்பட்டிருந்தன. அந்தோ, நானும் அதே திருவல்லிக்கேணிக்கு உரியவன்!

இரண்டு வாரம் கழித்து வந்த நம் 'இந்து'வில்தான் பள்ளிச் சிறுவர் சண்டை தவிர வேறு எதுவும் இல்லை என்ற விளக்கம் வந்தது.

மற்றும் ஒரு செய்தி.

1931-முதல் 1944-வரை ஓர் ஆங்கிலச் சிறுவன் என் இல்லத்திலேயே தங்கி யிருந்தான். அவன் அன்னை இங்கிலாந்தில் வாழ்ந்தவர். சிறுவனுக்கு எழுதிய கடிதமொன்றில் அவர் சிறுவன் தங்குமிடம் பற்றிய பெருங்கவலை தெரிவித்திருந்தார். 'இந்திய நாட்டுமக்களில் ஒருவருடன் நீ ஏன் தங்கியிருக்கிறாய்? அவர்களெல்லாம் மனிதரைத் தின்னும் மனித அரக்கர் என்று கேள்விப்படுகிறேன். எப்படியும் கதவை உள்ளிருந்து நன்கு தாழிட்டுப் பூட்டிக்கொண்டு இரவில் படுப்பதுடன், கூடிய விரைவில் ஆங்கிலேயர் வாழும் இடத்துக்கு மாற்றிக்கொண்டுவிடு?' என்று தெரிவித்திருந்தார்.

இது மட்டுமோ?

இரண்டு ஆண்டுகளுக்கு முன் என்புதல்வன் ஜெர்மனியிலுள்ள ஒரு சிறுநகரத்தில் தஙகியிருந்தான. செய்தியிதழ்கள் அவன் படம் போட்டிருந்தன இதன் விளைவாக அவனைச் சிலர் பார்க்கவந்தனர் அவன் எங்கள் தோட்டத்தில் எத்தனை பாம்புகளை வளர்த்துவந்தான் என்று பார்க்கவும், அயலார்மீது அவன் உண்மையிலேயே நல்லபாம்புகளை ஏவிவிடுவதுண்டா என்று அறியவுமே அவர்கள் அவ்வளவு ஆர்வத்துடன் வந்தனராம்!

நாடுகளுக்கிடையே நிலவிவரும் அறியாமையின் அளவுக்கு இவை சான்றுகள் ஆகும் உலகில் அமைதி நிலவவேண்டுமானால், இந்த அறியாமை அகற்றப்படவேண்டும்.

நம் உள்நாட்டுக் கலவரங்களும் இதுபோல மக்களிடையே உண்டாகும் ஆசாபாச உணர்ச்சிகளின் உச்சநெருக்கடி நிலைகளால் ஏற்படுவனவேயாகும். இதனால் வகுப்புக்கெதிராக வகுப்பு அணிவகுத்து நிற்க நேர்கிறது குறுகிய தன்னலமுடைய கும்பல்தலைவர்களால் திறமையாக உருவாக்கிவிடப்படும் பொய்மாயப் புரளிகளுக்கு மக்கள் எளிதில் ஆட்பட்டுவிடுகின்றனர். இது அறியாமை பெருக்கி ஒருவர்பற்றி யொருவருக்கு ஐயப்பாடும் அச்சமும் வளர்க்கிறது.!

இத்தகைய அறியாமைகளைப் போக்குவது நூலகப்பணிக்குரிய இன்றியமையா அரசியற்கடப்பாடு ஆகும். ஒவ்வொரு செய்தியிலும் எல்லாத் திறப்பட்ட கருத்துக்களையும் தரும் ஏடுகளைத் தருவித்து அளிப்பதன்மூலம் இதை அது திறம்படச் செய்ய முடியும். உணர்ச்சிவழி செயலாற்றுவதற்கு மாறாக, மக்கள் அறிவு வாயிலாகச் சரியான தகவல்களை அறிந்து, ஆர்ந்தமர்ந்து அறிவுணர்வால் முடிவுக்கு வரும் திறம் பெறுகின்றனர்.

அண்மையில் சூயஸ்கால்வாய்ப் பூசலின்போது நான் பிரிட்டனில் இருந்தேன். மக்கள் திரண்டு முந்திய காலங்களில் போர் உணர்ச்சிகளில் அமளிகுமளிப்பட்டதுபோல இச்சமயம் கொந்தளிக்கவில்லை என்பது கண்டேன். ஏனெனில் அவர்கள் நூலகங்களிலிருந்து தகவல் சேகரிக்கப் பழகியவர்கள். போரின் பயனாக, 19-ஆம் நூற்றாண்டின் மையக்கால வரலாற்றடிப்படையில் சூயஸ்செய்தி பற்றிய செய்தித்தாள்கள், புத்தகங்கள் வகையில் ஒரு பெரிய நெருக்கடியே அச்சமயம் ஏற்பட்டிருந்தது. இது மக்கள் அறிவார்வ ஆவலையே காட்டுகிறது. திடீர் உணர்ச்சியில் செயலுக்குக் கிளர்ந்த உச்சப்படியிலுள்ள அரசியல் வாதிகளுக் கெதிராக, மக்கள் கருத்துப் படிப்படியாக எழுந்து எப்படி நிலைமையை மாற்றிற்று என்பதை இப்போது யாவரும் அறிவர்.

## நூலகப்பணி கல்வித்துறைச்செலவில் நல்லதோரு சிக்கனமான ஆதாயந்தரும் முதலீடு

அரசியல் கோட்பாட்டுவகையில் வருங்காலச் செயல்முறை தூண்டும் ஒரு வாசகம் நம் அரசியலமைப்புச் சட்டத்தின் 45-வது பிரிவு இந்த அரசியலமைப்புச் சட்டம் தொடங்கி இன்னும் பத்தாண்டுகளுக்குள் இந்திய அரசியல் எல்லாக குழந்தைகளுக்கும் 14 ஆண்டுப் பருவமுடியும் வரைக்கும் இலவசமான கட்டாயக் கல்வி முறையைப் பரப்புவதற்குரிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என்பதே அவ்வாசகம். இதிலிருந்து நாம் காணவேண்டும் செய்தி யாதெனில், இதுமுதல் ஆண்டுதோறும் நாம் நம் மக்களின் எழுத்துவாசிப்பறிவுவகையில் பலகோடி வெள்ளிகள் முதலீடாகப் போட இருக்கிறோம். இவ்வளவு பெருஞ்செலவில் பெற்றுத் தரப்படும் இந்த எழுத்து வாசிப் பறிவை நாம் காத்தேயாகவேண்டுமெனறு காணக் கூரறிவு வேண்டா, பொது அறிவுடைய எவரும் காணத்தகும் செய்தியே இது

இதற்கெனத் தனி ஏற்பாடு எதுவுமில்லாமல் அது தானகக் காக்கப்பட்டுவிடுமென்று கூற இடமுண்டா?

இவ்வகையில் முன் ஐம்பது ஆண்டுகள் முன்கருதலில்லாம லிருநது அதன்பின் இஙகிலாந்து கண்டுகொண்ட படிப்பினை இதோ நம் கண்முன் இருக்கிறது. முதல் உலகப்போரின் அனுபவமே அவர்கட்கு அப்படிப்பினை அளித்தது.

இப்போரில் ஈடுபட்ட வீரர்கள் யாவருமே சட்டப்படி 14 ஆண்டுப்பருவ முடியத் தொடக்கப்பள்ளிப படிப்பு முழுவதும் முற்றுப்பெற்றவர்கள்தாம். ஆனல் படைத்துறை அலுவலகத்தி

லிருந்து வெளிவந்த மிகச்சிறு கட்டளைகளைக்கூட வாசித்துணரும் ஆற்றல் அவர்களில் பலரிடம் இல்லாமலிருந்தது. போர் நடவடிக்கைகளின் போக்கிலேயே குந்தகம் விளைத்த செய்தி இது. இப்புதிய படிப்பினை தான் பிரிட்டனுக்குக் கண்விழிப்பு உண்டுபண்ணி, முதல் தடவையாக நூலகத்துறைக்கென ஒரு தனி அமைச்சர் பதவியை உருவாக்கத் தூண்டிற்று. முதல் உலகப்போரின் நடுப்பருவத்தில் பேராசிரியர் எச். ஏ. எல். ஃபிஷர் இப்பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இதுமட்டுமோ ?

படைத்துறைத் தேர்வாராய்வுகள்மூலம் இன்னொருசெய்தி வெளியாயிற்று. வாசிக்கத்தெரிந்தவர்கள் நகரப்பகுதியிலிருந்து வந்தவர்கள். தெரியாதவர்கள் நாட்டுப்புறப் பகுதிகளுக்கு உரியவர்கள். இவ்வேறுபாட்டுக்குக் காரணம் விரைவில் தெளிவுபடலாயிற்று. நகரப்பகுதிகளில் இலவச நூலகப்பணி அன்று நிலவிவந்தது. நாட்டுப்புறப்பகுதிகளில் அவ்வாய்ப்பு இல்லை.

இறுதியில் இப்படிப்பினையின் பயனாகவே நூலகச் சட்டத்துக்கு ஒரு திருத்தம் கொண்டுவரப்பட்டது. இதன்மூலம் மாவட்டக் கழகங்கள் (County Councils) நூலக வரிவிதிக்கும் உரிமை பெற்றன. நாட்டுப்புறங்களுக்கு இலவசப் பொது நூலகப்பணி பரப்பும் கடப்பாடும் அவற்றுக்குத் தரப்பட்டன.

இச்செய்தி நாம் கூர்ந்து கவனிக்கத்தக்கது. அதன் படிப்பினைகளை நன்குணர்ந்து நாம் ஆர்வத்துடன் உடனடி நடவடிக்கையில் இறங்கவேண்டும். உண்மையில் இலவச நூலகப்பணியில்லாமல் கட்டாயக் கல்விமுறை பரப்புவதென்பது கூரையில்லாமல் மண்வீடுகட்டுவதற்கே ஒப்பாகும். பிரிட்டிஷ் ஆட்சியூழியில் தேசமெங்கும் விரிவகற்சியான பள்ளிகடந்த கல்விமுறை இல்லாமலே நிலவிய நம் கல்வித்துறையின் முறைபற்றிச் சென்னை நூலகத்திருக்கூட்டத்தின் ஓவியர் தீட்டிக்காட்டிய கேலிச் சித்திரம் இதுவே.

**சென்னை அரசில் நம்முன் உள்ள உடனடிக் கடாக்கள்**

மேற்குறிப்பிட்ட குறை நேராவகையில் புற நடவடிக்கையாகச் சட்டப் புத்தகத்தில் ஒரு நூலகச் சட்டம் பதிப்பித்துவிட்டோம். தொடக்க ஆண்டுகளில் தலைமைச் செவிலியின் கவனக்கேட்டினால் அச்சட்டம் களைதட்டிவிட்டது. ஆயினும் நாளடைவில் நம் மக்களிடையே இயல்பாயுள்ள நல்லாக்கம் வாய்ந்த ஏட்டு ஆர்வம் தன் ஆற்றலைக் காட்டத் தொடங்கியுள்ளது. சட்டத்தின் நடைமுறையும் இதற்கேற்பச்

திருந்தியுள்ளது. ஆனால் இன்னும் தடைகள் தட்டுத் தடங் கல்கள் இருக்கின்றன - அவற்றுட் பல அயலாட்சியின் பணி யாளர் முறைச் செயலாட்சியின் மனித உணர்ச்சியற்ற மரமரப் பான மரபின் விளைவுகளேயாகும்

இவ்விடத்தில் எனக்கு வேடிக்கையான ஒரு பழைய நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது.

ஏறத்தாழ நாற்பது ஆண்டுகளுக்குமுன் நான் சைதாப் பேட்டை ஆசிரியர் கல்லூரியைப் பார்வையிட நேர்ந்தது. அங்கே கூரறிவும நுழைபுலமும் நகைத்திறமும் மிக்கவராக ஒரு தலைமை எழுத்தாயர் இருநதார் 'முதல்வர் எஙகே?' என்று நான் அவரிடம் கேட்டேன் அவர், சிறிது நேரம் மிரளமிரள விழித்தார் பின் 'துரையை ஆலமரததடியில் காணலாம்' என்றா 'ஆலமரத்தடியிலா? ஏன் அப்படி? அவர் வகுப் பறையில் மாணவர் அமளியல்லவா செய்கிறார்கள்?' என்றேன். இபபோது எழுத்தாயர் மறுமொழியில் ஆழ்ந்த அமைதி நிலவிற்று 'குண்டுசியின் இருப்பு நிலவரத்தைக் கவனித்துக் கொணடிருந்தவர் அதில் சில குறைவது கண்டார். ஆலமரத் தடியில் சென்று அவற்றைத தேடததான் போயிருக்கிறார். அவா வகுபபுப பறறி நான நினைவூட்டாமலில்லை. வகுபபு அவ்வளவு பெரிய காரியமல்ல. அது சற்றுப் பொறுத்திருக்க முடியும என்று அவர் கூறிவிட்டார்' என்றார்.

**திணறடிக்கும் சிகப்பு நாடா ஆதிக்கம்**

அயல ஆட்சி மரபின் தளராத ஆட்டபாட்டம் நூலகச் சட்டம சரிவர நடைமுறையில் முன்னேறுவதை இன்னும் தடுதது அழுத்திப்பிடிதது அதன் உயிர்பபைத் திணறடித்துக் கொண்டுதான வருகிறது. நூலகபபணி ஒரு சமூகப்பணி. அதை இசைவிணககத்துடனன்றி ஆதிக்க ஆணையால் நடை முறைப்படுததவோ, வளப்படுத்தவோ முடியாது. சிகப்பு நாடாவின பலபடி அடக்குமுறைகளுக்கடியில் அது சிக்கினால் அது சரியாக மூச்சு விடமுடியாமல நலிந்து வாட்டமுறுவது உறுதி எல்லாம் நடைமுறை ஒழுங்குமுறைகளில் தொடங்கி அதனுள்ளேயே உலவி அமைவதானால், சமூகப்பணி எதுவும் நிறைவேற முடியாது

இதனை ஒரு நடைமுறை மூலம் விளக்கலாம்.

முன்னைய கல்வியமைச்சர் ஒருவர் தினைநில நூலக ஆட்சி யாளரின் பேராட்களடஙகிய கூட்டமொன்றைக் கூட்டி யிருந்தார் அதில் சென்று அவர் கலந்துகொண்டு அமைச்

சருக்கு உதவும்படி நூலக இயக்குநர் ஒரு சிறப்புப்பணியாளரை அனுப்பினார். அமைச்சர் மற்றொருபுறம் என்னையும் அழைத்திருந்தார்.

கூட்டத்தில் உணர்ச்சியார்வமிக்கவரான திணைநில நூலக ஆட்சிக்குழுவின் தலைவர் ஒருவர் எழுந்தார். நூலகச்சட்டத்தின்படி ஒரு தனிப்பட்ட நூலகத்தை மேற்கொள்வதற்கான இசைவு கோரித் தாம் மனுச் செய்திருந்ததாகவும், ஓர் ஆண்டுக் காலமாகியும் இயக்குநரிடமிருந்து அதனை ஏற்றதாக-ஒரு மறுமொழிகூட வரவில்லை என்றும் அவர் குறைபட்டுக் கொண்டார் பலதடவை நினைவூட்டி வரைந்தும்கூட, அதில் கருத்துச் செலுத்தப் படாதிருந்ததென்றும் எடுத்துக் காட்டினார்.

"மாவட்டக் கல்வித் தலைவரே செயலாளர் என்ற முறையில் கடிதம் அவர் கையொப்பத்துடனேயே வந்திருக்க வேண்டும். மாறாக அது தலைவர் கையொப்பத்துடன் அனுப்பப்பட்டிருந்தது" என்று இயக்குநரின் பேராள் வாளா கூறியமர்ந்தார்.

இவ்வமைதிகண்டு அமைச்சர் திகைப்புற்றார்!

**சட்ட நடைமுறை செயலாய்வுக்குக் கொண்டுவரப்பட வேண்டும்**

நூலகவரியாகத் தம்மால் செலுத்தப்பட்ட ஒவ்வொரு வெள்ளியிலும் ஐம்பது புதுக் காசுகள்கூட நூலகப்பணியாகத் தம்மிடம் திரும்பிவந்து சேரவில்லை யென்று பொதுமக்கள் முணுமுணுப்பது சென்னை நூலகத் திருக்கூட்டத்தின் செவிகளுக்கு எட்டாமலில்லை. ஆனால் மக்களிடமிருந்து வரும் குரல் முழுதும் வெளிவராமல் வாய்மூடியிடப்பட்டுள்ளது. மேலும் நான் மேலே கூறியுள்ளபடி மக்கள் குரல் உணவு போதாமை காரணமானதானால், குரல் பொங்கி எழுவது இயல்பு. குரல் மட்டுமல்ல, அடக்க முடியாச் செயல்கள்கூடக் காணப்படும். ஆனால் அறிவுணவின் போதாமை பற்றிய குரல் அவ்வளவு உரத்தகுரலிட்டுக் குமுறுவதில்லை. மற்றும் அக்குரல் மீட்டும் மீட்டும்வற்புறுத்திக் குறைப்படுவதுமில்லை. ஆனால் இத்தகைய மந்தக் குரல் கூட நூலகச் சட்டத்தைக் கொண்டுவரும் பொறுப்பை மேற்கொண்ட சென்னை நூலகத்திருக்கூட்டத்தின் செவிக்குத் தென்படவே செய்கிறது. அது அவற்றை அடிக்கடி கேட்கிறது என்றுகூடச் சொல்ல வேண்டும்.

இது வகையில் குறைகளுக்கும் குறைபாடுகளுக்கும் பின்னணியில் இருக்கும் அல்லது இருக்கக்கூடும் உண்மையின் நிலை கண்டறிதற்குரிய வழிதுறையாக நூலகச் சட்டத்தின் நடை

முறையைச் செயலாய்வுக்குக் கொண்டுவர ஒரு குழு அமர்த்தும் படி திருக்கூட்டம் அரசியலாரிடம் பரிந்து கோரியுள்ளது. குறையும் குறைபாடுகளும் இல்லாதிருந்தால்கூட இத்தகைய செயலாய்வுக்குழு அமர்வு நேராக நடைபெற வேண்டிய ஒன்றே யாகும். ஏனெனில் சட்டம் பத்தாண்டுகளாகவே நடைமுறையிலிருந்து வருகிறது இந்நிலையில் இந்த அளவு பொது மக்கள் குறையீடும் இந்த அளவு மக்கட் பேராண்மை தாங்கிய அமைச்சர்கள் மக்களுக்கு முழுநிறைவான சேவை செய்யும்வகையில் அவர்களுக்கு உதவுவதற்காகவே இயங்கும் பொறுப்புவாய்ந்த ஒரு குழுவின் கோரிக்கையும் ஏற்பட்ட பின்னும் அவை அமைச்சர்களுக்குச் சென்று எட்டாமல் சிவப்புநாடா இன்னும் நெடுநாள் அவற்றைப் பலபடி உறையிட்டுப் புதைத்துவைக்கும் படி விடககூடாது.

அமைச்சர்களுக்கு வேண்டுகோள்

சென்னையிலுள்ள நாம் இன்று இவ்வகையில் பேரளவு நல்வாய்ப்புடையவர்களாயிருக்கிறோம். ஏனெனில் பொதுமக்கள் தங்களுக்குரிய நலனைப்பெற வில்லை என்று தமக்குத் தெரிய வந்தால், சிகப்பு நாடாமுறைகளைத் தூக்கி ஒதுக்கிவைத்துவிட்டு, பணித்துறையாளரின் தட்டிவேலிகளையெல்லாம ஊடுருவிச் செல்லும் வழக்கமுடைய ஒருவரை நாம் இப்போது முதலமைச்சராகப பெறறிருக்கிறோம். பொருளற்ற மரபாசார முறைகள் எதனின் இடையீடுமின்றி மக்களிடம இதயத்துக்கு இதயமாகப் பேசுவதை அவர் தம் பழக்கமாக்கிக் கொண்டுள்ளார். குறுக்கு மறுக்காகச் செல்லாத நேரிய மனித உணர்வறிவைக் கையாள பவர் அவர். செய்ய வேண்டிய நேர்செயல் எது, செய்யும்முறை எது என்பதைப் பணிமுதல்வரிடம் அவர் நேராகப் பேசுபவர். இத்திறங்களில் அவர் பின்னிற்கும் தோழரான கல்வியமைச்சர் அவருக்கு உறுதுணையாயுள்ளவர்.

1957-லும் மறுபடியும் 1958-லும் சென்னை நூலகத் திருக்கூட்டத்தின் வாயிலாக அவர்களை அணுகியுள்ள மக்கள் குரலுக்குச் செவி சாய்க்கும்படி நான் அவர் கோருகிறேன்.

அவர்கள் எதையும்முன்கூட்டி ஆராயாது முடிவு செய்து விட வேண்டியதில்லை. முடிவைச் சட்டத்தின் நூலகத்துறை வல்லுநர்களும் சட்டமன்ற உறுப்பினர்களும் அடங்கிய ஒரு குழுவின் செயலாய்வுக்கு விட்டால் போதும். அதுவே அரசின் எல்லையிலுள்ள நூலகப்பணியின் அளவையும் பண்பையும் உள்ளுயிர்த் திறத்தையும் மேம்படுத்திவிடப் பெரிதும் உதவுவதாகும்.

நல்ஒரை இது

தனிமுறையிலே நம் முதல்வருக்கும் கல்வியமைச்சருக்கும் நான் இவ்வேண்டுகோள் விடுக்கிறேன். ஏனெனில், அதற்கு இது ஒரு நல்ஒரை என்று கருதுகிறேன்

இது நல்ஒரை என்று நான் கருதுவதற்குரிய முதற் காரணம், இங்கே நூலகப்பணி ஓர் ஆர்வத் தொண்டாக, ஒரு தனிப்பட்ட நிலையத்தாலேயே தொடங்கப்படுகிறது. அத்துடன் இந்நூலகப்பணியின் கருவிதைகள் ஏறத்தாழ அரை நூற்றாண்டுக்கு முன்பே விதைக்கப்பட்டவை இவ்விதைகள் நம் தமிழகத்தின் நாட்டார்வம்மிக்க ஒரு பெரும் புலவரால் பாவப் பட்டவை விதைகள் அவர் காலத்திலேயே முளைத்துக் குருத்துவிட்டன அம்முளையின் மிகச் சிறந்த விளைகனி மறைமலையடிகளாகிய அப்புலவரேறே ஆவர். ஆனால் கனி இப்போது கனிமரக்காவின் இரண்டாவது தலைமுறையாகத் தொடங்குகிறது.

என் உள்ளம் இப்போது காலப்பொறியில் ஏறிச் செல்ல விழைகின்றது. உங்களையும் என்னுடன் ஏற்றிக்கொண்டு நான் செல்கிறேன்.

இதோ நாம் கி. பி. 2058-ஆம் ஆண்டை எட்டிவிட்டோம். என்ன காண்கிறோம் இங்கு?

தமிழ்ப் புலவர்கள் ஏராளம், ஏராளம். ஒவ்வொரு சிறு நகரத்துக்கும் பட்டினத்துக்கும் ஒரு நூலகம், ஒவ்வொரு நூறு ஊர்களுக்கும், சிற்றூர்களுக்கும் ஓர் உலாவரு நூலகம்.

மக்களெல்லாருக்கும் வயிறும் நிரம்பியிருக்கிறது. உள்ளமும் அறிவால் நிரம்பியிருக்கிறது. மக்கள் எல்லாருமே இன்பமுடையவர்களாக, கிளர்ச்சியுடையவர்களாக இருக்கிறார்கள்.

பொறாப்பே கிடையாது, எல்லாம் அன்புமயம். ஐயப்பாடு எதற்குமே இடமில்லை. எல்லாருக்கும் எல்லாரிடத்திலும் நிறைந்த நம்பிக்கை உண்டு. அறியாமை இல்லை, அறிவொளி எல்லாம் விளக்கும் ஒளியாயுள்ளது. சண்டையில்லை, சச்சரவில்லை, பூசலில்லை. எல்லாம் பாசமே - ஒத்துழைப்பே - அமைதியே.

வளத்திலிருந்து பொங்கல்வளத்துக்கு மறைமலை நூலகம் என்றென்றும் வளருமாக. தமிழ்நாடு நூலகங்களே நிரம்பிய அறிவு நாடாகுக. நிறை நீள் அமைதி நலம் தமிழகத்தில் நிலவி இங்கே என்றும் உலவுமாக.

---

# முல்லைப்பண் ஆராய்ச்சி

[இராவ்சாகேப், திரு. கு. கோதண்டபாணிபிள்ளை]

(செல்வி, சிலம்பு-௩௩, பரல்-உ, அஅ-ஆம் பக்கத்தொடர்ச்சி)

இத்தகு சொல்லைக் கொண்டு, பல நூறு ஆண்டுகளாகப் பயின்றுவரும், உழையே மத்திமம் என்னும், இசைக் கொள்கையை மாற்றிக் கொள்வது தக்கதாகுமா? கருதுக.

இனி இராமனுதன் அவர்கள் தாம் எழுதிய 'சிலப்பதிகாரத் திசை நுணுக்க விளக்கம்' என்னும் நூலில் அடிகளார் கூறியதை அவர் பெயரைக் குறிப்பிடாது மறுத்துள்ளார். இராமனுதன் கூறும் காரணங்கள் வேறு. அவர் யானையின் ஒலியை உழை எனக் கொண்டது செம்பாலைக் கென்றும், வடவர் அதே ஒலியை நிஷாதம் எனக் கொண்டது அரும்பாலைக்கென்றும், செம்பாலையின் உழை, அரும்பாலையில் தாரம் அல்லது நிஷாதத்தின் அளவை ஏற்பதைக் கணக்கு முறைப்படி காட்டுவர். அவ்வாறயின், ஒவ்வொரு பாலைக்கும், எவ்வொலி எவ்வொலி பொருந்தும் எனத் தமிழ் நூல்கள காட்ட வில்லை; வடநூலும் காட்டிற்றில்லை; தாம் கூறியவை எப்பாலைக்கு அல்லது எந்தக் கிராமத்திற்குப் பொருந்துவன என அவை சுட்டவும் இல்லை.

விலங்கின் ஒலியும் பறவையின் ஒலியும், சுரங்களின் அமைப்பிற்குத் துணை செய்தன என்பர் ஆராய்ச்சியாளர். ஓவியப் புலவன் தன் கலையை அமைக்கத் துணை செய்தவை இயற்கையின் வனப்பும், அதன் அமைப்பும், அது ஏறற நிறஙகளும ஆகும். இயற்புலவனுக்கும் இயற்கையே பெருந்துணையானது. இயறகையின் பல்வேறு நிலைகளும், உளத்தை இயக்கும் பல்வேறு இயற்கை உணர்ச்சிகளுமே இலககியக் கலைக்கு இன்றியமையாதனவாயின. இவ்வாறே, இசைப் புலவனுக்கும் துணை புரிந்தவை இயற்கை ஒலிகளே. இயற்கையாக எழுந்து செல்லும் ஒலிகளை, வேறு வேறு நிலைகளில், வேறுவேறு சுரங்களாகப் பிரிககலாம், அவற்றைக் கொண்டு, இசைககலை அமைக்கலாம் என வழி காட்டியவை, விலங்கின் ஒலிகளும், பறவைகளின் ஒலிகளும் என்பர். எந்தெந்தச் சுரங்களின் அமைப்பிற்கு எநதெந்த ஒலி பொருந்தும் என ஒப்புமை கண்டனர். சுரங்களின் அமைபபைத் தாண்டி, நுண்ணிய கணக்கு முறைப்படி, நுண் அலகுகள ஏற்றுச் சுரஙகள் பாலையுள் புகுந்த பின்னர், அவ்வொலிகளுக்கு ஒப்புமை கண்டனர் என்பது பொருந்தாது என்பர். அவை கணக்குள் பட்டு

வரையறை பெற்றபின், அவற்றிற்கு ஒப்புமை காட்டுவது எதற்கு? அத்தகு ஒப்புமையால் இசைக்கலைக்குப் பயன் என்ன? இவை யெலாம் ஆழ்ந்து ஆராய்தற்குரியன. இவ்வாராய்ச்சி இங்கு வேண்டுவதன்று ஒப்புமை காட்டிய தமிழ் நூல்களும் இசை நூல்கள் அல்ல, நிகண்டுகள். இவற்றை ஆதாரமாகக் கொண்டு இசை முறையைத் திருத்துதலே பொருந்தாதாகும் இராமனுதன் காட்டிய காரணங்களே தக்கவை எனக் கொள்ளினும அடிகளார் கருத்திற்கு அவை மாறு கொளவே அமைகின்றன.

## சட்ஜம் இளியாகுமோ?

இனி, சட்ஜம் என்பது குரல் அன்று, இளியே என்பதற்கு அடிகளார் காட்டும் காரணங்களைக் காண்போம். "இனி, நிஷாதத்தை அடுத்து வருவது ஷட்ஜம் 'ஏனை ஆறு சுரங்களும் பிறத்தறகு இடமானது' என்பது 'ஷட்ஜம்' என்னும் பெயர்க் காரணமாகும. உழையை அடுத்துவருகின்ற இளியும் எல்லாப் பண்ணிற்கும் அடிமணையாதலின் பட்டடை என்னும் பெயரினைப் பெற்றதென முன்னர்க் காட்டினும். பண்டை இளி பிற் காலத்து ஷட்ஜம் ஆகும்" இவை அடிகளார் காட்டும் காரணங்கள்.[1] இவற்றை ஒவ்வொன்ருகப் பிரித்துக் காண்போம.

ஏனை ஆறுசுரங்களும் பிறத்தற்கு இடமானது ஷட்ஜம் எனப் பெயர்க் காரணம கூறியவர் சஙகீத இரத்நாகரத்தின் ஆசிரியர், சாரங்கதேவர் என்பர். இவர் யானையின்ஒலி நிஷாதம் எனக் கூறியவர்களுள ஒருவர் என்பதை அடிகள் முன்பு எடுத்துக் காட்டியதை நினைக. இவர் தந்த இசைக் குறிப்புப் பொருந்தா ததைப் போலவே, இவர் கூறும் பெயர்க் காரணமும் பொருந்தா தாகின்றது. 'சட்ஜம்' என்னும் சொல் ஆறுசுரஙகளும் அதனின் றும் பிறப்பது என்னும பொருள் தருவது அன்று; இலக்கணப் படி அது 'ஆறிலிருந்து பிறப்பது, என்றே பொருள்படும். 'ஷட்ப்ய ஜாயதே ஷட்ஜம்' ஆதலின் ஆறிலிருந்து பிறப்பது என் பதே அதன் பொருள். அண்டஜம் = முட்டையிலிருந்து பிறப் பது, அபபுஜம் = தண்ணீரிலிருந்து பிறப்பது, போன்ற சொற்களை யும்காண்க. ஆறிலிருந்து பிறந்ததென்று கொண்டால் தைவதத்தி லிருந்தா சட்ஜம் பிறந்தது! "இப்பொருள் கொண்டால் வட மொழி இசைநூல்கள் கொண்ட இசை முறையே தவருக வன்றே முடிகின்றது" என எண்ணினர் போலும் சாரங்கதேவர்; அதன் பொருளையே மாற்றினர் ஆறும் அதனின்றும் பிறப்பது என்று இசைக்குப் பொருந்தப் பெயர்க் காரணம் கற்பித்தார். இத்துணிவைக் கொண்டார் அல்லர், அவருக்கு முன்தோன்றிய

1 யாழ்நூல், பாயிரவியல், பக்கம், 4.

(அவருக்கு ஆயிரம் ஆண்டுகளுக்குமுன்பு தோன்றிய) நாரத சிட்சை ஆசிரியர். அவர், நெஞ்சு, மிடறு, அண்ணம், பல், நாக்கு, மூக்கு என்னும் ஆறிலிருந்து, (ஆறு இடங்களிலிருந்து) பிறப்பது சட்ஜம்[1] என்றே எழுதிச் சென்றார். இப்பெயர்க் காரணங்களை ஆராயுமிடம் இதுவன்று; ஷட்ஜத்தின் பிறப்பும் வளர்ப்பும் எங்கோ புதைபட்டுக் கிடக்கின்றது. அதைத் தோண்டி எடுப்பதும இங்குப் பொருந்தாததாகும். ஆறும் பிறத்தற்கு இடமாவது என்ற பொருளே பிழையுடையது. இலக்கணப் படியும் பிழைபட்டது, முன்னோர் கூறிய காரணத்திற்கும் மாறுபட்டது என்பவைகளே இங்குப் போதியன. முன்பு சாமவேத கானம் நிஷாதத்தில் தொடங்கியது எனப் பிழைபட உணர்ந்ததுபோல் இங்கும் ஷட்ஜம் என்னும் பெயர்க் காரணத்தையும் பிழைபட உணர்ந்து, அதை முதற் காரணமாக அடிகள் இங்குக் காட்டுகின்றார் என்பதைக் காண்க.

பெயர்க் காரணம் யாதானால் என்ன? ஷட்ஜம் ஆறும் பிறப்பதற்கு இடமாகத் தானே இப்போது கருதப்படுகின்றது? அவ்வாறே கருதி, அதையே ஆதார சுரமாகக்கொண்டு தானே பாடப்படுகின்றது ஆதலின், இதைக் குறையற்றதாகவே கொண்டு, அடிகளார் காட்டிய காரணங்களை மேலும் ஆராய்வோம். அடிகள் இங்குக் கையாளுவது அளவை முறை; அதாவது ஒபபுமையுள்ள இருபொருள்களைக் காட்டி, அவற்றினின்றும் பெறும் பொதுத் தன்மையைத் தம் முடிபாகக் கொள்கின்றார். அவர் காட்டும் அளவை முறையாவது:—

ஆறுசுரங்களும் பிறப்பதற்கு இடமானது சட்ஜம்;
பண்கள் பிறப்பதற்கு அடிமணை (இடமானது) இளி;
ஆதலின், சட்ஜமே இளி அல்லது இளியே சட்ஜம் என்பது.

இவ்வளவை முறையும முடிபும குறைபாடுடையன. இக் குறைபாடுகளை ஒரு எடுத்துக் காட்டால் விளக்கலாம். அங்குலம், அடி, முழம், என்பவை 'அளவறி' சொற்கள் அல்லது நீள அளவைக் காட்டும் பெயர்கள்.

அடி பிறப்பதற்கு ஆதாரமானது அங்குலம்;
முழம் பிறப்பதற்கு ஆதாரமானது அடி;
ஆதலின், அடியே அங்குலம், அங்குலமே அடி,

என்னும் அளவை முறையையும் அளவை முடிபையும் ஒருவாறு ஒப்பும், அடிகள் காட்டியவை. ஒபபுமை உடையவாகக் காட்டும் இருபொருள்களும் தம்முள் முற்றிலும் ஒப்பன அல்ல; ஆதலின்

1. The story of Indian music by O. Gosvami page, 33.

இந்த அளவை தரும் முடிபு தவறுடையதாகின்றது. அடிகள் முதல் அளவை உரையில் காட்டும் சுரங்களும், இரண்டாம் உரையில் காட்டும் பண்களும், தம்முள் சிறிதும் வேற்றுமையின்றி ஒப்பவை அல்ல. பண்களுக்குளளே சுரஙகள் அடங்குவன எனினும், பண்கள் வேறு, சுரங்களும் வேறு இவை இரண்டும் ஒன்றெனக் கருதப்படா. இவற்றிற்குள்ள ஒற்றுமை வேற்றுமைகளை உணர, சட்ஜம் அல்லது குரல் எவ்வாறு ஆறு சுரங்களும பிறப்பதற்கு இடமாகின்றது என்பதை உணர்தல் வேண்டும். பண்களுக்கு, எவ்வாறு இளி அடிமணையாகின்றது என்பதையும் அறிதல் வேண்டும் இவற்றைத் தெரிந்து கொள்ள சுரங்கள் என்பவை எவை, அவைகளை எவ்வாறு அமைத்தனர், பண்கள் என்பவை எவை, அவை எவ்வாறு பண்ணப்பட்டன அல்லது பண்ணப்படுகின்றன என்பவற்றை ஒருவாறேனும் அறிதல் வேண்டும்.

## சுரங்களின் அமைப்பு

இசைவல்லோர், இசை ஒலியைப் பிரித்து, அதன் பிரிவுகளுக்கு இட்ட பெயர்கள் சுரங்கள் என்பவை. இசை ஒலி ஒரே அளவாக நிகழ்வதன்று; ஏற்றமும் தாழ்வும் இடைப்படு நிலைகளும் இசையின் ஒலிக்கு இயற்கையாக அமைந்தவை. எழுகின்ற இசையின் ஒலி ஒரு கீழ்நிலையில் தொடங்குகிறது; உயர்ந்து உயர்ந்து சென்று மேலநிலை அல்லது உச்சிநிலையை அடைகின்றது. இவ்வாறு, கீழிருந்து மேலே செல்லும் இசை ஒலியின் போக்கை அளவிட்டுச சிறுதுண்டுகளாகப் பிரிததனர். கீழ்நிலையிலிருந்து, மேல்நிலைவரையில் தொடர்ந்து செல்லும் இசை ஒலியை, எங்கெந்த இடங்களில் பிரித்தால், ஒவ்வொரு பிரிவையும் மற்றொரு பிரிவிலிருந்து, தனித்தனி துண்டுகளாக அறிய முடியும் என வரையறை செய்து பிரிததனர். இவ்வாறு ஏழு இடங்களில் இசையின் போக்கைப் பிரித்து அறியமுடியும் எனக் கண்டனர். அவற்றை ஏழு பிரிவுகளாக்கினர்; ஒவ்வொரு பிரிவிற்கும் ஒவ்வொரு பெயர் இட்டனர். இவ்வாறு பிரித்த இசைதெரி பிரிவுகளுக்குச் சுரஙகள் என்று பெயர்.

குரல் முதல் ஏழும் அல்லது சட்ஜம் முதல் ஏழும் இவற்றின் பெயர்கள். குரல் என்னும் கீழ் நிலை முதற் பிரிவில் இசை தொடஙகுகிறது அதினின்றும் சிறிது உயர்ந்தவுடன் அது துத்தம் எனப் பெயர் பெறுகிறது; துத்தத்திலிருந்து சிறிது உயர்ந்தவுடன் அது கைக்கிளை எனப் பெயர் பெறுகிறது. இவ்வாறே ஏழு சுரங்களும் ஒன்றிலிருந்து ஒன்று உயர்ந்து சென்று மேல் நிலையைச் சேருகின்றது.

குரல் முதலிய சுரங்களின் பிரிவுகள் அரைகுறை மதிப்பாகப் பிரித்தவைகள் அல்ல. கணக்கு முறைப்படி அளவிட்டுப் பிரித்தவைகளாக அமைகின்றன. குரல் என்னும் சுரம் தொடங்குவது ஒரு மடங்கு இசை ஒலி கொண்டது என்றால், அதற்கு அடுத்துள்ள துத்தம் குரலைவிட அரைக்கால் ($\frac{1}{8}$) மடங்கு மிகுந்து, ஒன்றே அரைக்கால் $\frac{9}{8}$ அளவு கொண்டது. கைக்கிளை குரலைவிடக் கால்மடங்கு மிகுந்து ஒன்றேகால் $\frac{5}{4}$ அளவு கொண்டது. குரலைவிட அரை மடங்கு மிகுந்து, ஒன்றரை $\frac{3}{2}$ அளவு கொண்டது இளி. இவ்வாறே அளவு முறைப்படி ஏனைய சுரங்களும் அமைக்கப்பட்டன. இசையின் மேல் எல்லை, குரலிலிருந்து இரண்டு மடங்கு கொண்டது என அமைத்தனர். குரலின் இசை அளவை முதலில் வரையறை செய்துகொண்டு அதையே அடிப்படையாக, ஆதாரமாக, வைத்து ஏனைய சுரங்களையும் வகுத்தனர்; ஆதலின் குரல அல்லது சட்ஜம் ஏனைய ஆறுசுரங்களும் பிறத்தற்கு இடமாவதைக் காண்க.

இசை முறையில் இவ்வாறு இசை ஒலியின் சிற்றெல்லையை நிறுவி அதை அடிப்படையாகக்கொண்டு ஏனைய சுரங்களை வகுத்தல் மிக இன்றியமையாதது. இச் சிற்றெல்லையை ஆதார சுரம் என்பர் ஆங்கிலத்தில் இதை பேசிக் டோன் (Basic Tone) அல்லது (Basic note) என்பர். Tone என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு நேர்ப் பொருள் குரல் என்பதே. ஆதாரசுரம் என்பதைக் குறிக்க ஆங்கிலததிலும் தமிழிலும ஒரே பொருளையுடைய ஒரு சொல் அமைந்தது குறிக்கொள்ளத்தக்கது. ஆதார சுரம் என்பதே இசையின் குரல், இசைக்கு இயற்கையாக அமைந்த குரல். ஆதாரசுரம என்பதைக் குறிக்கக் குரல் என்னும் சொல்லைத தமிழில் கையாளுவது எவ்வளவு பொருண்மை வாய்ந்தது என்பதைக் காண்க. இவ்வாறு இயற்கை நிலையை ஒட்டிக் குரல் என்னும் இசையின் சிற்றெல்லை அமைந்ததால் எல்லா இசை முறைகளுக்கும் ஒப்பத் தமிழ் இசை முறையும் அமைகின்றது. குரலைபபோலவே சற்றேககுறைய 256 ஒலி அலை அசைவுகளைக் கொண்டதே சட்ஜம் என்னும் ஆதார சுரமும், ஆங்கிலத்தில் C என்னும் அடிப்படைக் குரலும் (basic tone) ஆகும. சீனர் இசை முறையில் கூங் (Kung) என்னும முதல் சுரம் இதே அளவு கொண்டது என்பர்.

அடிகளாரின் அளவை உரைகளுள் முதல் உரையின்படி, ஷட்ஜம் அல்லது குரல் ஏனைய ஆறுசுரங்களும் பிறத்தற்கு எவ்வாறு இடமாகின்றது என உணர்ந்தோம். இனி, அவர்கள் இரண்டாவது அளவை உரை, 'இளி, எல்லாப் பண்ணிற்கும் அடிமணை' என்பதை ஆராய்தல் வேண்டும். இங்கு ஆராய வேண்டு

வது இரு கூறுகளாகப் பிரியும். பண்கள் என்பவை எவை, அவற்றை அமைப்பது எங்ஙனம், என்பது முதற்கூறு. பண்களுக்கு அடிமணை இளியாவது எங்ஙனம் என்பது இரண்டாவது கூறு. இக் கூறுகளை ஒன்றின்பின் ஒன்றாக ஆராய்வோம்.

## பண்கள் அமைக்கும் முறை

பண் என்னும் சொல் இங்கு இராகம் என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது. இச்சொல் இராகத்தோடு இணைத்துப் பண்ணிய செய்யுளை அல்லது பாட்டைப பிற்காலத்தே உணர்த்துவதாயிற்று. இங்கு நாம் ஆராயவேண்டுவது, பண்கள் அல்லது இராகங்கள் எவ்வாறு தோன்றின அல்லது அமைக்கப்பட்டன என்பதே.

பண்கள் அல்லது இராகங்கள் என்பவை, சுரங்களில் சிலவற்றையோ அல்லது பலவற்றையோ தொடர்பு பெறச் சேர்த்து, இனிமை தருமாறு, மக்கள உள்ளத்தை இயக்குமாறு, பாடும் இசை ஒலி அமைப்புக்கள் ஆகும். இவைகள் சொற்கள் அற்றவை, வெறும் இசை ஒலியையே கொண்டவை

பண் அமைக்கும் முறையை ஓர் எடுத்துக் காட்டால். விளக்கலாம் இயற்புலவன் அல்லது கவிஞன் கவி அல்லது செய்யுள் செய்வதைப் போலும், இசைப் புலவன் இராகத்தை அமைத்தல். கவிஞனுக்கு எழுத்துக்கள் பயன் படுதல்போல இசைப் புலவனுக்குச் சுரங்கள் பயன்படுகின்றன. கவிஞன் எழுத்தொலிகளால் கவி செய்கிறான். இசைப் புலவனோ ஒன்றோடொன்று இயையும் சுரங்களின் ஒலியால் இசைச் செய்யுள் அல்லது இராகத்தைச் செய்கிறான். செய்யுள் இயற்றுதற்குத் தக்க அசைகள் கொண்ட சீர்களைத் தெரிந்தெடுத்து அவற்றை இசைவு பெறத் தளைபொருந்த அமைத்துக் கவிஞன் செய்யுள் செய்கிறான். இசைப் புலவனும் பண் அமைப்பிற்குத் தக்க சுரங்கள் கொண்ட இசைத் துண்டுகளைத் தெரிந்தெடுத்து, அவை ஒன்றோடொன்று இசைவு பெறப் பொருந்துமாறு கண்டும், தொடர்பு கொளப் பண்ணியும் பண்ணைச் செய்கிறான்.

சுரங்களைக் கண்டவாறெல்லாம் தாறுமாறாகச் சேர்த்தால் அவைகள் இன்னிசை தாரா, பண்களும் ஆகா. சுரங்களிற் சிலவே ஒன்றோடொன்று சென்று இயைவன. ஒரு சுரத்துக்கு மூன்றும் ஆறும் பகைச் சுரங்கள். அவற்றின் ஒலி ஒன்றோடொன்று இயைவன அல்ல. அவற்றை ஒலித்துக் கேட்டால் வெறுப்பே தோன்றும்; ஆதலின், இவை பண்கள் அமைப்பதற்குப் பயன்படுவன அல்ல. குரல் என்னும் சுரத்தின் ஒலியும் அதன் ஐந்தாம்

சுரமாகிய இளியின் ஒலியும் ஒன்றோடொன்று சென்று ஒட்டிக் கொள்கின்றன, பிளவின்றி இயைகின்றன. இவற்றின் சேர்க்கையால் பிறக்கும் ஒலி, இன்னிசை தருகின்றது. குரலும் இளியும் சேரும் இசைத் துண்டு பண் அமைப்பதற்கு மிகப் பொருத்தமாக அமைகின்றது. அவ்வாறே இளியிலிருந்து ஐந்தாம் சுரமாகிய துத்தத்தின் ஒலியும் இளியுடன் ஒன்றுபட இயைகின்றது. இவ்வாறே சுரங்களை ஐந்தாவது ஐந்தாவதாகப் பொறுக்கிச் சேர்ப்பது இராகம் அமைப்பதற்குத் தக்கதாக அமைகின்றது இவ்வாறு ஐந்தாம் ஐந்தாம் சுரமாகத் தெரிந்தெடுத்து ஒன்றோடொன்றைப் பிணித்துப் பிளவின்றி இயையுமாறு தொடுக்கும் முறையை ஐந்தின் தொடர்புமுறை, (cycle of fifths) ச. ப. முறை, சட்ஜ பஞ்சம சம்வாதித்ய முறை, குரல் இளியின் கிளைமுறை என்பர். எல்லாப் பண்களுக்கும் இந்தக் குரல் இளி முறையையே சிறந்ததெனக் கொண்டனர் தமிழர்.

ஏழு சுரங்கள் மட்டுமே அமைக்கப்பட்டன என முன்புக் கண்டோம். அவற்றில் ஓர் ஐந்தாம் சுரத்தைப் பொறுக்கலாம். மீண்டும அந்த ஐந்தாம் சுரத்திலிருந்து மற்றுமோர் ஐந்தாம் சுரம் எங்குள்ளது? எஞ்சிய சுரஙகள் இரண்டே உள்ளன என ஐயம் வேண்டா. தமிழ் இசை முறை வட்டப்பாலை முறை; ஒரு வட்டத்தில் ஏழு சுரங்களும், கணக்கு முறைப்படி அமைத்த இடைவெளிகளைத் தம்மிடையே கொண்டு, வட்டமாக நிற்பன. ஆதலின் வட்டத்தின் பேரில் சுற்றிச் சுற்றி எததனை தடவை வேண்டுமானாலும் எண்ணிச் செல்லலாம். ஒன்று முதல் ஏழு வரையில் தொடர்ந்து சுற்றிச் சுற்றிச் செல்லும் ஒலித்தொடரிலிருந்து, ஐந்தாவது ஐந்தாவதாக, வேண்டிய துண்டுகளை நறுக்கி எடுக்கலாம். இவற்றை இன்னும் விரிக்கிற் பெருகும். விரிந்த நூலிற் கண்டுகொள்க.

இவ்வாறு ஐந்தாவது ஐந்தாவதாகப் பொருந்தும் இசைத் துண்டுகளைக் கொண்டு பண்ணமைத்தனர். ஒன்றிலிருந்து மற்றொன்று ஐந்தாவதாக அமையின், அது இளியின் இடத்தை ஏற்பதாகும். இதுவே இளிமுறையில் பண் அமைக்கும் முறை. இனி, அடிகளார் குறிப்பிட்ட அடிமணை என்பதையும் ஆராய்வோம்.

'அடிமணை' என்பதற்குச் சிறப்பாக இரண்டு பொருள்கள் கொள்ளலாம் அவற்றில் ஒன்று பட்டடை என்னும் பொருள். பட்டடை என்னும் சொல் இக் காலத்தில் பட்டரை என வழங்குகிறது என்பர் "சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை நேரா நிரந்தவர் நட்பு" என்றார் திருவள்ளுவர். எறிதற்குப் பட்டடை என வள்ளுவர் சுட்டுவதைக் காண்க. பட்டடை என்பது எறிதற்கு, வெட்டுதற்கு, வெட்டி எடுத்தற்கு இடமாவது,

துண்டு செய்வதற்கு இடமாவது எனப் பொருள் உணர்த்துவதைக் காண்க. பண்கள் அமைப்பதற்கு இசை ஒலியை வெட்டுமிடம், இசைத் துண்டுகளை எறிதற்கு இடம், இளி ஆகின்றது. 'எல்லாப் பண்களுக்கும் அடிமணை இளி' என்பது, எல்லாப் பண்களையும் ஆக்கும் இசைத் துண்டுகள் இளி என்னும பட்டடையில் வெட்டி எடுக்கப்பட்டன, அல்லது பண்களை எல்லாம் ஆக்கும் இசைத் துண்டுகளை 'எறிதற்கு' வெட்டுதற்கு இடம் இளி எனப் பொருள் இசைத்து நிற்கின்றது. 'இசைத் துண்டுகளை ஒன்றோடொன்று இசைய இணைப்பதற்குப் பட்டடையாவது, இளி, என்றும் பொருள் கொள்ளலாம்.

அடிமணை என்பதற்கு மற்றொரு பொருள் அடியில் இடும் மணை அல்லது அடிபபடை என்பது. எல்லா அமைப்பிற்கும் அடியிற் படுத்து உறுதி பெறச் செய்த அடிப்படை அல்லது மணை ஒன்று வேண்டப்படும். அதன்மேல், அமைப்புக்கள் எழும். இளி என்னும் அடிமணை மீது, ஐந்தின் துண்டுகள் என்னும் இளித் துண்டுகளை அடுக்கி அடுக்கி இசை அமைப்பை எழுப்பினர். இவ்வாறு இளித் துண்டுகளையே அடுக்கி அடுக்கி (ஏனைய துண்டுகள் இங்குப் பொருந்தா) சேர்த்துச் சேர்த்துப் பண்ணிப் படுத்தது பண். இவ்வாறு இயைபு பொருந்தச் சிறிதும் இடை வெளியின்றிப் பொருந்துமாறு பண்ணிய பண்ணே பாடுந்தொழிலுக்கு ஏற்ப அமைந்த பண் அல்லது இராகம் ஆகும்

பட்டடை, அடிமணை, என்பவற்றிற்கு வேறு பொருள்களும் உள; அவை பிற் காலத்தே எழுந்த பொருள்கள் என்பர். ஆதலின், இங்குக் கூறிய பொருள்களில் எதை ஏற்றாலும், அது அடிகளார் கருத்துக்கு மாறு கொளவே அமைகின்றது. சுரங்கள் வேறு, பண்களும் வேறு; சுரங்களுக்கு அடிப்படை வேறு, பண்களுக்கு அடிமணையும் வேறு; இவை இரண்டும் ஒன்றே ஆகா. ஆதலின் ஆறுசுரங்களும் பிறத்தற்கு இடமாவது சட்ஜம், பண்கள் பிறத்தற்கு அடிமணை இளி, ஆதலின், இளியே சட்ஜம் என்ற முடிவு ஏற்கததகுமா ? கருதுக.

ஒலி ஒப்புமை காட்டும் வடநூல், சட்ஜத்திற்கு மயிலின் ஒலியைக் குறிப்பிடும். தமிழ் நூல்கள், இளிக்கு மயில் ஒலியை ஒப்புமை காட்டவில்லை. பிங்கலந்தை இளிக்குக் குயிலின் ஒலியை ஒப்புமை காட்டும்; திவாகரம் தவளையின் ஒலியை ஒப்புமை காட்டும்; இங்கும் ஷட்ஜமே இளி என்பதற்கு ஒலி ஒப்புமையைக் காணோம்.

இனி அடிகளார் ஒலி அலைகளின் கணக்கு முறைப்படியும் இவ்விசைத் தானங்களை நிறுவுகின்றனர். இதைக் குறித்த இவர்

ஆராய்ச்சி, யாழ்நூல் இசை நரம்பியல், 56, 57-ஆம் பக்கங்களில் காணப்படுகின்றது. புல்லாங்குழலின் முதல் சுரத்தில் எழும் ஒலி, 254 ஒலிஅசைவெண்களைக் கொண்டது என்பது, அடிகளார் காட்டியபடி உண்மையே. ஆனால் இதன் ஒலியே இளி, குரல் அன்று என எவ்வாறு கொள்வது? இளிக்கு அசைவெண் 256 அல்லது 254 என யாரும் கூறியதாக அடிகள் காட்டினார் இலர். "மேற்கூறிய வங்கியத்தை அழுத்தமாக ஊதினால் அதனின்றும் (முதல் சுரத்தினின்றும்) எழும் அலைகளின் தொகை முன்னையிலும் மூன்று மடங்காகும் இப்போது உள்ள அசைவெண் 768 ஆகும்" எனவும் அவர் காட்டுகின்றார். நடுத்தரமாக ஊதினால் அதனின்றும் எழும் ஒலி 512 அசைவெண்கள் கொள்ளும் என்பதும் இதனால் பெறப்படும். ஒரு துளையினின்று எழும் ஒலி, ஒரே தன்மையாக அமையவில்லை; மூன்று வகையாக அமைகின்றது. 256 அசைவெண் உடையது ஒன்று, 512 அசைவெண் உடையது மற்றொன்று, 768 அசைவெண் உடையது மூன்றாவதாகின்றது. பழங்காலத்தே வங்கியத்தை எந்த நிலையில் ஊதிச் சுரங்களை நிறுவினர்? வலிவு நிலையிலா, சமன் நிலையிலா, மெலிவு நிலையிலா? இதைக் குறிப்பிடும் சான்றுகள் ஒன்றும் காட்டப்படவில்லை. இத்தகு சான்றுகள் இருப்பனவாகவும் தெரிந்தில.

இதைப் போலவே யாழ் நரம்புகளின் ஒலியும் ஒரு நிலைத்த முடிபைத் தருவதாக அமையவில்லை. நரம்புகள் கட்டப்படும் இடத்திற் கேற்ப, நரம்புகளின் அளவிற்கேற்ப, அவற்றின் மெலிவு அல்லது திண்மைக் கேற்ப அவைதரும் ஒலிகள் அமைவன. பழங்காலத்தே கட்டிய நரம்புகள், எத்தகையன, எவ்வளவு நீளத்தன, எவ்வாறு கட்டப்பட்டன, என வரையறை செய்யச் சான்றுகள் கிடைத்தில. ஆதலின் இத் துறையில் நிகழும் ஆராய்ச்சி, படைத்துக் கொள்ளும் கற்பனை உலகில் நிகழ்வதாக முடிகின்றது; ஒரு நிலைத்த முடிவைத் தருவதற்கும் பயனற்றதாகின்றது.

முன்பு அடிகள் சான்று காட்டிய திவாகரமே, குரல் முதலிய ஏழுசுரங்களையும், ச, ரி, க, ம, ப, த, நி, எனவே, முறையே குறிப்பிடுகின்றது. ஏழு இசைகளையும் குறிப்பிட்டு அவற்றிற்குரிய எழுத்துக்களை இநூல் குறிப்பிடுவதைக் கீழே காண்க.

"குரலே, துத்தம், கைக்கிளை, உழையே
இளியே, விளரி, தாரம் என்றிவை
எழுவகை இசைக்கும் எய்தும் பெயரே
சவ்வும், ரிவ்வும், கவ்வும், மவ்வும்
பவ்வும், தவ்வும் நிவ்வும் என்றிவை
எழும் அவற்றின் எழுத்தே யாகும்."

(திவாகரம், இசைப்பகுதி.)

அடிகள் சான்றுக் கொடுத்த ஒரு நூலே இவ்வாறு கூறும் போது, அடியார்க்கு நல்லார் இவற்றையே, அவர் உரையில் குறிப் பிடும்போது, தமிழ்ப்பெரு மக்கள் இவற்றையே, பல நூறு ஆண் டுகளாக் கையாண்டிருக்கும் போது, இவற்றைத் தக்க காரண மின்றித் தவறு எனத் தள்ளிவிடுதல் தகுமா? கருதுக. இசைக்கு ஊற்றாகியது தமிழ் நாடு. இசை அறிவில் சிறந்தவர்கள் தமிழ் மக்கள். இசை நுட்பம் பலவற்றைக் கண்டவர் தமிழர். இத்தகு இசைப் பண்பாடுடைய மக்கள் புதுப் பெயர்களைத் தாமே ஆக் கிய காலத்தில் அல்லது புதுப் பெயர்களை மேற்கொண்ட காலத் தில், ஆராயாமல், இசைக்காது கொண்டு, அளந்து அளந்து துணி யாமல், எதற்கு எது புதுப் பெயர் என, மேற்போக்காக ஏற்றனர் எனக் கொள்ளத்தான் தகுமா? கருதுக. பல நூறு ஆண்டுக ளாக, எதற்கு எது புதுப்பெயர் எனக் கையாண்டதை, இன்னும் கையாளுவதை—தக்க சான்றுகள் காட்டி மறுக்கப்படும் வரை யில்—மகிழ்வுடன் மேற்கொள்வதே, நமக்கினி 'கருமமும் தருமமும்' ஆகும்.

## வாய்மை கண்டு தெளிவாயே!

[திரு. நாஞ்சில், கா. கணபதி]

பொன்னார் மேனிப் பெருமானும்
பொங்கும் அருளைத் தருவோனும்
மின்னார் மேனிப் பாகங்கொண்
டெங்கும் அன்பு சொரிவோனும்
மன்னர் ஏழை பாராமல்
மாண்பு ஒன்றே பார்ப்போனும்
தென்னா டுடைய சிவனேகாண்
தெய்வம் அவனென் றறிவாயே!

கண்ணால் இறைவன் திருமேனி
காண வொண்ணா தென்றெவரோ
எண்ணா துரைத்த ததனைக்கேட்
டெல்லா ரறிவும் மயங்காமல்
மண்ணும் மலையும் வளைகடலும்
வயங்கு காற்றும் விரிசுடரும்
வண்ண இறைவன் மேனியென
வாய்மை கண்டு தெளிவாயே!

---

# தமிழர் செல்வம்

[வித்துவான், பெ. கோவிந்தனார்]

## நாடு

க. எண்ணறு நெடுங்கா லத்தே இமயமே லெழுவ தன்முன்
கண்கவர் மலையும் காடும் கழனியும் கடலுங் கொண்டு
வண்ணமா ருயிர்க ளீன்று வழிவழி வருமுன் னோரைத்
தண்ணளி கொண்டு போற்றும் தமிழ்நாடு தமிழர் செல்வம்.

உ. இடைவிடா தணுகி மின்னி யிடித்துவான் பொழியு நீரும்
அடைபடா தருண்டு முத்தம் அகில்கரி மருப்பு வாரிக்
கடலுறு பொருநை பெண்ணை காவிரி வைகை நீரும்
தடைபடா வூற்று நீரும் தலைமைகொள் தமிழர் செல்வம்

## மொழி

ங. நாவிதழ் முதலு றுப்பால் நவிலுதற் கெளிமை யாகி,
ஆவிமெய் வாய்நதைம் பாலகொண் டனைத்துங்கண் டறியக் கூறிப்,
பாவினி லுண்மை சாற்றிப் பாரிடை முதலில் தோன்றிச்
சாவுறா திளமை வாய்ந்த தமிழ்மொழி தமிழர் செல்வம்.

## இலக்கணம்

ச. பழுத்தமென் சொல்லிற் றோன்றும் பலவகை எழுத்துக் கூறி,
இழுககிலா அம்மென் சொல்லின் இயல்பெலாங் கூறி, வாழ்க்கை
வழிப்படும் காதல் வாழ்வும் மலையும்போல் வாழ்வும் கூறும்
கழிப்பிலா இலக்கணத் தொல் காப்பியம் தமிழர் செல்வம்.

## இயற்றமிழ்

ரு. எதிர்தமக் கில்லார் யாத்த எண்பெருந் தொகையாம் நூலும்
முதிரநட் போடுறைந்த முன்னோர் முறைமொழிப் பத்துப் பாட்டும்
மதிநுட்பங் காட்டிப் பின்னாள் மக்கட்காம் நெறிகள் கூறும்
பதினெட்டுக் கணக்கும் மற்றும் பழம்பெருந் தமிழர்செல்வம்.

## இசையும் கூத்தும்

சா. இன்னிசைக் குழல்யாழ் சீரொத்
தியங்க, நுண் பொருட்பாப் பாடி
முன்னெழுந் திருகை கால்கண்
முகம்உட லசைத்துக் காட்டித்,
துன்பஞ்செய் கவலை யோர்க்கும்
தொடர்ந்துகண் காது நெஞ்சிற்,
கின்பஞ் செய் இசையுங்கூத் தும்
இருபெருந் தமிழர் செல்வம்.

### கோயில்

எ. கல்லெல்லாம் கதைகள் சொல்லும்
காய்ச்சியபின் வடித்த செம்பு
பல்லுருப் பெற்றுத் தெய்வம்,
படைத்தவர் கதைகள் கூறும்.
வல்லவா றெழுதும் ஓவம்
மாட்சிமை தெரியக் கூறும்,
நல்லுருத் தூண்கொள் கோயில்
நலமலி தமிழர் செல்வம்.

### இயற்கைப்பொருளும் செயற்கைப்பொருளும்

அ. நிலந்தரு முணவு, பொன்கள்
நெய்தலுண் ணுடை, வாழ்க்கை
நலமுற வினையும் பாணடம்,
நார்முடை பேழை, நாவாய்,
பலரமு குறுத்தும் வீடு,
பயன்படு பொருள்கள், பூணும்
கலம், எதிர்படையை வெல்லும்
கலமிவை தமிழர் செல்வம்.

### மருந்தும் மருத்துவமும்

௯. அருந்துண வற்ற பின்னர்
அளந்துணின் நோய் தோன்றாது,
வருந்திமிக் குழைக்கின், மிக்கு
வயிற்றினுக் குண்ணின் நோயாம்,
பொருந்துநோய் முதலைக் காணும்
புலமை,அந் நோயைப் போக்கும்
மருந்துகள், நோயைப் போக்கும்
மருத்துவம் தமிழர் செல்வம்.

### உயிருறு செல்வம்

க0. மன்னுயிர்க் கிரங்கும் அன்பு,
வருவிருந் தோம்பும் வாழ்வு,
இன்னுரை பகரும் மேன்மை,
இல்லவர்க் கீயும் சால்பு,
தென்மொழி கற்குங் கல்வி,
செந்தமிழ் நாட்டுக் காவல்,
ஒன்னலர்க் கஞ்சா ஆண்மை
உயிருறு தமிழர் செல்வம்.

# செய்திகளும் குறிப்புக்களும்

### (க) கட்டபொம்மன் நினைவு நாள்

"கட்டபொம்மன் தமிழனா ஆந்திரனா என்ற விவாதத்தில் இறங்குதல் கூடாது. யாராக இருந்தாலும் அந்நிய ஆட்சியை எதிர்த்துப் போராடிய வீரர்களைப் போற்றுவதே நமது முதன்மையான குறிக்கோளாதல் வேண்டும். ஆந்திரர்கள் பலர் தமிழ்நாட்டில் குடியேறித் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டு வாழ்ந்து வருகிறார்கள். அப்படிப்பட்டவர்களைத் தமிழரல்லர் என்று கூறிவிட முடியுமா? விடுதலை வீரர்களில் ஒருவரை இகழ்ந்தும் மற்றொருவரை உயர்த்தியும் பேசுவது சரியல்ல." என்று 16-10-58-இல் சென்னையில் நடைபெற்ற கட்டபொம்மன் நினைவுநாள் விழாவில் பேசிய திரு. இராசகோபாலாச்சாரியாரவர்கள் குறிப்பிட்டார்கள்.

**குறிப்பு:** திரு. ஆச்சாரியாரவர்களின் அறிவுரை தென்னகத்து மக்களுக்கு மிகப் பயன் படக்கூடிய நல்ல அறிவுரை. விரிந்துப் பரந்த உலகில் தென்னகத்தைப் பொறுத்தமட்டிலாவது ஓர் இன ஒற்றுமை வேண்டுமன்றோ? அதற்குத் திரு. ஆச்சாரியார் போன்றாரின் அறிவுரைகள் பயன்படுவதாக.

### (உ) இந்திமொழியின் நிலைபற்றித் திரு. காகாகலேல்கார் கருத்துரை

"சமக்கிருத மொழியின்பால் எனக்குப் பகைமை இல்லை. அதனை நான் விரும்புகிறேன். ஆனால் இந்தியில் அதிக அளவுக்குச் சமக்கிருத மொழிகளைக் கலப்பது கூடாது. அப்படிக் கலப்பதால் பாமரமக்களுக்கு இந்தி புரியாமற் போகிறது. இந்தி எளிதாக இருக்கவேண்டும். அது பாமர மக்களின் மொழியாக இருக்கவேண்டுமானால் பிற இந்திய மொழிகளிலிருந்து சொற்களைக் கடன் வாங்கவேண்டும். ஆங்கில மொழியைக் கைவிடுவது கூடாது என இராசகோபாலாச்சாரியார் கூறுவதில் தவறில்லை. 200 ஆண்டுகளாக நிலைபெற்றிருக்கும் ஆங்கில மொழியை அகற்றுவது அறிவீனம். இந்தி பேசாத மாநிலங்களில் அந்தந்த மாநில மொழிகளே ஆட்சிமொழியாகவும், பல்கலைக்கழகப் போதனமொழியாகவும் இருக்கவேண்டும். மாநிலங்களுக்கிடையே கடிதப் போக்குவரத்துகளுக்கு ஆங்கிலமே தொடர்ந்து பயன்படல் வேண்டும்" என்று மத்திய பிரதேச "இந்தி சாகித்திய சம்மேளன"த்தின் இந்தி இலக்கிய மாநாட்டில் பேசிய திரு. காகாகலேல்கார் குறிப்பிட்டார்.

**குறிப்பு:** திரு. காகாகலேல்கார் அவர்களின் இந்த அறிவுரை இடமறிந்து காலமறிந்து வழங்கப்பட்ட இன்றியமையாத அறிவுரையாகும். இந்தியே நாட்டில் தனியாட்சி நடத்தல் வேண்டும் என்று கருதிக்கொண்டிருக்கும் இந்தி ஆதரவாளர்கள் இதனைக் கண்டு பிறகேனும் தெளிவுபெறுவார்களாக.

### (ங) புதிய போப்பாண்டவர்

வெனிசு நகரைச் சேர்ந்த கார்டினல் ஆஞ்சிலியோ ஜெ ப்பிரான் செலி என்பவரைப் புதிய போப்பாண்டவராக உரோமன் கதோலிகத் திருத்தூதர்கள் 28-10-58-இல் தேர்ந்தெடுத்தனர். இதற்கென நடத்தப்

பட்ட தேர்தல் பதினேருமுறை நடைபெற்றது. 11-வது முறையாக நடைபெற்ற தேர்தலில இவரே வெற்றிபெற்ருர்.

திரு. கார்டினல் ஆஞ்சலோ ரான்சலி ஓர் இத்தாலியர். ஒரு குடியானவரின் மகன். கடந்த 20 ஆண்டுகளாகப் போப்பாண்டவரின் சமயத்தூதராக இருந்தவர். இவருககு வயது 76. பல அரிய நூல்களை எழுதியுள்ளார். இவர் 263-வது போப்பாண்டவராகத் தேர்நதெடுக்கப் பட்டவராகும்.

## (ச) தமிழ் நாகரிகத்தின் தொன்மை பற்றி அமைச்சர் ஹுமாயூன்கபீர் கருத்து

தென்கிழக்கு ஆசிய மககளின் பரம்பரைப் பண்பாடுகளை ஆய்ந்தறியும் குழுவினர் கடந்த 8-11-58-இல் சென்னைப் பல்கலைக்கழக ஆட்சிமன்றத்தில் டாக்டர், ஏ. லட்சுமணசாமி முதலியாரவர்கள் தலைமையில் கூடினர். அக்கூட்டத்தில் அமைசசர் ஹுமாயூன் கபீர் தமிழகத்தின் தொன்மை நாகரிகம் பறறி வெளியிட்டுள்ள கருத்துக்கள் வருமாறு:

"இந் நாட்டின் பண்டைய நாகரிகம் எது என்பதைப் பற்றி இது காறும் யாரும் ஒரு முடிந்த முடிபுக்கு வநதபாடில்லை. அவரவா ததம் கருத்துக்கேறப முடிவு கட்டுகின்றனர். நமது பழைய நாகரிகம் ஆரிய நாகரிகம் என்றே கூறுகின்றனர். அது மூவாயிர ஆண்டுகட்கு முற்பட்டது என்று வரலாறுகள் கூறுகின்றன. ஆனல் ஏறக்குறைய நாற்பது ஆண்டுகட்கு முன்னா அரப்பா, மொகஞ்சதாரோ எனனும் இடங்களை அகழ்நது ஆராய்ந்தபின் இநதிய நாகரிகம் 6000 ஆண்டுகட்கு முற்பட்டது எனறும் அதற்குரியோா திராவிடாகளே என்றும் அவாகள் நாகரிகத்தில் சிறந்து விளஙகினர்கள் என்றும் தெரியவருகிறது"— என்று கூறியுள்ளார்.

குறிப்பு: வரலாற்று உண்மையை விளக்கிக் கூறிய அமைசசரவர்களைப் பாராட்டுகிறேம். ஆனல் அதே நேரத்தில் அததகைய சிறந்த நாகரிகததைகொண்ட இனறைய திராவிட மககளின் வாழ்வு சிறக்க— வரலாற்றுண்மை மேலும் தெளிவடைய மைய அரசியலார் ஆவன செய்வார்களாக.

## இறையடி நிறைவில் இன்புறல்

யாழ்ப்பாணம் - புன்னலைக்கட்டுவன் வித்துவ சிரோமணி சிவத்திரு. சி கணேசையா அவர்கள் 8-11-1958-இல் தம் எண்பத்தோராம் அகவையில் இறையடிநீழல் எய்தினர் எனபதை மிக்க வருத்தத்துடன் தெரிவிக்கின்றேம்.

அப்பெரியார் பழம்பெரும் புலவர்களுள் தலைசிறந்தாரில் ஒருவராவர். ஏறத்தாழ ஐயாயிர யாண்டுகளுக்கு முற்பட்ட ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காபபியம் எழுத்துச்சொல பொருள் மூன்றற்குரிய உரைகட்கு மாணவாகள் எளிதிற் கற்குமாறு விளக்கக் குறிப்புக்கள் தந்துள்ளார்கள். இன்னும் அரிய பல தமிழ்த் தொண்டு புரிந்துள்ளார்கள். அவற்றின் விளக்கம் அடுத்த செல்வியில் வெளிவரும்.

ஐயரவர்களின் ஆருயிர் இறையடிநீழலில் இன்புறுமாக! அவர்தம் குடும்பத்தார்க்கு எங்கள் கையறுநிலைப் பரிவு உரித்தாகுக.

---

# மதிப்புரை

" திருக்கோயில் "

[இஃதொரு சிறந்த திங்கள் வெளியீடு. இதன் தனியிதழ் காசு எண்பது. ஆண்டுக் கையொப்பம் ரூபா பத்து. கிடைக்குமிடம் அறநிலையப் பாதுகாப்பு ஆட்சி அலுவலகம், மவுண்ட்ரோடு, சென்னை-2. தனியிதழ்கள் எண்பது காசு விழுக்காடாகப் பதினொரு இதழ்களே தரப்பெறும். பன்னிரண்டாம் இதழ் மலராக வெளிவரும். அதன் விலை கூடுதலாக இருக்கும். ஆண்டுக் கையொப்பக்காரருக்கு அதுவும் சேர்ந்துதான் பத்து ரூபா ]

இஃதோர் அரிய பெரிய செந்தமிழ்த் திங்கள் வெளியீடாகும் இது "சென்னை அரசாங்க அறநிலையப் பாதுகாப்புத்துறை வெளியீடாக" வருகின்றது. இதன் ஆசிரியர் திருவாளர் G. கலியாணம் பிள்ளை M. A. (இராமநாதபுரம் மாவட்டத்தில் தாசில்தாராயிருந்து ஓய்வு பெற்றுள்ளவர்) அவர்களாவர்.

நாடும், மொழியும், நன்னெறியும் பீடுறத் தொன்மையினும் சிறக்க ஓங்கி, மாந்தரும் நல்லொழுக்கினராய் உய்யுநெறி கடைப்பிடித்து ஒற்றுமையுடன் வாழ்தற்கு இதுபோன்ற தலைசிறந்த வெளியீடு என்றும் இன்றியமையாததாகும். இதன்கண் உலகிற்கு உடலுயிராய், இரு கண்ணுயப், பெருநெறியாய்த் திகழும் "சைவம் வைணவம்" என்னும் ஒப்பில சமயங்களின் உண்மைகள் அவ்வத்துறை வல்லாராகிய ஆன்றோர் பலரால் செவ்வையுற அகச்சான்று புறச்சான்றுகளுடன் எழுதப்பெற்ற கட்டுரைகள் பல இதன்கண் வெளிவந்துள்ளன. இவைகள் தொடர்ந்து வெளிவரும்.

சிறப்பாகச் சிதம்பரம், திருவரங்கம், பழநி, கன்னியாகுமரி முதலிய மாதவஞ்செய் தென்றமிழ்நாட்டுத் திருக்கோயில்களின் திருவரலாறுகளும், ஆண்டுள்ள தெய்வப் படிமங்களின் சிறப்பும், தத்துவவுண்மைகளும், முடிமன்னர் முதலாகத் தெய்வப் பற்றுமிக்க செல்வ அடியார்களும் செய்துள்ள திருக்கோவிற்றிருப்பணி, திருக்கோபுரம், நாள்விழா, சிறப்புவிழாவுக்குரிய முற்றூட்டுக்கள், கல்வெட்டுக்கள், செப்பேடுகள் முதலியனவும் செந்தமிழ்மறைகள், திருக்கோவில்களில் சீர்சிறப்புடன் ஓதற்கு வேண்டும் முறைமைகள் அதற்காக வேண்டும் கல்வெட்டுக்கள் காலவரையறையுடன் வெளிவந்துள்ளன.

திருஞான சம்பந்தர், நம்மாழ்வார், அருணகிரிநாதர் ஆகிய மெய்யடியார்களின் திருவரலாறுகளும், காவிரி, திருக்குற்றாலக் காட்சி முதலியவற்றின் திருவரலாறுகளும் சிறப்புற வந்துள்ளன. இம் மெய்யடியார்கள் பாடியருளிய சிறந்த பாடல்களிற் சிலவும், அவற்றின் மெய்ம்மைக் குறிப்புக்களும் அழகுற அமைந்துள்ளன.

முன்னாளில் கவியரங்கேற்றிய பாண்டியர் போன்று இந்நாள் அறநிலையப் பாதுகாப்பு ஆணையாளர் சைவத் திரு. அ. உத்தண்டராம பிள்ளை B. A. B. L., I. A. S., அவர்கள் நுண்மாண் நுழைபுலச் செல்வராய்த் திருவருள் பற்றுமிக்காராய் அழகுற எழுதியுள்ள "திருக்கோயில்" கட்டுரையும் இன்றியமையாத செந்தமிழ்மறை மேற்கோள்களுடன் திட்பநுட்பஞ் செறியத் திகழ்கின்றது.

"கோயில் திருப்பணிகள்"

என்னும் தலைப்பில் செங்கற்பட்டு மாவட்டம் முதலாகக் கர்னூடகம் ஈருகப்பன்னிருமாவட்டங்களிலுள்ள இருபத்தெட்டுத் திருக்கோயில்களின் திருப்பணிக்காக 1 55-56 ஆண்டுகளில் அறநிலையப் பாதுகாப்புத் துறையார் வழங்கிய வெண்பொற்காசுகள் இருநூறுயிரம் எனத் தெரிகின்றது. இதுபோற் பின்னுள்ள ஆண்டுகளிற் செய்துள்ளமையும் பின் வெளிவரும் எனவுந் தெரிகின்றது

இம்மலரினைச் சென்னை மாநில ஆளுநர், உயர்நீதிமன்றநடுவர், முதலமைச்சர், உள்நாட்டமைச்சர், மடாதிபதிகள் முதலிய ஆன்றோர் பலரும் மனமார வாழ்த்திய வாழ்த்துரைகளும் இதன்கண் காணப்படுகின்றன. வானளாவிய அழகிய திருக்கோபுரம், கன்னியாகுமரி அம்மன், கூத்தப்பெருமான், திருவரங்கநாதர், தென்குமரி—பகவதியம்மன் திருக்கோயில் ஆகிய தெய்வப் பெற்றிவாய்ந்த அழகிய திருவுருவங்களின் திருப்படங்கள் உயர்ந்த நல்ல வழுவழுப்பான தாளில் கணகவர்வனப்பான பல நிறங்களில் அச்சிட்டு இதனுடன் இணைக்கப்பட்டுள்ளன. இவையனைத்திற்கும் மணிமுடியாய் ஒவ்வொரு பக்கத்தின் அடியிலும் கார்த்தியடிகளின் பொன்மொழிகள் சிலவும் பலவும் சிறந்து திகழ்கின்றன. அவை உண்மையுடன் ஓதி ஒழுகும் வண்மைய.

இவ் வெளியீடு பொதுவாகச் செந்தமிழ் மாந்தர்க்கும் சிறப்பாகச் செந்நெறியாகிய சைவ வைணவ சமயமெய்யன்பர்கட்கும் நல்வழிகாட்டும் விளக்கமாய்த் திகழ்கின்றது. திருக்கோயில் அறங்காவலர்கட்கும், ஆணைநிறைவேற்றற் பணியாளர்கட்கும், குருக்கண்மார்கட்கும், ஏனைத் திருப்பணியாளர்கட்கும், கும்பிடவரும் மெய்யன்பர்கள் அனைவர்கட்கும் தத்தங்கடமைகளைச் சரிவரச் செய்தற்கும், தெய்வ அருள் பெறுதற்கும், திருக்கோயிலுண்மை தெளிந்துய்தற்கும் இஃதொரு கருவூலமாகத் திகழ்கின்றது இதனை அனைவர்களும் வாங்கியும் வாஙகுவித்தும் ஆதரிப்பார்களாக இது ந  நலம்பெற நாயனடியை வழுத்தி வாழ்த்துகின்றோம்.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.




சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௯, கார்த்திகை | பரல்
௫௫ திசம்பர், 1958

# பேராசிரியர் செ. ச. போசு அவர்களின்
# நூறுவது பிறந்தநாள் விழா

**உலக மேதை**

பேராசிரியர் போசு அவர்கள் உலகிற் சிறந்த அறிவியல் வல்லுநருள் ஒருவராவர். அம்மட்டுமன்று ஒரு சிறு துணையுமின்றி அளவிறந்த பெரும் எதிர்ப்புகளுக்கு இடையே உலகில் வேறெந்த அறிவியற் றிறலோரும் காணாத புதிய கண்டுபிடிப்புக் களைத் தம அரிய முயற்சியாற் றாமாகவே கண்டு பிடித்து உலகுக்குதவி மெய்ப்பித்து விளக்கிய முறையில் மிக்காருமாவர். (அறிவியல்—விஞ்ஞானம்.)

இவர் வெறும் அறிவியலார் மட்டுமல்லர்; நல்ல பன்மொழிக் கலைஞருமாவர். மேலும் நாட்டுப் பற்று மிக்க நல்லாருமாவர். நன்னெறி யென்று சொல்லப்படும் சமயச் சார்புடைய தவத்தோருமாவர். ஏழைகட்கு இரங்கும் இனியருமாவர். எளிய வாழ்க்கை வாழ்ந்துகாட்டிய அளியருமாவா. முற்றும் வழங்கிய பற்றிலாப் பெரு வள்ளலுமாவர். உலையா முயற்சி தலைநின்ற பேரா நிலையருமாவர். உலகுபுகழ் பல பெற்ற நலஞ் சார் பெரியருமாவர்.

இத்துணைச் சிறந்த உலக மேதையின் "நூறுவது பிறந்த நாள் விழா" 1958-நவம்பர், 30-ஆம் நாள் கல்கத்தாவில் போசு நிலையத்தில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. இவ் விழாவினை இந்தியப் பேரரசின் முதலமைச்சர் நேரு துவங்கி வைத்து நீண்டதோர் அரிய பெரிய விரிவுரையாற்றி யுள்ளார்.

மேலும் இந்தியக் குடியரசுத் தலைவர் டாக்டர் இராசேந்திரப் பிரசாதும், துணைத் தலைவர் டாக்டர் இராதாகிருட்டிணனும், டாக்டர் ஏ. எல். முதலியாரும் பிறரும் அவர் தம் மெய்ப் புகழை நனி மிகப் பாராட்டி யுள்ளார்கள். "போசின் பொருட் காட்சித் திறப்பு விழா" மத்திய கல்வி யமைச்சரும், அறிவியல் துறையின் அமைச்சரும ஆகிய உமாயூன் கபீர் அவர்களால் நிகழ்த்தப் பெற்றது. அவர்களும் தக்கவாறு புகழ்ந்துள்ளார்கள். கல்கத்தாவைப் போன்று சென்னை முதலிய பல்வேறிடங்களிலும் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது.



ஒரு சிறந்த அறிவியல் மேதையின் பிறப்புக் கொண்டாட்டத்தையும் வரலாற்றையும் கண்டும், கேட்டும், கற்றும் உணரும் மாணவரும் பிறரும் அம் மேதையின் பண்பாடனைத்தும் தம் பாலமையப் பாடு பட்டுப் பயிலுதல் வேண்டும். அல்லாதவழி ஏனைய விழாக்கள் போன்று வெறும் சடங்கும் ஆரவாரமுமாகக் கழியும். போசு அவர்களின் வரலாறு சொற்பொழிவுகளின் இடையே வருவதைக் காணலாம். விழாவில் இந்திய அறிவியலா ளரு வெளி நாட்டுத் தூதர்களும், கல்வியாளரும் குழுமி யிருந்தனர்.

நேரு விரிவுரையின் சுருக்கம் வருமாறு :

அறிவியலையும் ஆருயிரியலையும் ஒன்றுக இணைத்தல் வேண்டும். அப்பொழுதுதான் உலக நெருக்கடி தீரும். (அறிவியல் - விஞ்ஞானம். ஆருயிரியல் - ஆன்மீகம்.) இவ் விணைப்பே அனைத்து நாட்டின் பூசல்களைப் போக்கும் நீக்கமாகும். இங்ஙன மின்றி அறிவியல் உணர்வு மட்டு மிருந்தால் அணுக்குண்டுகள் ஆக்கும் அழி தொழிலுடன் நின்று விடுவோம். ஆருயிர்ப்பண்பாடு மட்டு மிருந்தால் சில சொற்களை மட்டும்

கொண்டு மெலிவுடன் நின்றுவிடுவோம். இவ் விரண்டினையும் இணைப்பதன் வாயிலாகவே அரசியல் வழக்கர் செய்யும் போர்ப் படை ஏற்பாடுகளின் வழியாக வரும் சிக்கல்களிலிருந்து நாம் மீள முடியும்..

படைக் குறைப்பு, அணுகுண்டின் ஆய்வு நிறுத்தம் ஆகிய வைகளைப் பற்றி உலகில் பல் வேறு பகுதிகளில் பெரியவர்கள் சொல்வழக்காடி வருகின்றனர். ஆனால் வெற்றிபெறவில்லை. தங்கள் முயற்சி வெற்றிபெறுவிடில் உலகுக்கு அழிவு ஏற்படு மென்று கருதுகின்றனர். பைத்தியக்காரர்களைத் தவிர வேறு யாரும் போரினை விரும்பார். போரினை ஒழிக்கும் ஒரே வழி ஆருயிர்ப் பண்பாட்டினைக் கையாளுதல் வேண்டுமென்பதே. ஆருயிர்ப் பண்பாட்டின் குறுகிய வழியையோ குறுகிய பயனையோ யான் கூறவில்லை. விரிந்து பரந்த நோக்கத்துடன் கூடிய ஆருயிர்ப் பண்பாட்டினையே யான் கூறுகின்றேன். புதிய அறிவியறமுறைக்கும் ஆருயிர்ப் பண்பாட்டிற்கும் இடையே நீர்க்கடப்பாகிய பாலம் அமைத்தல் வேண்டும். அஃதின்றி யமையாத தாகும். இந்த முறைதான் இந்தியாவின் உயரிய எண்ணமாக இருக்கிறது. பேராசிரியர் போசு இம் முறையினைக் கையாண்டார் என்று யான் கருதுகின்றேன்.

இதை அவர் கட்டாயமாகவோ, அல்லது மன நிறைவாகவோ கையாண்டாரா என்பது எனக்குத் தெரியாது எனினும் இவ் விரு பண்பாடுகளையும் இணைக்க அவர் முயன்றார் என்ப.

இந்தியக் குடியரசுத் தலைவர் கூறியவற்றின் சுருக்கம்:

அறிவியல் துறையில் ஆராய்ச்சிக்காகப் பெயர் போன போசின் மற்றச் சிறந்த பண்பாடுகளை மக்கள் நினைப்பதில்லை. அவர் சிறந்த நாட்டுப் பற்றினர். ஏழைகளின் நண்பர். ஏழை களின் பொருட்டு ஓர் அறங்காவற் குழு அமைத்துள்ளனர். அதிலிருந்து ஓரளவு சுரங்கத் தொழிலாளரிடை மதுவிலக்கைப் பரப்பப் பயன் படுத்தினர். யானும் இம் மதுவிலக்குப் பணியில் உழைத்துள்ளேன். கல்கத்தா பல்கலைக் கழகத்தில் யான் போசின் மாணவனாக விருந்து இயற்கைப் பொருள் (பௌதிக) நூல்களைக் கற்றுள்ளேன். அம் முறையில் குரு என்ற வகையிலும் என் வணக்கததைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்தியக் குடியரசுத் துணைத் தலைவர் பேசியதன் சுருக்கம்:

அறிவியலும் மதமும் ஒன்றுக்கு ஒன்று முரணானவையல்ல. மூட நம்பிக்கைதான் இவைகளுக்கு முரண்பட்டது. உலக முற் றும் ஒன்று. அதுவே பல் வேறு உருவங்களில் காட்சி யளிக்

கிறது என்பதே மக்களின் கருத்து. அறிவியலாளனும் இந்த உண்மை அடிப்படையில்தான் முயலுகின்றான். மக்கள் மதப் பழக்கத்தால் இவ் வுண்மையைக் காண்கின்றனர். அறிவியலாளனோ ஆராய்ச்சி மூலம் அறிய முயலுகின்றான். யான் கல்கத்தாப் பல்கலைக் கழகத்து ஆசிரியருள் ஒருவனைப் பணியாற்றிய பொழுது போசுடன் நெருங்கிப் பழகிய பழக்க முண்டு. அவர் சிறந்த அறிவியலாளர் மட்டுமல்லர், நாட்டுப் பற்றும் மதப் பற்றும், கலையுணர்ச்சியும் கொண்டவர். போசு நிலைநாட்டிய நிலையம் ஓர் ஆராய்ச்சிச் சாலை மட்டும் அன்று. ஒரு கோவிலாக வும் கூறலாம். இந் நிலையத்தை நாட்டிற்கு உரிமைப் படுத்தி அவர் நிகழ்த்திய சொற்பொழிவு ஒருவராலும் மறக்கமுடியாது. எவ்வளவோ அல்லல்களையும் பொருட்படுத்தாது உண்மை இறுதியில் வெற்றியடையுமென்று நம்பி ஆராய்ச்சிகளில் ஈடுபட்டார்.

டாக்டர் ஏ. எல். முதலியார் பாராட்டின் சுருக்கம்:

அறிவியலாளரை அறிவியலாளா நமபுவதில்லை என்பது போசு செய்தியிலும் காணப்பட்டது. ஆனால் போசு தமது முயற்சியைக் கைவிட்டதில்லை. அது காரணமாக இன்று நிலையியற் பொருள்களாகிய மரம் செடி கொடிகளின் நூல் முதன்மையான இடத்தைப் பெற்றுவிட்டது. நிலையியற் பொருள்களாகிய தாவரங்களுக்கும் உயிருண்டு என்பதை அவர் மெய்ப்பித்துக் காட்டி விட்டனர்.

பொருட்காட்சியினைத் திறந்து வைத்த மத்திய கல்வியமைச்சர் உமாயூன் கபீர் பேசியதின் சுருக்கம்:

போசு கையாண்ட அறிவியற் கருவிகள், உலக அறிவியலாளர், எழுத்தாளர், அரசியல் வல்லுநர் முதலியோர் எழுதிய கடிதப் போக்கு வரத்துக்கள், தொகுத்துள்ள நூல்கள் பொருட்காட்சியில் வைக்கப்பட்டுள்ளன. இந்தியாவில் அறிவியற்றுறைகள் ஒரு காலத்தில் சிறந்திருந்தன. போசு ஆராய்ச்சி துவங்கிய காலததில் நல்ல சூழ்நிலையிலலை. எதிர்ப்புக்களுமிருந்தன. அந் நிலையில் அவர் உரமுடன் செய்த செயல்களை இத் தலைமுறையார் பின்பற்றுதல் வேண்டும். போசின் எழுபதாவது பிறந்த நாள் கொண்டாட்டத்தை யொட்டிப் பெரிய தலைவர்கள் எழுதிய வாழ்த்துக் கடிதங்கள் பொருட்காட்சியில் வைக்கப்பட்டுள்ளன.

காந்தி யடிகள் எழுதியது:

"நான் ஒரு முட்டாள். வெளியில் நடக்கும் செய்திகளை அறியாமல் கிணற்றுத் தவளை போலிருக்கிறேன். நேற்றுத்தான்

உங்கள் பிறந்த நாளைப் பற்றிக் கேள்விப் பட்டேன். காலம் தாழ்த்தாலும் என் வாழ்த்துக்களை மற்றவர்களுடன் தெரிவித்துக் கொள்கிறேன். உங்களுக்குள்ள ஆற்றல், பெருமை ஆகிய இவை மேன்மேலும் இந்தியாவுக்குக் கிடைக்கும் பொருட்டுத் தாங்கள் நீண்ட காலம் வாழுதல் வேண்டும்”

சார்ச்சு பர்னட்சா தாம எழுதிய பதது நூலகளைப போசுக்குப் பரிசாகக் கொடுத்து அதில் “உயிருடன் உள்ள பொதுவான (எளிய) உடற்கூற்றுத் திறலோர் முதல் பெரிய உடற்கூற்றுத் திறலோர் வரை” என்று குறிப்பிட்டிருந்தனர்.

ரோமன் ரோலண்டு “புத்தியின் புதுப் பகுதியைக் கண்டு பிடித்த முதல் மேதை செகதீசு” என்று குறிப்பிட்டிருந்தார்.

**வாழ்க்கை வரலாறு**

போசு வஙகாள மாநிலத்தைச் சார்ந்த டாக்காவில் விக்கிரம் பூர் என்ற ஊரில் 1858-ஆம் ஆண்டு நவம்பர்த்திங்கள் 30-ஆம் நாள் பிறந்தார். திண்ணைப் பள்ளியில் பயின்ற பின் கல்கத்தாவில் மேற் படிப்புக் கற்றனர். கல்கத்தாப் பல்கலைக் கழகத்தில் இளங் கலைஞர் (பி. ஏ.) பட்டம் பெற்றனர். இவர்தம் தந்தையார் முறைமன்றத் துணைநடுவராகப் பணியாற்றி வந்தனர்.

போசு 1881-இல் இங்கிலாந்து சென்று ஆங்குள்ள கேம்பிரிட்சிலும், இலண்டனிலும் கல்வி கற்றனர். முதற் பொருள் (ரசாயனம்) இயற்கைப் பொருள் நூல், நிலையியற் பொருள் நூல், உயிர் நூல் முதலியவற்றைக் கற்றிருந்த போதிலும் அவர் இலண்டன் பல்கலைக் கழகத்தில் சேர்ந்தபோது மருத்துவ முறையினைத்தான் பயிலத் தொடங்கினர். ஓராண்டு மருத்துவக் கலை படித்ததும், பிணத்தை அறுத்துப் பார்க்கும் வகுப்புக்களில் ஆராய்ச்சி செய்வது அவருக்குப் பிடிக்கவில்லை அதனால் அப் படிப்பை நிறுத்தி விட்டனர். பின் அறிவியல் துறையில் பயின்று அறிவியல் இளம் புலவரென வெற்றி பெற்றனர்.

1885-ஆம் வருடம் போசு இங்கிலாந்திலிருந்து தாயகம் திரும்பினர். கல்கத்தா மாநிலக் கல்லூரியில் அறிவியற் பேராசிரியராகக் குறைந்த ஊதியத்தில் வேலை பார்த்தார். அங்ஙனம் வேலை பார்ப்பதற்குத் துணையாக இருந்தது இங்கிலாந்தில் அரசியல் உயர் நிலையிலிருந்தவரும், அஞ்சற் பகுதித் தலைமையாளராய் விளங்கியவருமாகிய பேராசிரியர் பாசெட் எழுதி நல்கிய கடிதமே யாகும்.

அப்பொழுது இந்தியாவின் அரசப் பிரதிநிதியாக விருந்த ரிப்பன் பிரபுக்குக் கொடுக்கப்பட்டதாகும் அக் கடிதம். ரிப்பன்

பிரபுவின் விடாத் தூண்டுதலினாலேயே போசு கல்கத்தா மாநிலக் கல்லூரியில் பொருட்டன்மை ஆசிரியராக அமர்ந்தனர். அந் நாளில் கல்வித் துறைத் தலைவராயிருந்த ஆல்பிரட் கிராஃப்ட் என்பவரும், கல்கத்தா மாகாணக் கல்லூரித் தலைவராயிருந்த டானி என்பவரும் போசு அவ்வேலையில் அமர்த்தப் படுவதை மிகவும் கடுமையாக எதிர்த்தனர்.

அவர்களுடைய முடிந்த முடிவான கருத்தாவது ஓர் இந்தியன் அறிவியற் கல்வியைப் புகட்டுவதற்கு உரிமையுடையவன் அல்லன் என்பதே. ரிப்பன் பிரபுவின் வலுக் கட்டாயத்தின் மேல வேண்டா வெறுப்பாய் அறிவியல் துறை அலுவல் கொடுக்கப்பட்டது. கொடுக்கப்படினும் ஆங்கிலேயர்களுக்கு அதே வேலைக்குக் கொடுக்கப்படும் ஊதியத்தில் மூன்றி லொரு பங்கே கொடுத்தனர். அதனை வாங்க மறுத்துவிட்டு மூன்று ஆண்டுகள் முடிய ஊதியம் பெறாமலே உழைத்தனர் இவர்தம திறமையைக் கண்டு அவ் வெதிர்ப்பாளரிருவரும் தங்கள் தவற்றுக்கு வருந்தினர். திறமையை வியந்து பாராட்டி முழு ஊதியமும் கொடுப்பித்தனர்.

மின்னாய்வு

1895-ஆம் ஆண்டில் மின்சார ஆராய்ச்சியில் ஈடுபட்டனர். "மின்சார அலைகள்" என்னும் பொருள்பற்றிப் போசு எழுதிய புத்தகம் எல்லாப் பேராசிரியர்களையும் பெரியதோர் துணுக்கங் கொள்ளச் செய்தது. அவ் வாய்வு மூன்று வகைப்படும. அவை க. மின்சார அலைகள் ஒலி அலைகளை ஒத்திருக்கின்றன. உ. நிலைத் திணைப் பொருள்களாகிய மரம் செடி கொடிகளும், விலங்குகளைப் போன்று உயிருடையன. ங. எல்லா உயிர்களுக்குந் தொடர்புண்டு என்பன.

இது வன்றியும் மின்னாற்றலால் கம்பியில்லாமலே தந்திச் செய்திகளை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு அனுப்ப முடியும் என்ற வழியை உலகில் முதல் முதல் கண்டுபிடித்த தனிப் பெருமையும் இவருக்குத்தான் கொடுக்கப்பட்டிருத்தல் வேண்டும். இவர் கண்டு பிடித்த கண்டு பிடிப்புக்களுக்குத் தன்னுரிமைப் பதிவு (Patent) செய்திருப்பின் பல் கோடிப் பெருஞ் செல்வராகத் திகழ்ந்திருப்பர். மேலும் கம்பியில்லாத் தந்தியைக் கண்டு பிடித்த முதல் இந்தியர் என்ற பெருமையையும் பெற்றிருப்பர்.

1895 நவம்பர், 10-இல் கல்கத்தா நகரப் பொது மண்டபத்தில் வங்காள ஆளுநர் தலைமையில் மின்சார அலைகளைக் கம்பியின்றிச்

செலுத்தி வெடி மருந்துகளையும் துப்பாக்கிகளையும் வெடிக்கச் செய்து காட்டினர். இவ் வியத்தகு ஆய்வால் இவர் தம் பெயரும் புகழும் மேனாடுகள் எங்கணும் பரவியன. இலண்டன் பல்கலைக் கழகம் "அறிவியற்றுறைப் பேராசிரியர்" (Doctor of Science) என்ற பட்டத்தை வழங்கியது.

ஆணையாளராகச் செல்லுதல்

1900-ஆம் ஆண்டு "இராயல் சொசைட்டி ஆராய்ச்சிக் கழகத்தில்" வேலை பார்த்தார். பாரிசில் நடந்த அனைத்துலக அறிவியல் மாநாட்டில் இந்தியாவின் சார்பாக இந்திய அரசாங்கத்தினால் ஆணையாளராக இவர் அனுப்பப்பட்டார். பிரெஞ்சுநாட்டு இயற்கைப் பொருள் நூல் ஆராய்ச்சிக் கழகம் இவரை அன்புடன் வரவேற்று ஒரு மேன்மை உறுப்பினராகச் சேர்த்துப் பெருமைப் படுத்திற்று. ஆணையாளர் - பிரதிநிதி

1902-இல் ஆக்ஃசுபோர்டு, கேம்பிரிட்சு பல்கலைக் கழகத்தில் இவர் அரியதோர் சொற்பொழிவாற்றினர். அதனைக் கேட்ட அனைத்துலக அறிவியலாளர்வரும் மருண்டு போயினர். வெவ்வேறு முதற் பொருள்களாகிய உலகங்களில் மின்சாரம் பாய்வதினாலும் நஞ்சு ஏறுவதினாலும உண்டாகும் மாற்றத்தினை நன்றாக வுணர்ந்த போசு அவையும் உயிரினங்கள் போலவே தங்களில் ஏற்படும் மாற்றத்தைப பதிவு செய்கின்றன என்று விளக்கிக் காட்டினர். இவ் வாய்ப்பினை உலகிற்கு முதலிற் காட்டியவரும் இவரே.

1913-ஆம் ஆண்டில் இவர் தம் ஐம்பத்தைந்தாம் அகவையில் வங்க அரசினர் "எமிஸ்டசு" ஆசிரியராக அமர்த்தினர். இவருக்கு வாழ்நாள் முற்றும் முழுச் சம்பளம் அளித்து வங்க ஆளுநர் ஒரு தனிக் கெசட்டுவாயிலாக வெளிப்படுத்தினர்.

நிலைத்திணைப் பொருள் நிலை

மரஞ் செடி கொடிகளுக்கும் எல்லா வுணர்ச்சிகளும், விருப்பு வெறுப்புக்களும், வாழ்க்கையும, மக்களைப் போன்றன வென்றே கருவிகளின் வாயிலாக மெய்ப்பித்துக் காட்டினர். எல்லாரும் அறிவியல் துறையின் தந்தை உலக மேதை என்று பலவாறு புகழ்ந்தனர்.

கல்கத்தா திரும்பியதும் ஆசிரியர் பிரபுல்லர் இவர்க்கு "யுகப்பிரவர்த்தகர்" என்ற பட்டத்தை வழங்கினர். 1903-இல் சி. ஐ. சி. பட்டமும், 1911-இல் சி. எஃச். ஐ. பட்டமும், 1917-இல் 'சர்' பட்டமும் அரசினர் வழங்கினர்.

**போசு ஆராய்ச்சிக் கழகம்**

1917-இல் போசின் ஐம்பத்தொன்பதாம் அகவை முடிவில் தான் ஈட்டிய பெரும் பொருளைக் கொண்டு "போசு ஆராய்ச்சிக் கழகம்" என்ற நிலையத்தை அமைத்தனர்.

**நன்கொடைகள்**

போசு தான் தேடிய பொருள் முற்றையும் நாட்டுக்கீந்த நயஞ் சார் பெரு வள்ளலாராவர். 'கல்வியின்' பொருட்டுப் பதினேழு லட்சமும், 'விஞ்ஞான தாவர ரசாயன' ஆராய்ச்சிக்காகப் பல லட்சங்களுக்கு மேல் மதிக்கப்படும் "போசு ஆராய்ச்சிக் கழகத்தையும்" ஈந்தனர். காங்கிரசுக்கு மூன்று லட்சம நல்கினர். கல்கத்தாப் பல்கலைக் கழகதத்துக்கு ஐம்பதினாயிரம் நல்கினர். பீகார் கல்கத்தா வாசிகளின் சமூக முன்னேற்றத்தின்பொருட்டு ஒரு லட்சம உதவினர்.

**ஆய்வுச் சிறப்பு**

* செடி கொடிகளுக்கு நெஞ்சம உண்டு. குருதி யோட்டம் உண்டு, மகிழ்வும் களைப்பும் உண்டு. அவைகள் இரவு பன்னிரண்டு மணி முதல் காலை எட்டு மணி வரை உறஙகுகின்றன. அவைகளுக்கு இறப்பும் உண்டு. அவைகளுக்குக் கேடு வரா வண்ணம் பெயர்த் தெடுத்து ஊன்றினல் அவைகள் இறவாமல் பிழைத்துக் கொள்ளும். உலோகங்களை நச்சுப் பொருளகளைக் கொண்டு அழித்து விடலாம்.

**பேராவியற்கைப் பெருவாழ்வு**

1937-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 22-ஆம் நாள் கல்கத்தாவில் தம் எழுபத்தொன்பதாம் அகவையில் மார்படைப்பினல் பேராவியற்கைப் பெருவாழ்வு எய்தினர். இப்பொழுது அவர் தம் நூற்றாண்டு விழா பல் வேறிடங்களில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பட்டுள்ளது. இது போன்று பன்னூறாண்டு பாராட்டுப் பெற்று மக்களுக்கு வழிகாட்டியாக இருக்க வேண்டுமென்று வாழ்த்துகின்றோம்.

---

* ஆருயிர்க்கு மல நீக்கத்தின் பொருட்டு ஆண்டவனல் கொடுத்தருளப்பட்டுள்ள உடம்புகள் இரு வகை. ஒன்று நுண்ணுடம்பு. மற்றொன்று பருவுடம்பு. நுண்ணுடம்பு அனைத்துயிர்க்கும் ஒன்றுபோன்றமைந்தது. பருவுடம்பே அறிவு விளக்க வேறு பாட்டு ஓரறிவு முதல் ஆறறிவு ஈருக வேறுபாடுடையன. இம் முறையால் மரஞ் செடி கொடிகளும் உயிரியல்பாலும் நுண்ணுடம்பாலும் நம்மைப் போன்றனவே. இவை நம் முன்னேர் கண்டு உலகுக் குணர்த்திய உலவா உண்மையாகும்.

# கிறிஸ்துமஸ்

[திரு. இராசையா]

குமுத மலரினம் மலர்ந்து விரிகின்றன. நிலாமணிக்கல் கரைந்து நீரா றது. ஆழியின் இறுமாபபுக்கு அளவில்லே. செங்கதிர்க் கனலின் வெப்பம் சென்று குளிர்ச்சியை அழைக்கின்றது! விண்டலம் அனைத்தும் விளங்கு மணியணி வனப்புடன் உற்றுநோக்குவாரின் உள்ளதைதைக் கொள்ளைக் கொளல் வியப்போ? திங்கள் தன் புன்முறுவலின் குளிர்ந்த அருளொடு ஞாலவானங்களை அரசாளுகின்றான்.

அவ்வமயம், அதோ, விண்மீன் ஒன்று திங்களைக் கடந்த ஒளியுடன் ஒளிர்கின்றது! வையகம் வஞ்ச மற்ற வெளிச் சமயம். அங்குத் தொடர் மலையொன்று உயர்ந்த தன் குவடுகளால் கடவுளின் சீர்மை வன்மை வனப்புக்களை விளம்பா நின்றது! பகற் பொழுது, பரிதி பறக்குங்கால், அக் குவடுகள்—மேல் அணியப் பெற்றுள்ள பனிக் கட்டிக் கண்ணுடியில் கடவுளின் உருநிழலைக் காணலாம்; ஆனுல் இப்போழ்தோ, அவை உலகக் காவல் மறவரெனத் திகழ்கின்றன! அம் மலையின் அடியிலே சிறு கண்ணுடிகளைக் கடுப்ப ஆங்காங்குத் தென்படும் தண்ணீர்க் குளங்களைக் கண்ணுற்றுக் களிமின். அவற்றிற்கு அண்மையிலே, புது விண் மீனின் நனி வெளிச்சத்தை நேரே பெறுகின்றதொரு தனிக் குகை! இம் முறைஞ்சின் மாட்சிதான் என்னே! ஒரு தனிக் குகைக்கு ஒரு தனி விண்மீன்!!

புகுவோம் அக் குகைக்குள். மாட்டுக் கொட்டில் என்னும் வானந் தன்னில், ஒரு குழந்தையின் முகம் விண்மணியென விளங்க, மற்றனைத்தும் துணிகள் என்னும் முகில்களால் மூடப் பெற்றுள்ளது. சிறிய அம்மதலையின் கரங்கள் அருகிலுள்ள தன் அன்னையையும எட்டாதுள்ளன; ஆனல், நினைவில் நில்லா இப் பரந்த பாரின்கண் மிளிரும் எண்ணிலடங்கா விண்ணெளிகளை வழி செலுத்துவன இக் கரங்களன்றி மற்றி யாவை? பாங்கருள்ள புல்லைப் பிடிக்க வொண்ணுத இவ் விரல்களன்றே கடையூழிநாளில்—உள்ளம் நடுநடுவென நடுங்கச் செய்யும் அக் கடைசித் தீர்ப்பு நாளில் நீவிர் சான்றோர், அவரோ கயவர் என்று சுட்டிக் காட்டும்! அக் குழந்தையின் விழிகளை உற்றுப் பார்மின்: அருளும் மன்னிப்பும் அன்றி மற்றென்ன மிளிர்கின்றன? அச் சிறிய நெஞ்சில் எழும் இதய ஒலி கேண்மின்: "அனைத்தும் ஆண்டவன் சீர்மைக்காகவே"; அவ் விதயத்தில் நிறைந்துள்ளது மனிதர்க்கு வேண்டிய எல்லா அருட் செல்வமும். அவ்விள விதழ்களைக் காண்மின் இன்னும் சிறிதளவில்

ஆறுதல் பொழியும் சால்பு மொழிகளை மிழற்றும். அதோ! அச் சென்னியில் மின்னும் அறிவு முன்னர் உலகத்து உதித்த அறிவாளர் அனைவரின் அறிவு வெறும் வெறுமை: அவ்வறிவுச் செறிவுக் கண் பிலேட்டோவும் அறிஸ்டோடிலும் தத்துவ வியலில் எளியவராவர்; காளிதாசரும் சேக்ஸ்பியரும் தளிர் கவிஞராவர்; தற்காலத்து அறிவியலார் கற்றுக் குட்டிகளாவர்! அளவில் ஆழிமுன் நீர்த்துளி ஒன்றென்னை? விண்மணி முன்னர் மின்மினி என்னை? என்னே! இக் குழந்தையின் செழுமை!!

இன்னவர் பிறப்புத் திருநாட்கு இம் மொழி, இவ் வகுப்பு, இந் நிறம், இந் நாடு, இக் காலம என்னும் வேற்றுமையுண்டோ? கிறித்துவின் பிறப்பின் சிறப்பு எழுத்தில் அடங்குமோ, எண்ணில் அடங்காக் கால்! ஆண்டுகள் ஆயிரக் கணக்காக, மக்கள் காத்துக் கொண்டிருக்கத் தோன்றிய பிறப்பின் சிறப்பு எத்தகையது என்போம! இப் பிறப்பின் வகையை எத்துணை முன்னறிவுரைகள் எஙஙனம் தெரிவித்தன வென வரைதலும் வேண்டுமோ? தெரிவித்த வகையே நடந்த திப்பிறப்பு என்னில் அதனின் சிறப்பு வெள்ளிடைமலை யன்றோ?

அழகு மிக்க இக் குழந்தையின் பிறப்புப், பல்லோவியக் காட்சிக் கருவி (Kaleidoscope) யில கண்டாற் போல், இன்னும் சிறந்த முறையில் தோற்ற மளிக்கின்றது!

---

சிவனடி நீழல்சேர்ந்த சிவத்திரு

## வாலையானந்த அடிகள்

அடிகளார் கொரடாச்சேரி—சித்தாந்த நிலைய முதல்வராவர். இவர்கள் 1958 அக்டோபர்த் திங்கள் 21-ஆம் நாள் சிவநிறைவெய்திச் சிவமாம் பெருவாழ்வு பெற்றனர்.

அடிகளாரைப் பிரிந்த நாம் தாயைப்பிரிந்த கன்றெனத் தளர்கின்றோம். அடிகளார் சித்தாந்த முதல்வராகத் திகழ்ந்தனர். சித்த மருத்துவத் தலைவராக வயங்கினர். செந்தமிழ்ப் புலவர்; பன்னூலாசிரியர்; நன்னெறிக்குரவர். உடல்நோய், உயிர்நோய் அகற்றும் மருத்துவச் செம்மல். "சச்சிதானந்த தேசிகர்" என்னும் சிறப்புப் பெயரினர்.

அடிகளாரின் விரிவான வரலாறு செல்வியில் பின் வெளிவரும். அடிகளார் திருவடி வாழ்க

---

# ‘இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே’

[திரு. புலவர் ‘அரசு’]

குற்றியலுகரம் ‘நெட்டெழுத் திம்பருந் தொடர்மொழி யீற்றும் வல்லாறூர்ந்து’ வரும் என்பது தொல்காப்பிய விதி (தொல். எழுத்து - ௩௬). இதற்கு உரையாசிரியர் இளம்பூரணர், ‘நெட்டெழுத் திம்பரும் தொடர் மொழியீறும் இடம். வல்லெழுத்துப் பற்றுக்கோடு’ என விளக்கங் கூறுகிறார். எனவே, குற்றியலுகரம் மொழிக்கிறுதியிலேயே வருமென்பதாயிற்று.

இனி, மொழிமுதலில் நுந்தை யென்னும் முறைப் பெயரின் முதலில் நகரமூர்ந்த உகரமும் குற்றுகரமாம். இது மொழிமுதற் குற்றுகர மெனப்படும். இதற்குக் ‘குற்றியலுகரம் முறைப் பெயர் மருங்கின் ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும்’ (தொல். எழுத்து - ௬௭) என்பது விதி. இவ்வாறு மொழி முதலில் வரும் குற்றுகரம் ஒன்றே. இவ்வாறே புணர்மொழி யிடையினும் ஒரு குற்றியலுகரமுண்டு அது வன்றொடர்க் குற்றியலுகரம் வல்லின முதன்மொழியோடு புணருமிடத் துளதாம். இக் குற்றுகரத்தைப் பற்றியதே இச் சிற்றூராய்ச்சி.

குற்றியலுகரம் மொழியிறுதியில் வரும் என்ற தொல்காப்பியர் (தொல். எழுத்து - ௩௬) புணர்மொழியிடையினுங் குற்றுகரம் உளதென்றுணர்த்த, ‘இடைப்படிற் குறுகும் இடனுமாருண்டே—கடப்பாடறிந்த புணரியலான’ (தொல. எழுத்து - ௩௭) என்றூர் அதாவது ‘புணர்ச்சிமுறை யறியும் குற்றியலுகரப் புணரியலின்கண்ணே புணர்மொழியிடைப் படினுங் குறுகும்’ என்பதாம்.

மொழிமரபிலே குற்றியலுகரத்திற் கிலக்கணங் கூறிய ஆசிரியர் குற்றியலுகரப் புணரியலில் முதற் சூத்திரத்திலே அதற்கு வகை கூறுகிறூர் பின்னர், அக் குற்றியலுகரங்கள் வருமொழியோடு புணருமிடத்து அல்வழியாயினும் வேற்றுமையாயினும் எல்லா இறுதியும் வரும் உகரங்கள் நிறைந்து நிற்கும் என்[illegible]ர்.

> “அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
> எல்லா இறுதியும் உகரம் நிறையும்.” (தொல். எழுத்-௪0௧)

எனபது அச்சூத்திரம். இச் சூத்திரத்தின்படி [illegible]
எல்லாம் வருமொழியோடு புணர்ந்தபிறகு முற்றியலுகரமாகவே ஒலிக்கும் என்பதாயிற்று. இதற்கு இளம்பூரணர், ‘அல்வழியைச் சொல்லு மிடத்தும் வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண்ணும்

ஆறு ஈற்றுக் குற்றியலுகரமும் நிறைந்தே நிற்கும்' என உரை கூறுகிறார்.

எனவே, உகரம் தனிக்குற்றெழுத்தைச் சாராத மற்றைய எழுத்துக்களுக்குப் பின் சொல்லிறுதியிலே தன் ஒலியிற் குறைந்து வரும் என்பதும அவ்வாறு குறைந்துவரும் உகரம் வருமொழியோடு புணருமிடத்து முன்போல நிறைந்துவிடும் என்பதும தொல்காப்பியர் கருத்தெனத் தெரிகிறது. அதாவது புணர்மொழியிடை முற்றியலுகரமாகவே யிருக்கும் என்பதாம்.

இனி, இவ் வறுவகைக் குற்றியலுகரங்களில் வன்றொடர்க் குற்றியலுகரம் வல்லெழுத்து முதன்மொழியோடு புணருமிடத்து மட்டும் முற்றியலுகரமாக நிறையாமற் குற்றியலுகரமாகவே நிற்குமென்பதை 'எல்லா இறுதியும் உகரம் நிறையும்' என்ற சூத்திரத்திற்குப் பின்,

> "வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழி
> தொலலை யியற்கை நிலையலு முரித்தே."
>
> (தொல். எழுத் - சகo)

என்று கூறி முன் சூத்திரத்தில் எய்தியதை ஒருமருங்கு மறுத்தார். இதனை இச் சூத்திரத்திற்கு இளம்பூரணர், 'அவ்வீற்றுள்ளும் வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து முதன்மொழியாய் வருமிடத்து முன்கூறிய இயற்கை நிற்றலும் உரித்து' எனக் கூறும் உரையும் வலியுறுத்துகிறது. இச் சூத்திரப் பொருளையே, 'இடைப்படிற் குறுகும் இடனுமாருண்டே—கடப்பாடறிந்த புணரியலான (தொல் எழுத் - ஙஎ) என மொழி மரபிலே சுட்டினர்.

இவ்வாறாகவும், தொல்காப்பிய உரையாசிரியர்களுள் ஒருவரான நச்சினார்க்கினியர் புணர்மொழி யிடைப்படினும் உகரம் குறுகியே நிற்குமெனுங் கருத்தினராய், அக் கருத்துக்கேற்பவே உரை கூறினர்.

அக் கருத்துள உரைப்பகுதிகள் மட்டும்:

1. 'இடைப்படிற் குறுகும்............புணரியலான' (தொல். எழுத்து - ஙஎ) உரைப்பகுதி: "அவ்வுகரம் ஒருமொழியு ளன்றிப் புணர்மொழி யிடைப்படின் தன் அரை மாத்திரையினுங் குறுகும் இடனும் உண்டு. அதற்கு இடனும் பற்றுக்கோடும் யாண்டுப் பெறுதும் எனின், அதன் புணர்ச்சி முறையறியுங் குற்றியலுகரப் புணரியலுள் என்றவாறு.

'வல்லொற்றுத் தொடர்மொழி' (சoக) என்பதனுள் வல்லெழுத்துத் தொடர்மொழியும் வல்லெழுத்து வரும் வழியும் இடம், ஈற்று வல்லெழுத்துப் பற்றுக் கோடு."

2. 'அல்லது கிளப்பினும........உகரம நிலையும்' (தொல். எழுத்து - சoஅ) உரைப்பகுதி: "எல்லா இறுதியும் உகரம் நிலையும்—ஆறு ஈற்றின் கண்ணும் உகரம் தன் அரை மாத்திரையைப் பெற்றே நிற்கும்."

"இருமொழிப் புணர்ச்சிக்கண் ஒரு மாத்திரை பெறும் என்றார்க்குப் பன்மொழிப் புணர்ச்சியாகிய செய்யுளிலக்கணங் குற்றுகரத்தான் நேர்பசை நிரைபசை கோடலும், அவற்றான் அறுபது வஞ்சிச்சீர் கோடலும், பததொன்பதினயிரத் திருநூற்றுத் தொண்ணூற்றொரு தொடைகோடலும் இன்றாய், முற்றுகரமாகவே கொளளவேண்டுதலின் மாறுகொளக் கூறுதல் என்னுங் குற்றந் தங்கும் என்க."

3. 'வல்லொற்றுத் தொடர்மொழி.........உரித்தே' (தொல். எழுத்து - சoக) உரைப்பகுதி: "முன்னின்ற சூத்திரத்து, நிறையும் என்று பாடம் ஓதி, அதற்கு உகரம் அரை மாத்திரையிற் சிறிது மிக்குநிற்குமென்று பொருள்கூறி, இச் சூத்திரம் பழைய அரைமாத்திரை பெற்று நிற்குமென்று கூறுவாருமுளர்."

இவ் வுரைப்பகுதிகளை நோக்குமிடத்துச் செய்யுளியலுள் அசையுஞ் சீருங் கோடற்குக் குற்றியலுகரமாகவே யிருததல் வேண்டுமென்பதற்கே நச்சினார்க்கினியர் இவ்வாறு உரை கூறினார் என்று தெரிகிறது. இவ்வாறு கொண்டதனால், வல்லொற்றுத் தொடர்மொழிக் குற்றுகரம் வல்லெழுத்து வருவழித் தன் அரை மாத்திரையினுங் குறுகுமென்றும் உரைகொள்ள நேர்ந்தது.

நச்சினார்க்கினியருடைய இக்கருத்தையே நன்னூல் விருத்தியுரை யாசிரியரும், 'நெடிலோடாய்தம்' என்னும் குற்றியலுகரச் சூததிர உரையில்,

"இனி, மொழிந்த பொருளோடொன்ற அவ்வயின் மொழியாததனையும முட்டின்றி முடித்தலென்னும் உத்தியான், நுந்தையென்னும், 'முறைப்பெயர் மருஙகின் ஒற்றிய நகரமிசை' உகரம் ஊர்ந்து மொழிமுதற்கண் நிற்பினும் குற்றுகரமாமெனவும், அவ்வுகரம் 'சுக்குக்கணை', 'சுக்குக்கொடு' எனப் புணர்மொழி யிடைப்படினும் தன் அரை மாத்திரையிற் குறுகுமெனவுங் கொள்க."

என உரைத்தார்.

நச்சினார்க்கினியரும் இவரும் இவ்வாறு கோடற்குத் தொல்காப்பியச் சூத்திரங்கள அமைவு தந்தில. செய்யுளிலக்கணததில் வெண்பா விறுதியிற் குற்றுகரம் போலவே முற்றுகரங்களையுங்

கொண்டு அலகிடல் தவறுகாமைபோல, குற்றுகரம் வருமொழியொடு புணர்ந்து முற்றுகரமாகிய வழியும் குற்றுகரம் போலவே அலகிடல் இழுக்காகாது.

மற்றும் நச்சினார்க்கினியர், 'நிலையும்' என்ற பாடங் கொண்டாலும குற்றியலுகரமெனக் கொள்ளவேண்டு மென்பதில்லை. ஏனெனில், 'குற்றியலுகரம் நிலையும்' என்றில்லாமல், 'உகரம் நிலையும்' என்றே உள்ளது. அதிகாரத்தாற் குற்றியலுகரம் எனக் கொள்ளுமாறும் சூத்திரங்கள் அமைந்தில என்பதைச் சூத்திரக்கிடக்கை முறைகாட்டும். அவை:

"ஈரெழுத் தொருமொழி உயிர்த்தொடர் இடைத்தொடர்
ஆய்தத்தொடர் மொழி வன்றொடர் மென்றொடர்
ஆயிரு மூன்றே உகரம் குறுகிட —" (௧)

"அவற்றுள்,
ஈரொற்றுத் தொடர்மொழி யிடைத்தொட ராகா" (௨)

"அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
எல்லா இறுதியும் உகரம் நிறையும்." (௩)

தொல்காப்பியச் செய்யுளியல் கஉ-ஆம் சூத்திர உரையில், "ஞாயிறு முதலியன முற்றியலுகரம் போலக் கொள்ளப்படுமன்றிக் குற்றியலுகரம் முற்றியலுகரம் ஆகாது. அங்ஙனங் கொள்ளின் குற்றியலுகரப் புணரியலுள், 'நிறையும்' என்று ஆசிரியர் பாடஙகொண்டதற்கு ஒரு பயனின்றாம்" என்று பேராசிரியர் கூறுவதால் அவருக்கும் புணர்மொழி யிடைப்படுங் குற்றுகரம் முற்றுகரம்போலவே ஒலிக்குமென்பது கருத்தாகலாம்.

கூறியவாற்றால், புணர்மொழியிடைப்படுங் குற்றுகரம்—வன்றொடர் வல்லெழுத்தொடு புணருமிடந் தவிர மற்றைய எல்லாத் தொடரிலும்—அல்வழியாயினும் வேற்றுமைப் புணர்ச்சியாயினும் முற்றுகரமாகவே ஒலிக்குமென்பது தொல்காப்பியர்க்கும், உரையாசிரியர் இளம்பூரணருக்குங் கருத்தாமென்பதும், நச்சினார்க்கினியரும் நன்னூல் விருத்தியுரை யாசிரியரும் இக்கருத்துக்கு மாறுபடுகின்றன ரென்பதும் ஆராயப்பெற்றன.

செய்யுளியல் கருதி நச்சினார்க்கினியர் கொண்ட கருத்துப் பாராட்டத்தக்கதே யெனினும் எழுத்ததிகாரத்தில் தொல்காப்பியச் சூத்திரங்கள் இணங்கி வராமை கருதத்தக்கது.

---

# தேனீ

[வித்துவான், திரு. பெ. கோவிந்தனார்]

1. தேனீ தேனீயே—தேனினைத்
தேடுந் தேனீயே
தேனின் சுவையினைப்போல்—உலகினில்
தித்திப்ப தொன்றிலையே.

2. மாவின் தீங்கனியும்—பலவின்
மணநா றுஞ்சுளையும்
ஆவின் தீம்பாலும்—தேனின்
அருஞ்சுவைக் கொப்பாமோ ?

3. வானிற் பறந்துசென்று—தேனீயே
வண்ண மலர்நுழைந்து
தேனைநீ சேர்க்குமதிறம்—எம்மால்
செப்பற் கெளிதன்று.

4. தேனை ஆக்குதற்கும்—அதற்குத்
தீஞ்சுவை யூட்டுதற்கும்
மாநிலத் துன்னையன்றி—வேறெதற்கும்
வல்லமை யுண்டுகொலோ ?

5. புலவன் நூல்கள்கற்று—நல்ல
பொருள்கள் கொள்வதுபோல்
மலர்நுழைந் தின்றேனைத்—தேனீயே
மகிழ்ந்து கொள்ளுவாயே.

6. மாக்களைப் போலுணவை—அன்றன்று
வயிற்றுக் குண்ணாமல்
பூக்களி னின்றேனைப்—பலநாட்குப்
போற்றிவைத் துண்ணுவையே.

7. கண்கவர் பூக்களெல்லாம்—தேனீயே
காண மலர்ந்து நிற்கும்
உண்ணமுன் தேனளித்துன்—இனத்திற்
கூட்டவுமே களிக்கும்.

8. கூட்டி னுழைந்துவிட்டால்—மழைவெயில்
குளிர்பனி உள் நுழையா
வீட்டில்வாழ் மக்களைப்போல்—தேனீயே
மேன்மையாய் வாழ்வாயே.

9. ஓயாமல் தேடும்நீ—பிறருக்
குதவி வாழாமல்
ஈயாதா னைப்போலத்—தேனினை
இழந்து வாழ்வாயே.

10. காட்டி லலரும்பூவின்—தேனினைக்
காலால் மிதித்துண்ணுநீ
கூட்டின் தேனெடுத்தால்—பிறரைக்
கொட்டிக் கொல்லலாமோ?

## ஐயமற்ற அருள்

கா. கணபதி

இறைவன் அருளைப் பெறுவதற்கு
ஏற்ற சமயம் இதுவென்று
குறைவு நிறைவு பாராமல்
கொண்ட கொள்கை வழுவாமல்
மறையா மெழுத்தாம் ஐந்தினையும்
மறவா தென்றும் நினைவாயேல்
இறைவன் அருளை எளிதாக
ஏற்ப தென்றும் திடமாமே.

அன்பா யுருகும் அடியார்க்கு
ஆர்வங் கொண்டு உணவூட்டி
உன்பா லொன்றுங் கேளாமல்
உண்டாம் குறிப்பால் உறவுணர்ந்து
மூன்பு நீக்கி இன்பூட்டும்
மூவா அருளில் தோய்வாயேல்
அன்பு சேர்ந்த அருளென்றும்
ஐயம் இன்றி அடைவாயே!

# கார்த்திகை விழா

[திரு. சாமி செல்வவிநாயகன்]

விழாக்கள் மகிழ்ச்சிகளின் குவியல்கள். விழாவன்று எண்ணங்கள் இனிமையளாவி இயன்று மகிழ்ச்சி தருகின்றன. ஒவ்வொரு நாட்டாருக்கும் அவரவர் எண்ணநிலைக் கேற்ப விழாக்கள் உண்டு. விழாக்கள நாட்டையும் மொழியையும் பொறுத்து அமைவதும உண்டு.

தமிழன் கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றி மூத்த குடியினன். நெடு நாட்கள் நிலையாகத் தங்கிச் சிறப்புடன் வாழ்நத அவனிடம் சில விழாக்கள் தோன்றின. பொங்கற்றிருநாள், கார்த்திகைத் திருநாள் போன்றன அவை. தமிழ் விழாக்கள் சிறந்த குறிக்கோள்களுடன் உள்ளன. இத்தகை விழாககளைத் தமிழன் மிகச் சிறப்பாகக் கொண்டாடல் வேண்டும் தமிழன் மெல்ல மெல்ல அவன் திருநாட்களை மறந்து வருகிறான். ஆனால் இத் துறவுக்குக் காரணம அவனைச் சூழ்ந்துள்ள அயல் மயற் பண்புகளே ஆம் வறுமையும் இதற்குக் காரணமாகின்றது எத்தகைய இடையூற்றையும மீறித் தமிழன் தன் அமிழ்தினுமினிய விழாக்களைச் சிறப்புடன் கொண்டாடி வரல் வேண்டும்.

கார்ததிகை, தமிழன் திருநாள் "பெரு விழா" என்று இதனைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ குறிக்கின்றார். ஆனால் இன்று ஒரு சிறு விழாவாகக் கொண்டாடப் படுகின்றது. எனினும் பல ஆயிரம் ஆண்டுகளாக இந்த விழாவும பொங்கல் விழாவும் தமிழனிடையே இடையறாது தொடர்ந்து வருகின்றன. இன்னும் தமிழுலகம் வாழும் வரை இவ் விழாக்கள் தொடர்ந்து செல்லல் வேணடும். கார்த்திகை விழா மிகத் தொன்மையுடையதாக இருக்க வேண்டும் இயற்கையோடியைந்த இனிய வாழ்வு நடத்தி வந்த பண்டைத் தமிழ் மகன் இறைவனை இயற்கையிற் கண்டு வந்தான். இயற்கைத் தெய்வத்தை வணஙகி நின்றான். இந்த இயற்கை இறைமைப் பண்பைக் கார்த்திகை விழாவில் இன்றும் காணலாம்.

தீ பேராற்றல் கொண்டது. தீப் பிழம்பினை நோக்குதல் அரிய பொழுது போக்கு. "துருதுரு" வென றலைந் தோடும் நீரும் நெடுநேரம் பார்ப்பார்க்குச் சலிப்பூட்டும். தீ மூளுமபோது தோற்றுகின்ற செம்மைச் சுடர் உண்மையைப போல அழகியது.

இவ் விறைவனை உருகிப் பணிய ஒரு நல்ல வாய்ப்புக் கார்த்திகையன்று கிடைக்கின்றது. சொக்கப்பனை அல்லது அழகுப்பனை தீக் கொளுவப்படும். தீ "சுடுசுடு" என்று எரிந்து வானை முட்டி வனப்புடன் திகழும். இறைமை அங்கு ஆடல் புரியும். ஆடல் புரிந்து சில நொடிப் பொழுதில் மறையும்

கார்த்திகை விழாவில் பனைமரம் மிகப் பயன் படுகிறது. செந்தமிழ் நாட்டுச் சிறுவர்கள் பனம் பூப்பறித்துக் கொளுத்திக் கரியாக்குவர் கரியைத் துணியில் வைத்துக் கவையில் இடுக்கித் தழலிட்டுக் கனியச் செய்வர். கவட்டில் கட்டப்பட்டுள்ள கயிற்றைப் பற்றிச் சுற்றி மகிழ்வர் கவட்டில் இருந்து நெருப்புப் பொறிகள் "பொல பொல" வென்று தெறித்து இனிய காட்சி நல்கும. கண்ணுக்குப் பெரு விருந்தளிபபது கார்த்திகை நாள். தீப் பிழம்பில் இறைமை திருக் கூததிடும் விழா இது

காாத்திகைத் திருநாள் இன்றளவும தூய்மை வழுவாது கலப்பின்றித் திகழ்ந்து வருகின்றது. இந்த விழாவைப் பற்றிய குறிபபுக்கள தொகை இலக்கியததில் ஆங்காங்கு உண்டு. அவைகள் கார்த்திகை விழாவைப் பற்றிய செய்திகளைத் தருகின்றன.

அகநானூற்றில் கார்த்திகை விழாவைப் பற்றிய மூன்று பாடல்கள் இருக்கின்றன. அவற்றை ஔவையார், நக்கீரனார், பாலைபாடிய பெருங் கடுங்கோ என்னும பெரும் புலவர்கள் பாடியுளளாாகள் பாலைபாடிய பெருங்கடுஙகோ கார்ததிகை விழாவைக குறிப்பிட்டு நற்றிணையிலும் ஒரு பாட்டியற்றியுள்ளார். இந் நான்கு பாடல்களும் பாலைத திணைப பாடல்களே.

அகநானூற்றில் தலைவி ஒருததி. இவள் காதலன் பொருள் தேடப் போகின்றான். "நானும் வருகின்றேன்" என்று அவள் வேண்டிக் கொள்ளுகின்றாள். தலைவன் மறுத்துத் தேற்றிப் பிரிகின்றான். தலைவி துயருற்று மெலிகின்றாள். தோழி தலைவியின் நிலைகண்டு ஆற்றாளாகி வருந்துகின்றாள். இதைத் தலைவி உணருகிறாள். "நான் ஆற்றுவேன்" என்று உறுதி கூறுகின்றாள் என்றாலும் தலைவன தன்னை அழைத்துச் செல்லாததைப் பெருங் குறையாகவே கருதுகின்றாள். "விண்ணில் நகரும் ஞாயிறறுத் தீ எரித்த வெய்ய காட்டிடத்தே இலையில்லாத இலவமரத்தில் அரும்பு நிலையினின்று மாறி மலர்ந்த இலவ மரங்கள், ஆரவாரிக்கும் மகளிர் கூட்டம் மகிழ்ந்து கூடி எடுத்த அழகிய கார்த்திகை விளக்கின் நீளொழுங்கைப் போல விளங்கக் குளங்கள் தூர்ந்து வளமற்ற காட்டில் நந்தலைவா விரைந்து நம்மையும் உடன் கொண்டு ஏகுவாராயின் கச்சினை விரித்துப் பரப்பியிட்டதுபோல மணல் திணிந்த காட்டாற்றில் பூந்துணரையுடைய பெருங்

கிளைகள் தாழ்ந்த மணல்மேட்டில் மெய்ம் முயக்கத்தை யொத்த கைம்முயக்கத்தினை அன்புடன் அவரும் அடைவர் எமது பழிதீர் கண்ணும் நீர்பொழியும் ஒளிமலரைப் போல ஒழியாது நீரில்லாத குளத்தினைப் பெருக்கும் மடைபோல நாளும் அழாது துயிலும்'' என்று அவள் அரற்றுகின்றாள் இலவம் பூக்கள் கார்த்திகை விளக்குகளைப் போல உள்ளன என்று கூறுதல் நயம் பழுத்தது. இது ஔவையாருடைய பாட்டு :—

" வானம் ஊர்ந்த வயங்கொளி மண்டிலம்
நெருப்பெனச் சிவந்த உருப்பவிர் அங்காட்
டிலையில மலர்ந்த முகையில் இலவம்
கலிகொள் ஆயம் மலிபுதொகு பெடுத்த
அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றிக்
கயந்துகள் ஆகிய பயந்தபு கானம்
எம்மொடு கழிந்தன ராயின் கம்மென
வம்பு விரித்தன்ன பொங்குமணற் கான்யாற்றுப்
படுசினை தாழ்ந்த பயிலிணர் எக்கர்
மெய்புகு வன்ன கைகவர் முயக்கம்
அவரும் பெறுகுவர் மன்னே நயவர
நீரவார் நிகர்மலர் கடுப்ப ஓமறந்து
அறுகுள நிறைக்குந போலும் அல்கலும்
அழுதன் மேவல வாகிப்
பழிதீர் கண்ணும் படுகுவ மன்னே.　　(அகம் ௧௧)

பெரும் புலவர் நக்கீரர் ஒரு பெரிய காட்சியை உகூ அடிகளில் தீட்டிக் காட்டுகின்றார். நக்கீரர் கண்ட தலைவி ஔவையார் படைத்த தோழியைப் போல ஒரு நல்ல தோழியைப் பெற்றிருந்தாள் இத் தோழி, தலைவனது பிரிவை ஆற்றாள் தனது தலைவி என இரங்கினள். அப்போது தலைவி மிகத் துணிவோடு தன்னால் ஆற்றியிருக்க முடியும் என்று கூறுகின்றாள். தன் தலைவன் பெரும்பொருள் பெற்று அதுவும் கரிகால் வளவனது இடையாறு போன்ற செல்வம் பெற்று, மீள்வன் என்னும் உறுதி கலந்த மகிழ்ச்சி அவளிடம் இருந்தது. அவள் தோழியை விளித்துக் கூறுகிறாள், "தோழி ! நான் கூறுவதைக் கேள் ! எனக்கு இரவில் கனவுகள் மிக இனியவாகின்றன. நனவிலும் புனை தொழிலுடைய நல்ல மனையில் புள் நிமித்தங்கள் நல்லனவாகின்றன. என் நெஞ்சம் கூம்பலின்றி விருப்பும் அமைதியுமுற்றிருக்கின்றது. உலர்ந்து, மலர் செறிந்து, மயிர்ச்சாந்து மணக்கும் தண்ணறுங் கூந்தலுடைய புதிய மணமகள், உணவு நிறைந்த மண வீட்டில் அடுப்பில் பாலுலை யேற்றி, சிறுமியருடன் சேர்ந்து, பெரிய வயலில் விளைந்த நெல்லின் வளைகதிரை முறித்து, அவலிடிக்கும் கரிய வைரம் வாய்ந்த உலக்கையின் விரைந்த இடிக்கு அஞ்சிய முற்றிய சூலுடைய வெள்ளிய குருகு

இன்குலை வாழையின் உயர்ந்த மடலிலிருந்து நிறைந்த சூலினை யுடைமையால் மெல்லப் பறந்து மாமரத்தை யடையும் பதி யாகிய கெட்ட குடிகளைத் தாங்கிய பெரும்புகழும் வெல்போரு முடைய கரிகால் வளவனது இடையாற்றினை யொத்த நல்ல புகழ் வாய்ந்த செல்வத்தை ஈட்டிவர மலையிடத்திலுள்ள வேங்கை மரத்தின் பல புள்ளிகளையுடைய புலியின் நிறத்தினைப் பொருந் திய பூக்களிடையே பெரிய கிளையினையுடைய நாரத்தை மரத்தின் நறிய அழகிய புது மலர்கள் உதிர, முசுக்கலை பாய்ந்து தாவும், தேன் நாறும் நீண்ட உச்சி விளங்கிய வேங்கட மலையைச் சார்ந்த ஊர்களையுடைய சுர நெறி கடந்து சென்றோர்; கலப்பைகள் மடிந்து உலகின்கண் உழுதொழில் முடிய, மழையில்லாத வானி டத்தே குறிய முயலாகிய மறுவின் நிறம் விளங்க மதி நிறை வுற்றுக் கார்த்திகையைச் சேரும் இருளகன்ற நடு இரவில் தெருக் களில் விளக்குகளை நிரல்பட ஏற்றி மாலைகளைத் தூக்கிப் பழைமை யான வென்றியுடைய முதிய ஊரின்கண் பலரும் ஒருங்கு சேர்ந்த விழவினை நம்முடன் கொண்டாட வருவாராக" என்று.

இதில் இருந்து நமக்கு இரண்டு மூன்று உண்மைகள் தெரி கின்றன. கார்த்திகை நாளில் மாலை தூக்கும் வழக்கம் அற்றை நாளில் இருந்தது. இற்றை நாளில் அவ்வழக்கம் இல்லை. செல்வச் செழிப்புடன் வீடேகிய தலைவன் தன் மனைவியுடன் மகிழ்ந்து கொண்டாடும் விழவே கார்த்திகை இக் குறிப்பு தமிழரின் வானியல் அறிவைத் தெளியக் காட்டுகிறது. மதியும் அறுமீனும் சேரும் நாளே கார்த்திகை. நக்கீரர் பாட்டு மிக நறிய பாட்டு. அது வருமாறு:—

"அம்ம வாழி தோழி கைம்மிகக்
கனவுங் கங்குல் தோறினிய நனவும
புனைவினை நல்லில் புள்ளும் பாஙகின
நெஞ்சு நனிபுகன் றுறையும் எஞ்சாது
உலகுதொழில் உலந்து நாஞ்சில் துஞ்சி
மழைகால் நீங்கிய மாக விசும்பில்
குறுமுயல் மறுநிறங் கிளர மதிநிறைந்து
அறுமீன் சேரும் அகலிருள் நடுநாள்
மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கி
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
விழவுடன் அயர வருகதில் அம்ம
துவரப் புலர்ந்து தூமலர் கஞலித்
தகரம் நாறுந் தண்நறுங் கதுப்பின்
புதுமண மகடூஉ அயினிய கடிநகர்ப்
பலகோட் டடுப்பில் பாலுலை இரீஇக்
கூழைக் கூந்தல் குறுந்தொடி மகளிர்
பெருஞ்செய் நெல்லின் வாங்குகதிர் முறித்துப்
பாசவல் இடிக்கும் இருங்காழ் உலக்கை

கடிதிடி வெரீஇய கமஞ்சூல் வெண்குருகு
தீங்குலை வாழை ஓங்குமடல் இராது
நெடுங்கால் மராஅத்துக் குறும்பறை பயிற்றுஞ்
செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால்
வெல்போர்ச் சோழன் இடையாற் றன்ன
நல்லிசை வெறுக்கை தருமார் பல்பொறிப்
புலிக்கேழ் உற்ற பூவிடைப் பெருஞ்சினை
நரந்த நறும்பூ நாணமலர் உதிரக்
கலைபாய்ந் துகளும் கலசேர் வேங்கைத்
தேங்கமழ் நெடுவரைப் பிறங்கிய
வேங்கட வைப்பிற் சுரனிறந் தோரே. (அகம் ௧௪௧)

பாலைபாடிய பெருங்கடுங்கோ தன்னுடைய இரண்டு பாடல்களிலும் கார்த்திகை விளக்கை மலர்களுக்கு ஒப்பிடுகிறார். அவருடைய அகப் பாட்டு ஔவையாரைப் போலவே இலவம் பூக்கட்குக் கார்த்திகை விளக்குகளை ஒப்பிடுகின்றது. அப்பாடலை நீங்கள் காண வேண்டாமா? அது இதோ!

“எல்வளை ஞெகிழச் சாஅய் ஆயிழை
நல்லெழிற் பணைத்தோள் இருங்கவின் அழியப்
பெருங்கை யற்ற நெஞ்சமொடு நத்துறந்து
இரும்பின் இன்னுயிர் உடையோர் போல
வலித்து வல்லினர் காதலர் வாடல்
ஒலிகழை நிவந்த நெலலுடை நெடுவெதிர்
கலிகொள மள்ளர்வில் விசையின் உடையப்
பைதற வெம்பிய கல்பொரு பரப்பின்
வேனில் அத்தத் தாங்கண் வானுலந்து
அருவி ஆன்ற உயர்சிமை மருங்கில்
**பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்**
**இலையில மலர்ந்த இலவமொடு**
நிலையுயர் பிறங்கல் மலையிறந் தோரே.” (அகம் ௧௮௫)

மேலே, கார்த்திகை விழவை “பெரு விழா” என்று கடுங்கோ குறிப்பிட்டமை ஆய்வுக்குரியது. பெரிய அளவில் கார்த்திகைத் திருநாள் இயன்று வந்திருக்கிறது என்பதற்கு இதுவே காட்டு. பாலை பாடிய கடுங்கோ,

“புலிபொரச் சிவந்த புலாவஞ் செங்கோட்டு
ஒலிபன் முத்தம் ஆர்ப்ப வலிசிறந்து
வன்சுவல் பராரை முருக்கிக் கன்றொடு
மடப்பிடி தழீஇய தடக்கை வேழம்
தேன்செய் பெருங்கிளை இரிய வேங்கைப்
பொன்புரை கவழம் புறந்தருபு ஊட்டும்
மாமலை விடரகங் கவைஇக் காண்வரக்
கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை
**அறுமீன் பயந்த அறஞ்செய் திங்கள்**
**செல்சுடர் நெடுங்கொடி போலப்**
பல்பூங் கோங்கம் அணிந்த காடே.”

என்னும் நற்றிணை 202-ஆம் பாடலின்கண் கோங்கம் பூவைக் கார்த்திகை விளக்கு நிரைக்கு ஒப்பிடுகிறார். அறஞ்செய் திங்கள் என்பதற்கு நாராயணசாமி ஐயரவர்கள் "பார்ப்பார்க் களித்தல் அறமெனப் படுதலின் அறஞ்செய் திங்களென்றார்" என்று உரை கூறினார்கள். இவ்வுரை கருத்து வேறுபாட்டுக் கிடமளிக்கிறது. ஐயர் கூற்றுக்குச் சான்று யாண்டுங் கண்டிலேம். அது வலிந்துரை யென்க.

கார்த்திகை விளக்குகள் பேரழகு செய்வன. நிரைநிரையாக வைக்கப்பட்டுள்ள. அவற்றைத் திண்ணையினின்று இறங்கிக் காணும்போது மிக எழில் நிறைந்த காட்சி தந்து அவைகள் விளங்குகின்றன. இக் காட்சியில் திளைத்ததினாலேயே ஔவைத் தாயும் பெருங்கடுங்கோவும் மலர்கட்கு இவ் விளக்கங்களை ஒப்பிட்டார்கள்.

களவழி நாற்பதிலும் கார் நாற்பதிலும் கார்த்திகை விழாப் பேசப்படுகிறது. கொட்டும் அரத்தத்திற்குக் கார்த்திகைச் சுடரினை ஆசிரியர் பொய்கையார் ஒப்பிட்டு இன்புறுகின்றனர். அவருடைய களவழி நாற்பதில் உள்ள பாடலிது :—

> "[illegible] ஆளாள எதாத்தோடித்
> தாக்கி யெறிதர வீழ்தரும் ஒண்குருதி
> கார்த்திகைச் சாற்றில் கழிவிளக்கைப் போன்றனவே
> போர்க்கொடித் தானைப் பொருபுனல் நீர்நாடன்
> ஆர்த்தமர் அட்ட களத்து."                (களவழி நாற்பது: கஎ)

இவை போதும் கார்த்திகைத் திருநாளின் தொன்மையை விளக்க. தமிழர்கள் கார்த்திகை விழாவைப் போற்றிக் கொண்டாடல் வேண்டும். இதழ்கள் "பொங்கல் மலர்" போல "கார்த்திகை மலர்" வெளியிடல் வேண்டும். தமிழன் தன் குடி செயல் வகைக்கான முயற்சிகளைச் செய்து, விடுதலை உணர்வுடன் பணியாற்றி, தன் தொன்மரபு அழியாமல் மொழியைப் பேணி, விழாவைப் போற்றி, இனத்தைக் காத்து, தூய்மை வழுவாது தடுத்து, தலை நிமிர்ந்து, ஆல் போல் தழைத்து, அறுகுபோல் வேரோடி, மூங்கில் போல் சுற்றம் முசியாமல் வாழ்வானாக!

ஓரங்க நாடகம்:

# மலாடர் கோமான் *

[இரா. இளையநம்பி]

## காட்சி - 1

**இடம்:** மலாடர் கோமான் அரண்மனை.

[சேதிநாட்டு திருக்கோவலூர் அரியணையில் மலாடர் கோமான் மெய்ப்பொருள் வீற்றுள்ளார். அமைச்சர் குழுவும், புலவர் பெரு மக்களும் குழீஇ உள்ளனர்.]

அமைச்சர்: சேதி நாட்டின் செந்தமிழ் வேந்தே! செய்தி ஒன்றுண்டு; வேந்தர் வேந்து விரும்பினால், அடியேங்கள் அருட்டிரு முன்பு அறைகின்றோம்.

மெய்ப்பொருள்: அமைச்ச! குறை வேண்டினும், முறை வேண்டினும் கூறுங்கள், உடனே. இம்மையில் எமை ஆண்ட அம்மையப்பனும் அம்பலவாணனின் நல்லருளால் ஆவன செய்கின்றோம்.

அமைச்: வாழி எம் தலைவ! கலையறிவில் தேர்ந்தவர், மலையமான் மரபினர்; இறையுணர்வும், மறையறிவும் முறையே அமைந்தவர்; திரிபுரம் எரித்த விரிசடை அண்ணலின் முழு அருளும் சான்ற ஆன்றவர்; அருந்தவப் பெரியோர்; பெருங்குணச்சீலர்; ஆகிய தங்கட்கு எதை இயம்புவேன்? எங்ஙனம் இயம்புவேன்?

மெய்ப்: சொல்லுங்கள், உடனே. வெல்லும் வகைக்கு விரி சடையான் அருளுண்டு.

அமைச்: நாளொவ்வொன்றினும், நானிலத்துள்ள நல்லடியார் கூட்டத்தை அன்போடு அழைத்து அமுது படைத்து வருகின்றீர்கள் அல்லவா?

மெய்ப்: ஆம், அமைச்சே, ஆம். புண்டர நெற்றியில், கண்டிகை மார்பில, கமண்டலக் கையில், காவி உடையில், ஏந்திய திருவோட்டில், இளைத்த என்புருவில் என் நமசிவாயத்தை

* மலையமான் + நாடு = மலாடு என்று மரூஉ மொழியாக வழங்கு கின்றது. மலாடர் அந் நாட்டில் உள்ளார். கோமான் - அரசன். மலாடர் கோமான் என்பது அந் நாட்டு அரசன் ஆகிய மெய்ப்பொருள் நாயனாரை புணர்த்தியது.

எங்கெங்கும் காண்கின்றேன். காண்பதெல்லாம் நமசிவாயம், கருத்தில் பொருந்துவதெல்லாம் ம; இதயத்து எழுவதெல்லாம் ஐந்தெழுத்து; எங்கெங்கும் சிவநாதம், அதுவே என் இதயகீதம்; அருமறையுள் காணாத அரனை, பேருலகில் மறைந்துள்ள பெம்மானை, அடியவர் திருக்கூட்டத்திலாவது காணலாமோ என்றுதான் அந்நனம் அமுதுபடைத்து வருகிறேன்....... அவ்வமுது படைப்பில் அறியாத பிழையேதும் தெரியாது நிகழ்ந்ததோ? அன்றி அடியவர் எவராவது அமுதுண்ணாது திரும்பி விட்டனரா? சொல்லுங்கள, அமைச்சே

அமைச்: அடியவர்கள் அமுதின்றி வருந்தவில்லை, அரசே. அடியவர் உருவங்கள் நாள்தோறும் அதிகமாகி வருகின்றன. அதாவது,....மக்கள் மாயம் செய்கின்றனர்.

மெய்ப்: அப்படியென்றால்....?

அமைச்: நாடோறும் மக்களே அடியவர் திருவுருவில் வந்து அமுதுண்கிறார்கள்; சிலர் அடியவரென்று மெருகிட்டுக் கொண்டு அரசியலுக்குத் தரும் வரியைச் செலுத்த மறுக்கிறார்கள். இப்படி இருப்பின், ஆட்சி எப்படி நடைபெறும்?

மெய்ப்: [புன்புறுவலுடன்] அடியவர்கள் பெயரில் வரி செலுத்த அன்பர் கூட்டம மறுக்கின்றதா? .. அப்படியானால்....சொல்பவருக்காக உள்ள வரியை என் பண்டாரச் சாலையினின்றும் எடுத்துக் கட்டிவிடுங்கள்; மக்கள் வரியை நான் கட்டுகிறேன்.

அமைச்: மன்னவா, முன்னொருமுறை திருவமுதுக்குப் பொருள் குறைந்தபொழுதும், தமிழகத்துள்ள ஆலயங்களெங்கும் பூசனைகள் செய்ய ஏற்பாடுகள் செய்த பொழுதும் தங்கள் ஆணை வண்ணம் பண்டாரத்தினின்றும் பொருள்கள் எடுக்கப் பட்டுவிட்டனவே, இப்பொழுது பண்டாரச்சாலை காலியாய் இருக்கிறது அரசே!

மெய்ப்: [சிந்தித்து] அப்படியானால், என் மணவினையின் பொழுது வளவர், கொங்கர், வங்கர், கூர்ஜரர், மாளவர், நடுநாட்டார், மாண்புமிகு பாண்டியர் எனும் வேந்தர் வேந்தர் விரும்பியளித்த விருதுகளும், பரிசுகளும் வரிசை வரிசையாய் என் மனைவி வைத்துள்ளாள்....ஹூம்.... "மன்னவன் ஆணை" என்று மனையாளிடம் கூறி, அத்துணைப் பொருளையும் அடியவர் என்பார் மீதுள்ள வரித் தொகைக்காகக் கட்டிவிடுங்கள். கட்டிய பின்பு, "அடியவர் திருவடியில் அன்பன்

மெய்ப் பொருளின் முடிவிளங்க" என எம்கோ இரந்து வேண்டினுன் எனவும் கூறுங்கள். அனைத்தும் அரனின் திருவிளையாடல்!

அமைச்: மன்னர் மன்ன, தங்கள் ஆணைவழி தமியேம் செய்கின்றோம். ஈண்டு இங்ஙனம் இயம்புகின்றீர்களே, நாளை மாற்றுப் பகைவர்கள், அதுவும் முத்திநாதன் போன்ற முதலைகள், வேற்று உருவில், வேதியராய், வேதாந்தியாய், சித்தசன்மார்க்க சீலராய் வந்து உங்கள் உயிருக்கே உலை வைத்து நயவஞ்சகமாய் நாட்டைக் கைக்கொண்டு விட்டால்....

மெய்ப்: உளங்கனிந்து வரவேற்பேன்; இந்நாடு சென்றால், அந் நாடு-வீடு!-அது என்றுமே உண்டு, நீடு!

புலவர்: சேதியர் கோவே! "ஒப்புரவி னல்வருங் கேடெனின், அஃதொருவன், விற்றுக்கோட் டக்க துடைத்து" என்னும் அருமறைக்கு இலக்காய் இயம்பினை; ஊழிதோறூழி தோறு லகம் புரந்து, வாழி நீ எம்மான் வையகத்தென்றும்!

## காட்சி - 2

**இடம்:** முத்திநாதன் அரண்மனை.

முத்திநாதன்: [சினத்துடன்] விழியிலாருக்குப் பெயர் வேல்விழி! காராட்டுக்குப் பெயர் வெள்ளாடு! அப்படித்தான் பொய்ப் பொருள் புல்லனுக்குப் பெயர், மெய்ப்பொருள் வள்ளல்! உலகை ஏமாற்ற உருத்திராக்கம்! அறிவற்ற வாயில் ஐந்தெழுத்தின் ஆரவார அலைகள்! விளம்புவதெல்லாம் வீட்டுலக மார்க்கம்!-சேச்சே!-என்ன ஏமாற்றுத்தனம், உண்மை அடியவனுக்கு உண்டோ நாட்டாசை? பெயர் மட்டும் மன்னன்! பிதற்றுவது சிவாயநம!

அமைச்: அது மட்டுமல்ல, அரசே! நாள்தோறும் அவன் அடியவர்கட்கு வேறு அமுது படைத்து வருகிறுனும். ஆலயங்களெங்கும் அனேக பூசைகள் செய்யப் பொருள் தருகிறுனும். இக்காரணத்தான் அவன் செல்வங்கள் செலவழிந்து விட்டனவாம்!

முத்தி: "செல்வம் தீர்ந்தது." எனும் சொல் ஏற்படும் அளவிற்கா, இவன் சீர்த்தி இச்செந்தமிழ் நிலத்தில் உலவ ஆரம்பித்து விட்டது? அவமானம் எனக்கு! நானும்தான் கோயில் கட்டினேன்; குளம் வெட்டினேன்; அடியவருக்கு அன்னமளித்தேன்; சிவாயநமவென வரும் சிவனடி

யாருக்குச் செல்வங்களை வாரி வழங்கினேன். எனக்கு இல்லாத புகழ் அவனுக்கு!

அமைச்: அவனை "மெய்ப் பொரு"ளென்று அழைக்கின்றார்கள்? "மெய்ப்பொருள் நாயனார்" என்றல்லவா கூறுகின்றனர்? அவ்வளவு புகழ்!

முத்தி: எப்படியும் அவன் அழிந்தாக வேண்டும்-என் செய்ய?

தளபதி: படை திரட்டுவோம்!

முத்தி: பன்முறை தோற்றோடி வந்ததை, அதற்குள்ளாகவா மறந்து விட்டீர்கள்?........

அமைச்: நம்மவருள் ஒருவர், சிவனடியார் உருவில் சென்று அவன் தனித்திருக்கும்போது தாக்கிக் கொன்றால்....?

முத்தி: சரியான யுத்தி! நம்மவருள் ஒருவரென்ன, நானே செல்கிறேன். மந்திர ஏடுகள் கொண்டு வந்துள்ளதாக அம்மடையனிடம் மழுப்பிக் கண்களை இறுக மூடச்செய்து, ஏடுகளின் இடையே உள்ள எஃகுக் கத்தியால் குத்திக் கொல்கிறேன். ஏடுகளின் இடையே வைக்குமளவுக்கு எஃகுக் கத்தி தயாராகட்டும்.

அமைச்: அப்படியே. ஆணைவழி செய்கின்றோம்.

## காட்சி - 3

இடம்: கோவலூர் அரண்மனை.

[கோவலூர் அரண்மனை அந்தப்புரத்தில் மெய்ப்பொருள் தனித்து அமர்ந்துள்ளார்; அரசமாதேவியும் உடன் உள்ளாள்.]

அரசமாதேவி: [வருத்தமாக] தலைவரே! இந்த இரண்டு நாட்களாக என் உள்ளம் ஏனோ காரணமின்றிக் கவலை அடைகின்றது. இரவெல்லாம் தங்களைப் பற்றிய ஏதேதோ கனவுகள்! ஒரு கனவு! என் கைவளை கழலக், கருவிழிகள் சுழல, உள்ளம் ஒரே துன்பத்தில் உழலத், தைலத்தில் தாங்கள் நீராடித் தவக்கோலத்தில் விளங்குகின்றீர்கள்.

மெய்ப்: அன்பே, என் இதயத்தில் கொன்றை அண்ணல் குடி புகுந்திருக்கும்போழுது வீண் கவலை வேண்டாம்....அதோ பார், விரிசடையில் வெண்மதிபோல், நீலவாவியில் நீந்தும் பால்நிற அன்னம்போல் நீலவானில் நீந்தும் கலை நிலவை! இவ்வெண்ணிலவின் தண்ணொளி பரவிப் பாய்ந்து பாலெனத் திகழ்வதும், பால் முறிந்த மோரில் பக்குவம் செய்த வெண்

ணெய்ப் பிதிர்கள் விளங்குவனபோல், மின்னும் விண் மீன்கள் மிளிர்வதும் எதை நினைவூட்டுகின்றன தெரியுமா? கலை நிலவின் ஒளி, அடியவர் அணியும் அழகுத் திருநீற்றையும், விண்மீன்கள், விளங்கும் திலகத்தையும் நினைவூட்டுகின்றன........

அரசமா: ஆருயிரினும் இனிய அன்பரே! தாங்கள் மிகவும் சிவப்பித்தராக மாறிவிட்டீர்கள்.

மெய்ப்: பிறை சூடிய பெம்மானே பித்தனாக விளங்கும்போது, நான் எம்மாத்திரம்!

அரசமா: சரி, அது போகட்டும்;....என்னைத் தங்களுக்குப் பிடிக்கவில்லையா?

மெய்ப்: அங்ஙனம் யார் கண்ணே கூறியது? சின்னாட் பல்பிணிச் சிற்றறிவுடையாரன்றோ சிற்றின்பம் விரும்புவர்? மற்று அளக்கலாகாப் பேரின்பம் எத்துணைச் சிறந்தது தெரியுமா? அன்பே! என உளத்தில் உனைக்கண்டால் உருவாவது யார் தெரியுமா? தக்கன் வேள்வியைத் தகர்த்த பின்பு மறம் ஒழிய, அறம் வளர்த்த என் அம்மையின் அருளுருவம்தான் வருகிறது. நின காதல் விழிகளில், அன்னையின் கருணைக் கடலையும், முறுவல் முகிழ்க்கும நின் செவ்வாயில், ஆனைமுகனையும், அறுமுகனையும், முத்தமிட்டுக் கொஞ்சிய அமமையின் செவ்விதழையும், கவின்மிகு நின் மார்பில், கள்ளமிலாச் சம்பந்தருக்குக் கனிவுடன் கறநது பால் தந்து வளர்த்த அன்னையின் தனங்களையும, வேய் ஒத்த நின் மென்தோள்களில், உலகைக் காக்கும் அருட்டிருக்கரத்தையும், நின் மென் தளிர் உநதியில், பரந்தவானும் படியும் உயிரும், ஒருங்கு தோன்ற ஈன்றும் வருந்தாத உமையாளின் மணிவயிற்றையும், அனிச்சததின் மெல்லிய நின் அடிகளில், ஆனநதத் தாண்டவததில் அம்பலத் தெம்மானுடன் நடமாடிய அம்மையின் பொன்னார் கழலடிகளையும் காண்கிறேன்.

அரசமா: [வியப்புடன்] என்ன! கட்டிய மனையாளா கண்கண்ட கடவுளாகக் காட்சி தருகிறாள்?....தங்கள் உள்ளம் சரி இல்லை....உறங்குங்கள்.

மெய்ப்: துறக்கம் விழைந்த என் உள்ளம் உறக்கம் விழையுமா?

அரசமா: இன்னிசை யொன்று பாடுகிறேன் இனிது உறங்குங்கள்.

[அரச மாதேவி பாட, பஞ்சணையில் அவர் பள்ளிகொள்ளுகிறார்.]

## காட்சி - 4

**இடம் :** அரண்மனை வெளிவாயில்.

[போலி வேடத்தில் முத்திநாதன் வருகின்றான். தத்தனென்னும் வாயில்காவலன் தடுக்கிறான்.]

முத்தி : சம்போ மாதேவா, நமச்சிவாயம்....சிவசிவ.

தத்தன் : மன்னவர் தனி அறையில் மாதேவியாருடன் உறங்குகிறார். தாங்கள் இவ்வேளையில் செல்லுதல் தகாது.

முத்தி : ஹெஹ்ஹ....ஆற்று வெள்ளத்தைத் தடுக்குமோ அற்பத் துரும்பு? அப்படித்தான் உன் நிலையும் என்னிடம்; எனக்கு நின் வேந்தன் துரும்பு. மன்னவனுக்குத் துரும்பு நீ அற்பன் நீ, இவ்வடியவரைத் தடுத்தல் அரனாரையே அவமதிப்பதாகும்

தத் : மன்னிக்க வேண்டும். காவலனின் ஏவலன் யான்; கடமையை எண்ணியே காவலர் உறங்குவதாகக் கூறினேன். காலமறிந்து செல்லல் நலமாகும.

முத்தி : நகரடா நாயே! அதெல்லாம் எனக்குத் தெரியும். [உள்ளே தள்ளிக் கொண்டு நுழைகிறான்.]

## காட்சி - 5

**இடம் :** மெய்ப்பொருள் நாயனார் துயிலிடம்.

முத்தி : சிவாயநம, நமச்சிவாயம்.

மெய்ப் : [படுக்கையினின்றும் எழுந்து] வாருங்கள், வாருங்கள்! தங்கள் நல்வரவால் தமியன் உய்ந்தேன்! தங்கள் தாமரை அடிகள் அடியேன் முன் அமர்வனவாகுக! அமருங்கள் ஆசனத்தில். (தேவியைப் பார்த்து) தேவீ! அடியார அடிகளைக் கழுவப் பனிநீருடன் சந்தனப் பரிமள நீரும், சூட்டச் சுந்தரத் திருமணி மலர் மாலைகளும், உண்ண அறுசுவையுணவும், கனியும் பாலும் கடி விரைவில் கொண்டுவா, போ.

முத்தி : [வெறுப்பாக] சிவசிவ! அவையெல்லாம் இவ்வுடல் ஏற்காது. யான் வந்தது நின்னைக் காணவே அன்றி, நின் மனையாள் என்னைப் பேண அன்று; தேவதேவனும், தேவி பங்கன் திருவாய் மலர்ந்த திருமறை ஒன்று—அம்மறை அருமறை—அம்பலவள்ளல் நாவால் அருள் செய்த பெருமறை—அடியேனை அன்றி எவருமே அறியாதது! ஆம்! அதை உனக்கு உணர்த்தவே வந்தேன். மாயை ஒரு பேய்; அது மங்கை உருக்கொண்டுள்ளது. எனவே உன் மனைவியை வெளியே போகச் சொல்.

அரசமா : அய்யனே, நான் பேயா?....அவர் உணரும் அரு மறையின் இன்பத்தில் அடியவளுக்கும் பங்கு இல்லையா?

முத்தி : வேல்விழியே! பால்மொழியே! விளக்கம் தேவையா? செல் என்று சிந்தையில் எண்ணும்போதே, சென்று விடுபவள்தானே சிறந்த மனையாள்? கொற்றவா, குறிப் புணரும் தன்மை குறைவாகக் காணப்படுகிறதே உன் மனையாளிடம், ஏன்?

அரசமா : மன்னிக்க வேண்டும்; போகிறேன். [போகிறாள்]

முத்தி : சென்றுவிட்டாள் சேல்விழி! மன்னவா, மறைந்து ஒளிந்து நிற்பான் எவனாவது மடையன்....கண்டுபிடி.

மெய்ப் : என் மீது ஆணை! ஒளிநது யாராவது நின்றால் உரையுஙகள் உடனே. [தத்தன் வருகிறான்]

தத் : அரசர், அரசே! அடியேன் தான் தத்தன், தங்கள் அன்பு ஊழியன்; உண்மையிலேயே ஒளிந்துதான் நின்று கொண்டு காவல் செய்தேன்.

முத்தி : பார்த்தாயா! மன்னவா! இப பஞ்சையை? ஒளிந்து நிற்கிறான் ஓர் உலுத்தன் என்றேனே, அதில் தவறென்ன?

மெய்ப : தவறெதுவுமே இல்லை அடிகாள்! (தத்தனைப் பார்த்து) தத்தா! என் மீது ஆணை எங்கும ஒளிந்து நிற்காமல் உடனே வெளியே போ! [தத்தன் போகிறான்]

முத்தி : காவலனே கண்களை மூடிக்கொள் ; நமசிவாயமென்று நாவால் வணங்கு; காட்டுகிறேன் என் கலையை (அப்படியே கண்களை மூடிக் கொள்ள, சுவடிகளின் இடையே உள்ள கத்தியை எடுத்துக் குத்திக் கொல்கிறான்; மெய்ப் பொருளார் கீழே சாய்கிறார்.)

மெய்ப் : (கத்துதல்) ஆ!....ஆ!.... (தத்தன் ஓடி வருகிறான்)

தத் : (அவரைத் தாங்கிக் கொண்டு) ஆ....! கொலை....!! கொலை!!! அடே, அற்பனே! எங்கள் வள்ளல்....எம் அண்ணல் உனக்கு என்ன திஙகு செய்தார்? வெள்ளாட்டுத் தோல் போர்த்த வேங்கையே! குற்றமுள்ள நெஞ்சம் குறு குறுக்க, 'ஒளிந்து நிற்பான பார்' என்று உரைத்து என்னை விரட்டிய இழிஞனே! பார், உன்னைப் பழி வாங்குகிறேன். (முத்திநாதனைக் குத்தச் செல்லுகிறான் ;)

பலர் : (பலரும் ஓடிவந்து) இவனே கொலைகாரன்....! குத்துங் கள்....! கூறிடுங்கள்....!! கொல்லுங்கள்....!!!

மெய்ப் : தத்தா! கத்தாதே வீணாக. என்னைக் கொன்றவர் யாருமல்ல; கொன்றவர், கொன்றை அண்ணலின் வழி நின்றவர்....நீறணிந்த நெற்றியர்... அவர் நம்மவர் ...நமர்

தத் : மன்னவா! நமரல்லன்....நமன்....இப் போலி வேடதாரி நம் பகைவன் முத்திநாதனைப் போல் தோன்றுகிறானே!

மெய்ப் : நமக்கு ஏது பகைவன்.... அவனுக்குத்தான் நாம் பகைவனாகத் தோன்றுகிறோம்.... அவ்வளவுதான்....என் மீது ஆணையிட்டு எனக்கு ஓர் உறுதி தருவாயா?

தத் : ஐயனே! தயங்காமல் சொல்லுங்கள்...........எதுவுமே செய்கிறேன்.

மெய்ப். என்று என் உயிர் இவ்வுடலை விட்டு நீங்கி அரனாரின் திருவடிகளை அடையுமென்று எண்ணி ஏங்கிக்கொண்டிருந்தேன் அதற்கு வழி காட்டி அருள் செய்தார் இவ்வடியார். இவர் என் நலன் கருதியே அங்ஙனம் செய்தார். அவர் நமமைச் சார்நதவர். அபபெருமகனாருக்கு என் காரணமாக எவ்விதத் தீங்கும் நேரக்கூடாது. இவரை இவ்வூர் எல்லை வரை சென்று பாதுகாப்பாக விட்டு விட்டு வா! போ, ததழா, போ!

முத்தி : (வியப்புடன்) என்ன சொல்லுகிறீர்கள்?

மெய்ப் : தத்தா, அவர் எமர்....அவர் நம்மவர். அவரை ஊர் எல்லைவரை உடன் போய் விட்டு வா. போ....தத்தா, போ!

தத் : தாங்கள் இருக்கும் நிலையில் நான் தங்களைப் பிரியலாமா?

மெய்ப் : நீ வருவதற்குள் நான் இறந்துவிட மாட்டேன்! இவ்வடியார் காப்பாற்றப்பட்டார் என்ற நற்செய்தியைச் சொல்ல நீ வந்த பிறகுதான் உயிர் விடுவேன்—நீ செய்யும் இவ்வுதவியைப்போல் எனக்கு எவரே உதவி செய்யவல்லார்? நினக்கு எங்ஙனே கைம்மாறு செய்யவல்லேன்? விரைவாக வந்து எனக்கு அவர் காப்பாற்றப் பட்டமையைக் கூறு.... போ, தத்தா போ!

[கண்களில் நீர்வழியும் நிலையிலுள்ள தத்தன், நாணித் தலை கவிழ்ந்த முத்திநாதனை அழைத்துக் கொண்டு செல்லுகிறான்]

பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். (குறள். ருஅ0)

உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லா முளன். (குறள். உகச)

# புதினப் படிப்பு

[நெல்லை, திரு. க. சுப்பிரமணியன்]

புதினங்களெல்லாம் பொய்க் கதைகள்; ஆதலின், அவற்றைப் படிப்பது நன்றன்று என்பது கற்றறிந்தார் சிலர் கருத்தாகும். மிகவுயர்ந்த காப்பியங்களைக் கற்று, வாழ்க்கை நெறியை வகுத்துக் கொள்வதில் நிரம்பவும் கருத்துடன் இருக்கவேண்டியவர்களாகிய இளைஞர், வெறுஞ் சிறு கதைகளை மட்டுமே படித்துக் கொண்டு, நேரத்தையும் முயற்சியையும் வறிதாய்க் கழிப்பது இரங்கத்தக்கதாகும என்று அன்னார் கருதுகின்றனர்.

ஆனால், ஆழ்ந்து எதையும் கற்று ஆராயும் ஆர்வமில்லாத இக்காலத்து இளைஞர்களின் கண்முன, கணக்கற்ற புதினங்கள்* குவிந்துகிடந்து, அவர்களின் பொழுதுபோக்கிற் கேற்றவையாய்த் தோற்றஞ் செய்கின்றன. அன்றியும, இழிந்த சுவையுடையதனையே காமுறும் இயல்பு பெரிதும் வாய்ந்த சில இளைஞர், இன்ப வேட்கையை எழுப்பும புதினங்கள்தாம் புற்றீசல்போல் புறம்போந்துலவக் காண்கின்றார் இங்ஙனம் இவர் பொருட்டு எழுதி வெளியிடப்படும் புதினங்கள்தாம், விளம்பரமும் வருவாயும் எளிதிற் பெறுகின்றன. என்றாலும், ஓரிரு புலவர் நல்ல புதினங்களும் மெல்ல எழுதிச் சிறிது நன்றாற்றுகின்றார். நிற்க,

எம் கருத்துக்கிணங்கப் புதினங்களெல்லாம் உரைநடைக் காப்பியங்களே ஆகும். வரைவாளருள் தலைசிறந்தோர் படைத்தளிக்கும் புதினங்கள் மட்டுமே, நம் வாழ்க்கைக்கு நல்வழி காட்டுவனவாகும். பாநடைக் காப்பியங்களுட் சிறந்தன, எவ்வாறு "மக்கள் மனம் எனும் மாட்சிசேர் நாட்டை, ஒக்கச் செங்கோல் ஓச்சி" ஆள்கின்றனவோ, அவ்வாறுதாம் உரைநடைக் காப்பியங்களும்; ஆதலின், தண்டமிழ் இளைஞராவார், தாம் விரும்பும் புதினங்களைத் தெரிந்தெடுப்பதிலும், அவற்றைப் பொழுதுபோக்கும் முறையில் அளவாய்க் கற்பதிலும் விழிப்பாயிருத்தல் வேண்டும்.

---

* Novels.

புதின வரைவாளருள்ளுஞ் சிறப்புடையார்தாம் யாவர்? எனிற், புகல்வாம்: மொழியறிவில் தேர்ச்சிபெற்று, எதை எப்படி எழுதவேண்டும் என்னும் அறிவு பெற்று விளங்குபவரே சிறந்த வரைவாளர் ஆவர். இனி, அன்னார்தம் புதினமானது, முதலிலிருந்து முடிவுகாறும் குருத்திலிருந்து கரும்பு கடிதலைத் தின்றாற்போன்று, கற்பார்க்குக் கழிபெருஞ் சுவையூட்டி, அவர் நெஞ்சைப் பிணிக்குமாறு அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும். இன்னும், உலக இயற்கைக்கும் மக்கள் மன இயற்கைக்கும் ஒத்த முறையிலேயே, கதை யுறுப்பினர் பண்புகளும பின்னப்பட்டிருத்தல் வேண்டும். அஃதாவது, உலக வாழ்வில் ஒரு சிறு பகுதிதான் இப்புதினங் காட்டுவது என எவரும் எண்ணுமாறு வரைபவரே சிறந்த வரைவாளராவர்.

எனவே, உயர்ந்த வரைவாளர் எழுதிய சிறந்த புதினங்களும் கற்றற்குரியனவே யாகும். ஆனால், புதினங்களைப் படித்தற்கும் ஓர் அளவுண்டு. அவற்றைக் கற்பதன் நோக்கம், பொழுது போக்கின்பம் பெறல்வேண்டும் என்பதே.

## திருநெல்வேலித் தென்னிந்திய தமிழ்ச் சங்கம்

### தமிழ்ப்புலவர் மாணவர் தேர்வு

இச் சங்கத்தார் ஆண்டுதோறும் நடத்திவரும் தமிழ்ப் புலவர் மாணவர் தேர்வு, நிகழும் விளம்பியாண்டிற்கு 1959 பிப்ரவரி 18உ முதல் (ஆறுநாட்கள்) 24உ வரை நடைபெறும். சென்னை மாநிலத்திலுள்ள தமிழ்ப்புலவர் கல்லூரித் தலைவர்கள் தங்கள் கல்லூரி மாணவர்களை மேற்குறித்த தேர்வுக்கு விண்ணப்பித்து மாணவர்களை ஊக்கப் பெரிதும் வேண்டுகின்றோம். புகுமுகத் தேர்வுக்கு ரூ. 1/-ம் முதனிலைத் தேர்வுக்கு ரூ. 2/-ம் இறுதிநிலைத் தேர்வுக்கு ரூ. 3/-ம் கட்டணத்தொகையாம். மேற்படி விண்ணப்பங்கள் கட்டணத்தொகையுடன் 1958 டிசம்பர் 31உ-க்குள் அடியிற் கண்ட முகவரிக்குக் கிடைக்கும்படி அனுப்பப்பெறல் வேண்டும்.

தென்னிந்திய தமிழ்ச் சங்கம்
98 கீழத்தேர்த் தெரு,
திருநெல்வேலி நகர்.

இங்ஙனம்,
பு. சி. புன்னைவனநாதன்,
புலவர்குழுத் தலைவர்,

# ஏழிசைகளும் சுரங்களும்

[சங்கீதபூஷணம், திரு. எஸ். இராமநாதன்]

தமிழ் இசையின் நரம்புகளைத் தற்போது வழக்கிலுள்ள சுரங்களோடு பொருத்திக் காட்டவேண்டுவது இன்றியமையாத தொன்று. நூற்சான்று, யுக்தி, அனுபவம் ஆகியவற்றினல் ஏழிசைகட்கு நேரான சுரங்களைக் காண்போம்.

இதுகாறும் நமக்குக் கிடைத்துள்ள இசைத் தமிழ் நூல்கள் யாவும் குரல் சட்சமே என்று ஐயத்துக்கு இடமில்லாது கூறுகின்றன.

குரல் சட்சத்திற்காகும் —மகாபாரத சூடாமணி.

குரலே துத்தம் கைக்கிளை உழைஇளி
திரமுகு விளரி தாரமா முறையே
சரிகம பதநி யிவற்றின் அக்கரமாம் —அரபத்த நாவலர்.

அடியார்க்கு நல்லாரும் குரல் முதலிய ஏழிசைகட்கு உரிய எழுத்துக்கள் சரிகமபதநி என்பர்.

சிலப்பதிகாரத்துள்ள இசைப்பகுதிகளை ஆராய்ந்த இசைப் புலவர்களுள் முதல்வரான ஆபிரகாம் பண்டிதர் தம் கருணாமிருத சாகரம் என்னும் பெரு நூலின்கண் 531-ஆம் பக்கத்தில் “தாரத்துட்டோன்றும் உழை” என்னும் சூத்திரத்துக்கு விளக்கம் தந்திருக்கிறார்:

(ச - ப முறையாய்)

| | | | | |
|---|---|---|---|---|
| தாரத்தில் | (நி) | உழை | (ம) | தோன்றும் |
| உழையில் | (ம) | குரல் | (ச) | ,, |
| | (ச) | இளி | (ப) | ,, |
| ல் | (ப) | துத்தம் | (ரி) | ,, |
| ில் | (ரி) | விளரி | (த) | ,, |
| விளரியில் | (த) | கைக்கிளை | (க) | |

சுருதிகள் 24 ஆகும் என்ற கருத்து வேற்றுமை யுடையவரேயன்றி, நூல் முழுவதும் குரல்-சட்சம் என்றே அவர் விவகரித்துள்ளார்.

“பூர்வீக சங்கீத உண்மை” என்னும் நூலில் மதுரை பொன்னுசாமிப் பிள்ளை யவர்கள் அடிப்படைப்பாலை அரிகாம்

போதி என்றும், குரல் சட்சம் என்றும் கொண்டு
பிருக்கின்றார்.

பேராசிரியர் சாம்பமூர்த்தி, சங்கீதகலாநிதி முடிகொண்டான் வெங்கடராம ஐயர், சங்கீதகலாநிதி செம்மை வைத்திய நாத பாகவதர் போன்ற இசைப்புலவர்கள் குரல் சட்சம் என்று ஏற்றுக்கொண்டுள்ளனர்.

நூற்சான்றுகளும் அனுபவமும் இவ்வாறு தெளிவாக இருக்க, மதிப்பிற்குரிய விபுலாநந்த அடிகள் இளிதான் சட்சம் என்று தமது யாழ் நூலில் எழுதியிருக்கின்றார். தம் கருத்துக்குச் சான்றாக அவர் திவாகரம், பிங்கலந்தை முதலிய நிகண்டுகளில் இசைகட்கு உரிய ஒலிகள் (பறவை, விலங்கு) பற்றிய சூத்திரங்களைக் கொண்டிருக்கின்றார். அவற்றைப் பார்ப்போம்.

வேண்டிய வண்டும் மாண்டகு கிளியும்
குதிரையும யானையும் குயிலும் தேனுவும்
ஆடும் என்றிவை ஏழிசை யோசை. —பிங்கலந்தை.

வண்டுகிள்ளை வாசி மதயானை
தவளை தேனு வாடேழிசை யோசை. —திவாகரம்.

இளிக்கு ஒன்றில் குயிலும், மற்றொன்றில் தவளையும் காணபபடுகினறது

கல்லாட உரையில் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ள மற்றொரு சூத்திரத்தையும் காண்போம் :

சங்கு குயில் மயில் யானை புரவி
செங்காலன்னம் காடை யிவற்றோசை
ஏழிசை முககரும்.

மேலே காட்டிய நிகண்டுகள் 11-ஆவது நூற்றாண்டில் எழுந்தவை என்று பேராசிரியர் மு. வரதராசனார் எழுதியிருக்கின்றார். இச் சூத்திரங்கள் தம்முள் ஒன்றோடொன்று முரண்படுகின்றன; சிலப்பதிகாரத்தோடு மிகவும் முரணுகின்றன.

நிகண்டுச் சூத்திரங்கள் வண்டின் ஒலியைக் குரலுக்குக் கொள்கின்றன. இளங்கோவடிகளோ "இளிவாய் வண்டு" என்று கூறுகின்றார். (இந்திரவிழவூர் உ0உ வரி)

இன்னும் மலைபடுகடாம் வரி 7-இல் 'இளிபயிர் இமிரும் குறுமபரநதூம்பொடு' என்று உள்ளது. இதன் உரை 'இளி என்னும் நரம்பினுடைய ஓசையைத்தா னொலிக்கும் குறிய மேலாகிய தூம்போடே' என்பது.

"வண்டு செவ்வழி நற்பண்பாடும்" என்பது ஞானசம்பந்தர் தேவாரம் வண்டுகளுக்கு உரிய ஒலி ஒன்றே எனில், செவ்வழிப் பண்ணிற்குரிய ஏழிசை யொலிகள் தோன்றுவதெங்ஙனம்? பல்வேறு வண்டுகள் பல்வேறு இசைகளை யொலித்தன என்று கொள்ளலாம்; அப்போது வண்டுகட்குரிய இசை குரல் என்பது அடிபட்டுவிடும்.

மேலும் ஏழிசை நரம்புகளில் எந்நரம்பும் குரலாக நிற்கக் கூடுமாதலின், குரலுக்குரிய ஒலி இதுவே என்று கூறுதல் இயலாததாகும். சிலப்பதிகாரம, பத்துப்பாட்டு ஆகியவற்றோடு முரண்படும் பிற்காலத்து நிகண்டுச் சூத்திரங்களிலுள்ள ஒலிகளால் ஏழிசைகட்குரிய சுரங்களைக் காண்பது வீணு முயற்சியே

திவாகரத்தில் குரல் முதலிய ஏழிசைகளின் பெயர்களுக்கு அடுத்த சூத்திரத்திலேயே,

சவவும் ரிவ்வும் கவவும் மவவும்
பவவும் தவவும் நிவவும்

ஏழிசைக்குரிய எழுத்துக்கள் என்று கொடுக்கப்பட்டிருக்கிறது. அதனை ஒதுக்குவதற்குக் காரணம் ஏதுமில்லை.

தாரம், காந்தாரம ஆகியவற்றின் பெயர் ஒற்றுமையைக் கொண்டு இவை இரண்டும் ஒன்றே என்று நிறுவ முயல்வார் உளர். கமபநாடரின் பாடல் ஒனறில் இரண்டும் வேறு வேறு இசைகளாகக் கூறப்பட்டுள்ளது.

சிந்தாரத்தின் செசசை அணிந்தாள் தெளிநூல்யாழ்
அந்தாரத்தின் நேர்வரு சொல்லாள் அறைதும்பி
கந்தாரத்தின் இன்னிசை பாடிக் களிகூரும்
மந்தாரத்தின் மாலையலம்பும் மகுடத்தாள்.

—சுந்தர. ஊர்காண் - ௮௦.

தோற் கருவிகளைப்பற்றிய சூத்திரம் ஒன்று வருமாறு:

"இடக்கண் இளியாய் வலக்கண் குரலாய்
நடப்பது தோலியற் கருவி யாகும்."

இன்றளவும் வலக்கண் சட்சத்திற்குச் சேர்க்கப்படுகின்றதே யன்றி மத்திமத்திற்கு அன்று.

தாரத்தைக் காந்தாரம் என்றும், மறைந்து விட்டதாக வடமொழி நூல்களில் கூறப்படும் காந்தாரக்கிராமம் தாரக்கிரமமே என்றும் கொண்ட விபுலாநந்த அடிகள் ஆய்ச்சியர் குரவையில் உள்ளது தாரக்கிரமம் என்றும் கூறுவர். சிலப்பதிகாரத்தில்

அரங்கேற்று காதை உரையில் "இளிக்கிரமம்" என்ற தொடர் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. ஏழிசை நரம்புகளின் பிறப் பைப்பற்றிக் கூறும் சூக்கிரம் :

"தாரத்துட் டோன்றும் உழைஉழையுட் டோன்று
மோருங்குரல் குரலினுட் டோன்றிச—சேருமிளி
யுட்டோன்றம் துத்தத்துட் டோன்றும் விளரியுட்
கைக்கிளை தோன்றும் பிறப்பு."

தாரத்தில் தொடங்கும் இதனை விபுலாநந்த அடிகள் தாரக் கிரமம் என்று கொண்டனர். கிராமம் வேறு, கிரமம் வேறு என்பது ஒருபுறம் இருக்க, ஆய்ச்சியர் குரவையிலேயே ஏழிசை களை நிறுத்தும்போது இளங்கோவடிகள் குரல் முதலாக அன்றோ குறிப்பிடுகின்றார்? இசைகளின் பிறப்பைக் கூறும் அடியார்க்கு நல்லார் "இக் குரல் முதல் ஏழினும் முதலிற்றோன்றிய நரம்பு தாரம்" என்று அல்லவா கூறுகின்றார்?

இல்லாத தாரக்கிரமம் என்ற ஒன்றைக் கொண்ட விபுலா நந்த அடிகள் அதற்கு 4,4,1,4,4,4,1 என்ற இல்லாத மாத்திரை நிலையையும் ஏற்படுத்தினார். தமிழ்நாட்டில் தாரக்கிரமமே முதலில் தோன்றி நடந்ததாகவும், இசைக்கு அது அத்துணை வாய்ப்புடையதன்றாகலின் அது வழக்கு வீழ்ந்தது என்றும் கூறுவர் விபுலாநந்தர். இசைக்குப் பொருந்தாத ஒரு முறை பழந்தமிழ் நாட்டில் வழங்கியது என்று கூறுவது அத்துணைப் பெருமை தருவதாகத் தோன்றவில்லை.

இனி, விபுலாநந்தர் கூறுவதுபோல், இளியையே சட்சம் என்று ஏற்றுக்கொண்டால், அது செம்பாலை அரிகாம்போதி என்னும் அவரது கொள்கைக்கே ஊறுசெய்வதாக உள்ளது.

இராசிவட்டத்தில் இளியைச் சட்சமாகக்கொண்டு பார்த் தால் அது கரஹரப்பிரியா வாகும் என்பது புலனாகும். தொன்மையான கருவியாகிய குழலில் அரிகாம்போதி சுரங்களே அமைக்கப்பட்டுள்ளன. தமிழ்நாட்டு அடிப்படைப்பாலை அரி காம்போதி என்பதில் கருத்து வேற்றுமையே இல்லை. அது அரிகாம்போதி என்று ஒப்புக்கொண்ட பின்னர் குரலைச் சட்ச மாக ஏற்பதன்றி வேறுவழியில்லை.

இனி ஏழிசைகட்குரிய மாத்திரைகளைப்பற்றிக் கவனிப் போம். மாத்திரை என்பது இடைவெளியைக் குறிக்கும்.

| குு | து | கை | உ | இ | வி | தா |
|---|---|---|---|---|---|---|
| 4 | 4 | 3 | 2 | 4 | 3 | 2 |

இந்த இடைவெளிகளை நன்கு உணர்தற்கு மேனாட்டு இசையின் Major Scale-இன் இடைவெளிகளை அறிவது பயன்தரும். வட்டப்பாலையில் பன்னிரண்டு இராசிகளில் ஏழு நரம்புகள் நிற்கும். ஐந்து ராசிகள் நரம்பு நில்லாது அந்தரமாகும். மேனாட்டு Chromatic Scale-இலும் 12 ஸ்தானங்கள் உள்ளமை பியானோ கருவியைப் பார்த்தால் விளங்கும். அந்தப் பன்னிரண்டில் Major Scale-இல் ஏழு சுரங்களே இயலும். ஒரு ஸ்தாயியில் ஏழு வெள்ளைக் கட்டைகளும், ஐந்து கறுப்புக் கட்டைகளும் இருக்கக் காணலாம். வெள்ளைக் கட்டைகளே Major Scale-க்கு உரிய சுரங்களாகும்.




செம்பாலை, Major Scale இரண்டையும் ஒருங்கே வைத்து நோக்கினால், C D E F G A B கு து கை உ இ வி ஆகியவை ஒன்றே என்பது புலனாகும்.

C D, D E, F G, G A ஆகியவற்றிற்கு இடையில் Black Keys (கறுப்புக் கட்டைகள்) இருப்பதுபோல்,

கு து, து கை, உ இ, இ வி, ஆகியவற்றிற்கு இடையில் அந்தரங்கள் நிற்பதையும் காணலாம்.

Major Scale-இல் $\frac{9}{8}$ அளவுள்ள இடைவெளியுள்ள Major Tone உள்ள இடத்தில் செம்பாலையில் நான்கு மாத்திரையும், $\frac{10}{9}$ அளவுள்ள இடை வெளியுடைய Minor Tone உள்ள இடத்தில் செம்பாலையில் 3 மாத்திரையும், $\frac{16}{15}$ அளவுள்ள இடைவெளியுடைய Semi Tone உள்ள இடத்தில் செம்பாலையில் 2 மாத்திரையும் அமைந்திருப்பதைக் காணலாம்.

Major Scale-இன் C-ஐ 1 என்று கொண்டால் அதன் சுரங்களுக்குரிய விகிதம் வருமாறு :

| | C | D | E | F | G | A | B | C′ |
|---|---|---|---|---|---|---|---|---|
| Major Scale | 1 | $\frac{9}{8}$ | $\frac{5}{4}$ | $\frac{4}{3}$ | $\frac{3}{2}$ | $\frac{5}{3}$ | $\frac{15}{8}$ | 2 |
| | கு | து | கை | உ | | வி | தா | கு′ |
| செம்பாலை | 1 | $\frac{9}{8}$ | $\frac{5}{4}$ | $\frac{4}{3}$ | $\frac{3}{2}$ | $\frac{5}{3}$ | $\frac{16}{9}$ | 2 |

செம்பாலையின் குரலை 1 ஆகக்கொண்டால் அதன் நரம்புகளுக்குரிய நிலையும் தாரம் தவிர மற்றப்படி ஒன்றுக அமைந்திருப்பதைக் காணலாம்.

Major Scale-இல் A-க்கு அடுத்துள்ள கறுப்புக் கட்டை செம்பாலையில் தாரமாக நிற்கும் மற்றப்படி வேற்றுமை யில்லை.

மேனுட்டு Scale-இல் மூன்று Major Tone, இரண்டு Minor Tone, இரண்டு Semi Tone உள்ளதுபோலவே, செம்பாலையிலும் மூன்று 4 மாத்திரை இடை வெளிகளிலும், இரண்டு 3 மாத்திரை இடை வெளிகளும், இரண்டு 2 மாததிரை இடைவெளிகளும் உள்ளன.

Major Scale $\frac{9}{8} \times \frac{10}{9} \times \frac{16}{15} \times \frac{9}{8} \times \frac{10}{9} \times \frac{9}{8} \times \frac{16}{15} = 2$

செம்பாலை $\frac{9}{8} \times \frac{10}{9} \times \frac{16}{15} \times \frac{9}{8} \times \frac{10}{9} \times \frac{16}{15} \times \frac{9}{8} = 2$

மேலே காட்டப்பெற்ற கணக்கினுல், ஸ்தாயியில் இத்துணை இடைவெளிகளே இருக்கக்கூடும் என்பது தெளிவாகும்.

இனி பரதரின் சுருதி முறையைக் காண்போம். சாமவேதத்து இசையில் பயன்படும் சட்சக் கிராமத்தில் பயிலும் ஏழிசைகட்குரிய மாத்திரைநிலை 4-3-2-4-4-3-2 என்று பரதர் கொடுத்திருக்கிறுர். அவரும் ஒரு ஸ்தாயியில் மூன்று சதுசுருதி, இரண்டு திரிசுருதி, இரண்டு த்விசுருதி இடைவெளிகள் தந்திருப்பதைக் காணலாம். சட்சக்கிராமத்தின் சட்சத்தை 1 என்று கொண்டால் அதன் சுரங்களின் விகிதம் வருமாறு :

| ச | ரி | க | ம | ப | த | நி | ச |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | $\frac{10}{9}$ | $\frac{32}{27}$ | $\frac{4}{3}$ | $\frac{3}{2}$ | $\frac{5}{3}$ | $\frac{16}{9}$ | 2 |

$$\frac{10}{9} \times \frac{16}{15} \times \frac{9}{8} \times \frac{9}{8} \times \frac{10}{9} \times \frac{16}{15} \times \frac{9}{8} = 2$$

செம்பாலையின் துத்தம், கைக்கிளை தவிர, ஏனைய நரம்புகளின் விகிதம் ஒத்திருக்கக் காணலாம்.

நரம்புகளின் இடைவெளிகள் அந்தந்தப் பாலைகளுக் கேற்றவாறு மாறுபடும் என்பதை நாம் நினைவில் வைக்கவேண்டும்.

எடுத்துக்காட்டாக படுமலைப்பாலையின் மாத்திரை நிலையைக் கவனிப்போம்.

| கு | து | கை | உ | இ | வி | தா |
|---|---|---|---|---|---|---|
| 2 | 4 | 4 | 3 | 2 | 4 | 3 |

செம்பாலையில், குரலிலிருந்து 9-ஆவது மாத்திரையில் உழை நிற்கும்.

செம்பாலை:
உ - 9
கை - 7
து - 4
கு - 0

படுமலைப்பாலை:
11 - உழை
8 - கை
4 - து
0 - கு

சட்சக்கிராமம்:
9 ம
5 க
3 ரி
0 ச

படுமலைப்பாலையில் உழை 11-ஆவது சுருதியில் நிற்பதைக் காணலாம். சட்சக்கிராமத்தில் ரிஷபம் மூன்றாவது சுருதியிலும், காந்தாரம் ஐந்தாவது சுருதியிலும் நிற்கும். செமபாலையின் உழை போலவே, மததிமமும 9-ஆவது சுருதியில் நிற்கும்.

மேலே காட்டியவற்றால், நரம்புகட்குரிய மாத்திரைநிலை பாலைதோறும் மாறுபடும் என்பது புலனாகும். ஆகவே பரதர் சுரங்களின் இடைவெளியை மாற்றிக் கூறியவர் அல்லர். சட்சக் கிராமத்தில் இயன்ற இடைவெளிகளை அவர் கொடுத்திருக்கிறாரே யன்றி வேறன்று.

படுமலைப்பாலையின் விளரி முதலாகத் தொடங்கினால் 4-3-2-4-4-3-2 என்ற சட்சக்கிராமத்தின் நிலை கிடைப்பதால், விளரியே சட்சம் என்று கூறமுடியுமா? அவ்வாறே செம்பாலையின் இளி முதல் தொடங்கினால் 4-3-2-4-4-3-2 கிடைப்பதால், இளி சட்சம் என்று கூறுவதும் இயலாது.

அரங்கேற்று காதையில் யாழில் முதல் நரம்பு இளி என்றும் அதனால் அது இளிக்கிரமம் என்று பெயர் பெற்றதென்றும் கூறுவர் விபுலாநந்தர். ஆனால் இளங்கோவடிகள் வாக்கில் அங்கே உழை முதல் நரம்பு என்றும் கைக்கிளை இறுதி நரம்பு என்றும் தெளிவாக உள்ளது.

" வன்மையிற் கிடந்ததார பாகமும்
மென்மையிற் கிடந்த குரலின் பாகமும்
...... செம்பாலை யாயது."

என்னும் அரங்கேற்று காதை அடிகட்கு யாழ்நூல் தரும் விளக்கம் வருமாறு :

| | இ | வி | தா | கு | து | கை | உ |
|---|---|---|---|---|---|---|---|
| பண்டை நிலை : | 4 | 3 | 2 | 4 | 4 | 3 | 2 |
| திரிந்த நிலை : | 4 | 4 | 3 | 2 | 4 | 3 | 2 |

இளங்கோவடிகள் வாக்கில் மென்மையிற் கிடந்த குரல், யாழ்நூலில் வன்மையாக நின்று முரணுவதைக் காணலாம். இறுதியில் வன்மையாக நிற்கவேண்டிய தாரமும் மெலிந்து நிற்பதையும் காணலாம்.

இளியைச் சட்சம் என்றும், இளிக்கிரமத்தைச் சட்சக் கிராமம் என்றும் கொண்டதின் விளைவு இது.

'கிளையும் தன்கிளையழிவு கண்டு அவள் வயிற்சேர' என்ற விடத்தும், விபுலாநந்தர் 'கைக்கிளை தன் கிளையாகிய தாரம் அழிந்ததைக் கண்டு' என்று பொருள் செய்திருக்கிறார். தாரம் கைக்கிளைக்குக் கிளை நரம்பாகாது; கைக்கிளையிலிருந்து 11-ஆம் மாத்திரையில் நிற்கும் தாரம் அதன் கிளையாவது எங்ஙனம்?

" கிளை எனப்படுவ கிளக்குங்காலைக்
குரலே யிளியே துத்தம் விளரி
கைக்கிளை என ஐந்தாகு மென்ப."

என்னும் சூத்திரமும் காண்க.

4432 432 என்ற மாத்திரைநிலை திரிந்து 2432 443 என்று உழைமுதற் கைக்கிளை யிறுவாயாக மாறுவதை எனது நூலில்

வேனிற்காதை யுரையிலுள்ள மேற்கோட் சூத்திரமும் இதே பொருள் உடையதே :

குன்றாக் குரற்பாதி தாரத்தி லொன்று
நடுவண் இணைகிளையாக்கிக்—கொடியிடையாய்
தாரத்தி லொன்று விளரி மேலேறடவக்
கோத் திளிகுரலா நின்று.

பண்டைநிலையின் இளி இப்போது குரலாகி நிற்கும்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | கு | து | கை | உ | இ | வி | தா |
| | 4 | 4 | 3 | 2 | 4 | 3 | 2 |
| | | | வி | தா | கு | து | கை |
| | ப | த | நி | ச | ரி | க | |

ஆகவே பண்டைக் குரல் இப்போது உழையாவதைக் காணலாம்.

இவ்வாறு இளி குரலான நிலையில் குரல் முதல் ஏழும், சட்சக் கிராமத்தின் சட்சம் முதல் ஏழும் மாத்திரை நிலை ஒத்திருப்ப தால் குரல் சட்சம் என்பது தெளிவாகிறதன்றோ?

| | | |
|---|---|---|
| Major Tone | —4 அலகு | $\frac{9}{8}$ |
| Minor Tone | —3 | $\frac{10}{9}$ |
| Semi Tone | —2 | $\frac{16}{15}$ |

என்பதை முன்னர் ஒப்புநோக்கிக் கண்டோம். "$\frac{16}{15}$ என்னும் இடை விகிதமுடைய பற்றிசை 3 அலகுடையதெனப் பண்டை நாளிலிருந்த வடநாட்டுத் தென்னாட்டு இசை யாசிரியர்களாற் கொள்ளப்பட்டதென்றும் அறிகின்றோம்" என்று யாழ்நூல் கூறுகின்றது. (பக்கம 31) $\frac{16}{15}$-ஐ விடப் பெரியதாகிய $\frac{10}{9}$ விகிதமுடைய இடை வெளியை யாழ்நூல் 2 அலகு என்று கொண்டுவிட்டது. இவ்வாறு இடை வெளிகளைப் பிழையாகக் கொண்டதால், பாலைகளிலும் பெரும பிழைகள் ஏற்பட்டு விட்டன, யாழ்நூலிலே. படுமலைப்பாலையின் உழை 11-ஆம் மாத்திரையில் நிற்பதைக் கண்டோம் அது பிரதிமத்திமம ஆகும். இப் படுமலை நடபைரவி என்னும் யாழ்நூல் யாழ்நூலார்க் கருத்துப்படி உழை நிஷாதம் என்று கொண்டாலும் இது காகலி ஆகும்? நடபைரவியில் இயலுவது கை
!

தா - கு - இ - து - வி - கை என்ற முறையில் இசை நரம்புகள் பிறப்பதை நோக்கினால் அவை ஐந்தாம் நரம்பாகிய இளிக்கிரமத்தில் அமைந்திருப்பதைக் காணலாம். யாழில் நரம்புகள் இடுகையில் உழையை முதல் நரம்பாக வைப்பர் என்பது, "உழைமுதற் கைக்கிளை இறுவாய் கட்டி" "மேலது உழையுளி கீழது கைக்கிளை" முதலிய சிலப்பதிகார அடிகளால் விளங்கும். வேனிற் காதையில் வரும் "உழைமுதற் கைக்கிளை இறுவாய் கட்டி" என்னும் அடிக்கு உரையில் அடியார்க்கு நல்லார் "தாரத்துட் டோன்றும் உழை" என்னும் சூத்திரத்தை மேற்கோளாகக் காட்டி, "தாரத்தில் முதற் பிறப்பதாகிய உழை குரலாய்க் கைக்கிளை தாரமாகிய கோடிப்பாலை முதற்பிறக்கக் கட்டி" என்று

தந்துள்ளார். பிறப்பில் முதலாகிய தார நரம்பு முதல் நரம்பாக யாழில் கட்டப்படுவதில்லை. உழையை முதலிற்கட்டி ஏனைய நரம்புகளை இளிக்கிரமத்தில் கணித்து அறிந்தனர் என்பது இதனால் புலனாகும். பரதம், ரத்னாகரம், சுரமேள கலாநிதி, சதுர்தண்டிபிரகாசிகை முதலிய வடமொழி இசை நூல்களில் எல்லாம் மத்திம ஸ்வரமே வீணையில் முதலாக வைக்கப்படும் என்னும் செய்தி உள்ளது.

## கோடிப்பாலை

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | கு | து | கை | உ | இ | வி | தா | |
| | 4 | 4 | 3 | 2 | 4 | 3 | 2 | |
| கோடிப்பாலை | கு | து | கை | உ | இ | வி | தா | கு |
| மாத்திரை | 2 | 4 | 3 | 2 | 4 | 4 | 3 | |
| விகிதம் | 1 | $\frac{9}{8}$ | $\frac{5}{4}$ | $\frac{4}{3}$ | $\frac{3}{2}$ | $\frac{27}{16}$ | $\frac{15}{8}$ | 2 |
| Major Scale | 1 | $\frac{9}{8}$ | $\frac{5}{4}$ | $\frac{4}{3}$ | $\frac{3}{2}$ | $\frac{5}{3}$ | $\frac{15}{8}$ | 2 |
| | C | D | E | F | G | A | B | C′ |

செம்பாலையின் உழையைக் குரலாகக்கொண்டால் பிறக்கும் கோடிப்பாலையின் விகிதங்களும் Major Scale-இன் விகிதங்களும் ஒன்றாக இருக்கக் காணலாம் கோடிப்பாலையின் விளரி Major Scale-இன் A-ஐ விட ஒரு Comma உயர்ந்தது; $\frac{5}{3}\times\frac{81}{80}=\frac{27}{16}$. Major Scale என்பது சங்கராபரணம் என்பது அனைவரும் அறிந்தது ஆகவே கோடிப்பாலை சங்கராபரணமே என்பது தெளிவாகிறதன்றோ? மேலும் அரிகாம்போதியின் விளரியை விட சஙகராபரணத்தின் விளரி ஒலி மிகுந்து நடக்கும் என்பதும் இசைப்புலவர்கள் எளிதில் உணரககூடியதே. கோடிப்பாலையைக் கரஹரப்பிரியா என்று யாழ்நூல் கூறும். அக்கருத்து பிழையானது என்பது தெளிவு.

ஏபபண்ணோடு உழை, தாரம் சேர்க்கக் கோடிப்பாலை பிறக்கும் என்னும சேக்கிழார் சுவாமிகள் "ஏறிய தாரம்" என்று தாரத்துக்கு அடைகொடுத்ததன் நயம் சுவைக்கத் தகுந்தது. அடையில்லாது தாரம் எனின் அது செம்பாலையின் தாரததைக் குறிக்குமாதலின், கோடிப்பாலையின் மாத்திரை மிகுந்த தாரத்தை ஏறிய தாரம் என்றார் சேக்கிழார்.

திரு கு. கோதண்டபாணிப் பிள்ளை அவர்களின் அரிய ஆராய்ச்சியின் பயனாக முல்லைப்பண்ணில் உழை, தாரம் தவிர ஏனைய ஐந்து நரம்புகளே இயல்வன என்பது உறுதியாகி விட்டதால், ஆனாய நாயனார் புராணத்திலுள்ள "ஏறிய தாரமும்

உழையும் கிழமை கொள" என்ற செய்யுளில் வரும் கிழமை என்ற சொல் உரிமைப் பொருளுடையது என்பதே பொருந்துவது. கோடிப்பாலையின் விகிதங்களைக் கணக்கிட்டு அது சங்கராபரணமே என்பதை நிலைநிறுத்தி யுள்ளோம். சங்கராபரணத்தின் ம, நி யை நீக்க ஏனைய ச ரி க ப த என்னும் ஐந்தும் மோகனத்தின் சுரங்களாக உள்ளமை நோக்குக.

முல்லைப்பண்ணில் இயலும் நரம்புகள் ஐந்தென்பதும் அவை குரல், துத்தம், கைக்கிளை, இளி, விளரி என்பவை என்பதும் உறுதியாகிவிட்டது. நரம்புக் கருவியிலோ, துளைக் கருவியிலோ ஏதாவது நரம்பைக் குரலாகக்கொண்டு ஐந்து நரம்புகளை ஐந்தாவது நரம்புக்கிரமத்தில் இசைத்தால் தறபோது மோகனம் என்று வழங்கும் இராகம் பிறப்பதை எளிதில் எவரும் அறியலாம். முல்லைப்பண் மோகனமே என்று ஏற்பட்டவுடன், குரல் சட்சமே என்பதும் அதன் Corollary ஆகும். இளி சட்சமாக இருப்பின், குரல் மத்திமம் ஆகவேண்டும். மோகனத்தில் மத்திமம விலக்கப்படவேண்டிய சுரம் ஆயிற்றே!

தமிழ் நாட்டுப் பண்டைய இசையில் முதன் முதலில் தோன்றி நடந்ததாக யாழ்நூல் குறிப்பிடும் தாரக்கிரமம் என்பதற்கு நூற்சான்று ஏதுமில்லை. அதற்கு மாறுகக் குரல் குரலாய செம்பாலையே அடிப்படைப்பாலை என்பதற்குச் சான்றுகள் பல உள.

சிறுபாணாற்றுப்படை வரி 229 - 30: "குரல் குரலாக நூல்நெறி மரபிற்பண்ணி" இதன் உரை: "இசைநூல் கூறுகின்ற முறைமையாலே செம்பாலையாக வாசித்து" என்பது.

ஆகவே குரல் குரலாகிய முறையே இசைத்தமிழ் நூல் மரபு என்பது இனிது விளங்கும். தாரம் முதல் நரம்பாக நிற்கும் என்றும், அக்கிரமம் தாரக்கிரமம் என்றும் யாழ்நூல் கூறுவதற்குச் சான்றுமில்லை, பொருந்தவும் பொருந்தாது.

ஆகவே நூல்நெறி மரபிற் பண்ணிய குரல்குரலாகிய செம்பாலையே தமிழ்நாட்டு இசையின் அடிப்படைப்பாலை என்பதும், வட்டப்பாலையில் குரல் முதலாக நரம்புகள் நிற்பது அரிகாம்போதியே என்பதும், தொன்மையான இசைக்கருவியாகிய குழலில் அமைந்தது இந்த அரிகாம்போதியே என்பதும், குழலின் குரல்முதல் ஏழும் ச ரி க ம ப த நி ஆகிய ஏழும் ஒன்றுகும் என்பதும் இசைப்புலவர் யாவரும் ஒப்பிய உண்மைகள்.

---

# பாலையுள் கடவுட் கொள்கை

[திரு. சி. தாமோதரம்]

கடவுள் வாழ்த்துப் பாடலில் ஆசிரியர் நல்லந்துவனர் சிவபெருமானை 'முக்கண்ணன்' 'மூவெயிலு முடன்றக்கான்' 'சிறருங் கணிச்சியோன்' எனச் சிறப்பித்தமையானும் திரிபுரம் எரித்த நிகழ்ச்சியை எடுத்தியம்பி அவன் புகழ் பாடினமையானும் சிவசமயச் சார்புடையவர் என்பதும் சிவனையே முழுமுதற் கடவுளாகக் கொண்டவர் என்பதும் போதரும்

மேலும் இருபத்தாருவது பாட்டில் பலராமனின் நிறத்தைப் போல வெண்கடம்பும், ஞாயிற்றின் நிறத்தைப்போல அரும்புகள் அலர்ந்த செருந்தியும், காமன் நிறத்தினைப்போலக் காஞ்சியும், அவன் தம்பி சாமன் நிறத்தினைப்போல ஞாழலும், இடபக் கொடியோன் நிறத்தினைப் போலப் பூக்களைக்கொண்ட இலவமும் இருக்கின்றன என்கின்றனர். இவ்வைவர்களின் நிறம்போல் பல வேறு பூக்கள் பூத்திருக்கின்றமையின் அப்பூக்(செம்)களுக்குப் பொருத்தமான ஒப்புக் கூறுதற்கு இவர்களைச் சுட்டுவராயினர். அங்ஙனங் கூறவந்தவர் வேறு பல ஒப்புக்களைக் கூருது தெய்வங் களை ஒப்புக் கூறுதலினால் இவர் கடவுட்பற்று மிக்குடையவர் என்பது நன்கு விளங்கும் ஒப்பெடுத்துக் கூறுமிடததும் 'ஆனேற்றுக் கொடியோன்' என்று சிவபெருமானைச் சிறப் புடைப்பொருளை ஈற்றில் கூறுதல் மரபு என்பதற்கு இணங்க ஈற்றில் கூறியுள்ளார். அதனாலும் சிவபெருமானை முழுமுதலாகக் கொண்டவர் என்பது நன்கு பெறப்படும்.

மற்ருேர் இடத்தில் பதினருவது பாட்டில் கற்புடைப் பெண் கள் சிறுதெய்வத்திற்குத் தலைமையாகிய ஞாயிற்றினை மழை பெய்தற் பொருட்டும் அதன் கதிர் தணிதற்பொருட்டும், காற்று வீசுதற்பொருட்டும் வேண்டிக்கொளவது தகாது எனக் கூறி யிருப்பதால் சிறு தெய்வ வழிபாடு கற்புடைப் பெண்கட்குப் பொருந்தாது என்பதனை வலியுறுத்துகின்ருர். அதே செய்யுளில் கற்புடைய பெண்டிர்க்கு அறக்கடவுள் முன்னின்று துணை செய்யும் என்பதனல் தமிழர் ஒரு முழுமுதற் கடவுள் வழி பாட்டுக் கொள்கையினர் என்பதும் பெறப்படும்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) தமிழ் வளர்ச்சிக் குழு அமைப்பு

தமிழ் மொழி, வரலாறு முதலியன பற்றி ஆராயவும், தமிழை ஆட்சிமொழி ஆக்கும் வழி வகைகளைக் காணவும், கல்லூரிகளில் தமிழ் மொழியைப் போதனு மொழியாக்கவும் ஆகிய தமிழ் வளர்ச்சிக்கான திட்டங்களைத் தீட்டுதற்கென சென்னை அரசினர் ஓர் ஆய்வுக் குழுவினை நிறுவியுள்ளனர்.

15-11-58-இல் நடைபெற்ற தமிழக மாநிலக் கல்வி ஆய்வுக் குழுக் கூட்டத்தில் இம் முடிவு செய்யப்பட்டது. அக் கூட்டத்திற்கு கல்வி அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் தலைமை தாங்கினுர். இக் கூட்டத்தின் முடிவுப்படி அடுத்த சனவரித் திங்கள் 26-ம் நாள் அன்று தமிழ் வளர்ச்சிக் குழு துவங்கிப் பணியாற்றும். சென்னைப் பல்கலைக் கழகம், அண்ணுமலைப் பல்கலைக் கழகம் ஆகியவற்றின் சார்பில் இருவரும், கல்வி ஆய்வுக் குழுச் சார்பில் இருவரும், பணித்துறையிலுள்ளோரில் 10 அல்லது 12 பேர்களும் இக் குழுவில் இடம் பெறுவர்.

மற்றும், மதுரைத் தமிழ்ச் சங்கம், கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலையம், தெ. இ. சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், தமிழ்க் கலாசாரக் கழகம், உ. வே. சா. நூல் நிலையம், தமிழ் வளர்ச்சிக் கழகம், ஆட்சிமொழி செயல்முறைக் குழு, கல்வித் துறை நெறியாளர், கீழ்த்திசைச் சுவடிகள் நிலைய முதல்வர், புதை பொருள் ஆராய்ச்சி நிலையப் முதல்வர், ஆலய முதல்வர்கள், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், அற நிலையப் பாதுகாப்பினர், ஆசிரியர்கள் சங்கம், பல்கலைக் கழக ஆசிரியர் சங்கம் முதலியனவும் இக் குழுவில் இடம் பெறும்

சென்னை மாநிலத்திலுள்ள பல்வேறு நூல் நிலையங்களில் பதிப் பிக்கப் படாமலிருக்கும் ஏடுகளைச் சேர்ப்பது, குழந்தைகளுக்கான நூல்களை தமிழில் வெளியிட ஏற்பாடு செய்வது, நாடோடி இலக்கியங் களை வெளியிடுவது, ஆலயங்களில் உள்ள கலவெட்டுக்களைப் பதிவு செய்து வெளியிடுதல் ஆகிய பணிகளை இக் கழகம் மேற்கொள்ளும்.

**குறிப்பு:** அரசினர் மேற்கொள்ளவிருக்கும் இப் பணி மிக மிகச் சீரிய பணியாகும். இதனை வரவேற்கிறேம்—வாழ்த்துகிறேம். அரசி யலாரின் இம் முயற்சியில் தமிழ் மொழி வளர்ச்சிக்கான திட்டங்கள் அனைத்தும் அடங்கியிருப்பது கண்டு மகிழ்கிறேம். இத் திட்டங்கள் ஏட்டளவிலிருந்து செயலளவிற்கு வரும் நன்னுளை எதிர் பார்க்கிறேம்.

## (உ) திராவிட மொழிகளின் வளர்ச்சி

"இந் நாட்டிலுள்ள ஒவ்வொரு மொழியும் ஒவ்வொரு மணி போன்றவை. இவை ஒற்றுமையுடன் இயங்குவது, பல மணிகள் பதிக்கப் பெற்ற ஓர் அழகிய அணிகலன் ஒளி வீசித் திகழ்வது போலா கும். தங்களுடைய மொழியை வளர்க்க வேண்டும் என்னும் ஆர்வத்தில் சிலர் பிற மொழிகளைத் தூற்றுகிறுர்கள். இது தவறு. அமைதியான முறையில் பழைய பண்பாட்டின் அடிப்படையில மொழிகளை ஆராய்ந்து அவற்றின் வளர்ச்சிக்கும் ஆக்கத்திற்கும் வழி கோலல் வேண்டும். மொழி பற்றி நடத்தப்படும் அனைத்திந்திய போட்டிகளில் தீர்ப்புக்

கூறுதற்கு அமைக்கப்படும் குழுக்களில் திராவிட மொழி எழுத்தாளர்கள், ஆசிரியர்கள் ஆகியோர்களுக்கும் இடம் அளிக்கப்படல் வேண்டும், என்று மைய அரசினரைக் கேட்டுக் கொள்கிறேன்." என்று 23-11-58-இல 'கேரள சாகித்ய பரிஷத்'தின் 'திராவிட மொழிகள்' பற்றிய மாநாட்டில் தலைமை தாங்கிய டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியாரவர்கள் குறிப்பிட்டார்கள்.

குறிப்பு: திராவிட மொழிகளுக்கிடையே ஓர் அடிப்படை ஒற்றுமையும், பண்பாடும் அடங்கியுள்ளன. எனவே திராவிட மொழி பேசுவோர் அம் மொழிகளுக்குள் உயர்வு தாழ்வு கருதாது திராவிடப் பண்பாட்டைப் பாதுகாத்தல் வேண்டும் திரு. செட்டியார் அவர்களின் பேச்சு இக் கருத்தினையே வலியுறுத்துவதாகும்.

### (௩) ஆங்கிலத்தின் இன்றியமையாமை பற்றி திரு. தேசுமுக்கு அவர்களின் கருத்து

"இலக்கியம், அறிவியல், நுண்கலை முதலிய துறைகளில அறிவு பெற வேண்டுமானால் ஆங்கிலத்தின் துணை மிக இன்றியமையாததாகும். ஆராய்ச்சிக்குரிய பொருள்களிற் பெரும்பாலானவை ஆங்கில புத்தகங்களிலேயே அடங்கியுள்ளன. தற்காலத்தில் ஆராய்ச்சி என்பது தனிப்பட்டவரின் முயற்சியாக இருத்தல் முடியாது. அந்தக் காலம் மாறிவிட்டது. இந்தியாவிற்கு வெளியிலுள்ளவர்களின் அறிவு ஆராய்ச்சிகளை நாம் துணைகொண்டே ஆராய்ச்சி செய்தல் வேண்டும் அதற்கு ஆங்கிலம்தான் ஏற்ற துணையாகும். உலக அறிவியல் துறைகளுக்கு ஆங்கிலமே தக்க வாயிலாக அமைந்துள்ளது." என்று பல்கலைக் கழகக் கொடைக் குழுத் தலைவர் திரு. சி. டி. தேசுமுக்கு அவர்கள் 22-11-58-இல் இராசுகோட்டில் நடைபெற்ற மாணவர் கூட்டமொன்றில் பேசிய காலை குறிப்பிட்டார்.

குறிப்பு: திரு. தேசுமுக்கு அவர்களின் கருத்துரைகளை மாணவர்கள் மனதிற்கொண்டு ஆங்கிலத்தை நன்கு கற்றுப் பயன் பெறுவார்களாக.

### (௪) தாய் மொழியில் கல்வி கற்பித்தல் பற்றி டாக்டர். ஏ. எல் முதலியார் அவர்களின் கருத்து

"கல்லூரிகளில் தாய் மொழி மூலம் கல்வி கற்பிப்பதை நான் தடை செய்ய வில்லை. ஆசிரியப் பணியில் எனக்குள்ள அனுபவத்தைக் கொண்டு கூறுகிறேன்: தாய் மொழி மூலம் பாடம் கற்பிப்பதில் விரைவு காட்டுதல் கூடாது. இது மெள்ள மெள்ளச் செய்யப்பட வேண்டிய வேலை. தாய்மொழியில் தக்க பாட நூல்களும், ஒப்பு நோக்க வேண்டிய நூல்கள், இதழ்கள் முதலியனவும் போதிய அளவு நம்மிடம் இல்லை. அவற்றை உண்டு பண்ணுத நிலையில் தாய் மொழியில் பாடம் போதித்தல் தீமையாக முடியும். எனவே, முதலில் இந்தக் குறைபாடு நீக்கப்படல் வேண்டும்" என்று 17-11-58-இல் மாயூரம் ஏ. வி. சி. கல்லூரியில் பேசிய காலை டாக்டர். ஏ. இலட்சுமணசாமி முதலியாரவர்கள் குறிப்பிட்டார்கள்.

குறிப்பு: டாக்டர் முதலியாரவர்களின் கருத்து நிறைவேற அரசியலார் ஒத்துழைத்து ஏற்ற தமிழ் நூல்கள் வெளிவர நூல் வெளியிட்டாளர்கட்கு ஆதரவு தருவார்களாக.

(இ) ஆங்கிலத்தின் தகுதி பற்றி திரு. முன்ஷியின் கருத்து

“பிற இந்திய மொழிகளைப் போலவே ஆங்கிலமும் ஓர் இந்திய மொழியாகிவிட்டது ஆங்கிலத்தை அகற்றுவதில தேசபக்தி எதுவும் இல்லை. உலகில் உள்ள மக்கள் ஆங்கிலத்தைப் புரிந்து கொள்கின்றனர்.” என்று 3-11-58-இல் சென்னை சமஸ்கிருத கழகத்தில் பேசிய காலை, பாரத வித்யா பவன் தலைவர் திரு கே. எம். முன்ஷி அவர்கள் குறிப்பிட்டார்கள்.

குறிப்பு: ‘தேசபக்தி’ என்னும் காரணத்தினாலேயே உலகப் பொது மொழியாகிய ஆங்கிலத்தைச சிலர் வெறுக்கின்றனர். இந்த அறியாமையின் பாற்படும் அத்தகையோருக்குத் திரு. முன்ஷி அவர்களின் பேச்சு இனியேனும் நல்ல தெளிவை உண்டு பண்ணுமென நம்புகிறோம்.

(ஈ) திரு. கி. ஆ பெ. விசுவநாதம் அவர்களின் மணிவிழா

முத்தமிழ்க் காவலர் திரு கி. ஆ பெ. விசுவநாதம் அவர்களின் மணிவிழா ஐப்பசித் திங்கள் 26-ஆம் நாள் (11-11-58) திருச்சி தேவர் மன்றத்தில சிறப்புற நடந்தேறியது ஓமாந்தூர் திரு. இராமசாமிரெட்டியாரவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார்கள. பெருமக்கள் பலர் வாழ்த்துரை வழங்கினர் இவ்விழாவினைத் தொடர்ந்து புலவர் குழு ஒன்று அமைக்கப்பட்டது. அக குழு செயலாற்ற நூறாயிரம் வெண் பொற்காசுகள் சேர்ப்பதென முடிவு செய்யப்பட்டது முத்தமிழ்க் காவலா தாமே ஐயாயிரம் வெண்பொற் காசுகள் வழங்கினர். மணிவிழா கொண்ட மாண்பினர் திரு கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கட்கு நம் வாழ்த்து உரித்தாகுக.

திருக்குறள்—மலையாள மொழி பெயர்ப்பு

உலகப் பொது மறையாகிய திருக்குறளிற்கு அழகிய இனிய முறையில் வெண்ணிகுளம் கோபால குருப் என்பவா உரை எழுதியுள்ளார். அது கேரள நாட்டிலிருந்து வெளிவந்துள்ளது. கண்கவர் பதிப்பாக அமைந்துள்ளது. அதனைப் பதிப்பித்தோர்:

சாகித்திய பிரவர்த்தகா சி. எஸ். லிமிடெட்.
நேஷனல் புக்ஸ்டால், கோட்டயம். விலை ரூ. 5-00.

---

கையறுநிலை

யாழ்ப்பாணம் சிவத்திரு, V. நாகலிங்கம் பிள்ளையவர்களின் மகனார் திரு. சுப்பிரமணியம் 1958 நவமபர், 11 ஆம் நாள் இறையடி நீழல் எய்தினரெனக் கேட்டுப் பெரிதும் வருந்துகின்றோம். அவாக்கு அகவை முப்பத்தைந்தாகும். அவர்தம் அருமை மனைவியார் கோகிலாம்பிகையார். அவர்க்குத் திருமணம் அகவை 27-ல் நிகழ்ந்தது. ஆறுட்டைப் பருவ மக வொன்றிருக்கிறது. அவர் இலங்கைக் கருங்கற் சுண்ண நிலையத்தின் வேலைபாாத்து வநதனர். இவாதம் ஆவி திருவடியின்பம் எய்துமாக.

இவர்தந் தந்தையார் மறைமலையடிகளாரின் நனிமிகு தொடர்பினர். புகழ்பெற்ற வழக்கறிஞர். செந்தமிழும், சித்தாந்தமும், சிறப்புறத்தோந்தவர். அவர்கட்கும் குடும்பத்தார்க்கும் எங்கள் ஆறுதல் பரிவு உரியதாகுக.

---

# மதிப்புரை

**"தமிழ் இலக்கிய வரலாறு"** (கி. பி. 1 முதல் 1100)

1. சமணமும் தமிழும், 2. பௌத்தமும் தமிழும், 3. வைணவமும் தமிழும். ஆக்கியோா: E. S. வரதராச ஐயர், பி. ஏ. அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர் (கலைப்பகுதி) அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் நூல் வெளியீடு.

இதன் கண் மேலே குறிக்கப் பெற்ற மூன்று சமயங்களைப் பற்றியும், அச் சமயக் கொள்கைகளைப் பற்றியும், அச சமய ஆசிரியர்களைப் பற்றியும், அவர்கள் செய்துள்ள அரும்பெரும் நூல்களைப் பற்றியும், அந் நூல்களின் வாயிலாகத் தமிழ் மொழிக்கு ஏற்பட்ட நன்மைகளைப் பற்றியும், அவவக் காலங்களில் ஆண்ட முடியுடை மன்னர், குறுநில மன்னர், பெருநிலக் கிழார், புரவலா, வள்ளல்கள் முதலாயினோர்களின் வரலாறுகளும், நாட்டின் நிலைமைகளும் பிறவும் வரலாற்றுச் சான்றுகள், கல்வெட்டுத் துணைகள், செப்பேட்டுச் சான்றுகள், நூற்சான்றுகள் முதலியன கொண்டு கால வரையறையுடன் ஆசிரியரவர்கள் நன்கு நிறுவியுள்ளார்கள்.

சமணமும் தமிழும் என்ற தலைப்பில் 'ஆதிவரலாறு' முதலாக 'அருகர்துதி' ஈறுகப் பத்துத் தலைப்புககளும், அதுபோல் பௌத்தமும் தமிழும் என்ற தலைப்பில் 'இலக்கிய வரலாறு' முதல் 'பௌத்தா துதிகள்' ஈறுகப் பன்னிரண்டு தலைப்புக்களும், வைணவமும் தமிழும் என்ற தலைப்பில் 'ஆதி வரலாறு' முதலாக 'திருமங்கை யாழ்வாா' ஈறுகப் பத்துத் தலைப்புக்களும் ஆக நன்கு ஆராயப்பட்டுள்ளன. இவைகளை ஆராய்வதற்கு ஆசிரியர் முன்னுள்ளார் பலரெழுதிய ஆய்வு நூல் கட்டுரைகள், பல திங்கள் வெளியீடுகள், சங்கநூல்கள், பிற்கால நூல்கள் முதலியவற்றைத் துணைக்கொண்டுள்ளார்கள்.

இந் நூலைக் கற்பார் பல நூல்களின் பிழிவான பொருள்களையும், அவ்வவற்றிற் பெறவேண்டிய பேரறிவினையும் உண்மையுணர்வினையும் பெறுவர் என்பது உறுதி. ஆசிரியர்க்கும், நல்லமுறையாக வெளியிட்டுத் தமிழ் நலம் பேணும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கும் தமிழுலகு மிகுதியும் கடமைப்பட்டுள்ளது. மாணவர்கள் ஆசிரியர்கள் பெருமக்கள் பலரும் வாஙகிக கற்றுப் பயன் எய்துவார்களாக.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




சிலம்பு ௩௩ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௯, மார்கழி
சனவரி, 1959 | பரல் ௫

# தொன்மைத் தமிழிசையின் நன்மை

மூவா முத்தமிழ் என்னும் தாவாத் தனிச் சிறப்பு வாய்ந்தது நம அருமைத் தமிழ் மொழியேயாகும். ஆருயிர்கட்கு விழிபோன்று மாந்தர்க்கு ஆந்துணையும் சிறப்பளிப்பது மொழியேயாகும் விழியிலாவுயிர்கள் குழிவீழ்ந்து பழிகருள்ளாகித் துன்புறுவதுபோன்று செம்மையான மொழியிலாதார் நன்மை எய்தாது தீமைக்குழியில் வீழ்ந்து துனபுறுவர். செம்மை மொழி பண்பட்ட சான்றோரால் கண்போன்று காதது அமைத்து வளாத்துவரும ஒரு மொழியாகும் நம் தாய்மொழியாந் தமிழ்மொழி அந்த வகையில் நனி சிறந்த தொன்ருகும. மேலும அது தொன்மையாலும், நன்மையாலும, எளிமை இனிமை உயிர்ப்புச் செட்டு முதலிய உளங்கொள உறுதி வளததாலும் தனிச் சிறப்பு வாய்நதது. அஃது இயல், இசை, கூத்து என முப்பாலாய்த் திகழ்வது. இம்மூன்றும் முறையே உயிர் உள்ளம் உடல் போனறன இவற்றுள் இசையின் சிறப்பு நோக்கியே அதனை நடுவண் வைத்தனர் நம் முனனோர்.

அத்தகைய இசையினை உயிர்போன்று காத்துத் தமிழகம் எங்கணும் அமிழ்தெனப் பரப்பிய தனிப்புகழ்ப பெருவளளல் டாக்டா செட்டிநாட்டு இராசா, சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கட்கேயுரியது. அவர்கள் பண்டைக காலதது முடிவேந்தர் போன்று இற்றைக் காலத்து முததமிழையும் வளர்ததுக் காத்து நிலைநிறுத்திய உலகவாம் பேரறிவாளராவர். அவர்கள் அருமை மகனார் டாக்டர் இராசா சர் முததையாச் செட்டியார அவர்களும் தந்தையார் போன்று ஓம்பிவருகின்றனர்.

"தமிழிசைச் சங்கத்தின் பதினாறும் ஆண்டு நிறைவு விழா" 24-12-1958 இல் சென்னை இராசா சர் அண்ணாமலை மன்றத்தில் மிகவும் சிறப்பாக நிகழ்ந்தது. விழாவினைத் துவக்கி வைத்தவர் சென்னை மாநில உள்நாட்டமைச்சர் திரு எம பக்தவச்சலம் ஆவர். விழாத் தலைவர் மதுரை யாதீனம் 291 ஆவது குருமகா சன்னிதானம் மறைத்திரு சோமசுந்தர திரு. ஞானசம்பந்த தேசிக அடிகளாராவர்.

திரு அமைச்சர் விழாவினைத் துவக்கி வைத்து அரியதொரு விரிவுரையாற்றியுள்ளார்கள். அதன் சுருக்கம் வருமாறு:

எழிற்கலையின் மணிமகுடமாகத் திகழ்வது இசையோடு கூடிய பாட்டுக்களேயாகும் இத்தகைய பாடல்கள் பண்டைத் தமிழகத்தில் மக்கள் வாழ்க்கை உணர்ச்சியோடு ஒன்றிக் கலந்தன. அவற்றிற்கு வேண்டும் அடிப்படைகள் சங்கமருவிய பரிபாடல் முதலிய நூல்களிலும் சிலப்பதிகார முதலிய தொடர் நிலைச் செய்யுட்களிலும் பரக்கக் காணலாம இசைப் பாடல்கள் பாடிய ஆன்றோர் அனைவரும் அருளாளர்; வேற்றுமை பாராட்டாத விழுமியார். மக்கள் நலம் விழையும நல்லுளத்தர் நாமும் அதுபோல மக்கள் நலமொன்றே கருதி இசையினை வளர்த்தல் வேண்டும். நாட்டுப் பாடல்களுக்கு நன்மதிப்புக் கொடுத்தல் வேண்டும்.

சிறப்பாகத் தேவாரம், திருவாசகம், மற்றத் திருமுறைகள், ஆழ்வார பனுவல்கள், தாயுமானவர், திருப்புகழ், அருட்பா முதலிய பாடல்கள தமிழிசை வெள்ளத்தின் பெருக்கை நாட்டு மக்களுக்கு நினைவூட்டுக கருவூலங்களாகும் முதன்மையாகத் திருஞானசம்பந்தர் தமிழிசையோடு தாளத்தையும சேர்த்து ஆண்டவன் வழிபாட்டோடு ஒட்டிய அருள்நெறியைத தமிழ் நாட்டு மக்களுக்கு உணர்த்தினர். ஆண்டவன் அவருக்கு அளித்த 'பொற்றாளம்' இசைக்கும் தமிழுக்கும் இருக்க வேண்டிய தொடர்பை நினைவூட்டும அடையாளமெனறே நாம் கொள்ளலாம

கடந்த பல நூற்றாண்டுகளாக வாழையடி வாழையாக வளர்ந்து வரும நமது சமயப் பண்பாட்டுடன், இநத அருள் நெறியை—சமுதாய சேவையை நமக்கு நினைவூட்டி வாழ்க்கை வாயிலாக வாழ்ந்து காட்டிச சென்றார் நம் நாட்டுத் தந்தையாகிய மகாத்மா காந்தியடிகள். அவர் காட்டிச் சென்ற அற நெறியை மக்களிடையே வேரூன்றச் செய்யவேண்டுவது நம் கடமை வானத்தை அளாவி நிற்கும நம் பண்டைய ஆலயங்களும உயர்ந்த குறிக்கோளைத தாங்கி நிற்கும நம இலக்கியங்

களும் சமய நெறியையும் சமுதாயக் கடமைகளையும் நினைவூட்டு கின்ற நந்தா விளக்குகளாக நிலைத்து வருகின்றன. அவற்றை புணர்ந்து வாழவேண்டியது நமது பொறுப்பு.

காவடிச்சிந்து நொண்டிச்சிந்து முதலிய வண்ணமெட்டுகள் நாட்டு மக்களிடையே நிலைபெற்ற செல்வாக்குப் பெற்றுள்ளன. நம் வானொலி நிலையத்தாரும், செய்தித் தாள்களும் இத்துறையில் சிறந்த சேவை செய்வது பாராட்டுககுரிய செயலாகும் சிலப் பதிகாரத்தில் 'மலையிடைப் பிறவா....என்று, தொடங்கும் வரிகள் கற்பின் செல்வியாகிய கண்ணகியைக் காப்பியத் தலைவனாகிய கோவலன் பாராட்டு முகததால் இளங்கோவடிகள் தமிழிசைத தெய்வத்திற்குப் படைததளித்த காணிக்கையாக நிற்கின்றன.

தமிழின் இனிமையும், இசையின் மணமும் ஒன்றுசேர்ந்து நம் நாட்டின் சமுதாய வாழ்வில் அருள நெறியை நிலைபெறச் செய்தல வேண்டுமென்று இறைவனை வணங்குவோம், "ஏழிசை யாய் இசைபபயனாய்" நிலவிவரும் இறைவன் தமிழ் இசைக்கு என்றும தோழனாய்' விளஙகி அருள்நெறி காட்டுவாரென்பதில் எனக்கு முழு நமபிக்கையுண்டு.

குரு மகா சன்னிதானத்தின் தலைமைப் பேருரையின் சுருக்கம வருமாறு: இச் சஙகம் சென்ற பதினறு ஆண்டு களாகத் தமிழிசைக்குச செய்து வந்திருக்கும் தொண்டுகளைப் பாராட்டுகிறோம் எத்தனையோ எதிர்ப்புககளுக்கிடையே செழித் தோஙகி வளர்ந்து வந்திருக்கும் இச்சங்கம் இன்று பதினறு ஆண்டு எய்திய மணப் பருவத்தில் கொலுவீற்றிருப்பதைக் கண்டு யார்தாம் மகிழாதிருக்க முடியும்?

இச் சங்கம் நிறுவிய துஙகர் டாக்டர் செட்டிநாட்டு இராசா சர் அண்ணாமலைச செட்டியாரவர்கள் ஆவர். தமிழ்நாடெஙகணும் தமிழிசை முழங்க வேணடுமெனபது அவாகளுடைய ஆவல். அதனை த தமிழ் மககள ஒவ்வொரு ஆண்டும் உணாந்து நடக்கும்படி, தான் நடநது காட்டி இவவித விழாக்களைக் கூட்டி அழியாப் புகழ் எய்தியுளளாாகள்.

தந்தையார் அருளவழி நின்று அவர்தம் அருமை மகனார், டாக்டர் இராசா சர் முத்தையாச் செட்டியாரவர்களும் தநதை யார் போன்று "தமிழிசைச் சங்கததினை" உயிரெனக் காத்து ஓமபி வருகின்றனர்.

தொடக்கக் காலத்தில் சங்கத்தின் தந்தையாராகிய செட்டி நாட்டரசருடன் ஒததுழைதத தமிழ்ப பெரியார்கள் சர்.

ஆர். கே. சண்முகம் செட்டியாரவர்களும், திருவாளர் சி. என். இரததினசபாபதி முதலியாரவர்களுமாவர் இந்நாளில் நம்பேரன்பர் திரு டி எம். நாராயணசாமிப் பிள்ளையவர்கள் தலைமை தாங்கித் தொண்டாற்றி வருகின்றனர் இன்னும உறுதுணையாக இருந்துவரும் பதிப்பிற்குரிய பெரியார் திரு. சி. இராசகோபாலாச்சாரியாரவர்களையும், இசை உலகில் புகழ்பெற்றுள்ள திரு. எம. தண்டபாணி தேசிகரவாகளையும் பாராட்டுகின்றோம். இச் சங்கத்திற்கு உறுதுணையாகவிருந்து இப்பொழுது அவியுலகிற் றிகழ்நது கண்டு களித்துக்கொண்டிருக்கும் கல்கி திரு. கிருட்டிண மூர்த்தியவர்களையும், திரு. டி. கே. சிதமபரநாத முதலியாரவாகளையும் நாம் பாராட்[illegible]ோம்.

தமிழ்மொழியின் தொன்மையையும், இனிமையையும், ஆற்றலையும தெரிந்துசொள்ளச் செய்தால் தமிழிசையின் தொன்மையும் அதன் இனிமையும் அது செய்திருக்கும அருள் நிகழ்ச்சிகளையும் இன்னும அது செய்யவிருக்கும தனிச் சிறப்புக்களையும் தமிழ் மொழியைத் தாய்மொழியாகக் கொணடுளள எல்லோர்க்கும் பலவகையினும உணர்ச்சியையும் மன எழுச்சியையும், ஊக்கத்தையும் ஊட்ட ஏதுவாகும்

இப்பொழுதிருக்கும் கன்னியாகுமரிக்குத் தெற்கே ஒரு பெரிய நிலப்பரப்பு இருந்தது. அது தெறகே ஆத்திரேலியாக் கண்டம் வரையினும, கிழக்கே சாவா, சுமத்திரா முதலிய நாடு வரையினும் மேறகே ஆபபிரிக்காக் கணடம் வரையினும், பரவியிருந்தது அதனை இலெமூரியாக் கண்டம் என்பர். அதனை சில நூல் வல்லாரும உறுதிப்படுத்துகின்றனர். அந்நாளில் இமயமலைச்சாரல் முழுவதும் அதைச் சார்நத நிலப்பரப்பும் கடலினுள் மூழ்கியிருநததாகவும் கூறுவர். அக்காலத்து நம முடைய செநதமிழ் நாடு அதனுடைய வடபகுதியாகும்.

அந்நாளில் கட்டுமரத்தின் வழியாகக் கடலோரங்களில் போக்கு வரதது எளிதாகவும் மிகுதியாகவுமிருநதது. அக் கட்டுமரம் குறைந்த செலவில அமைவது ; எத்துணைக் கடற் கொந்தளிப்பு ஏற்பட்டாலும் கேடுறாதது. நாவாய் வாயிலாக நெடுநதொலைவு பே·கும வாய்பபும அமைநதிருந்தது. அவ வாய்ப்பினால் அந்நாளினும் இந்நாளினும செநதமிழ நாட்டில சிறப்பாகக் கொண்டாடப பெற்றுவரும சிவலிஙக வழிபாடும், தமிழர்கள் கட்டுகின்ற முறையில் கோயிலகளின் அமைபபுக்களும பிற கண்டங்களினும ஏற்படலாயின. ஐரோபபியர்கள தென் அமெரிககாவிறகுப் போகுமுன், அங்குத் தெனனாட்டினுள்ள முறைப்படி கட்டப்பெற்ற திருக்கோயில்களிருநததறகும், சில

லிங்கவழிபாடு இருந்தற்கும் புதை பொருளாராய்ச்சியாளர் சான்று தருகின்றனர்.

"ஹீராசுப் பாதிரியார் அமெரிக்காவிலும், மெக்சிக்கோவி லும், வெஸ்ட் இண்டீஸ் முதலிய தீவுகளிலும், மேற்கு ஆப் பிரிக்கா, எகிப்து, அரேபியா முதலிய நாடுகளிலும் கிழக்கே சாவா, சுமத்திரா, இந்தோனேசியா, ஆஸ்திரேலியா முதலிய நாடு களிலும் சிவலிங்கங்களும், தமிழ் நாட்டிலுள்ள திருக்கோயில் அமைப்புக்களும் இருப்பதாகச் சொல்லுவதிலிருந்து, இப்பொழு துள்ள பிற மதஙகள் தோன்றுவதற்குமுன் உலக முழுவதும் பரவியிருந்தது நம் மெய்ம்மைச் சிவ மதமே என்பது எவராலும் மறுக்கமுடியாததொன்றாகும். மேலும் அப்பெரியார் ஹரப்பா, மொஹஞ்சதரோ இடங்களில் ஆய்நதுள்ள புதை பொருளகளி லிருநது பல்லாயிர ஆண்டுகளுக்குமுன் தமிழர் அங்கு வாழ்ந் திருந்தார்களென்பதற்குப் போதிய அடையாளங்களிருப்பதாகக் கூறுகின்றனர்.

இன்னும் மேல்நாட்டு விஞ்ஞானிகளும், அறிஞர்களும், பொறிவலார்களும் பார்த்துப் பல்லாற்றானும் திகைப்புறத்தக்க தாகவும், தமிழர்களின் அறிவுத் திறத்தையும், ஆற்றலையும் வெளிபடுத்தக் கூடியதாகவும் உள்ளவை நம் தென்னாட்டுக் கோவிலகளும், சிற்பஙகளும், கோபுரங்களுமேயாகும். இந்நாள் போன்ற கருவி வாய்ப்புக்களில்லாத அந்நாளில், கருங்கல்லே யில்லாத தஞ்சைத் தலைநகரிலுள்ள திருக்கோவில் விமானம் இருநூற்றுப் பதினாறடி உயரத்தில் முழுவதும் கல்லால் அமைந் திருப்பதும, அதன் உச்சியில் எண்பது டன் நிறையுள்ள ஒரே கல்லை எப்படி அமைக்க முடிந்ததோ என்பதும் இன்னும் மேல் நாட்டு எஞ்சினியரிங நிபுணர்களாலும் தீர்மானிக்க முடியாத அவ்வளவு சிறப்பு வாய்ந்ததாகத் திகழ்கின்றது.

சிவலிங்கத்தின் அடிப்பாகம் பிரமபாகம், நடுப்பாகம் விட்டுணுபாகம், மேற்பாகம் சிவபாகமாக அமைந்திருப்பதால், சிவலிங்க வழிபாடு சைவ வைணவ பேதமின்றி எஙகும் பரவி யிருந்தது. அதனாலேயே தென்னாடு முழுவதும சிவன் கோயில் கள் எழுப்பப்பெற்றன.

இந்து சமயத்தின் மாண்பை மேல்நாடுகளில் வெற்றியுடன் பரப்பி இந்தியர்களுக்கும், இந்து மதத்திற்கும் வெளிநாடுகளில் பெரியதொரு மதிப்பை உண்டாக்கியவர் நம் விவேகானந்த சுவாமிகள். அவர்களைச் சிக்காக்கோவில் நடந்த சமய மாகாட்டிற்கு அனுப்பி வைத்த பெருமை நம் தமிழர்க்கே

ஏற்படும்படி செய்தது நம் இராமநாதபுரம் பாஸ்கர சேதுபதியே யாவார்கள்.

மொழி பிறந்த அன்றே உணர்ச்சி வயத்தாலுண்டாகின்ற பாடலும், அதனால் வரும் ஆடலும் இருந்திருக்கவேண்டும். ஆகவே தமிழிசை குழந்தை பிறந்த அன்று ஓராட்டும் தாலாட்டில் ஆரம்பித்து விடுகிறது. பின் வாழ்க்கையின் உணர்ச்சிகளுக்குத் தக்க பாடல்கள் எழுகின்றன. பாம்புகளும் மாடுகளும் இசையோசைக்கு மகிழுகின்றன. இசையோசை பொருளுணர்ச்சியோடிருந்தால் எண்வகைச் சுவையும் மிகுதிப்படும். இதை உணர்ததவே மாணிக்கவாசக சுவாமிகள் "சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார், செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ், பலரோரும் ஏத்தப் பணிந்து" என்று அருளிச் ...ார. இந்த உண்மையை உணர்ந்துகொண்டால் மக்களுக்குப் பயன்படக் கூடிய பாட்டுக்களெல்லாம் அவரவர்கள் தாய்மொழியிலிருப்பதே சாலச் சிறந்ததாகும். தமிழைத் தாய்மொழியாகக் கொண்டிருந்த ஞானசம்பந்தர் போன்ற நாயன்மாரகளும் ஆழ்வாராதியர்களும் தமிழிலேயே பத்திப் பாடல்கள் பாடியுள்ளார்கள்.

இந்தத் தமிழிசைச் சங்கமானது எல்லாம் வல்ல எம்பெருமானது பெருங்கருணையினால் தோற்றுவிக்கப் பெற்றுச் சிறந்த பத்தர்களால் ஆதரிக்கப் பெற்று வருகிறது. இதை நிறுவிய இராசாச் செட்டியார் ஆவல் "தமிழ் நாடெங்கும் தமிழிசை முழங்கவேண்டும்" என்பது. அது நிறைவுற்று உலகெலாம் முழங்கத் திருவருள் பாலிக்குமாறு அங்கயற்கண்ணி பங்கனும் ஆலவாய் அண்ணலைப் பிரார்ததிதது ஆசிர்வதிக்கின்றோம்.

---

## சென்னைச் சைவசித்தாந்த மகாசமாச மாநா(டு)

இதன் ஐம்பத்து மூன்றாம் ஆண்டு விழாவும் மாநாடும் திண்டிவனத்தையடுத்துள்ள மயிலத்தின்கண் ௨௭, ௨௮, ௨௯ டிசம்பர் ௧௯௫௮-இல் மிகவும் சிறப்பாக நடந்தது. இம் மாநாடு மயிலம் திருமடத் தலைவர் சிவத்திரு, சிவஞான பாலைய அடிகள் அருளாதரவின்கீழ் அன்னார் திருமடத்தில் நிகழ்ந்தது.

இராமநாதபுரம் மாவட்டத் தண்டலாளர் திரு. G. M. முத்துசாமி பிள்ளை, I A S. அவர்களால் கொடி ஏற்றி வைக்கப்பட்டது. சென்னை உயர்நீதி மன்ற நடுவர், R. சுப்பிரமணிய நாடாரவர்களால் மாநாடு திறந்து வைக்கப்பெற்றது. ஆண்டு

விழாவிற்கும் சைவ மாநாட்டிற்கும் உயர்திரு, சித்தாந்த சிகாமணி க. வச்சிரவேல் முதலியாரவர்கள் தலைமை பூண்டார்கள். மங்கையர் மாநாட்டிற்குத் திருமதி வித்துவான், மங்கையர்ககரசி யம்மையாரவர்கள் தலைமை தாங்கினார்கள். சைவ இளைஞர் மாநாட்டிற்குத் திரு அடிகளாசிரியரவர்கள் தலைமை ஏற்றார்கள். மூன்று நாட்களின் காலை மாலை இரு வேளைகளிலும் பெரும் புலவர்கள் பேராசிரியர்கள் இருபாலாரிலும் பலர் பல அரும் பொருள்கள் பற்றி விரிவுரையாற்றினார்கள். ஒவ்வொரு நாளும் இரவு மணி 9 முதல் 10-30 வரை "அத்துவிதம்" என்னும் பொருள் பற்றி ஆய்வு நிகழ்ந்தது. சிவதிரு, சிவஞான பாலைய அடிகளும், சிவதிரு, சம்பந்த சரணாலயத் தம்பிரானடிகட(சிவக் கவிமணி. திரு. சி கே. சுப்பிரமணிய முதலியார்)ளும வாழ்த்துரை வழங்கினார்கள்.

## தமிழகப் புலவர்குழு

அமிழ்தினும் இனிய தமிழ்மொழி வளர்ச்சி குறித்து "தமிழகப் புலவர் குழு" என்ற பெயரிட்டு புலவர் நாற்பத்தொன்பதின்மரைத் தேர்ந்தெடுத்திருப்பதாகவும், திருச்சிராப்பள்ளி கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் அக்குழுவை இயக்கும் செயலாளராக அமைந்து நடதத முன்வந்திருப்பதாகவும், தொடக்க விழா தைத் திங்கள் 2 ஆம் நாள் திருச்சிராப்பள்ளியில் நடைபெறக் குறித்திருப்பதாகவும் செய்தித்தாள் வாயிலாக அறிநதோம். கடைச்சங்கப் புலவர் நாறபதொன்பதினமர் அமைந்ததுபோல அமைந்திருப்பதும், தமிழகத்திறகு நாப்பண் ...ராப்பளளியிற் கூடுவதும் தெரிந்து பெரிதும் மகிழ் ...நமது தமிழகத்திற்குப் புலவர் குழு ஒன்று அமைந்து தமிழ்மொழி வளாச்சிக்கு வேண்டும் துணைபுரிந்து வருதல் இன்றியமையாதது என்பதைப் பன்னாள் ஆய்ந்து தமது மனையிற் புலவர்களைக் கூட்டுவித்துத் தேர்ந்தெடுக்கும்படி வேண்டுஞ் செயல்புரிந்த மதுரைப் பசுமலை பெருநாவலர் எஸ். சோமசுந்தர பாரதியவாகளையும், கி ஆ. பெ. விசுவநாதம் அவர்களையும், ஆங்கு வந்துகூடிச் செயலாறறிய புலவர் பெருமக்களையும நன்றி பாராட்டி வாழ்த்துகினறோம். வாழ்க தமிழகப் புலவர் குழு! வளர்க தமிழ்மொழி!

# சில வியத்தகு நிகழ்ச்சிகள்!

**பாம்பின் வாய்த் தேரை போல**

பாம்பு தவளையை விழுங்குவது இயல்பு. இதைத்தான் 'பாம்பின் வாய்த் தேரைபோல' என்பர். ஆனால் 'தேரை வாய்ப் பாம்புபோல' என்றும் சொல்லும்படியான வியத்தகு நிகழ்ச்சியொன்று சென்ற திங்களில், ஒரிசாவிலுள்ள பாசலூருக்குப் பக்கத்தில் உள்ள ரேணுனு என்னுமிடத்தில் நடைபெற்றது. ஒரு நாகப்பாம்பு இரைதேடிச் சுற்றி வந்தது. அப்போது ஒரு பெருந் தவளை அதன் எதிர்ப்பட்டது. அத் தவளை பல சண்டைகளில் வெற்றிகண்ட தவளை. எனவே பாம்பின் தாக்குதலை எதிர்த்து நின்று, அப் பாம்பையே விழுங்கியது தவளை. பாம்பின் நீளம் 2 அடி 3 அங்குலம். தவளையின் வாயிற் சிக்கிய பாம்பு இறந்தது. அதே வேளையில் பாம்புக் கடியின் விடத்தால் தவளையும் இறந்தது.

**யானையைத் தாக்கிய சிலந்தி**

இந்நாளில் நிகழ்ந்துள்ள மேற்கூறிய வியத்தகு நிகழ்ச்சி போன்று முன்னாளிலும் நிகழ்ந்துள்ள திருவரலாறு ஒன்று வருமாறு :

திருவானைக்காவில் வெண்ணாவல் மரத்தடியில் எழுந்தருளிய சிவக்கொழுந்தினை 'மிக்க தவமுடைய ஒரு வெள்ளானை' கைப்பூம்புனலும் முகந்தாட்டிக் கமழ்பூக்கொய்து மணிந்திறைஞ்சி " வழிபட்டது. அக் காரணத்தால் திருவானைக்கா வென்னும் பெயருண்டாயிற்று. அது போல் முன்னுள்ள மெய்யுணர்வின் தொடர்ச்சியினால் ஒரு சிலந்தி சிவக் கொழுந்தின்மேல் வெயில் வெம்மையுற்ற சருகுதிராமல் தாங்கற் பொருட்டுத் தன் வாயினூலால் திருமேற்கட்டியென்று சொல்லும்படி பந்தரமைத்தது. இது சிலம்பி வலை எனப்படும்.

மறுநாள் வழிபட வந்த யானை அச் சிலம்பி வலையினைக் அதனைக் குற்றமெனக் கொண்டு அழித்தது. அதனை உணர்ந்த சிலந்தி யானையின் கைத் தறசெயலாகப் பட்டிருக்கு மென்று மனம் பொறுத்து மறுநாளும் இழைத்தது. அதனையும் யானை அழித்தது. அது கண்டு சினங்கொண்ட சிலந்தி மிகவும் வெம்மையுற்று யானையின் துதிக்கையுட் புக்குக் கடித்தது. கடித் துன்பம் பொறுக்கலாற்றாது அவ்வியானை கையினை நிலத்தில் மோதிக் குலைகுலைந்து வீழ்ந்து மாண்டது. யானை கையைத் தரையில் மோதி அடித்ததால் சிலம்பியும் மாண்டது.

சிவபெருமான் யானைக்கு வீடுபேறருளினன். சிலம்பியைச் சோழர் குலத்து வேந்தாகப் பிறப்பித்தருளினன். அங்ஙனம் பிறந்தருளியவரே கோச் செங்கட் சோழ நாயனாராவர். அவர் திருவருளால் சிவபெருமானுக்கு எழுபது திருக்கோவில்கள் எடுப்பித்தருளினார். அத் திருக்கோவில்கள் யானை உட்புகாதவாறு "யானை புகாமாடம்" எனக்கட்டியமைத்தனர். அவர்க்கு அருளால் பழம் பிறப்பின் நினைவிருந்தது.

# பதிறுக்கப் பண்பொப்பு

[சித்தாந்த பண்டிதர், திரு. ப. இராமநாத பிள்ளை]

*பற்றும் பதிறுக்கம் பார்க்கின்மா சில்வினை*
*உற்றுணரத் தோன்றுமாம் ஒப்பு.*

செம்பொருட்டுணிவினராகிய சித்தாந்தச் சைவர் முப்பொருட் கொள்கைசேர் மூதறிவினர். முப்பொருள் இறை, உயிர், தளை எனப்பெறும். இவற்றைப் பதி, பசு, பாசம் எனவும் பகர்வர். இவற்றை விளக்கிக் கூறுவன தனித் தமிழாகமமாகிய மெய்கண்ட நூலகள். மெய்கண்ட நூல்கள் சிவஞானபோத முதல் பன்னிரண்டும், முன்னுள்ள திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் இரண்டும் ஆகப் பதினன்கென்ப. அவற்றுள் ஒன்று உண்மைநெறி விளக்கம். இந்நூல் அம் முப்பொருளையும் பத்து வகையாகப் பகுத்து விளக்குகின்றது. இவையே பதிறுக்கம் எனப்படும். பதிறுக்கம் - தசகாரியம்.

இம் முப்பொருள்களுள் தளை எனப்படும் பாசம் மூவகைய. அவை மலம், கன்மம், மாயை என்பன. இவற்றின் காரியம் முறையே ஆணவம், இருவினை, உலகுடல்கள் உலகுடல்களை மெய் என்னும் சொலலால் வழங்குவர். மெய் - தத்துவம். இதனை விளக்குமிடத்து மூவகையாக விளக்குவர். அவை, காண்டல் கருதல் கடைப்பிடித்தல் என்பன. இவற்றை முறையே உருவ தரிசன சுத்தி எனவுமுரைப்பர். சிவஞானபோதப் பேருரைக்கண் மாதவச் சிவஞான முனிவரனுர் "திரியக்காண்டல், இரட்டுறக் காண்டல, தெளியக் காண்டல்" என ஓதியருளினர். இவற்றை வருமாறு நினைவு கூர்க: காண்டலுரு வாங்கருதல் காட்சி கடைப்பிடித்தல், பூண்டதோர் சுததியாம் போற்று. காட்சி - தரிசனம். உலகுடல்களாகிய மெய்கள் மாயையாக்கம். ஆக்கம் - காரியம்.

மாயையின் ஆக்கம் உடல், கலன், உலகம், ஊண் எனக் கூறப்படும். கலன் - கருவி; பொறிகள், உறுப்புக்கள் இவற்றை வடிவத்தாற் பார்க்கின்றோம். பார்த்த அளவானே இப்படியே என்றுமுள்ளன எனக்கொள்ளின் அது தத்துவ உருவமாகும். அதற்குமேல் அவை காரியப் பொருள்கள் என்றும், அவை மலத்தின வழிநின்று மருட்டுவதால் மலமென்றும், காரியப் பாட்டிற்குரிய தன்மையாலும, தோற்றி யொடுக்கப்படும் முறைமையாலும் அறிவில்லதென்றும் வழியளவையான் ஆய்ந்து உண்மை கருதுதல் தரிசனமாகும். முடிபாக அவை பெருந்

தண்ணளி வாய்ந்த சிவபெருமானால் ஆருயிர் அனைத்திற்கும் படைத்துக் கொடுத்தருளப்பட்ட இரவற் பொருளென்றும், அவை அறத்தோணியொத்துத் திருவடிக் கரைசேரத் தந்தருளிய கருவியாமென்றும, அவற்றை அவன் திருத்தொண்டுக்கு ஒப்புவித்து அவற்றிற்கு வேண்டிய ஊண் உடை உறக்கம் உறையுள் முதலியன தன்னுழைப்பாற் பெற்று அளவாக நல்கி அவற்றை யோமபுவது கடனென்றும், அதுவே பிறப்பற்றுச் சிறப்புற்று என்றும் ஒரு தன்மைத்தாக வாழ்தற்குச் செல்லும் நன்னெறியென்றும் திருவருளால் உணர்ந்து கடைப்பிடித்துப் பற்று நீங்கி யொழுகுதல் சுத்தியாகும். பற்று - என்னது யான் எனக் கொள்ளும பற்று இது யான் என்னும் செருக்கால் முளைப்பது. அச்செருக்கு ஆண்டவனை மறந்தமையாலும், பொருள்கள் அவன் தண்ணளியால் படைத்து அனைத்துயிர்க்கும் ஒன்றுபோல் இரவலாக அளித்தருளப்பட்ட அவன் உடைமை யென்றும், அனைததுயிரும் என்றும் அவன் அடிமை என்றும் உளமாரக் கொள்ளவேண்டிய உண்மை கொள்ளாமையாலும் வந்தது இச் செருக்கு அகலின் உலகனைத்தும் ஒரு குடும்பம்போல் தத்தம் எல்லைக்குட்பட்ட பொருள்களைப் பேணிக் காத்துப் பிறர்க்கும் பிறவுயிர்க்கும் ஒப்ப உதவி அன்பால் இன்புறுததி ஒற்றுமையாய் வாழ்ந்து இன்புறும். உடைமையனைத்தும் சிவனுக்கு உரியவென்றும், அவை ஆருயிர்கட்கு அவனருளால் ஈயப்பெற்ற இரவல் என்றும், பெற்றவவ்வுயிர்கள் பிறவுயிர்க்கு ஈத்துதவுதற் பொருட்டுப் பேணிக்காசுகும் கடனாளிகளென்றும் எண்ணுவதே என்றும் மாறாப் பேருண்மையாகும். இவ்வுண்மை வரும் பட்டினத்துப் பிள்ளையார் பாடலான் உணரலாம:

"பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை பிறந்துமண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை யிடைநடுவில்
குறிக்குமிச் செல்வஞ் சிவன்தந்த தென்று கொடுக்கறியாது
இறக்குங் குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே."
—திருவேகம். எ.

"உருவ தரிசன சுத்தி" என்பவற்றைக் குறிக்குஞ் செய்யுள் வருமாறு:

"மண்முதற் சிவமதீறாய் வடிவுகாண் பதுவேரூபம்
மண்முதற் சிவமதீறாய் மலஞ்சடம் என்றல்காட்சி
மண்முதற் சிவமதீறாய் வகையதில் தானிலாது
கண்ணுத லருளால் நீங்கல் சுத்தியாய்க் கருதலாமே"
—உண்மை நெறி. க.

மண் - நிலம். சிவம் - நாதம். மண்முதற் சிவமதீறு யுள்ள மெய்கள் முப்பத்தாறு.

"ஆகின்ற ஆறாறு அருஞ்சைவர் தத்துவம்."　—திருமூலர்.

தான் நிலாது - பற்றுடன் நில்லாது. (இரவற் பொருள் என்னும் எண்ணத்துடன் அறங்காவலராய் நின்று.) நீங்கல் - பொருள்களைப் புறக்கணித்து நீக்காது அறங்காவலராய்ப் பிறர்க்கெனத் தாழ்வொடுந் தாங்கித் தனக்கென்னும் பற்று உள்ளத்தினின்றும் என்றும் நீங்குதல் இவற்றிற்கு ஒரு புடையொப்பாக உறையுளையும் உடைமைகளையும் உடையானையும் முறையாகக் கொள்க. இதனை வருமாறு நினைவு கூர்க: உறையுள் உடைமை உடையான் உருவம், அறைகாட்சி தூய்மையோர் மூன்று.

இப் பதிஞக்கத்திற்கு ஒரு புடையொப்பாகத் திருநாவுக்கரசு நாயனார் அருளிச் செய்துள்ள செந்தமிழ்ச் சிறப்புத் திருமறையின் திருப்பதிகம் "மாசில் வீணை" என்று தொடங்கும் திருப்பதிகமாகும். அதன்கண்ணுள்ள பத்துத் திருப்பாட்டும் ஏறத்தாழப் பத்துக்கும் முறையே பொருந்துவதாகும். அது வருமாறு:

"மாசில் வீணையு மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே."　　　(இ. க0-க)

இத் திருப்பாட்டுத் தத்துவரூபம் என்பதனோடொருபுடை இயையுமாறு: வீணையினால் செவிப்புல இன்பமும், மதியினால் கட்புல இன்பமும், தென்றலால் மெய்ப்(உடம்பு)புல இன்பமும், வேனிலால் மூக்குப்புல இன்பமும், பொய்கையால் வாய்ப்புல இன்பமும் நாம் பெறுகின்றோம் நாம இவற்றின் வடிவைக் காண்கின்றோம். இன்புறுகின்றோம். அவ்வின்பம் எவ்வாறு விளைகின்றதென்று ஆராயாது விட்டால் "வடிவ"த்துடன் நின்றவராவோம்.

"நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே"　　,,　　,,　　உ.

இத் திருப்பாட்டுத் தத்துவ தரிசனத்தோடொருபுடை இயையுமாறு: தரிசனம்-காட்சி "மலம் சடம் என்றல் காட்சி" என்பதனை இத் திருப்பாட்டு "நகர" மாகிய நடப்பாற்றல் உலகுயிர்களை நடத்துவிக்கும் திருவருண்முறையால் விளக்குகின்றது. "நமச்சிவாய" என்னும் திருமந்திரம் செந்தமிழர்க்கே புரிய தனித்தமிழ்த திருவைந்தெழுத்துப் பொருண்மறையாகும். முப்பொருளினை ஐந்தெழுத்தால் அடக்கி ஓதியருளினர். மந்திரங்

களை உள்ளவாறு ஓதாது சிவகுரவன்பால் உணர்ந்துகொள்ளு மாறு கூட்டியும் குறைத்தும் வெளிப்பட ஓதுவது நம் முன்னோர் கைக்கொண்டொழுகிய முறையாகும். அம்முறையே 'வகர'த்தை 'வா' என நெடிலாக்கியும் 'யா' என்பதனை 'யகர'மெனக் குறுக்கி யும் ஓதுவாராயினர்.

எனவே, அத் திருமறை "நமசிவய" என ஓதுதல் வேண்டும் இவ்வைந்தெழுத்தும் தனிதனி ஐந்து சொற்களின் முதலெழுத்துக்களாகும். அவை வருமாறு: நடப்பு, மறைப்பு, சிறப்பு, வனப்பு, யாப்பு எனபன நடப்பு - மறைப்பாற்றல். மறைப்பு - மலம், கன்மம், மாயைகள். சிறப்பு - சிவம். வனப்பு - நிறைப்பாற்றல். யாப்பு - ஆருயிர். இவை ஆகுபெயராகப் பொருண்மேல் நின்றன. மறைப்பாற்றல் - திரோதான சத்தி. நிறைப்பாற்றல் - பராசத்தி மறைப்பாற்றல் ஆருயிர்கள் வினைப் பயன் துய்த்தற்பொருட்டுச் சிவத்தை மறைதது அவ்வுயிர்களை உலகுடன் நடத்துதல். நிறைப்பாற்றல் - வினை நீங்கிய ஆருயிர் களைத் திருவடியின்பத்தில் நிறைப்பித்தற் பொருட்டு அவ்வடியிற் கூட்டுவித்தல். யாப்பு - கட்டு; பாசப் பிணிபபினையுடையது. ஆகுபெயராக ஆருயிர்களை யுணர்த்தும். இந்த 'யகரம்' குறைக்கப் பட்டதெனினும, அங்ஙனம் குறைந்தே நிற்பது ஏற்புடைத்து. என்னை, "ஊரிற் குறுகினேன் ஓர் மாத்திரை யளவென் பேரிற் குறுகினேன் பின்" என்பதனாலென்க.

"நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்"—ஞானம் - திரு வடிப்பேறு கல்வி - உலகியல் வாழ்வு. வனப்பாற்றல்தானே திருவடியிற் கூட்டுவித்தற் பொருட்டுத் தன்னை மறைப்பதாகிய வஞ்சனைபுரிந்து நடப்பாற்றலாய் நின்று ஆருயிர்களை உலகுடன் நடத்துகின்றது. அதுவே பின் வனப்பாற்றலாக மாறிச் சிவத் துடன் கூட்டுகின்றது. இந்த முறையால் ஞானமுங் கல்வியும் நவ்வாகும்.

"நம....விச்சையும்"-விச்சை-அறிவு. ஆருயிர்களின் அறிவு விளக்க விளங்கும் சிற்றறிவு. எனவே, நான் அறிகின்ற அறிவும் அந் நவ்வால் பெற்றனவேயாகும். அவையும் அந் நமச்சிவாய என்னும் திருமறைப் பொருளேயாகும். அதனால் அந் நன்றி யினை மறவாது அந் நமச்சிவாயத்தினையே இடையறாது என் னுடைய நாவிழைந்து ஓதிததொழும். அங்ஙனம் தொழுதலால் அந் நமச்சிவாயவே நன்னெறி காட்டும் என்க.

"ஆளா னார்க்கா ளானாரை யடைந்துய்யார்
மீளா ஆட்செய்து மெய்ம்மையுள் நிற்கிலார்
தோளா சுரை யோதொழும் பர்செவி
வாளா மாய்ந்துமண் ணாகிக் கழிவரே." " "

இத் திருப்பாட்டுத் தத்துவ சுத்தியோடியையுமாறு :

என்பது அத் தத்துவக் கூட்டங்களைப் பற்றுக்கொண்டு நில்லாது "கண்ணுதலருளால்" நீங்கி நிற்றல், இத் திருப்பாட்டு அடியார்க்கு அடியாராயினார் திருவடியினைச் சார்ந்து உலகியலுண்மையோர்ந்துய்ந்து, விழுமிய முழுமுதற் சிவபெருமானுக்கு மீளா அடிமையாகி நன்னெறி நான்மையாகிய மெய்ம்மையுள் நிற்றலாகும். அங்ஙனம் நில்லார் தத்துவ சுத்தி பெறுதார் ஆவர். அவர்களைத் திருவருளான் நோக்கி நனிமிக இரங்கி நம் நாயனார் நவில்கின்றனர். "தொழும்பர்" என்பது குறிப்புமொழியான் அல்லாதாரைக் குறித்ததென்க. அல்லதூஉம் உலகு உடல்களுக்கு அடிமையாய்ப் பிறப்புக்கு ஆளாவார் என்றும் அமையும் அவர்கள் எத்துணை இடித்துக் கூறினும் கேளவியால் தோட்கப்படாத செவியினராக விருக்கின்றனர். அதனால் அவர்கள் "பிறப்பதற்கே தொழிலாகி இறந்து மண்ணாகிக் கழிவர். என்றதனால் எதிர்மறைமுகத்தான் "சுத்தி" பினை வற்புறுத்துவது காண்க.

*அன்னையோ டத்தன் ஒருபொருட்கண் ஆவியிறை*
*மன்பொருட்கண் ணும்புணர்ப்பு மற்றிதனைத்—தொன்மைசேர்*
*தாதான் மியமது தானுதல் வேறன்மை*
*நீதாகும் அத்துவிதம் வேறு.*

(தொடரும்)

---

## திருவருள்மாண்பு

பண்டை நாட்போன்று இந்நாளிலும் கடவுளருளால் நடுடீர் கண் பெற்ற காட்சியின் மாட்சி நனிமிகச் சிறந்ததாகும். தென்காசியைச் சார்ந்த காவலாக குறிச்சியில் காசி ஆசாரி (அகவை 23) கட்பார்வை இழந்திருந்தனர். அவர் கோவிலில் நவம்பர் 29 சனிக்கிழமை படுத்திருந்தனர். கனவில் ஆண்டவன் முருகனாகவும் கணணனாகவும் தோன்றிக் குற்றாலம் போய்க் கடவுளை வழிபட்டால் கண்பார்வை தெரியுமெனத் திருவாணை பிறந்தது. 1 ஆம் நாள் திங்கட்கிழமையன்று திருக்குற்றாலத்துச் சென்று வழிபாடு முடித்து ஆணை நந்தியின் பக்கம் நின்று, மனமுருகி வேண்டிக்கொண்டனர். திருவருளால் கண்ணும் தெரிந்தது. பெருமக்களும் நேரிற் கண்டு வியந்தனர். திருக்கோவில் ஆணை நிறைவேற்ற முதன்மையா திரு. ஆர். இராமையா நாயுடு அவர்கள் உடனிருந்துணர்ந்து திருவருளைப் போற்றினார். நமபினாக்கு நாயனருள் நயம் புரியுமென்பதனை நானிலம் இதனானுணர்ந்து உய்யுமாக.

---

# பால் பொங்குக!

[திரு. புலவர்—அரசு]

பால் பொங்குக! பால் பொங்குக!
பால் பொங்குக! பண்பாம்
பயன்செய் தொழில் உழவோர்மனை
வளம்பொங்குக பலவே!
கால்கொண்டணி வான்சூழ் முகில்
கவின்மாரிபெய் தலகில
கால்சென்று செய் வளநெற்பயிர்
கவினுற்றிட விளைக!
மால்கொண்டுதந் நலமே நினை
மடவோரறி வுறவே!
வளமார் குடி யரசோங்கிநல்
வாழ்வோங்குக இனிதே!
மேல்வந்தணி வணிகந் தொடா
நலனெய்துக! எங்கும்
மேல்கீழெனும் மாறினைறினி
துறவேசம நெறியே!

அன்பெங் கணும் நிலவுக்கதிர்
பொழிந்தோங்குக! குடிகள்
அகமார்மனை வியர் நல்லறி
வமைமைந்தரும உறவும்
இன்பம் மிக வேபொங்குக!
இயல் செந்தமிழ் வளர்க!
இசைநாடகம் உயர் செந்நெறி
எய்தித்திக ழுறவே!
முன்பொன்றிய கலை மேவிய
எழுத்தாளர்கள் கவிஞர்
மொழியாளர்கள் நனி வாழிய!
முதன்மைத் தமிழ் நாடு
தன்பங்குறு பணிசெய் துல
கினிலோங்குக! தகவார்
தனிவள்ளுவ முகில் பெய்யுமுப்
பால் பொங்குக இனிதே!

---

# "எதிர்மறை இடைநிலை"

[வித்துவான் திரு. வி. பெ. பழனிவேலன் பி. ஓ. எல்.]

தமிழ் இலக்கணம் தொல்காப்பியத்தை முதலாகக் கொண்டு வகுக்கப்பெறினும் தொல்காப்பிய காலத்தில் இல்லாத பல இலக்கண வரம்புகள் வகுக்கப்பெற்று வழங்கி வருவது யாவரும் அறிவர்.

> "பழையன கழிதலும் புதியன புகுதலும்
> வழுவல கால வகையி னானே."

என்பதும்,

> "கடிசொல் இல்லை காலத்துப் படினே."

என்பதும் அத்தகைய மாறுதல்கட்கு இடமளித்துள்ளன.

ஆனால் சில இடங்களில் செய்யப்பெறும் மாற்றங்கள் பயில்வோரையும் பயிற்றுவோரையும் மயங்க வைக்கக்கூடியனவாய் உள்ளன.

அவற்றுள் ஒன்றுதான் யான் ஈண்டு எடுத்துக்கொண்டது. இடைநிலைகள்; காலங்காட்டும் இடைநிலைகள், பெயரிடைநிலை, எதிர்மறை இடைநிலை என நன்னூலார் நவிலுகின்றார்.

ஒருவினைச் சொல்லில் இரண்டு இடைநிலைகள் வருமிடங்களில் ஐயம் எழுகின்றது. நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரை, பக்கம் அஅ இல் கூறப்பட்டுள்ள உரை விளக்கம்பற்றிய ஐயத்தைச் சிறிது விளக்குவாம்.

'நடவான்' என்ற சொல் எதிர்மறைப் பொருளது. எதிர்காலம் காட்டி நிற்கின்றது. அதனை உறுப்புப் பிரித்தால், நட+வ்+ஆ+ஆன் என்று பிரித்து, 'நட' பகுதி, 'ஆன்' விகுதி, 'வ்' எதிர்கால இடைநிலை, 'ஆ', எதிர்மறை விகுதி என்று கூறி, 'நடவான்' என்னும் எதிர்மறை வினைப் பகுபதம் 'நட' என்னும் பகுதி எதிர்மறை ஆகார விகுதியோடு புணர்ந்து இரண்டும் ஒரு பகுதியாய் நின்று மேலவரும் 'ஆன்' விகுதியோடு புணர்ந்து, "ஒரு மொழி மூவழிக் குறைதலும் அனைத்தே," (கநிசு) எனபதனுன் விகுதியானது ஆகாரம் குறைந்து முடிந்தது, என்றும்,

'நடவா' என்ற அஃறிணைப் பன்மை எதிர்மறைச் சொல்லில் 'ஆ' என்ற விகுதி எதிர்மறைப் பொருள் தருகிறது, "ஆவே எதிர்மறைக் கண்ண தாகும்", (நஉசு) என்ற சூத்திர விதிப்படி;

பால்காட்டும் 'ஆ'கார விகுதியன்றி எதிர்மறை ஆகாரம் வேறாது முடிந்தது, என்றும்,

'நடந்திலன்', 'நடவா நின்றிலன்', என்ற சொற்களில் முறையே, 'த' என்ற இறந்தகால இடைநிலையும், 'ஆநின்று' என்னும் நிகழ்கால இடைநிலையும் வந்துள்ளன.

நட+த்+இல்+அன் என்று பிரித்து 'இல்' என்பதை எதிர்மறை இடைநிலை என்றும் கொள்க எனறு கூறப்பட்டுளது. இச் சொல்லில் 'த்' என்ற இறந்தகால இடைநிலை, 'இல்' என்ற எதிர்மறை இடைநிலை என்று இரு இடைநிலைகள் வருகின்றனவாகக் கூறுகிறார்.

ஒரு சொல்லில் விகுதி எதிர்மறைப் பொருள் தருகிறது. இன்னொன்றில், எதிர்மறை, 'ஆ'கார விகுதி புணர்ந்து ஆன் என்ற விகுதி 'ஆ'காரம் கெட்டது என்றும் கூறப்படுகிறது. இங்ஙனம் பலவாறு கூறி இடர்ப் படுவதைவிட, 'இல்' எனபது இடைச் சொல்லாதலின் அதனைச் சாரியையாகக் கொண்டு எதிர் மறைப் பொருள் தந்து நிறகின்றது என்று கூறின் இழுக்கெனனே? என்பதே எனது வினா. அதே போன்று, 'ஆ' என்பதையும் சாரியையாகக் கொண்டு எதிரமறைப் பொருளது என்பதும் சாலும்.

பகுபத உறுப்பிலக்கணப்படி இடைநிலைக்கும் விகுதிக்கும் இடையில வருமு எழுத்தையோ சொலலையோ சாரியை என்று தானே கூறுகினறோம? ஆகவே ஒரே சொல்லில் இரண்டு இடைநிலைகள் கூறி மாணவர்களையும மறறவர்களையும மயஙகவைபபதை விட மேற்கூறியாஙகுக் கறபிததால யாவர்க்கும் தெளிவுபட ஏதுவாகும் என்பதே எனது எண்ணம்.

"மகன் எனல் மக்கட்பதடி எனல்", என்ற தொடரில் 'மகன் எனல்', எனபதில 'எனல்' என்ற சொல் 'என்று கூறுதே', என்றல்லவா பொருளபடுகிறது? என்+அல். என்று பிரிதது 'அல', எதிர்மறை விகுதி அல்லது 'அல்' விகுதி எதிர்மறைப் பொருளது என்றுதானே கூறுகிறோம்?

அங்ஙனமே சார்ந்து வரும் சொல்லைச் சாரியை என்று கூறி, எதிர்மறைப் பொருளது சொன்னால், தவறென்னை?

இடைச்சொல் எதிர்மறைப் பொருளில் வரலாம் என்று நன் - ௨௫௧ ஆம சூத்திரம புலபபடுத்துகினறது. இடைச்சொல் சார்ந்து வருவதே. எனவே இவ் ஐயததை அறிஞர் ஆய்ந்து கொள்க.

---

# வேலன்

[திரு. பி. எல். சாமி, பி. எஸ்ஸி.]

நாட்டுப் பாடல்களைத் தொகுத்து வெளியிடுவதுபோல் நாட்டு மக்களிடையே வழங்கும், பறவைகள், விலங்குகள் முதலிய உயிர்கள் பற்றிய கதைகள், நம்பிக்கைகள், கற்பனைகளைச் சேர்த்து ஆராய்வது நல்ல பயனைத் தரும். தமிழ்நாட்டின் மிகப் பழைய வரலாற்றை அறியவும் அவை துணை செய்யும். இத் துறையில் மேல்நாட்டு மொழிகளில் நல்ல ஆராய்ச்சி நடந்துள்ளது. இத்தகையதொரு ஆராய்ச்சி பழங்காலத் தமிழின மக்கள் பிற இன மக்களொடு கொண்ட தொடர்பு, தமிழினத்தின் தோற்றம் முதலிய சிக்கலான புதிர்களை விடுவிக்க ஓரளவு உதவும்.

கடலில் உலவும் ஒரு விலங்கு பற்றிய கதை தமிழ்நாட்டு மீனவரிடையே வழங்குகிறது. அதே போன்றதொரு கதை பசிபிக்கடலில் வாழும் பழங்காலக் குடிகளிடை வழங்குவதைக் காணுங்கால் மிகுந்த வியப்புண்டாகிறது வேலன் என்ற சொற்கு நேர் பொருள் வேல் தங்கிய ஆள் என்பதே வேலன் என்றால் பலருக்கு, வேல் பிடித்த 'பெரும் பெயர் முருகனின்' திருவுருவம்தான் கண்முன் தோன்றும். வேலனை அழைத்துத் தெய்வமேறி ஆடும் ஆளை வேலன் என்று சங்க நூல்கள் கூறும். இன்றும் இந்த வெறியாடும் வேலன் மலையாளத்தில் வேலன் என்ற அதே பெயரில் பேயோட்டியாக இருந்து வருகின்றான். வேலன் தெய்வங்களையும் இறந்த தென்புலத்தாரையும் அகவி அழைப்பான். இந்தியாவில் உள்ள பல பழங்குடி மக்களிடையே இத்தகைய 'தெய்வமேறிகள்' (Shamans) இன்றும் உள்ளனர். தமிழ்ப் பாக்களில் முதற்பாவான அகவற்பாட்டும் தெய்வங்களையும் இறந்தவர்களையும் அகவிப் பாடும் வேலனிடமே பிறந்த பாட்டு என்றும் கருதலாம். இதற்குச் சான்றாக,

> " அகவன் மகளே யகவன் மகளே
> மனவுக் கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
> அகவன் மகளே பாடுக பாட்டே
> இன்னும் பாடுக பாட்டே, அவர்
> நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே."

என்ற குறுந்தொகைப் பாட்டும் உள்ளது. தெய்வங்களையும் இறந்தோரையும் அகவி அழைக்க முதுபெண்டிும் இருந்தனள். பின்னர் இவளே 'கட்டு விச்சி' ஆகினள் போலும். வேலனின்

ஊர்தியான மயில் கூவினால் அதை 'அகவுதல்' என்று கூறு கின்றனர். 'கோழி கேவுது' என்று பேச்சு வழக்கில் கூறுவர். 'அகவுது' என்பதே கேவுது என மாறியது. தமிழ் வரலாற்றில் வேலனே இயற்கையாகத் தோன்றிய முதற் கவி என்று கூடக் கருதுவர். வேலன் என்ற சொல் கடலில் வாழும் ஒரு விலங்கைக் குறித்துப் பரதவரிடையே வழங்குவது பலருக்கும தெரியாது. சில விடங்களில் வேடன் என்றும் கூறுவர். இந்த விலங்கைக் குறித்துப் பரதவரிடை ஒரு நம்பிக்கை நிலவுகிறது. இதைத் தெய்வத்தன்மை பொருந்திய விலங்காகக் கருதுகின்றனர். இதை மீனென்று அவர்கள் அழைத்தாலும் இது மீனல்ல. கடலில் வாழும் விலங்கு. இவ் விலங்கு வலையில் வீழ்ந்துவிட்டால் வலையைக் கிழித்து உடனே வெளியில் விட்டுவிடுவர். வலையில் வீழ்ந்து கொல்லப்பட்டால் பெருங் கேடு விளையுமென்று மீனவர் நமபுகின்றனர். ஆனால் அகபபட்டவுடன் விட்டுவிட்டால் நன்மை தரும் என்று நினைக்கின்றனர். இறந்த முன்னோர்களே வேலன் எனற மறு உருவில் கடலில் உலவுவதாக மீனவர் நம்பு கின்றனர். வேலனுக்கு ஊறு செய்வது முன்னோர்க்குச் செய் வதாகு மென்று கருதியே வேலனை வலையிலிருந்து விடுவிக்கின் றனர். ஒருவேளை இவ்வேலனையே 'மீன் வலைப்பட்ட மாபோல' என்று குறுந்தொகைப் பாடல் கூறுகின்றதோ! முன்னோர்களை அகவி அவர்களின் ஆவி ஏறப்பெற்றுத் தெய்வத் தன்மை பெற்றவனை வேலன் என்றதால், அது போன்றே முன்னோர் களின் ஆவியுருவான விலங்கையும் வேலன் என்றழைததனரோ என்று உய்த்தறியலாம்.

வேலனைப்பற்றித் தமிழ்நாட்டு மீனவர்களிடையே வழங்கும் அதே நம்பிக்கையே நெடுந் தொலைவிலிருக்கும் பசிபிக்கடலில் உள்ள சிறு ஆப்பாய் (Hapai) தீவு மக்களிடையேயும் வழங்கு கின்றது. இதை இத் தீவில் வாழும் பழங்குடி மக்களின் தலைவன் ஒரு ஆங்கிலக் கப்பல் மாலுமிக்குத் தெரிவித்தான். ஆனால் இந் நம்பிக்கையுடன் ஓர் அழகிய கற்பனைக் கதையும் இவர்க ளிடையே வழங்குகிறது. 'ஆப்பாய்' மக்களுக்கும் அருகிலிருந்த 'தொங்கா தாபு' (Thonga tabu) மக்களுக்கும் நெடுநாளைய பகை. ஒரு தடவை 'தொங்கா தாபு' வீரர்கள் போர்க்கப்பல்கள் கட்டத் தெரிந்த வேறினத்தாருடன் சேர்ந்து கொண்டு திடீரென்று கப்பல்களில் கடலைக் கடந்து 'ஆப்பாய்த்தீவைத்' தாக்கினர். ஆப்பாய் மக்களில் பெரும்பான்மையோரைக் கொன்றனர். சிலர் குகைகளில் ஒளிந்து கொண்டனர். மணமாகாத பெண்டிரெல் லாம் ஒரு குன்றில் ஏறி மறுபுறம் மறைந்துகொண்டனர். மறைந் திருந்த மகளிர் ஏழாம் நாள் பசிதாழாமல், உணவு தேட

வெளியே வந்தனர். பெண்களைக் கண்ட எதிரிகள் கூச்சலிட்டு அவர்களைப் பிடிக்க வந்தனர். ஆனால் மானமே பெரிதென் றெண்ணிய ஆப்பாய்த் தீவுப் பெணகள் கடலில் நீட்டியிருந்த கல்லின் மீதேறிக் கடலுள் வீழ்ந்து மாய்ந்தனர். எதிரிகள் ஓடி வந்து கல்லின் மீதேறிக் கடலுள் கண்ணைச் செலுத்தினர். இறந்த பெண்களின் உடல்களைக் காணவில்லை.

ஆனால் கூட்டம் கூட்டமாக, என்றுமே, யாருமே பார்த் தறியாத புதிய அழகிய விலங்குகள் விளையாடிக்கொண்டிருப் பதைக் கண்டனர். இக் காட்சியைக் கண்ட எதிரிகள் அஞ்சி நடுங்கி ஓடினார்கள் கடலில் மாய்ந்த பெண்களெல்லாம் வேலன் என்றும், கடற்றெய்வத்தால் அவ்வாறு மாற்றப்பட்டன ரென்றும் ஆப்பாய் மக்கள் நம்புகின்றனர். ஆதலால் வேலனைத் தின்பதோ கொல்லுவதோ பெருங் கேடு தரும் என்று கருது கின்றனர். இந்தப் பழங் கதையில் வரும் கடற்கன்னிகள் போலவே மேல்நாட்டிலும் 'கடற்பசு' என்ற விலங்கைக் கடற் கன்னிகளெனக் (Mermaids) கருதுகின்றனர். *வேலன் பற்றிய பசிபிக் கடலில் வழங்கிய பழைய நம்பிக்கை இந்தியக் கடலில் தமிழ்நாட்டுப் பரதவரிடையும் வழங்குவது மிகவும் வியப்பைத் தரும் செய்தியாகும். ஆங்கிலத்தில் வேலன் 'டால்பின்' (Dolphin) என்றழைக்கப்படும். மத்தியதரைக் கடலருகில் வாழ்ந்த கிரேக்கர்களிடையேயும் வேலன் தெய்வத் தன்மை பொருந்திய விலங்கென்ற நம்பிக்கை இருந்தது. கிறித்துவுக்கு முன் கிரேக்கர்களிடையே வேலனைப்பற்றிச் (Dolphin) சில செய்தி கள் வழங்கி வந்தன. கடற் செலவு செய்யும் கலங்களுக்கு வழி காட்டியெனவும் பாதுகாப்பெனவும் வேலனை நம்பினர். கிரீட்டி லிருந்து (Crete) டெல்போசுக்குப் (Delphos) போன கப்பலுக்கு வேலன் உருத் தாங்கிய அப்போல்லோக் (Apollo) கடவுள் வழி காட்டிச் சென்றதாகக் கிரேக்கப் புராணம் கூறும்.

கிரீட் நாட்டில் வழங்கிய கதை கிரேக்கப் புராணத்தில் புகுந்ததாகக் கூறுவர். கடல் வணிகருக்கும், வெளிநாடுகளில் குடியேறுபவர்களுக்கும் உறுதுணை செய்யும் கடவுளாக வேலன் மதிக்கப்பட்டது. வேலன் உருத் தாங்கிய அப்பொல்லோக் கடவுள் கையில் வேல்தாங்கிய உருவுடையவரென்றும் கூறுவர். மனித இனத்தின் மூதாதை யெனக் கருதும் மனுவின் கப்பலை இழுத்த கொம்பன் சுறுவோடு (வேளா மீன்) இவ்வேலன் பற்றிய கதையும் தொடர்புடைய தென ஈராஸ் அடிகள் கருதுவர். இந்தச் சுறவின் கொம்பைத் தெய்வத்

* A sack of shaking—Frank Ballen-Collins &Co.

தன்மை வாய்ந்ததாகக் கருதினர். தமிழிலக்கியத்திலும் 'சுறவுக் கோடு' தொழப்பட்டது. கோடுடைய சுறவைத் தற்காலத்தில் மீனவர் 'வேளா' என்றழைக்கின்றனர். 'வேலன்' என்ற சொல்லும் 'வேளா' என்ற சொல்லும் நெருங்கிய தொடர்புடையன. இரண்டும் தெய்வத் தன்மை பொருந்தியதாகக் கருதப்பட்ட கடலில் வாழும் உயிர்கள். வேல்தாங்கியவன் வேலன் எனப்பட்டது போல வேல் போன்ற கோடு தாங்கிய மீனையும் 'வேளா' என வழங்கியிருக்கலாம். சுறவுக்கோட்டை வாளொடு உவமித்துச் சங்கநூல் கூறும்.

வேட்டை நாயை முயல் விரட்டியது, யானையைக் கோழி வென்றது என்ற கதைகளைப் படிக்கும்போது இவைகளை இலக்கியக் கற்பனை என்று பலரும் எண்ணுவர். ஆனால் இத்தகைய கதைகளை வரலாறு, அறிவியல், இயற்கை நூலறிவு ஆகியவை துணைகொண்டு ஆராயுங்கால் இவைகள் உண்மைச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டெழுந்தவையெனத் தெரிகின்றது. காட்டு விலங்குகளின் வாழ்க்கையைக் கூர்ந்து ஆராய்ந்து பார்த்த இயற்கை நூல் வல்லுநர் (Naturalist) இது போன்ற இயற்கைக்கு மீறிய செய்திகளைக் கண்டு எழுதியுள்ளனர். Western Sportsman என்ற இதழின் ஆசிரியர் ஒரு வேட்டையாளர். நரியை விரட்டிய கோழியைப் பற்றி அவர் கண்ணுற்ற் கண்டதை எழுதியுள்ளார். சதுப்பு நிலத்தில் கூடு கட்டி வாழ்ந்தன இரு நீர்க் கோழிகள். குஞ்சுகளைக் காத்துக் கொண்டிருந்த பெட்டையைப் பிடித்து இழுத்துச் சென்றது ஒரு நரி. பெட்டையின் அலறலைக் கேட்ட சேவற்கோழி இறக்கையால் நரியின் தலையை மோதிற்று. கால் நகங்களால் கீறிற்று. வீறிட்டது. கோழியிடமிருந்து எதிர்பாராத, இந்தத் தாக்குதலால் நரி தடுமாறியது. அதற்குள் பெட்டைக்கோழி தப்பிவிட்டு, நரியை எதிர்த்தது. நரியோ பயந்தோடிவிட்டது. உண்மையில் நரி தனது உடல் வன்மையால் இரண்டு கோழிகளையும் கொன்றிருக்கலாம். ஆனால் எதிர்பாராத தாக்குதல் உள்ள உரத்தை அழித்துவிட்டது. இதுபோன்று சிறிய வலிமையற்ற உயிர்கள் பெரிய உயிர்களை இடுக்கண் மிகுந்த சமயங்களில் எதிர்த்துத் தாக்கி வெற்றியடையும் அருமையான செய்திகளை விலங்குநூலறிஞர் வெளியிட்டிருக்கின்றனர். முயல் மிகவும் பயந்த விலங்கு. ஆலன் டெவோ (Alan Devoe) என்ற இயற்கை நூலறிஞர் ((Naturalist) முயல் நாயை விரட்டியதைக் கண்ணால் கண்டார். முயல் குட்டி போட்டிருந்த இடத்திற்கு நாயொன்று தவறிச் சென்றது. ஆனால் அங்கிருந்த தாய்முயலோ பின் கால்களைப் பின்னோக்கி உதறித் தாக்கிற்று. நாய் குலைத்துக்

கொண்டே ஓடியது. இம்முறையாகக் குட்டிகளைக் காப்பாற்று வற்கு மான்கள்கூட ஓநாய்களை எதிர்த்து வெல்வதை வேட்டை யாளர் கண்டிருக்கின்றனர். எளிய விலங்குகள் வலிய விலங்கு களை அருமையாகச் சில சமயங்களில் எதிர்த்துத் தாக்குவதற்கு இரண்டு காரணங்கள் உள. கடைசி நிலையில் தன்னைத் தான் காக்கவும் தன் குட்டிகளைக் காக்கவும் திடீரென்று ஒரு வன்மை சில உயிர்களுக்கு உண்டாகின்றது. தனக்குரியது, தான் இருக்கு மிடம் பாதுகாப்பானது, வன்மை பொருந்தியது என்று கருதும் உணர்வு சில விலங்குகளிடை உண்டாகின்றது. சிறிய நாய்கூடத் தான் வாழும் தெருவில் தன்னைவிட வலிமை வாய்ந்த நாயை எதிர்த்துத் தாக்குவதைப் பலரும் கண்டிருக்கலாம். இத்தகைய உணர்வு சில மீன்களுக்குக்கூட (Stickle lacks) உண்டாம்.

கட்டபொம்மன் கட்டிய கோட்டை தோன்றியதற்குக் காரணமாகக் கதையொன்று கூறுவர். ஒரு வேட்டை நாய் முயலைத் தாக்கி விரட்டிச் சென்றது. ஓட்டமெடுத்த அந்த முயல் காளையார் கோவிலில் கட்டபொம்மன் கட்டின கோட்டை இருக்கும் இடத்தை அடைந்ததும் விரட்டிய நாயைத் திருப்பித் தாக்கியது. முயலுக்கு, உள்ள உரம் தந்த இடமாதலால், மண்ணாதலால் அவ்விடத்திலே, மண்ணிலே கோட்டை கட்டப் பட்டதெனக் கூறுவர். இதுபோன்று வேறு சில கோட்டைகள் கட்டப்பட்டதற்கும் கதை கூறுவர். வேலூர்க் கோட்டைக்கும் இதுபோன்ற கதை கூறப்படும். நாயொன்று சில முயல்களை ஓடஓட விரட்டிச் சென்றது. அவற்றில் ஒன்று நாயை எதிர்த்து நின்றது. நாய் பயந்து ஓடிற்று. இநத ஓட்டம் வேலூர்க் கோயிலைச் சுற்றி நிகழ்ந்தது. ஆதலால் ஒரு சிற்பி கோயிலைச் சுற்றிக் கோட்டையைக் கட்டினான் என்று செவி வழிச் செய்தி கூறுகிறது. புலிகடிமால் எனப்படும் சள அரசன் சஃகிய மலைத் தொடரில் வேட்டையாடுங்கால் முயல் புலியொடு பொருவதைப் பார்த்தான். வியப்புடன் நின்றான். அங்கே தவம் புரிந்த முனிவரொருவர் 'ஹொய்சள' என்று சொல்ல, வேந்தன் புலியைக் கொன்றான். இக் கதையை மைசூர் நாட்டு பேலவாடிக் கல்வெட்டு கூறுகின்றது. இக்கதை மிகப்பழைய காலத்தில் தோன்றியதெனத் தெரிகின்றது. அமெரிக்காவில் வாழ்ந்த அசெடெக் (Azetec) இனத்தவர் தலைநகர் ஏற்படுத்தப் பொருத்த மான இடத்தைத் தேடி அலைந்து கொண்டிருக்கும்போது கழுகு ஒன்று உயிருடைய பாம்பைத் தூக்கிச் செல்வதைக் கண்டனர். இந்த வியப்பான நிகழ்ச்சியையே நல்ல அறிகுறியாகக் கொண்டு தலைநகரை அங்கேயே கட்டினர். இக்காலத்திலும் மெக்சிக்கோ நாட்டு நாணயங்களிலும் முத்திரைகளிலும் இச் செய்தி

பொறிக்கப்பட்டிருக்கின்றது. உறையூர் தோன்றிய வரலாற்றைப் பழந்தமிழிலக்கியத்தில் காண்கின்றோம். உறையூருக்கு மற்றொரு பெயர் கோழியென்பதாகும். கோழி என்று பெயர் பெறக்காரணம் உறையூர் தோன்றிய வரலாற்றில் இருக்கின்றது. 'முறஞ்செவி வாரணம் முன்சமம் முருக்கிய, புறஞ்சிறை வாரணம்' என்று சிலப்பதிகாரம் கூறும். யானையைக் கோழி முருக்கலால் கோழியென்று பெயராயிற்று. யானையைச் சயித்த கோழி தோன்றின இடம் வலியுடைத்தென்று கருதி அவ்விடத்து அதன் பெயராலே சோழன் ஊர் காண்கின்றபொழுது, சிறையும் கழுத்துமாக ஆக்கியதனால், புறம்பே சிறையையுடைய கோழி என்றாயிற்று என்பார் அரும்பதவுரையாசிரியர். பண்டைச் சோழ மன்னனொருவன் யானைமீது சென்று கொண்டிருந்தபோது வழியில் ஓரிடத்தில் கோழியொன்று அந்த யானையைத் தாக்கி அதனைப் பின்னிட்டு ஓடும்படி செய்யவே, அந்த இடத்தின் சிறப்பே காரணமென்றறிந்து 'கோழி' என்று பெயர் சூட்டினான் என்று கதை கூறுவர்.

"நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்
ஓடாப் பூட்கை உறந்தை."

என்று சிறுபாணாற்றுப்படை கூறும். 'ஓடாப் பூட்கை' என்பதற்குத் தன்னிடமிருந்தோர் ஓடாமைக்குக் காரணமாகிய மேற்கோளினையுடைய உறையூர் என்று பொருள் கூறுவர். அந்த மேற்கோளே கோழி விரட்டிய யானையின் கதையாகும். தமிழிலக்கியத்திலும் வரலாற்றிலும் இத்தகைய கதைகள் வழங்குவது வியப்பைத் தருகின்றது. இக்கதைகள் மிகப் பழங்காலத்து வழங்கிய செவிவழிச் செய்திகளாகுமெனக் கருதலாம். யானையைக் கோழி முருக்கிய செய்தி உறையூர்க் கோயில் கல்லில் பொறிக்கப்பட்டிருக்கின்றது பேராசிரியர் ஈராஸ் அடிகள் கோழிக் கொடியுடைய இனத்தார் யானைக்கொடியுடைய இனத்தாரை வென்றதையே இது குறிக்கும் என்று கூறுவர். மொகாஞ்சதாரோ முத்திரைகளில் இந்த வரலாறு பொறிக்கப்பட்டிருப்பதாகக் கூறுவர். உறையூர் என்ற பெயரே ஓடாப் பூட்கை மேற்கொண்டு உறைவதற்கு ஏற்ற ஊராக அமைந்த காரணத்தால் எழுந்திருக்கலாம்.

இயற்கை நிகழ்ச்சிகள் பற்றித் தமிழரிடையே காணப்படும் சில செய்திகள் வெகு தொலைவிலுள்ள பிற இனத்தாரிடை வழங்குவதைக் காண்கிறோம். இத்தகைய நம்பிக்கைகள் பழங்காலத்தில் தோன்றியதாயிருக்கலாம். வீட்டில் குளவி கூடு கட்டினால் குழந்தை பிறக்கும் என்பது தமிழரிடையே உள்ள

நம்பிக்கை. இதே போன்ற நம்பிக்கை இமயமலைக்கருகில் வாழும் லூசாய் (Luzai) மக்களிடையே வழங்குகிறது. இறந்தவர்களுடைய ஆவி குளவியாகத் தோன்றுகின்றது என்பது இந்தப் பழங்குடி மக்களுடைய நம்பிக்கை. பிறந்த குழந்தை சில திங்களில் இறந்தால் வீட்டுத் தோட்டத்திலேயே புதைப்பது தமிழருடைய வழக்கம். பிச்னோர் (Bichnor) என்ற பழங்குடி மக்கள் சிறு குழந்தை இறந்தால் வீட்டு முற்றத்திலேயே புதைப்பர். அப்படிப் புதைத்தால் தாயின் வயிற்றிலேயே குழந்தை திரும்பப் பிறக்குமென்று நம்புகின்றனர். கடும் நோயால் வருந்தும்போது வீட்டு நாய் ஊளையிட்டால் சாவு நேரிடுமென்று தமிழ்நாட்டில் பயப்படுவர். இதே நம்பிக்கை மேல்நாட்டிலும் உண்டு என்பதை 'மேடம் பொவாரி' (Madam Bovary) என்ற நாவலைப் படித்தவர்கள் அறிவார்கள். நாய்கள் மனிதர்கள் சாவதை முகரும் சக்தி வாய்ந்தவை. அதனால்தான் சில சமயங்களில் ஒரு முறையாக ஊளையிடுகின்றனவென்று குஸ்தாவ் பிளாபேர்ட் (Gustave Flabert) கூறுவார். நேரெதிர் மாறான நம்பிக்கைகள் கூட இருப்பதைக் காண்கிறோம். வீட்டில் தேன்கூடு கட்டினால் கெட்டது என்று தமிழர் கருதுவர். ஆனால் பர்மாவில் வாழும் மகம்மதியர் அது நல்ல அறிகுறி என்று கருதுகின்றனர். காகம் கரைவதை நல்லதெனத் தமிழர் கருதினர். காதலன் வரவை உணர்த்திக் கரைந்த காக்கைக்கு ஏழு கலத்தே அடிசில் கொடுத்தாலும் போதாது என்று நச்செள்ளையார் பாடினர். ஆனால் காகம் கரைந்தால் சாவு நேரிடும் என்று அமெரிக்காவில கருதினதை எட்கார் ஆலன்போவின் கவிதைகளைப் படித்தவர் அறிவர். இயற்கை நிகழ்ச்சிகள், செய்திகள் பற்றிய நம்பிக்கைகள், கதைகள் தமிழ் நாட்டில் நிறைய வழங்குகின்றன. அவைகளைத் தொகுத்துப் பிற இனத்தாரிடை வழங்குவனவோடு ஒப்பிட்டு ஆராய்வது நல்ல பலனைத் தரும். இலக்கிய, மனித சமுதாய வளர்ச்சியை அறிய அத்தகைய ஆராய்ச்சி மிகவும் உதவும்.

---

## நல்லன நாடு

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

நல்ல கருத்திருக்க நயமான சொல்லிருக்க
அல்லா தனவெல்லாம் அறைவது மெதற்காக?
அல்லா தனவெல்லாம் அறைவதனை விட்டுநல்ல
நல்ல சொல்லினையே நாடிடுவாய் நன்னெஞ்சே.

---

# வசந்தமாலை

[வித்துவான், திரு. ஆ. சிவலிங்கனார், மயிலம்]

வசந்தமாலை மாதவியின் தோழியாவாள். கூன் உடைமையின் கூனியெனவும் கூறப்படுவாள். மாதவியானவள், சோழ மன்னனால் கொடுக்கப்பட்ட ஆயிரத்தெண் கழஞ்சு பொன் விலை மதிப்பிடப் பெற்ற மாலையை இக் கூனியின் கையில் கொடுத்தே "இம் மாலையை வாங்குபவர் மாதவிக்குரியர்" என்று கூறுமாறு காவிரிப்பூம்பட்டினப் பெருந்தெருவில் நிறுத்தினாள். இவள் கூனியாயினும் மான்போன்ற விரும்பத்தகும் கண்களுடையவள். "மானமர் நோக்கு" என்றும், "வேலரி நெடுங்கண்" என்றும் இவள் கண்களைச் சிறப்பித்தார் இளங்கோவடிகள். இவள் மூல மாகவேதான் கோவலன் மாதவியை யடைந்து விடுதலறியா விருப்பினனாகி அவள் மனையிலேயே உறைவானானான்.

காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரவிழா நடைபெற்றபோது மாதவி கடல் விளையாட்டுக் காண்டல் வேண்டிக் கோவலனுடன் கடற்கரைக்குச் சென்றபோது இவளும் சென்றாள். கோவலன் ஒரு கோவேறு கழுதைமீ திவர்ந்தும் மாதவி ஒரு தேர்மீது அமர்ந்தும் சென்றனர். ஆனால் வசந்தமாலை நடந்தே சென்றாள். அவர்கள் செல்லுமுன் இவள் சென்று உரிய இடத்தில் தங்கி யிருந்தாள். மாதவி ஆடல் பாடலில் வல்லவளாதலின் அவற்றிற் குரிய துணைக்கருவியாகிய யாழை உடன் எடுத்துச் சென்றிருந் தாள் வசந்தமாலை. அவ்வியாழை வாங்கி மாதவி கோவலனிடம் கொடுத்துப் பாடச் செய்தாள். வசந்தமாலையின் கையிலிருந்த யாழை மாதவி வாங்கியபோது வசந்தமாலை வருந்தியிருநதாள். இளங்கோவடிகள் 'வருந்துபு நின்ற வசந்த மாலை' (சிலப் ௬. ௧௭௪) என்றார். வருத்தத்துக்குக் காரணம், 'வழிவந்தமை' என்றார், அரும்பதவுரைகாரர். மகிழ்ச்சியுடன் கடலாட்டம் கண்டும் யாழிசைத்துப் பாடியும் களிக்க வந்த மாதவிக்குப் பின்னர்க் கானல் வரிப்பாடலால் வருத்தமே விளையப்போதலை முன்னறி விக்கும் அறிவிப்புப்போல் வசந்தமாலையின் வருத்தம் இருந்தது.

கானல்வரிப் பாடல் காரணமாக மாதவியைக் கோவலனும் கோவலனை மாதவியும் திரிய உணர்ந்தனராகக் கோவலன், மாதவியைக் கூடாது பிரிந்தான். கடற்கரையினின்றும் தனியே வீடடைந்த மாதவி மாலையில் கோவலனுக்கு ஒரு முடங்கல் எழுதி வசந்தமாலையிடம் கொடுத்தனுப்பினாள். அம் முடங்கல் ஒரு மாலையில் தொடுக்கப்பட்ட தாழையிதழ்களில் பாட்டு

வடிவில் எழுதப்பட்டது. அதனைக் கொடுத்தனுப்பும்போது, 'இம் மாலையில் உள்ள செய்திகளையெல்லாம் கோவலற்குக்கூறி அவனைக் கொண்டு வருக' என்றும் சொல்லியனுப்பினள். மாலையாம் ஓலையை வாங்கிச் சென்ற இவள் கூலப்பொருள்கள் விற்கும் கடைத்தெருவில் கோவலனைக் கண்டு அதனைக் கொடுத்தாள். மாதவி கூறியபடி ஓலையில் உள்ள செய்திகளைக் கோவலனுக்குக் கூறவில்லை. ஓலையைக் கொடுத்த அளவிலேயே நின்றாள். கோவலன் மிகக சீற்றத்துடன் இருந்தமையே இவள் ஒன்றும் கூறாமைக்குக் காரணம். ஓலைபெற்ற கோவலன், அதைப் பாராமலே மாதவியின் நடிப்புக்களைக் கூறி இவ்வோலைச் செய்தியும் ஒருநடிப்பேயாம் என்று வெறுத்துச் சென்றான். கேட்ட வசந்தமாலை வருத்தத்துடன் மீண்டு மாதவிக்கு அவன் கூறியவற்றைக் கூறினாள்.

ஓலைகொடுத்த வசந்தமாலை கோவலனிடம் சில கூறினாள் என்றும் கொள்வர் அரும்பதவுரைகாரரும் அடியார்க்கு நல்லாரும். அவர்கள் கொள்வதற்கு வேனிற் காதை யிறுதிக்கண் காணப்படும் இரண்டு வெண்பாக்களே காரணம். அவை,

"செந்தா மரைவிரியத் தேமாங் கொழுந்தொழுக
மைந்தா ரசோக மடலவிழக்—கொந்தார்
இளவேனல் வந்ததால் என்னுங்கொ லின்று
வளவேனற் கண்ணி மனம்.

ஊடினீ ரெல்லா முருவிலான் தன்னாணை
கூடுமி னென்று குயில்சாற்ற—நீடிய
வேனற்பா ணிக்கலந்தாள் மென்பூந் திருமுகத்தைக்
கானற்பா ணிக்கலந்தாய் காண்."

என்பனவாம். இவை வசந்தமாலை கோவலனிடம் கூறிய கூற்றுக்கள் என அரும்பதவுரைகாரர் கூறினர். அடியார்க்கு நல்லாரும் இக் கருத்தினரே. இவை வசந்தமாலையின் கூற்றாக இளங்கோவடிகளால் பாடப்பட்டனவாகா என்னலாம். ஓலையெழுதிய மாதவி, வசந்தமாலையைக் கூவித் "தூமலர் மாலையிற் றுணிபொரு ளெல்லாம் கோவலற் களித்துக் கொணர்க" என்று சொல்லியும் இவள், கூலமறுகிற் கோவலனைக் கண்டு ஓலையைக் கொடுத்ததாக மட்டும் பாடிச் சென்றனர் அடிகள். மேல் வெண்பாக்களில் உள்ள கருத்துக்களை இவள் அவனிடம் கூறினாள் என்ன வேண்டுவாராயின், ஓலை கொடுத்தபோதே செய்தியும் கூறினள் என்று பாடிப் போயிருப்பார். அவ்வாறன்றிக் கதையை ஒருவாறு முடித்து இறுதியில் தொடர்பில்லாமல் இரு தனிப் பாக்கள் பாடினார் என்பது ஏற்றுக் கொள்ளத்தக்கதில்லை.

கோவலன் சிற்றம்கண்டு வாளா ஓலையைக் கொடுத்தாள் என்பதே சிறந்ததாகும். எனவே இவ்விரு பாக்களும் பிற்காலத்தாரின் செய்யுட்கள் என்னலாம்.

கோவலன் மாதவியைவிட்டு நீங்கிக் கண்ணகியுடன் சிலம்பு விற்றுப் பொருளீட்ட வேண்டிப் பாண்டிநாடு நோக்கிச் சென்ற போது இடையில் மயக்கும் தெய்வம் ஒன்று வசந்தமாலை வடிவுடன் வந்து கோவலனை விரும்பி மயக்க முயன்றது. அத் தெய்வம் காற்றால் கொடி நடுங்குவதுபோலத் துவண்டு கோவலன் காலில் வீழ்ந்து கண்ணீர்விட்டுப் பின்வருமாறு கூறியது.

"அன்று நீ கூறியவற்றை யான் மாதவியிடம் கூறிய போது அவள், 'யான் மாலையின் தாழையிதழில் எழுதிய முடங்கலில் யாதும் தவறில்லை. நீ கோவலனிடம் பேசிய பேச்சில் தவறியிருப்பாய்; அதனால்தான் கோவலன் எனக்குக் கொடுமை செய்தான்' என்று சொல்லித் துன்புற்றாள்; மயங்கினாள். அன்றியும், 'அருந்தவத்தோர் கற்றோர் ஞானிகள் முதலானோர் வெறுத்தொதுங்கும் கணிகையர் வாழ்க்கை இழிந்ததே யாகும்' என்று சொல்லித் தன் அழகினைக் குலைத்துக் கொண்டாள். என்னையும் இது வரையிலும் கைவிடாதவள் அன்று துறந்தாள். அதனால் நீ மதுரை நோக்கிப் போந்ததனை வழியில் எதிர்ப்பட்டோர் உரைப்பக்கேட்டு வாணிகம் செய்வோர் கூட்டத்துடன் வந்தேன். தனிமையால் துயர்ப்பட்டேன். நீ எனக்குச் சொல்லும் சொல் யாது?"

இத்தெய்வம் கோவலனைக் கண்டதும் அவன்பால் காமம் கொண்டது. அவனுடன் கூடக் கருதியது. அதனால் ஓர் அழகிய நங்கையின் வடிவம் கொள்ளக் கருதியது. கோவலன் மாதவிபால் மிக்க காதலுடையவனாதலின் அவள் தோழியாகிய வசந்தமாலையிடத்தும் மிக்க அன்புடையவனாவான். அதனால் இப்போது அவள் வடிவிற் சென்றால் நம் எண்ணம் கைகூடும். மாதவி வடிவிற் செல்லின் அவன் அவளை வெறுத்து வந்தவனாதலினாலும் வசந்தமாலையிடத்தும் வெறுத்துக் கூறியுள்ளான் ஆதலினாலும் தன் எண்ணம் கைகூடாது என்றெண்ணியே வசந்தமாலை வடிவை மேற்கொண்டது அத் தெய்வம் என்றாலும் சொல்லும் செயலும் வசந்தமாலையின் சொல்லும் செயலுமாக மேற்கொள்ள முடியவில்லை. அதனால் அதன் சொல்லும் செயலும் கோவல னுக்கு ஐயத்தையே உண்டாக்கின.

அத்தெய்வம் கொடி நடுக்குற்றதுபோல் துவண்டு வந்து அவன் காலில் வீழ்ந்து கண்ணீர் உகுத்த செயல் முதலில்

அவனை ஐயப்படச் செய்தது. அதன் கண்ணீரை "அருங் கண்ணீர்" என்றார் இளங்கோவடிகள். அடியார்க்கு நல்லார், "அருங்கண்ணீர்: அன்பின்மையின் உருத்தமை தோன்ற நின்றது" என்றார்,

"அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்."

என்றார் வள்ளுவர். கண்ணீர் அன்புடைமைக்கு ஓர் அடையாளம் ஆயினும் கண்ணீர் விடுபவர் யாவரும் அனபுடையவர் என எண்ணுதல் தவறு.

"தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரு மனைத்து." (குறள். அஉஅ)

என்றும் வள்ளுவர் கூறியதைக் காணுதல் வேண்டும். எனவே வசந்தமாலை வடிவில்வந்த தெய்வம் அழுத கண்ணீர் கண்ட கோவலன் அன்பினால் உகுக்கும் கண்ணீராகக் காணாமல் ஒன்னார் உகுக்கும் கண்ணீராக இருப்பதைக் கண்டான். அதனால் தன்னடி வீழ்ந்த வசந்தமாலையை ஐயுற்றான்.

மாதவி கணிகையாதலினாலும் நாடகமகளாதலினாலும் தன்னிடமும் நடித்து வஞ்சனையே செய்தாள் என்ற எண்ணத்துடன் இருந்த கோவலனிடம் இத் தெய்வம், "மாதவியானவள் கணிகையர் வாழ்க்கை கடையே என்று சொல்லி அழுகைக் குலைத்துக் கொண்டாள்" என்று கூறியதும் அவனுக்கு ஐயத்தை உண்டாக்கியது.

முடிவில், "தனிமையால் யான் துயருழந்தேன்; அதற்கு நீ யருளிச் செய்யும் கட்டளையாது?" என்ற கூற்றும் ஐயத்தை யுண்டாக்கியது. காமுற்ற நிலையில் இக் கூற்றிருந்தமையின் ஐயுற்றான் என்றாலும் உண்மையாக வசந்தமாலையாகவும் இருக்கலாம் என்ற எண்ணமும் உள்ளத்தில் இருந்தது. மாதவி மயங்கித் துயருற்றதாகவும், அழுகைக் குலைத்துக் கொண்டதாகவும், துறவாத தன்னையும் துறந்ததாகவும் கூறிய கூற்றுக்கள் அவனை, 'வசந்தமாலை யிவள்' என்ற எண்ணத்தில் நிற்கச் செய்தன. அதனால் தடுமாற்றம் அடைந்தான். கண்ணகி கவுந்தியடிகள் ஆகியவருடன் கோவலன் உறையூரைக் கடந்து ஒரு சோலைக்கண் வந்திருந்தபோது குடமலைப் பக்கத்து மாங்காட்டு மறையவன் ஒருவன் எதிர்ப்பட்டான். அவன் மதுரைக்கேகும் வழிகளைக் கூறினான். அவற்றுள் இடைப்பட்ட வழியின் தன்மை கூறிய போது 'மயக்கும் தெய்வம் ஒன்று இவ்வழிக் காட்டில் உண்டு. அது இடுக்கண் செய்யாது; என்றாலும் போவாரைத் தடுக்கும்'

என்றும் கூறினன். அவன் கூற்று இப்போது இவனுக்கு நினைவுக்கு வந்தது. உடனே மந்திரத்தால் இவள் யார் என்பதை அறிவேன் என்று ஒரு மந்திரத்தை நாவில் உச்சரித்தான். உடனே அத்தெய்வம், 'நான் இக்காட்டில் திரியும் இயக்கி; நின்னை விரும்பியதால் மயக்கினேன். இப் பிழையைப் பொறுத்திடுக. கண்ணகிக்கும் கவுந்தியடிகட்கும் இதனைக் கூறாது விடுக' என்று சொல்லி வேண்டி மறைந்தது.

இனிக் கூனியும் வசந்தமாலையும் வேறுவேறானவர் எனக் கொள்ளலாம் இருவரும் ஒருவரே யென்று அரும்பதவுரைகாரர் கூற்றாலேயே தெரியவரும். மாதவியின் ஓலையைப் பெற்ற கோவலன் அவள் நடிப்புக்களைப்பற்றி விவரித்து,

"ஆடல் மகளே யாதலின் ஆயிழை
பாடு பெற்றனவப் பைந்தொடி தனக்கு." (சிலப். அ. க0கூ-கக0)

என்றவிடத்தில் ஆயிழை என்ற சொற்குப்பொருள் எழுதிய அரும்பதவுரையாசிரியர், "ஆயிழையென்றது கூனியை; இவள் வசந்தமாலை" என்று எழுதினர். அன்றியும், "செந்தாமரை விரிய" என்னும் வெண்பாவைப்பற்றி "இது கூனி ஓலைகொண்டு செல்லுகின்ற காலத்துத் தன்னுள்ளே சொல்லியது; கோவலனுக்கு அவள் சொல்லியதூஉமாம்" என்றும், "ஊடினீரெல்லாம்" என்ற வெண்பாவைப்பற்றி, "இக்காதையில் அவள் செய்தபடியைக் கோவலனுக் கறிவிக்கின்றாள்.—சாற்ற நீடிய கானலிற் பாட்டிலே வருந்தினய்; இதனைக்காண் என்று கோவலன் கையிலே ஓலையை நீட்டினள்" என்றும் எழுதியுள்ளார். ஆனல் அடியார்க்கு நல்லாரோ எவ்விடத்தும் இருவரும் ஒருவரே என்ற கருத்துப் படும்படி எழுதவில்லை. இளங்கோவடிகளும் ஒருவரே என்ற கருத்துப்படும்படியும் பாடவில்லை. சிலப்பதிகாரப் பதிப்பாசிரியர் திரு. ஐயர் அவர்களும் அரும்பதவுரைகாரரைப் பின்பற்றித் தமது அரும்பத முதலியவற்றின் அகராதியில் "வசந்தமாலை: மாதவியின் தோழி; இவள் கூனி என்றும் வழங்கப்படுவாள்" என்றெழுதினர்கள். இக்கட்டுரையின் முதலில் இருவரும் ஒருவரே என்ற கருத்தில் எழுதியிருந்தாலும் வேறு வேறானவரே என்பது எம்துணிபு. அறிஞர்கள் ஆய்ந்து முடிபு கண்டு உரைப்பின் நன்று.

---

# குறளுக்குப் பாமாலை

[திரு. புலவர். செந்துறைமுத்து]

நம் திருக்குறள் தரணிக்கே வாழ்வளிக்கும் தனித்தமிழ் மறைநூல் என்பதை இந்நாடு வெளிநாடு ஆகிய எல்லா நாடுகளும் அறிந்ததே. தனித்தமிழ்ப் புலமையில் தன்னிகரற்று, தெய்வ ஆற்றலும் கைவரப்பெற்ற வள்ளுவர் பெருமான் தம நூலை இயற்றிமுடித்த ஞான்று சங்கத்தாரிடம் அரங்கேற்றம் காண அடைந்தார். சங்கத்தாரின் வினாக்களுக்கெல்லாம் வள்ளுவர் பெருமான் விடையிறுத்தார். இருப்பினும் இறுதியில் இச் சங்கப் பலகை உம நூலை ஏற்பின் யாங்களும் ஏற்போம் என இறுத்தனர் உடனே வள்ளுவர்பெருமான் தம் நூலை அமிழ் தினும் இனிய தமிழ்ப் பலகையில் வைத்தார். அது சமயம பலகை வள்ளுவர் நூலின் அளவில் சுருங்கி நின்று அந் நூலிற்கு மட்டும் இடம் அளித்தது ஏனைய நூல்கள் பலகையில் இருக்கத் தகுதியற்றுக் கிடந்தன. இதைக் கண்ணுற்ற சஙகப் புலவர் பெருமக்கள் வள்ளுவர் நூலை வாழ்த்தியும் போற்றியும் வளமான பாக்களைப் பாடிக் குவித்தனர். குவிநது கிடநத இசைப் பாக் களை இறுதியில் எடுத்துக் கோவைபபடுத்தி மாலையாக்கினர். பாக்களாகிய மலர்களால் கோக்கப்பட்டதே "திருவள்ளுவமாலை" என்பது. இது வள்ளுவர் நூலிற்கு வழஙகப்படும் வளமான வரலாறாகும்.

திருக்குறளின் வளத்தையும் தமிழின் சிறப்பையும் விளக்கு வதற்கென்றே வடிவெடுத்ததுதான் வளளுவமாலை என்பது. இவ் வள்ளுவமாலையைப் போன்று வேறு மாலை எந்நூலிற்கும எக் காலத்தும் எழுந்ததின்று. இஃதொன்றே திருக்குறளின் மேன்மையை விளக்குவதாகும்.

மருளையும் இருளையும் மாய்க்க வந்த குறளிற்கு அணிவித்த பாமாலையின் மொத்தப் பாமலர்கள் ஐம்பத்துமூன்றாகும். இவற்றில் அசரீரி மலர் ஒன்றும், நாமகள் மலர் ஒன்றும், இறைய னார்மலர் ஒன்றும், சஙகத் தலைவர் உக்கிரப் பெருவழுதிமலர் ஒன்றும் ஆக இந் நான்கு மலர்களும் நீங்கலாக ஏனைய நாற்பத் தொன்பது மலர்களும் சங்கப் புலவர் பெருமக்களால் தோற்று விக்கப்பட்ட மலர்களாகும். இம் மலர்களின் கோவைதான் வள்ளுவமாலை. வளமான பூங்காவில் மலரின் மணம் தென்றல் மணததோடு இணைந்து உலா வருதல் போன்று குறளின் மணம் அம் மலர்களின் மணத்தோடு இணைந்து உலகில் உலா வரு

கின்றது. இங்ஙனம் உலாவரும் குறளின் மணம் அம்மலர் மணத்தோடு எங்ஙனம் கூடியுள்ளது. எம்முறையில் சிறப் பெய்துகின்றது என்பதை இரண்டொரு பாமலர் மேற்கோளால் காண முயலுவோம்.

உள்ளத்திற்கு ஒவ்வாத செயலைச் செய்யநேரும் பொழுது உள்ளமும் உடலும் சலிப்புற்று வலி ஏற்படுதலும், அங்ஙனம ஏற்பட்ட வலி உள்ளத்திற்கொத்த செயலைச் செய்யநேரும் பொழுது நீங்கப் பெறலும் இயல்பு.

உடலில் வலியுடையோர்—பிணியுடையோர் மாலை நேரத் தில் பசுமையான வெளியிலோ அல்லது மலர்ப்பொழிலிலோ சிறிது நேரம் உலா வருவரேயானால் உடல் நலமுறுதல் இயல்பு. அவ்வலியும் பிணியும் உடையோர் அவர்கள் உள்ளத்திற்கொத்த செயலைச் செய்யும்பொழுதும், உள்ளத்தைக் கவரும் நூலைப் பயிலும்பொழுதும் உடல் நலமுறலை எய்துதல் இயல்பு. சலிப்பு நீங்கி ஊக்கம வளரலும் இயல்பே.

மேற்கூறப்பட்ட உலக இயல்புகள் ஒன்றில் விளங்கிய ஒரு பெரும் புலவர்பெருமானின் ஒப்பற்ற நிகழ்ச்சியை மருத்துவன் தாமோதரனார் என்ற புலவர் பெருமான் அழகுற நம் முன்னர்ச் சித்திரிக்கின்றார்.

தமிழின்பால் தணியாக் காதலும் புலமையும் கொண்ட நல்லாராகிய சாத்தனார் என்ற புலவர்பெருமான் சங்கத்தின்கண் அமர்ந்து தமிழாராயுங்கால் சொற்பிழைகள் பொருட்பிழைகள் மலிந்த நூல்களையே காண்பாராயினார். அவற்றைக் காணுந் தொறும் அளவிலாது உள்ளம் வருந்தி, தமிழுக்குற்ற இவ் விழுக்குத் தனக்குற்ற இழுக்காகும் என எண்ணி எண்ணி, தம் கையில் இருந்த எழுத்தாணியால் தம் தலையில் குத்திக்கொண் டார். தலை பெரிதும் புண்பட்டுச் சீழ் வடித்துக்கொண்டே யிருந்தது. இக்காரணத்தினால் சீத்தலைச் சாத்தனார் என்ற சிறப்புப் பெயர் பெற்றார் என்பர். சாத்தனாரின் தலைக்குத்தும், தலைவடித்துக்கொண்டிருந்த சீழும் வள்ளுவரின் நூலைக் கண்ட அளவில் நின்றுவிட்டது. வள்ளுவர் நூலின் சொல்நயமும் பொருள் நயமும் சாத்தனாரின் தலையைப் பண்படுத்தும் மருந்தா யிற்று. சாத்தனாரின் உள்ளம் குளிர்ந்தது. தமிழுக்குற்ற இழுக்கும் நீங்கியது. இக்காட்சியைத தாமோதரனார்,

"சீந்திநீர்க் கண்டம் தெறிசுக்குத் தேன்அளாய்
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில்—காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலால்
தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு."

என்று தமிழ்நாட்டிலுள்ள ஓர் அழகிய மருத்துவச் செய்தியை உவமையாக அமைத்து அதனோடு குறளை இணைத்து விளக்கியுள்ளார். சிந்திக்கொடியின் பாலும், சுக்கின் பாலும், தேன் பாலும் ஆகிய இம் மூன்றையும் கலந்து மோந்தால் தலைவலி அல்லது மண்டையிடி நீங்கிப்போம். இதே போன்று அறத்துப்பாலும், பொருட்பாலும், இன்பத்துப்பாலும் ஆகிய இம்மூன்றும் கலந்த குறள் சாத்தனுரின் தலையை எழுத்தாணி குத்துதலை நீக்கியது என்று குறளை ஒப்பற்ற மருந்தாக உரைத்துள்ளது ஒரு தனி பழகு உடையதாகும்!

உலகிலுள்ள பல சமயத்தவரும் தம் தம் சமயமே சமயம் என்றும் சிறந்தது என்றும வாதஙகள் நிகழ்த்தி, தம் சமயத்தை உயர்த்தியும் ஏனைய சமயங்களைப் புன்மை யானவை எனப் புகன்றும் தம் வாழ்நாளில் மெய்ந்நெறியைக் காணுது பொய்ந் நெறியைக் கண்டு பொறுமையின்றிப் போரிடலைக காண்கின் றேம். இப் போரிடும் சமயவாதிகள் அனைவரும் ஒத்தவராய் ஒன்றில் ஈடுபடல் என்பது அரிதினும் அரிது. இவ்வரிய நிகழ்ச்சி தான் உலகிலுள்ள பல சமயத்தவரும் திருக்குறளைக் கண்டு போற்றி மகிழும் நிகழ்ச்சி. எல்லாச் சமயத்தவர்கரும் நிலைக்களமாகத திருக்குறள் அமைந்துள்ளது என்பதே அதன் பெருமையை அறிவுறுத்துவதாகும்!

உலகிலுள்ள பல மொழிகளிலும் சொல்லழகு பொருளழகு நிறைந்த நூல்கள் விளங்கக் காண்கின்றேம். அங்ஙனம் விளங் கும் நூல்களில் சிலவற்றைத்தான் நடுநிலையில் நின்ற புலவர் பெருமக்கள் உலகிற்குப் பயனளிக்கும் நூல் என்று உறுதிகூறி வருகின்றனர். அங்ஙனம் உறுதி கூறப்பட்ட நூல்களே உலகப் பொது நூல்கள்—எல்லா நாட்டினருக்கும் ஏற்புடைய நூல்கள்—எல்லா மொழியினரும் போற்றிடும் நூல்கள்—எல்லாச் சமயத்தாரும் மகிழ்ந்திடுந் நூல்கள்—சிறப்பாக உலகில் ஒருவரும் ஒருபோதும் ஒதுக்கித் தள்ளாத நூல்கள் எனலாம்.

இங்ஙனம் எந்நாட்டினரும் ஏற்றிடும் நிலையில், எந்நாட்டினர்க்கும் பொருந்திய நிலையில் உலகில் எழுந்த நூல்கள் மிக மிகச் சிலவே. அவற்றில் முன்னர்த் தோன்றி, தோன்றியநாள் தொட்டு இன்றும் என்றும எப்பாலாரும் ஏற்றிடும் நூல், நம் வள்ளுவர்பெருமான் மொழிந்த முப்பால் மொழியாகிய திருக் குறள்! மேற்கூறப்பட்ட சமயப் பொதுமைக் கருத்தையும், உலக நாடுகளிற்குரிய பொதுமைக் கருத்தையும் உள்ளடக்கிக் கடைச் சங்கப் புலவர்பெருமான் கல்லாடர் என்பார்,

"ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனி«
அன்றென்ப ஆறு சமயத்தார்—நன்றென
எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி."

என்று இரண்டு பொதுக்கருத்து மணத்தைத் தம் பாமலரில் அமைத்து மலரைக் குறளிற்கு மாண்புடன் சூட்டியுள்ளார். இங்ஙனமே வள்ளுவமாலையில் விளக்கமுறும் பாமலர்கள் அனைத்தும் குறளின் மணத்தைத் தம்மோடு கூட்டித் தரணியை மகிழ்விப்பதாகும்! மணமுடைய குறளை மாண்புடன் உணர்ந்திட மாலையை நோக்கிடல் மனிதக் கடனாகும்! மாலையணிந்த நம் மறைநூல் ஓங்குக!

# யானை

[வித்துவான், திரு. பெ. கோவிந்தனார்]

(க) பாரிங்கே யானையைப் பாப்பா—நின்று
பதறாமல் பாரிங்கே பாப்பா
கூரிய கொம்புடன் யானை—சிறு
குன்றுபோல் நிற்கிறது பாப்பா.

(உ) பனைமரம் போன்றது கையே—நீண்ட
பருத்ததூண் போன்றன காலே
மனைநடை வாசல் கூட்டும்—சிறு
மாறுபோ லுள்ளது வாலே.

(௩) வயிறு மிகமிகப் பெரியது—அதன்
வாயோ மிகமிகச் சிறியது
எயிறுகள் எதனையும் மெல்லும்—மாத்
திலைகனி கரும்புகள் தின்னும்.

(௪) பகைகளைக் குத்திக் கொல்லும்—அதன்
பாகன் உரைப்படி செல்லும்
மகிழ்வுடன் நீரில்விளை யாடும்—வெட்டும்
மரங்களை இழுத்துக்கொண் டோடும்.

(௫) பாங்குடன் வளர்த்தார் தீமை—செயின்
பணிந்துவா லாட்டும் நாய்கள்
தீங்கு பாகன் செய்யின்—நெஞ்சில்
சினங்கொண் டியானை கொல்லும்.

# திதியனின் காதலி[1]

[வித்துவான், திரு. செ. சிங்காரவேலனார், தருமபுரம்]

## முற்குறிப்பு

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனோடு போரிட்டு மடிந்த திதியன் இந்நாடகத் தலைவன்; கோசர் தன் தந்தையின கண்களை அவித்த கொடுமைக்காகக் 'கலத்தும் உண்ணாள் வாலிதும் உடாளாய்' வஞ்சினங் கூறியிருந்த அன்னிமிஞிலி நாடகத் தலைவி. அகநானூற்றுப் பாடல்களிற் சில குறிப்புக்கள் கொண்டு இப்படியும் இருக்கலாமென எண்ணித் துணிந்து இயற்றப்பட்டது இவ்விலக்கியத் துன்பியல் (Tragedy) நாடகம். படிக்கவும் நடிக்கவும் துணைபுரியும் இதன அமைப்பு, நடை எல்லாம்.

## உறுப்பினர்

**திதியன்** — நெய்தனில மன்னன்; தலையாலங்கானத்தே நெடுஞ்செழியனோடு போரிட்டு வீரச்சாவு எய்தியவன்; அன்னிமிஞிலியின் காதலன்.

**அன்னிமிஞிலி** — திதியனின் காதலி; பொழிலனின் மகள்.

**நன்னன்** — திதியனின் நண்பன்; தீக்குணம் உடையோன்; பெண் கொலை புரிந்த பெருமையோன்.

**பொழிலன்** — அன்னிமிஞிலியின தந்தை.

**அன்னி** — திதியனோடு போரிட்டு மடிந்தவன்.

**எவ்வி** — அன்னி என்பானின் உற்ற நண்பன்.

**கோசர்** — சங்ககாலத்தே தமிழ்நாட்டில் சில இடங்களில் அரசுரிமை கொண்டிருந்த புதிய மரபினர்.

## காட்சி 1

(கோசர் தனி மாளிகை)

**கோசர் 1:** நண்பரே! நமது சிற்றரசைக் கண்டு இத் தமிழகத்துக் குறுநில மன்னருங்கூடக் கவலைப்படத் தொடங்கி விட்டார்கள்.

1. இந் நாடகக் கற்பனைக்கு நிலைக்களன்: அகம். 126, 145, 152, 196, 226, 262, 209, 30 நக்கீரர், பரணர், கயமனார், கல்லாடனார் பாடியவை.

கோ. 2: ஆம் நண்பரே! தாங்கள் கூறுவது சரியே. வடவேங் கடத்துக்கு அப்பால் விந்தியத்தின் சாரலில் வாழ்ந்து வந்த நாம் விரைந்து வளர்ந்தோம்; படையால், பண்பால். வளர்ச்சிக்குத் தக்க பரிசு. வளம்சான்ற தமிழகம்.

கோ. 3: வார்த்தை பிழைக்கமாட்டாதவர், வாள்வீரர் கோசர் என்ற புகழ்ப் பெயரையும் வழங்கிவிட்டது தமிழகம்.

கோ. 1: மக்கள் மட்டுமல்ல அன்பரே! மன்பதையின் எதிரொலியாய் அறிவுக் களஞ்சியமாய் விளங்கும் தமிழ்ப் பாவலரும்கூட நம்மை வாய்மொழிக் கோசர் எனவும், ஒன்று மொழிக்கோசர் எனவும், ஒன்றன்பின் ஒன்றாய்ப் புகழ்மாலை சூட்டிக்கொண்டும் வருகிறார்கள் அல்லவா?

கோ. 2: ஆம். தமிழ்ப் புலவர்களால் பாடல் பெறுவதற்காகத் தவங்கிடக்கிறார்கள மற்றவர்கள்! நமக்கோ பாடல் நாடி வருகிறது!

கோ 1: புலவர் பாடல் 'பொய்யா மொழியல்லவா நண்பரே! ஆனால் ஒன்று நல்ல பெயர் வாங்கியாகிவிட்டது இனிப் படைபலத்தால் தமிழகம் முழுவதையுமே நம் குடை நிழற் கீழ்க் கொண்டுவந்து விடவேண்டும்.

கோ. 3: தடையில்லை அதற்கு. வலிமை வாய்ந்த தோளும், பெருமை சேர்ந்த வாளும் இருக்கும்போது ஐயபபட வேண்டிய அவசியமே இலலை!

கோ. 1: இன்றைக்கு இந்த அழுந்தூர், நாளைக்கு நாங்கூர், அதன்பின் நீடூர், பின்னர்க் குடந்தை என்று அடுக்கடுக்காக வென்றுகொண்டே [illegible]

கோ 2: தமிழர்கள் தடுக்கமாட்டார்கள் என்று எப்படிக் கூற முடியும்? தடுப்பார்கள்—உயிரையும் கொடுப்பார்கள்! காப்பதற்கு—உரிமை மீட்பதற்கு! அதுவும் நினைவில் இருக்கவேண்டும் நண்பரே.

ஏவலன் (ஓடிவந்து): வணக்கம் அரசாங்கத்தைச் சேர்ந்த நிலங்களில் வேண்டுமென்றே மாடுகளைவிட்டு மேய்த்துக்கொண்டிருந்த............

கோ. 1: என்ன?

ஏவ: ஆம் அரசே! பொழிலன் என்ற இவ்வூர்க் குடிமகன் இழுத்துவரபபட்டிருக்கிறான்; வாயிலில் படைவீரர் காவலோடு நிற்கிறான்.

கோ. 2: வரச்சொல்; இழுத்து வாருங்கள் அந்த நாயை!

கோ. 3: அரசாங்க நிலம்—கோசர் நிலத்தில் கண்ணிருந்தும், கருத்திருந்தும், மாடுகளை மேயவிடுவதா?

கோ. 1: கொடுமை. கோசமரபுக்கே கொடுமை!

[பொழிலன் படைவீர ரிருவன் காவலோடு வருதல்.]

கோ. 1: நீ யார்?

பொழி: நான் கேட்கவேண்டிய கேள்வியை நீ கேட்கிறாய்

கோ. 2: அதிகமாய்ப் பேசாதே; அறிவுகெட்டவனே! யார் நீ?

பொழி: (சிரித்து) யாரா? தமிழ்நாட்டின் குடிமக்கள் உழைப்பின் சின்னமாய், நீர்வளமும், நிலவளமும செறிந்து அழகு தவழும் இந்த அழுந்தூரின் குடிமக்கள் தலைவன்; மறத் தமிழர் கூட்டத்தில் ஒருவன். என் பெயர் பொழிலன்.

கோ. 2: பெயர் அழகாய்த்தான் இருக்கிறது!

கோ. 3: ஏன்? பேச்சுங்கூட அழகாய்த்தான் இருக்கிறது!

பொழி: நீங்கள் நடத்தும் வழக்குங்கூட அதைவிட அழகாகத் தான் இருக்கிறது!

கோ. 1: முட்டாள்! மூடடா வாயை! (ஓங்கி அறைதல்.)

பொழி: அழுந்தூரிலே காலடி படவும் தகுதியற்ற கசடர்களே! பொன்னனை நெஞ்சு படைத்த புனிதத் தமிழரை, புலவரை யுங்கூட மயக்கு மொழியால், மாயத்தால் நல்லவரென்று நம்பும்படி செய்துகொண்டு இந்நாட்டைச் சூறையாட வந்த நச்சுப் பாம்புகளே!

கோ. 2: அடுக்காதே, அறிவற்றவனே! நீ செய்தது குற்றம்!

பொழி: இல்லை; நீங்கள் செய்ததுதான்—செய்துகொண்டிருப்பதற்குத்தான் குற்றம் என்று பெயர். வள்ளுவர் சொற்படி குற்றங்கடிந்த தமிழர்கள் நாங்கள். எங்கள் ஊரில், எங்கள் நிலத்தில் தனி அரசாக வாழ்ந்து வந்தோமே. அது குற்றமா? வேங்கடத்துக்கு அப்பாலிருந்து வந்த—வெறி நாய் வடுகரோடு உறவுகொண்ட உங்களை நம்பியது குற்றமா? நம்பியதன் காரணத்தால் இப்போது ஆடவரும் பெண்டிரும், கூடி வெம்புகிறோமே இது குற்றமா? எது குற்றம்? நம்பிய வர் கூட்டத்தை, நற்றமிழர் தொகுதியை வஞ்சனைபுரிந்து வாள் வலியால் அடக்கியாளும் நீங்கள் புரிவது குற்றம்;

உரிமை உடையவனை ஒதுக்கிவிட்டுப் பெருமைக்குரியவர் போல நடிக்கிறீர்களே, இதுதான் தலையான குற்றம்!

**கோ. 3 :** அரசாங்க வயலில் மாடுகளை மேயவிட்டாய்; இது நீ செய்த பெருங் குற்றம்!

**பொழி :** அரசாங்க வயல்! (சிரிப்பு) வேங்கடத்துக்கு அப்பா லிருந்து மண்கொணர்ந்து நிலம் சமைத்து வெட்டிச் சேறாக்கி, விதை விதைத்து, நீர்பாய்ச்சி, வேலியமைத்தீர் களோ நீங்கள்! ஆம்; மாடுகளை மேயவிட்டேன். கருணை யால் மாடுகள் மேய்ச்சலுக்கென ஒதுக்கப்பட்ட இடத்தை அரசாங்கம் தன்னுரிமையாக்கிக் கொண்டமையை ஊர் அறிவதற்காக!

**கோ. 1 :** கண்களால் கண்டும் தெரிந்தே வேண்டுமென்றே மேய விட்டாய். அப்படித்தானே?

**பொழி :** ஆம்; அப்படித்தான்! உண்மையை மறைக்கும் உரங்கெட்ட பழக்கம் தமிழர்க்கு இல்லை என்பது உலகறிந்த உண்மை!

**கோ. 2 :** இந்த வாயாடிக்குத் தக்க தண்டனை இப்போதே விதிக்கவேண்டும்!

**கோ. 3 :** ஆம் நண்பரே! அளவுக்கு மீறிய நஞ்சு இவன் நரம்பு களிலே பாய்கிறது; உரிமை என்கிறான்; உலகம என்கிறான்.

**கோ: 1 :** (சிந்தித்து) ஆம்; அதுவே சரியான முடிவு! (வெளிப பட) இந்தப் பொல்லாத கண்கள்தாமே உன்னைக் காட்டிக் கொடுத்தன! படைவீரர்களே! நாளைச் சூரியன் உதயத்துக் குள் இக் குள்ள நரியின் கண்களைக் குத்திக் குருடாக்கி விடுங்கள்!

**பொழி :** என்ன!........தினையளவுக்குப் பனையளவா? கொடுமை! கொடுமை! கோசர் அநீதி! அநீதி!

**கோ. 2, 3 :** சரியான தண்டனை; சரியான தண்டனை! இனி உலகைக் காணவே முடியாத கபோதியாகித் திரியட்டும் இந்தக் கழுதை!

**பொழி :** அநீதி! அநீதி! ஆட்சியா இது? இல்லை, இல்லை; அறக் கடவுளே! எங்கே நீ சென்றாய்? எங்கே நீ சென்றாய்?

**கோ. 1 :** இழுத்துச் சென்று ஊர்ப் பொதுமன்றத்தில் கட்டிப் போடுங்கள்; தப்பிவிடப் போகிறான் தறுதலை! (இழுத்துப் போகின்றனர்)

மக்கள் மனத்தை மாற்றிவிடுவான் போல் இருக்கிறதே இந்த மடையன்! நாம் வெளியிலிருந்து வந்தவர்கள் வேடம் போடுகிறோம் என்பதைச் சுட்டிக் காட்டுகிறான்; உழைத்த கை இருக்க உங்களுக்கேது உரிமை என்கிறான்! பொருளற்ற வார்த்தைகளை உதிர்த்துவிட்ட குற்றத்தால் ஒளியிழக்கட்டும் அவன் கண்கள்! இரத்த அருவியிலே நீந்தட்டும் அவன் விழிகள். (மூவருங்கூடிச் சிரித்தல்)

## காட்சி 2

[திதியனும், அவன் காதலியும், பொழிலனின் மகளுமான அன்னிமிஞிலியும், அழுந்தூரை யடுத்த காட்டுவழியிலே அளவளாவுதல்.]

திதியன்: அன்னிமிஞிலி! உன்னை வேட்டைக்கு வந்த அன்றைக்கே என் நெஞ்சென்னும் சிறையில் காவல் செய்து விட்டேன். தெரியுமா?

அன்னிமிஞிலி: அரசே! ஓர் ஐயம் எனக்கு?

திதி: என்ன அன்பே?

அன்: வேட்டைக்கு என்றீர்களே என்ன வேட்டை?

திதி: மான் வேட்டை!

அன்: பொன் மானா?

திதி: தேடிவந்தது பொன் மான்தான்; நாடிவந்ததோ பெண் மான், அதுவும் அழுந்தூர்க் குடிமக்கள் தலைவர் பொழிலர் பெற்றெடுத்த பிணைமான்!

அன்: அரசே! தங்கள் வில்லாற்றலும், சொல்லாற்றலும் போட்டி போடுகின்றன!

திதி: எல்லாம் உன் விழியாற்றல்தான் அன்பே! நான்கூட வரும்போது வழக்கம்போல் வேல் எடுத்து வரவில்லை, தெரியுமா?

அன்: ஏன், மறந்துவிட்டீர்களா மன்னவா?

திதி: மறப்பதா? உன் கண்ணென்னும் விடம்பூசிய வேல் இரண்டு இருக்கும்போது என் கைவேலுக்கு வேலை?

அன்: வர வர நீங்கள் வசனத்திலும் கவிதை எழுதத் தொடங்கி விட்டீர்களோ?

திதி: வசன கவிதையல்ல, அன்பே! உன் கண் பாடும் கவிதையில் என் வாய்பாடும் வசனம் இது. (திதியனின் மார்பில் சாய்தல்.)

அன் : நம் காதலைப்பற்றி எண்ணினால் வெற்றி வெகு தூரத்தில் போய்க்கொண்டிருப்பது போல் எனக்கொரு கற்பனை உண்டாகிறது தலைவரே !

திதி : கவலைப்படவேண்டிய அவசியமே இல்லை அன்பே.

அன் : தாங்களோ குடிமக்களைக் கோலோச்சும் குறுநில மன்னர் ; நானோ குடியானவர் பெண் ! தங்கள் தகுதியை நோக்க....

திதி : நான் மிகவும் பெருமைப்படுகிறேன் மிஞ்லி ; உழவர் இல்லாமல் உலகாளும் அரசு எங்கே ? உழுவான் உலகுக்கு உயிர் அல்லவா ? மேழி பிடிக்கும் கையே மேதினியை ஆளுங் கை! பண்பின் அடிப்படையில் படர்ந்தெழுங் காதல், தகுதி என்ற பெருமரத்தைப் பார்ப்பதில்லை ; அது தமிழ்க் குடி என்ற கொடியையே தழுவிப் படரும் !

அன் : எனக்கென்னவோ கலக்கமாயிருக்கிறது, மன்னவா !

திதி : தெய்வக் குடியிலே பிறந்த தீந்தமிழ் முருகன், மலைவாணர் தலைமகளை வள்ளியை அள்ளி யணைத்தல்லவோ ஐந்திணை நெறி நடத்தினான் !

அன் : தங்கள் பேச்சில் நேரம் கடப்பதே நினைவில்லை ; வரட்டுமா நான் ? தந்தை வழிமேல் விழி வைத்திருப்பார் !

திதி : வருகிறேன் மிஞ்லி ! நாளை முழுமதியிரவு ; நினைவிருக்கட்டும் ! இதே இடம் ; வேங்கைமரத்தடி—வேழக்கரும்பின் சாரல், மஞ்சள் வெயிலுக்கு முன்பே வந்துவிடு !

(குதிரைமேல் இவர்ந்து சென்றதும், சென்ற திசையையே நோக்கி நிற்கும் மிஞ்லியின்பால் ஊர் ஆள் ஒருவன் மூச்சுவாங்க ஓடிவருகிறான்.)

வந்தவன் : அன்னி ! அன்னி ! கேட்டாயா செய்தி ? அரசாங்க நிலத்தில் மாடுகளை மேயவிட்டாராம் உன் தந்தை ; அந்தக் குற்றத்துக்காக அவரது கண்களைக் குருடாக்கப் போகிறார்களாம்.

அன் : (கலங்கி) என்ன ? என்ன சொல்கிறீர்கள் ? அண்ணா !

வந்த : நாங்கள் என்னசெய்வது தங்கச்சி ! கோசர்களின் ஆட்சி தான் கொடிகட்டிப் பறக்கிறதே. ஊர்ப் பொதுமன்றத்தில் கட்டிப்போட்டிருக்கிறார்கள். இன்று. நாளைக்காலை சூரிய உதயத்துக்குள் கட்டளை நிறைவேறி விடுமாம் !

அன் : ஆ !....அப்பா !,...அப்பா ! (அலறிப்புடைத்து ஓடுதல்.)

## காட்சி 3

[ஊர்ப் பொதுமன்றத்தில் மரத்தோடு கட்டிப் போடப்பட்டிருக்கும் பொழிலன் காலடியில் அன்னி; காவலர் இருவரும் சிறிது சேய்மையில் காவல்புரிந்து நிற்கின்றனர்]

காவ. 1 : (அங்கிருந்தபடியே) ஏ....பொண்ணு! இம். இம்.... சீக்கிரம் பேசி முடிச்சிட்டு....நடையைக்கட்டு. எங்க வேலைக்குக் கடையைக் கட்டிப்புடாதே, ஆமாம்!

அன் : இன்னும் சிறிதுநேரம் பொறுங்கள் ஐயா!

பொழி : அம்மா! கொடுமை மிக்க கோசர்கள் அழகு ஓவியமாகிய உன்னையும் என்ன செய்து விடுவார்களோ என்று அஞ்சுகிறேன் மகளே! தாயற்ற உன்னைத் தமிழ்ப் பண்பு கூட்டி வளர்த்தேன்! காலமென்னும் சிற்பி பருவமென்னும் கோல்கொண்டு உன்னை அழகு வண்ணங் கூட்டிப் புனையாத ஓவியமாக்கிய புதுமையைப் பார்த்துப் பார்த்துப் பாச உணர்ச்சியிலே பூரித்துப் போனேன், கண்ணே! ஆனால் இப்போது, இன்னும் சில நாழிகையில் அந்தப் பேற்றை இழந்துவிடவும் இருக்கிறேன்! ஐயோ!....அவர்கள் அரசு! அறம் இன்னதென்று அறியாத அரசு! பேயரசு!.... நாயரசு!....என்னருமைத் தாயரசைத் தவிர்க்கவந்த பூவரசு.

அன் : (தெளிந்து) அப்பா! அழவேண்டாம். தாங்கள் கண்களை இழக்கக்கூடாது! கண்களை இழக்கவும் விடமாட்டேன். என்னைக் கண்டு மகிழ்ந்து கனிவுமொழி பேசிய இந்தக் கண்கள் இருந்தே தீரவேண்டும்; கோசர்களின் ஆட்சி குலைந்தே தீரவேண்டும்! எனக்கொரு எண்ணம் தோன்றுகிறது அப்பா!

பொழி : (புன்னகையோடு) என்னம்மா?

அன் : அதுதான்....அவரை....அவரை....நான்....

பொழி : சொல்லம்மா! நெய்தல்நாட்டு அரசர் திதியர்—உன் காதலரைத் 'தானேம்'மா சொல்கிறாய்?

அன் : ஆம், அப்பா! இப்போதே போகிறேன்; நம் புரவி தமிழரசியைத் துணைக்கொண்டு இப்போதே புறப்படுகிறேன் நெய்தல் நாட்டுக்கு!........அவர் உதவி நிச்சயம் கிடைக்கும் அப்பா! (கண்களைத் துடைத்தபடி)

பொழி : உதவி கிடைக்கலாம் அம்மா, உதயவேளைக்கு முன் கிடைக்கவேண்டுமே அன்னி! அன்பே!....நீ தனியாகவா செல்லமுடியும்?

அன் : கவலைப்படவேண்டாம் அப்பா! நீங்கள் கற்றுத்தந்த வித் பயிற்சியைப் பயன்படுத்திக்கொள்கிறேன்; இனி இங்கே காலம்தாழ்த்தலும் தவறு. (ஓடுதல்.)

ஏவலன் 1 : (மற்றவனிடம்) பாவம்! தங்கச்சிலைபோலப் பெண் ணைப் பெற்றவன் போலிருக்கு! காலை வர்ரத்துக்குள்ளே கண்ணை இழக்கப்போறான்.

மற்றவன் 2. என்னப்பா! சின்னக் குற்றத்துக்கு இவ்வளவு பெரிய தண்டனையா கொடுப்பாங்க? கொஞ்சங்கூட நியாய அநியாயம் இல்லையா?

பிறி. 1 : எனக்குக்கூட முதல்லே நிச்சயமாத் தோணலை! விளை யாட்டுக்குச் சொன்னது ஆகவே நெனச்சுக்கிட்டேன்! பிறகு பார்த்தால் ஊரெல்லாம சந்திக்குச்சந்தி தண்டோரா போட்டப்புறம்தான் விசயம் தலைக்குமேலே போயிட்டு துண்ணு தெரிஞ்சுது!

மற். 2 : (பேசியவன் தலைக்குமேலே எம்பி, எம்பி பார்த்தல்.)

பிறி. 1 : என்னப்பா....பார்க்கிறே?

மற். 3 : என்னமோ தலைக்குமேலே போயிட்டுதுண்ணு சொன் னியே இப்போ?

பிறி. 1 : (சிரித்து) அடமுட்டாள்! சரி, சரி யாரோ வாரமாதிரி தெரியுது! நேரா நிமிர்ந்து நட....நட! (காவல் புரிதல்.)

## காட்சி 4

[நிதியனின் அரண்மனை முன்புறம் — ஓடிவந்த அன்னி ஆராய்சசி மணியை ஒலிக்கிறாள்.]

நிதி : (நிலா முற்றத்தில் உலவிக்கொண்டிருந்தவன்) என்ன, ஒலிக்காத ஆராய்சசி மணி ஒலிக்கிறதே! அநீதி என் பதையே அறியாத என் நாட்டில் அநீதியா? வியபபாயிருக் கிறதே! அழுந்தூரிலிருந்து நான் வருவதற்குள் ஏதாவது நிகழ்ந்திருக்குமோ? யார் அங்கே? (ஏவலர் ஓடிவரல்.)

ஏவ : அரசே! ஆராய்ச்சி மணியை ஒலித்துவிட்டு ஓர் இளம் பெண் அரண்மனை வாயிலில் காத்திருக்கிறாள்?

நிதி : இளம்பெண்....இந்நேரத்தில்....வரச்சொல்! இல்லை நானே வருகிறேன். (புறப்படுதல் — அதற்குள் அன்னிமிஞிலி ஓடிவரல்.)

அன் : அரசே!

நிதி : நீயா? (நிதியனின் காலில் வீழ்தல்.)

திதி: எழுந்திரு....இந்நேரத்தில் தனியாகவா வந்தாய்? எழுந் திரு! என்ன நடந்தது? ஏன் இவ்வளவு பரபரப்பு?

அன்: நடக்கக்கூடாதது, நடந்துவிடப் போகிறது, இன்று பொழுது புலரும் வேளையில்; அரசே! என் தந்தையின் கண்களைக் கொடிய கோசர்கள் குருடாக்கப் போகிறார்கள்! (முகத்தை மூடிக்கொண்டு விம்மல்)

திதி: என்ன! கொடுமை! கோசர்களின் நாசவேலை எல்லை மீறுகிறதே? இம்........அன்பே! ஏன் இப்படி? உன் தந்தை....பொழிலர்....

அன்: அரசாங்க விளைபுலத்தில் மாடுகளை மேயவிட்டது பெருங் குற்றமாம்! கண்களைக் குருடாக்கு மளவிற்குக் குற்றமாம்!

திதி: படைப்பலம் இப்போது அவர்களைக் குருடாக்கிவிட்டிருக் கிறது! கூடாது! வளரவிடக் கூடாது! குற்றமற்ற தமிழ் மகனின் கண்கள் குருடாக்கபபடக்கூடாது!

அன்: கருணைகூர்ந்து கோசரை ஒடுக்கித் தந்தையை மீட்கும் பொறுப்புத் தங்களுடையது தலைவா!

திதி: சொல்லவேண்டுமா! அன்பே! கலங்காதே! நெய்தல் நாடு நீதியை நிலைநிறுத்தும் நாடு! எங்கெங்கே அறம் மறுக்கப்படுகிறதோ அங்கே யெல்லாம் படையெடுக்கும் இந்தத் திதியனின் ஆட்சி. (மணியை ஒலிக்கிறான்—ஏவலர் வரல்.)

படைத்தலைவருக்கு அவசர அழைப்பு விடு! படைகளை அழைக்கும் கோட்டை உச்சிக்கொம்பு ஊதப்படட்டும்! அவசர அழைப்புச் சங்கு நான்கு கோட்டை வாயில்களிலும் முழங் கட்டும்! வரவர அதிகார வெறியும், ஆணவமும் தலைக்கேறிக் கிடக்கும் கோசர் அழுந்தூர் நோக்கி உதயத்துக்குள் செல்ல வேண்டும் நம் படை! (ஏவலர் ஓடுதல்—கொமபு—சங்கு ஒலித்தல்—முரசு முழங்குதல.)

திதி: அன்பே! கோசர்மேற் படையெடுத்துக் கொட்டத்தை யடக்கத் திட்டமிட்டிருந்தேன் பல நாளாய்! அது இன்று என் காதலியின் கட்டளையால் நிறைவேறுகிறது! உண்மை தவறாத ஓர் உயிரைக் காப்பாற்ற உயிரையும் பணயம் வைத்துப் போராடும் நம்படை! (படைத்தலைவர் வருகை.)

படைத்தலைவரே! அழுந்தூர் நோக்கி நம் ஆபத்துதவிப் படை அணிவகுக்கட்டும்! நானும் இதோ புறபபடுகிறேன்; வா மினிலி. (செல்லல்.)

(தொடரும்)

# அட கடவுளே![1]

[திரு. கு. பரமசிவன், எம். ஏ.]

(க) அடகடவு ளே!ஊழி நெருப்பும் நீரும்
அப்போதைக் கிப்போதே அனுப்பி டாயோ?
சுடர்விழியின் இமையெடுத்துச் சற்றே உன்றன்
தொழில்விளைவாம் படைப்பினுள்ள சொத்தை தம்மைக்,
கொடுமக்கள் ஒருவர்மேல் ஒருவர் பாய்ந்து
குரல்வளையை நெரித்திடலைக், குருதி வெள்ளம்
படர்ந்துநிலம் கறைப்படுத்தும் பான்மை தன்னைப்
பார்த்திட்டால் ஆகாதோ? பார்வைக் கேடோ?

(உ) எங்கும்நிறை கடவுளே!நீ படைத்துக் காக்கும்
இடமகன்ற இந்தநில வுலகந் தன்னில்
தங்குதற்கோர் இடமின்றி, உடையும் இன்றித்,
தணற்பசியைத் தணித்திடவோர் வழியும் இன்றி
இங்கொருபால் பலமக்கள் ஏங்கி ஏங்கி
இருவிழியும் குருதிநீர் வடித்தல் காணாய்!
பங்கமுறும் நின்படைப்புக் கண்ட பின்னும்
பதறிநீ நாணவில்லை? மானக் கேடு!

(௩) மாய்கின்ற பொருளூடே மாயா ஒன்றை,
வையமெல்லாம் முறைவழியே ஆட்டு விக்கும்
ஒப்பில்லாப் பேராற்றல் ஒன்று தன்னை
உற்றறியும் அறிவுவிழி பெற்றார் மூவர்:
ஆப்புகழ்சேர் மெய்யறிஞர், புலவர், மற்றும்
அரசியலை நன்கறிந்தோர் தாமும் இந்நாள்
தீயவற்றைத் "தீயவல்ல: நன்மை தன்னைச்
செய்தற்கு வழி"யென்று செப்பு கின்றார்.

(௪) பெரும்புலவன் அல்லேன்நான்; அறிஞன் அல்லேன்;
பெரிதான அரசியல்நூல் கற்றேன் அல்லேன்;
இரும்புவியை உள்ளதுள்ள படியே கண்டேன்;
இறைவா!நின் பொருட்டாக இரங்கு கின்றேன்;
அருமையிலா நின்படைப்பும், ஆதி தொட்டே
அவற்றில்நீ தலையிடாத கொள்கை தானும்,
ஒருநலனும் புரிதற்குத் திறமை யில்லா
உன்நிலையும் கண்டேநான் இரங்கு கின்றேன்.

1. __து 'கேரவான்' என்னும் இதழில் திரு. சிநேகலதா சாட்டர்ஜி என்பார் "oh God" என்ற தலைப்பில் எழுதிய ஆங்கிலக் கவிதையின் தமிழாக்கமாகும். ("oh God": CARAVAN: July, 1958.)

# பேராசிரியர் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியாரவர்கட்குப் பாராட்டு

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் பண்டித, வித்துவான், முத்தமிழ் வித்தகர் திரு. லெ. ப. கரு. இராமநாதஞ் செட்டியாரவர்கள் கனடாவில் நடைபெற்ற குடியேற்ற நாட்டுப் பல்கலைக் கழகங்களின் மாநாட்டுக்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் சார்பாய்ச் சென்று தமிழ்ப் பணியாற்றி வந்தமை குறித்து மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சங்கத்தார் ஒரு பாராட்டுக் கூட்டம் 14-12-58 மாலை 4மணியளவில் நடத்தினார்கள். அக் கூட்டத்திற்கு மீனாட்சி மில்ஸ் திரு. தி. சுந்தரம் செட்டியாரவர்கள் தலைமையேற்றார்கள். சன்மார்க்க சங்கத்தின் துணைத் தலைவர் திரு பழ. சிதம்பரம் செட்டியாரவர்கள் அனைவரையும் வரவேற்றுப் பேசுகையில் பேராசிரியர் ஒரு சிறந்த அறிவாளி யென்றும், இச் சங்கத்தினிடத்துப் பேரன்பும் தொடர்புமுடையரெனக் கூறிப் பின் பேராசிரியர்க்குச் சங்கச் சார்பாய் ஒரு பாராட்டு இதழ் படித்தளித்தார்கள்.

கூட்டத்தின் தலைவர் தமது முன்னுரையில் பேராசிரியரைப் பாராட்டும் முறையில் முன் காலத்தில் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் இமயமலைமீது தனது விற்கொடியைப் பொறித்து வந்தான் என்றும், இப்பொழுது நம் பேராசிரியர் கடல்கடந்து கனடா சென்று வெற்றிக் கொடி நாட்டி வந்துள்ளார் என்றும், அவர்தம் அரிய செயலால் தமிழ்நாடு பெருமை யடையும் எனறும் கூறினார்,

காரைக்குடி அழகப்பா கல்லூரி தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் வ. சுப. மாணிக்கனார் பேராசிரியர் தம் ஆசிரியர் என்றும், அவரைக் கனடாவிற்கு அனுப்பத் தீர்மானித்த அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாரைப் பாராட்டவேண்டுமென்றும், அறிவிற்கு முதலிடம் கொடுப்பது நம் தமிழ்நாட்டின் பண்பாடென்றும், பேராசிரியர் பெரும் அறிவுத் திருவுடையரென்றும் பேசினார்கள். பின்னர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ் சிறப்புப் பேராசிரியர் (Reader) வித்துவான் திரு. மு. அருணாசலம் பிள்ளையவர்கள் இச் சன்மார்க்க சங்கம் பல்லாயிரக் கணக்கான அறிஞரைத் தோற்றுவித்துள்ளதென்றும், தமிழ் பயிலுதற்கெனத் தோன்றிய நிலையங்களுள் இது தான் முதலில் தோன்றியதென்றும், இதன், நடைமுறைதான் பேராசிரியரின் தந்தையாரைத் தம் ஒரே மகனை இவ்வகையில் பயில்விக்கத் தூண்டியதென்றும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார் தமிழ்ப்பேராசிரியரை இம் மாநாட்டிற்கு அனுப்பியது தமிழுக்குச் செய்த பெருமையென்றும், இப் பேராசிரியர்

உழைப்பினால் உயர்ந்தவரென்றும், மனத்திட்பம், வினைத் திட்பம் உடையவரென்றும், செட்டிநாட்டு அரசர்க்கு அமைச்சர் போன்றுள்ளவரென்றும் மிக விரிவாகப் பேசினார்கள்.

பின்னர் வேகுபட்டி திரு ஆ. வ இராமநாதச் செட்டியாரவர்கள் எம். ஏ பேராசிரியரைப் பாராட்டிப பேசினார். பின்னர் மகிபாலன்பட்டி திரு. சி. இராம. இராமசாமிச் செட்டியாரவர்கள் பேராசிரியரைப் பாராட்டியும், பொருள் வருவாயின்றி முட்டுப் படும் இச் சன்மார்க்க சங்கத்திற்குத் திருவுடையார் பலரும் இதன் ஆக்கத்திற்கு உதவ வேண்டுமென்றும் தாம் ஓராயிர ரூபா நன்கொடையளிப்பதாகவும் கூறினார்கள். இதனைச் சங்கத்தார் பெரிதும் பாராட்டினார்கள்.

ஆ. தெற்கூர் விசாலாட்சி உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் திரு வித்துவான் ஆர். இராமானுசனார் பண்டு நக்கீரர்போலப் பேராசிரியர் அஞ்சாமைப் பண்பு நிறைந்தவர் என்றும் தமிழால் உயர்ந்தவரென்றும பேசினார்கள்.

மதுரைத் தியாகராசர் கல்லூரிப் பேராசிரியர் சைவ சித்தாந்த கலாநிதி திரு ஔவை சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் தமிழுக்கு நல்ல காலம் வந்துள்ளதென்றும் இதனைத் தமிழர் பயன்படுத்திக் கொள்ளவேண்டு மென்றும் பேராசிரியர் அரும் பெரும் செயல் செய்துள்ளவரென்றும், கூறினார்கள்.

மதுரைத் தியாகராசர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் திரு. மெ. சுந்தரம் அவர்கள் தமிழ் கடல்கடந்து சிறப்படைந் துள்ளது என்றும், பேராசிரியர் ஆட்சித் திறமையுடையவ ரென்றும் கூறினார்கள்.

பின்னர்ப் பேராசிரியர் தமக்குப் பாராட்டு வழங்கியதற்கு நன்றிகூறும் முகத்தால் தம்மைத் தமிழ் பயிலத் தூண்டியது இச் சன்மார்க்க சங்கமே யென்றும், தம் உயர்வுக்குத் துணை செய்தவர்கள் பண்டிதமணியவர்களும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாரும் என்றும், அவர்கள்பால் தாம் நன்றியறிதலுடையவ ரென்றும் கூறிப் பின்னர்த் தம் மேல்நாட்டு அனுபவங்களைப் பற்றி அழகாகப் பேசினார்கள்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு நாராயணசாமிப் பிள்ளையவர்கள், பேராசிரியர் திரு. தி. பொ மீனாட்சி சுந்தரனார், கரந்தைத் தமிழ்ச் சங்கத்துச் செயலாளர் திரு. சி. வேதாசலம் அவர்கள் முதலிய பல்லோர் அனுப்பியிருந்த வாழ்த்துக் கடிதங்கள், தந்திகள் படிக்கப்பெற்றன. நன்றியும் தமிழ்வாழ்த்தும் நவிலக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

# செய்திகளும் குறிப்புக்களும்

(க) பிற மொழிகளில் தமிழ் நூல்கள்

திருக்குறள், கம்பராமாயணம், பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, சிலப்பதிகாரம், தேவாரம், திவ்யப் பிரபந்தம் பெரிய புராணம், வில்லி பாரதம், திருவிளையாடற் புராணம், அரிச்சந்திர புராணம், மனோன் மணீயம், பாரதியார் பாடல்கள், பார்த்திபன் கனவு, என் சரிதம் ஆகிய தமிழ் நூல்களைப் பிற இந்திய மொழிகளில் மொழி பெயர்க்கலாம் என்று 'சாகித்திய கழக'த்தின் தமிழ் ஆய்வுக் குழு பரிந்துரை கூறி யுள்ளது. இச் செய்தியைக் கடந்த 5-12-58 இல் மக்கள் மன்றத்தில் இந்திய அறிவியல் ஆராய்ச்சி, பண்பாட்டுத் துறைத் துணை அமைச்சர் டாக்டர். எம். எம். தாசு அவர்கள் தெரிவித்தார்கள்.

குறிப்பு : தமிழ் நூல்களின் அருமை பெருமைகளை உணர்ந்து, அவற்றைப் பிற இந்திய மொழிகளில் மொழிபெயர்க்க முயலும் சாகித்திய கழகத்தாரின் முயற்சி வெற்றி பெற்று இவ்விந்திய நாடெங்கும் தமிழ் முழக்கம் கேட்கும் நன்னாளை எதிர்பார்க்கிறோம்.

(உ) 'ஆகாசவாணி' 'வானொலி' ஆகவேண்டும்

22-12 58 ஆம் நாள் பகல் முதல் திருச்சி வானொலி நிலையத்திற்கு முன்பு திரு. இரா. இளவழகன் என்னும் இளைஞர் உண்ணா நோன்பு இருந்து வருகிறார்.

'ஆகாசவாணி' என்னும் இந்திச்சொல்லை வானொலியில் கூறக் கூடாது என்றும், 'வானொலி' என்றே கூறவேண்டும் என்று வேண்டி யும் அவர் உண்ணா நோன்பை மேற்கொண்டுள்ளார்.

குறிப்பு: தமிழ் மக்களுக்காகத் தமிழ் நாட்டில் இயங்கும் வானொலி நிலையங்களில் 'ஆகாசவாணி' என்று வடமொழியை அல்லும் பகலும் வழங்குவது தமிழரின் தன்மானத்துக்கு ஒர் அறைகூவலென்றே சொல்ல வேண்டும். தமிழன் தன் மொழி, நாடு, பண்பு ஆகியவற்றைக் காக்க விழைவது உண்மையானால் இந்த 'ஆகாசவாணி' விரைவில் 'வானொலி' ஆக மாறியே தீரவேண்டும். எனவே, திரு. இளவழகன் அவர்களின் உண்ணா நோன்பு வெற்றிபெற விழைகிறோம். தமிழ் மக்க ளனைவரும் 'ஆகாசவாணி'யை அகற்றி 'வானொலி'யை வாழச் செய்ய அறவழியில் ஆவன செய்வார்களாக.

(ங) தமிழை ஆட்சி மொழியாக்கும் முயற்சி

தமிழை மேலும் பரந்த அளவில் ஆட்சி மொழியாக்க அரசியலார் திட்டம் வகுத்து வருகின்றனர். இதற்கெனச் சனவரி 5-ஆம் நாள்முதல் 200 தமிழ் தட்டெழுத்தாளர் (Typists) தட்டுப்பயிற்சி அளிக்கப்பட்டு வருகின்றனர். இத் திட்டப்படி இனி மாவட்ட அரசியல் அதிகாரி கட்கும் பொதுமக்களுக்கு மிடையே கடிதப் போக்குவரத்துக்கள் தமிழிலேயே நடைபெறும். இது செயல்முறைக்கு வருமுன் இது பற்றிய அறிவிப்புத் தரப்படும். மாவட்ட அலுவலகங்கட்கு வழங்க 500 தட்டெழுத்துப் பொறிகள் வாங்கப்படும்.

**குறிப்பு :** தமிழை ஆட்சி மொழியாக்க அரசியலார் மேற்கொண்டுள்ள முயற்சிகள் பாராட்டத் தக்கவையே. எனினும், இன்றியமையா இப்பணியை இன்னும் சற்று விரைந்தும், பரந்த அளவிலும் செய்ய முயல்வதே சால்புடைத்தாகும்.

(ச) இந்தி மொழிக்கு ஏற்றம் இல்லை

"இந்தியைவிட வளம் பொருந்திய பலஇந்திய மொழிகள் உள்ளன தேசிய மொழி என்ற அளவில தான் அதற்கு முதன்மையே அன்றி வேறில்லை. மற்ற மொழிகளைவிட இந்தி மொழிதான் உயர்ந்தது என்ற எண்ணத்திற்கு இடங்கொடுத்துவிடக் கூடாது" என்று இந்திய செய்தி ஒலிபரப்புத்துறை அமைசசா டாக்டர் பி. வி கேசுகர், அண்மையில் ஆக்ராவில் நடைபெற்ற இந்திப்புத்தக வெளியீட்டாளர் மாநாட்டில் பேசிய காலை குறிப்பிட்டார்.

**குறிப்பு :** சரியான இடத்தில் தேவையான கருத்தை வெளியிட்ட அமைசசரவர்களைப் பாராட்டுகிறோம். இதுபோன்ற கருத்துக்கள் வட நாட்டில் நடமாடுதற்குக காரணம் தென்னாட்டு மொழிப் போராட்டமே எனல் மிகையாகாது.

(ரு) அனைத்திந்திய ஆங்கில ஆசிரியர் மாநாடு

கடந்த 29-12-58 இல், சென்னை பல்கலைக் கழக ஆட்சி மன்றத்தில் அனைத்திநதிய ஆஙகில ஆசிரியர் 9-வது மாநாடு நடைபெற்றது. மாநாட்டிற்கு மக்கள மன்ற உறுப்பினர் திரு. திவான்சந் சாமா எம். பி தலைமை தாங்கினர். சென்னை ஆளுநர் திரு. விட்ணுராம் மேதி மாநாட்டைத் துவக்கி வைத்தார். சென்னைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் ஏ. லட்சுமணசாமி முதலியாரவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். இந்தியக் குடியரசின் துணைத்தலைவர், பல மாநிலஙகளின் ஆளுநாகள, பல பல்கலைக கழகத் துணைவேந்தர்கள் ஆகியோரிடமிருந்தும், திரு காமராசர், டாக்டர் சி. பி. இராமசாமி ஐயர், சி. இராசகோபாலாசசாரியார் ஆகியோரிடமிருந்தும் வாழ்த்துச செய்திகள் வந்திருநதன. அனைவருமே ஆங்கிலத்தின் இன்றியமையாமையை வலியுறுததி நீண்ட சொற்பொழிவாற்றினா. அம மாநாட்டில் பேசியோரின் கருத்துச சுருக்கம் வருமாறு :

"கல்வித்துறைகளில் எல்லாவற்றிலும் ஆங்கிலம் பயன்படுத்தப் படல்வேண்டும். அறிவியல், கலை நுணுக்கம், பணித்துறை ஆகியவற்றில் ஆங்கிலத்தின் துணை மிக இன்றியமையாதது."

—ஆளுநர் திரு. விட்ணுராம் மேதி

"ஆங்கிலம் இரண்டாவது மொழியாக இடம்பெறல் வேண்டும். அதன் பயன் கருதி எதிர்காலத்திலும் அது தொடர்ந்து பயிலப்படல் வேண்டும்."

—பேராசிரியா திவான் சந் சர்மா

"நாட்டுப்பற்றுக் காரணமாக அவசரப்பட்டு மொழியில் மாற்றம் செய்வது தவறு. கலைகள் பலவற்றையும் பயில ஆங்கிலம் இன்றியமையாதது. அறிவைப்பெறவும், அதனைப் பயன்படுத்தவும் ஆங்கிலத்தின் துணை மிகமிகத் தேவைப்படுவதாகும்."

டாக்டர் ஏ. லட்சுமணசாமி முதலியார்

---

# மதிப்புரை

**அறநூல் (உரையுடன்)**

[ஆசிரியர் சுகவனம், சிவப்பிரகாசனார் அவர்கள். வெளியீடு. பாரி நிலையம், 59. பிராடுவே, சென்னை-1. விலை ரூபா. 3-50. பரிசுப் பதிப்பு ரூபா. 4-00 ]

திருக்குறட் சிறப்பினை, எல்லாவுலகினரும் நன்குணர்வர். பன் மொழியாளரும் நன்மையுறும் பொருட்டுத் தத்தம் மொழிகளில் பயின்று பயன்பெற்று வருகின்றனர். அந்நூல் மும்மை வாழ்க்கை யினையும் செம்மையுற விதிக்கும் மெய்ம்மை இலக்கணமாய், அங்ஙனம வாழ்ந்து வனப்பெய்துவார் நிலைமை கூறும் வரலாற்று இலக்கியமாய்த் திகழ்கின் றது. அந்நூலின் ஒப்பிலா மாட்சியினை உணர்ந்தே நம் முன்னோர் பதின்மர் அதற்குச் சிறந்த உரையியற்றியுள்ளனர்.

அத் திருக்குறள் நூலினை எல்லாரும் எளிதாகவும் இனிதாகவும் உணருமாறு நூன் முழுவதற்கும் அமையும் பாயிரம் போன்று ஒவ்வொரு திருக்குறளுக்கும் ஒவ்வொரு தனிப் பாயிரமாக இந்நூல் அமைந்துள் ளது. இதன் அமைப்பு வியந்தொறும் வியத்தொறும் வியப்பிறந்து சொல்லொணு வீறுடன் விளங்கும் இயல்பிற்று. இதனைக் கற்பார் இரு பெரும் பயனை ஒருங்கு எய்துவர். ஒன்று இதற்கு முதனூலாகிய திருக்குறளை ஆராக் காதலுடன் தேடிக் கற்பது. மற்றொன்று செய்யின் உறுசுவையாக எய்திய இதனை மறவாதொழுகுவது.

இந்நூற்கு இரு பெரும் புலவர் பெருமக்கள் தக்க விளக்கவுரை யாத்துள்ளார்கள். அவர்களுள் ஒருவர் மோகனூர் திரு. கி. வா. சகன்னாதன் அவர்கள். மற்றொருவர் நூலாசிரியரின் மகனார் திரு. மாசிலாமணியாரவர்கள். உரைகளும் பன்னூல் மேற்கோள்களுடன் சிறந்ததாக விளங்குகின்றன. மேலும் ஒரு சிறப்பு, நூலாசிரியர் காலத்தே உரையும் சேர்ந்து வருவதால் கருத்து வேறுபாடு புகுந்ததெனக் கூறு தற்கு இடமின்மை. நூலுக்குத் தமிழ்ப் பெரியார் திரு வி. க. முதலிய பல அறிவுச் சான்ற பெருமக்களின் அணிந்துரைகள் அணியாக நிற்கின் றன. திருத்தமும் அழகும் அமைந்த நல்ல பதிப்பு. இளைஞர்கள் நெட்டுருப் பண்ணி உளத்துக் கிளைமை செய் குட்டிக்குறள் இது என் பது மிகையாகாது. இதனைச் செந்தமிழ் அன்பர்களும் ஆசிரிய மாண வர்களும், நூலகப் படிப்பக முதன்மையர்களும் வாங்கியும் வாங்குவித் தும் பயன் பெறுவார்களாக. இதனை வாங்கி ஊக்குவிப்பதால் ஏனைய முடிவு பெற்றுள்ள பொருட்பகுதியும் இன்பப் பகுதியும் விரைவில் வெளிவந்து விளங்குமாறு புரிந்த தமிழ்த் தொண்டின் தனிப்பயன் உண்டாகும்.

“ புனையா ஓவியம் ” (நெடுநல் வாடை விளக்கம்)

[ஆசிரியர் வித்துவான் சே வேங்கடராமச் செட்டியார், தமிழாராய்ச்சி விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம். விலை ரூபா. 2-40 விற்பனை உரிமை “பாரி நிலையம்” 56, பிராட்வே சென்னை-1.]

ஆசிரியர் நூலின் சிறந்த பகுதியினைத் தம் நுண்மாண் நுழைபுலத்தால் துருவி ஆய்ந்து நூலுக்குப் பெயர் அமைத்துள்ளனர். அப்பெயரானே “நெடுநல வாடை” என்பது அகத்திணைப் பகுதியாம் என்பது நினைவுக்கு வரவும் வாய்ப்பளித்துள்ளார்கள். ஆராய்ச்சியாளர் கருத்துக்கு நல்ல வாய்ப்பளிப்பதே நன்முறையாகும். ஆராய்ச்சியாளர் பெரும்பாலும் வழக்கறிஞரை ஒப்பர். அதனாலேயே ஒரு நூலுக்குப் பலருடைய ஆராய்ச்சியும், பலருடைய உரையும் அந்நாள் தொட்டு வெளிவந்துகொண்டிருக்கின்றன கருத்து வேற்றுமையால் காய்வு கொள்ளுதலாகாது. விலை வரம்பில்லா மணியைப் பலரும் பல குறிப்புடன் விலை மதிப்பர். அது போன்றே நூலுமாகும்.

ஆசிரியர் இந்நூலுள் தோற்றுவாய் முதல் ‘நெடுநல் வாடை மூலம்’ ஈறாகப் பன்னிரண்டு தலைப்புக்களமைத்து நன்காய்ந்துள்ளார்கள். தக்க அகப்புறச் சான்றுகளும் மேற்கோள்களும் பொருத்தமுறக் காட்டியுள்ளார்கள். “நோக்கு” என்னும் செய்யுளுறுப்பிற்கு நெடுநல் வாடையினைப் பொருளாக எடுத்து விளக்கிக் காட்டுந் திறன் மிக்க வியப்புடையதாகும். அஃது ஏனை ஆய்வாளர்கட்கு வழிகாட்டியுமாகும். இதுபோன்றே ஒவ்வோர் ஆய்வும் சிறப்புடையனவே. நூல்நடையும் பொருட்செறிவும் திட்பநுட்பமும் தமிழ் நயமும் செறிந்து நூல் வனப்புறுகின்றது. இந்நூலுக்கு டாக்டர். மு. வரதராசனாரவர்கள் நீண்டதோர் அறிமுகவுரை வழங்கியுள்ளனர்.

கற்பாரும், கற்பிப்பாரும், ஆய்வாரும், பெரு மக்களும் இதனை வாங்கியும் வாங்குவித்தும் ஆசிரியரை இத் துறையில் மேன்மேலும் ஊக்குவார்களாக.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.

## தமிழ்வளர்ச்சிக் கழகப் பரிசுபெற்ற நூலாசிரியர்கள்

## 1959



திரு. மயிலை சீனிவேங்கடசாமி



திரு. அழ. வள்ளியப்பா



திருவாட்டி, 'அருந்ததி'




சிலம்பு ௩௩ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯0, தை பிப்ரவரி, 1959 | பரல் ௪

# சென்னை அரசாங்கத் தமிழ்வளர்ச்சி, ஆராய்ச்சிக் குழு

இக் குழுவின் துவக்க விழாப் பற்றிய செய்தி மற்றொரு பக்கத்தில் குறிப்பிடப்பட்டிருப்பது காண்க. ஈண்டுச் சில குறிப்புக்களை நினைவூட்ட விழைகின்றோம். ஆட்சி முறையும் கல்லூரிப் படிப்பு முறையும் தொன்மை நன்மைத் தமிழிலேயே நிகழ வேண்டுவன அனைத்தும் விரும்பி மேற்கொண்டு ஆட்சியினர் அருமுயற்சியுடன் செய்துவரும் பணி பாராட்டற்குரியது

இக் குழுவில் தமிழ் நாட்டமுள்ள அறிஞர்கள், கழகங்கள் பல இயைந்துள்ளன. இன்றியமையாது உடனடியாகப் புரிய வேண்டிய தொண்டுகள் கல்வெட்டுப் படியெடுத்தவற்றுள் இது வரை அச்சாகி வெளிவந்துள்ளவை போக எஞ்சியவற்றை விரைவில் அச்சாகி வெளிவரச் செய்தல், படியெடுக்க வேண்டிய கல்வெட்டுக்களை உடனடியாகப் படியெடுத்தல், திருக்கோவில் திருவுருவங்களை நிழலுருவெடுத்து அவ்வுருவங்கட்குரிய விளக்கங்களுடன் வெளியிடுதல், தமிழ்மொழியின் கிளைமொழிகளாகிய கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளுவம் முதலியவற்றில் தமிழ்நாட்டில் வழக்கு வீழ்ந்துள்ளவும் அந்த வழக்கத்தில் இருப்பனவுமாகிய தூய பழந்தமிழ்ச் சொற்களை ஆய்ந்து தொகுத்துப் பொருள் விளக்கத்துடன் வெளியிடுதல், மேற்குறித்த மொழிகள் வழங்கும் நாட்டில் தமிழையும் தமிழ் நாட்டையும் பற்றிய கல்வெட்டுக்களைப் படியெடுத்து வெளியிடுதல், பழம்பெரும் புலவர் வரலாறுகளையும், இப்பொழுதுள்ள புலவர்களையும் திரட்டி நிழலுருவங்களுடன் வெளியிடுதல், அப்

புலவர்களால் தொகுக்கப் பெற்றும், யாக்கப்பெற்றும் வெளி வராத நூல்களை வாங்கி வெளிப்படுத்தல், சங்கம் மருவிய பழம் பெரும நூல்கள் சில அச்சிடுத் திரும்ப அச்சிடப்படாதிருப் பனவற்றை அச்சிட்டு வெளிப்படுத்தல், பிற்காலத்துப் புலவர் களால் யாக்கபெற்று வெளிவராத அரிய நூல்களை வெளியிடு தல், அறிவியல் துறை முதலிய பல துறை நூல்களை செம்மையுற மொழிபெயர்த்து வெளிப்படுத்தல், குறைநத அளவில் விலை யாகும் இலக்கண இலக்கிய நூல்களை மலிந்த விலையில் மிகுந்த அளவில் வெளிவர வேண்டும் உதவிபுரிதல் முதலியன.

"தென்னிநதிய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக"மாகிய இக் கழகததார் ஊதியத்திற் செமபாதியைத் தமிழ்வளர்ச்சியின் பொருட்டே "தென்னிநதிய தமிழ்ச்சங்கம்," "தென்னிந்திய சிததாந்த சங்கம்" எனப் பெயரிய இருபெரு அறநிலையங்களைத் தோற்றுவிததது அவற்றின் வாயிலாகத் துவக்கமுதல் தமிழ் வளாசசியையும், சித்தாநத நெறியினையும் பல்லாற்றானும் ஓம்பி வருகிறது எத்துணையோ பல பழந்தமிழ் நூலகள இறந்து போம தறுவாயில் உள்ளனவற்றை இறவாமற் காத்துவரு கின்றது. அதுபோல் பல நூற்றுக்கணக்கான புலவர்களின் நிழலுருவஙகள், வரலாறுகள முதலியவறறைத் தொகுத்து வெளியிட்டு வருகின்றது பல அரிய பழந்தமிழ் நூலகளை உலகப் பெருமொழியாம் ஆங்கிலததில் மொழிபெயர்த்தும், ஆஙகிலப் பெருநூலகளைத தமிழின்கண் மொழிபெயர்ததும் வெளியிட்டு வருகின்றது தலைமையிடமாகிய திருநெல்வேலி யின்கண் "சிவஞான முனிவரனா" திருப்பெயரால் சிறந்ததொரு நூல் நிலையமும, படிப்பகமும, புலவர் வகுப்புக்களும, தேர்வு களும நடத்தி வருகின்றது அதுபோல் சென்னைக் கோநகர்க் கண்ணும் "மறைமலையடிகள்" திருப்பெயரான் ஓர் அரிய நூல் நிலையமும் நடத்திவருகின்றது. ஏனைய வெளியீட்டு நிலையங்கள் போன்று ஊதியக குறிக்கோளாக வெறும வெளியீடு மட்டும் செய்துவருவதன்று இக கழகம். மேலும் தமிழ் வளர்சசியின் பொருட்டு யார் யார் உண்மைப் பணிபுரிகின்றார்களோ அவர் களோடெல்லாம் ஒத்துழைதது உற்றிடத்து வேண்டும் உதவி களும் புரிநதுவருகின்றது.

சென்னை ஆட்சியினர் மேற்கொண்டுள்ள இவ்வரிய தமிழ் வளர்சசித தொணடு செந்தமிழ்த் தெய்வததின் திருவருளால் மேன்மேலுமசிறந்து வளர்ந்து நாட்டுக்கும் மொழிக்கும நலம் பயக்குமாக. தமிழ் வாழ்க! தமிழகம வாழ்க! ஆட்சித்துறை வாழ்க! அன்பருள் வாழ்க.

---



மணிவிழாச் செல்வர்

வித்துவான், சித்தாந்தமாமணி,

சிவத்திரு, வே. மாணிக்கவாசகம் பிள்ளையவர்களும்

அவர்தம் இல்வாழ்க்கைத் துணைவியர்

திருவாட்டி, சுப்புலட்சுமி அம்மையாரும்

மணிவிழாச் செல்வர், வித்துவான், சித்தாந்தமாமணி

## சிவத்திரு. வே. மாணிக்கவாசகம் பிள்ளையவர்கள்

# வாழ்க்கை வரலாறு

திக்கெலாம் புகழுறும் திருநெல்வேலிப் பெருநகரில் தெற்குப் புதுத்தெரு மிகக பழம் பெருமையுடையது. தமிழ்ப் பெரும புலவர்களாகிய நெல்லையப்பன் கவிராயர், மயிலேறும் பெருமாள் பிள்ளை, பால்வண்ண முதலியார் போன்றவர்கள் வாழ்ந்த தமிழ்ப் பெருந்தெரு அது அத் தெருவில் வாழ்ந்து வநத சைவ வேளாளர் குலத்தினராகிய வேலாயுதம் பிள்ளை என்னும் சீலமுடையார்க்கும் ஆவுடையம்மை என்னும் அம்மையாருக்கும அருநதவப் புதல்வராய்ப் பிறந்தவர்களே திரு நெலவேலிச் சைவத் தமிழ்ப் புலவராகிய சிவத்திருவாளர் வே மாணிக்கவாசகம் பிள்ளையவர்கள்.

இவர்கள் கொல்லம், ௧0எச ஆம் ஆண்டு தைத்திங்கள் பரணி நாளில (1899 சனவரி) பிறந்தனர். 'பரணி தரணி ஆளும்' என்பது ஒரு பழமொழி. இதற்கு இணங்கப் பிள்ளையவாகள் என்றும் பெருஞ் செல்வராகவே வாழ்நது வருதல் ஒரு பெருஞ் சிறப் பாகும. இவர்கள் பத்தாண்டுப் பருவம்வரை திண்ணைப் பள்ளியில் தமிழ்க கல்வி பயின்றனர். அதன் பின்னர்த் திரு நெல்வேலியில் அந்நாளில் விளங்கிய சி. எம். கல்லூரியில் சோந்து ஆஙகிலக் கல்வி பயின்றனர்.

அக் கல்லூரியில் பிள்ளையவர்கள் எப். ஏ. வகுப்புவரை பயின்று தேர்நதனர். இவர்கட்கு இருபத்து மூன்றும் ஆண்டில் காவேரி என்னும் கற்பரசியைப பெற்றோர் கடிமணம் செய்து வைததனர். பிளளையவர்கள் அவ் அமமையாருடன் பதின் மூன்று ஆண்டுகள் செமமையான இல்லறததைச் சிறப்புற நடாத் தினர் இவர்கள் மனையறததின் பயனாகக் காவேரியமமையின் மணிவயிற்றில் பிறந்த மக்கள் மூவர் இவருள் ஒருவர் ஆண் மகன். மற்ற இருவரும் பெண்மக்களாவர். இவ் ஆண்மகனே திரு. வேல் முருகேசன் என்பார். இவர் பொறியியல் வல்லுந ராகத் தேர்ந்து அரசியலிற் பணியாற்றி வருகின்றனர்.

பிள்ளையவர்கள் தம் முதல் மனைவியாராகிய காவேரி யம்மையின் மறைவுக்குப் பின் தமது ௩௬ ஆவது வயதில் திருவாட்டி. சுபபுலட்சுமி என்னும் மாதராரை மணம் செய்து கொண்டனர். இவரது மணிவயிற்றில் பிறந்த மக்கள் எழுவர். அவருள் ஆண்மககள் நால்வர்; பெண்மக்கள் மூவர்.

இளமையிலிருந்தே சிவபத்தியும் செந்தமிழ்ப் பற்றும் கொண்டு விளங்கிய பிள்ளையவர்கள் தம் உருஆம வயதிலேயே தட்சணாமூர்த்தி சுவாமிகளின் திருவருள் துணையால் சமய விசேட நிருவாண தீக்கைகளைப் பெற்றுச் சிவபூசையும் ஏற்றாகள். அன்றுமுதல் என்றும் சிவனடி மறவாத சிந்தைய ராகச் சிவபூசை செய்வதில் தவறாத தவ ஒழுக்கினை மேற்கொண் டனர். அந்நாளில் நெல்லை மாநகரில் சைவசமய சாத்திரங்களில் கற்று வல்லாராக விளங்கிய சரவணப் பெருமாள் பிள்ளை (பேரா சிரியர் வையாபுரிப் பிள்ளையின் தந்தையார்) என்பாரிடம் சமய நூல்களைக் கற்றுத் தேர்ந்தனர். ௧௯உ௨ ஆம் ஆண்டில் ஆசிரியப பயிற்சி பெற்று ௧௯உ௪ முதல் ௧௯௪உ வரை நெல்லை சி. எம். உயர்நிலைப் பள்ளியில் (தற்போதைய சாப்டர் உயர்நிலைப்பள்ளி) ஆசிரியப்பணி புரிந்து வந்தனர். ௧௯௪உ இல் தமிழ் வித்துவான் பட்டத் தேர்வு எழுதி வெற்றி பெற்றனர். அந்நாள் முதல் அதே உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பதினேந்து ஆண்டுகள் பணிபுரிந்தனர்.

பிள்ளையவர்கள் இளம்பருவத்திலேயே தக்க நல்லாசிரியர் கள் வாயிலாகத் தமிழறிவும் சமய நூற்புலமையும் பெறறுத் திகழ்ந்தமையால் அவாகளுடைய சிவசமயப் பற்றினை எந்தச் சூழ்நிலையும் சிதைக்க முடியவில்லை அவர்கள் ஆசிரியப் பணி யாற்றிய கல்லூரி கிறித்தவக் கல்லூரி. கிறித்தவக கல்லூரியாக இருந்தாலும அவர்கள் சைவப பற்றினைவிட்டுக் கொடுத்தவ ரல்லர். நாள்தோறும் காலையில் சிவபூசை முடித்துச் சிவ சின்னங்களை விளக்கமாகப் புனைந்து துளக்கமின்றி அமைதியாக ஒற்றைக் காளை வண்டியொன்றில் அமர்ந்து கலாசாலைக்குச் செலலும் காட்சி மிகவும் நன்றாக இருக்கும். மலர்ந்த முகத் துடனும் கருணை தவழும் கண்களுடனும வெண்ணீறு கண் ணித்த மேனியராய் மெலல நடந்து செல்லும் பிளளையவர்களைக் கண்டவர் எவரும் இவர் 'ஓர் ஆன்றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர்' என்று மதிப்பர்.

குலம், அருள், தெய்வங் கொள்கை, மேன்மை, கலைபயில் தெளிவு, கட்டுரை வன்மை, நிலமனைய பொறுமை, மலையனைய மாண்பு, நிறைகோலனைய நேர்மை, மலரனைய சிறப்பு ஆகிய நல்லாசிரியர் இலக்கணமெல்லாம் நன்கு அமையப்பெற்ற பிள்ளையவர்கள் தம் ஆசிரியப் பணியைத் திறம்பட நடத்தினர். விரையாதும வெகுளாதும் மாணவர் விரும்புமாறு கல்வியூட்டும் கலைத்திறன் படைத்தவர்கள். மாணவர்கருக்குச் சிறந்ததொரு வழி காட்டியாய்த் தமிழ்ப் பண்பாட்டின் சின்னமாய் அமைதியின் உறைவிடமாய் அன்பே உருவாய் விளங்கிய பிள்ளையவர்களைக்

கலாசாலைக்கு வரும் தலைவர்கள் எல்லோரும் தகுந்த மரியாதை யுடன் நடத்துவர்.

சைவ சமய நூல்களைக் கற்றுணர்ந்த பிள்ளையவர்கட்குப் பின்னாளில் இலக்கண சுவாமிகள் என்று இசை பெற்று இலங்கிய தவப்பெருந் திரு முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகளின் அருளாதரவு வாய்த்தது. அதன்பின் இந் நாளில் ஞான நூல் வல்லாராக விளங்கும் அருட்டிரு. ஈசான சிவாசாரிய சுவாமி களின் அருள்துணை கிடைத்தது. இவ் இருபெரும் ஞானச் செல்வர்களையும் பிள்ளையவர்கள், தம அருளாசிரியர்களாகப் பெறும் தவம் பெற்றனர். இத்தகைய சமயத்தமிழ் ஞானத் தவப் பேற்றால் ககூசச ஆம் ஆண்டு முதல திருவாவடுதுறை ஆதின வித்துவானாகச் சிறப்புற்று, ஆதினத் தொடர்புடைய சமயப் பணிகளை இடையிடையே ஏற்று இனிதாற்றும் இயல்பின ராயினர்.

நெல்லைப் பெருவள்ளலும் சைவப் புரவலருமாகிய சிவத்திரு. சி. ச. அருணைசலம் பிள்ளையவர்கள் சைவம் பரவும் விருப் புடன் அப்பரடிகள் அருட்பணிக் கழகம் ஒன்றைத் திருநெல் வேலியில் நிறுவியுள்ளனர். அதன் சார்பில் சித்தாந்தப் பள்ளி யொன்று இயங்கிவருகிறது. அப் பள்ளியில் பிள்ளையவர்கள் ககூருரு ஆம் ஆண்டு முதல் சித்தாந்த ஆசிரியராக நியமிக்கப் பெற்று மாணவர் பலருக்குச் சைவ சித்தாந்த நுண்பொருள்களை விளக்கி வருகின்றனர். அதன் பயனாக வள்ளல் அருணைசலம் பிள்ளையவர்கள் சித்தாந்த ஆசிரியருக்குப் பல்லாற்றானும் பேருதவி புரிந்து வருகின்றனர்.

திருநெல்வேலித் தெற்குத் தேர் வீதியில் உள்ள திருஞான சம்பந்தர் திருமடத்தில் 'சிவபூசைச் செல்வர் திருக்கூட்டம்' என்னும் சங்கமொன்று விளங்கி வருகிறது. அச்சங்கத்தின் துணைச் செயலாளராகவும் சித்தாந்த ஆசிரியராகவும் நம பிள்ளை யவர்கள் விளங்கிச் சைவ சித்தாந்தப் பணிபுரிந்து வருகின்றனர். ககூருகூ ஆம் ஆண்டில் சாப்டர் உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியப் பதவியினின்றும் ஒய்வுபெற்ற பிள்ளையவர்கள் அதன்பின் தம் வாழ்வு முழுதையும் சைவ சமயப் பணிக்கே உரிமையாக்கி உழைத்து வருகின்றனர். இவர்களது சித்தாந்தப் புலமையைக் கண்டு மகிழ்ந்த தூத்துக்குடி சித்தாந்தப் பேராசிரியர் சிவகுரு நாத பிள்ளையவர்கள் இவர்கட்குச் 'சித்தாந்த பூடணம்' என்னும் பட்டம் வழங்கிப் பாராட்டினர். மதுரை ஆதீனத் தலைவராகிய தவப்பெருந் திரு. சோமசுந்தர அடிகளார் 'சித்தாந்த மாமணி' என்று இவர்கட்குப் பட்டமருளிப் பாராட்டினர்.

நம் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தோன்றிய நாள் தொடங்கி ககூஉ0 ஆம் ஆண்டு முதல் தொடர்ச்சியாகக் கழக ஆட்சிக் குழு உறுப்பினராக விளங்கி வருகின்றனர். கழக வளர்ச்சியில தொடக்கநாள் முதல் கண்ணும் கருத்துமாயிருந்து பணிபுரியும் உறுப்பினருள் ஒருவராகப் பிள்ளையவர்கள் விளங்கி வருகின்றனர்.

இத்தகைய தமிழ்ப் புலமை சான்ற சிவஞானச் செல்வராகிய திருவாளர். வே. மாணிக்கவாசகம் பிள்ளையவர்கட்கு விளம்பி-தைத் திங்கள் ரு ஆம் நாள் (18-1-1959) 'ஞாயிறன்று அறுபதாண்டு நிறைவு அருளொளி மணிவிழா' திருநெல்வேலித் தெற்குப் புதுத் தெருவிலுள்ள அவர்கள் திருமனையில் மிகவும் சிறப்புற நடைபெற்றது விழாவிற்கு உற்றார் உறவினரும் பற்றுடைய நண்பர்களும் நல்லறிஞர்களும் பெருந் திரளாக வந்து கலந்து சிறப்பித்தனர்.

பிள்ளை அவர்களின் முதன் மகனார் வேல் முருகேசன் பாத பூசை செய்ய, மற்ற ஆண்மக்கள் நால்வரும் பெண்மக்கள் நால்வரும் பொன் மலரிட்டு வணங்கினர். உற்றாரும் நண்பரும் திரள திரளாக ஆண்கள், பெண்கள், மாணவர்கள், குழந்தைகள் பலரும் வணங்கினர். அவர்களுக்குப் பிளளையவர்கள சிவனருள் பெறுக எனச் சிந்தித்துக்கொண்டு சிவசிவ என்று திருநீறு பூசினார்கள்.

சிவத்திரு. ஈசான சிவாசாரிய சுவாமிகள் இவ் விழாவிற்கு எழுந்தருளி மணிவிழாச் செல்வராகிய பிள்ளையவர்கட்கு ஆசியுரைவழங்கினார்கள் தகுதியுடைய நல்லார்களின் நல்வாழ்த்தினைப்பெற்ற மணிவிழாச் செல்வர் பல்லாண்டு இனிது வாழ நெல்லையப்பர் தாளிணை பணிகின்றேன் என்று சுவாமிகள் ஆசியருளினர். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர் சிவத்திரு. வ. சுப்பையாப் பிள்ளையவர்கள் தென்னிந்தியத் தமிழ்ச் சஙகத்தின் சார்பில வாழ்த்து மலர் ஒன்றை வாசித்து வழங்கினர். மேலும் அவர்கள், மணிவிழாச் செல்வரின் குணநலஙகளையும், அன்னார் கழக ஆட்சிக்குழு உறுப்பினராகக் கழகத் தோற்றநாள் முதல் பணியாற்றி வரும பான்மை மேன்மைகளையும் பாராட்டி, அவர்கள் மணிவிழா நினைவாக, அவர்களாலேயே உரை வரையப் பெற்ற 'திருவருட் பயன்' என்னும் சமய நூலை வெளியிட்டு விழாவில் கலந்துகொண்டவர்க்கெல்லாம் வழங்கினர். மணிவிழா நினைவு மலராகச் சிவப்பிரகாசமும் அதற்குச் சிவஞான பாடியக் கருத்தைத் தழுவிப் பிள்ளையவர்கள் எழுதிய பதவுரையும் கழகத்தில் வெளியிட்டுள்ளார்கள்.

பின்னர் நெல்லை வள்ளல் சிவத்திரு. அருணாசலம் பிள்ளையவர்கள் மணிவிழாச் செல்வரைப் பாராட்டி வாழ்த்துரை வழங்கினர். அவர்கள், தம் குடும்பத்தார் அனைவரும் விரும்பி மதித்துப் போற்றும் மாண்புடையவர் திரு வே. மா. அவர்கள் என்று புகழ்ந்து வாழ்த்தி மகிழ்ந்தனர்.

அதன் பின்னர், பேராசிரியர் பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்கள் மணிவிழாச் செல்வரின் தமிழ்பபற்று சமயப் பற்றுக்களையும், புலமைத்திறன் பணி முதலாயவற்றையும் பாராட்டி, இன்று நெல்லைத் தமிழ்ப் புலவராகத் திகழ்பவர் திரு. பிள்ளையவர்களே என்று வாழ்ததினர்

பின்னர் மணிவிழாச் செல்வருடன் சாபடர் உயர்நிலைப் பள்ளியில் பல்லாண்டுகளாக ஆசிரியப் பணியாற்றிய அறிஞர் திரு. ஜி துரைசாமி பிள்ளையவர்கள் எம். ஏ, எல் டி. பிள்ளையவர்களின் உயர்ந்த பண்பாட்டைப் பாராட்டி வாழ்த்துரை வழங்கினர்.

இறுதியில் வித்துவான் திரு. அ. க. நவநீத கிருட்டிணன் அவர்கள், மணிவிழாச் செல்வருக்கு 'வாழ்த்து மலர்' ஒன்றை வாசித்து வழங்கினர். பின் மணிவிழாக் கொண்டாடுவது, பெற்றோர்களின் மணக்கோலத்தைக் காண விழையும் மக்களின் மகிழ்ச்சிக்குரிய செயலாகும என்றும, பிளளைகளாகிய தமக்கெலலாம் மணம்புரிந்து வைத்து மகிழ்ந்த பெற்றோருக்கு நன்றி செலுத்தும் வகையில் அப் பிளளைகள் தம் பெற்றோர்க்கு அறுபதாம் ஆண்டில் மணககோலம புனையச் செய்து கண்டு களிப்பதற்காகும் என்றும் கூறிப் பிள்ளையவர்கள் ஈசான சிவாச்சாரிய சுவாமிகள் எழுநதருளி அருள் புரிந்ததைப் பணிந்து போற்றி மணிவிழாச் செல்வரை வாழ்ததி வணங்கினர். வாழ்த்துரை வழஙகிய அன்பர்களுககு நன்றியுரையும் மாணவர்க்குச் சமய அறிவுரையும் வழஙகினர்கள்.

ஒழுக்கத்தாலும் புலமையாலும் சைவ சமயப் பற்றினாலும் பண்பாட்டினாலும் சிறந்து விளஙகும் சிவத்திரு வே. மாணிக்க வாசகம் பிளளையவர்கள இன்னும பல்லாண்டுகள் எல்லாச் செல்வத்துடனும் இனிது வாழ்ந்து சைவத் திருப்பணி ஆற்றுவார்களாக!

---

# நூலாசிரியர்களுக்குப் பரிசு

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் அரிய முயற்சியின் விளைவாக தற்போது கலைக்களஞ்சியத்தின் ஆறும் தொகுதி வெளியாகி உள்ளது. இந்த வெளியீட்டு விழா கடந்த 15—1—'59 இல் சென்னைப் பல்கலைக் கழகக் கட்டிடத்தில் நடைபெற்றது. மைய அரசியலாரின் கல்வி அமைச்சர் டாக்டர் கே எல். ஸ்ரீமாலி அவர்கள் கலைக்களஞ்சியத்தை வெளியிட்டார் தமிழ் வளர்ச்சிக் கழகத் தலைவர் திரு. தி சு. அவினாசிலிங்கம் செட்டியாரவர்கள் கழகத்தின் ஆக்க வேலைகள் பற்றிப் பேசினார். திரு. பெ. தூரன் அவர்கள் ஆண்டறிக்கையைப் படித்தார். உள்நாட்டு அமைச்சர் திரு எம். பக்தவத்சலம் அவர்கள் கீழ்க்காணும் நூலாசிரியர்கட்குப் பரிசுகளை வழங்கினார். நூலாசிரியர்களும் நூல்களின் விவரமும் வருமாறு:

இவ்வாண்டு பரிசு திட்டத்திற்கு 1 கவிதை, இசைப்பாடல், 2. நாவல், 3. ஆராய்ச்சி, (மொழி, இலக்கியம்) 4 சிறுவர் இலக்கியம், 5. மருத்துவம், 6. தத்துவம் ஆகிய ஆறு பகுதிகள் எடுத்துக்கொள்ளப் பெற்றன.

இந்த ஆறு பகுதிகளிலும் வந்திருக்கும் நூல்களை அறிஞர்கள் ஆராய்ந்து மூன்று பகுதிகட்கு மட்டும் முதற்பரிசாக ஆயிரம் வெண்பொற் காசுகள் வழங்குவதென முடிவு செய்தனர். அம் முடிவுப்படி, 'பிரேம கீதம்' என்னும் நாவலை எழுதிய திருவாட்டி இராசேசுவரி பத்மநாபன், (அநுத்தமா) 'சமணமும் தமிழும்' என்னும் ஆராய்ச்சி நூலை எழுதிய திரு மயிலை, சீனி-வேங்கடசாமி அவர்கள, 'சின்னஞ்சிறு வயதில் பெரியோர்கள் வாழ்வில்' என்னும் சிறுவர் இலக்கியம் எழுதிய திரு. அழ வள்ளியப்பா அவர்கள் ஆகியோருக்கு முதற் பரிசுகள் வழங்கப்பட்டன.

நல்ல நூல்களை இயற்றி நற்றமிழ்க்குத் தொண்டு செய்வதோடு அரசியலாரின் பரிசினையும் பெற்றுச் சிறப்படைந்த இந் நூலாசிரியர்கட்கு எமது வாழ்த்தினைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

---

# தமிழகப் புலவர் குழு

திருச்சி தேவர் மன்றத்தில் 15—1—59 காலை 9 மணிக்கு நடைபெற்ற தமிழகப் புலவர் குழுவின் முதற்கூட்டத்தில் நிறைவேற்றிய தமிழ் வளர்ச்சிபற்றிய முடிவுகள் அடியிற் குறிப்பிடப் பெற்றுள்ளன. அதுகாலை நிறைவேற்றிய முடிவுகள் கீழ்வருவன:

௧. நம் மாநிலத்தின் ஆட்சிமொழி தமிழாக ஆக்கப்பெற்றமையால் ஆட்சிமொழிச் சொற்கள் அனைத்தும் கூடுமான வரையில் தமிழ்ச் சொற்களாகவே இருக்கவேண்டுமென அரசியலாரை இக் குழு கேட்டுக்கொள்ளுகிறது.

௨. வடஇந்திய பல்கலைக் கழகங்களுக்குத் தமிழ்ப் பேராசிரியர்கள் தேவைப்படும்பொழுது அரசியலார் இக் குழுவினரைக் கலந்து முடிவுசெய்து அனுப்பவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளுகிறது.

௩. திருச்சி, சென்னை, தில்லி வானொலி நிலையங்களில் தமிழில் பட்டம் பெற்ற புலவர்களை அமர்த்திக்கொள்ள இந்தியப் பேரரசினர் இணங்குமபடி செய்ய சென்னை அரசியலாரை ஆவன செய்யுமாறு இக் குழு கேட்டுக்கொள்ளுகிறது.

௪. தமிழகத்தில் திருவள்ளுவராண்டு நடைமுறைக்கு வரப்பெறுதல் முறை ஆகலின், செய்தித்தாள்கள், பஞ்சாங்கங்கள், நாட்குறிப்புக்கள், அரசாங்கக் குறிப்புக்கள் முதலியவற்றில் திருவள்ளுவராண்டினைக் கையாண்டுவர வேண்டும் எனச் செய்தித்தாள் உரிமையாளர்களையும், அரசினரையும், பொதுமக்களையும் இக் குழு கேட்டுக்கொள்ளுகிறது.

௫. தை, மூன்றாம் நாளைத் திருவள்ளுவர் நினைவு நாளாக விடுமுறை விடவேண்டும் எனவும், அஞ்சல் தலைகளில் திருவள்ளுவர் உருவத்தையும் அச்சியற்றி வெளியிடவேண்டும் எனவும் அரசினரை இக் குழு கேட்டுக்கொள்ளுகிறது.

௬. 'ஸ்ரீ' என்பதற்குப் பதிலாக 'திரு' என்ற தமிழ்ச் சொல்லைப் பயன்படுத்துமாறு அரசியலாரையும், செய்தித்தாளினரையும் இக் குழு கேட்டுக்கொள்ளுகிறது.

௭. தமிழகத்து வணிகர்களைத் தங்கள் கடிதத் தலைப்புக்களையும், விளம்பரப் பலகைகளையும் தமிழிலேயே அமைத்துக் கொள்ளுமாறு இக் குழு கேட்டுக்கொள்ளுகிறது.

௮. வேளாண்மைத்துறையில், அண்மையில் புகுத்தப் பெற்றுள்ள புதிய இந்திச் சொற்களைவிட்டு வழக்கத்தில் உள்ள சொற்களையே கையாண்டுவர இந்திய அரசாங்கத்தை இக்குழு வற்புறுத்தி வேண்டுகிறது.

௯. ஐ. நா. கழகம், திருக்குறளை மொழிபெயர்க்க விரும்பி யமைக்கு இக் குழு தன் நன்றியைத தெரிவித்துக்கொள்வதுடன் அப் பணியை இக்குழுவின்மூலம நிறைவேற்றவேண்டும் எனவும், அஃது இயலாதாயின் இக் குழுவினரைக் கலந்து தக்கவரைக் கொண்டு திருத்தமாக வெளியிடவேண்டும் எனவும் இக் குழு சென்னை அரசின் மூலமாக ஐக்கிய நாட்டுச் சபையினரைக் கேட்டுக்கொள்ளுகிறது.

௧0. தமிழகத்துத் திருக்கோயில்களில் இறை வழிபாடு தமிழ் மொழியிலேயே அமைக்கப்பெறுதல் வேண்டும் என இக் குழு முடிவு செய்கிறது.

௧௧. திருப்பாவை, திருவெம்பாவைபற்றிய விளக்கங்களை எடுத்துச் சொல்வதற்குத் தமிழ்ப் புலமையும், சமயத்துறைக் கலையறிவும், வாய்ந்த அருமபெருந் தமிழ்ப் புலவர்கள் தமிழகத்தில் நிறைந்திருக்கவும், அவர்களைப் பயன்படுத்தாமைக்கு மிகவும் வருந்தி, அச செயலை ஆற்றுவித்த திருச்சி வானொலி நிலையத்தாரின் செயலை இக் குழு வன்மையாகக் கண்டிக்கிறது.

௧௨. திருச்சி, சென்னை, தில்லி வானொலி நிலையங்கள் தங்களைத் தமிழில் அறிமுகப்படுத்தும்பொழுது, "வானொலி" என்ற பொருள் அமைதியுடைய நல்ல தமிழ்சசொல் இருக்கவும், அதனைக் கூறாது "திராவிட மொழி" எனப் பொய்யாகக் கூறிக் கொண்டு "ஆகாஷ்வாணி" எனற வடமொழியைத் தழுவிய இந்திச் சொலலைக் கூறிவருதல், தமிழையும், தமிழரையும பழிப பதற்குரிய செயலாகும் ஆதலின், வானொலி நிலையத்தார் அச் செயலைக் கைவிட்டு 'வானொலி' என்று இதுவரை வழஙகிவந்த அத் தமிழ்ச் சொல்லையே வழங்கவேண்டும என அரசியலாரை இக் குழு கேட்டுக்கொள்ளுகிறது.

௧௩. உலகின் பல பகுதிகளிலுமுள்ள நாடுகளின் பெயர் கள் அந்தந்த நாடுகளில் வழங்கும் மொழியின் பெயராலேயே அமைந்திருக்கின்றன. ஆகையால, தமிழ்மொழி வழஙகப்பெறும் இநநாடு என்றும் உள்ளதுபோன்றே 'தமிழ்நாடு' என அழைக்கப் பெறுதல் வேண்டும் எனக் இககுழு அரசியலாரைக் கேட்டுக் கொள்கிறது.

௧௪. இந்திய இலக்கியச் சிறப்பு, இந்திய மருத்துவ வளர்ச்சி, இந்திய இசையின் உயர்வு எனக் குறிப்பிட்டு, தமிழ் இலக்கியச் சிறப்பும், தமிழ் மருத்துவ வளர்ச்சியும், தமிழ் இசையின் உயர்வும் புறக்கணிக்கப்பட்டுவரும் கொடுஞ்செயலைக் கண்டு இக் குழு வருந்துகிறது.

௧௫. புகைவண்டி நிலையங்களிலும், வண்டிகளிலும், தங்குமிடம் முதலிய எல்லாவிடங்களிலும் பெரும் பணச்செலவில், அதிக நேரத்தைச் செலவிட்டுப் புருஷர்கள், ஸ்திரீகள் என்று எழுதிவருவதை மாற்றி, ஆண், பெண் என்று குறைந்த பணச் செலவில், குறைந்த நேரத்தில் நல்ல தமிழில் எழுதிவருமாறு இக்குழு அரசியலாரைக் கேட்டுக்கொள்ளுகிறது.

௧௬. பிறமொழிச் சொற்களை எழுத நேரிடும்பொழுது தமிழ் எழுத்துக்களிலேயே எழுதவேண்டும் என, இக்குழு அரசியலாரையும், ஆசிரியர்களையும் வேண்டிக்கொள்ளுகிறது

## புலவர் குழு உறுப்பினர் நாற்பத்தொன்பதின்மர்

டாக்டர் சோ. பாரதியார் M A., B.L (தலைவர்), டாக்டர் மு வரதராசன் M. A., Ph D, டாக்டர் மா இராசமாணிக்கம் M. A, Ph. D டாக்டர் உ சு. மாணிக்கம் M. A, Ph D டாக்டர் மொ. அ. துரை அரங்கனார் M A., Ph D, டாக்டர் அ. சிதம்பரநாதன் M. A, Ph D., டாக்டர் ரா பி. சேதுப்பிள்ளை B A, B L., தெ பொ. மீனாட்சிசுந்தரனார் M A., M. O. L, சி. இலக்குவனார் M. A., M. O L, அ மு. பரமசிவானந்தம் M. A, M Lit, ப. சோதிமுத்து M A, B. D., கி. இராமலிங்கனார் M. A., கோ. சுப்பிரமணிய பிள்ளை M A, B. L., அ. ஆலால சுந்தரம் செட்டியார் M. A, வித்துவான் க. வெள்ளைவாரணர், பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை M A., L. T., கா அப்துல் கபூர் M. A, அ. கி. பரந்தாமனார் M. A, வித்துவான் நயினார் முகம்மது, உடுமலை, கவிஞர் M. P. மாஸ்கரேனஸ், தூத்துக்குடி, புலவர் மயிலை சிவமுத்து, சென்னை, வித்துவான் மு. இராகவையங்கார், புலவர் அ மு. சரவண முதலியார், T. V. சதாசிவ பண்டாரத்தார், இ. மு. சுப்பிரமணிய பிள்ளை, நெல்லை, பாலி சு. நெல்லையப்பர், சென்னை, பண்டிதர் அ கந்தசாமி பிள்ளை, பேரூர், ஞா. தேவநேயப்பாவாணர் M. A, லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், பண்டித வித்துவான். சங்குப் புலவர், சரவண. ஆறுமுக முதலியார் M. A B O. L., மேரி மாசிலாமணி அம்மையார் M. A, அ. காமாட்சி குமாரசாமி M.A., சேலம், கவிஞர். நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை, கவிஞர். பாரதிதாசன், புதுவை, வித்துவான். ஔவை. சு துரைசாமிப் பிள்ளை, வித்துவான் மே. வீ. வேணுகோபால் பிள்ளை, வித்துவான் மு. அருணாசலம் பிள்ளை, வித்துவான் தி பட்டுசாமி ஓதுவார், வித்துவான் வே. அய்யா நாயக்கர், வித்துவான் ந இராமநாதன், கரந்தைக் கல்லூரி. வித்துவான் தி. சிவப்பிரகாச சேதுராயர், அரசர் கல்லூரி. திருவையாறு, வித்துவான் துரைசாமி ஐயர், மயிலம் கல்லூரி, வித்துவான் முத்து சு. மாணிக்கவாசக முதலியார், தருமபுரம் புலவர் கல்லூரி, வித்துவான் இராமசாமி அடிகள், பேரூர் புலவர் கல்லூரி. வித்துவான் வேங்கடராம ஐயா M. A., B. O L. திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி, வித்துவான் சங்கரநாராயணர், மேலைச் சிவபுரி, வித்துவான் அன்பு கருணையானந்தா, மதுரைத் தமிழ்க் கல்லூரி, வித்துவான் திரு ஐயன்பெருமாள் கோனார், (செயலர்) கி. ஆ. பெ. விசுவநாதம், (பொருளாளர்.)

---

# இராமலிங்க அடிகள் வரலாற்றுக் காலக் குறிப்புகள்

[திரு. நா. இரா. ஊரன், சமயபுரம்]

| | | |
|---|---|---|
| தில்லையை அடுத்த மருதூரில் பிறப்பு : | சுபானு, புரட்டாசி, 21 | 5—10—1823 |
| அடிகளாரின் குடும்பம் மருதூரைவிட்டுச் சென்னைக்குச் சென்றது | .... | 1824 |
| ஒழிவிலொடுக்கம் பதிப்பிக்கப்பட்டது : | விரோதிகிருது, ஐப்பசி | 1851 |
| மனுமுறைகண்ட வாசகம் வெளிவந்தது : | ஆனந்த, ஆனி | 1854 |
| தொண்டமண்டல சதகம் பதிப்பிக்கப்பட்டது : | இராக்ஷச, மார்கழி | 1855 |
| சின்மய தீபிகை பதிப்பிக்கப்பட்டது : | பிங்கள, கார்த்திகை | 1857 |
| அடிகளார் வடலூரையடுத்த கருங்குழியை உறைவிடமாகக்கொண்டது: | .... | 1858 |
| சன்மார்க்க சங்கம் நிறுவியது : | .... | 1865 |
| அதுவரை பாடப்பெற்றிருந்த அடிகளாரின் பாடல்கள், அவர்கள் மாணவர் தொழூவூர் வேலாயுத முதலியாரால் நான்கு திருமுறைகளாக வகுக்கப்பெற்றுத் திருஅருட்பா என்ற பெயரில் நூலாக வெளிவந்தது. | அக்ஷய, | பிப்ரவரி, 1867 |
| வடலூரில் சத்திய தருமச்சாலை தொடங்கியது : | பிரபவ, வைகாசி, 11 | 23—5—1867 |
| கருங்குழியை அடுத்த மேட்டுக்குப்பத்தில் வசிக்கத்தொடங்கியது : | .... | 1870 |
| வடலூரில் சத்திய ஞானசபை அமைத்தது : | .... | 1871 |
| வடலூர் ஞானசபையில் முதற் பூசவிழா : | .... | 25—1—1872 |
| மேட்டுக்குப்பம் சித்திவளாகத்தில் வழிபாட்டுமுறை தொடங்கியது : | .... | 1873 |
| சன்மார்க்க அன்பர்களுக்கும் அந்தப்பக்கத்து மக்களுக்கும் செய்த பேருபதேசம் | ஸ்ரீமுக, ஐப்பசி, 7 | 22—10—1873 |
| மேட்டுக்குப்பம் சித்திவளாகத்தில் மறைவு : | ஸ்ரீமுக, தை, 19 | 30—1—1874 |

வள்ளலார் கழல் வாழ்த்தல் வாழ்வாவதே

# பதிறுக்கப் பண்பொப்பு

[சித்தாந்த பண்டிதர், திரு. ப இராமநாத பிள்ளை]

(செல்வி சிலம்பு, ௩௩, பரல் ௫, உ௧௩-ஆம் பக்கத் தொடர்ச்சி)

மேலும் தத்துவக் குறிப்பு வரும் செந்தமிழ்ச் சிறப்புத் திருமறையானுமுணர்க :

“தத்து வந்தலை கண்டறி வாரிலைத்
தத்து வந்தலை கண்டவர் கண்டிலர்
தத்து வந்தலை நின்றவர்க் கல்லது
தத்து வனலன் தண்புக லூரனே” (நி. ௪௯-௭)

தத்துவங்களாகிய முப்பத்தாறு மெய்களின் முதலும் முடிபும் இவையும திருவருளாற் கண்டறிவாரில்லை. கண்டறிவாருளராயின அவா மெய்ப்பொருளாம் சிவபெருமானைத் திருவடி புணாவாற் காண்பவராவர். அங்ஙனம் காணவே மாயையின் பற்று அகன்றொழியும். அகலவே அம் மாயையின் மையல் தோறறும் தோன்றாது கழியும. கழியவே மெய்பபொருளாம் சிவன உண்மைக் காட்சி அளித்தருளவன். அவன் தததுவம் கடந்த தனிமுதற்பொருள் ஆவன். இத் தததுவக் கடபபின் அமைவினை ஒருபுடையொபபதாக அமைததுக் கொள்ளும் வாய்பபுடைய திருககுறள்கள வருமாறு :

“காணுங்கால் காணேன் தவறாய காணுக்கால்
காணேன் தவறல் லவை.” (௧௨௮௫)

காணுங்கால் - (மெய்ப்பொருளாம் சிவபெருமானைத் திருவருள் ஒளியால) காணுமிடதது, தவறாய - நிலைபேறிலதாய் அழிவினையுடைததாய்க காணப்படும் மாயாகாரிய உலகுடற் பறறுககளை, காணேன் - கைககொளளுந் தன்மையுடையேனல்லேன ; காணுககால - மெய்பபொருளாம் சிவனைக் காணாதவிடத்து, தவறலலவை - (அழிவிலலனவாகிய திருவருள் அடியாரிணகக முதலான அல்லாத) உலகுடல்களையே காண்பதன்றி நிலைபெறுன அவற்றைக் காணேன்.

“பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்
பெணமை யுடைக்கும் படை.” (௧௨௫௮)

பன்மாயக் கள்வன் - உயிர்தொறும் ஒளித்து நிற்கும் சிவபெருமான், பணிமொழி - திருவருளால் பணிதத அருமறையாம் திருவைந்தெழுத்து, அன்றோ - அல்லவா, நம் பெண்மை-நமமைச்

சார்ந்து நாம் விரும்புமாறு நம்மை மயக்கும் மென்மைத் தன்மை வாய்ந்த மாயாகாரியப் பொருள்களை, உடைக்கும் - நீக்கும். படை - தூய சிறப்புக் கருவியாகும். அருமறை - உபதேசம்.

"படைக்கல மாகவுன் நாமத் தெழுத்தஞ் செறுவிற் கொண்டேன்."

என்னும் திருமறையான் வாய்ப்புடைய படை இன்னதென்பது விளங்கும. மேலும் வரும் சிவஞானசித்தித் திருவிருத்தமும இவ்வுண்மையினை விளக்கும் :

"பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க
வருஞானம் பலஞான மஞ்ஞான விகற்பம்
வாசசியவா சகஞானம் வயிந்தவத்தின் கலக்கந
தருஞானம் போகஞா திருஞான ஞேயம்
தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகும்
திருஞான மிவையெல்லாங் கடந்தசிவ ஞான
மாதலாற் சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர்." (௧௧. ௨)

"பாயிருள் நீங்கி ஞானந் தனைக்காண்டல் ஆன்ம ரூபம்
நீயுநின செயலொன் றின்றி நிற்றலே தெரிச னந்தான்
போயிவன் தன்மை கெட்டுப் பொருளிற்போய் அங்குத் [தோன்றா
தாய்விடில் ஆன்ம சுத்தி அருளநூலின் விதித்த வாறே."
—உண்மைநெறி - ௨.

"என்றுஞ் சார்ந்து நின்றதே உயிர்நிலை" யாதலின் ஆருயிர் தன்னைக காண்பது தன்னாற் சாரப்பட்ட பொருளின் புணர்ப்பி னாலேயாம். கட்டு நிலையில் உயிர் உடற்புணர்ப்பாற் றன்னை யுணரும். ஒட்டு நிலையில் உயிர்திருவடிப் புணர்ப்பாற் றன்னை யுணரும். கட்டு நிலை - பிறப்புற்று வாழும் உலகியல் நிலை ஒட்டு நிலை - பிறப்பற்றுச் சிறப்புற்று வாழும திருவடிநிலை. உயிரின் சிற்றறிவு உடலொடு கூட்டித் திருவருளால் விளக்க விளங்குங் கால் சுட்டறிவெனப்படும். திருவருளால் திருவடியிற் கூட்டி விளக்க விளங்குங்கால் முற்றறிவெனப்படும். சுட்டறிவன் நீங்கி முற்றறிவின் ஓங்காது தன்னளவில் நின்றுவிடின் சிற்றறிவெனப் படும. சுட்டறிவு - பாசஞானம். சிற்றறிவு - பசுஞானம். முற் றறிவு - பதிஞானம். திருபபாட்டு ஒன்றினை ஒருவன் உணர்வது வரிவடிவில் கட்புலன் வாயிலாகவும், ஒலி வடிவில் செவிப்புலன் வாயிலாகவும், அறிவு வடிவில் மனக்கலன் வாயிலாகவும் சார்ந்து நினறேயாம. இது போன்றே உயிர் உடலையொட்டியோ திரு வருளையொட்டியோ தன்னையுணரும்.

அம்முறையில் ஆருயிரின் அறிவு முழுவதையும் மறைத்து நிற்கும் பரந்த இருளையும், அதனைப் போக்குதற் பொருட்டே திருவருளால் கன்மம் மாயைகள் கூட்டப்பட்டனவாதலின் அவற்றையும் அவ்வருளாலே உணர்ந்து அவற்றின்கண் கொண்டுள்ள பற்றாகிய இருள் நீங்கி, முற்றுணர்வாகிய திருவடி ஞானத்தாற் சிவனைக் கண்டு அவன் முழு நிறைவில் அடங்கித் தனைக் காண்பதே ஆன்ம வடிவமாகும். ஆன்ம வடிவம் - ஆன்மாவின் உண்மைத் தன்மை. அஃதாவது ஆவிக்கு என்றும் அழிவின்றிச் சார்பினால் இன்புற்றுத் தன்னையறிதல். நீரில் மூழ்குவோன் நீரின் சார்பால் இன்புற்றுத் தன்னையும் உணர்தல் இதற்கொப்பாகும். காண்டல் - உணர்தல்.

ஆவி கட்டு நிலையில் உலகுடல்களையே தன்னதென்றும் தானென்றும் நினைந்து நிற்கும் நிலை யெனப்பதாம். அவற்றால் செயற்படுவது நின் செயலெனப்பதாம். உண்மையான் நோக்கின் இவையனைத்தும் இவற்றிற்கு இடங்கொடுக்கும் திருவருட் செயலேயாம். நீரில் மூழ்குவோன் மூழ்குதல் தனித்த தன் செயலே என்று எண்ணுகின்றான்; நண்ணினர்பால் உரைக்கின்றான்; திண்மையுற வரைகின்றான். உண்மையானோக்கின் மூழ்க இடங்கொடுத்து உடனிற்கும் நீரின் செயலேயாகும் அது. இது மேலதற்கு ஒப்பாகும். அங்ஙனம் நிற்றலை ஆவிக் காட்சி என்பர். ஆவிக் காட்சியாவது அவ்வாவி சிவனிறைவில் அடங்கித் தன்பால் நிகழும் தன்னைக் கொண்டு நிகழும் செயல்களனைத்தும் சிவன் செயலே என உண்மையாயுணர்தல். ஆவிக்குச் சுட்டுணர்வு நீங்குதலே ஆவியின் தன்மை கெடுதலாம். அத்தன்மையோடு திருவடிப்பேறும் மெய்ப்பொருளில் அடங்கித் துய்ப்பளவானே நின்று வேறெதும் தோன்றாமலழுந்தின் அஃது ஆவித் தூய்மை எனப்படும். ஆவித் தூய்மை, ஆன்ம சுத்தி.

ஆவிவடிவாகிய ஆன்ம ரூபத்துக்கு ஒருபுடை ஒப்பாந் திருமறை வருமாறு:

“நடலை வாழ்வுகொண் டென்செய்திர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலி னஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலி னார்கிடந் தூர்முனி பண்டமே.” (௫. ௧௦-௪)

ஆவியின் வடிவம் திருவருளால் பாயிருள் நீங்கலும் திருவடிப் புணர்வு கைவருதலுமாம். இவ்வுடலோடு கூடிவாழும் வாழ்வு எல்லா வகையாலும் துன்பவாழ்வேயாம். நடலை - துன்பம். இத்தகைய துன்பவாழ்வை நிலைப்புடைய இன்பமென ஆவி மருளால் திரியக்கொள்கின்றது. அதனால் அது பழிபாவங்களுக்கு அஞ்ச

வேண்டுவதாகிய நாணினை இழந்து நிற்கின்றது அக் குறிப்பே "என்செய்தீர் நாணிலீர்" என்பதாம். தலைபினிழிந்த மதி ரொத்துப் பேணி வளர்க்கப்பட்ட உடம்பும் பிணமெனப் பெயர் பெற்று சுடலை சேர்வது நேரிற் காணும் மெய்க்காட்சியேயாம். அதனால் அது "சொற்பிரமாண"மாகிய உரையளவையோ என உணர்த்தப்பட்டது.

இவ்வுடம்பு உயிரின் நினைப்புப்போல் பொருந்துவதும், திருந்த இருப்பதும், வருந்த நீங்குவது மன்று. இருவினைக் கீடாக இறைவன் திருவாணையின் வழியே செயற்படுவதாம் அக் குறிப்பே "கடலினஞ் சமுதுண்டவர் கைவிட்டால்" என்பதாம். அவர் கைவிட்டவிடத்து இவ்வுடல் பிணமெனப் பெயர்படைத்து ஊராரால் வெறுக்கத்தகுந்த பொருளாகும். இத்தகைய உண்மையுணர்வு கைவந்தவர் சிவபெருமான் "கிளைமையே கிளை யாக"ச் சேர்வர்: 'கிளைமை' என்பது கிழமை என்பதாகும். கிழமை - உரிமை. கிளை - சுற்றம். எனவே ஆன்ம வடிவம் என்பது மருள் சுற்றம் நீக்கித் தெருள் சுற்றமாகிய சிவபெருமான் திருவடிக்கு உரிமையாதல்.

உடல் ஊர்முனி பண்டமாவதை வரும் திருமறையான் உணர்க:

"மணமென மகிழ்வர் முன்னே மக்கள்தாய் தந்தை சுற்றம்
பிணமெனச் சுடுவர் பேர்த்தே பிறவியை வேண்டேன் நாயேன்
பணையிடைச் சோலை தோறும் பைம்பொழில் விளாகத் தெங்கள்
அணைவினைக் கொடுக்கும் ஆரூர் அப்பனே அஞ்சி னேனே."
(எ. அ - க)

"புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு" (திருக்குறள், கஉ0)

சிவபெருமானைச் சுற்றமாகக் கோடலைக் குறிக்கும் திருமறை வருமாறு:

"இளமை கைவிட் டகறலும் மூப்பினோர்
வளமை போய்ப்பிணி யோடு வருதலால்
உளமெ லாம்ஒளி யாயமதி யாயினன்
கிளமை கேகிளை யாக நினைப்பனே." (ரு. கள - உஅ)

உளம் - உயிர். சிவபெருமான் உயிரின்மாட்டும் பேருணர்வு ஒளியாய்த் திகழ்பவன். அவ்வுண்மையே "உளமெலாம் ஒளியாய் மதியாயினன்" என்பதாம் உயிர் சிவ ஒளியைக் காணும வாயி லாகவே தன்னையும் காணும் இது கதிரவன் ஒளி வாயிலாகக் கதிரவனைக் காணுங்காலே நம்மையும் நாம் காண்பது போன்றாகும்.

(தொடரும்)

சங்க இலக்கியக் கற்பனை - துன்பியல் நாடகம்

# திதியனின் காதலி

[வித்துவான், திரு. செ. சிங்காரவேலனார், தருமபுரம்]

(செல்வி, சிலம்பு-௩௩, பரல்-௫, உ௫௪-ஆம் பக்கத்தொடர்ச்சி)

## காட்சி 5

[அழுந்தூர் நோக்கிச் செல்லும் காட்டு வழியில்—தேரில் திதியனும், மினிலியும்.]

திதி: அன்பே! அழுந்தூர்க்கோ இன்னும் மூன்று காதத்துக்கு மேல் இருக்கிறது. கிழக்கே வெள்ளியும் உதித்துவிட்டது! என்னால் முடிந்தமட்டும் விரைவாகவே ஓட்டி வருகிறேன்....

அனி: அரசே பொழுது புலர்வதற்குள் போய்ச் சேர்வோமோ என்று கவலையா யிருக்கிறது எனக்கு.

திதி: குதிரைகள் களைப்படைந்தாலும் கொஞ்சமும் தளரவில்லை, அன்பே! அதோ பார்! நம் படைகள் இன்னும் கொஞ்சநேரத்தில் அழுந்தூரை எட்டிவிடலாம்! (ஓட்டுதல்.)

அனி: அரசே! என் வலக்கண் துடிக்கிறது....என் கண் துடிப்பதைப் பார்த்தால்...

திதி: வருந்தாதே அன்பே! பொழிலரைக் காப்பது என் பொறுப்பு. அது என் கடமையுங்கூட, அல்லவா? (விரைந்து ஓட்டுதல்.)

## காட்சி 6

[ஊர்ப் பொதுமன்றில் கட்டப்பட்டுள்ள பொழிலனின் மருங்கில் கூரிய பழுக்கக் காய்ச்சப் பெற்ற இரு கம்பிகளைக் கையில் பிடித்தபடி ஒரு கொலைஞன்; தூரத்தே கோசர் மூவர்; பொழுதுபுலரும் வேளை.]

பொழி: கொடியவர்களே! குற்றம் புரியாதவனுக்கு இந்தத் தண்டனையா? என் மகள் இந்நேரம் வந்துகொண்டிருப்பாள் நெய்தல்நாட்டுச் சேனையோடு! (கோசர்களின் கோரச் சிரிப்பு.)

சிரிக்காதீர்கள் சீரழிந்தவர்களே! செந்தமிழ் நாட்டினரின் சிந்தையிலே மண்ணைத் தூவிய சிறுமதியாளர்களே! அகமும் புறமும் கண்ட தமிழ் நெறியில், 'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' என்ற பண்பு நெறியில் நிலைகெட வந்த நீசர்களே!

அல்லவை செய்தார்க்கு அறங்கூற்றம்! அல்லவை செய்தார்க்கு அறங்கூற்றம்!

**கோ. 1:** பித்துமனம் படைத்தோனே! பேசு....பேசித்தொலை!

**பொழி:** இரக்கமே இல்லையா உங்களுக்கு? இரும்பு மனங் கொண்டோரே! கரும்பு மொழிகொண்ட—நான் பெற்ற அரும்பு திருமணங்கொள்ளும் காட்சியைக் காண விரும்பியிருந்தேன் நான்; துருபபுகிகர் துன்மார்க்கர்களே! தமிழ்ப்படை திரண்டுவந்தால், தூள்! தூள்! நீர்! தூள்! தூள்!

**கோ. 2:** இம்....நடக்கட்டும்! பொன்னிறக் கதிரவன் பூமாதேவியைத் தீண்டும் நேரத்திலே, இவன் கண்களைத் தீண்டட்டும இந்த இரும்புக் கம்பிகள்.

**பொழி:** (அருகில் காட்டப்படும் கொள்ளிக் கம்பிகளைக் கண்டு அலறி) இரும்புக் கம்பிகளே! என்ன தீங்கு செய்தேன் நான் உங்களுக்கு? அழகான கண்களை அழிக்காதீர்கள், என்மகளை ஒரே ஒருமுறை! இறுதிமுறையாகப் பார்த்து விடுகிறேன்! பெற்று வளர்த்த பாசத்தால் பிச்சை கேட்கிறேன்; மனித உருவில் நடமாடும் மிருகங்கள் இவர்கள்! (அழுது) துள்ளுவதைக் கண்டு உள்ளம மகிழும் உத்தமர்கள்! துடிப்பதைக்கண்டு மகிழ்ச்சிகொள்ளும மனிதப் பேய்கள்! கூரிய குத்தீட்டிகளே! உங்களை எனபோன்ற ஒரு தொழிலாளிதானே செய்தான்? நீஙகள் இப்படி நிந்திக்கப்படுவீர்கள்!—குற்றம புரியாதவனைக் கொடுந் தண்டனைக்கு ஆளாக்குவீர்கள் என்று கொஞ்சமேனும் நினைத்திருப்பானா, அநதத் தோழன்! குததீட்டிகளே! நீங்கள் வந்த இடத்திலேயே புகமாட்டீர்களா? (புலம்பி) ஐயோ! உங்களுக்கும் கருணை இல்லை; இங்கிருக்கும் யார்க்கும் கருணை இல்லையா? குடிமக்களே! உங்களை ஊமைகளாக்கி விட்டார்களா இவ் வுலுத்தர்கள்?

**கோ. 3:** முடிந்ததா உன் ஒப்பாரி! இம்....தோன்றிவிட்டான் சூரியன்! ஊன்றிவிடு கண்களில்! (கொலைஞன் கண்களைக் குத்துகிறான்)

**பொழி:** ஐயோ! மகளே!

(சாய்கிறான்; கண்களில் குருதி வழிகிறது; கூடியிருந்தோர் கண்களைப் பொத்திக்கொள்கின்றனர்; திடீரென்று பாய்கிறது நெய்தல்நாட்டுப்படை.)

**திதி:** விடாதீர்கள்; பிடியுங்கள்; வெட்டுங்கள்!

(தேரிலிருந்து இறங்குதல்—அன்னி 'ஆ' என்ற அலறலோடு தந்தையைத் தழுவுதல்—போராட்டம்—வெட்டுப்பட்டு விழுகின்றன உடல்கள்.)

## காட்சி 7

[அழுந்தூர் அரசமாளிகை சேர்ந்த பூஞ்சோலையில் அன்னிமிஞிலியும் திதியனும்.]

திதி: (கவலையே வடிவாயிருக்கும் அன்னிமிஞிலியைப் பார்த்து) கண்கலங்காதே மிஞிலி! காலம் துணைக்கூட்டவில்லை. கோசர்களைக் கொல்லும் வரைக்கும் உண்கலத்தில் உண்ணுமல், தூய ஆடையும் சூடிக்கொள்ளாமல் சினம் மாறுமலிருந்தாய். கோசர்களைப் பழிவாங்கியும், உன் குறை முடியவில்லை. காப்பாற்றவேண்டிய தந்தையின் கண்களைக் காப்பாற்ற முடியவில்லை. இதை நினைக்கும்போது ஏமாற்றமாக இருக்கிறது எனக்கு.

அன்: அரசே! இறுதியில் இப்படி முடியும் என்று எதிர்பார்க்கவே இல்லை நான். தண்டனை முடிவதற்கு முன் தண்டிக்க வேண்டும அந்தத் தூய்மையில்லாதவர்களை என்று தான் நினைத்தேன், தங்கள் உறுதியும் துணைபுரிந்தது; இறுதியில்....

திதி: வருந்தாதே அன்பே. அழுந்தூர் அரசமாளிகையில் நீ இரு. நெய்தல்நாடு சென்று சில அரசியல் வழக்குகளைத் தீர்த்துவிட்டு வந்து உன்னையும், பொழிலரையும் அழைத்துச்செல்ல எண்ணுகிறேன்.

அன்: அப்படியே அரசே; மறந்துவிடமாட்டீர்களே?

திதி: என்ன பேச்சு இது....வருகிறேன்....(செல்லல்.)

(ஒருபுறமாக உள்ள சாலையில் குதிரையிலிருந்து இறங்கிய அன்னி என்ற சிற்றரசன் சேய்மையில் நின்றபடியே மிஞிலியைப் பார்க்கிறான்)

அன்: என்ன அழகு! என்ன அழகு! எனது நாட்டிலும் இவ்வளவு பேரெழில் படைத்தவளைக் கண்டதே இல்லையே ....இவளை....நான் அடைந்தால்....ஆகா! இந்த நினைப்பை நினைதத என் நெஞ்சே! நீ வாழ்க!....இவள் யாராயிருக்கும்? அழுந்தூரிலும இவ்வளவு சிறந்த அழகி ஒருத்தி....திதியன் —என பிறவிப பகைவன் இவளைககண்டுமா சும்மாவிட்டு வைத்திருக்கிறான்? (வழிப்போக்கன் ஒருவனைக் கண்டு) ஐயா! ஐயா!

வழிப்போக்கன்: யார் அது? (பார்த்து) ஓ அரசிளங் குமாராக அல்லவா தோன்றுகிறது!....நெய்தனில மன்னர் திதியைத்தான் பார்த்திருக்கிறேன் நான்....அவரில்லை இவர்! இவர்....வேறு நாட்டு அரசராக இருக்குமோ? (வந்து) என்னவேண்டுங்க?

அன்: (நகைத்து) இதோ இம்மாளிகை...

வழி: இதுதான் திதியர் அழுந்தூர் மாளிகைங்க. அதோ அவர்கள்தான் 'திதியருடைய....'அன்னிமிஞிலி'ங்க....இந்த ஊர் குடிமக்கள் தலைவர் பெண்ணுங்க!

அன்: சரி! நீர் போகலாம்! (போனபின்) திதியருடைய என்று இழுத்தானே ஏன் இவன்? ஒருவேளை அவன் காதலியாக இருக்கக்கூடுமோ? இருந்தாலும் என்ன? ஏன் நெடுநாளைய வஞ்சத்தை இதன்வாயிலாகத் தீர்த்துக்கொளவேன்; திதியின் காவல்மரமான புன்னையை வெட்டிச் சாய்த்துக் காதல் கொடியான இவ் வன்னிமிஞிலியை என் உரிமை மகளாக்குவேன் இது உறுதி! (போதல்.)

## காட்சி 8

[திதியன் அரண்மனை மண்டபம்]

ஏவ: (ஓடிவந்து வணங்கி) மருதநாட்டிலிருந்து ஓலை வந்திருக்கிறது மன்னவா!

திதி: மருதநாட்டு மன்னன் அன்னியிடமிருந்து ஓலை! கொடு இப்படி! (வாங்கிப் படித்தல்.)

குரல்: "நெய்தனில மன்னன் திதியனுக்கு மருதநாட்டு மாமன்னன் அன்னி விடுக்கும் ஓலை! அழுந்தூர்ப் பொழிலர் மகள் அன்னிமிஞிலியை நான் விரும்புகிறேன்."

திதி: ஆ!....

குரல்: அதற்குத் தடைநின்றால் போர்க்களத்தில் உன்னைச் சந்திப்பேன்; நமது நீண்டநாளைய பகைமை இதனோடு கழியட்டும்; ஒருத்தியை இருவர் விரும்பினால் ஒருவன் செத்தே தீரவேண்டும், புரிந்துகொள்!—அன்னி.

திதி: (தனக்குள்) தன் முடிவைத் தானே முன்கூட்டிச் சொல்லிக்கொண்டான் (வெளிப்பட) ஏவல! எங்கே தூதுவன்?

தூதுவன்: வணக்கம் வேந்தே!

திதி: சென்று சொல்! போர்க்களத்தில் நாளையே சந்திக்கலாமென்று கூறு! அன்னியைக் கொன்று அவன் தலையை

நெய்தல்நாட்டுக் கடற்கரையில், காவல்மரமாகிய புன்னையி னடியில் கழுகுக்கு விருந்தளிக்கக் காத்திருக்கிறேன் என்று சொல்!

(தூதுவன் ஓடல்—பேய்ச் சிரிப்புச் சிரித்தல்.)

## நூல்

உயிர் நண்பன் எவ்வி என்பான் அடக்கவும், அடங்காத பெருஞ்சினத்தால் மருதநாட்டு வேந்தன் அன்னி, திதியனின் படையோடு குறுக்கை என்னுமிடத்தில் எதிர்த்தான். இரு தரப்பிலும் பெரிய இழப்பை உண்டாக்கிய அப்போரில் அன்னி விழுப்புண்பட்டு மாண்டான்; ஆயினும் அவன் கைவாள் நெய்தல்நாட்டுக் காவல்மரமான புன்னையை வெட்டிச் சாய்த்து விட்டது. அன்னியின் தலை நெய்தல்நாட்டுக் கடற்கரையோரம் வெட்டி எறியப்பட்டது. கழுகுகள் கொத்தித்திரியும் அக் காட்சியைக் கண்டு களித்தான் திதியன்; புலம்பினான் அன்னி யின் தோழன் எவ்வி!

## காட்சி 9

[கடற்கரை; எவ்வி ஓடிவருகிறான்.]

எவ்வி: ஆருயிர் நண்பா!....ஆருயிர் நண்பா! (தலையைத் தழுவி) உன்னை இந் நிலையிலா காணவேண்டும் இந்தக் கண்கள்! பகைவெறி தணியாத திதியரோடு போர்புரியப் போகாதே போகாதே என்று தடுத்தேனே பலமுறை; தடுத்தேனே பலமுறை! கேட்டாயா? உன் தலை—முடியணிந்த தலை—பெரிய பெரிய அரசியல் திட்டங்களைச் சிந்தனைத் திறத்தால் முடித்துவைக்கும் உன் தலை திதியனின் வாளால் வெட்டப் பட்டு விட்டதா?.... ஐயோ! .... ஒருவனுக்கு உரியவளை விழைந்த குற்றத்துக்காக அறக்கடவுள் உனக்குத் தந்த பரிசா இங்கிலை? நண்பா....! நண்பா....! ஏ! கடல்மன்னு! உன் அலைக்கரங்களால் தழுவிக்கொள் என் ஆருயிர் நண்பனை!....'முகநக நட்பது நட்பன்று; நெஞ்சத்து அகநக நட்பதே நட்பு' என்ற திருவள்ளுவர் அறநெறிக்கு இலக் காய்த் திகழ்ந்த நம் வாழ்வு நசுக்கப்பட்டு விட்டது....இனி நான் வாழ்ந்தும் பயன் இல்லை....இனி நான் வாழ்ந்தும் பயன் இல்லை! உன் இன்பத்தில் தக்க பங்குகொண்ட நான் துன்பத்திலும் பங்குகொண்டே தீரவேண்டும்! கெடுக என் வாழ்வு! கெடுக என் வாழ்நாள்! (புன்னை மரத்தின் அடிப் பகுதியில் ஓங்கி ஓங்கி மோதி மயங்கி வீழ்கின்றான்.)

## காட்சி 10

[திதியனின் மாளிகை—திதியனின் கடற்புறப் பகைவன் பிண்டன் என்பானை வெல்லப் பெரும் படையொடு வந்து உதவிபுரிந்த நன்னனுக்கு அரண்மனையில் வரவேற்பு.]

திதி: வரவேண்டும் நன்னர் பெருமானே, வரவேண்டும்! அன்னியை வென்ற அயர்வோடு நான் வாடியிருந்த வேளை பார்த்துத் துறைமுகக் கப்பலைத் தாங்கிய பிண்டனைத் தாக்கத் தங்கள் துணைப்படை பெரிதும் உதவி செய்தது; இதன்பொருட்டு நான் தங்களுக்குப் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறேன்!

நன்னன்: திதியரே! நான் என்ன அவ்வளவு பெரிதாகச் செய்து விட்டேன். ஏழில் மலையிலிருந்து இங்குவந்தேன்; அவ்வளவு தானே?

(அன்னிமிஞிலி வருதல்—கைகூப்பி நன்னனை வணங்குதல்)

திதி: நண்பரே அழுந்தூர் வேள்பொழிலரின் திருமகள் அன்னி மிஞிலி. வருகிற கார்காலத்தில் திருமணம் செய்து கொள்ள இருக்கிறேன்!

நன்: (பொறுமைக் குறிப்போடு) அப்படியா? மிக்க மகிழ்ச்சி. நல்ல வாய்ப்பு உங்களுக்கு. அன்னியின் போராட்டமே இதனடிப்படையில் எழுந்ததுதானே?

திதி: ஆம்; பிறனில் விழைந்த பெருங் குற்றத்துக்காக, அறக் கடவுளால் தண்டிக்கப்பட்டான் அன்னி! திருமணங் கொள்ளாவிட்டாலும் களவுமணம் புரிந்துகொண்டவர்கள் நாங்கள் என்பதை உணரத் தவறிவிட்டான்; அதனால் தான் அறத்துக்கு முன் தலையை இழக்க நேர்ந்தது!

(நன்னன் அடிக்கடி தன்னை உருத்துநோக்குதலை உணர்ந்த மிஞிலி வெறுப்புடன் எழுந்துபோதல்)

நன்: அடேடே....

திதி: நேரமாகிறது; வரவேற்பு நாட்டியம் பிறவற்றில் ஈடுபட்டதனால் களைப்பாயிருக்கும் தங்களுக்கு; சற்று ஓய்வெடுத்துக் கொள்ளலாமே!

நன்: ஆம் திதியரே; அயர்ச்சியாகத்தான் இருக்கிறது (மிஞிலியை நினைத்தபடி—ஓய்வு கொண்டதும் திதியன் செல்லல்—நன்னன் எழுந்து உலாவுதல்.)

நன்: (தனக்குள்) அன்னி விரும்பியதிலும் தவறில்லை; மிஞிலியின் பேரழகு—கண்களில் வீசிய ஒளி என் கண்களைப்

பறித்துவிட்டதே! அழகான அங்கங்கள்! எழில் கொழிக்கும் விழிகள்! ஏக்கம் விளைக்கும் நோக்கு! கண்டதுமுதல் என் மனமும் ஊசலாடுகிறதே ஏன்?....அன்னிமிஞிலி!.... நீ இந்தச் சிறிய நாட்டுக்கு உரியவளல்லளே! ஏழில்மலையின் தலைநகர் பாரம் என்ற பட்டணத்தின் பஞ்சணையில் என்னருகில் இருந்து கொஞ்சவேண்டிய கிளி நீ! ஆ....நீ வீசிச் சென்ற பார்வை என் நெஞ்சைப் பிளக்கிறது; மதியை மருட்டுகின்றது! உன்னை எப்படியேனும் அடைந்தாலன்றி இந்த நன்னன் நாடு திரும்பமாட்டான்!....நெய்தனிலத்துக் காடுகளில் தலைமறைவாக இருந்து காலம் வந்தபோது கைப்பற்றுவேன் இந்த அழகியை....மறுத்துவிட்டால்; முன்பு தேவை யேற்பட்டபோது ஒரு பெண் கொலைபுரிந்த இந்த நன்னன் மறுபடியும் செய்வதற்கும் தயங்கமாட்டான்!........பாவம்....திதியன்!....என்னைவில் அப்பாவி! (உலவிவிட்டுச் சாய்கிறான் பாயலில்)

## காட்சி 11

[நிலா முற்றத்தில் திதியனும் அன்னிமிஞிலியும்.]

**திதி:** அன்பே! முழுமை நிலா. அழகுநிலா முளைத்தது விண் மேலே...

**அன்:** இது பழமையிலே புது நினைவு பாய்ந்தெழுந்தாற் போலே!....

**திதி.** அடுத்த முழுமதி நாளன்று, நாமிருவரும் மணமக்களாய் இங்குப் பவழகாற் கட்டிலில், வானவிதானத்தின்கீழ், நிலா விண்மீன்களோடு கண்பொத்தி விளையாடும் நேரத்திலே மணமாலையோடு நிலாப்பயன் துய்ப்போம்....இல்லையா?

**அன்:** அப்போது நான் ஒரு கேள்வி கேட்பேன்.

**திதி:** விடைதருவேன் நான்.

**அன்:** அதுதானில்லை; விழிப்பீர்கள்—தெரியவில்லை என்று!

**திதி:** என்ன கேள்வி மிஞிலி?

**அன்:** திடீரென்று கடவுள் தோன்றி என்ன வேண்டும் என்று கேட்டால் என்ன கேட்பீர்கள் என்று கேட்பேன்!

**திதி:** அன்னிமிஞிலியோடு அடுத்த பிறவியிலும் காதலனுகிப் பிறந்து இன்பம் நுகரவேண்டும் என்று கேட்பேன்!

**அன்:** அடேட! சொல்லிவிட்டீர்களே! நீங்கள் சொல்வீரர்!

**திதி:** நீமட்டும் என்னவாம்? வெல்லும் சொல்! இல்லாமல் பேசுதலில் வள்ளுவர் குறளும் உன்னிடம் பிச்சை வாங்க

வேண்டும் மிஞிலி! மிஞிலி! ஒன்று சொல்ல வந்தேன்; பார்த்தாயா! உன்னைக்கண்டதும் மறந்தே போய்விட்டது!

அன்: என்ன அரசே?

திதி: தலையாலங்கானத்திலே ஒரு கடும் போர்! நாளைக்காலை பாண்டியன் நெடுஞ்செழியனை எதிர்க்க ஓர் கூட்டாணிக் குழுத் திரட்டி யிருக்கிறேன்; சேரர், சோழர், எழினி, எருமையூரர், இருங்கோவேண்மானர், பொருநர், நான் உட்பட எழுவர் படை இணைந்து எதிர்க்கப்போகிறது, சிறிய அரசுகளை அடக்கி யொடுக்கி, வல்லரசு சமைக்கும் நோக்கோடு வழுதி வருகிறான் வம்புக்கு ஆண்டிலும் அனுபவத்திலும் மிகச் சிறிய நெடுஞ்செழியனுக்கு இத் தலையாலங்கானத்துப்போர் அறங்காட்டும்; அதனால்........

அன்: முடிந்துவிட்டதல்லவா; தங்கள் முழக்கம், போர், போர் என்று எந்நேரமும் போய்விட்டால் நம் மனையறவாழ்வு!

திதி: மிஞிலி! வாகை சூடிவந்தவுடன் திருமணம்; அங்கு வாகைமாலை! இங்கு நீ சூட்டும் மணமாலை! என்ன சரிதானே?

அன்: அரசே! காத்திருப்பேன் தங்களுக்காய்; வெற்றி யன்னையின் நல்லருள் தங்கட்குத் துணைநிற்கட்டும். (பெருமூச்செறிதல்.)

திதி: என்ன மிஞிலி!

அன்: ஒன்றும் இல்லை; ஏதோ ஒரு உள்ளுணர்ச்சி என்னை அச்சுறுத்திக்கொண்டே யிருக்கிறது!

திதி: ஒன்றும் இல்லை; எல்லாம் நினைவின் கோளாறுதான்; நிம்மதியாக இருந்தால்தானே! மனதைச் சிந்தனை, கற்பனை செய்து செய்து வருத்திக்கொள்வதுதான் காரணம்!

அன்: நிலாப்பாடு சாயப்போகிறது.

திதி: வா - போகலாம்; வெள்ளி முளைப்பதற்கு முன்பே நம் படையைக் கோட்டைவாயிலுக்கு அனுப்பி அணிவகுக்க ஆணையிட்டிருக்கிறேன். (இருவரும் செல்லல்)

## காட்சி 12

[தலையாலங்கானத்துப் போர்க்களம்; கடும்போர்; இறுதிவரை அறுவர் அழிந்த பின்னும் தனி யொருவனாக நின்று போரிடுகிறான் திதியன்; நெடுஞ்செழியனுக்கும் திதியனுக்கும் தனிப் போர். இறுதியில்—நெடுஞ்செழியனின் நீண்ட வேல் திதியனின் நெஞ்சில் பாய்கிறது.]

திதி: ஆ! (சாய்ந்துகொண்டே) அன்னிமிஞ்லி!........அன்னி மிஞ்லி!........நான் போகிறேன்........பாண்டியர் பரிசு........ விண்ணுலகமடைகிறேன்....மிஞ்லி........மிஞ்லி........ (உயிர் துறக்கிறான்.)

நெடுஞ்: திதியனின் வீரந்தான் என்னே? மாவீரன்; இன்னும் சற்றுப் பொறுத்திருந்தால் என்னையே பதம் பார்த்திருக் கும் அவன் ஈட்டி முனை! தப்பிவிட்டேன்! வீரம் வாழ்க!

(வியர்வையை வழித்தெறிகிறான்—வீரர்கள் ஆரவாரம்— "கயற்கொடி—வாழ்க வாழ்க!"—முழக்கம்—நெடுஞ்செழியர்— வாழ்க வாழ்க" முழக்கம்—பாண்டியப் பேரரசு! வெல்க வெல்க!" முழக்கம்.)

## காட்சி 13

[கடற்கரையில் அன்னிமிஞ்லி.]

அன்: நான்கு நாட்களாகியும் மன்னரைக் காணோம்: மாவீரர் படையையும் காணோம்; போர் கடும்போர் என்றாரே!— ஒருவேளை—என்ன பேதைமை! பெண்புத்தி பின்புத்தி என்பதற்கேற்ப என்ன நினைப்பு நினைத்துவிட்டேன்! நெய்தல்நாடு வென்றே தீரும். அரண்மனையை யடுத்த சுரங்கப்பாதை வழியே தனியாகக் கடற்கரைக்கு வந்து விட்டேனே! தலைநகரே வெறிச்சோடிக்கிடக்கிறது.

(படைவீரன் ஒருவன் காயங்களுடன் மூச்சுவாங்க ஓடிவந்து வீழ்கிறான்.)

வீரன்: அரசி! கெட்டுவிட்டது காரியம்!

அன்: என்ன!

வீரன்: பாண்டியர் வென்றுவிட்டனர்!

அன்: (அலறி) ஆ!

வீரன்: படைவீரர் மாண்டுவிட்டார்; எஞ்சியவன் நானொரு வனே!

அன்: ஐயோ!....

வீரன்: (தலைகுனிந்து) மன்னர் விழுப்புண்பட்டு வீரமரண மடைந்து விட்டார்!

அன்: ஐயய்யோ!....(விழுந்து மயங்குதல்.)

வீரன்: ஆ....கடைசியில் எவ்வளவு பாவம் செய்துவிட்டது என் வாய்! மன்னர் மரணச் செய்தியைப் பொல்லாத நானு வந்து கூறியிருக்கவேண்டும்! ஏ நெய்தல் நாடே! கடலே!

என் கடமை முடிந்துவிட்டது! இனி எனக்குச் சாவு பெரிதல்ல! வாழ்க என் தாய்நாடு! (வீழ்ந்து சாகி

அன் : (தெளிந்து) என் காதலர் மாண்டுவிட்டார்!....என் கணவர் மாண்டுவிட்டார்!....இல்லை; இல்லை; வீரசுவர்க்கம் எய்திவிட்டார்! இறக்கும்போது....ஐயோ! என் நினைவோடு வீழ்ந்திருப்பார்! (புலம்பி) என் கனவு, ஆசை, வாழ்வு, எல்லாம தூள்! குருடான தந்தையின் இறப்புக்குப்பின் யாருக்காக வாழ்ந்தேனோ அந்த மனிதர் அமரராகிவிட்டார்! ஏ கடலே! கடற்கரைச் சோலையே! அலைகளே! தாவிவரும் கடற்காற்றே! இனி நான் யாருக்காக வாழவேண்டும்!.... இனி நான் யாருக்காக வாழவேண்டும்? காதலனுக்காக வாழ்ந்தாள் அன்னிமிஞிலி! காதலனுக்காக வாழ்ந்தவளைக் கடல் தழுவிக்கொண்டது என்று உலகம் பேசட்டும்!.... ஏ....அறக்கடவுளே! மறுபிறப்பிலாவது என் காதலரைக் கணவராகக்கொள்ளும் நற்பேற்றை எனக்கு வழங்கு!

(கடலில் பாய்ந்து வீழ்கின்றாள் அன்னிமிஞிலி! தூரத்திலிருந்த காடுகளினூடிருந்து ஓடிவருகிறான் நன்னன்.)

நன் : மிஞிலி!....மிஞிலி! என்ன காரியம் செய்தாய்? (படை வீரன் இறந்துகிடப்பதைப் பார்க்கிறான்.)

ஐயோ! என்ன இது விபரீதமாக இருக்கிறதே; (எண்ணி) ஓ தலையாலங்கானத்துப்போரில் வீரமரணம் அடைந்துவிட்டான் போலும் திதியன்! செய்தி கொண்டுவந்திருக்கவேண்டும் இவ் வீரன்! உண்மைக் காதல் விளக்காகிய மிஞிலி வாழத் துணியாது ஓடிக் கடலில் வீழ்ந்துவிட்டாள. (கண்ணீர்விட்டு) அன்பின் திருவுருவமே! தூய அன்பின் திருக்கோவிலே! உன்னை வஞ்சித்துக்கொள்ள இருந்தேனே இந்த வடிகட்டின மடையன்! (அழுகிறான்) அதோ....அதோ... எழும்பி வரும் அலையிலே கருங்குழல்! ஆம....ஆம்....மிஞிலியின் திருமேனிதான்!

(பெரிய அலை ஒன்றுவந்து மிஞிலியின் உடலத்தை ஒதுக்குகிறது—ஓடிச்சென்று கண்டு உயிரற்ற அவ்வுடலைத் தூக்கிக்கொள்கிறான் நன்னன். அன்னிமிஞிலி! நன்னன் உன் அண்ணன்! நன்னன் உன் அண்ணன்! என் அருமைத் தங்கையே! நெய்தல் நாட்டு நீதி விளக்கே! உன் வாழ்வு என்னைத் திருத்திவிட்டது! நான் இனி நல்லவன்; அன்பு மணக்கும் உன் உடலையேனும் சுமக்கும் பேறுபெற்றேன் நான்!

(கடற்கரை வழியே நீர் சொட்டச் சொட்ட அவள் உடலைச் சுமந்து செல்கிறான் அழுதபடியே நன்னன்.)

---

# குறளும் சிலம்பும்

[திரு. ச. அகத்தியலிங்கம், M. A., Bsc.]

மனிதனின் உள்ளத்தில் ஊறுகின்ற உணர்ச்சிகளைப் பிறருக்குத் தெரிவிக்கப் பயன்படுகின்ற கருவியே மொழி. இத்தகைய மொழிகள் உலகில் பல்கிப் பெருகியிருப்பதைக் கண்கூடாகக் காண்கிறோம். மூன்று ஆயிரத்துக்கும் அதிகமான மொழிகள் உலகில் வழங்கி வருகின்றன என்று மொழி நூல் அறிஞர்கள் கணக்கிட்டுள்ளனர். இத்தகைய மொழிகள் பல பயின்றுவரினும் ஒருசில மொழிகளே பழமையும் இலக்கியச் சிறப்பும் இலக்கிய அரணும் பெற்றுச் சாகாமொழிகளாய்த் திகழ்ந்து வருகின்றன. அத்தகைய மொழிகள் சிலவற்றுள் நம் தமிழ் மொழியும் ஒன்று என்றால் அது பொய்யுரையோ புகழ்ச்சியுரையோ அன்று. இத்தகைய சீரும் சிறப்பும பெற்ற தமிழ் மொழியில் இறவாத இலக்கியங்கள் ஏராளம். அவற்றுள் அன்று முதல் இன்றுவரை தன் மணம் பரப்பி நிற்கும் திருக்குறள் தமிழரின் ஒப்பற்ற செல்வமாகும். தமிழரின் இதயங்களை மட்டுமல்லாமல் வீரமாமுனிவர், போப், டெய்லர், எல்லிஸ் போன்ற பிறநாட்டு அறிஞர்களின் இதயங்களையும் கொள்ளை கொண்டு நிற்பதை நாம் உணரமுடியும். இதனாலன்றோ புரட்சிக் கவிஞன் பாரதியும்,

"வள்ளுவன் தன்னை யுலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு."

என்று மற்றைக் கவிஞர்கட்கெல்லாம் ஏற்றாத உலகக் கவிஞன் என்ற பட்டத்தைக் கொடுத்துப் பாராட்டியுள்ளான்.

சிந்தனைக்கு விருந்து வேண்டுமா? சீரிய அறங்கள் பல வேண்டுமா? களவு வாழ்க்கையின் வழிவகைகள், கற்பு வாழ்வின் ஊடல் கூடல் இவற்றின் நுணுககங்கள் என்றின்னோரன்ன பல கருத்துக்களின் கருவூலமாக உலகத்துக்கெல்லாம இவ்வொப்பற்ற நூலை ஆக்கித்தந்த உலக மகா கவிஞர் வள்ளுவரின் புலமைதான் என்னே! இது கருதியன்றோ மதுரைத் தமிழ் நாகனார் என்னும் நல்லிசைப் புலவர்,

"எல்லாப் பொருளும் இதன்பாலுள இதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லை."

என்று கூறிப் போந்தார்.

இவரைப் போன்று இன்னொரு சிறந்த கவிஞரை இரண்டாம் நூற்றாண்டுத் தமிழகம் பெற்றெடுத்தது. அவர்தான் சிலப்பதி

காரத்தை ஆக்கித் தந்த இளங்கோவடிகள். பிறப்பால் மட்டும் மன்னராக இல்லாமல் எண்ணத்திலும் இதய ஆழத்திலும் காப்பியச்சுவையை நம்கருத்தில் பதியவைப்பதிலும் மன்னராகவே திகழ்பவர் அவர். அவர் மாண்டபோதிலும் அவர் ஆக்கித்தந்த அமர இலக்கியம், கண்ணகியின் காப்பியம் மறையவில்லை. கால வெள்ளத்தால் தாக்கப்படாதது அது. எத்தனை நூற்றாண்டுகளாயினும் இமயம்போல் என்றும நின்று நிலவும் வன்மை படைத்தது. இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழையும் கூறும் நூல். இதனாலன்றோ அவ்விரண்டாம் நூற்றாண்டுக் கவிஞரை இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்,

> "தேனிலே ஊறிய செந்தமிழின் சுவை—தேரும்
> சிலப்பதி காரம்."

என்று பாடிப்போந்தார்.

ஆங்கிலத்தில் பழமொழி ஒன்றுண்டு. 'சிறந்த அறிஞர்கள் ஒரேமாதிரி எண்ணுகின்றனர்' என்பதே அது. இப்பழமொழிக்கு விரிந்த உலகில் சான்றுகள் பல பரந்துகிடப்பதைக் காணலாம இவ்விதிக்கு மேற்கூறிய புலவர்களும் விதிவிலக்கானவர்கள் அல்லர். குறளையும் சிலம்பையும் ஓதியுணர்ந்தவர்கள் இதனை நன்கு உணர்வர். அரசியல், ஊழ்போன் றின்னோரன்ன திறன்களில் இவர்களிடையே சிறந்த ஒற்றுமையைக் காண முடியும். எனினும் பெண்களின் நிலையில் இவ்விருபெரு கவிஞர்களின் கருத்துக்களை ஒப்பிடுவதே இக் கட்டுரையின் நோக்கம.

> " மஙகைய ராகப் பிறப்பதற்கே—நல்ல
> மாதவம் செய்திட வேண்டுமம்மா."

என்று பாடினர் நம்மோடு வாழ்ந்து மறைந்த கவிஞர். இவ் வுண்மையை நன்கு அறிந்திருந்தனர் இக் கவிஞர் பெருமக்கள். பெண்மைக்கு ஏற்றமும் தோற்றமும் பீடும் பெருமையும் கண்டவர்கள் இவர்கள். ஒருவர் உண்மையைச் சுருக்கமாக இலக்கணமாகக் கூறிச் சென்றார். இன்னொருவர் அதன் இலக்கியமாகக் கண்ணகியின் காப்பியத்தை ஆக்கி நின்றார். எப்பொழுதும் இரு கவிஞர்கள் ஒரே கருத்தைக் கூறினும் ஒரே வழியைப் பின்பற்ற வேண்டும் என்ற நியதி இல்லையல்லவா ?

பண்டைத் தமிழர் வாழ்க்கையை இல்லறம் துறவறம் என்று இரண்டாகப் பிரித்துள்ளனர். இவற்றுள் இல்வாழ்வுக்கு இன்றியமையாதவள் இல்லாள். இவளை மையமாக வைத்தே இல்லறம் இயங்குகிறது. பெண்களைப் பற்றிச் சிந்தித்த வள்ளுவரின் உள்ளம் பெண்ணின் இலக்கணத்தையும் வகுத்துச் சென்றது.

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்."

எனபதே அவர் பெண்மைக்கு வகுக்கும் இலக்கணம். ஒரு பெண் முதலாவதாகத் தன்னைக் காத்துக்கொள்ள வேண்டும். அஃதாவது கற்புக்கரசியாக வாழ்தல் வேண்டும். இரண்டாவதாகத் தன்னைக் கொண்ட கணவனைக் காத்தல் வேண்டும். மூன்றாவதாகத் தகைசான்ற சொல் காத்தல் வேண்டும். அஃதாவது இருவர்மாட்டும் புகழ் நீங்காது காத்தல் வேண்டும்.

பெண்ணொருத்தி கணவன் ஒருவனையடைந்துவிட்டால் அவன் வேறு தான் வேறு என்ற எண்ணம் அவள் உள்ளத்தில் எழுதல் ஆகாது. உடல் இரண்டேயாயினும் உள்ளம் பிணைந்து வாழ்கின்ற வாழ்க்கையே அவர்கள் வாழ்க்கை அவனோடு இரண்டறக் கலந்துவிடுகின்ற தன்மையைக் காண்கின்றோம். இதனைக் கருதியன்றோ திருநாவுக்கரசரும்,

"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே."

என்று கூறி நிற்கிறார். இத்தகைய ஒருமை நிலையைக் கணவன் மனைவி வாழ்வில் காண்கிறோம் ஆகையினால்தான் வள்ளுவர் 'தற்காத்து' என்று முதல் பண்பையும் 'தற்கொண்டாற் பேணி' என்று இரண்டாவது பண்பையும் கூறியவர் மூன்றாவது பண்பை இருவர்மாட்டும் ஏற்றிப் பொதுவாகக் கூறியுள்ளார். இருவரில் ஒருவருக்குப் பழிவரினும் அதனால் பாதிக்கப்படுபவர்கள் இருவருமே. இதனால்தான் சிறந்த கற்புடைய பெண் தன் கணவன்மாட்டுப் பழிவரினும் தன்மாட்டு வரினும் அம் மாசினைத் துடைத்தெறிவதில் தயக்கம் கொள்ளுதல் கூடாது என்று கூறினார் வள்ளுவர்

இக் குறளுக்கு இலக்கியமாகவே இளங்கோ கண்ட கண்ணகியின் வாழ்வு அமைந்து கிடந்தது. பெண்மைக்கே உரிய அணிகலனும் கற்பை .அவள் கொண்டிருந்த நிலைமை தமிழ்ப் பெண்கட்கே பெருமைதருவதாகும். அப் பத்தினியின் கற்பினைக் கூற வந்த இளங்கோவடிகள்,

"தீதிலா வடமீனின் திறம் இவள் திறம்." (க-உள)

"அருந்ததி அன்னாள்." (௧-௫௰

"மாசில் கற்பின் மனைவி." (௧௩-௧௰௨)

"கற்புக்கடம் பூண்ட இத்தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்." (௧௫-௧௪௩, ௧௪௪)

என்றெல்லாம் பலபடக் கூறி அவள் கற்பின் திறத்தைப் பாராட்டுகிறார். எனவே சிறந்த இலக்கண நூலாகிய திருக்குறளுக்கு இலக்கியமாக நின்று நிலவுகிறாள் கண்ணகி.

இரண்டாவது பண்பாக வள்ளுவர் கூறுவது தற்கொண்டானைப் பேணுவதாம். இதற்குப் பொருள்கூறப் போந்த பரிமேலழகர் 'உண்டி முதலியவற்றால் பேணி' என்று கூறுகிறார். கண்ணகியின் வாழ்வில இந் நிலையைக் கொலைக்களக் காதையின்கண் காண்கிறோம். அவலச் சுவையை நம் உள்ளத்தில் எழுப்பவே இளங்கோவடிகள் இந் நிகழ்ச்சியை முதலில கூறாது கொலைக்களக் காதையின்கண் கூறுகிறார். இந் நிலையில் இளங்கோவடிகளின் திறம் அறிந்து மகிழற்குரியதாகும். தனது மென்மையான கைந் நோவ வெள்ளரிக்காய் பாகல்காய் போன்றவற்றை அரிந்து கறியாக்கி இலையிட்டுக் கணவனுக்குப் படைக்கின்ற தன்மை கண்ணகியின் இப் பண்பை நன்கு காட்டும்.

கோவலன் கண்ணகியைத் துறந்து மாதவியோடு வாழ்ந்த காலை கண்ணகி நடந்துகொண்ட தன்மையும் அப் பததினித் தெய்வததின இப் பண்பையே காட்டும். கோவலனை இன்பமாக வாழச் செய்வதே அவனைப் பேணுதல் என்று எண்ணியது அப் பததினியின் உள்ளம். எல்லாவறறிற்கும் மேலாக மாதவியைத் துறநது கண்ணகியையடைந்த 'இலம்பாடு நாணுத் தரும் எனககு' என்று கூறிய கோவலனிடம் தான் இழந்த இன்பத்தையும் எண்ணாது தொலைதத பெருநிதிக்குவையையும் கருதாது மாற்றானுக்கா என் காற்சிலம்பு என்ற உணர்ச்சியையும் அடையாது,

"நலங்கேழ் முறுவல் நகைமுகங் காட்டிச
சிலம்புள கொண்மென."

என்று கூறிய அப்பத்தினித்தெய்வத்தின் பண்பை என்னென்று பாராட்டுவது? தான் துன்பத்தின் எல்லையில் நின்றபோதிலும் தன்னைக் கொண்டவன் இன்பத்தின் எல்லையில் திளைத்தல் வேண்டும் என்றும் அதுவே அவனைப் பேணுவது என்றும் எண்ணிய அவள் வள்ளுவன் கண்ட இலக்கணத்திற்கு இலக்கியமன்றோ!

வள்ளுவர் கூறுகின்ற மூன்றாவது பண்பே கண்ணகியின் வெற்றிக்குக் காரணம். புகார்க் காண்டத்தில் அமைதியின்

உறைவிடமாக விளங்கிய கண்ணகி மதுரைக் காண்டத்தில் ஆத்திரத்தின் பிறப்பிடமாக விளங்குகிறாள். மனையறம் படுத்த காதையில் கோவலன் புகழ்ந்தபோதும் வேட்டுவ வரியில் சாலினி புகழ்ந்தபோதும் கூச்சம் உற்ற கண்ணகி கணவன் கள்வன் என்றும நீங்காப் பழியுடன் கொலைப்பட்டான் என்றும் கேட்ட போது குமுறும் எரிமலையாக மாறுகிறாள். கோவலனின் கொலை கூட அவள உள்ளத்தைத் தாக்கவில்லை. தன் கணவன் கள்வனா? என்று எண்ணியபோதுதான் துடிதடுதெழுந்தது அத் தூய உள்ளம். அத் தூய உள்ளததில் எழுந்த துடிதுடிப்புத்தான் மதுரையைச் சுட்டெரித்தது. இந நிலையைத் துன்ப மாலையில் கூறுகின்ற கவிஞனின் திறம் வியந்து மகிழ்தற்குரியதாம்.

கோவலனைக் காணாது நடுககமு மிகுந்திருந்தாள் கண்ணகி. கணவன் காறசிலம்பை விற்று வருவான் என்று எண்ணி நின்றாள். ஆனால் வந்த பெண்,

" அரசுறை கோயில் அணியார் ஞெகிழம்
கரையாமல் வாஙகிய கள்வனும் என்றே
கரையாமல் வாங்கிய கள்வனும் என்றே
குரைகழல் மாக்கள் கொலைகுறித் தனரே."

என்று கூற அதைக் கேட்ட கண்ணகி,

"பொங்கி எழுந்தாள் விழுந்தாள் பொழிகதிரத்
திஙகள் முகிலோடுஞ் சேணநிலம் கொண்டெனச
செஙகண் சிவப்ப அழுதாள் தன்கேளவனை
எஙகணு என்னு இனைந்தேஙகி மாழ்குவாள்."

என்று கவிஞன் கூறுமாறு அழுது அரற்றி நிற்கின்ற நிலையைக் காண்கிறோம. கள்வன என்று கேட்டவுடன் பொங்கி எழுகின்ற தன்மையைக் காண்கிறோம. கணவனுக்குப் பழி என்று கேட்ட போது அதைத் துடைத்து எறியவே எண்ணுகிறாள். இவ்வெண் ணததின் வெற்றியே கண்ணகி வழககுரைததும் பாண்டிய மன்னன்,

" யானோ அரசன் யானே கள்வன்
மன்பதை காககும் தென்புலங காவல்
என்முதல பிழைததது கெடுகஎன ஆயுள்."

என்று கூறி மயங்கி வீழ்நததும், வளளுவரின் இலக்கணத்துக் கேற்பத் 'தகைசான்ற சொற்காககும்' இப் பண்பன்றோ கண்ணகியை,

"ஒருமா மணியாய் உலகிற் கோங்கிய திருமாமணி"

யாக மாற்றியமைத்தது. இவற்றை எல்லாம் நோக்க வள்ளுவரின் ஒரு குறள் இளங்கோவின் உள்ளததில் ஊடுருவிய தன்மை நன்கு புலப்படும்.

---

# புடவை

[வித்துவான் திரு. பெ. கோவிந்தனார்]

புடவை வாங்க வில்லையோ அம்மா புடவை வாங்குக.
உடலுக் கேற்ற வண்ணப் புடவை உவந்து வாங்குக. 1

பவழம் போலும் சிவப்புப் புடவை பச்சை நூற்புடவை
உவகை யூட்டும் மஞ்சட் புடவை உடுத்த வாங்குக. 2

பத்துப் பன்னி ரண்டெ ரெட்டுப் பலமு ழப்புடவை
கத்த ரிப்பூம் புடவை யுண்டு களித்து வாங்குக 3

மன்னு செல்வங் கட்கு மேலாம் மானத் தைக்காத்துப்
பொன்ம ணிக்கும் அழகு செய்யும் புடவை வாங்குக. 4

பள்ளிக் கேகும் காலத் துடுக்கப், பாட்டுக் கள்பாடிப்
புள்ளி மான்போல் நடித்தற் குடுக்கப் புடவை வாங்குக. 5

இடுப்பிற் குடுக்கும் மென்னூற் புடவை இலங்கு மெய்க்குமேல்
உடுத்தற் குகந்த பட்டுப் புடவை உவந்து வாங்குக. 6

பிறந்த நாள்வி ழாவி னுக்கும் பேணும் திருவிழாச்
சிறந்த நாட்கும் உடுக்கும் புடவை தெரிந்து வாங்குக. 7

கல்வி செல்வம் வேண்டித் தெய்வம் காண்ப தற்குடுக்க
மெல்லி ழைப்பூஞ் சரிகைப் புடவை விரும்பி வாங்குக. 8

பொங்க லிட்டுச் சுற்றத் தோடு புதுவி ழாக்கொள்ளக்
குங்கு மப்பூஞ் சரிகைப் புடவை குளிர்ந்து வாங்குக. 9

மணப்பெண் மகிழக் கண்டார் மகிழ மாப்பிள் ளைமகிழப்
பணத்திற் கேற்ற பட்டுப் புடவை பார்த்து வாங்குக. 10

# சென்னைமாகாணத் தமிழ்ச் சங்கம்
# ஆசிரியர் கல்லூரிக் கலைச்சொற்கள்
## பரிசளிப்பும், நூல்வெளியீடும்

***தோற்றுவாய்***

*திருவாளர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் திருநெல்வேலியில ஒரு தமிழர் மாநாடு கூட்டித் தமிழ்ச் சங்கம் ஒன்று நிறுவ வேண்டும் என்ற எண்ணத்துடன் திருநெல்வேலிக்கு வந்து 25-11-1933 இல் திருவாளர்கள் தாசில் மா வே. நெல்லையப்ப பிள்ளை அவர்கள், தாகூர்ச் சட்ட விரிவுரையாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், வித்துவான் பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்கள் இம் மூவருடன் கலந்துபேசி அங்ஙனமே தீர்மானித்தார்கள் 7-1-1934 இல் வரவேறபுக் கழகம் அமைக்கப் பெற்றது. வள்ளுவர் யாண்டு 1965 வைகாசித் திங்கள் 28, 29 (1934 ஜூன் 10, 11) ஞாயிறு, திங்கள் ஆகிய இரண்டு நாட்களிலும் திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் சென்னைமாகாணத் தமிழர் முதலாவது மாநாடு கூடிற்று; அதனைத் தொடங்கிவைத்தவர் அந்நாள் அமைச்சர் பொன்னம்பல தியாகராசன் அவர்கள், அதன் தலைவர் செந்தமிழ்ப் புலவர் த. வே. உமாமகேசுவரன் பிள்ளை அவர்கள்; வரவேற்புத் தலைவர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்; மாநாட்டு அமைச்சர்கள் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்களும் பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்களும் ஆவர். புலவர் மாநாடு ஒன்றும் நடைபெற்றது. அதன் தலைவர் அருட்டிரு மறைமலை அடிகளார்; வரவேற்புத் தலைவர் மா. வே. நெலலையப்ப பிள்ளை அவர்கள். அந்த மாநாட்டிலே தோன்றி உடனே பதிவு செய்யப்பெற்று விளங்குவதே நம் **சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம்.***

*நம் சங்கம் தொடங்கி இருபத்துநான் காண்டுகள் கழிந்து இப்போது இருபத்தைந்தாவது ஆண்டு தொடங்கி நடந்துவருகிறது. இது வரை நமது சங்கம் செய்துள்ள சிறந்த பணிகள் பின் வருவன:*

*(1) சென்னை, திருநெல்வேலி, மதுரை, தஞ்சாவூர் முதலிய பல இடங்களில் பதினைந்து* **தமிழர் மாநாடுகளையும்** *எட்டுப்* **புலவர் மாநாடுகளையும்** *கூட்டியிருக்கிறது.*

*(2) முதல் மூன்றுண்டுகளில்* **"தமிழ்த்தாய்"** *என்ற முத்திங்கள் வெளியீட்டை வெளியிட்டு வந்தது.*

*(3) திருநெல்வேலியில் நான்காண்டுகள்* **"தமிழ்க்கல்லூரி"** *ஒன்றை மிகவும் வெற்றியாக நடத்திவந்தது. நம் நாட்டு வேளாண்மை*

அமைச்சராகவும், பின் முதலமைச்சராகவும், அதன்பின் ஒரிசா நாட்டு ஆளுந (Governor) ராகவும் இருந்த திரு பூ. ச. குமாரசாமி ராசா அவர்களால் அக்கல்லூரி தொடங்கிவைக்கப் பெற்றது. மூன்றுவது பாரம் முடியப் படித்து நான்கு ஐந்து ஆறுவது பாரங்களையே பார்த் தறியாதவரும்கூட அதிற் சேர்த்துக் கொள்ளப் பெற்றுர்கள். ஓரே ஓராண்டுமட்டும் கற்றவுடன் அவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத்தார் நடத்திய மெட்றிக்குலேசன் ஆங்கிலமும் இன்டர்மீடியேட்டுத் தமிழும் (பகுதி 2) ஆகிய இரண்டு தேர்வுகளிலும் தேர்ந்து இன்டர்மீடியேட்டு வகுப்பில் "டி" பகுதியிற் சேர்த்துக் கொள்ளப் பெற்றுர்கள். அவர்கள் அவ்வகுப்பிலும் தேறிச் சிலர் பி. ஏ , பட்டமும் பெற்றிருக் கிருர்கள்.

(4) சென்னை இந்து அறநிலையப் பாதுகாவற் கழகத்தார் துணை யைக்கொண்டு திருநெல்வேலியில் மூன்றுமாதம் சமயவிரிவுரையாளர் பயிற்சிக் கல்லூரியை வெற்றியாக நடத்தியிருக்கிறது

(5) தமிழ்நாடு சித்தவைத்திய சங்கத்துடன் சேர்ந்து 1957 இல் திருநெல்வேலியில் தமிழ் நாடு சித்தவைத்திய மாநாட்டை நடத்தியது. அதன் விளைவாக இந்து அறநிலையத் துறையினர் குற்றுலத்தின் அருகேயுள்ள பண்புளியில் சித்தவைத்திய ஆராய்ச்சி மன்றம் ஒன் றினைத் தொடங்கியிருக்கிருர்கள்.

(6) உயர் பள்ளிகளுக்குரிய எல்லாப் பாடங்களுக்கும் கலைச் சொற்களையும், தமிழாட்சிக்குரிய தமிழாட்சிச் சொற்களையும், ஆசிரியர் கல்லூரிகளுக்குரிய கலைச்சொற்களையும் ஆக்கி அமைத்திருக்கிறது. இதுபற்றிய விவரங்களைக் கீழே குறிப்பிடுவோம்.

## நம் கலைச்சொல்லாக்கமும் அரசாங்கமும்

**உயர்பள்ளிக் கலைச்சொற்கள்**

சங்கம் தொடங்கிய அன்று தொட்டுக் கலைச்சொல்லாக்கத்தில் ஈடுபட்டு அதற்கென்றே நான்கு பெரிய மாநாடுகள் நடத்தி 1938 இல் 'கலைச்சொற்கள்' என்ற நூலைச் சென்னை, திருவாங்கூர் ஆகிய பல் கலைக் கழகங்களின பொருளுதவிகொண்டு வெளியிட்டது. சென்னை அரசாங்கம் அந்நூலைப் பாராட்டி மாகாணப் பொதுக்கல்வி இயக்குநர் (Director of Public Instruction) வழியாகத் (எண் 45290 B-3; 9-11-1938) தமிழ் நாட்டிலுள்ள உயர்நிலைப் பள்ளிகளுக்கெல்லாம் அரசாங்கச் செலவில் ஒவ்வொரு படி வாங்கி அனுப்பி, அச்சொற்களை ஆசிரியர்கள் பயன்படுத்திக் கணக்கு, பூதநூல், வேதிநூல், உடலிய லும் நலவழியும், பயிர் நூல், வரலாறு, வேளாண்மை ஆகிய பாடங்களை யெல்லாம் கற்பித்தல் வேண்டும் என்று சுற்றுணை அனுப்பியது. அவ் வாண்டில் இராசபாளையத்தில் நடைபெற்ற தமிழ் நாட்டுக் காங்கிரசு

மாநாடு நமது சங்கப் பணியைப் பாராட்டித் தமிழ் மக்கள் அனைவரும் சங்கத்துக்குப் பெருந்துணை புரியவேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றியது. உயர் திருவாளர்கள் சாமி விபுலானந்தர் அவர்கள். இராசகோபாலாச்சாரியார் அவர்கள், M. S. சபேச ஐயர் அவர்கள், N. சுப்பிரமணிய ஐயர் அவர்கள், சா. கோ. மணவாள இராமாநுசம் அவர்கள், வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்கள், இலங்கை K. S. இராமசாமி ஐயர் அவர்கள் முதலிய தலைவர்கள் முறையே வேதி நூல், பூதநூல், பயிர்நூல், பூகோளம், உடலியலும் நலவழியும், வேளாண்மை, கணக்கு ஆகிய குழுக்களுக்குத் தலைமையாயிருந்து சொற்களை ஆக்கித் தந்தார்கள். திருத்தங்கள் உதவிய பல்லோருள்ளும் **கோயமுத்தூர் மாவட்ட ஆசிரியர் சங்கம்** முதற் பரிசினைப் பெற்றது

1946 இலும் சென்னை அரசாங்கம் நமது சங்கம் குறிப்பிட்ட கலைப் புலவர்களைத் தமிழ்க்கலைச் சொல்லாக்கக் கழகத்திற் சேர்த்துக் கலைச் சொற்களைத் திருந்த ஆராய்ந்து முடிவுசெய்து வெளியிட்டுத் தமிழ்நாட்டு உயர்நிலைப் பள்ளிகளிலெல்லாம் அவைகளைப் பயன்படுத்தியே பாடங்களைக் கற்பித்தல் வேண்டுமென்று சுற்றுணை அனுப்பியது.

## தமிழாட்சி மாநாடுகள்

தமிழ் நாட்டின் ஆட்சி தமிழிலே நடைபெறும் பொருட்டு அரசாங்கத்தைத் தூண்டுவதற்காக நம் சங்கம் 18-10-1953 இல் திருநெல்வேலியில் ஒரு மாநாடும், 20-12-1953 இல் சென்னையில் ஒரு மாநாடும் வெற்றியுடன் நடத்தியது. அவைகளிற் பற்பல அரசியற்கட்சித் தலைவர்களும் பெரும் புலவர்களும் பங்கெடுத்துக்கொண்டார்கள்.

## தமிழாட்சிச் சொற்கள்

"உயர்நிலைப் பள்ளிகளில் தாய்மொழி வழியாகவே பாடங்களெல்லாம் கற்பிக்கப் பெறுதல் வேண்டும்" என்ற அரசாங்க ஆணை வெற்றியாக நடைபெறும் பொருட்டு அரும்பாடுபட்டு முன்பு கலைச்சொற்களை ஆக்கிவெளியிட்டதுபோல, இப்பொழுதும் தமிழ்நாட்டு அரசாங்கம் ஆட்சியைத் தமிழிலே நடத்துவதற்குத் தகுந்த துணைபுரியும் பொருட்டுத் தமிழாட்சிச் சொற்களை நமது சங்கம் அரசாங்கத்துக்கு ஆக்கித்தந்திருக்கிறது. 11-4-1955 இல் திருநெல்வேலியில் முன்னாள் நீதிபதி தா. கோமதி நாயகம் பிள்ளை அவர்கள் தலைமையில் ஆட்சிச் சொல்லாக்கக் கழகம் அமைக்கப் பெற்றது. அக் கழகம் ஆக்கிய சொற்கள் அச்சிடப்பெற்றுத் தக்கார் பலருக்கு அனுப்பப் பெற்றது. நல்ல திருத்தங்கள் தரும் முதல் மூவருக்குப் பரிசு வழங்கப்பெறும் என்று விளம்பரமும் செய்யப்பெற்றது.

சென்னை அரசாங்கம் ஒவ்வொரு நிலையிலும் சங்கத்துக்குத் துணைபுரிந்து வந்தது; நெல்லைக் குழுவினில் நெல்லைமாவட்ட அரசியற் பணி

யாளர் உறுப்பினராக இருக்க இசைவாணை (1317/23-3-1955) அனுப்பியது; தமிழகத்திலுள்ள மாவட்டங்களின் ஆட்சித் தலைவர்கள் யாவருக்கும் ஆட்சிச் சொற்படிகளை அனுப்பி ஆராய்ந்து நல்ல திருத்தங்கள் கண்டு சங்க அமைச்சருக்கு அனுப்பும்படி (11-2-1956இல்) எண் (799-56-1) ஆணையனுப்பியது அதன்படியே மாவட்ட ஆட்சித் தலைவர்கள் ஆங்காங்கே நன்ருக ஆராய்ந்து திருத்தங்களை அனுப்பி உதவினார்கள்; தக்க பல புலவர்களும் திருத்தங்கள் அனுப்பினார்கள

வந்துள்ள திருத்தங்களைப் பார்வையிட்டு ஆட்சிச் சொற்களை முடிவுசெய்து தரும்படி சென்னையில் ஆட்சிச்சொற் கழகத்தைச் சங்கம் 30-1-1956 இல் அமைத்தது. அதன் தலைவர் திரு. வேங்கடேசுவரன் அவர்கள், I. C. S சென்னை வருவாய்த் துறை அலுவலகத்தில் (Board of Revenue) சொல்லாக்கக் கூட்டங்கள் நடத்துவதற்கு 21-2-1956 இல் அரசாங்கம் இசைவாணை அனுப்பியதோடு 27-2-1956 எண் 773 ஆணையால் நம் சங்கத்திற்கு ஓராயிரம் ரூபா முனபணமாக வழங்கியது பின் 22-6-1956 இல் எண் 2207 ஆணையால் சங்கம் அமைத்துள்ள சென்னை ஆட்சிச்சொற் கழகத்தை ஏற்றுக்கொண்டது.

நமது சங்கம் அமைத்த சென்னை ஆட்சிச் சொற் கழகம் தமிழில ஆட்சி நடைபெறுவதற்கு ஏற்ற ஆட்சிச் சொற்களை ஆராய்ந்து அமைத்து 20-12-1956 இல் சென்னை அரசாங்கத்தினிடம் ஒப்புவித்தது; முதலமைச்சர் திருவாளர் கே. காமராசனார் அவர்கள் தங்கள் துணைவர்களாகிய பாதுகாவல் அமைச்சர் பக்தவத்சலம் அவர்கள் கல்வி அமைச்சர் சி. சுப்பிரமணியம் அவர்கள் அன்றைய மராமத்து அமைச்சர் சேதுபதியவர்கள் ஆகிய மூவருடனும் சென்னையில் இராசாசி மண்டபத்தில் நடைபெற்ற ஒப்படைப்பு விழாவினுக்கு வந்திருந்து ஆட்சிச் சொற் கழகத் தலைவர் திரு சு. வேங்கடேசுவரன், I. C. S, அவர்கள் ஒப்படைக்கச் சென்னை அரசாங்கத்தின் சார்பாகத் தமிழாட்சிச் சொற்களை ஏற்றுக்கொண்டார்கள். மறுநாள் தமிழாட்சிச் சட்டம் சென்னைச் சட்டசபையில் நிறைவேறியது. நமது ஆட்சிச் சொற்களை அச்சிட்டுப் பல துறைகளுக்கும் அனுப்பி நமது சென்னை அரசாங்கம் தமிழாட்சியை நடத்தி வருகிறது.

இவ்வகையில் நமது சங்கத்திற்குச் செலவாகியது ரூ. 3517-7-0. இந்த ரூபா. மூவாயிரத்து ஐந்நூற்றுப் பதினேழு அணு ஏழுமட்டும். இதில் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வழங்கிய ரூ. 250/-ம் சென்னை அரசாங்க முன்பணம் ரூ. 1000 மும் போக மீதிச் செலவு 2267-7-0-ம் சென்னை அரசாங்கம் வழங்கியது.

**ஆசிரியர்கல்லூரிச் சொல்லாக்கம்**

21-12-1956 இல் நடைபெற்ற ஆட்சிச்சொல் ஒப்படைப்பு விழாவிற் படித்த அறிக்கையின் இறுதியில் பின்வரும் பகுதி காணப் பெறு

கிறது. அது, "முன் உயர் நிலைப்பள்ளிகளில் தாய்மொழி வழியாகக் கல்வி நடைபெறுவதற்கு நமது சங்கம் இடைவிடாது முயன்று கலைச் சொற்களை அமைத்துத் தந்ததுபோலவே இனி, கல்லூரிக் கல்விக்கும் துணைபுரிய நமது சங்கம் முன்னின்று பணிபுரியும் கடமையும் உடையது அரசாங்கமும் பல்கலைக் கழகங்களும் இந்நிலை காணத் துணை புரியும் என நமது சங்கம் எதிர்நோக்கி நிற்கின்றது" என்பது.

இம் முடிவினுக்கிணங்க நமது சங்கம் பின்வருமாறு எண்ணியது: "ஆசிரியர் கல்லூரிகளிற் பயிற்சிபெறும், பி.ஏ., எம்.ஏ.ப் பட்டம் பெற்றோர் அனைவரும் உயர்நிலைப் பள்ளிகளில் ஆசிரியராக அமைந்து நம் தாய்மொழியாகிய தமிழிலே தானே பாடங்களைக் கற்பிக்கின்றனர்; ஆதலால் அவர்களுக்குப் பயிற்சிக்கல்லூரிகளின் பாடங்களெல்லாம் தமிழிற் கற்பிக்கப் பெறுவதுதானே நன்மை தரும் முறையாகும்." இங்ஙனம் எண்ணிய சங்கத்திற்குப் பெருந்துணையாயினர் சைதாப் பேட்டை ஆசிரியர்கல்லூரி முதல்வர் திரு. மு. இராம. பெருமாள் முதலியார், எம்.ஏ , எல்.டி. அவர்கள், கழகத் தலைமைதாங்கி நடத்தித்தரச் சென்னை மாநிலப் பொதுக் கல்வி இயக்குநர் திரு. நெ. து. சுந்தரவடி ், எம் ஏ , எல்.டி. அவர்களும் இசைவு தந்தார்கள். இவர்களுடைய ீயைப் பற்றிக்கொண்டு நம் தமிழ்ச் சங்கம் 15-3-1957-இல் ஆசிரியர் கல்லூரிக் கலைச் சொல்லாக்கக் கழகத்தை அமைத்தது.

அதன் உறுப்பினர் நம் நாட்டிலுள்ள ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளின் முதல்வர்களும் பல பேராசிரியர்களும் ஆவர். சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரிப் பேராசிரியரனைவரும் பேருதவி புரிந்தனர். இதிற் பணியாற்றும் அரசியல் அலுவலர்களுக்குச் சென்னை அரசாங்கம் 21-5-1957 இல் எண் 241 ஆணையால் அனுமதி யருளியது. இக் கழகம் 21-3-1957 இல் தொடங்கி நாடோறும் சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரியிற் கூடி 31-3-1957 வரை பணிபுரிந்தது. அதன் விளைவாக அமைந்தது "ஆசிரியர் கல்லூரிக் கலைச் சொற்கள்" என்னும் நூல். அதன் தற்கால வெளியீட்டு விழா 25-1-1958இல் திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் புனிதயோவான் கல்லூரி முதல்வர் திரு. வேதசிரோமணி அவர்களால் தமிழ்க்கொடி யேற்றப்பெற்று, புனித சவேரியர் கல்லூரி முதல்வர் மறைத்திரு சூசை அடிகளார் தலைமைதாங்க நடைபெற்றது. இந்துக்கல்லூரி முதல்வர் திரு. க ச. கணபதிப் பிள்ளையவர்கள் நூலை வெளியிட்டார்கள். வ. உ. சி. ஆசிரியர் கல்லூரி முதல்வர் திரு கி. அர. அப்புள்ளாச்சாரியாரவர்கள் வாழ்த்துரை வழங்கினார்கள். அந்நூல் ஆசிரியர் கல்லூரிகள் அனைத்திற்கும் அனுப்பப்பெற்றது; நல்ல திருத்தங்கள் தரும் முதல் இருவருக்குப் பரிசு வழங்கப்பெறும் என்ற விளம்பரமும் குறிக்கப்பெற்றது.

ஆசிரியர் கல்லூரிகள் யாவும் திருத்தங்கள் அனுப்பின; அவற்றை வைத்துக்கொண்டு சொற்களை முடிவு செய்யும்பொருட்டுச் சொல்

லாக்கக் கழகம் 26-3-1958, 27-3-1958; 10-6-1958, 11-6-1958, 12-6-1958, 13-6-1958, 14-6-1958; 12-11-1958, 13-11 1958, 15-11-1958, 24-12-1958, ஆகிய நாட்களில் கூடி நன்கு ஆராய்ந்து முடிவு செய்ததுடன் ஆட்சிச் சொற்களுடன் ஒப்பிட்டு ஆராய்ந்து முடிவுசெய்ய ஓர் உட்கழகத்தையும் அமைத்துப் பரிசுக்குரியாரையும் தீர்மானித்தது. மாநிலக் கல்வி இயக்குநர் திரு. நெ து. சுந்தர வடிவேலு அவர்களும், திரு. மு. இராம. பெருமாள் முதலியாரவர் களும், திரு. கி. அர. அப்புள்ளாச்சாரியாரவர்களும் செய்த பெருந் துணை அருந்துணையாகும்

உட்கழகம் 25-12-1958, 26-12-1958, 27-12-1958, 29-12-1958 ஆகிய நாட்களிற் கூடி ஒவ்வொரு நாளும் பல மணி நேரங்கள் பணியாற்றிச் சொற்களை நிறைவு செய்தது அங்ஙனம் அமைந்த சொற்கள் அடங்கிய நூலே 4-2-1959 ஆகிய இன்று அச்சாகி வெளி வருகின்றது.

இந்த வகையில் நமது சங்கத்திற்குச் செலவாகியது வள்ளுவர் 1988 (1957), 1989 (1958) ஆகிய இரண்டாண்டுகளிலுமாக ரூ. 1621-14 3 (1988 இல் ரூ 587-15-0 + 1989 இல் ரூ. 1033-15-3) ரூபா ஓராயிரத்து அறுநூற்று இருபத்தொன்று, அணா பதினான்கு, பைசா மூன்று மட்டும். இப்போது நடைபெறும் விழாச் செலவும், நூல் அச்சிட்ட செலவும் வேறு.

இங்ஙனமாக மிகச் சுருங்கிய செலவில் நமது சென்னை மாகாண தமிழ்ச் சங்கம் மிகப் பெரிய பணிகளை யாற்றி வருகின்றது.

## பரிசளிப்பு

**ஆட்சிச்சொற்கள் :**

பின் வருகின்ற பெரியார்களுக்குப் பரிசாகச் செப்புப் பட்டயம் வழங்கப்பெறும் :—

**சிறப்பு :** அமைச்சரவர்களுடன் இருந்து ஆட்சித் சொல்லாக்கத் துக்கு எல்லாத் துணையும் புரிந்த பேராசிரியர் ஆ. அருளப்பன் அவர்க ளுக்குத் "தமிழ்ப் பெரும்புலவர்" என்ற பட்டம் வழங்கப்பெறுகிறது.

**முதற் பரிசு :**

திரு. ஆர். வி. கிருஷ்ணையர் அவர்கள்,
(சென்னைச் சட்டசபை முன் செயலாளர்.)

**இரண்டாம் பரிசு :**

பேராசிரியர் ஞா. தேவநேயப்பாவாணர் அவர்கள்,
(அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழித்துறைப் பேராசிரியர்.)

திரு. K. S. சம்புநாதன் அவர்கள்,
(ஆங்கில அரசாங்கச் செய்திப்பணி, புதுதில்லி.)

இரண்டாம் பரிசு:

ஆசிரியர் சொற்கள்:

பின்வரும் கல்லூரிகளுக்குப் பரிசாகச் செப்புப்பட்டயம் வழங்கப்பெறும்

சிறப்பு: அடிப்படைப்பணிகள் முதல் பணி நிறைவுபெறும்வரை பெருந்துணை புரிந்த சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரிக்குப் பாராட்டுப் பரிசு வழங்கப்பெறும்.

முதற் பரிசு:

திருப்பராய்த்துறை விவேகானந்த ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி.

இரண்டாம் பரிசு:

தூத்துக்குடி வ. உ. சி. ஆசிரியர் கல்லூரி.

## சங்கத்தின் முன்நிற்கும் பணி

பாடச்சுவடிகள் இல்லாமையாகிய காரணத்தைக் கூறி 1936 இல் உயர்பள்ளிகளில் தாய்மொழி வழியாக எல்லாப் பாடங்களையும் கற்பிப்பதைப் பலர் பல காரணங்களால் எதிர்த்தார்கள். ஆனால் அரசாங்கம் எதையும் பொருட்படுத்தாது தாய்மொழி வழியாகத்தான் எல்லாப் பாடங்களும் கற்பிக்கப்பெறல்வேண்டும் என்று ஆணையிட்டது. அப்போது நமது சங்கம் கலைச்சொற்களை ஆராய்ந்து முடிவு செய்யும்பொருட்டுச் சென்னையிற் சொல்லாக்கக் கழகத்தை அமைத்தது. அக்கழகத்திற் சேர்ந்து பணியாற்ற அரசியற் பணியாளர் அனைவருக்கும் பொது அனுமதியை அரசாங்கம் அருளியது அப்போது சென்னைப் பல்கலைக்கழகத்தின் தற்காலத் துணைவேந்தராக இருந்த டாக்டர் இலட்சுமணசாமி முதலியாரவர்கள், திருவாளர்கள் வையாபுரிப் பிள்ளையவர்களையும், டாக்டர் சேதுப்பிள்ளையவர்களையும் பல்கலைக் கழகத்தின் சார்பில் அனுப்பியதோடு கலைச்சொற்கள் அச்சிடுவதற்கும் பொருளுதவிசெய்து ஆதரித்தார்கள். கழிந்த இருபது ஆண்டுகளாக உயர்பள்ளிகளில் நடந்துவரும் தாய்மொழி வழிக் கல்வியினால் எதுவும் குறைந்துவிடவில்லை. ஆங்கிலத்திற் சிறிது தகுதி குறைகிறதற்கு இது காரணம் அன்று. வேறு பல தக்க காரணங்கள் இருக்கின்றன.

கல்லூரிகளில் எல்லாப் பாடங்களையும் தாய்மொழி வழியாகக் கற்பியாமையினாலே பட்டம் பெறுபவர் பெரும்பாலோர் கிளிப் பிள்ளைகள் போலவே இருக்கின்றனர்; தாய்மொழியிற் கல்வி பெற்றால் மாணவர் பெரும்பாலோர் ஆராய்ச்சி வல்லுநராகி உலகத்துக்குப் பெரும் பயன் விளைவிப்பார்கள் என்பது உறுதி.

இப்போது ஆசிரியர் கல்லூரி கலைச்சொல்லாக்கம் நிறைவுபெற்று விட்டது. அச் சொற்களைப் பயன்படுத்தி நூல்கள் எழுதப்பெறு

கின்றன. அவை இன்னும் இரண்டு மூன்று மாதங்களில் வெளி வருவது உறுதி. அங்ஙனமே வாய்ப்பளித்தால் ஏனைய பொதுக் கல்லூரிகளிலுள்ள எல்லாப் பாடங்களுக்கும் தனித்தனி இவ்விரண்டு சிறந்த பாடச் சுவடிகளும் (Text Books) கலைச்சொற்களும் இரண்டாண்டுகளுக்குள் ஆக்கி அச்சிட்டுத் தருவது மிகவும் எளிது என்பதை அரசாங்கத்திற்கும் பல்கலைக்கழகங்களுக்கும் அன்புடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

**வேண்டுகை**

நம் சங்கத்தில் உறுப்பினராகச் சேர்ந்து கொள்வதற்குப் பின் வரும் துறைகளிலுள்ள அரசாங்க அலுவலர்களுக்கெல்லாம் அரசாங்கம் பொது அனுமதி வழங்கியிருக்கின்றது. 10-6 1955 அரசாங்க ஆணை எண் 1039, நலத்துறை, கல்வி, நாட்டாட்சி (Health, Education, Local Administation), 29-6-1957 அரசாங்க ஆணை எண் 2663 வருவாய்த்துறை, வணிக வரித்துறை, பத்திரப் பதிவுத்துறை, அற நிலையத்துறை (Revenue Department including the settlement of Estate Branch, commercial Taxes Department, Registration Department, Hindu Religious & Charitable Administration Department) தமிழ் மக்களனைவரும் நம் சங்கத்தில் உறுப்பினராகச் சேர்ந்து நம் தமிழ்த் தாய்க்குச் சேவை செய்ய அன்புடன் அழைக் கின்றோம்.

## நன்றியுரை

இங்ஙனமாகிய நம் சங்கத் தொண்டுகளிலே பேருதவி செய்துவரும் பேராசிரியர்களுக்கும் பெரும்புலவர்களுக்கும் சங்கத்தின் நன்றியுரியது. இன்று ஆசிரியர் கல்லூரிக் கலைச்சொற்களை வெளியிட்டருள வந்திருக் கும் கல்வி அமைச்சர் திருவாளர் சி சுப்பிரமணியம் அவர்களுக்கும், பரிசு பெறுவோரை வாழ்த்தியருள வந்திருக்கும் உள்நாட்டு அமைச்சர் திருவாளர் எம். பக்தவத்சலம் அவர்களுக்கும் நன்றி கூறுகிறோம். இன்று பேரவைக்குத் தலைமை தாங்கிச் செப்புப் பட்டயங்களை வழங்க எழுந்தருளி வந்திருக்கும் நமது கவர்னர் திரு. விட்ணுராம் மேதி அவர்களுக்கு நம் நன்றி என்றும் உரியது. இப் பெரியார்களுடன் இங்கே உளம் உவந்து வந்து குழுமியிருக்கும் பேரவையினர் அனைவரும் "நீடூழி வாழ்க" என நம் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் வாழ்த்துகின்றது.

சென்னை,<br>4-2-1959.

இ. மு. சுப்பிரமணிய பிள்ளை<br>அமைச்சர்

# தமிழினத்தின் இரு திருநாள்கள்*

[பண்டிதர், கா. பொ. இரத்தினம், எம். ஏ., பி. ஓ. எல்.,]

"உலகிலுள்ள எந்த இனமும் அறிவையும் உழைப்பையும் பெருக்காமல் தம் வாழ்வைப் பொங்கச் செய்தல் முடியாது. இந்த உண்மையைப் பல்லாயிர ஆண்டுகளுக்குமுன் நன்கு அறிந்தவர்கள் தமிழர்களே. எனினும் இன்று இவர்கள் உணர்வும் உறுதியுங் குறைந்து அறியாமைக்கும், சோம்பலுக்கும், கோழைத்தனத்துக்கும் ஆளாகிக் காட்சியளிக்கிறார்கள்.

"நல்லுழைப்பினைப் போற்றுதற்குத் தைப்பொங்கலையும் பேரறிவினைப் போற்றுதற்குத் திருவள்ளுவர் திருநாளையுங் கொண்டாடுதல் ஓங்கிய கொள்கைக்கு அறிகுறி; உயர்ந்த பண்பாட்டுக்கு உரைகல்; சிறந்த நாகரிகத்துக்கு எடுத்துக்காட்டு. இந்த இருநாளும் தமிழ்பேசும் மக்கள் யாவரும் சாதிமத அரசியற்கட்சி வேறுபாடுகளின்றிக் கொண்டாடுதற்குரிய நாள்கள். தமிழ்மக்கள் மாத்திரமின்றி முழு உலகமுமே கொண்டாடுதற்குரியன. நல்லுழைப்பையும் பேரறிவையும் போற்றாதவர்கள் மனிதராக வாழல் முடியுமா? எனவே தமிழ் இனத்துக்குப பொதுவான இந்த இரு திருநாள்களையும ஆண்டுதோறும் எஙகும் எல்லோருங கொண்டாடுதல் வேண்டும். தைப்பொங்கல் தைத்திங்களிலும், திருவள்ளுவர் திருநாள் வைகாசித் திங்களிலும் வருவதால் ஆண்டின் முதலிலும் நடுவிலும் பொருத்தமாகவும் அமைந்துள்ளன.

இவ்விரு திருநாள்களையும் சைவ சமயத்தோடுதொடர்பு படுத்த முயல்கிறார்கள், மற்றைய சமயத்தவர்கள் இவற்றைச் சைவ சமயத்தைச் சேர்ந்த திருநாள்கள் எனக் கருதுகிறார்கள். எனினும் சமயத்தால் வேறுபட்டாலும் மொழியால் நாமெல்லோரும் ஓரினத்தவர் என்ற கொள்கை எல்லாத் தமிழ் மக்களிடமும் நிலைபெறுதல் வேண்டும். இக்கொள்கையை நிலைநாட்டித் தமிழினத்தவரைச் சிறந்துயர்ந்த வாழ்வுடையவர்களாகப்-பழம் பெருமைக்குத் தகுதி யுடையவர்களாக—மானமுடையவர்களாக—ஒற்றுமையுடையவர்களாக ஆக்குதற்கும் இந்த இரு திருநாள்களையுங் கொண்டாடுதல் வேண்டும். சுருங்கக்கூறின் உலகெங்கும் வாழும் தமிழர்களிடையே இன உணர்ச்சி, மொழியுணர்ச்சி, தன்மான உணர்ச்சி, ஒற்றுமையுணர்ச்சி முதலியவற்றை உண்டாக்குவதும் இத் திருநாள்களின் நோக்கமாக அமைதல் வேண்டும்.

உழைப்பையும் அறிவையும் ஓங்கச் செய்வதற்கு உணர்ச்சியும் உறுதியும் நம்மிடையே போதிய அளவில்லை என்பதை நம்

---

* கொழும்புத் தமிழ்ச் சங்கங் கொண்டாடிய தமிழர் திருநாள் விழாவில் நிகழ்த்திய தலைமையுரை.

வாழ்வே காட்டுகிறது. சில நூற்றாண்டுகள் நாம் அரசியலில் அடிமைப்பட்டிருந்தோம். இன்று விடுதலைபெற்றும் எமது அடிமைப் பழக்கம் இன்னும் நீங்கவில்லை. சுதந்திர உணர்ச்சி விறிட்டுப் பொங்கவில்லை. நம் பண்பாடு, நாகரிகம், கலைகள், மொழி கள் இவற்றைக்கூட நாம் இன்னுஞ் செம்மைப்படுத்தவில்லை.

உண்மையான தமிழ் நாகரிகம் யாது? உயர்ந்த தமிழ்ப் பண்பாடு என்ன? சிறந்த செந்தமிழ் மொழி எத்தகையது? அருமையான அன்பு வாழ்வு எது? இவற்றைப் பற்றிப் பலர் இன்னும் நன்கு அறிந்து கொள்ளவில்லை அறிந்துகொண்ட சிலருக்கு இவற்றைப் போற்றி வளம்படுத்தப் போதிய உணர்ச்சி யில்லை. சிறந்த அறிவும் உறைப்பான உணர்ச்சியும் இருந்தால் நம் குழந்தைகளுக்குப் பிறமொழிப் பெயர்களை வைப்போமா? பொருள் விளங்காத பிறமொழிப் பாடல்களைப் பயிற்றுவிப் போமா? தமிழுக்கு நம் வாழ்வில் முதலிடமளிக்காமல் அதனை அடிமை மொழியாகத்—தீண்டாத மொழியாக—ஒதுக்கு வோமா? சாதிவேற்றுமை பாராட்டி இன்றுந் தீண்டாமையைப் போற்றுவோமா? உடல் உழைப்பை உழுதொழிலைச் செய்யாமல் உத்தியோகத்துக்கு மாத்திரம் அலைவோமா?

தமிழர்கள் இனிச் சிந்தித்துச் செயலாற்றல் வேண்டும். உணர்ச்சிகொண்டு உயர்ந்த வாழ்வு வாழல் வேண்டும் இத் திருநாள்கள் இரண்டிலும் நம் இனத்தை வாழவைக்க நாம் புதுப் புது முயற்சிகளை மேற்கொள்ளுதற்கு உறுதி பூணுதல் வேண்டும்.

தைப்பொங்கல் உழவர்களின் பெருநாள் மாத்திரமன்று. தொழிலாளர் திருநாளுமாகும். உழவுத் தொழில் எல்லாத் தொழில்களிலும் உயர்ந்தது. "சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்" என்றார் வள்ளுவர். உழவுத் தொழிலுடன் எல்லாத் தொழில் களும் இணைந்துள்ளன. எனவே உழவுத் தொழிலைப் போற்றும் பொழுது எல்லாத் தொழில்களையும் போற்றுகிறோம்; உழவர்களை மாத்திரமன்றி எல்லாத் தொழிலாளிகளையும் போற்றுகிறோம்; எமது தொழிலுக்கு உதவி புரியும் மாடுகள் முதலிய பிற உயிரினங்களையும் போற்றுகிறோம். எல்லோரும் உழைத்து எல்லோரும் வாழ்ந்து இன்புற்றிருக்க வேண்டும் என்ற அடிப் படைக் கொள்கையை நினைவு கூருகிறோம். புதுப்பிக்கிறோம். இத்தகைய தத்துவத்தை நமக்கு நினைவூட்டி நம்மை ஊக்கும் பொங்கற்றிருநாளைத் தமிழர் எல்லோரும் கொண்டாடுவோம். உழைப்பும், ஊக்கமும், அருளும், அன்பும் பொங்கிவழியச்செய்ய வழிவகுப்போம். வாழ்க தமிழ்; வளர்க தமிழினம்.

---

# செய்திகளும் குறிப்புக்களும்

(க) **சென்னை அரசினர் தமிழ் வளர்ச்சி, ஆராய்ச்சிக் குழு**

இந்தியக் குடியாட்சி நாளாகிய 26-1-59-இல், சென்னை அரசினர் தமிழ் வளர்ச்சிக்கும், ஆராய்ச்சிக்கும் என ஒரு குழுவினை நிறுவியுள்ளனர். அக்குழுவை ஆளுநர் திரு. விட்ணுராம் மேதியவர்கள் துவக்கிவைத்தார்கள் முதலமைச்சர் திரு. கே. காமராசர் அவர்கள் இவ்விழாவுக்குத் தலைமை தாங்கினர். விழா இராசாசி மண்டபத்தில் சிறப்புற நடைபெற்றது கல்வி அமைச்சர், திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். அதுகாலை, "தமிழைப் போதனா மொழியாக்க வேண்டுவது இன்றியமையாததாயினும் அதில பல இடர்ப்பாடுகள் உள்ளன பல்கலைக்கழகங்கள் இத்துறையில் முயலவேண்டும் என நான் அடிக்கடி வலியுறுத்திக் கூறியுள்ளேன் சென்னை, அண்ணாமலைப் பல்கலைக் கழகங்கள் இதற்கான முயற்சி செய்து திட்டம் வகுக்க முன்வரவில்லை. எனவே, அவற்றை நம்பிக்கொண்டிருந்தால் இக்காரியம் நிறைவேறுமோ நிறைவேறாதோ என்று ஐயுறவேண்டியிருக்கிறது. தமிழிலே பாடம் போதிக்க முடியாது, விஞ்ஞானக் கலைகளைப் போதிக்க முடியாது என்று சிலர் நினைத்துப் பேசுகின்றனர் அதில் உண்மையில்லை என்பதை விளக்கத்தான் துவக்கப்பட்டுள்ளது. இதில் பல கழகங்கள் பல ' என்று கூறினர்.

திரு. காமராசரவர்கள் தமது தலைமை உரையில், "படித்தவர்களின் மனப்பான்மை மாறவேண்டும். தமிழ் போதனா மொழியாக உள்ள பள்ளிகளுக்கே தம் பிள்ளைகளை அனுப்பவேண்டும். இதனைச் செய்தால் தமிழில் பாடப்புத்தகங்கள் தானே வெளிவந்துவிடும்" என்று கூறினர்.

ஆளுநர் திரு. விட்ணுராம் மேதியவர்கள் தமிழின் தொன்மை, சிறப்பு ஆகியவைபற்றியும், எதிர்காலத்தில் தமிழ் மேலும் சிறப்புறும் எனவும் தமது துவக்க உரையில் குறிப்பிட்டார். அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் திரு டி. எம் நாராயணசாமி பிள்ளையவர்கள் நன்றியுரை கூறக் கூட்டம் இனிது முடிவுற்றது.

**குறிப்பு:** தமிழ் வளர்ச்சிக்கும் ஆராய்ச்சிக்கும் அரசியலார் குழு அமைத்திருப்பது கண்டு மகிழ்கிறோம்—பாராட்டுகிறோம். செல்வர்களும், படித்தவர்களும்கூடி இக் குழுவின்பணி வெற்றிபெறத் தம்மாலான துணைபுரிவார்களாக.

(உ) **நாடகப் பேராசிரியர் திரு. ப. சம்பந்த முதலியாரவர்களுக்குப் 'பத்ம பூடண' பட்டம்**

தமிழகத்தின் மூதறிஞரும் 85 நாடக நூல்களை இயற்றிய நாடகப் பேராசிரியருமான பம்மல் சம்பந்த முதலியாரவர்கட்குக் குடியரசு நாளன்று இந்தியக் குடியரசின் தலைவர் '**பத்ம பூடணம்**' என்னும் பட்டத்தை அளித்துச் சிறப்பித்துள்ளார். குடியரசு விழாவை முன்னிட்டு இவ்வாண்டில் 37 பெருமக்களுக்குப் பட்டம் வழங்கப்பட்டுள்ளது. அவற்றுள் பத்ம விபூடண பட்டம் மூவருக்கும், பத்மபூடணப் பட்டம் 14 பேருக்கும், பத்மஸ்ரீ பட்டம் 20 பேர்கட்கும் அளிக்கப்பட்டுள்ளது.

குறிப்பு : தமிழகத்தின் தலைசிறந்த நாடகப்பேராசிரியரான திரு. சம்பந்த முதலியாரவர்களின் சிறப்பினை அறிந்து தகுதியான பட்டத்தை வழங்கிச் சிறப்பித்த மைய அரசியலாரின் நன்னோக்கத்தைப் பாராட்டுவ தோடு, பட்டம்பெற்ற பேராசிரியர் அவர்கட்கு நம் பாராட்டுதலையும் வாழ்த்தினையும் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

(ந) மார்ஷல் டிட்டோ வருகை

கடந்த 13-1-59 இல் யுகோஸ்லேவிய நாட்டுத் தலைவர் மார்ஷல் டிட்டோவும் அவர்தம் மனைவியாரும் சென்னைக்கு வருகை புரிந்தனர். அன்று முற்பகல் சென்னை அரசினரின் விருந்தினராகக் கிண்டி இராச பவனத்தில் தங்கி, மாலை மகாபலிபுரம் சென்றனர். மறுநாள் தில்லிக்குப் பயணமாயினர். மீண்டும் அவர்கள் தமிழ் நாட்டுக்கு வந்து 18, 19 தேதிகளில் திருச்சி, ஸ்ரீரங்கம், மதுரை முதலியவிடங்களுக்குச் சென்று ஆங்காங்குள்ள திருக்கோயில்களையும் அவற்றில் காணப்படும் சிற்ப ஓவியக் கலைகளையும் செல்வ வளங்களையும் கண்டு களித்துச் சென்றனர்.

குறிப்பு: மார்ஷல் டிட்டோ போன்றவர்கள் தமிழகத்தின் சமய நிலையையும், கலை முதலியவற்றையும் கண்டு களித்தது குறிப்பிடத் தக்கதே. எதிர்காலத்தில் யுகோஸ்லேவியா போன்ற விடுதலை நாடுக ளுடன் தமிழகம் நல்லுறவு கொள்ள இவ்வருகை பயன்படுவதாக.

(ச) எடின்பரோ கோமகனார் வருகை

கடந்த 31-1-59-இல் எலிசபெத் அரசியின் கணவரும், எடின் பரோ கோமகனாருமாகிய பிலிப் இளவரசர் சென்னைக்கு வருகை புரிந்தார். கிண்டி இராச பவனத்தில் ஆளுநர் விட்ணுராம் மேதியவர் கள் அன்னாருக்கு ஒரு விருந்தளித்தார். அமைச்சர்கள், உயர் நீதிமன்ற நடுவர்கள் உட்பட 200 பெருமக்கள் விருந்தில் கலந்துகொண்டனர். பின்னர் பெரம்பூர் தொடாவண்டிப் பெட்டித் தொழிற்சாலையைப் பார்வையிட்டனர். மகாபலிபுரஞ் சென்று சிற்பக்கலைகளைக் கண்டு களித்துச் செட்டிநாட்டரசர் அளித்த விருந்திற் கலந்து பின் மறுநாள் பெங்களூருக்குப் பயணமானார்.

குறிப்பு: தமிழகத்துக்கு வருகைதந்த கோமகனாருக்கு நமது வாழ்த்தும் வரவேற்பும் உரித்தாகுக.

(ரு) மைசூரில் ஆட்சிமொழி மாநாடு

" ஆங்கிலம் எப்பொழுதும் ஆட்சிமொழியாக இருக்கவேண்டும்; இந்தி ஒருபொழுதும் ஆட்சிமொழியாகக் கூடாது; என்னும் ஒலியை மக்கள் எழுப்பவேண்டும" என்று இந்திய ஊழியர் சங்கத்தைச் சேர்ந்த திரு. கோதண்டராவ் என்பவர் 11-1-59-இல் நடைபெற்ற மைசூர் ஆட்சி மொழி மாநாட்டைத் துவக்கிவைத்தகாலை குறிப்பிட்டார். மைசூர் முன்னாள் நடுவர் திரு. பி. மேடப்பா தலைமையுரையில் பாமர மக்களின் கருத்தை அறிந்து ஆட்சிமொழி அமைத்தல் வேண்டும் என்று கூறினார். திரு. சி. இராசகோபாலாச்சாரியார், டாக்டர் எம். விச்வேச்வரய்யா ஆகியோர் மாநாட்டுக்கு வாழ்த்துச் செய்திகள் அனுப்பியிருந்தனர்.

குறிப்பு : இங்ஙனம் நாடெங்கும் ஆங்கிலத்துக்கு ஆதரவு காட்டு வதை மைய அரசியலார் அறிந்து தமது ஆட்சிமொழிக் கொள்கையில் தெளிவு பெறுவார்களாக.

(சு) கம்பன் நினைவுவிழா

1-2-59 இல் சென்னை மயிலை உட்லண்ட்ஸ் விடுதியில் கம்பர் நினைவு விழா துவக்கப்பட்டது. சர். சி. பி. இராமசாமி ஐயரவர்கள் விழாவைத் துவக்கிவைத்தார். நடுவர்கள், தமிழறிஞர்கள், இலக்கிய அன்பர்கள் ஆகியோர் விழாவிற்கு வந்திருந்தனர். இவ்விழாவையொட்டிக் கம்பன் இலக்கியம் சம்பந்தமான பொருட்காட்சி யொன்றும் அமைக்கப்பட்டிருந்தது. கம்பன் நூல்களின் கையெழுத்துப் படியைப் பாதுகாத்தல், கம்பன நூல்நிலையம் ஏற்படுத்தல், தேரழுந்தூரில் கம்பன் நினைவுச் சின்னம் அமைத்தல், கம்பராமாயணத்தைப் புதிய முறையில் பதிப்பித்தல், கம்பராமாயண நாடகங்களை ஒலிப்பதிவு செய்தல், கம்பன் வரலாற்று ஆராய்ச்சிக்கு வழிவகை காணல் ஆகிய திட்டங்களைச் சர். சி. பி. இராமசாமி ஐயர் குறிப்பிட்டார். ஆளுநா விட்ணுராம் மேதியவர்கள் தம வாழ்த்துக்களையும் பாராட்டுக்களையும் வழங்கினா.

குறிப்பு: கம்பனைப்போன்ற கவிவாணர்கள் மக்கள் நினைவிலே இருக்கவேண்டியவர்கள். அதற்கான அடிப்படை கோலிய அறிஞர்களின் முயற்சிகளை வரவேற்கிறோம்—பாராட்டுகிறோம். அவர்கள் முயற்சி வெற்றிபெறுவதாக.

(எ) முத்துப் பாடல்கள் வெளியீட்டு விழா

பேராசிரியர் திரு. மயிலை சிவமுத்து அவர்களியற்றிய குழந்தைப் பாடல்கள தொகுதியான "முததுப் பாடல்கள" வெளியீட்டு விழா 1-2-59 இல் டாக்டர் குருசாமி முதலியார டி. டி. வி. உயர்நிலைப்பள்ளியில சிறப்பாக நடைபெற்றது. ஓய்வுபெற்ற நடுவா திரு. எ. எஸ். பி. ஐயா அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார்கள். திரு. அழ. வள்ளியப்பா அவர்கள் வரவேற்புரை வழங்கினார். தமிழ எழுத்தாளர் சங்கத்தலைவர் திரு. மீ. ப. சோமசுந்தரம் அவாகள் புத்தகத்தை வெளியிட்டார்கள். திருவாளர்கள டி. செங்கல்வராயன, ந. சஞ்சீவி, பூவண்ணன், எஸ். சிவகுமாரன், தணிகை உலகநாதன் ஆகியோர் பாராட்டுரை வழங்கினா. தென்றல் இராமலிங்கம் வாழ்ததுக்களைப் படித்தார். திரு. பூரம் நன்றி கூறினார்.

குறிப்பு: குழந்தைகளின் உள்ளத்தை அறிந்து அதற்கேற்ப இனிய எளிய நடையில் முததான பாடல்களை ஆக்கித்தந்த பேராசிரியா மயிலை சிவமுத்து அவர்கட்கும், அவரது நூலை வெளியிட்ட குழந்தை எழுத்தாளர் சங்கத்தார்க்கும் எமது வாழ்த்தினையும பாராட்டுக்களையும்

(அ) கண்ணதாசன் கவிதைகள் வெளியீட்டு விழா

இவ்விழா சென்னைக் காவியக் கழகத்தின் சார்பில் 1-2-59-இல் சென்னை வணணையம்பதி தியாகராயர் கல்லூரி அரங்கில் நடைபெற்றது. விழாவிற்குப் பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரை, எம் ஏ., எல். டி. அவர்கள் தலைமை தாங்கினார்கள். திராவிட மொழிநூலார் திரு. ஞா. தேவநேயப் பாவாணர், மயிலை சிவமுத்து, மற்றும் பல அறிஞர்கள் பாராட்டுரை வழங்கினர்.

குறிப்பு: நல்ல கவிதைகளை இயற்றித் தமிழ்த் தொண்டாற்றும் திரு. கண்ணதாசன் அவர்களைப் பாராட்டுகிறோம். இவரைப் பின்பற்றி இளந்தமிழ் அறிஞர்கள் நற்றமிழ்ப்பணி ஆற்றுவார்களாக.

(௧) 1330 திருக்குறட் பாக்களையும் தவறின்றி ஒப்பிக்கும் சிறுமி

கடந்த 4—1—'59 இல் கடயம் கைலாசநாதர் கோவிலில், திருவாவடுதுறை ஆதீன சமயப் பிரசாரகர் திரு. ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளையவர்களின் மாணவியும் கடயம் திரு. ப. வே. நாயகம் என்பவரின் மகளுமான 'கலையரசி' என்னும் ஏழு வயதுடைய அருமைச் சிறுமி 1330 திருக்குறட் பாக்களையும் தவறின்றி ஒப்பித்தாள். இந்த விழாவிற்கு இல ' ' வள்ளல் திரு. ஐ. எ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் தலைமை தாங்கினார்கள். சிறுமி 'கலையரசி'க்குப் பல பரிசுகள் வழங்கப்பட்டன. இச்சிறுமி நள வெண்பா, தனிப்பாடற்றிரட்டு, முத்தொள்ளாயிரம் முதலியவற்றையும் ஒப்பிக்கிறாளெனச் சொல்லப்படுகிறது.



குறிப்பு :—"ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு எழுமையும் ஏமாப் புடைத்து" என்னும் செந்தமிழ்ப் பொதுமறைக்கு எடுத்துக்காட்டாக நம் அருமைச் சிறுமி திகழ்கின்றனள் என்னலாம். எனினும் அத் தொடர்பு ஒருவர் பயில்வதற்கு ஆர்வமும், ஊக்கமும், அதற்காம் சூழலும் இயல்பாக அமைவதற்கு விழுத்துணையாகும். பயிலவேண்டிய அருமைப்பாடனைத்தும் பயில்வாரின் புது முயற்சியேயாகும். அங்ஙனம் பயின்று வெற்றியொடு திகழும் தமிழ்ச் செல்வியை மனமார வாழ்த்துகின்றோம்.

—ஆசிரியர்.

---

## புகை பிடிப்பதால் விளையும் தீமைகள்

சிகரெட் பிடிப்பதனால் ஏற்படும் இதய நோய் காரணமாக இறப்பவர்களின் தொகை நுரையீரல் புற்று நோயினால் இறப்பவர்களின் தொகையை விட அதிகம் எனக் கலிபோர்னியா நலத்துறை நடத்திய புதிய ஆராய்ச்சியிலிருந்து தெரியவருகிறது.

இத்துறையின் இயக்குநர் டாக்டர் மால்காம்மெரில் மேற்கண்டவாறு செய்தியாளர்களிடம் தெரிவித்தார். அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும் புகை பிடித்தல் பற்றியும், இதய நோய் குறித்தும் நடத்திய பல்வேறு ஆராய்ச்சிகளிலிருந்து இந்தக் கருத்தை வலியுறுத்தும் முடிவுகளே கிடைத்தன என்று அவர் மேலும் கூறினார்.

# மதிப்புரை

"சிலப்பதிகாரத் திசை நுணுக்க விளக்கம்"

[இயற்றியவர்: அண்ணாமலைப் பல்கலைக் கழகச சங்கீதபூஷணம், வீணை. S இராமநாதன். கிடைக்குமிடம்: 20, சைடோஜித் தெரு, சென்னை-5. இதன் விலை ரூபா. 1-8-0.]

சிலப்பதிகாரத்தின்கண் பண்டைத்தமிழ்ப்பண்களும் யாழ்குழல் வீணை முழவம் முதலிய கருவிகளும், அவ்வவற்றின் அமைவுகளும், அவற்றை இயக்கி இன்புறுத்தும ஆசிரியாகளி னியல்புகளும், அரங்கமைதியும், ஆடலியல்பும் பிறவும் அரஙகேற்றுகாதை, ஆய்ச்சியர்குரவை முதலியவிடஙகளில் ஆசிரியா இளஙகோவடிகளால் நன்கு விளக்கப் பட்டுள்ளன. இவ் விளக்கம் ஏறததாழ ஆயிரத்துத்தொளாயிர யாணடுகளுக்கு முன்னென்ப. ஏறததாழ ஆயிரயாண்டுகளுக்குப்பின் அடியாாககு நல்லார் அரியவுரை காணகின்றனா. அவர் காலத்தே, இளஙகோவடிகள் காலத்துள்ள இசை நூலகள் இல்லாதொழிந்தன. அடியாாககு நல்லாா காலததது அருகி வழஙகிய சில நூல்களை வைத்து விளககந் தருகின்றனா. அவைகளும் இபபொழுது முறறும் காணபது அருமையாயின. இவற்றானெல்லாம பண்டைத் தமிழிசை தெளிவு பெறாது அதனது தொனமையும் நனமையும் ஐயுறவின்றி வையங் கொள்ளாது புத்திசை மயககில் மருளவதாயிற்று. அம் மட்டோ தமிழில் சிறநத இசையில்லை யெனவும் இரடபதாககக கூறப்படுவனவும் வடமொழியினின்றும் வந்தனவே எனவும் வாய் கூசாது மருட்டவும் சிலர் தலைப்பட்டனர். முன்னாளில் தஞ்சாவூா ஆபிரகாம்பண்டிதரவர்கள் ஒருவாறு தமிழிசைத் தொன்மையைக் காத்து நிலைநாட்டினர். பின் அண்மையில் விபுலானந்த அடிகள் விளக்கினர். அவைகள் எல்லாம் விரிந்த நூல்களாய் இசைவல்லார்கட்கே பெரிதும் துணையாவன.

இந்நூல் அவைகளை யடியொற்றி வேறுபல சிறந்த பல மொழி நூற்களின் மேற்கோள்களுடன் இசைவல்லார் இயல்வல்லார் யாவர்கட்கும் எளிதின் விளங்குமாறு அமையப்பெற்றுள்ளது. ஆசிரியரவர்கள் அரிதின் முயன்று பலவாண்டுழைதத உழைப்பின் பயனாக இந் நூலை யாத்துள்ளார்கள். நூலின்கண் இசை முறைகளைச செவ்வையாக எல்லாரும் எளிதில் புரிந்து கொள்ளுமாறு பல வேறு படங்களும் விளக்கஙகளும் நூலாசிரியரால் தரபபட்டுள்ளன. அச்சு முதலிய அமைப்புக்களும் செவ்வையாக அமைநதுள்ளன. இனிய எளியநடை.

இந் நூலைப் பொதுவாகத் தமிழ்ப் பெருமக்களும், சிறப்பாகத் தமிழிசைவல்லாரும், இயல்வல்லாரும் வாங்கிக் கற்று மெய்ம்மை தெளிந்து பயனெய்துவார்களாக. இதன் வாயிலாக இதுபோன்ற பல நூல்கள் தகக இவ்வாசிரியர் வழிவரப் பெருந்துணை புரிவார்களாக.

"ஜயமதி"

[ஒரு ஆசாமிய வரலாற்றுக் கவிதை. ஆசிரியர், **கோவை ம. இராமச் சந்திரன் செட்டியார்** அவர்கள். விலை. ரூபா. 3.]

இவ்வரலாறு தொன்மையாலும், நன்மையாலும், பண்பாட்டாலும், வளத்தாலும், வனப்பாலும் மேன்மையுடைய பாரத நாட்டின் வடபால் நிகழ்ந்த மெய்வரலாறாகும். ஆசாம் நாட்டில் காமரூபம என்ற நகர் காமாக்கியப் பெருநகோவிலைத் தன்னகத்துக் கொண்டது. அத்திருக் கோவில் காரணமாக அந்நகர்க்குப் பெயர் அமைந்தது. அதனை முறை தவிரா மன்னர் பலர் வழிவழியாக நெடுங்காலம் ஆண்டு வந்தனர். கி. பி. 1673-க்குப்பின் வந்த மன்னர்கள் கொடியவர்கள். அவர்களுள் மிகவுங் கொடியவன் **சூலிபகன்** என்பவன். அரச குடும்பத்தைச் சார்ந்தவன் **கதாபாணி**. அவன் மனைவி **ஜயமதி**. ஜயமதி என்னும் திண்ணிய கற்பணங்கு தன் கணவனைச் சூலிபகனென்னும் கொடுங் கோலன் கொடுமை செய்வான் என உய்த்துணர்ந்து மறைவாகத் திரிபு மாறு வேற்றூர்க்கு அனுப்பிவிட்டாள்.

சூலிபகன் என்னும் அக் கொடுங்கோல் மன்னன் கணவனைக் காட்டித்தருமாறு ஜயமதி என்னும் மங்கையர் தனி நாயகத்தைப் படுத்திய சொல்லொணாத் துன்பங்கள் அளப்பில. அவற்றை ஆசிரியர் அழுகைச் சுவைபயப்பக் கூறியுள்ள பகுதிகள் கல்லுமுருகும கவினுடையன. ஜயமதி என்னும் கற்பின் பொற்புத் தெய்வம் ஆற்றொணா இன்னலுற்று ஆவியகலப் புக்கவிடத்தும் உண்மை காத்துக் கற்பினை நிலைநாட்டிய பகுதியை விளக்கும் பெருமிதச் சுவை மிகவும் சிறந்ததாகும்.

நூலினை இளைஞர்களும் எளிதினுணருமாறு இனிய செய்யுளாக இயற்றியுள்ளார்கள். நூலகத்துப் "பொறுமையில் வல்லாமை" முதல் "தியாகத்தின் அருஞ்சின்னம்" ஈறாகப் பத்துப் பகுதிகளைக் காணலாம். ஒவ்வொரு பகுதியும் தம் தலைப்புக்கேற்றவாறு சிறந்து காணப்படுகின்றன. சென்னை மாநில ஆளுநர் **விட்டுணுராம் மேதி** யவர்களாலும் ஆசிரியரவர்களாலும் சிறந்த ஆங்கில முன்னுரைகள் திகழ்கின்றன.

கற்புநிறை காதது நாட்டுக்கும், மொழிக்கும், நன்னெறிக்கும் பொற்புமிகு புகழ நிலைப்பிக்க இத்தகைய நூல்கள் இன்றியமையாதன. வெறும் கற்பனைக் கதையாகவில்லாமல் இதுபோன்ற மெய் வரலாறுகளே மக்கள உணர்ச்சியைத் தக்கவாறு செயற்படுத்துமென்பதுறுதி. இந்நூனைச் செந்தமிழ்ப் பெருமக்களும், ஆசிரிய மாணவர்களும் வாங்கிக் கற்றுப் பெறும்பயன் எய்துவார்களாக.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




சிலம்பு ௩௩ | ளுவர் ஆண்டு ௧௯௯௦, மாசி | பரல ௭
மார்ச், 1959

# இந்தியப் பெருநிலச் செய்தித்தாள்களின் வரலாறுகள்

நாட்டின் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும், நலத்திற்கும், பண்பாட்டிற்கும், ஒற்றுமைக்கும் உற்றதுணையாகவிருப்பது அவ்வந்நாட்டின் தாய்மொழிக் கல்வியேயாகும். இக்கல்வி, வீட்டில் பெற்றோர்களால் பொருளுணர்வு பெறுக அவ்வப் பொருள்களின் பெயர், பண்பு, தொழில், பயன் முதலியவற்றை விளக்கும் வாயிலாகத் துவங்கப்படுகின்றது. இது "பிறந்து மொழி பயிலுதல்" என்னும் சிறந்த தன்மையாகும். அதன் பின்பு இக்கல்வி திண்ணைப்பள்ளி, துவக்கப்பள்ளி, நடுநிலைப் பள்ளி, உயர்நிலைப்பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகம், தனிநிலை முதலியவற்றால் படிப்படியாக வுயர்ந்து சிறப்புறுகின்றது.

இதன்பின் கற்றார்க்கும் பெருமக்கட்கும் இக்கல்வி செய்தித் தாள்களின் வாயிலாக நாளும வளர்ந்து வாழ்க்கைவளம் செழிக்க நல்குவதுடன் அறிவின்மேம்பாட்டையும் புத்துணர்ச்சியையும் புதுமலர்ச்சியுடன உண்டாக்கி வருகின்றது. இதழாசிரியர்களும் எழுத்தாளர்களும் நாட்டுக்கு இருகண்கள்போல் நின்று நற்பணிபுரிந்து வருகின்றார்கள் மக்களின் உயிர் மருத்துவன் கையில் ஒப்படைக்கப்பட்டிருப்பது போன்று நாட்டின் நலம் இதழாசிரியர்களின் கையில் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றது என்று கூறுவது மிகையாகாது.

இத்துணைச் சிறந்த செய்தித்தாளின் மேன்மையைப்பற்றிக் கிரே பெருமகனார் (Lord Grey) "ஒரு நாட்டின் விடுதலைக்குச் சிறந்த முதற் காரணமாகவிருப்பது செய்தித்தாளாகும்" என

ானித்துணர்ந்து கூறியுள்ளனர். அப்பொன்மொழி நம் இந்திய நாட்டிற்கு நனிமிகப்பொருத்தம் எனக் கூறலாம். அத் தகைய செய்தித்தாள்களின் வரலாற்று முறை வளர்ச்சிகளை நம் தமிழகத் தலைநகராகிய சென்னைமாநகரின் பல்கலைக்கழகத் தேர்வுசகூடத்தில் மிகச்சிறப்பான முறையில் ஒரு பொருட்காட்சி யாகப் பொதுமக்கட்கு அமைத்துக்காட்டி ஒவ்வொருவரும் கண்டு வியந்து மகிழுமாறு செய்தனர். இவ்வமைப்புச் "செய்திப் பரப்புத் தணிக்கைக் குழுவி (Audit Bureau of Circulation) னரால் ஏற்பாடு செய்யப்பட்டது. 1959 பிப்ரவரி 17-ஆம் நாள் மாலை நிகழ்ந்தது. அப்பொழுது இவ் விழாவினை டாக்டர் இலட்சுமணசாமி முதலியாரவர்கள் தொடங்கிவைத்துள்ளனர்.

சென்னை மாநிலக் கல்வி, பொருள் இவற்றின் அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் கூட்டத்திற்குத் தலைமைபூண்டனர்.

திரு. ஜி நரசிம்மன் அவர்களால் வரவேற்புரை நிகழ்த்தப் பெற்றது

டாக்டர் இலட்சுமணசாமி முதலியாரவர்கள் பேசியதன் சுருக்கம்:

நான் கடந்த ஐம்பதாண்டுக் காலமாகத் தொடர்ந்து செய்தித்தாள்கள் படித்துவருகின்றேன். இந்திய செய்தித் தாள்களின் வளர்ச்சியில் பெரிதும் முன்நின் றுழைத்த பெரியோர்களுள் அன்னிபெசண்டம்மையார் பெரிதும் முன் னின்றவராவர். இவர்கள் போன்றவர்களை நாம் நினைவுபடுத்திக் கொள்ளுதல் வேண்டும். செய்தித்தாள்களைப் பற்றிய சட்டக் குறிப்புக் கொண்டுவருமுன் செய்தித்தாளர்களின் எண்ணங் களையும் உசாவிக்கொள்ளுதல் வேண்டும் என்பதே.

அமைச்சரவர்களின் பேச்சுச் சுருக்கம்:

மாந்தர் ஆட்சியில் செய்தித்தாள்கள் முதன்மையான பங்கு கொள்கின்றன. உரிமை இயக்கக் காலத்தில் செய்தித்தாள்கள் உரிமை உணர்ச்சியைக் கட்டிவளர்க்க முன்னின்று பணியாற் றினமைக்கு நன்றி தெரிவிக்கின்றேன். "நாட்டில் மஞ்சள் செய்தித்தாள்களும் திடுக்கிடும் செய்திகளை வெளியிடும் செய்தித் தாள்களும்" மக்களின் பண்பாட்டைக் குலைக்குமுறையில் வெளி வரத் துவங்கியுள்ளன. இவற்றின் எண்ணிக்கை குறைவாக இருப்பினும், இவற்றின்மேல் நடவடிக்கை எடுத்தல் வேண்டும் அரசியலார் இதைப்பொறுத்து ஒரு சட்டக்குறிப்புக் கொண்டுவர இருக்கின்றனர். செய்தித்தாளர்களின் எண்ணங்களும் கேட்கப் படும் என்பதே.

இக்காட்சி 1959 பிப்ரவரி 18-ஆம் நாள் முதல் 28-ஆம் நாள் வரை நிகழ்ந்தது. காட்சியின் அமைப்பு வனப்புடையதாகவும கவர்ச்சியுடையதாகவும் இருந்தது. ஒவ்வொரு செய்தித்தாள்களுக்கும் தனித்தனி அறைகளும் அவை தொடங்கிய கால முதல் வளர்ச்சியுற்றுவந்த வழிவகைகளும், அத்தாள்களின் எண்ணிக்கைப் பரப்பும் ஏற்பட்ட செலவுகளும் அதனால் இதழாசிரியர்களுக்கு ஏற்பட்ட ஆக்க அழிவுகளும், இதழாசிரியர்கள், சிறந்த நாட்டுத் தலைவர்கள், பிறசான்றோர்கள் முதலானவர்களின் நிழலுருவங்களும், அச் செய்தித்தாள்கள் உலகில் எவ்வெப் பகுதியிலெல்லாம் பரவியிருக்கின்றன என்பதும், அவ்வப் பகுதிகளில் செலவாகும் மொத்த இதழ் எண்ணிக்கைகள் எவ்வளவின என்பதும், அவைகள் வானூர்தி, உந்துவண்டி, நீராவிவண்டி வாயிலாக எவ்வெவ் விடங்களுக்குச் செல்லுகின்றன என்னும் முறைமையும், எவ்வெவ் வூர்களில் நிலையங்கள் உள்ளன என்பதும், எவ்வெவ் விடங்களில் செய்தி அறிவிப்போர் உளர் என்பதும் யாவரும் தெளிவாகவும் எளிதாகவும் உணரும்படி உலகப்படம் அமைத்து மின்னொளி வாயிலாக விளக்கப்பட்டுள்ளன.

காட்சியாளர்க்கு அமைந்துள்ள நேரங்கள் ஒவ்வொரு நாளும் காலை ஒன்பது மணிமுதல் பதினொரு மணிவரையும், நண்பகல் மூன்று மணி முதல் ஐந்து மணிவரையும் ஆகும். இந்நேரங்களில எவ்வகைக் கட்டணமுமின்றி எல்லாரும் இயல்பாக இனிதுறப் பார்க்க வாய்ப்புச் செய்திருந்தனர். மாலை ஐந்து மணிமுதல் எட்டு மணிவரை மட்டும் ஐந்துகாசுக் கட்டணம் செலுத்திப் பார்க்குமாறு ஏற்பாடு செய்திருந்தனர். எல்லாக் காலங்களிலும் ஆங்காங்குள்ள செய்தித்தாள்களின் பணியாளர்கள் பெரும்பாலும் புன்முறுவல்பூத்த இன்முகத்துடன் எல்லோரையும் வரவேற்றுக் காட்சிகளை விளக்கிக்காட்டினர். இக்காட்சியினை மொத்தம் ஏறத்தாழ இருபாலாரினும் பதினையாயிரவர்க்குமேல் பார்த்தனரெனவும், அவருள் கிட்டத்தட்டப் பதினாயிரவர் கட்டணம் செலுத்திப் பார்த்தனரெனவும் தெரியவருகின்றன

1768-ஆம் ஆண்டில் முதன்முதலாகக் "கிழக்கிந்தியவணிகக் குழுவினரின்" ஆட்சிக்காலத்தில் "வில்லியம் போல்ட்ஸ்" (William Bolts) என்பவரால் ஒரு செய்தித்தாள் வேண்டுமென்ற முயற்சி துவகப்பெற்றது. இதனைக் கண்ட, ஆட்சியினர் உடனடியாக அவரைக் குழுவினர்க்கு (சமுகத்தினர்க்கு)ச் செய்தித்தாள் வெளியிட வேண்டுமென்னுங் கருத்தால் அவர் இங்கிருப்பது குடிநலனுக்கு அவ்வளவு நல்லது அல்லவென்றும் நாட்டில் உட்பகை

யையும், அமைதியின்மையையும் உண்டுபண்ணுமென்றும் ஒல்லாப் பெருங்குற்றம் சாட்டி இங்கிலாந்துக்குக் கப்பலேற்றி அனுப்பிவிட்டனர். தனிப்பட்டவர்களை ஒன்றுகூட்டப் பெருந்துணைவாயிலாக விருப்பது செய்தித்தாள்களேயாம்

பதினெட்டாம் நூற்றுண்டின் நடுப்பகுதிவரை இந்தியாவுக்கென உரிய செய்தித்தாள் ஒன்றும் தோன்றவில்லை 1780-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 29 ஆம் நாள சனிக்கிழமை இந்தியாவின் முதற் செய்தித்தாளாகிய "பெங்கால் கேசட்டு" (Bengal Gazette or calcutta General Advertiser) சேமஃசு அகஃச்டஃச ஹிகி (James Augustus Hicky) என்பவரால் துவங்கப்பெற்றது. கிழக்கிந்திய வணிகக்குழுவினரின் அலுவலர் சிலர்களுடைய தீயநடவடிக்கைகளைப்பற்றி இச்செய்தித்தாள் வெளியிட்டது. அதனால் துன்புற்றவர்களில் ஆளுநர் முதன்மையர் வாரன்ஹேஸ்டிங்ஸ், அவர் மனைவி, தலைமைமுறை மன்ற நடுவா முதலியோருமாவர். எனவே அவ்விதழாசிரியர்க்கு நீண்டநாட் சிறைத்தண்டனை கொடுக்கப்பட்டது எனினும் அவ்வாசிரியர் சிறையினின்றும் அப்பணியினை விடாது புரிந்துகொண்டிருந்தனர். 1782 ஆம் ஆண்டில் அவருடைய செய்தித்தாளைப் பறிமுதல் செய்துவிட்டனர். ஹிகியர்கெசட் குறு வாழ்நாள் உடையதாக விருந்தாலும், பதினெட்டாம் நூற்றுண்டின் இறுதிக்குள் பத்தொன்பது பத்திரிகைகள் தொடங்கப்பட்டன.

வணிகக்குழுவினரின் சில ஆங்கிலேய அலுவலாளர்கள் ஆங்கிலத்தில் சில செய்தித்தாள்கள நடத்தலாயினா. அவை அக்குழுவின் அலுவலாளர்களிடையேதான் பரவியிருந்தன. அவற்றில வரும் வெளிநாட்டுச் செய்திகள் இந்நாட்டுககு வந்து இச்செய்தித்தாள்களின் வாயிலாகத தெரிய வருங்காலத்துக்குள் மிகவும பழைமையாகிவிடுகின்றன. அதனால் இததாள்கள் அவைகளை விட்டுவிட்டுக் குறும்பர்கள், அலுவலர், தனிப்பட்டவர், முதலியோர்களைப்பற்றிப் பொறுமை மிகுதிப்பட்ட கருத்தில் எழுதத்துவங்கின. சுருங்கக்கூறின் இத்தாள்கள் வம்பர்கட்கு வாய்தத விருநதாக விருந்தன. அதனால் இத்தாளாசிரியர்கட்கும் முன்னைப் போல்ட்சுக்கு நேர்ந்த நிலையே ஏற்பட்டது என்னலாம. இவற்றின்கண் பல்சுவை மிகுந்த தலைப்புக்கள் அவ்வபபோது இருந்துவநத போதிலும் இததாள்கள் நூற்றுக்குமேல் வெளியாகவில்லை. அவற்றின் அடக்க விலை படி பத்தணு.

1816-ஆம் ஆண்டில் இந்தியரால் தம் உரிமையாகவே தொடங்கப்பட்ட செய்தித்தாள் "பெங்கால் கெசட்"டாகும். இதற்கு உரிமையாளரும ஆசிரியரும் பட்டாசாரியரேயாவர்.

1817-ஆம் ஆண்டில் முதன்முதலாக டாக்டர் வில்லியம் கேரி என்பவரின் மேற்பார்வையில் செராம்பூர் அச்சக வழியாக இந்தியமொழியில் செய்தித்தாள் வந்தது.

1826-1837 வரை இந்தியமொழிகளில் வங்காள மொழி களிற்றவிர மற்றைய மொழிகளில் செய்தித்தாள்களுக்கு வரவேற்பு இல்லை என்ற புலவர் சிலர் மொழிகளை மறுக்கும் வகையில் அககாலத்தேயே தமிழ், தெலுங்கு உட்பட்ட பலமொழிச் செய்தித்தாள்கள் ஓரளவு முட்டாது நடப்பதற்கு விளம்பரங்கள் தேவையாகவிருந்தன. அவை அவற்றிற்கு உதவியாகவு மிருந்தன. வருவாய்க்கும் இது பேருதவியாக இருந்தது.

1850-இல் இரண்டு காசிச் செய்தித்தாள்கள் மொததம் எழுபது படிகள் விற்பனையுடன் மாதச் செலவு ரூபா. 99-80 இல் வெளியிடப்பட்டன.

1851 - ஆம் ஆண்டில் தந்திக்கம்பி கல்கத்தாவுக்கும் டயமண்டு துறைமுகத்திற்கும் இடையே இந்தியாவிலேயே முதன்முறையாக நிறுவப்பெற்றத்

1853-ஆம் ஆண்டில் பம்பாயிலிருந்து தாணவரை இருப்புப் பாதை போடப்பட்டது. அது நாட்டின் முன்னேற்றத்திற்கு மட்டுமல்லாமல் செய்தித்தாள்களின் வளர்ச்சிக்கும் நன்மைக்கும் துணையாயிற்று மேலும் இவ் வாய்ப்பினால் பலகல் தொலைவுள்ள ஊர்கட்கும செய்தித்தாள்கள் போய்ப் பரவி மக்கட்குப் பயன் விளைக்க முடிந்தன.

1857-ஆம் ஆண்டில் கட்டுப்பாடுகள் :

உரிமைப்போர் முதன்முறையாக இவ்வாண்டில் தோன்றியது. அது பிரித்தானிய ஆட்சியாளர்கட்கு ஒரு பெரும் கலக்கத்தை உண்டுபண்ணிற்று இதுவரை அவர்கள் ஆட்சியை எதிர்க்கவோ ஒழிக்கவோ எவரும் முற்பட்டது இல்லை, அதன் பின்புதான் செய்தித்தாட் சட்டங்கள் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றின. அதன் பயனாக 1857 இறுதியில் 1853 இல் இருந்த முப்பத்தைந்து செய்தித்தாள்கள் ஆறாகக் குறையலாயின. பரவுதலும் நானூற்று இருபத்தாறாக இருந்தது இருநூற்றெழுபதாகக் குறைந்தன.

1867-ஆம் ஆண்டில் அச்சக உரிமையாளர் குற்ற நடுவர் முன்னிலையில் உறுதிமொழி கூறுதல் வேண்டும். அரசியலார்க்கு அச்சகததார் தமது செலவில் இரண்டு படிகள் அச்சிடும் ஒவ்வொரு செய்தித்தாள்களிலும் அனுப்புவித்தல் வேண்டும்.

குற்றப்பாட்டிற்குச் சட்டமுறையாக இரண்டாயிரம் வெண் பொற்காசுகள் பணஒறுப்பும், ஆறுமாதம் சிறையொறுப்பும் உண்டு. ஆட்சிப்பகையை உண்டுபண்ணினால் நாடுகடத்தல ஒறுப்பும் உண்டு.

இந்தியா உரிமை பெறுவதற்குச் செய்தித்தாள்கள் பெருந் துணை புரிந்தன. காந்தியடிகள் முதலிய மாபெருந் தலைவர்கள சிறைசென்ற ஞான்று இதழாசிரியர்கள் சிலரும சிறைசென் றனர். அக்காலத்துக் கீழறைச் செய்திததாள்கள் (Underground Newspaper) “காஙகிரசுபுலெட்டின்” என்ற பெயரில் வந்தன.

1915-ஆம் ஆண்டில் இந்தியச் செய்தித் தாள்களின் சங்கம் தோன்றியது இருமுறை நிகழ்ந்த உலகப் பெரும்போர்களிலும் செய்தித்தாள்கள் மிகவும துணை புரிந்தன.

அனைத்திந்திய செய்தித்தாள்களின் ஆசிரியர் கழகம் என ஒன்று அமைத்தனர். அதன்கண் இநதிய மொழிகளின்எல்லாம் வெளிவரும் செய்தித்தாள்களின் ஆசிரியரனைவர்களும இடம பெற்றிருந்தனர். 1940-ஆம் ஆண்டில் இது நிறுவப்பட்டது. இதன் குறிக்கோள்: உயர்ந்த பண்புகள், செய்தித்தாளின் தகுதி முதலியவற்றை நிலைநாட்டவும் செய்திகளையும் கருத்துக்களையும வெளிபபடுத்தும் உரிமையைப் பாதுகாக்கவும், இந்தியாவில் பொதுமககளின் அரசியல் தொடர்பினையும், ஆட்சிமுறையை யினையும், பிறவற்றையும் பற்றிச் செய்தித்தாள்கள பங்கு கொள் ளவும் வாய்பபேற்படுததுவதாகும்.

1945-ஆம் ஆண்டில் விளம்பரத்துறையை வலுப்படுத்த ஒரு சங்கம் நிறுவபபெற்றது. இதன் குறிக்கோள், விளம்பரம முதலியவற்றை வளர்ச்சியுறச் செய்தல்.

1857-ஆம் ஆண்டில் தொடங்கிய இந்திய உரிமைப்போர் 1947 இல் முடிந்தது. 1950-ஆம் ஆண்டில் புதிய அரசியல் திட்டம் வகுக்கப்பட்டது. அதிற் காணப்படும் 13 19 பிரிவுப் படி செய்தித்தாளகட்குப் பல உரிமைகள் வழங்கப்பட்டன. அவற்றுள் பேச்சுரிமையும் எழுத்துரிமையும் எல்லாமக்கட்கும் வழங்கப்பட்டன.

1948 ஏப்பிரல் 11-இல் பம்பாயில் இத்தகைய கண்காட்சி யமைப்பின் பொருட்டுச் “செய்திப் பரப்புத் தணிக்கைக்குழு” ஒன்று அமைக்கப்பட்டது. இக் குழுவின் வேலை: இதன் உறுப் பினர்களின் செய்தித்தாள்களின் எண்ணிக்கையைக் கணக்கர்கள் வைத்துச் சரிபார்த்து நற்சான்றிதழ் வழங்குவதாகும். அப்படி வழங்கப்பட்ட இதழ் எல்லோராலும் ஒப்புக்கொள்ளக்கூடிய

தாகும். இதனால் விளம்பரம் செய்பவர்களுக்கு எவ்விதழ் எவ்வளவு தொலை வரை பரவுகின்றது, எதற்கு நல்ல மதிப்பு மக்களிடையுள்ளது, எதன்கண் விளம்பரம் செய்தால் நமக்கு நன்மை என்று உணர்ந்துகொள்ள வாய்ப்புண்டாகின்றது. விளம்பரக் குழுவினர்க்கும் தங்களுடைய வாடிக்கைக்காரர்கட்கு எவ்விதழ்களை பாராட்டிக் கூறலாமெனத் தெரிந்துகொள்ளவும் வாயிலேற்படுகின்றது.

மேலதன் சார்பாகச் சென்னையில் நிகழ்ந்த காட்சிச் சிறப்பிற் சில: பெரம்பூர் அச்சகத்தில் ஒரு தொழிலாளி கையழுத்தப் பொறியால் செய்தியை அச்சடித்த படம் அத் தொழிலாளியின் முழுவுருவத்துடன் வைக்கப்பட்டிருந்தது. தொடக்கத்தில் மக்கட்குழுவின் செய்திகளே செய்தித்தாள் களில் இடம் பெற்றிருந்தன பின்னர்ப் பல முதன்மையான செய்திகளும் வந்தன. திருவாளர்கள் சி. சுப்பிரமணிய ஐயர், சி ஒய். சிந்தாமணி, மோதிலால் கோசு, வபினச் சந்திரபால், டாக்டர். பெசண்டு, டி பிரகாசம், பிரோஷ் ஷாமேத்தா, என். சி கேல்கர், என். கத்தூரிரெஙக ஐயங்கார், எஸ் அரங்க சாமி அய்யஙகார், ஏ. அரஙகசாமி ஐயங்கார் முதலிய முதன்மை இந்திய ஆசிரியர் படங்களும் கையெழுத்துப்படிகளும் வனப்புற வைக்கப்பட்டுள்ளன. உலகமானிய கங்காதர திலகரின் முழு உருவப்படம் அவர்தம் கேசரிச் செய்தித்தாளின் படம் முதலி யனவும் வைக்கப்பட்டுள்ளன.

"செய்திப் பரப்புத் தணிக்கைக் குழு"வுக்கொரு தனியிடம் அமைத்து அதன் வாயிலாகச் செய்தித்தாள்களின் விளக்கம் இனிதெடுத்து இயம்பப்பெற்றது சிறந்த பல செய்தித்தாள் கட்கும வரையறுக்கப்பட்டுள்ள வனப்பிடங்கள் அமைக்கப் பட்டிருந்தன. செய்தித்தாள்களைப்பற்றிய அறிவு பெருமக்க ளிடையே பரவுவதற்கு இஃதொரு பெருவாய்ப்பினை நல்கிற்று. செம்மையான செய்தித் தாள்களின் வாயிலாக நாடும் மொழியும் நல்லொழுக்கமும் நாளும் பெருகுமென்பதுறுதி.

# திருக்குறள் பற்றிய சோவியத் மதிப்பீடு

[தமிழாக்கம்: திரு. கா. அப்பாத்துரை அவர்கள், எம். ஏ., எல். டி.]

[உருசிய நாட்டு இயல்நூல் துறைகளின் சங்கத்தைச் சார்ந்த அலக்சாண்டர் பியாதிகார்ஸ்கி அவர்கள் வரைவது]

தமிழரிடையே மிகப் பெருவழக்காயுள்ள ஏடு திருக்குறளே என்பதை நாம் அறிவோம். அதையே அவர்கள் தலை சிறந்த தெய்விக, தேசிய அறிவுக் கருவூலமென்றும் கூறலாம். பார்ப்பனராயினும் பறையராயினும், புலவராயினும் தொழிலாளராயினும், சைவராயினும் சமணராயினும் எல்லாத் தமிழருமே அதைப் பொதுமக்களுக்குரிய அறிவுச் சேமக்கலமாக மட்டுமன்றி, உச்ச உயர்ந்த ஒழுக்கமுறை ஏடாகவும் மேற்கொள்கின்றனர்—பல சமயம் அதுவே உச்ச உயர்சட்டமாகக்கூடக் கொள்ளப்படுவதைக் காண்கிறோம். ஒழுக்கமுறை மயக்க நெருக்கடிகளின் போதும் நாள்முறை வாழ்வின் இக்கட்டுகளிடையிலும வழக்கு மன்றங்களிலும், இலங்கை. தலைத் தமிழகம் ஆகிய பரப்புக்களில் வாழும் தமிழர் அதை அடிக்கடி எடுத்து மேற்கோளாகக் காட்டத் தவறுவதில்லை. இதற்கேற்ப இவ்வேடு தரும் அறிவுரைகள் யாவும் சுருக்கமும் செப்பமும், மிகச்சீரிய எளிமையும் நயமும், இயல்பான அழகும் வனப்பும் மிகையாப்பமைதியும உடையனவாய்த் திகழ்கின்றன. இப் பண்புகள் அனைத்தும் சேர்ந்து இடைக்காலத் தமிழ் ஏடுகள் அனைத்தினிடையேயும் அதற்கு முழுநிறை முதன்மை அளிக்கின்றன என்னலாம்.

திருக்குறள் அடிக்கடி தமிழ்வேதம், தமிழ் விவிலிய ஏடு என்று குறிக்கப்படுவதுண்டு. ஆனால் இந்த வழக்கு முழுதும் பொருத்தமுடையதென்று எனக்குத் தோற்றவில்லை. ஏனெனில் வேதங்களும் சரி, விவிலிய ஏடும்சரி—பல நூற்றாண்டுகளில் உருவானவை. பல ஊழிகளுக்குரிய பல்வேறுபட்ட கருததுக்கள், பல சமுதாயக் குழுககளுக்குரிய பல்வேறுபட்ட நீதிமுறைகள் அவற்றில் அடுக்கப்பெற்றுள்ளனவாதலால், அவற்றில் ஓரிடததிற் கோரிடம் முரண்பாடுகள் காணப்படுவது இயல்பு ஆனால் திருக்குறள் முழுநிறை வடிவமைதியும் ஒருமைப்பாடும் மிக்க ஒரு கலைநலம் நிரம்பிய ஏடு.

அத்துடன் அதன் ஆசிரியர் அதை அரசனுக்கென்றோ, குடிமக்களுக்கென்றோ குருமாருக்கென்றோ இயற்றியவரல்லர் - மனிதனை மனிதனுக்குக் கொண்டே அது அம் மனிதனை நோக்கிக் கூறப்படுள்ளது. இது மட்டுமன்று; மனிதனிடம் அவர் ஒரு

சட்ட ஆசிரியராகவோ ஒரு முனிவராகவோ நின்று பேசவில்லை. மனிதஇன நலநாடும் ஒரு நண்பர், ஆசிரியர் என்ற முறையிலேயே அவர் உரையாடுகின்றார். விவிலிய ஏட்டின் முனிவர்களைப்போல, அவர் தெய்விகக் குரலில் முழங்கவில்லை. புதிரிட்டு உள்ளுறை பொதிந்து பேசவில்லை. நாலடி முதலிய ஏடுகளின் ஆசிரியரைப் போல அவர் மனித இனத்தை அச்சுறுத்தவில்லை அதேசமயம் அவர் உரையமைதியும் முழு உண்மைகண்ட உறுதி தொனிக்கிறது. வாய்மையின் கரைகண்ட அவர் சொற்களிடையே ஐயந் திரிபு மயக்கங்களின் நிழற்சாயலின் கோடுபோலும் எதனையும் காணமுடியாது. கலைஞன் என்ற முறையிலும் ஆராய்ச்சியாளர் என்ற முறையிலும் இந்தச் செய்வரையறை குறிப்பிடத்தக்கது.

பொதுமக்களைப் பொறுத்த வரையில், திருக்குறள் போற்றுதலுக்குரிய ஒரு கவிதை நல்லுரைத் தொகுப்பாக மட்டும் இயங்கவில்லை; திருவள்ளுவர் வாழ்வு, அவர் குடும்ப சமுதாய வாழ்க்கை ஆகியவை சார்ந்த பல பழங்கதை, பழமரபுகளின் முழுநிறை தொகுதியாகவும் அது கொள்ளப்பட்டு வருகிறது. பொதுநிலை மாந்தர் குறளிடம் நேச ஆர்வம் காட்டி அதனைப் பயில்கின்றனர். ஆனால் அதன் நேர்பொருளை ஆய்ந்தறிய முயலாது அவர் வாழ்க்கையைக் குறிப்பதாக அவர்கள் கொள்ளும் பழங்கதை மரபுகளுடன் இணைத்து, அவற்றையும் வள்ளுவர் உரை வளத்தின் பின்னணியாகக்கொண்டு அதனை ஏற்று மகிழ்கின்றனர். ஆனால் சோவியத் (உருசிய நாட்டுக்) கீழ்புல ஆராய்ச்சியாளர் கருத்துச் செலுத்தக் காணவிரும்பும் குறள் இதுவன்று, வேறொன்று அன்புடன் ஓதி உருவிடப்பட்டு, தமிழக உழவர், கலைத்தொழிலாளர், வணிகர், சிற்றூர் எழுத்தாசிரியர் ஆகியவர்களால் பேணப்படும் குறள் கடந்து அவர்கள் மற்றொன்றை நோக்குகின்றனர். உரையாசிரியர்கள், பாடபேத ஆய்வெதிர் ஆய்வாளர்கள், மொழி நூலார், வரலாற்றாசிரியர்கள் ஆகியவர்கள் ஆராய்ச்சிகளுக்கு ஆளாகிவரும் திருக்குறளே அது என்னலாம். முன்னைய குறளில் எல்லாம் முற்ற முடிந்த வரையறை அமைதியுடையனவாகத் திகழ்கின்றன என்பது உண்மையே. ஆனால் பிந்திய குறள் புதிர்கள் பல அடங்கியது. உண்மையில் புதிய கருததுக் கடாக்களைத் தட்டி எழுப்பிவிடாத பகுதி எதுவும் அதில் இல்லை என்றே கூறவேண்டும்.

குறளின் கால வரையறை யாராய்ச்சியில் ஏற்படும் கீழ்மேல் எல்லை வேறுபாடு மிகமிகப் பெரிது—அர்த்த சாஸ்திரம போன்ற ஏடுகளில் ஏற்படும் தொலை வேறுபாட்டிலும் இதன் தொலை வேறுபாடு மிகப் பெரிது என்பதில் ஐயமில்லை. கி. மு. 300 க்கும் கி. பி. 700 க்கும் இடையே ஆயிர ஆண்டுகளுக்கிடையே ஊசலாடும்

இவ் வேறுபாட்டுக்குத் தற்கால மொழி நூலாராய்ச்சி முறைகள், பாட வேறுபாட்டாய்வு முறைகள் குறைபட்டிருப்பது, வரலாற்று, சமயவரலாற்று மெய்விளக்கத்துறை ஆகியவற்றில் புத்தாராய்ச்சிகளின் பிற்போக்கு ஆகியவையே காரணம் என்று கூறவேண்டும் பிற்பட்ட காலவரையறையாகிய கி. பி. 700 ஐ மேற்கொண்ட தமிழராய்ச்சியாளர் வையாபுரிப்பிள்ளை ஆவர். அவர் 1956 இல் காலமானவர். வையாபுரிப் பிள்ளையின் கருத்து இடைக்கால ஆராய்ச்சியாளர் மரபுக்குமட்டுமன்றி, 19, 20 ஆம் நூற்றாண்டுக்குரிய மிகப் பெரும்பான்மைத் தமிழ்ப் புலவர் முடிவுக்கும் மாறுபட்டதாயினும் சோவியத்துக் கீழ்த் திசையாராய்ச்சியாளர்கள் அவர் கருத்தையே ஏற்கின்றனர்.

ஈன்றதாய் தவத்திரு சொர்ணம்மாள் அவர்களின் நினைவாய்
இருந்தமிழ்த் தாய்க்கு

## டாக்டர் ஆர். பி. சேதுப் பிள்ளையவர்களின்

## பெருங்கொடைக் காணிக்கை

பிள்ளையவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு வெண்பொற் காசு இருபத்தையாயிரமும், இதுபோல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் திற்கு இருபத்தையாயிரமும் அன்புடன் வழங்கியுள்ளார்கள்.

இதன் சார்பாகச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் அன்னை சொர்ணம்பாள் நினைவுச் சொற்பொழிவுகள் 1959 பிப்ரவரி 25, 26, 27 ஆகிய மூன்று நாட்களிலும் இலங்கை முன்னாள் அமைச்சர், பன்மொழிப் புலவர், தமிழ்ப்பேரறிஞர் எஸ் நடேச பிள்ளையவர்களால் "வள்ளுவர் காலம்" என்னும் பொருள்பற்றிச் சிறந்ததோர் ஆராய்ச்சி விரிவுரை நிகழ்ந்தது. நூற்றுக்கணக்கான தமிழ்ப் பேராசிரியர்களும், அறிஞர்களும், பல்வேறு மன்றம் கழகம் முதலியவற்றின் சான்றோர்களும் பிறரும் அதனைக் கேட்டு மெய்ப்பொருள் துணிந்து இன்புற்றனர்.

திரு. நடேச பிள்ளையவர்கள் வள்ளுவரின் காலம் கிறித்தாண்டு துவங்குவதற்குச் சிறிது முன்னுள்ளதே எனப் பலவேறு அகப்புறச் சான்றுகளுடன் வலியுறுத்தி நிலை நாட்டினர். (ஆசிரியர் மறைமலையடிகள் துணிந்த முடிபும் இதனுடன் ஒத்து நிற்பது நோக்கி இன்புறுக)

சென்னைப் பல்கலைக் கழகத்தில் முன்னாள் வரலாற்றுத் துறைத் தலைவர் திரு. கே. ஏ. நீலகண்ட சாத்திரியாரவர்களும் முன்னாள் தமிழ்த் துறைத் தலைவர் திரு. எஸ். வையாபுரிப் பிள்ளையவர்களும் வள்ளுவர் காலத்தை ஏழாம் நூற்றாண்டுக்குக் கொண்டுவந்துவிட்டது எத்திறத்தானும் ஒரு சிறிதும் பொருந்தாதெனப் பல காரணங்கள் காட்டித் திட்பமுற மறுத்துள்ளனர்.

வாழ்க நினைவு நாள்! வாழ்க அனைவரும்! வாழ்க தமிழ்மொழி!

---

# சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம்
# பரிசளிப்பு விழாத் தலைமையுரை

[ஆளுநர் திரு. விட்ணுராம்மேதி யவர்கள்]

நண்பர்களே,

இன்பம்தரும் இவ்விழாவில் இம் மாலைப்போதிலே நான் கலந்துகொள்ளுமாறு என்னை அன்புடன் அழைத்த சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கத்தின் அமைச்சரவர்களுக்கும் ஏனைய அலுவலர்களுக்கும் நான் நன்றி கூறுகின்றேன். தமிழிற் பேச முடியாத என்னை மன்னித்து ஆங்கிலத்திற் பேச அனுமதிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன் இன்று தாங்கள் எனக்கு அளித்த வரவேற்பினுக்காகக் கடமைப்பட்டுள்ளேன். ஆட்சிச் சொற்களையும் கலைச்சொற்களையும் ஆக்குவதிலும் முடிவு செய்வதிலும் தந்நலங்கருதாது மிகச்சிறந்த பணியாற்றிய பெரியவர்களைப் பாராட்டிப் பரிசு வழங்கும் இந்த விழாவிற் கலந்துகொள்வதிற் பேருவகை யடைகிறேன்.

தமிழ் ஆட்சிச் சொற்களை ஆக்கி முடிவுசெய்வதிற் பேருதவி செய்த தமிழ்ப பெரும்புலவர்களைப் பாராட்டுவதற்காகச் சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கத்தின் சார்பில் நாம் அனைவரும இங்கே கூடியிருக்கிறோம். ஆசிரியர் கல்லூரிகளிற் பயன்படுத்துவதற்காக ஆசிரியர் கல்லூரிச்சொற்களை அமைப்பதில் துணைபுரிந்த சில கல்லூரிகளுக்கும் நாம் பரிசு வழங்குகின்றோம். இப் பாராட்டு விழாவின் நோக்கம் ஆட்சிச்சொற்களையும ஆசிரியர் கல்லூரிச்சொற்களையும் ஆக்கித் தமிழ்மொழியை முன்னேற்றி வளர்பபதில் தந்நலம் மறநது இப்பெரும் புலவர்களும் கல்லூரிகளும் வலிய ஆற்றிய தொண்டினை நன்றியுடன் பாராட்டி ஏறறுக் கொள்வதுடன் இவர்களைப்போலவே கல்வியிலும் ஆட்சியிலும் பயன்பெறுமாறு தமிழ்மொழியை வளர்ப்பதில் ஏனைய பெரும் புலவர்களும் தங்கள் கவனததையும் நேரத்தையும் செலவிடுமாறு ஊக்க உணர்ச்சியைத் தூண்டுவதுமேதான்.

உலக முதல் மொழிகளுள் தமிழ்மொழியும் ஒன்று. அது பலதுறைப்பட்ட இலக்கியப் பரப்பும் உடையது. இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ்நூல்கள் இப்போது கிடைப்பதில்லை, அவை காலவெள்ளத்தில் எவ்வாறு அழிந்தன என்பது நம்மால் அறியக்கூடவில்லை. மிக்க சிறப்புடையது தமிழ்மொழி. அதனைப் பேணி வளர்ப்பதற்குத் தக்க நடைபடிக்கைகள் எடுக்கப்பெறுவது கண்டு நான் மகிழ்கின்றேன். பல்துறைகளிலும் தமிழ்மொழியை வளர்ப்பதில் நடைபெறும்

முயற்சிகளையெல்லாம் ஒருமுகப்படுத்தி ஊன்றிப் பணிபுரிவதற் காகத் "தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம்" ஒன்று அண்மையில் தோற்றுவிக்கப்பெற்றுள்ளது

தமிழ் நம்நாட்டு ஆட்சிமொழியாகிவிட்டது. ஆயிரத்துத் தொளாயிரம் கிளை அலுவலகங்களில் தமிழிலேயே செயல்கள் நடைபெறுகின்றன. பேராசிரியர்களும் பெரும்புலவர்களும் ஆக்கித் தந்துள்ள ஆட்சிச்சொற்கள் அலுவலகங்கள் யாவும் தமிழில் இயங்க வழிகாட்டியாக முன்நிற்கின்றன. சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் முழு ஊக்கத்துடன் சொல்லாக்கப் பணியை மேற்கொண்டது. முதலில் ஒரு சொற்பட்டியைச் சங்கம் அமைத்தது; பின் அரசாங்கத்தின் ஆதரவினையும் மெய்ப்புலவர்களின் ஒத்துழைப்பினையும் பெற்றுத் திரு சு. வேங்கடேசுவரன், I. C. S. அவர்கள் தலைமையில் ஆட்சிச்சொற் குழுவினைச் சென்னையில் அமைத்து ஆராய்ந்து அச்சொற்களை முடிவுசெய்தது. ஆட்சிச்சொல் அகராதி 1956 திசம்பர் திங்க ளில் அரசாங்கத்தினிடம் ஒப்படைக்கப்பெற்றது. இப்பெரும் பணியிலே ஈடுபட்டுத் துணைபுரிந்த பெரியார்களைத் தக்கவாறு நம் சங்கம் பாராட்டுவது மிகவும் பொருத்தமே. இவ் விழாவி னுக்குத் தலைமைதாங்கிப் பரிசுகளை வழங்குமாறு எனக்குக் கிடைத்த வாய்ப்பினை ஒரு பெருமதிப்பாக நான் கருதுகின்றேன்.

இன்று பரிசுபெறும் புலவர்களை நான் பாராட்டி வாழ்த்து கின்றேன். தங்களுடைய பலப்பல கடமைகளுக்கு இடையில் இந்தத்துறையில் ஈடுபட்டு வெற்றிகண்ட அவர்களுடைய தொண்டினை நான் வியந்து பாராட்டுகின்றேன். திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை யவர்கள் இந்தச் சங்கத்தின் அமைச்சராக இருந்து தமிழ்மொழி வளர்ச்சிக்கு மிகவும் பாடுபட்டுவருகின்றார். அவர்கள் இந்தச் சங்கத்தின் பணிகளிலெல்லாம் முன்னின்று தொண்டாற்றுகின்றார். அவர்களுக்கு நம் உளங்கலந்த நன்றி உரியது. அவர்கள் தமிழ்மொழி அன்புபற்றியே இப்பணிகளைச் செய்து வருகின்றார். சொல்லாக்கத்தில் தமக்குப் பெருந் துணையாக இருந்த தோழர்களைப் பாராட்டுவதன்பொருட்டு இக் கூட்டத்தைக் கூட்டுவதற்கு அவர்கள் எடுத்துக்கொண்ட பெரு முயற்சியைக் கண்டு நான் மகிழ்கின்றேன்.

திரு. ஆர். வி. கிருஷ்ணையர் அவர்கள் மிகச் சிறந்த கல்வி வாழ்க்கை, வழக்குரைஞர் தொண்டு இவைகளின்பின் கல்விநலத் துறை முதலிய பலதுறைகளில் அரசியல் செயலாளராகிப் பின்னர்ச் சட்டசபைச் செயலாளராகவும் ஆயினர். அவர்கள் முதற் பரிசு பெறுகின்றார் ஆட்சிச்சொல்லாக்கத்திற்கு அவர்கள் செய்த பணிகளுக்காக நான் நன்றி கூறுகிறேன்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பேராசிரியராகிய திரு தேவநேயப் பாவாணர் அவர்கள் இரண்டாம் பரிசு பெறுகிறார்; மற்றோர் இரண்டாம் பரிசு ஆங்கிலச் செய்தி அறிவிப்புத் துறையிற் பணியாற்றும் திரு. K. S. சம்பூரநாதன் அவர்களைச் சேர்கிறது. இருவரும் ஆட்சிச் சொல்லாக்கத்திற் பெருந்துணையாக விளங்கியிருக்கின்றனர்.

பாளையங்கோட்டைப் புனித சவேரியார் கல்லூரிப் பேராசிரியர் திரு. ஆபிரகாம் அருளப்பனவர்கள் செய்துள்ள சிறந்த பேருதவியைப் பாராட்டிச சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் அவர்களுக்குத் "தமிழ்ப்பெரும் புலவர்" என்ற சீரிய பட்டத்தை வழங்கியிருப்பது கண்டு நான் இன்புறுகின்றேன்.

இப்போது சங்க அமைச்சரவர்கள் படித்த அறிக்கை சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் முழு வரலாற்றினையும் கூறுகின்றது சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாகத் தமிழ் வளர்ச்சி பற்றிச் சங்கம் செய்துள்ள பெருமுயற்சிகளையும் அது விவரிக்கிறது. பல தமிழ் மாநாடுகளைச் சங்கம் கூட்டியிருக்கிறது, சில ஆண்டுகள் ஒரு முத்திங்கள் வெளியீட்டை நடத்தி வந்திருக்கிறது; தமிழ்க்கல்லூரி ஒன்றைச் சங்கம் நடத்திவருகிறது; நான்காவது பாரத்திறகூடப் படிக்காத மாணவர்கள் இதில் சேர்த்துக்கொள்ளப்பெற்று, ஒரே ஆண்டுப் படிப்பில் சென்னைப் பல்கலைக்கழக மெட்றிக்குலேசன் ஆங்கிலத் தேர்வையும், இண்டர்மீடியேட்டுத் தமிழ்த்தேர்வையும் தேறினர்கள் என்பதை நான் அறிகிறேன்.

உலகறியச் சங்கம் செய்த பணி தமிழ்க் கலைச்சொல்லாக்கமே. கணக்கு, பூதநூல், வேதிநூல், உடலியலும் நலவழியும், பயிர்நூல், வேளாண்மை ஆகிய பாடங்களை உயர்பள்ளிகளிற் கற்பிப்பதற்குச் சங்கம் ஆக்கிய கலைச்சொற்கள் மிக்க பயன் தருகின்றன என்று நான் அறிகிறேன். இவற்றுடன் ஆட்சிச் சொற்கள் இவைபோன்ற பிற கலைச்சொல்லாக்கத்திலேதான் பல பேராசிரியர்களின் குன்றாத தொண்டு நிற்கின்றது. அவர்கள் எதையும் பொருட்படுத்தாது பல மணிநேரங்கள் உழைத்திருக்கிறார்கள். தமிழ்மொழி வளர்ச்சிக்காக தங்கள் கவனத்தையும் ஊக்கத்தையும் உழைப்பினையும் நல்க இத்தகைய பெரியார் முன்வந்திருப்பது நம் அனைவருக்கும் மகிழ்ச்சி தருகின்றது.

உயர்பள்ளிக் கல்வி தமிழில் நடைபெறுவதனாலே பல பாடங்களையும் தமிழிலேயே கற்பிப்பதற்குப் போதுமான தகுதியைப் பெறுவது ஆசிரியர்களுக்கே இன்றியமையாததாக்கி விட்டது. ஆதலின், உயர்பள்ளிகளிற் கற்பிப்பதற்கு ஏற்ற தகுதியும் பயிற்சியும் இவர்கள் பெறுதல் வேண்டும். 1956-

57ஆம் ஆண்டில் விருப்பப் பாடங்களைத் தமிழிற் கற்பிக்கத் தொடங்கியன சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரியும் பிற பல ஆசிரியர் கல்லூரிகளும். ஆதலின் ஆசிரியர் கல்லூரிச்சொற்களை ஆக்குவது இன்றியமையாததாயிற்று இவ்வகையில் ஆசிரியர் கல்லூரிகளுக்குத் துணைபுரியச் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் முன்வந்தது. மாநிலக் கல்வி இயக்குநர் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பெற்றது. இச் சொல்லாக்கக்குழு இவ்வழியில் உழைத்துவரும் மற்றவருடைய துணையையும் பெற்றுச் செய்த முயற்சிகளின் விளைவே "ஆசிரியர் கல்லூரிச் சொற்கள்" என்ற நூலாக மலர்ந்தது. இந்த நூல் இன்று வெளியிடப்பெறுகிறது. மற்றப் புலவர்கள் துணையையும்பெற்று இச்சொல்லாக்கக் கழகத்தார் செய்த தொண்டினை நான் பாராட்டுகின்றேன். சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரி சிறப்புப் பரிசினையும் திருப்பராய்த்துறை விவேகானந்த ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி முதற் பரிசினையும், தூத்துக்குடி வ. உ. சிதம்பரம் பிள்ளை ஆசிரியர் கல்லூரி இரண்டாம் பரிசினையும் பெறுகின்றன.

இப்போது நான் இப்பரிசுகளைப் பெருமகிழ்வுடன் வழங்குகின்றேன். அரசாங்கம் தொடங்கியுள்ள தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றத்தினுடன் ஒன்றுபட்டுத் தமிழ் வளர்ச்சியில் இடைவிடாது சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் தொண்டாற்றும் என்று நான் நம்புகின்றேன். இன்று பரிசுபெறுவோரை நான் மறுமுறையும் பாராட்டி வாழ்த்துகின்றேன்.

## புத்தக வெளியீடுகள் பற்றிய புள்ளி விவரம்

1954 ஆம் ஆண்டில் வெளிவந்த புத்தக வெளியீட்டுச் சட்டப்படி 1957, 1958 ஆம் ஆண்டுகளில் வெளிவந்த புத்தகங்கள் பற்றிக் கல்கத்தாத் தேசிய நூல் நிலையத்திற்கு வழங்கப்பட்ட விவரப்படி மற்ற நூல்களைப் பார்க்கினும் ஆங்கில நூல்களே நாட்டில் மிகுதியாக வளர்ந்துள்ளன வென்றும், இந்தியமொழிகளில் எந்த ஒரு மொழியிலும் இத்துணை நூல்கள் வெளிவரவில்லை என்றும் தெரிய வருகிறது.

1956 ஆம் ஆண்டில் மொத்தம் 37,114 நூல்கள் வெளிவந்தன. அவற்றுள்31 சதவீதம் ஆங்கில நூல்கள். இத்தொகை 1957 இல் 41 சதவீதமாகவும் 1958 இல் 45 சதவீதமாகவும் உயர்ந்துள்ளது.

வெளிவந்த புத்தகங்களின் எண்ணிக்கையை வகைப்படுத்திப் பார்க்கின்றபோது 1958 இல் 12422 புத்தகங்கள் ஆங்கிலத்திலும், 4736 இந்தியிலும், 1643 வங்காளத்திலும், 1825 குஜராத்தியிலும், 1615 மராத்தியிலும், 1230 தமிழிலும், 1093 தெலுங்கிலும், 292 சமஸ்கிருதத்திலும் வெளிவந்துள்ளன எனத் தெரியவருகின்றது. 1958 இல் அதிகமான நூல்களை, அஃதாவது 6193 புத்தகங்களை வெளியிட்ட மாநிலம் பம்பாய் மாநிலமே.

---

# பதிறுக்கப் பண்பொப்பு

[சித்தாந்த பண்டிதர், திரு. ப. இராமநாத பிள்ளை]

(செல்வி சிலம்பு ௨௨, பரல் ௬, ௨௬௪-ஆம் பக்கத் தொடர்ச்சி)

ஆருயிர்க் காட்சியாவது தன்னை ஆண்டானுக்கு அடிமையாக ஒப்புவித்த வாய்மையான் தன்னால் நிகழப்பட்ட செயல்களனைத்தும தலைவனும சிவபெருமானின் தனிச் செயலே என்று கண்டு அவன் திருவடிக்கீழ் அடங்கி நிற்றல்.

"பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாம நவில்கிலார்
ஆக்கைக் கேயிரை தேடி யலமந்து
காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே." (௫ ௯௦ - ௯)

ஆருயிர்கட்கு ஆண்டவன் தண்ணளியால் படைத்துக் கொடுக்கப்பட்ட இரவல் உடம்பகத்தாக காணப்படும் கைகள் அவன் பொன்னடிக்கு மலர் தூவிப் போற்றவும், செய்யும் செயலனைத்தினையும் அவன் நினைவுடன் செய்து அவன் திருவடிக்கு ஒப்புவித்து அவன் திருத்தொண்டாக அமைப்பதற்குமேயாம். பூவைக் கையிலெடுத்துப் பொன்னடி போற்றுவதன் குறிப்புத் தன் செயலனைத்தும் பூப்போன்று ஈவிரக்க மென்னெஞசத்துடனும், அதன் மணம்போன்று எல்லார்க்கும நன்மை பயப்பதாய், அதன் அழகு போன்று அனைவர்க்கும் கடவுள் நினைவினையூட்டுவதாய், அதன் தலைமை போன்று நாட்டுக்கும் மொழிக்கும் நன்னெறிக்கும் இன்றியமையாததாய்த் திகழ்வதுடனும் என்றும் இருத்தல்வேண்டும் என்பதாம். அங்ஙனம் செய்யாதவர் ஆருயிர்க் காட்சி எய்தாதவராவர்.

இதுபோல் "நாக்கைக் கொண்டு அரன் நாம"மாகிய செந்தமிழ்த் திருவைந்தெழுத்தாம் 'சிவயநம' என ஓதுதல் வேண்டும. அங்ஙனம் இடையறாது ஓதிவருவதால் முப்பொருள் உண்மை முற்றாகத் திருவருளால் தெளியப்படும். அம் முப்பொருள் விளக்கமே ஈண்டு ஐந்தெழுத்தாற் பெறப்படும் ஐம்பொருள் விரிவாகும். முப்பொருளுள் நடுவாகக் காணப்படும் ஆருயிர் சிறப்புறற் பொருட்டுத் திருவருளால் பிறப்புறுகின்றது. அந் நிலையில் உடனாய் நின்று அதனை நடத்தும் திருவருளாற்றல் நடப்பாற்றல் எனப் பெயர்பெறுகின்றது. பின் செந்நெறியொழுகிச் சிறப்புறுகின்றது அந் நிலையில் உடனாய் நின்று துணைபுரியும் திருவருளாற்றல் வனப்பாற்றல் எனப்படும்.

இவ்விரண்டும் முறையே திருவைந்தெழுத்தின்கண் 'நகர' 'வகர'ங் களாக நவிலப்பெறும். இவ்வுண்மை தெரியாதாரும் ஆருயிர்க் காட்சியினை எய்தார்

நடப்பாற்றலால் உயிர்கள் நடத்தப்பெறும்போது திருவருள் அவ்வுயிரின் தோண்மேனின்று திருவிளக்குப் போன்று உலகியல் வாழ்க்கைக்கு வழிகாட்டுகின்றது அவ்வுயிர்கள் வனப்பாற்றலால் நடத்தப்பெறும்போது தாய் தன்மகள் கையைப் பிடித்துத் தலைவன் மனைக்கண் நிலைபெறுத்துவது போன்று திருவருள் அவ்வுயிர்களின் நெஞ்சுள் நின்று ஆசான் போன்று கைப் பிடித்துச் செந்நெறியில் நடத்துகின்றது. இவ்வுண்மைகளை ஒரு வெண்பாவால் அமைத்துத் தருகின்றேம்.

> ஆண்டான்தோள் மேலமர்ந்தங் காக்குவனுல் காட்டல்வழி
> பூண்டநெஞ்சத் தாயிற் புகுத்தலாம்—நீண்டமறை
> "தஞ்சுங்கால் தோள்மேலர் ஆகி விழிக்குங்கால்
> நெஞ்சத்தர் ஆவர் விரைந்து." —௧௨௩௮.

இம்முறையான் ஆருயிர்க் காட்சி எய்தாதவர் மீண்டும் மீண்டும் பிறப்பதற்கு ஆளாகி "ஆவிக்கு ஊண் தேடாது, ஆக்கைக்கே இரை*தேடி யலமந்து" மாண்டு "காக்கைக்கே யிரையாகிக் கழிவா."

ஆவித் தூய்மையாவது திருவடிக்கண் நீங்கா நினைவினராய்ச் சுட்டுணர்வற்று முற்றுணர்வுற்று முழு இன்பத்தழுந்துதல். அதனை ஒருபுடையாகக் குறிக்கும் திருமறை வருமாறு :

> "குறிக ளும்மடை யாளமுங் கோயிலும்
> நெறிக ளும்மவா நின்றதொர் நேர்மையும்
> அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
> பொறியி லீர்மன மென்கொல் புகாததே." —௫. ௯0 - ௯.

சுட்டியுணரப்படாத விழுப்பொருளாம் சிவபெருமான் தன் உண்மை நிலையினின்றும் தன்னருளால் திருவுருக்கொண்டு எண்மை நிலையை மேறகொண்டருளுகின்றனன். அக்காலத்து அவனது அளவிலாப் பண்புகளுள் சிலவும் தொழில்களுள் சிலவும் மூதறிஞர்களாகிய நல்லார்கட்கு அகத்தும் புறத்தும் புலனும். அப் புலப்பாட்டினைத் திருவருளால் அவர்கள் தெளிவுணர்வர். உணர்ந்த வுண்மையினை அவர்கள் வண்மைச செந்தமிழ்ச் செழும்பாடல்களால் வையத்துக்கு வழங்கியருள்வர்.

(தொடரும்)

---

* இழிவறிந். திருக்குறள், ௯௪௯.

# தமிழும் வடமொழியும்

[புலவர், தி.நா. பழனிவேலன், பி. ஓ. எல் ]

"சரசுவதி" என்ற மாதம் இருமுறை இதழில் கடந்த சூன் மாதம் வெளிவந்ததில் அறுபத்தேழாம் பக்கத்தில் உயர்திரு. சாமி சிதம்பரனூர் அவர்கள் வரைந்துள்ள மேற்குறித்த கட்டுரையைப் பார்த்தேன், படித்தேன். மிக்க வியப்புற்றேன். வேதனையும் அடைந்தேன்.

ஏனெனில் யான் அரசர்மடம் நடுநிலைப் பள்ளியில் படித்த போது எமக்குத் தமிழ்ப்பற்றையும் தன்மான உணர்ச்சியையும் ஊட்டியவர் சிதம்பரனூர் அவர்களே.

தமிழ் தனித்து இயங்கக்கூடிய தனிப் பழமொழி; உலகத்தில் முதலில் தோன்றிய மொழியும் அதுதான். பிறமொழிச் சார்பு தேவையில்லாத ஒருமொழி உண்டு என்றால் அது தமிழே தான். வேற்றுமொழி கலந்தால் கன்னித்தமிழ களங்கமுறும். வடமொழி மிகுதியும் கலந்ததனலேயே தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம் முதலிய மொழிகள் தமிழினின்றும் பிரிந்தன.

பிறமொழிக் கலப்பால் ஆங்கிலம் முதலிய மொழிகள் வளம் பெற்றனஎன்பது உண்மையாயிருக்கலாம் ஆனல் தமிழ்மொழி அவ்வாறு ஏற்று வளம்பெறுவதற்கு மாறாக நலிவடையும். அதன் இலக்கண அமைப்பு அதற்கு இடம் தருவதாயில்லை. "வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே" என்பது தொல்காப்பியம் ஆகவே பிறமொழிக் கலப்பைத் தமிழ்த்தாய் ஏற்றால் அவளது தூய்மை தொலைந்துவிடும்; சிறப்புச் சிதைந்துவிடும்; மேன்மை மறைந்துவிடும்; என்றெல்லாம் எம்முன் பேசி எமக்குச் செந்தமிழ்ப் பற்றையும், செந்தமிழில் எழுதவும் பேசவும் வன்மையையுமுண்டாகச் செய்த தமிழாசிரியரா இன்று முரண்பட்டுக் கூறுகிறார் என்று திகைப்படைந்தேன்.

இதன்பிறகுதான் மனிதனுக்கு வாழ்க்கையில் "குறிக்கோள்" என்று ஒன்று உண்டா? இல்லையா? என்ற ஐயம் எழுந்தது. நேற்றொன்று, இன்றொன்று, நாளையொன்று எனக் கூறிச் சமயத்திற்கேற்பப் பச்சோந்திபோல மாற்றிக்கொண்டே போவது மனித இயல்பு ஆகுமா? என்று ஐயுறுகிறேன். மறுப்பு எழுத எனக்கு விருப்பமில்லையாயினும் அவர்களது பழைய

கொள்கையை நினைவுறுத்தவே இதனை வரைய முற்பட்டேன். பணத்திற்காகவோ, பதவிக்காகவோ, பெயருக்காகவோ கொள்கையைப் பணையம வைப்பவர்கள் மனிதப் பண்புடையவர்களா?

சிதம்பரனார் அவர்கள் அறிவு, ஆராய்ச்சி நல்லமுறையில் தமிழுக்கு ஆக்கம் தரும் வகையில் பயன்படக் கூடாதா? அல்லது தமிழுக்குக் களங்கம் கற்பிக்காமலாவது இருக்கக் கூடாதா? இங்ஙனம் வேண்டாத ஆராய்ச்சியில் இறங்கியுள்ளது பெரிதும் வருந்துதற்குரித்தே.

சிதம்பரனார் செய்வதைத் தமிழறிஞர்கள் சிந்தித்துப் பார்ப்பார்களாக.

சமஸ்கிருதம் தமிழில் கலந்ததால்தான் தமிழ் வளம பெற்றது என்றும, அம மொழியிலலாவிட்டால் தமிழேயில்லை யென்றும, தமிழிலுள்ள நூல்களெல்லாம் வடமொழியின் பெயர்ப்பே என்றும், செய்யுளில் எல்லாமொழிச் சொற்களையும் சேர்க்கவேண்டும் என்றும, இலக்கியக்கடலாக விளங்கிய வட மொழியினின்றுதான் தமிழ இலக்கியச் செல்வத்தைப் பெற்றது என்றும, வள்ளுவர் குறிப்பிடும அறநூல்களெல்லாம வடமொழி நூலகளதாம் என்றும், தமிழுக்கும வடமொழிக்கும உள்ள தொடர்பு தமிழுக்குத் தீமை விளைக்கவில்லை, நனமைதான் தந்துளது எனறும, பலதுறைகளிலும தமிழ் இலக்கியத்தை வளம்பெறச் செய்திருக்கிறதெனறும இயம்பியுள்ளார்.

இப் பிதற்றலுக்கு ஒவ்வொன்றுக்கும் மறுப்பு எழுதத் தொடங்கினால ஒரு தனிப் புததகம்கூட வெளியிடலாம். ஆனால் தமிழ்ப்பேரறிஞா, ஆராய்சசியறிஞர், மொழிநூலறிஞர் முதலி யோா கவனததிற்குக் கொண்டு வந்து பிறகு வாய்ப்புக் கிடைப் பின் விரிவாக எழுதுவான் கருதியுளேன. ஆதலின ஈண்டுச் சுருஙகச் சொல்லி விளங்கவைக்கும முறையையே மேற்கொளவல்.

பிற மொழிகளில் உள்ள சிறந்த இலக்கியஙகளை மொழி பெயர்ததுக்கொள்வது எந்த மொழிக்கும் நன்மை பயககும் என்பதை யாரும் மறுக்கமாட்டாாகள்; மறுக்கவும் முடியாது. சுபபிரமணிய பாரதியாரும்

> "பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரஙகள்
> தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்."

என்று கூறியுள்ளார்.

இஃது ஒருவாறு உண்மைதான். ஆனால் தமிழில் இலக்கி யமே இல்லை வடமொழிச் சார்பால்தான் வளம்பெற்றது என்று கூறுவது தமிழுக்கே இழுக்காகும். அவர் கூறுவதுண்மையா

பின் பதினாயிரம் யாண்டுகளாகச் சங்கமிருந்து தமிழாய்ந்த பதினாயிரம் புலவர்கள் இயற்றிய ஆயிரக்கணக்கான தமிழ்நூல்களின் பெயர்கள தெரிகின்றனவே அவை இருந்தமை புனைந்துரையா? அந்த நூல்கள யாவும் வடமொழியாளர் தென்தமிழ் நாட்டில் குடியேறியதும் நெருப்பிலிட்டும், நீரிலெறிந்தும், நிலத்தில் புதைத்தும் அழித்துவிட்டுத் தங்கள் கற்பனைக் கதைகளாகிய "புராண இதிகாசங்கள், ஆகமங்கள், உபநிடதங்கள்," முதலியவற்றைத் தமிழ்நாட்டில் பரவச் செய்தனர். இதனால்தான் இப்போதுள்ள சில நூல்கள் கூடத் தமிழர் வடமொழியிலிருந்து பெயர்த்துக் கொண்டவை என்று ஆசிரியர் கூறுகிறார்.

கால ஆராய்ச்சிப்படி வடமொழி முன்னர்த் தோன்றியதா? தமிழ் முன்னர்த் தோன்றியதா? என்பதை நோக்குங்கள். ஆரியர் வடமேற்குக் கணவாயின் வழியே ஆடுமாடுகளை ஓட்டிக்கொண்டு நாவலந்தீவில் (இந்தியா) குடிபுகுந்த காலம் யாது? இற்றைக்கு எத்தனை ஆண்டுகள் ஆயின? தமிழ் ஆரியர் வந்தபின் தோன்றியதா? முன் தோன்றியதா? எத்தனை ஆண்டாயிற்று? பேச்சு வழக்கில்லாத காடு முரடான மொழிதான் முதலில் தோன்றியிருக்கும் போலும்! பண்பட்ட மென்மைத் தன்மை வாய்ந்த தனித்தியங்கும் தன்மைபெற்ற இனிய மொழிதான் பிறகு தோன்றியிருக்கும்போலும். இது மொழி நூல் ஆராய்ச்சியாளர் அறிவர். ஆனல் ஆசிரியர் அப்பக்கமே திரும்பவில்லை.

தமிழில் வடமொழி கலந்ததால்தான் வளம்பெற்றது தமிழ் என்கின்ற ஒன்றைமட்டும் முதலில் பாருங்கள். வடமொழி தமிழில் கலந்து வழங்கப்பட்டதால் - படுவதால் எத்துணைத் தமிழ்ச் சொற்கள வழக்கு ஒழிந்தன, அந்த இடங்களை வட சொற்கள் பற்றிக்கொண்டன என்பது ஆசிரியர் அறியாததல்ல. பட்டியலைக் கீழே தருகிறேன்; எந்தெந்த தமிழ்ச்சொற்கள் ஒழிந்தன என்பதையறிக. பிறகு வளப்படுத்திய வள்ளன்மை வெளிப்படும்.

| தமிழ்ச்சொல் | | வடசொல் |
| --- | --- | --- |
| மொழி | — | பாஷை |
| செய்தி | — | விஷயம் |
| நலம் | — | சௌகரியம் |
| வணக்கம் | — | நமஸ்காரம் |
| சிறப்பு | — | விசேஷம் |
| துன்பம் | — | கஷ்டம் |
| பறவை | — | பக்ஷி |
| அன்பு | — | பக்ஷம் |

| | | |
|---|---|---|
| விருப்பம் | — | இஷ்டம் |
| இழப்பு | — | நஷ்டம் |
| கழுவாய் | — | பிராயச்சித்தம் |
| சுவை | — | ருசி |
| மணம் | — | வாசனை |
| மலர் | — | புஷ்பம் |
| மறைக்காடு | — | வேதாரண்யம் |
| மயிலாடுதுறை | — | மாயூரம் |

இங்ஙனம் பதினாயிரத்திற்கு மேற்பட்ட வடசொற்கள் தமிழில் கலந்து தூய தமிழ்ச் சொற்களை அழித்து ஒழித்து விட்டன. ஆசிரியா இவற்றை அறியாதவரா? தமிழ்ப்புலவ ராயிற்றே!

இன்னும் பிறமொழிச் சொற்கள் தமிழில் கலப்பதால் வளம்பெறும் தமிழ் என்பதற்குச் சில எடுத்துக்காட்டுக்கள் தருகின்றேன் அன்பர்கள் ஆய்ந்து முடிவு கூறுக, பிறமொழிக் கலப்பால் தமிழ் தாழுமா? வாழுமா? என்று. மொழிநூல் ஆராய்ச்சியில்லாதாரே வாழும் எனபவர்.

| தமிழ்ச்சொல் | | பிறமொழிச் சொல் |
|---|---|---|
| கோட்டம் | — | ஜில்லா |
| கூற்றம் | — | தாலுகா |
| ஊர் | — | கிராமம் |
| கருவூலம் | — | கஜானா |
| கூற்றத்தலைவர் | — | தாசில்தார் |
| கோட்டத்தலைவர் | — | டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் |
| ஐயா | — | சார் (Sir) |
| நேரம் | — | டைம் (Time) |
| நேரந்தவறி | — | லேட் |
| தொடர்வண்டி | — | ட்ரெயின் |
| பள்ளிக்கூடம் | — | ஸ்கூல் |
| வாசல் | — | கேட் |
| நீதிமன்றம் | — | கோர்ட், கச்சேரி |
| சாலை | — | ரோடு |
| பணியாள் | — | பியூன் |
| ஊர்காவலர் | — | போலீஸ் |

இப்படி எழுதிக்கொண்டே போனால் ஏட்டில் அடங்காத பிறமொழிச் சொற்கள் தமிழரால் பேசப்பட்டுத் தமிழ்ச்சொற்கள் வழக்கொழிந்ததுமன்றி யாராவது தமிழில் பேசவேண்டு மென்று பேசினால் தமிழர்கட்குப் புரியவில்லையாம். என்னே!

தமிழர் நிலை, தமிழின் நிலை, தமிழ்நாட்டின் நிலை. யார் என்ன வேண்டுமானாலும் சொல்லலாம், எழுதலாம் என்றாய்விட்டதே. தமிழ்த்தாயின் கதி இத்தகைய ஆசிரியர் போன்றவரிடம் அகப்பட்டு அவதிப்படுவதுதானோ? அறிஞர்கள் சீர்தூக்கிப்பார்க்க.

வடமொழியும் பிற மொழியும் தமிழில் கலப்பதால் எத்துணைத் தமிழ்ச் சொற்கள் மறைந்தன என்பதற்குச் சில உதாரணங்கள் மேலே கூறினேன்.

பிறமொழிச் சொற்கள் கலந்தால் தமிழ்ச் சொல் வளம் பெறும் என்றும், அதனால் என்ன கெடுதல் என்றும ஆசிரியர் கேட்கலாம், ஏனையோரும் எண்ணலாம். அதற்கு விடையே மேலே காட்டியது. தமிழறிஞர் பேசுவதுபோல எழுத இன்னும் தொடஙகவில்லை அந்தப் பணிபுரியத் தொடங்கிவிட்டாலோ. தமிழுக்கு முழுக்குப்போட வேண்டியதுதான். அப்போது ஒரு புதுமொழி தோன்றும். எப்படியிருக்கும் என்பதற்கு ஒரு காட்டு: "ஐ டேஞ்சூர் போய் மை சஷ்டகரையும ஹிஸ் பாவாவையும் மீட் பணணிண்டு தம் ஜேஷ்ட குமாரியை ஏவுட புத்ரனுக்குப் பாணிக்கிரஹணம் செய்சு எ டீசன்ட் ஜாப்பில் கனிஷ்ட இருந்துண்டு சௌஸதமாய் லைப் லீட் பண்ணிண்டிருக்க அரேஞ் பண்ணிடலாம்னு நெனைச்சிண்டிருக்கேன். நோக்கு எப்படித் தோண்ட்றது?" என்பது போன்ற தமிழ் நடைதான தோன்றும். இது என்ன மொழியென்று பெயரிடுவது? "கதம்பம்," என்று கூறலாம் என எண்ணுகிறேன். இபபோது பேச்சோடு இருககிறது இநத நடை. நலலவேளை தமிழ்ப பித்தர்கள் இந்த அமமாமி நடையைத் தமிழர் நடத்தும் செய்தித் தாள்களில் எழுதத் தொடஙகவில்லை. பிறமொழிச் சொற்கள் கலப்பதால் தமிழ் செழித்து வளர்ந்து இலக்கியக் கதிர்களை ஈனும், என்று கூறுவோர் கவனிக்க. தமிழறிவு சான்ற ஆசிரியர் சிதம்பரனார் அவாகள் இததகைய, தமிழுக்கு இழிவு கறபிக்கும், ஆராய்சசியில் இறங்காதிருக்குமாறு வேண்டிக் கொள்ளுகிறேன். தமிழ்ப் பேராசிரியர் யான் கூறியவற்றைச் சிந்தித்துக் கருத்து வேறுபாடிருப்பின் அறிவிபபார்களாக! வாழிய செந்தமிழ்!

குறிப்பு: பண்டும் அயன்மொழி மயலால் தம்நிலை மறந்து தாய் மொழிப் பகைஞராய் ஆய்வெனப் பெயா வைதது உண்மைககு மாறுகவும் கடுநிலை திறம்பியும வழுப்பட எழுதியும் உரைத்தும் இழுககுற்றுமாய்ந்தாரும் சிலருளா. காலந்தோறும அவ வரிசையில சிலர் தோன்றுவர் போலும். அத்தகையார் இவவணமை நிறைந்த உண்மையுரையினை உணர்ந்து திருந்துவரென நம்புகின்றேம். —ஆசிரியர்.

# அலர் பெரிதே தோழி!

[தமிழன்பன்]

க. அந்தியிலே ஆற்றோரம் ஓர்நாள் என்னை
'அஞ்சுகமே! உனைபபிரியேன்!' என்ற னைத்துச்
சிந்தையெலாம் அழுந்தாற இன்பந் தந்தார்
சீருடனே மணந்துகொள வந்தா ரில்லை!
வெந்ததொரு புண்ணதனில் வேலைப் பாய்ச்சும்
விதம்போல எழுந்திட்ட அலர்தான் இங்கே
*இந்திமொழி எதிர்ப்பியக்கம் வென்ற காலை
எழுந்திட்ட ஆர்ப்பதனில் பெரிதே தோழி!

உ. 'கள்ளவிழும் மலர்க்கோதை! உன்னை யன்றிக்
கனவினிலும் பிறர்க்காணேன்' என்று சொல்லி
அளளியிதழ் சுவைத்திட்ட அன்பர் இன்னும்
ஊரறிய ஆட்கொள்ள வந்தா ரில்லை!
வெள்ளத்தில் துடிக்கின்ற மானை அம்பால்
வதைத்தல்போல் விளைந்திட்ட அலர்தான் இங்கே
தெள்ளுதமிழ் தனியாட்சிப் பீட மேற்றச்
செய்திட்ட முழக்கதனில் பெரிதே தோழி!

ந. 'வில்லிகர் திருநுதலே! நிலாநீ! வான்நான்!
வேறுபடல் இலையறிவாய்! இதழ்த்தி றநதே
முல்லைநகை புரிந்திடுவாய்!' என்றார் இன்னும்
முழுவதிர மணம்புரிய வநதா ரிலலை!
நல்லவொரு தலைவனில்லா நாட்டை மாற்றார்
நலிவுசெயல் போலெழுந்த அலர்தான் இங்கே
எல்லையெலாம இழந்திட்ட தமிழர் கூடி
எழுபபியவோர் பேரொலியிற் பெரிதே தோழி!

ச. 'மாமலர்நீ! தேனிநான்! மாதே! உன்னை
மருவியபின் பிரிவதெனில் ஆகுங கொல்லோ!
தாமரையாங் கதுப்பருள்வாய்' என்றார் இன்னும்
தனியேனைத் துணைக்கொள்ள வந்தா ரில்லை!
ஏமமின்றிப் புயலிடையே அலைவார் தம்மை
எரிதழுவல் போலெழுந்த அலர்தான் இங்கே
தாமிகவாய் வரிகொடுத்துந் துயரம் மேவும்
தமிழர்தம் எதிர்ப்பொலியிற் பெரிதே தோழி!

---

* தமிழ்க்கடல் மறைமலையடிகளார் வாழ்நாள் நிகழ்ந்த இந்தி எதிர்ப்பியக்கம்.

# சீட்டுக் கவியின் சிறப்பு (செவிவழிவந்த செய்தி)

[பண்டித வித்துவான், திரு. தீ சங்குப்புலவர்]

செந்தமிழ் நாட்டிற் சிறப்புடையது தென் பாண்டி நாடு; அந்நாட்டின் முகம்போல விளங்குவது இராமநாதபுரம்; முகவை என்பதும் இராமநாதபுரத்திற்கு ஒரு பெயர். இராமநாத புரத்தை யாண்ட மன்னர் எல்லாரும் செந்தமிழ்ப்பற்றுடையவர்; புலவர்களை யாதரித்துப் புகழும் பெருமையும் பெற்றவர்; ஆங்கிலேயர் அரசு நம் நாட்டில் வந்த பின்பும புலவர்களை யாதரித்த குறுநில மன்னர் பலர் உளர் எனினும் அவர்களுட் சிறந்தவர் சேதுபதி மன்னரே; வேறு மன்னர் எவரும் இலர். மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கம் நிலைநாட்டியவரும் அவர் வழித் தோன்றலாகிய பாண்டித்துரைத் தேவர் அவர்களே.

அம்மன்னவர் எல்லாரும் தமிழ்ப் பற்றுடையவரே எனினும் முதன்மை பெற்றவர் இருவரென வரலாற்றால் அறிகின்றோம. (1) முத்துராமலிங்க சேதுபதி, (2) பொன்னுச் சாமித் தேவர். இவர்கள் இருவரும புலவர்கள் தரமறிந்து வரிசையுணர்ந்து பரிசில் வழங்கும பான்மையுடையவராய் இருந்தனர். இவர்கள் தமிழ் மொழி இலக்கணம இலக்கியங்கள் பல கற்றுக் கவிபாடும் திறம் உடையவராகவும் திகழ்ந்தனர். யமகம், திரிபு, சிலேடையமைந்த கவிகளுக்கும் எளிதிற் பொருள் காணும் ஆற்றலும் பயிற்சியும் அவர்களபால் அமைந்திருந்தன. இராமநாதபுரம் மன்னர்களிடம் பரிசில் பெற்ற புலவர் என்றால் அவருக்கு ஒரு தனிமதிப்பு உண்டு; மற்றைக் குறுநில மன்னர் எல்லாரும் மதித்துப் பணிந்து பரிசில் அளித்து வழிச் செல விடுதல் அக்கால வழக்கமாயிருந்தது.

முத்துராமலிங்க சேதுபதியவர்கள் அரசுபுரியுங் காலத்திற் பல புலவர்கள் சென்று பரிசில் பெற்று வாழ்ந்திருந்தனர். "புலவர் கூட்டம் இல்லாத நாளே யிராது" எனப் புகல்கின்றனர் பலர். அந்நாட்டில் முதுகுளத்தூரில் வேளாளர் குலத்திற் பிறந்தார் சரவணப் பெருமாட் கவிராயர். இளமையிற் பல தமிழ் நூல்கள் கற்றார் கவிபாடும் திறமையும் பெற்றார். சீட்டுக் கவி எழுதும் ஆற்றலும் இவர்பாற் சேர்ந்தது சீட்டுக் கவிச் சரவணப பெருமாட் கவிராயர் எனப் பட்டமும் பின்னர்ப் பெற்றார். இவர் முதலில் முத்துராமலிங்க சேதுபதியவர்களைக் கண்டார். அவர் அருமையறிந்து அவைக்களப் புலவராய் அமர்த்தினர். பல்லக்கு, வண்டி, குதிரை, பணியாட்கள் எல்லாம் கொடுத்து இன்புடன் வாழ்வித்தனர். ஊர்திகளில் ஏறிச்

சென்று வள்ளல்கள் மன்னர்களைக் கண்டு வருவது இவர் வழக்கம். வாழவும் கெடவும் பாடவல்ல தெய்வத்தன்மை வாய்ந்த புலவர் என மதித்தனர். கண்டவுடன் கைகுவித்து வணங்கிப் பரிசில் வழங்கிப் பலரும் செலவிடுப்பார் அக்காலத்தில் இவரையறியாத குறுநில மன்னர் எவரும் இலர் என்றே துணிந்து கூறலாம். இவர் எங்கும சென்று பரிசில் பெற்று வந்து இராமநாதபுரத்தில் வாழ்வு நடத்தினர் அயலூர்கட்குச சென்று வந்தால் வந்தவுடனே மன்னரைப்போய்க் கண்டு வரலாறு அனைத்தும் எடுத்துக் கூறிவருவார்.

நெடுநாள் வெளியூர் சென்றுவந்த கவிராயர் மன்னரைக் காண ஒருநாள் அவைககளம் சென்றார். கண்டு மகிழ்ந்து உரையாடியிருக்கும் வேளையில் சேதுபதியவர்கள் கவிராயரை நோக்கி "எங்கு எங்குச் சென்றீர்கள்? என்ன என்ன பரிசில் பெற்று வந்தீர்களா?" என்று வினவினர். கவிராயர் "எட்டையபுரம், இடையகோட்டை, சேற்றூர், சிவகிரி, மருங்காபுரி, பாலமேடு, பாகற்பட்டு, வேளுக்குறிச்சி முதலிய பல குறுநில மன்னரைக் கண்டுவந்தேன். எல்லாரும் தக்க பரிசு வழங்கி வரிசையுடன் வழியனுப்பினர். சேதுபதி அவைக்களப் புலவர் சீட்டுக் கவிச் சரவணப் பெருமாள் என்ற பெயர் கேட்டவுடன் எல்லாரும் அஞ்சி எதிர்கொண்டழைக்கின்றனர் பற்றுள்ளம் உடையவரும் (உலோபியும்) பரிசு வழங்க முன்வருகின்றார். நான் எழுதும் சீட்டுக் கவி ஒவ்வொன்றிலும் 'சேதுபதி வாசற்பிரதானி' 'சேதுபதி மன்னர் மதித்த மாணிககம்' எனபன போன்ற தொடர்கள் அமைத்துத் தங்கள் அவைக்களப் புலவன் என்பது தோன்றக் குறிபபுக் காட்டிவிடுப்பேன். கற்றுச் சொல்லியர் போய்க் கவியைப் படித்துக காட்டியவுடன் எவரும் விரைவாக வந்து தகுதியான பரிசில் வழங்கி ஏழடி பின்வந்து என்னை யனுப்புகின்றனர். எல்லாம் தங்கள் கருணைதான் இத்தகைய ஆற்றல் எனக்கு வாய்த்துளது," என்றார்

மன்னர் பெருமான், கவிராயரை நோக்கி "பற்றுள்ளம் உடையவரும் எனக்குப் பரிசில்வழங்குவார் என்று கூறுகின்றீரே! இஃது உண்மையா?" என்றார். "அரசே! நான் பொய் கூறுவேனா? இதுவரை எவரும் எனக்குப் பரிசு வழங்காதவர் இலர். பற்றுள்ளம உடையவரோ! பற்றுள்ளம் இல்லாதவரோ! எவராயினும் சரி, என்னைக் கண்டாற் பாதகாணிக்கையாகப் பரிசு வழங்கி ஏழடி என்பின்னே வந்து திருமபிச் செல்கின்றனர். இதில் ஐயம் வேண்டாம்," என்றனர்.

உடனே மன்னர் பெருமான் "ஒரு செய்தி கூறுகின்றேன், கேளும்," என்றார். இராமேசுவரம் என்ற ஊரில் மணியகாரர்

ஒருவர் இருக்கிறார். அவர் பெயர் பரமசாமி என்பது. பெருஞ் செல்வம் படைத்தவர் ஏழைகள் இரவலர்களுக்கு ஒரு காசு கூடக் கொடுக்கமாட்டார். பாணர் புலவர் முதலிய எவரும் போய் அவரிடம் பரிசுபெற்று வந்ததாக நாம் கேட்டறியோம். ஈயாத பற்றுள்ளமுடையவர் (உலோபி) என்பது குறித்து மக்கள் எல்லாரும் 'நசுவற் பரமசாமி' என்று பட்டங்கூடக் கட்டிவிட்டனர். அவரைப்போய்ப் பார்த்துக் கற்றவித்தையெல்லாம் காட்டிப் பரிசு பெற்றுவாருங்கள் பார்ப்போம் அவர் ஒருகாசு கொடுத்தால் நான் பத்துக்காசு தருகிறேன். எவ்வளவு கொடுத்தாலும் அதற்குப் பத்து மடங்கு நான் பரிசு வழங்குகிறேன். இது சத்தியம்," என்றார்.

கவிஞர் உடனே பல்லக்கில் ஏறினார்; பணியாட்கள் சூழ்ந்து வர இராமேசுவரம் சென்றார். நசுவற் பரமசாமி மாளிகை முன்பாகப் பல்லக்கை நடத்திச்சென்றார பரமசாமியோ கவிராயர் வரவைக் காணாதவர்போல உள்ளேயிருந்தார் வேறு ஓரிடத்திற்போய்த் தங்கியிருந்து சீட்டுக் கவி எழுதினார். "புலவர்கள் மிகவும் கொடியவர்கள்; அவர்களைக் கண்டால் எல்லாரும் வணங்கிப் பரிசில் வழங்கவேண்டும்; இல்லையெனில் கேடுவிளையும் என்பதுதான்" அதில் உள்ள பொருள் அறிவில்லாத அவனுக்குத் தக்க கவிதான் அது. பாடிச் சில கற்றுச்சொல்லிகளை விடுத்தார். கவியைக் காண்க:

### சீட்டுக் கவி:

வீரப்ர தாபகவி சரவணப் பெருமாள்வில்
விசையன்பல் லககுவந் த
வேளையெதிர் வாரா திருககலா மாகொடிய
வித்வசனர் வாய்த்தீ பினால்
வெந்தவூர் கோடானு கோடியுண் டேயிந்த
மேதினியி லேபுலவர்கள்
மெச்சுரச குளிகைகள் கொடாதகண் டன்களை
விடாதகண் டன்கள்பட்ச
வாரமுற் கோபிகள் கொடும்பச்ச நாவிகள்
வணங்காக் கொடுஞ்சாதிகள்
மாளா நெருப்புக்கள் மீளாத நஞ்சுகள்
மடிக்கின்ற வெரிபூசசிகள்
வசசிரப் பசைகளீ யககதிர்க வாகாச
வலைகள்மடை வாய்க்கொக்குகள்
வலியவாட் கொல்லிகள் மனுத்தினு நமன்கள்கொடு
மைப்புற்றின் வாய்க்கரடிகள்

காரியக் கள்ளன்கள் ஆரியப் பேய்கள்வெகு
கபடிகள்பு ருசவேசைகள்
கல்லிலே நாருரிப் பவராற்று மணலையும்
கயிறாத் திரிக்கும்வினைஞர்
கருணைவடி வானவொரு கடவுளைத் தவிரவெவர்
களையுமதி யாததீரர்
கண்டவர் மதித்துத் தரும்பரிசில் தந்திடிற்
கண்யமொடு புகழுமன்பர்
காரற்ற வம்பன்கள் கொமபேறி மூக்கன்கள்
நச்சுப்பல லுப்பாம்புகள்
நல்லோர்க்கு நல்லோர்கள் தீயருக் கெதிர்தீயர்
நாசகா லன்கள்நாங்கள்
கதிர்கொண்டு வந்தா லெதிர்பொறுப் போந்தருகி
ஞெலொருக் காலும் பொறோம
ராமே சுரந்தன்னில் வேறுமணி யஞ்செய்யும்
நசுவற்ப ரமசாமியே.

இக்கவியைப் பெருங்குரலோடு படித்துப் பொருள் விளக்கினர், கற்றுச் சொல்லியர். சரவணப் பெருமாட் கவிராயர் என்பவர் தெய்வத்தன்மையுடையவர்; வாழவும் கெடவும் பாடவல்லவர் அவர்; பல்லக்கு வந்தபோதே எதிர்சென்று பணிந்திருக்க வேண்டும்; பெரும்பிழை செய்துவிட்டீர் என்று விரிவாகப் பேசினார்கள். பற்றுள்ளம் உடையவராதலாற் பரமசாமி பயந்து நடுங்கினார். செல்வம் தொலைந்துவிடுமே என்று சிந்தித்தார்; "நான் என்ன செய்யவேண்டுமோ இப்போது?" என்று கேட்டார்.

அப்போது கற்றுச்சொல்லிகள், "உங்கள் தகுதிக்குத் தக்கவாறு பாதகாணிக்கையாகப் பணத்தை வைத்து 'எடுத்துக் கொள்ளும்' என்று வேண்டுங்கள். கவிராயர் மனம் கசிந்துருகி யன்புடன் உங்களை வாழ்த்துவார். பின் செல்வம் பெருகிச் சிறப்புடன் வாழ்வீர்" எனறனர். அவ்வாறே செய்கிறேன் என்று கூறி நூறு வெண் பொற்காசுகளைத் தட்டிலேந்திப் போய்த் தாளடியில்வைத்து வணங்கினார். கவிராயரும் வாழ்த்துரை வழங்கினார். நசுவற் பரமசாமி மகிழ்வடைந்தார். கவிராயர் மீண்டுவந்து காவலரைக் கண்டார். செய்தி கூறினார். முன்னர் மொழிந்தபடியே ஆயிரம் வெண் பொற்காசுகளை யள்ளி வழங்கினார். சரவணப் பெருமாட் கவிராயருக்கு இருந்த மதிப்பை என்னவென்று சொல்வது? இது மிகவும் புதுமையான செயல் அன்றோ!

---

## மகாவித்துவான்

# மறைத்திரு. சி. கணேசையரவர்கள்

[பண்டித வித்துவான், திரு. க. கி. நடராசன், B.O.L. Dip-in-Ed]

*தேசுமிக வடியேற்குச் செந்தமிழில்*
*நூல்கள்பல கற்பித் தென்னை*
*மாசகலக் கற்றவர்கள் அவைநடுவே*
*வைத்தமகா வித்து வானைக்*
*காசினியோர் கண்மணியை இலக்கணநற்*
*சிரோமணியைக் கணேசை யப்பேர்த்*
*தேசிகனை யுரைமணியைக் கவிமணியைச்*
*சிந்தையினி லிருத்து வாமே.*

தமிழ் கூறும் நல்லுலகம் நாவலர் பெருமானை நன்கறியும். யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் தமிழுக்கும் சைவத்துக்கும் தனித்தொண்டாற்றினார்கள் என்றால், தம் அரிய பணியைத் தொடர்ந்து செய்வதற்கு ஒரு மாணவ பரம்பரையையும் ஆக்கித்தந்தார்கள். நாவலரவர்களுடைய மாணாக்கர்களுள் அவர்களுடைய தமக்கையார் புதல்வனாகிய வித்துவ சிரோமணி பொன்னம்பலப்பிள்ளையவர்கள் தலைசிறந்தவர்; நுண்மாண் நுழைபுலம் படைத்தவர். சங்க இலக்கியங்கள் அச்சில் வாராத அக்காலத்திலேயே (அஃதாவது கக-ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலேயே) ஏட்டுப் பிரதிகள் மூலம் சங்க இலக்கியங்களைக் கற்றவர். சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, இராமாயணம முதலிய இலக்கியங்களைத் துருவித் துருவி ஆராய்ந்தவர். தொல்காப்பியத்தைப் பல்கால் கற்று நிறைந்த அறிவுபடைத்தவர். ஒருகால் ஒன்றைக் கற்றாலே மனத்தில் நன்றாகப் பதித்துவைக்கும் நினைவாற்றல் சாலவும் படைத்தவர். இன்னிசை அறிவும் இனிது வாய்க்கப்பெற்றவர். பழைய உரையாசிரியர்களாகிய பரிமேலகர், நச்சினார்க்கினியர், பேராசிரியர் முதலியோருடைய உரைகளை ஏற்ற ஏற்ற இடங்களில் எடுத்தாளும் ஆற்றலும் நுண்ணிய இலக்கண அறிவும் வாய்க்கப்பெற்றவர் இத்தகைய பேரறிஞர்பாற் கல்விகற்றோர் பலராவர். அவர்களுள் தலைசிறந்தவர் மகாவித்துவான் மறைத்திரு. சி. கணேசையரவர்களாவர். யாழ்ப்பாணத்துச் சுன்னாகம் அ குமாரசுவாமிப் புலவரவர்களின் தமிழ்த்தொண்டையும் பேறிவையும் பெருந்திறனையும் தமிழறிந்தாரனைவரும் அறிவர். அறியாதார் உளரேல், அவர் தமிழறியாதாரே. வித்துவ சிரோ

மணி, பொன்னம்பலப்பிள்ளையவர்கட்குப்பின். குமாரசுவாமிப் புலவரவர்களிடம் கல்வி கற்றதோடு பிற்காலத்திற் புலவரவர்களுக்கு உசாத்துணைவராகவும் விளங்கியவர் மகாவித்துவான் கணேசையரவர்களாவர். இத்தகைய வாய்ப்பைப்பெற்ற மகாவித்துவான் கணேசையரவர்களின் மாணவர்களுள் யாதுமொருவனுகலாற்போலும் செந்தமிழ்ச் செல்வி இதழாசிரியர் என்னையும் ஒரு பொருளாகக் கருதிச் செந்தமிழ்ச் செல்வி இதழில வெளியிடுதற்காகக் "கணேசையர் வரலாற்றுச் சுருக்கம்" ஒன்றை எழுதியனுப்புமாறு பணித்தார்கள். அப் பணியைத் தலைமேற்கொண்டு அவ்விதழுக்கு ஏற்றபெற்றி சுருக்கி எழுதப் பெற்றதே இக் கட்டுரையாகும். அறிஞர் குற்றங் களைந்து குணங் கொள்வாராக.

### பிறப்பு

யாழ்ப்பாணத்தின் வடபால் ஏறக்குறைய எட்டு மைல்களுக்கப்பால், சிவந்தநிற மண்ணும் தீஞ்சுவை நீரும் பொருந்தி இயற்கை வளனெலாஞ் செறிந்து தாளாண்மைமிக்க வேளாண் டொழிலுக்குரியதாய் விளங்குவது புன்னாலைக் கட்டுவன் என்னும் ஊர். இவ்வூரிலே சைவ அந்தணர் குலத்திலே காசிப கோத்திரத்திலே சின்னையர் என்னும் அந்தணச் செல்வர்க்கும் அவர்தம் அருந்ததியன்ன வாழ்க்கைத் துணைவி சின்னம்மாளுக்கும் கணேசையர் ஐந்தாவது புதல்வராகப் பிறந்தார். இவருக்கு மூததோர் நால்வரும் பெண்களாவர் தந்தையும் தாயும் விநாயகப் பெருமானைக் குலதெய்வமாகக் கொண்டொழுகினவராதலின், கணேசரருளாற் பிறந்த தம் அருந்தவப் புதல்வருக்குக் "கணேசன்" என்று பெயரிட்டனர். பின்னளிலே கணேசையரவர்கள் பெரிய கணேச பக்தனுகவே மாறிவிட்டார்கள். அவர்கள் பாடிய "வருத்தலைவிளான் மருதடி விநாயகர் இருபா இருபஃது" என்னும் இனிய செய்யுள் நூலின் கண்ணே,

> "என்குலத் தந்தணர் நின்னடித் தொண்டினை
> வழிவழி செய்து வாழும் புனைமா
> நகரின் மேவிய நற்றளி யிற்போல்
> வீயா மருதடி மேவுமூ லத்தும்
> உற்றே யருள்செயும் உயர்பரம் பொருளே."

என்று தம் தந்தைதாயர் முதலியோரும் விநாயக வழிபாட்டிற் சிறந்து விளங்கினர்கள் என்பதைக் குறிப்பிடுதல் காண்க. கணேசையரவர்கள் பிறந்த நாள் ஈசுர ஆண்டு பங்குனித் திங்கள் பதினைந்தாம் நாளாகும் (1-4-1878) இரகுவமிசத்துக்குக் கணேசையரவர்கள் எழுதிய உரைக்குச் சிறப்புப்பாயிரங்கொடுத்த

தனுகம் அ. குமாரசாமிப புலவரவர்கள், "காசிபகோத்திர முடையோன் புன்னைநகர்ச் சின்னைய நாதன் மைந்தன் தேசிகன் வித்துவசூடாமணி பொன்னம்பலப் பெயர்கொள் செம்மல் பாதசே பேசரிய விலக்கியமுமிலக்கணமும் பிறநூலும் பெரிது கற்றோன் பூசுரர்கோன் கணேசனெனும் பெயருடையோன் கவிபாடும் புலமிகுகோனே" என்று கூறுதலும் ஐயரவர்களின் பிறப்பு, கல்வி, ஆற்றல் முதலியனவற்றைக் காட்டும்.

**கல்விகற்றல்**

கணேசையரவர்கள் குடும்பம் கற்றவர்களையும் ஆசிரியர்களையுங்கொண்டு விளங்கிற்று அவர்களுடைய பெரிய தகப்பனாராகிய மறைத்திரு கதிர்காம ஐயரவர்கள் புன்னாலைக் கட்டுவனில் ஒரு பள்ளிக்கூடம் நடத்திவந்தார்கள். அஃது அக்காலத்தில் ஒரு சைவப் பள்ளிக்கூடமாக விளங்கிற்று (இப்போது அஃது அரசினர் பள்ளிக்கூடமாக மாறிவிட்டது) அப் பள்ளியிலேயே கணேசையர் அவர்கள் மிக்க திறமையாகக் கல்விகற்று வந்தார்கள். அரிச்சுவடி தொடக்கம் எட்டாம் வகுப்பு வரை அப் பள்ளியிலேயே கற்றுவந்த கணேசையரவர்கள் இலக்கணம், இலக்கியம், சமயம், கணிதம் முதலிய பாடங்களில் முதன்மை பெற்றார்கள். எட்டாம் வகுப்பில் தேர்வு பெற்றால், மாணவ ஆசிரியராகப் பயிற்சி பெறறுச் சம்பளம் பெறலாம். ஆதலால், இத்தேர்வு முடிந்ததும் மாணவ ஆசிரியன் (Pupil Teacher) ஆகப் பயிற்சி பெறுதற்குரிய பள்ளிக்குச் செல்லவேண்டும் என்று கணேசையவர்களுடைய சுற்றத்தார் விரும்பினார்கள். இந்த நிலையில், அக்காலத்திற் சைவப்பள்ளிகளில் தேர்வு நிகழ்த்துவோருள் ஒருவராக இருந்த வித்துவ சிரோமணி பொன்னம்பலபிள்ளையவர்கள் கணேசையர் கல்விகற்ற பள்ளிக்குத் தேர்வாளராக வந்தார்கள். அவர்கள் தேர்வு நிகழ்த்துங்கால், மாணவராக இருந்த கணேசையரை நோக்கி, "திகட சக்கரச் செம்முக மைந்துளான்" என்றற்றொடக்கத்துக் கந்த புராணக் காப்புச் செய்யுளுக்குப் பொருள் விரிக்குமாறு பணித்தார்கள். சிறுவனாகிய இருந்த கணேசையர் தாம் படித்தபடி, "விளங்கா நின்ற பத்துத் திருக்கரங்களையும் செவ்விய ஐந்து முகங்களையுமுடைய சிவபிரான்" என்று முதலாம் அடிக்கு உரை கூறினார் உடனே வித்துவ சிரோமணியவர்கள் அதை நிறுத்தி விட்டு, பின்வருமாறு சொன்னார்கள் :—

"உண்மைப்பொருள், உடைமைப்பொருள் எனப்பொருள்கள் இரண்டு வகைப்படும். உடைமைப்பொருளைக் கூறும் பொழுதுதான இரண்டாம் வேற்றுமை யுருபாகிய 'ஐ உருபை விரித்துப் பொருள் கூறவேண்டும். உண்மைப் பொருளைக் கூறு

பிடத்து 'ஐ' உருபு விரித்துப் பொருள்கூறலமையாது. சிவபிரானது முகங்களும் கரங்களும் உண்மைப்பொருள்களாதலின் 'ஐ' உருபை விரியாது "விளங்கா நின்ற பத்துத் திருக்கரங்களும் உள்ள சிவபிரான்" என்று கூறல் வேண்டுமென்று விளக்கினார்கள். அதைக்கேட்ட சிறுவனாக இருந்த கணேசையரவர்களுக்கு வித்துவ சிரோமணிபாற் பெருமதிப்பு ஏற்படலாயிற்று. அவர்தம் இலக்கண அறிவை வியந்து அத்தகையவரிடம் சில காலமாவது கல்விகற்கவேண்டும் என்று ஆசைகொண்டார்கள். ஆகவே, தமது சுற்றத்தார் விருப்பத்துக்கிசைய மாணவ ஆசிரியனுவதைக் கைவிட்டு, வித்துவசிரோமணிக்கு மாணாக்கராயினா கணேசையரவர்கள். இதனை அவர்கள் மாணவர்களாகிய எங்கட்குப் பெருமிதத்தோடு சொல்வார்கள். வித்துவசிரோமணியவர்களிடம் மாணவனாக இருந்து கல்விகற்றல் எளிதன்று. மிக்க அவதானமாகவும அடக்கமாகவும் இருந்து கூர்த்த மதியோடு சுற்றலவேண்டும். இன்றேல், மாணவ நிலையினின்று நீங்கவும நேரிடும். எனறெல்லாம் அவர்கள் சொல்வார்கள. அது காலை கணேசையரவர்களிடம் கல்விகற்றலும் அத்தகையதே என்று மனத்துள் நினைத்துக்கொள்வோம். புறத்தே சொலலத் துணியோம்.

### திண்ணைப் பள்ளிக்கூடம்

வித்துவசிரோமணி பொன்னம்பலப்பிள்ளையவர்கள் யாழ்ப்பாண நகரைச்சார்ந்த வண்ணார் பண்ணையில் இருநது வந்தார்கள். அவர்களிடம் சில மாணவர்கள் பாடஙகேட்டு வந்தார்கள். வண்ணார் பண்ணையிலுள்ள வைத்தீஸ்வரன் கோயில், அமைப்பிலும அழகிலும் தென்னிந்தியாவில், சீகாழிப் பதியின் பக்கத்தேயுளள புள்ளிருக்கு வேளூர்கோயிலை (இது வைததீஸ்வரன் கோயில் என்னும பெயரால இப்போது வழஙகபபடுகின்றது) ஒத்தது. அதன் வடக்கு வீதியில் வடக்கு நோக்கி இருந்தது கணேசையரவர்களின் தமக்கையாரை மணந்த அவர் தம் மைத்துனர் மறைததிரு. சுந்தரையரவர்களின் இலலம். இபபோதும் அவர் உறவினர் அதில் வதிகின்றார்கள். அதற்கு எதிரே வடக்கு நோக்கி இருந்தது சிவன்கோவிற்குருககளும சிறந்த வடமொழி யறிஞருமாகிய மறைத்திரு பிச்சுவையர் அவர்களின் இல்லம். இவ்வீட்டுததிண்ணை விசாலமானது. இத திண்ணையிலேயே வித்துவசிரோமணி பொன்னம்பலப்பிளளை சில மாணவர்களுக்குப் பாடஞ்சொல்லி வந்தார். அவ்வாறு பாடம் நடைபெறும் ஓர் அமயததிலேயே கணேசையரவர்கள் தாமும் வித்துவசிரோமணியவர்களிடம் மாணவனாக இருந்து பாடங் கேட்டற்கு அனுமதிபெறச் சென்றார்கள். அபபோது கணே

சையரவர்கள் தமது தகுதியைக் காட்டுதற்கு ஒரு வாய்ப்பு நேர்ந்தது. கணேசையரவர்கள் போன சமயத்தில் மற்றை மாணவர்களுக்கு வித்துவசிரோமணியவர்கள் பாடஞ்சொல்லிக் கொண்டிருந்தார்கள் என்றேன். தம் மாணவர்களை நோக்கி "'உண்ப' என்ற சொல்லுக்கு இலக்கணம் என்னை?" என்று அவர்கள் வினவினார்கள். அவர்கள் சரியான விடை கூறுதிருக்கவே பக்கத்தில் நின்ற கணேசையரை நோக்கி, "நீர் சொல்லுவீரா?" என்று கேட்டார்கள் அதற்கு கணேசையர் "ஆம்" என்றுகூறி, "'உண்ப' என்னுஞ்சொல உயர்திணைப் பலர்பால் வினைமுற்றாகவும், அஃறிணைப் பலவின்பால் முற்றாகவும் வரும்" என்று விடை கூறினா இதைக்கேட்டு மகிழ்ந்த வித்துவ சிரோமணியவர்கள் கணேசையரவர்களைத் தம் மாணவராக ஏற்றுக்கொண்டார்கள். அதுமுதல கணேசையர் வித்துவ சிரோமணியின் அன்புக்குரிய மாணவரானார். இத் திண்ணைப் பள்ளிக்கூடத்திலேயே மகாவித்துவான் கணேசையர் கல்வி கற்று வந்தார். அக்காலத்தின் திண்ணைப் பள்ளிக்கூடத்தின் பெருமைதான் என்னே! காலஞ் செல்லச்செல்ல மாணவர்கள் தொகையும அதிகமாயிற்று. அது காரணமாக, வகுப்பும் அருகிலுள்ள நாவலர் சைவபிரகாச வித்தியாசாலைக்கு மாறறப்படலாயிற்று வித்துவ சிரோமணியவர்கள இவ்வுலக வாழ்வை ஒரீஇயபின், சுன்னாகம் அ. குமாரசுவாமிப் புலவரவர்களிடம கணேசையரவர்கள சிலகாலம் கற்று வந்தார்கள். அக் காலத்தில் அவர்களிடம வடமொழியறிவும பெறறார்கள். பிற் காலத்தில இவர்கள் புலவரவர்களுககு ஒர உசாத்துணைவராகவும் விளஙகினார்கள்.

## ஆசிரியர் ஆளமை

மகாவித்துவான் கணேசையரவர்கள் தமது இருபத்தோராம் ஆண்டளவிலேயே ஆசிரியராகக கடனாற்றத் தொடஙகினார்கள். இவர்கள் முதன முதலில இடபோதிருககும் வண்ணை வைத்தீஸ்வர வித்தியாலயத்துக்குப பக்கத்தில, "ஐககிய லாபதிதிக்" கட்டடத்தில விவேகானநத வித்தியாசாலை என்னும் பெயரோடு திரு வேலுப்பிள்ளை என்பவரால நடத்தப்பெற்று வந்த பள்ளிக் கூடத்தில ஆசிரியராகக் கடனாற்றினாகள். அதன்பின வண்ணை நாவலா சைவப்பிரகாச வித்தியாசாலைக் காவிய பாடசாலையிற் சிறிது காலமும், புன்னாலைக கட்டுவன், வசாவிளான், குருமப சிட்டி என்னுமிடஙகளிலும் ஆசிரியராக விருநது கல்விகறபித்து வந்தார். அக்காலததிறறான் இவாகள மாமனாராகிய மறைததிரு. போகவன சாஸ்திரிகளின் ஒரே புதல்வியாகிய அன்னலகக்குமி யம்மையாருக்கும இவர்களுக்கும் திருமணம் நடைபெறலாயிற்று.

திருமணம் நிகழ்ந்த காலத்துக் கணேசையரவர்கள் முப்பத்திரண்டாண்டுப் பிராயத்தினராயிருந்தார். இதன்பின், இவர்கள் தமது மாமனாரால் தையிட்டி என்னுமூரில் நடாத்தப்பெற்று வந்த சைவப்பள்ளிக்கூடத்திற் சிலகாலம் ஆசிரியராக இருந்தார்கள். அதன்பின், இவர்கள "மணிபல்லவம்" என்று மணிமேகலையிற் குறிக்கப்பட்டுள்ள தீவகம இதுவேயாம் என்று ஆராய்ச்சியாளர் கருதும் நயினார் தீவெனும நீர் சூழ்ந்த திருநாட்டில் தமது வாழ்க்கைத் துணைவியாருந் தாமுமாகச் சென்றிருந்து ஏறக்குறைய ஏழாண்டுகள்வரை கல்வி கற்பித்து வந்தார்கள். இக் காலததில் நூல்களை ஆய்வதும் மாணவர்களுக்குக் கற்பிப்பதுமாக இன்பகரமாகவே இவர்கள் வாழ்க்கை கழியலாயிற்று. ௧௯உ௧ ஆம் ஆண்டில் மதுரைத் தமிழ்ச் சங்கத்தைப் பின்பற்றி யாழப்பாணத்தில் "ஆரிய திராவிட பாஷாபி விருத்திச் சங்கம்" எனனும் பெயரால் ஒரு சஙகம் நிறுவப்படலாயிற்று. ௧௯உ௧ ஆம் ஆண்டில் அச் சங்கத்தை நிறுவினோரும் சங்கததின் செயலாளருமாகிய மறைத்திரு J. T. சதாசிவ ஐயரவர்கள் சங்கத்தாரால் நடாத்தப்படும் பண்டித, பாலபண்டித, பிரவேச பண்டிதத் தேர்வுகளுக்குத் தோற்றும் மாணவர்களுக்குக் கல்வி பயிற்றுதற்காகப் "பிராசீன பாடசாலை" என்னும பெயரோடு ஒரு கல்விக் கழகத்தை நிறுவி நடாத்தினார்கள். அவர்கள் அழைப்பின் பேரில், ௧௯உ௧ ஆம் ஆண்டில், மகாவித்துவான் கணேசையரவர்கள் அக் கழகத்துக்குத் தலைமைப் பேராசிரியராக அமர்ந்தார்கள். இக் கழகத்தில ஏறக்குறையப் பதினோராண்டுகள் வரை (௧௯௩உ ஆம ஆண்டு வரை) பேராசிரியராக இருந்து இவர்கள ஆற்றிய பணி பெரியதொரு பணியாகும். இன்று யாழ்ப்பாணத்திற் பண்டிதர்களாக உள்ளோரிற் பலர் மகாவித்துவான் கணேசையரவர்களிடம கல்விகற்றவரே யாவர். மாணவராக இருந்து கல்லாதோரும் அவர்களிடமிருந்து தம் ஐயந்திரிபுகளை நீக்கிக்கொண்டவரே யாவர். இக் காலத்திலேயே தொலகாப்பியத்தைக் கற்பிக்கவும், அதனைத் தமது நுண்மதி கொண்டு துருவித்துருவி ஆராயவும், சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதவும் அவர்கட்குப் பெருவாய்ப்புக் கிடைத்தது.

# சேரன் செங்குட்டுவன்

[வித்துவான், செ. சிங்காரவேலனர், தருமபுரம]

## காட்சி 1

[வஞ்சிமாநகரத்தில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் பேரவை.]

**அமைச்சர்:** அரசே! நில உலகின் பல பாகங்களிலும் நிமிர்ந்து நிற்பது தமிழ் இனம். காலத்தால், சீலத்தால், காப்போரின் கோலத்தால், என்றென்றும் ஈடற்று ஓங்குவது தமிழர் பண்பு தமிழப்பண்பு தழைக்கின்ற சோலை; வற்றாத நீர் ஊற்று; வளர் மழை பொழியும் வான்முகில்; அதிலே சேரநாடு சிறப்பிடம் பெறுவது. இந்நாட்டிற்கு விண்ணுடும் ஈடாகாது; ஆம் - எந்நாடும் ஈடாகாது. வானை முட்டும் மலைநாடு வளரும் செந்தமிழ்க் கலைநாடு; உலகம் நம்மை எதிர்நோக்குகிறது; இதை நினைத்தால்..........................

**தளபதி:** இன்பம் பூக்கிறது வேந்தே! நமது முசிறித் துறை முகத்திலே முகநோக்கி நிற்கிறது யவனக்கப்பல்! விழி ஞத்துக் கரையிலே விழிநோக்கிக் காத்திருக்கிறது வேற்று நாட்டுக் கப்பல். 'தந்தமும், மிளகும், ஏலமும் பிறவும் தந்திடுவாய் மலைநாடே' என்று தவம் கிடக்கின்றன தரணி யின் மற்றமற்றப் பகுதிகள்.

**புலவர்:** இமயவரம்பனே! தமிழின் வரம்பனே! வாழி நீ! வாழி நீ! நீலக்கடலும், கோலமால்வரையும், கொண்ட மலைநாட்டு மன்னு! உன்னைக் காவியம் பாடாதார் நாவும் நாவோ? அவர் பாவும் பாவோ? உனது வஞ்சிமா நகரம் வையகத்துக்கே வழிகாட்டும். வஞ்சி படைத்த நீ, வஞ்சி யாத நெஞ்சு படைத்தாய்! வாழி நீ! சோழர் திருமகள்— உன் அரசுரிமைத் தொன்மூதாட்டி. பஃறுளியாற்று மணை லினும் பலவாய்ப் பெருகுக நின் வாழ்நாள்!

**இமயவரம்பன்:** அமைச்சரே! ஐம்பெருங் குழுவினரே! புலவர் களே! உங்கள் திருவடிகளை என் முடி சூடுகிறேன், வணங் காத என்முடி அறிவுரைக்கு அறவுரைக்கு வணங்கும். தமிழினத்தின் மாவீரமே என் மூச்சு; இன்பம் கொஞ்சும் இனிய தமிழில் அன்புக் கவிதைபாடும் அருந்தமிழ்க் கவிஞர்களே! வாரீர்—சேரர் புகழைச் சிந்துபாட! தாரீர் உம அறவுரை! என்றும் காத்திருக்கிறேன் உங்கள்

யோசனைகளுக்கு. இது மக்கள் அரசெனவே மதிக்கிறேன். முடியரசு இல்லை, குடியரசு! சேரன்—மக்கள் குரலுக்குச் செவிசாய்ப்போன்; இஃது உலகநீதி!

ஏவலன்: அரசே! நிமித்திகர் ஒருவர் காத்திருக்கிறார்.

இமய: நிமித்திகர்! வரச்சொல்!

நிமி: (வந்து) மன்னா! வாழ்க! ஆம்; நான் சரியான வேளையில் தான் வந்துசேர்ந்தேன்; உனக்குப் பிறகு இப் பரந்துபட்ட சேரநாட்டையாள உன் இளைய புதல்வன் இளங்கோவே தக்கவன்—இளங்கோவே சேரர் குடிக்கேற்ற சிங்கம்! மலை நாட்டு மன்னன்!

எல்லோரும: என்ன! ..........

இமய: நிமித்திகரே! நீர்........

இளங்: (எழுந்து) இல்லை! ஒருபோதும் இல்லை! இமயமே திரண்டாலும் கங்கையே பொங்கினாலும் தமிழ்நாட்டு ஆட்சி தொன்முறை பிறழாது!...தொன்முறை பிறழாது!

தந்தையே! விதி! ஊழ்வினை! வலிமையான இவ் வாயுதங்களை எறிந்து தமிழ்ப் பண்பைத் தவிடுபொடியாக்கி விடக்கூடாது தங்கள் செங்கோல் முறை! தந்தைக்குப்பின் அவன் வழி மூத்த திருமகனே அரசுகட்டில் ஏற அருகதை யுள்ளவன்; இது தமிழ்நெறி!

செங்: ........தம்பி!.......

இளங்: அண்ணா! களங்கமற்ற மலைநாட்டு மரபிலே களங்கம் புகுந்துவிடக் கூடாதே என்ற கவலையிற் பேசுகிறேன். தந்தையே! நிமித்திகர் கூற்றை நிந்தனை புரியவேண்டு மென்ற நெஞ்சிலே அல்ல. நான் கெஞ்சுவது! நான் அரசு கட்டில் ஏறும் விருப்பம் சிறிதும் இல்லாதவன். என் அன்பார்ந்த தமையன்—தங்கள் திருக்குமாரர் செங்குட்டு வர்க்கே உரியது இச் சேரமண்!

இமய: இளங்கோ! விதி அப்படி இருக்குமானால் அதை விலக்க நான் யார்? நீயார்? இல்லை—இந்த நிமித்திகர்தாம் யார்? ........(மனந்தளர்ந்து) அவையோரே! ஏன் வாய் வாளாது இருக்கிறீர்கள்? தாய்த் திருநாட்டின் எதிர்காலம் குறித்து உங்களுக்கில்லையா உள்ளத் துடிப்பு?

செங்: இளங்கோ! ஊழ்வினையின் பாதை ஒழியமுடியாத ஒன்று. 'ஊழிற் பெருவலியாவுள' என்பது வள்ளுவர் சட்டம். அதை மீறுவது மனித முயற்சியில் இல்லை தம்பி!

இளங் : ஊழ்வினை ! கூழ் குடிப்பவனைக் குபேரபுரிக்கு வேந்தனாக்குவது ஊழ்வினையாகும். இதோ இந்நாடறிய காவலர் அறிய, வஞ்சிமாநகரம் அறிய, வழிவழி வந்த சேரர் பரம்பரை அறிய, நான் துறவுகொள்கிறேன்.

எல் : என்ன....இளவரசே !

இமய : மகனே !....(ஓலமிடல்—மயங்கி வீழ்தல்)

செங் : தம்பி ! என்ன இது ? துடிக்கும் இளமையில்....

இளங் : (அமைதியோடு) இளமைத் துடிப்பில் அறிவு திரிந்துவிடவில்லை தந்தையே ! தக்கோரே ! தமையனே ! ஊழின் கொடுங்கோன்மையை உதறித்தள்ள ஓர் உபாயம் ! இதில், நான் துறவுகொள்ள முடிவு செய்துவிட்டேன். இனி இவ்வரசு சேரர் செங்குட்டுவர்க்கே உரிய அரசாகும்.

'சேரன் செங்குட்டுவன் ! வாழ்க!'
'இமய வரம்பன் புகழ் ! ஓங்குக!'
'தமிழ்த் திருநாடு ! வாழ்க !'

## காட்சி 2

[வடநாட்டின் திருமணம் ஒன்றின் பொருட்டு ஆரிய அரசர்கள் கூடியுள்ளனர்; அவ்வாரிய மன்னரிடையே.]

கனகன் : ஆரிய நன்னாட்டு அரசர்களே ! இந்தத் திருமணவிழாவிலே—நாமெல்லாம், கூடியிருக்கும், இந்த நல்ல வேளையில் ஓர் வேடிக்கைச் செய்தியைக் கூற விரும்புகிறேன்.

விசயன் : கங்கையின் பெருமையால், மங்காது நிற்கும் நம் வடநாட்டிற்கும் உண்டோ நிகர் ! நமது விழாவே விழா ! நண்பரே என்ன அந்த வேடிக்கை !

கனகன் : அருமை நண்பர்களே, மத்தியநாட்டு மாமன்னரே ! வங்காளநாட்டு வேந்தரே ! சிந்துநாட்டு வேந்தரே ! நேபாள நாட்டுப் பெருமன்னரே ! வேடிக்கையல்ல ! நான் கூறுவது வினை ! இரத்தம் கொதிக்கும் செய்தி ! கர்நாடக நாட்டு வேந்தர்கள், நமக்குரிய இமயமலையின் சிகரத்திலே தங்கள் சின்னங்களைப் பொறித்துச் சென்றிருக்கிறார்கள். இமயத்தின் இதயத்திற் பொறித்துச் சென்றிருக்கிறார்கள். எவ்வளவு பேதைமை !

விசயன் : நண்பர்களே ! நம்மைப்போன்ற பெரு மன்னர்கள் இல்லாத காரணத்தால், இங்கே தைரியமாக, வந்திருக்

கிறார்கள். தமிழ் வேந்தர்கள்! வீரமற்றவர்கள்! சார மற்றவர்கள்! விந்தியத்தின் தெற்கில் முடங்கிக்கிடக்கும் பிள்ளைப் பூச்சிகள்! வடக்கே வந்து வாகை சூடுவதா?

எல் : வெட்கம்! வெட்கம்!!

கன : நம்மைப்போன்ற பேரரசர்களை வென்று இமயத்திலே சின்னத்தைப் பொறித்தால், அதற்குப்பொருள் உண்டு; மதிப்பு உண்டு. பூனையைக் குத்திவிட்டுப் புலியைக் குத்தி விட்டேன் என்று புகழ் பேசிக்கொண்டாலும் ஒரு புல்லன்; ஆமையைக் கொன்றுவிட்டு, அரிமாவைத் தாக்கி விட்டேன் என்று வீரம் பேசிக்கொண்டாலும் ஓர் அசடன். அந்தக் கதையாகத்தான் இருக்கிறது இந்த விந்தைக் கதை! தமிழரசர்கள் தவிடுபொடியாக்கப் படவேண்டிய தறுதலைகள்!

எல் : வீரமற்ற தமிழ் மன்னர்கள்!

கனகவிசயன் : ஒழிக! ஒழிக!! தொலைக! தொலைக!!

கன : வலிமை வாய்ந்த நம் வடநாடு!

எல் : வெல்க! வெல்க!!

## காட்சி 3

[வஞ்சிமாநகர்க் குணவாயிற் கோட்டத்தில், துறவுக் கோலத்தில் அமர்ந்திருக்கின்றார் இளங்கோ அடிகள்.]

செங் : தம்பி! ஆசைக் கனவிலே மண்வாரிப்போட்டுவிட்டாய்! தியாகச் சிகரமே! சேரர் திருவிளக்கே! மன மாசற்ற மாணிக்கமே!.......துறவு........உனக்கு ஏனிந்த உறவு! அரண்மனை! ஐம்பெருங் குழு! எண்பேராயம்! சட்ட மன்றம்! சான்றோர் கூட்டுறவு! ஏவலர்—காவலர்! தேர்ப் படை—தார்ப்படை! எல்லாம் துறக்க என்ன நேர்ந்தது? வேண்டாம்... வேண்டாம் இந்த விபரீத முடிவு! பஞ்சணை கொஞ்சிய உன் பாதங்கள், காட்டிலும் மேட்டிலும் நடமாட வேண்டாம்! உனது திடீர் முடிவு, தந்தையாரை—இமயம் கண்ட வீரமன்னரை—விண்ணுடு அனுப்பிய பிறகும் மாறவில்லையா உன் மனம்? தம்பி!....தம்பி....தம்பி.... (அழுதல்)

இளங் : அண்ணா! சேரநாட்டுச் சிங்கம், கங்கைக் கரையிலே கன்னிப்போர் செய்து வடவரை வென்று வாகை சூடிய வானவர் திலகம்—தோளாற்றல் கொண்ட தூயோன்—வாளாற்றல் கொண்ட வள்ளல்—செங்குட்டுவரோ சிந்தை

தளர்வது? நான் துறவு கொண்டாலும் தங்கள் அரசுவிட்டு அகலாது வாழ்வேன்! இக் குணவாயிற் கோட்டமே இனி என் குடியிருப்பு! தமிழ்த் திருநாட்டின் பொதுமைக்கும் புதுமைக்கும் நான் பாடுபடத் துறவுக்கோலமே துணை யாகும்! ஆறுதல் பெறுங்கள் அண்ணு!

சேங்: (தேறி) இளங்கோ! அரசபோகத்திலே அமரவேண்டிய என் பின்னவன் துறவுநெறி கொள்வதா? நினைத்தாலே நெஞ்சு வெடித்துவிடும் போலிருக்கிறதே! தம்பி! கெஞ் சிடும் என் விழிகளைப் பார்! அவற்றினூடே ததும்பி நிற்கும் கண்ணீர்த் துளிகள் காட்டவில்லையா என் நெஞ்சுக் கொதிப்பை! நீ படித்தவன்; பாவலன்; நாவலன்! கற்றறிந்த நீ இந்தப் பாசத்தின் துடிப்பை அறிந்தவன் அல்லவா?

இளங்: அண்ணு! 'எண்ணித் துணிக கருமம் துணிந்தபின் எண்ணுவ மென்பது இழுக்கு'—என்பது திருவள்ளுவர் சட்டம்; இதைத் தமிழனுகிய நான் மீறக் கருதுகிறீர்களா? துணிந்துவிட்டேன்; இனி மாற்றமுடியாதது! அன்பு கூர்ந்து கலங்காது வாருங்கள்! தந்தையின் பிரிவால் தவிக்கும் மக்கள் மன்றத்துக்கு; ஆறுதல் சொல்வோம்.

காவலன்: அரசே! எண் பேராயத்தார் திருமுன் வரக் காத்திருக் கிறார்கள்.

இளங்: அண்ணு! வாருங்கள்! ஏக்கமுற்றிருக்கும் அறிவுலக மேதைகளுக்கு எழுச்சியூட்டுவோம்....வரச்சொல்!

[எண்பேராயத்தார் வருகின்றனர் வாடிய முகத்துடன்.]

எண்: சேரர் குலவிளக்குகளே! நாட்டு மக்கள் அரசிழந்து அல்லற்படுகிறார்கள்! வீரத்தின் உறைவிடம்—வெற்றிப் போர்வாள்—குன்றாத வீரக்குன்று—இமயவரம்பர்—மறைந்த பிறகு மக்கள் மனமெல்லாம் இருண்டிருக்கிறது.

இளங்: அண்ணு! எழுந்திருங்கள்! மக்கள் துயரந்துடைக்க எழுந்திருஙகள்! நான் இனித் தங்கள் துறவுத் துணைவன். எண் பேராயத்தினரே! வஞ்சிமாநகரத்தின் குணவாயிற் கோட்டத்தே நாளையே ஒரு பேரவை கூட்டுங்கள். மக்கள் மன்றத்தின் முன்பாக நமது முதல் அரசவையைக் கூட்டி நாட்டு நலம் பேண உறுதி பூணுவோம்.

எண்: ஆணை....அரசே!

சேங்: தம்பி! சரிதானே!

இளங்: நாட்டின் நல்லரசர் ஆணைப்பின் தடையேது மன்ன?

(தொடரும்)

# சொல் ஓவியம்

[செல்வி. எஸ். ஜமலாதேவி, நாகர்கோவில்]

காலத்தின் செலவினுல் பல்வேறு நாடுகளில் வாழும் மக்கள் வாழ்க்கை மாற்றம் பெறுதல்போல, மொழிகளும் அவற்றின் சொற்களின் சிதைவால் மாற்றுரு அடைதல் இயற்கை என்னலாம். பல்லாயிரம் ஆண்டுகளாகப் பண்பொடு வாழ்ந்த தமிழரின் பழமை சான்ற செஞ்சொல் ஓவியங்கள் இன்று காவியங்களிலும் கவிஞர் ஏடுகளிலும் தோன்றி மிளிர்தல் உண்மை எனினும், பல தம் நல்லுரு இழந்தன என்றமை தெள்ளிதிற் காணலாகும். பழந்தமிழ் இலக்கிய இலக்கணங்களைப் புரட்டுவோர் இத்தகைய சொற்களின் மாற்றுருவை உணர்தல் எளிது. மாற்றுருப் பெறுதல் ஒருபுறம் இருக்கச் சொற்களே மறைந்து தம் மொழி விடுத்து பிறமொழி சென்று சிதைந்த பொருள் பெற்று வாழ்தலும் காண்டல் இயற்கை.

"ஏதிலார் ஆரத் தமர் பசிப்பர்"

எனும் வள்ளுவர் வாய்மொழியை நினைவு கொள்கிறோம். தமிழ் அன்னை வருந்த அவ்வன்னை பெற்ற அழகிய சொற்கள் பிற மொழிகளின் ஆக்கம் பெருக வாழ்தல் எத்துணை வியப்பு!

இந்நாளில் நம்மிடை நிலவும் Salary எனும் ஆங்கிலச் சொல்லின் பண்டைய வரலாறு தமிழ் அன்னையின் அன்றைய உருவினை நினைவுறுத்துதல் காணலாகும். இச் சொல்லோவியம் Salarium எனும் இலத்தீன் மொழிக்கு உரியது. Salt - Money என்றல் அத்தொடரின் செம்பொருள். பண்டைய நாளில் பணி புரிவோருக்கு ஊதியமாகப் பொன்னையும் வெள்ளியையும் அளித்தற்கு ஈடாகக் கடல் அன்னை அளிக்கும் உப்பினையே அளித்தனர் போலும். எனவே உப்பு ஊதியமாயிற்று. இவ்விளக்கம் தமிழ்ச் சொல்லாராய்ச்சி மாணவருக்கு நல்விருந்தாகலாம். திங்கள் ஒன்றின் இறுதியில் வழங்கும் ஊதியத்தினைச் சம்பளம் எனும் சொல்லால் குறிக்கிறோம். புலவர் தேவநேயப் பாவாணர் கூறும் விளக்கம் ஈண்டு உதவி புரியலாம். சம்பு அளம் எனும் இரு சொற்களும் மருவுதல் பெற்றே சம்பளம் எனும் உருவினை ஏற்கலாயின. சம்புநெல்லையும் அளம் ஆகுபெயரால் உப்பையும் நினைவுறுத்துகின்றன. எனில் அற்றை நாளில் மக்கள் உப்பு நெல் போன்றவற்றையே அளித்தனர் என்ற உண்மை இற்றை நாளில் சம்பளம் எனும் சொல்லில் புதைந்திருத்தல் அறிகிறோம்.

Cooly எனும் ஆங்கிலச் சொல்லும் இம்முறையில் தோன்றி யதேயாகும். கூலம் தானியத்தைக் குறிக்கிறது. கூல வாணிகன் சாத்தனார் போலும் இலக்கியச் சொற்கள் இங்கிலேயில் சான்று பகருகின்றன. Salary-சம்பளம் எனும் சொற்களால் மற்றுமோ ருண்மை புலனாகும். இமிழ் கடல் வேலித் தமிழகம் கொண்ட சொல்லாட்சி முறையினை அக்கடல் வேலி கடந்த பிற மொழி யினரும் மேற்கொண்டமை காண்போர் தமிழ் அன்னையின் முதுமை எண்ணிப் பெருமிதம் கொள்வர். பெற்ற தாயினும் பிறந்த பொன்னாட்டினும் நற்றமிழ் அன்னை நலமுடையள் அன்றோ?

பொருள் இன்மையால் வருந்துவோர் Pecuniary Difficulties எனும் சொற்றொடரால் விளக்குவர். Pecuniary எனும் ஆங்கிலச் சொல Pecus எனும் இலத்தீன் சொல்லின் குழவியாகும். Pecus மாடு என்றே பொருள்படுகிறது அம்மொழியில்.

கல் தோன்றி மண் தோன்றாக் காலம் எனத் தமிழரின் தொன்மையைப் புறப்பொருள் வெண்பாமாலை குறிக்கிறது. தொன்மை சான்ற பெருங்குடித் தமிழ்மக்கள் அற்றை நாளில் உடைமையாகக் கொண்ட செல்வம் ஆடுமாடுகளேயாதல் வேண்டும். எனவே ஆடு மாடு எனும் தொடர் பிற்காலத்து மக்கள் போற்றிப் பேணும் செல்வப் பொருள் ஆயிற்று.

வள்ளுவரின் சொற் சோலையில் நுழைவோம். அங்கு வாலாறு விளக்கும் சொன்மலர் பல கொய்யலாம்.

"கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை."

எனும் குறளோவியம் கல்வியின் பெருமையினை விளக்க எழுந்தது. அவை மாடு அல்ல என்ற தொடரில் மாடு செல்வத் தைக் குறித்தல் காண்கிறோம். செல்வப் பொருளால் சிறப்புறும் மாடு எனும் சொல் Cattle எனும் ஆங்கிலப்பொருள் தருத லையும், யாம நினைவு கோடல் சாலும் இன்று ஆங்கிலம் உலகினர் உவக்கும் மொழி எனினும் சொல்லுலகில் கடன் பெற்றே வாழ் கிறது. அங்கிலேயில் தானகவே படைக்கும் சொல்லாட்சித் திறன் பெற்ற தமிழ் அன்னையை மாசறக் கற்போர் தமிழராகப் பிறந் தமையில் பெருமிதம் கொள்வரன்றோ?

"இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்."

என்று மகிழ்ந்த புலமை உள்ளமும் இத்தகைய பெருமிதத்தில் மிதந்தமையாலன்றோ தமிழைத் தூது விடுத்தது.

நானிலம் புகழ மக்களால் நச்சி மெச்சுதல் பெற்ற மன்னன் ஆட்சித் திறனைச் செங்கோன்மை என வழங்குகிறோம். செம்மனத்தான் தண்ணளியான் செங்கோலான் என னளை வியந்தது நாகிள அன்னம். கொடுங்கோன் மன்னன் வாழும் நாட்டில் கடும்புலி வாழும் காடு நன்றே என்றல் சிறுவர் இலக்கியம். இவை கோல் எனும் சொல்லைப் பகுதியாகக் கொண்டவை. கோலிற்கு எழுந்த பெருமைதான் என்னே! ஆடு மாடுகளைச் செல்வமாகக் கொண்ட பண்டைத் தமிழர் அவற்றை ஓட்டுதற்குரிய கோலையே ஆட்சிச் சின்னமாகக் கொண்டனர் போலும். அச் சொல்லினின்றே கோன்மை, செங்கோன்மை போலும் சொற்கள் முகிழ்க்கலாயின. விஞ்ஞானம் விளையும் இந்நாளிலும் Sceptre அரசின் திறனை விளக்க வழங்குகிறது.

> " கால மென்பது கறங்குபோற் சுழன்று
> மேலது கீழாக் கீழது மேலா "

மாறும் தன்மைக்கு ஏற்ப அதனொடு தோயும் சொற்களின் உருவும் அத்தகைய மாற்றங்களையும் மருவுதலையும் பெறுகின்றது.

சிலப்பதிகாரம் எனப் பெயரிய இலக்கிய இன்பச் சோலை தமிழரின் உரிமைச் செல்வம். மூவேந்தரின் நாட்டு நலனும் அந்நாளின் வாழ்க்கைத் திறனும் திறம்பட உரைப்பது சிலப்பதிகாரம். அத்தகைய இலக்கியச் செல்வத்தை வாரி வழங்கிய தமிழ் வள்ளலே சேரநாட்டுச் செம்மல் இளங்கோ என்பார். அப்பெருமகன் சொல்லின் திறனால் தமிழ்மொழி ஏற்றம் பெறலாயிற்று. பண்டைத் தமிழ் மரபை வெளியிடும் வரலாற்று மாணவர் எவரும் நினைவு கொள்ளும் தன்மையது சேரலன் எனும் செஞ்சொல் ஓவியம். அச் சொல் இந்நாளில் பெற்ற மாற்றுரு வேற்றுமையானது. சேர என்றலை Chera என்றே ஆங்கில மொழியிற் குறிப்பர். அவ்வாங்கிலச் சொல் கேர எனவும் ஒலிக்கப் பெறலாயிற்று. அதன் விளைவால் இன்று சேரலன் நாடு கேரள நாடு என ஆயிற்று. காலத்தின் செலவுதான் என்னே! வருங்காலத்துச் சேர நாடு என்ற குறிப்பே இந்நிலையால் அற்றுப் போகலாம். அருமைத் தமிழ்ச் சொற்களைப் பாதுகாக்கின்ற வாய்ப்பு அமையாமையால் எத்துணையோ இலக்கியச் சொற்கள் நம்மிடை நின்று மறைந்து விடுகின்றன. சொற்கள் மருவுகின்ற போழ்து உரியோர் ஆவன செய்தல் வேண்டாவோ?

மேட்டுப்பாளையம் எனும் ஊர் கோயம்புத்தூரை யடுத்தது. அங்கு நின்றும் உதகைக்குப் புகை வண்டி செல்கின்றது. அவ்வழியாக ஒருமுறை செல்வோர் சொற் புதுமை சில கண்ணுறக்

காணலாம். Adderly (அட்டர்லி) எனும் சிற்றூர் இடையில் உள்ளது. அங்கு நிலையத்தின் பேர் காட்டும் பலகைக்குச் சிறிது அயலே 'Men-புருஷாள்-Ladies-ஸ்ரீகள்' என்பன மிளிர்கின்றன. ஆடவர் மகளிர் போலும் அழகு சான்ற சொல் ஓவியங்கள் எங்கு மறைந்தனவோ? 'ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்' என்ற கம்பனும் தமிழ் வளர்த்த பிற சான்றோரும் இன்று நம்மிடை இலரே என ஏக்குறுகிறோம்.

இந்நிலையில் கடல் கடந்த கன்னி நாடாகிய இலங்கை தமிழ் வாழ்விற்குப் பல நல்லுரை வழங்குதல் கண்டு அவர்தம் பெருந் தகைமை எண்ணி மகிழ்கிறோம். பொது இடங்களில் Gentelmen ஆடவர் Ladies அரிவையர் அல்லது மகளிர் என்றே தமிழ்ப் பண்பு தோய்ந்த சொற்களையே வளர்க்கின்றனர். அது வெறும் புகழ்ச்சியன்று. யாழ்ப்பாணத்திற்கு ஓடும் புகை வண்டியை யாழ் தேவி எனும் பேரிட்டு அழைக்கும் மொழிப் பற்று அங்கு அலருகிறது. தனித்தமிழ் வளர்த்த மறைமலையடிகளாரும், தமிழ்த் தென்றல் திரு. வி. க. வும் தோன்றிய நம் தமிழ்நாட்டில் தனித்தமிழ்ச் சொற்களைப் பேணும் சொற்செல்வர் அருகியமை எத்துணை வியப்பு! Tinnevelly Express நெல்லை நகர் நங்கை எனப்பெறின் அவ்வின்பம் அளவிடற் கரியதன்றோ? அப்பொன் னாளில் Madura Passenger மதுரைச் செல்வி எனவும் மாறும்.

"எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்"

எனும் வள்ளுவர் குறளே வாழ்த்துரை நல்கும்.

படி ஞாயிறு எனும் தூய தமிழ்த் தொடரை மலையாள மொழி பேணி வளர்க்கிறது. பணிவிடை எனும் தமிழ் இலக் கியத் தொடரைச் சிங்கள மொழி போற்றி வளர்க்கிறது. அவை போலத் தொல்காப்பிய இலக்கண வரன் முறை சிலவற்றை இலங்கை மக்களின் நாட்டுப் பாடல்கள் சில காத்துவருகின்றன.

"யா கா
பிறபிறக் கரோபோ மாது என வரூஉம்
ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி." (தொல். இடை, 31.)

எனும் விதியினுக்கு இணங்க கா இடைச்சொல்லாக வரலாம்.

"காலங் கழியுதுகா
காதல் வளருதுகா
நேசம் பெருகுதுகா
நேற்று வந்து போனவர்மேல்."

எனும் பாடல் மட்டக்களப்பைச் சாத்தான் குடியில் வழங்குதல் கேட்டேன்.

"பெய்யும் மழையும் பூவளனும்
பிறந்த நாடும் நம்செல்வம்
பிறந்த நாடும் நமதாயின்
சிறந்த தமிழும் நமதன்றோ?"

எனும் தமிழ்ப்பற்று இலங்கைத் தமிழரிடைச் சுடர் விட்டு இலங்குகிறது. அச்சுடர் ஒளியாலும் பல இலக்கண மரபுகள் உரு இழப்பினும் திரு இழக்காவண்ணம் வாழ்கின்றன. நவ எனும் சங்க இலக்கியச் சொல் சால எனும் பொருளில் தமிழ் நாட்டை விடுத்துச் சிங்கள மொழியிலன்றோ தன் பொருள் சிதையா வண்ணம் அம்மொழிக்கு ஆக்கம் தேடுகிறது. பிறந்த நாட்டில் பேணப் பெறாத சொல்லோவியம் புகுந்த நாட்டில் பொலிகிறது. ஆறும குளனும் அழகிய மலையும் நாட்டின் செல்வம் என்றமைபோல அந்நாட்டு மொழியின் சொற்செல் வமும் திருந்திய மக்களின் பொருந்திய செல்வமாகும். மறைந்த அல்லது சிதைந்த சொற்களைத் தேடி எடுத்து வழங்குதலும் சிறப்புடைத்தாகும். பதிற்றுப் பத்து எனும் செய்யுள் நூலும் இறையனார் களவியல் எனும் உரைநடையும் வீடுதொறும் விளங்கவேண்டும். அவ்வாறாயின் அருவி எனும் இலக்கியச் சொல் இருக்க நீர் வீழ்ச்சி என Water Falls மொழி பெயர்ப்பைப் பயன்படுத்த அஞ்சுவோம். மரக்கார் என்னுமல் மரக்கலராயர் என்போம்.

அத்தகைய பெரு முயற்சி தமிழின் மறுமலர்ச்சியாகும். மலரின் திறனல் மாலை சிறத்தல் போலச் சொற்களின் திறனல் தமிழ்மொழி பொழுதொரு வண்ணமாகும். எனவே சொல் லின்பம் வாழ்வின் நல்லின்பமாகும்.

---

## அகமுருக வணங்கிடுவம்

[வெண்பாவூர், திரு. பெ. திருஞானம்]

அன்பின் வழியாலே அடக்கமுறு வாழ்வினைநாம்,
துன்பந் தனைப்போக்கி தூய்மையதாய்ச் செய்தேநாம்,
இன்பம் மிகப்பெற்று இனிதுடனே வாழ்ந்திடநாம்,
அன்புருவாம் இறைவனையே அகமுருக வணங்கிடுவம்.

---

**Statement about ownership and other particulars about the journal—Senthamil Selvi as required by rule 8 of the Registration of News papers (Central) Rules, 1956.**

FORM IV

| | | |
|---|---|---|
| 1. | Place of publication | 1/140, Broadway, Madras-1. |
| 2. | Periodicity of its publications | Monthly |
| 3. | Printer's name | Appar Achakam |
| | Nationality | |
| | Address | 2/140, Broadway, Madras-1. |
| 4. | Publisher's Name | The South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Ltd., |
| | Nationality | |
| | Address | 1/140, Broadway, Madras-1. |
| 5. | Editor's Name | Sri. V. Subbiah Pillai |
| | Nationality | Indian |
| | Address | 1/140, Broadway, Madras-1. |

6. Names and addresses of individuals who own the news paper and partners or shareholders holding more than one percent of the total capital.

1. Sri. P. Muthukaruppa Pillai,
**Thamaraikulam,**
(Kanyakumari Dist.)

2. Sri. T. S. Ramalingam Pillai,
M.A., B.L., Sub Judge,
**Nagercoil,**
(Kanyakumari Dist.)

3. Sri. T. Vairamuthu,
,, T. Thirunavukarasu
(Minors)

by Guardian:
Sri. V. Subbiah Pillai,
6, Coral Merchant Street,
**Madras-1.**

4. Sri. V. Subbiah Pillai,
6, Coral Merchant Street,
**Madras-1.**

5. Srimathi S. Mangayarkarasi Ammal
6, Coral Merchant Street,
**Madras-1.**

6. Sri. R. M S. Gopalakrishna Pillai, Land Lord,
**Sathankulam,**
(Tirunelveli Dist.)

7. Sri. M. K Sivagaminatha Pillai, Fourth Floor, Broche Buildings, Princess Street, **Bombay-2.**
8. Sri. N. S. Sundaram, Bar-at-Law, 134, South Raja Street, **Tuticorin,** (Tirunelveli Dist.)
9. Sri. M. Kasiviswanathan Chettiar, Banker. **Paganeri.**
10. Srimathi, K. Lakshmi Achi, w/o, Sri M Kasiviswanathan, Chettiar, **Paganeri,** (Ramnad Dist)
11. Sri. PR AL. M. N. Narayanan Chettiar, Proprietor, Pari Achagam, 127, Broadway, **Madras-1.**
12. K. V. AL. RM. Ramanathan Chettiar, Correspondent and Trustee, Dr. Alagappa Chettiar Endowments Trust, **Karaikudi,** (Ramnad Dist.)
13. Sri. RM. K. RM. Ramaswamy Chettiar, **Thittai,** (Tanjore Dist)
14 Messrs. V. D. Nagappa Chettiar and N. Meenakshi Atchi **Valampuri,** (Trichy Dist)
15. Sri. C T. Chidambaram Chettiar, **Valampuri,** (Trichy Dist)
16. Srimathi Valliammai Achi, W/o Sri Kannappa Chettiar, **Nattarasankottai,** (Ramnad Dist.)
17. Sri. T. S. Viswanatha Pillai, C/o T. V. Lakshmanasami, B E. Inspector of Factories **Coimbatore.**
18 Sri. C. M. Ramachandran Chettiar, B. A., B. L., Advocate, Ramanathapuram, **Coimbatore.**
19. Sri. T. S. Jambulingam Chettiar, Tirupur House, **Coimbatore.**

I, V. Subbiah Pillai, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

2—3—1959

**V. SUBBIAH PILLAI,**
*Signature of Publisher.*

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) வானொலியும் ஆகாசவாணியும்

“அனைத்திந்தியாவுக்கும் பொதுவான ஒரு சொல்லை வழங்க வேண்டுமெனபதற்காக இந்திய அரசினா ‘ஆகாசவாணி’ என்ற சொல்லைப் பயன்படுத்தி வருகின்றனர். முன்பெல்லாம் வானொலியின் பெயா ஆங்கிலத்தில் வழங்கப்பட்டபோது பேசாமலிருந்தவர்கள, இப்போது ஆகாசவாணி வேணடாமெனக் கிளர்சசி செய்கின்றனர். எது எப்படியிருப்பினும் ‘ஆகாசவாணி’ என்ற சொல்லுடன் ‘வானொலி’ என்ற தமிழ்ச சொலலையும் சேர்த்துப் பயன்படுத்த அரசியலார் ஏற்பாடு செய்துள்ளனர்” என்று அமைசசர் திரு சி. சுப்பிரமணியம் அவர்கள், 13—2—59 இல் சென்னை சட்ட மன்றத்தில் பேசியகாலை குறிப்பிட்டார்.

குறிப்பு: இந்தியா பல மாநிலங்களைக கொண்ட ஒரு துணைக் கண்டம இதில் பல மொழிகள் பேசப்படலாம். ஆனால அந்தந்த மாநிலத்தாரகுரிய மொழி எலலாத துறையிலும் முதனமை பெறல் வேணடும் பொதுமொழி என்று சொல்லி இந்தியை நுழைப்பது போலவே வானொலித் துறையிலும் ‘ஆகாசவாணி’ எனனும் புதுமொழி புகுத்தப்படுகிறது. இது சரியல்ல என்று கூறினால், ஆஙகிலத்தைக் காரணம காட்டிப் பேசுதல் மக்களாட்சி முறைககு ஏறறதன்று. ஆங்கிலத்தின் நிலை வேறு; இந்தியின் நிலைவேறு. இனி எவவளவுதான் ஆங்கிலம் வழஙகப்பட்டாலும அது நம்மை அடிமைகொள்ள முடியாது. இந்தி அபபடியலல. இது புதியதோா ஆதிக்கததுக்கு வழிகோலும என்று தமிழா அஞ்சுகின்றனர். யாராயிருந்தாலும் இநத அடிப்படை உண்மையை உணரல வேண்டும். எது எப்படியிருப்பினும் தமிழக மக்களின் கிளாசசிககு மதிப்புக் கொடுதது ‘வானொலி’ என்ற சொல்லுக்கும் வானொலியில் இடந்தந்த அளவுககு அரசியலாரைப் பாராட்டுகிறோம்.

## (உ) இந்தியைப் புகுத்துமுன் எண்ணித் துணிக!

“ஆட்சிமொழி ஆய்வுக் குழுவினரின் முடிவை ஏற்றுக்கொண்டு அதன்படி நடக்க நினைப்பதற்குமுன் தென்னாட்டிலுள்ள பெரும்பான்மை மக்கள் மொழி பற்றிக கொண்டுள்ள உணர்சசியையும் அரசியலாரும் மக்கள் மன்றமும் எண்ணித் துணிதல் வேண்டும். அவர்களுடைய உணர்சசிக்கு மாறாக இந்தி மொழி திணிக்கப்படுமானால் எதிர்பார்ப்பதற்கு மாறான பலனே விளையும். நாட்டு ஒற்றுமை குலையும்.” என 11—2—59 இல் மககள் மன்றத்தில் திரு. தி. சு. அவினாசிலிங்கஞ் செட்டியாரவர்கள் அரசினர்க்கு ஓர் எச்சரிக்கை விடுத்துள்ளார்.

குறிப்பு: ஆட்சி மொழியைப் பற்றி அரசினர்க்குப் பல நாட்களாகப் பல அறிஞர்கள் அறிவுரைகளையும் எச்சரிக்கைகளையும் அள்ளி அள்ளி வீசியவண்ணமிருக்கின்றனா அத்தகைய அறிவுரைகளுள் திரு. அவினாசி லிஙகனாரவர்களின அறிவுரையும் ஒன்று. இஃது ஓரளவு எசசரிக்கை போலவே காணப்படுகிறது. இதற்காகத் திரு செட்டியாரவர்களைப் பாராட்டுகிறோம். ‘எண்ணித் துணிக’ எனச் செட்டியார் தரும் அறிவுரை நலல பலன்தரும் என்றே நம்புகிறோம்.

(கூ) **சைப்பிரசு வாழ்க!**

சைப்பிரசு மத்தியதரைக் கடலிலுள்ள ஒரு தீவு. பெரும்பான்மை கிரேக்கர்களும் சிறுபான்மை துருக்கியரும் இத் தீவின் குடிமக்களாவர். இத் தீவு நெடுங்காலமாக ஆங்கிலேயரின் ஆட்சிக்கீழ் இருந்து வந்தது. சைப்பிரசு மக்கள் விடுதலைகோரிப் பல ஆண்டுகளாகப் போராடி வந்தனர். பிரிட்டன் துருக்கியரையும் கிரேக்கரையும் பிரித்தாளும் முயற்சியில் ஈடுபட்டது. ஆனால் தற்போது கிரேக்கரும் துருக்கியரும் ஒன்றுபட்டுத் தங்கள் நாடான சைப்பிரசுக்கு விடுதலை வேண்டுமெனக் கேட்கத் துவங்கினர். இந் நிலையில் பிரிட்டன் விட்டுக்கொடுப்பதைத் தவிர வேறு வழியில்லாது போயிற்று. சென்ற திங்கள் இறுதியில் பிரிட்டன், துருக்கி, கிரேக்க நாடுகள் இலண்டன்மா நகரில் கூடி ஒரு முடிவுக்கு வந்தன. அதன்படி தற்போது சைப்பிரசு விடுதலையடைந்து விட்டது இன்னும் மூன்று திங்களில் ஆட்சி மாற்றம் ஏற்படும் என அறிவிக்கப்பட்டுள்ளது.

**குறிப்பு:** அளவில் மிகச் சிறிய நாடாயினும் பிரிட்டிஷ் பேரரசுடன் பல ஆண்டுகள் போராடி விடுதலை பெற்ற சைப்பிரசின் ஆற்றல் பாராட்டற்குரியதே. நாட்டுப் பற்றுடையோர் எவரும் விடுதலை பெற்ற சைப்பிரசை பாராட்டாதிரார். தமிழகத்தின் அரசியல், மொழி, இன விடுதலை கோரும் அனைவர்க்கும் சைப்பிரஸ் நல்ல வழிகாட்டியாகும். விடுதலைபெற்ற சைப்பிரசுக்கு நமது வாழ்த்து உரித்தாகட்டும்.

(ச) **ஆங்கிலத்தின் இன்றியமையாமை பற்றி டாக்டர் குன்ஸ்ரூ கருத்து:**

பல்கலைக் கழகக் கொடைக் குழுவினருள் ஒருவரான டாக்டர் குன்ஸ்ரூ அவர்கள் 26-2-59 இல் மாநில மன்றத்தில் (ராஜ்ய சபை) பேசியகாலை, "கல்வியின் நோக்கம் நாட்டின் ஒற்றுமை மட்டுமல்ல. மொழிப்பற்றை உண்டாக்குவது மட்டுமல்ல. பிறருடன் அறிவாளிகளும் படித்தவர்களும கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளத்தக்க மொழி நாட்டிற்கு இன்றியமையாததாகும். அஃது இன்று ஆங்கிலமாகத்தானிருக்கிறது. அந்த நிலையை இந்தி அடையும்வரை ஆங்கிலத்தைக் கைவிட முடியாது."

**குறிப்பு:** ஆங்கிலத்தின் இன்றியமையாமையை வலியுறுத்திய திரு. குன்ஸ்ரூ அவர்களைப் பாராட்டுகிறோம். ஆனால் அதற்கு ஒரு எல்லை காட்டி, இந்தி அதன் நிலையை அடைய வேண்டுமென எதிர்ப்பார்ப்பது தான் பொருந்தாக் கூற்றாக உள்ளது. உலகப் பொதுமொழியெனவும், சிறந்தது எனவும் அறிஞர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட ஆங்கிலம் நீடித்துப் பயன்படக் கூடாது என்ற கருத்து ஏன் எழுதல் வேண்டும்? இந்திக்கு என்றேனும் எப்படியேனும் ஏற்றந்தர வேண்டும் என்பதைத் தவிர இதற்கு வேறு என்ன காரணம் கூறமுடியும்?

# மதிப்புரை

"கள்ளும் கவிதையும்"

[இதன் ஆசிரியர் சோம்பை திரு. அ சுருளியாண்டிப் பாவலர் அவர்கள். இதன் விலை ரூபா ஒன்று கிடைக்குமிடம், முருகநிலையம் சோம்பை (அஞ்சல்), மதுரைமாவட்டம்.]

மாந்தர்க்கு ஆர்வத்துணையும் களிப்பைத்தந்து கவலையைப் போக்குவது சிறந்த எளியநடை யமைந்த இனிய கவிதையாகும். பண்பட்ட இதன் ஆசிரியர் கற்பார் நுனித்துணருமாறு இதற்குக் "கள்ளும கவிதையும" எனப் பெயர் சூட்டினர். இதன்கண் "கள்ளும் கவிதையும்" என்பது முதலாக "முத்தாரம்" என்பது முடிவாக எழுபத்திரண்டு தலைப்புகள் காணப்படுகின்றன இவைகள் அனைத்தும் இயற்கை எழில், இனிய தமிழ், கனிமிகச்சிறந்த தமிழ் நூல்கள், பாரதி முதலிய பண்டைத்தமிழ்ச் சான்றோர், மகாத்மா, நேரு, படேல், திரு வி. க. முதலிய நாட்டு விடுதலைக்குப் பல்வகைக் கேட்டையும் பொருட்படுத்தாது உண்மைத் தொண்டாற்றிய வண்மைச்சான்றோர்கள், கிளி, குயில், நாடு, உழைப்பு, வீரம், மருந்து, பிரார்த்தனை, கடவுள், அரசு முதலிய பல பொருள்களைப் பற்றிப் புதுக்கருத்தமையப் புனைந்த பலவகைப் பாக்களைக்கொண்டு விளங்குகின்றன. திரு. பாரதியார், தேசிகமணி முதலிய அறிஞர் வகுத்த முறைகளைக் கைக்கொண்டு விளங்குகின்றன. உரைநடையைவிட உளத்தமைக்கும் வாய்ப்பும், உன்னியுரைக்கும் உயர்வும் செய்யுள் நடைக்கே இயல்பாக அமைந்துள்ளன.

இதன்கண் காணப்படும் செய்யுட்கள் எளிய இனிய நடையின. பல வரலாற்றுக் குறிப்புக்களைப் பயில்வார்க்குப் பசுமரத்தாணிபோல் உளத்தில் பதியச்செய்யும் பண்பின; சிறுவரும் கற்கும் திறத்தன, புலவர்களுவக்கும் பொருள்களும் பொருந்தியன. அழகிய நல்ல பதிப்பு. செந்தமிழ்ச் செல்வர்களும், மாணவர் ஆசிரியன்மார்களும் வாங்கிக் கற்று நலம்பெறுவார்களாக. இதன் வாயிலாக ஆசிரியரை மேலும் ஊக்குவிப்பார்களாக.

*

"செங்கோட்டு வேலவர் பிள்ளைத்தமிழ்" (குறிப்புரையுடன்)

[இவ்வருமையான நூலின் ஆசிரியரின் ஊர், பெயர், காலம் முதலிய ஏதும் தெரிவதற்கில்லை யெனத் தெரிகிறது. குறிப்புரையாசிரியர் வித்துவான் வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர், தலைமைத் தமிழாசிரியர், செங்குந்தர் உயர்நிலைப்பள்ளி, ஈரோடு. பதிப்பாளர்: பழனித் திருத்தெண்டாயுதபாணி தேவத்தான ஆட்சிக் குழுவின் உறுப்பினரும், ஈரோடு செங்குந்தர் உயர்நிலைப்பள்ளி ஆட்சிக்குழுவின் தலைவரும் ஆகிய V. V. C. R. முருகேச முதலியாரவர்கள்.]

குறிப்புரையாசிரியர் சிறந்ததொரு முகவுரை யமைத்துள்ளனர். அதன்கண் பிள்ளைத்தமிழின் இயல்பும், அதற்குரிய தொல்காப்பியம், பன்னிருபாட்டியல் முதலிய இலக்கணங்களின் அமைவும், பல பிள்ளைத் தமிழ்களின் ஒப்பும், பல வரலாறுகளும் அரிதுமுயன்று அகப்புறச் சான்றுகளுடன் நன்கு விளக்கியுள்ளார். குறிப்புரையும் எல்லாப்

பாட்டுக்களுக்கும் தெளிவாக எழுதிப் பின்னிணைப்பாகச் சேர்த்துள்ளனர். பெயரளவில் குறிப்புரை யென்றிருப்பினும் பல வரலாற்றுச் சான்றுகளுடன் விளக்கவுரையாகவே அமைந்துள்ளது. உரையும் மிகவுந் தெளிவாகவும், ஆற்றொழுக்காகவும், இலக்கண முடிபுகளுடனும், அமைந்துள்ளது. இத்திருவூருக்குரிய வரலாறும், அர்த்தநாரீசுர வடிவச் சிறப்பும் பிறவும் விளக்கியுள்ளனர். இவ்வேலவர்மேல் அருணகிரிநாத அடிகளால் பாடப்பெற்ற கந்தரலங்காரச் செய்யுட்களும் சேர்க்கப்பெற்றுள்ளன.

இருபெருஞ் செல்வமும் ஒருங்கமைந்த பண்பமை பதிப்பாளர் போன்று பிற செல்வர்களும் இங்ஙனம் ஆங்காங்கு வெளிவாராததும், வந்து பின் பதிப்பாகளின்றிக் கிடைக்கப்பெறாததுமாகிய அரும்பெரும் நூல்களை முன்வந்து பதிப்பிக்கத் துணைபுரிவார்களாயின் பெரிய தமிழ்ச் சிவபுண்ணியங்களா மென்ப.

இவ்வெளியீடு உற்றகாலத்து வெளிவந்து தமிழும் சைவமும் தழைத்தோங்கப் பெருந்துணையாக நிற்கின்றது. இதனைப் பொதுவாகச் செந்தமிழ் அன்பர்களும் சிறப்பாகச் செந்நெறிச் செல்வர்களும் வாங்கியும் வாங்குவித்தும் கற்று வேலவர் திருவடிக்கு அன்பராய்ப் பெரும்புண்ணியம் எய்துவார்களாக.

"குறளமுது"

[மூன்றாம் பகுதி இதன் ஆசிரியர் கணக்காயர் புலவர் செந்துறை முத்து அவர்கள். விலை ரூபா ஒன்று. வெளியிடுவோர்: வள்ளுவர் பண்ணை, 137, பிராடுவே, சென்னை - 1.]

இதன்கண் "வள்ளுவர் சொலலறம்" முதல் "வள்ளுவர் சொல்லியல்" முடிவாக ஆறு பெருந் தலைப்புக்கள் காணபபடுகின்றன ஒவ்வொரு தலைப்பும் பல சிறந்த உட்டலைப்புக்களைக் கொண்டுள்ளன. ஆசிரியர் சிறந்த உழைப்புடன் திருவள்ளுவனார் திருவுள்ளக் கருத்தை நன்குணர்ந்து தெளிவுபடுத்தியுள்ளார். தெளிவுபடுத்தப்படுபவைகளை முதற்கண் செவ்விய இனிய எளிய உரைநடையால் நன்கு விளக்கியும், அதனையடுத்து அவ்வவற்றிற்கு ஏற்புடைய குறளமுதப் பாக்களை அமைத்துமுள்ளனர். இம்முறை கற்பார்க்கு இனிமை பயப்பதுடன் செந்தமிழ்ப் பொதுமறையாம் திருக்குறட்பாக்களை மறவாது மனத்தமைக்கவும் பெரிதும் துணையாகும்.

வள்ளுவர் அமைத்த பலவுவமைகளை நன்கு விளக்கியும், அவற்றால் கற்பார் கைக்கொள்ளவேண்டிய கற்பனைகளைத் திட்பமுறக் கூறியும் செல்கின்றனர். எல்லாவகையாலும் இந்நூல் மாணவர் ஆசிரியன்மார்க்கும் திருக்குறளைக் கற்றுப் பரப்பவும், கற்றவாறு கைக்கொண்டொழுகவும் முயலும மெய்யன்பர்கட்கும் பெருந்துணையாமென்பதுறுதி. இதுபோன்று இன்னும் வரவேண்டிய திருக்குறட் பகுதிகளையும் வெளிவர இதனை வாங்கும் வாயிலாக அன்பர்கள் துணைபுரிவார்களாக.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.



பெருஞ்சொல்விளக்கனர், சிவத்திரு

**அ. மு. சரவண முதலியாரவர்கள்**

தோற்றம் : 1887 மறைவு : 1959




சிலம்பு ௩௩ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௦, பங் | ஏப்ரல், 1959 | பரல் ௮

## சொல் விளக்கனார் சிவத்திரு.
# அ. மு. சரவண முதலியாரவர்களின் மாண்பு

நந்தமிழகத்துச் சோழவளநாடு சோறுடைத்தென்பது ஆன்றோர் பொன்மொழி இந்நாடு கரிகாற் பெருவளத்தான் முதலிய பெருவேந்தர் பலரால் பண்புறப் பன்னெடுங்காலம் ஆளப்பட்டு வந்த தனி மாண்புடையது. கரிகாற் பெருவளத்தான் பண்டொருகால் ஈழநாட்டை வென்று இலங்கையர் எண்ணாயிரவரைச் சிறைப்படுத்திக் கொடுவந்தனன. வந்து காவிரிக்கு இருமருங்கு கரையெடுப்பித்தான் கல்லால் அணை கட்டுவித்தான அச் சிறநத அணைக்குக் காரணக் குறியாய் "கல்லணை" என்னும் பெயர் வழங்கிவருவதாயிற்று அக் கல்லணையை அடுத்த நல்லவர் வாழூரா அரசங்குடி என்பதாகும். அதுவே நம் முதலியாரவர்கள் பிறந்த திருவூராகும்.

### பிறப்பு

அரசங்குடியில் விழுமிய வேளாண் குலத்தில் தொழுதகு நல்லார் முத்துச்சாமி முதலியாரவர்கட்கும், அவர்தம் கற்பிற் சிறந்த பொற்புறு மனைவி சீதையம்மையார்க்கும் அருந்தவப் பேற்றால் 1887 ஆம் ஆண்டு நம் முதலியாரவர்கள இறையருளால் தோன்றினர். இவர்கள் உடன்பிறந்தார் ஐவருள் மூன்றாமவராவர். இவர்கட்குச் சிறப்புறச் சரவண முதலியாரெனப் பெயர் சூட்டிப் பாராட்டி வளர்த்து வந்தனர்.

இளமை

இளமைக் காலத்தே தந்தையை இழக்கும் இன்னலெய்தினர். தாயின் தனித் துணையால் வளர்ந்து வந்தனர். உளங்கொளும் பருவமாம் இளமைக் கல்வியின் வளமிழந்து வல்லாண்மையில் ஐம்மூன்றாண்டுவரை வளர்ந்தனர். தெய்வத் திருவருளால் அதன்மேல் ஓங்கிய சீர்சால் வேங்கடாசல அடிகளாரை அண்ணும் பேறு பெற்றனர். அவர்பால் நைடதம நன்னூல் முதலிய பன்னூல்களையும் பயின்று முன்னேறினர்

புலமை

நம் அருமை முதலியாரவர்கள் சிறந்த செந்தமிழ்ப் பெரும் புலவரவர்கள்; செந்நெறிச் செல்வர்; சித்தாந்த செம்மல்; நூலாசிரியர், பல்லுரை கண்ட பண்பினர்; உயர்நிலைப் பள்ளியிலும், ஊரூரமைந்த சீரூர் கழகங்களிலும் பல்லாண்டு பன் மாணவர்க்கு நன்முறையாகப் பயிற்றிய பயனார் நல்லாசிரியர். தமிழகத்திலும் கடல்கடந்து தமிழகமாந்தர் வாழும் தமிழ்கூறும் நல்லுலகத்தும் செந்தமிழ் மாண்பும் சித்தாந்த சிறப்பும் எங்கணும் இனிதுறப் பரவ இடையறாதியற்றும் சொற்பொழிவுப் பெருந்தொண்டாற்றிய தூயோர்.

உருவும் திருவும் உண்மையும் உரனும், வண்மையும் வளனும், வாய்க்கப்பெற்ற நல்லார் நம் முதலியாரவர்களாவர். அவர்கள செந்தமிழ்த்திருத்தொண்டாற்றப் புகுந்த செய்தியும் அதனால் அவர்கள் எய்திய சீசிறபபும் ஏனையார்க்குச் செந்நெறியின் மாண்பினை எடுத்துக்காட்டி அவர்கட்கு ஊக்கம விளைவிக்கும் பேராக்கமாகும்.

மணம்

1906 ஆம் ஆண்டு புகலூர் நமச்சிவாய முதலியார் நன் மகளார் சிவகாமியம்மையாரைக் களிமகிழ் சுறறம போற்றக் கலியாணம் புரிந்தனர் காதலிருவரும் கருத்தொத்து இல்லறம் பேணிச் சிறநதனர். தவமிக்க சிவகாமியம்மையார் புக்கொளியூர் அவிநாசிப்பதியுறை கருணாம்பிகையார் கனிவுறு காதலும் இனிதுறு வழிபாடுமிக்கவர் அவ்வம்மையாரருளால் 1916-இல் தவப்புதல்வர் திருஞானசம்பந்தர் தோன்றினர். இரண்டாண்டுகட்குப் பின் கருணாம்பிகையார் தோன்றினர். இருவரும் எல்லா நலஙகளுடனும் வாழ்ந்து வருகின்றனர்.

வணிகம்

நம் முதலியாரவர்கள் இயல்பாகப் பெருநிலக்கிழாராகவும் அறுவை வாணிகராகவும் வாழ்ந்து வந்தனர். செந்தமிழ்ப்

புலமையும், சிவனெறிப்பற்றும், தவநெறி வாழ்க்கையும் இயல் பாகக்கொண்டொழுகிய நிலையினர். இறைவன் அவர்களை முழுதும் திருத்தொண்டினுக்கே ஆளாக்க முன்னியருளினன். அதனால் வணிகத்துறை வளம் சுருங்கவும் வெள்ளப்பெருக்கால் வயல்மேடிட்டு விளைவு அரிதாகவும் நேர்ந்தன. அதனால் நம் முதலியாரவர்கள் மனம் சுருங்குதலிலராய்ச் செந்தமிழ்த் திருத்தொண்டும் சிவப்பணியும் செய்துபோந்தனர்.

திருமுறை உறைப்பு

அந்நாளில் அவர்கட்கு அரும்பெரும் துணையாக நின்று அவர்களை முன்னேற ஊக்கியது செந்தமிழ் மாமறையாம் திருமுறையோதுதலே. ஓதலெனினும் பாராயணஞ்செய்தல் எனினும் ஒன்றே. திருமுறையினை நாளும் அன்புடன் ஓதுவார்க்கு அஃது இடர் களைந்து, இன்பம் தழைப்பித்து வாழ்விக்கும் என்னும் மெய்ம்மையினை நம் முதலியாரவர்களின் வாழ்க்கைச் செம்மையால்நாம் காணலாகும் முதலியாரவர்களும் தம் நுகர்வுணர்வினை உலகுக்குணர்த்தி உலகினை அவ்வழி உய்யுமாறு ஊக்குவித்தனர்.

அவர்கள் "இடுக்கட்பட்டிருக்கினும் இரந்து யாரையும், விடுக்கிற் பிரானென்று வினவுவோ மல்லோம்," என மேலோர் அருளிய மெய்ம்மறையினை மிக்க உறுதியாகக் கொண்டு "இடரினும் தளரினும்," எனத் தொடங்கும் செந்தமிழ்த் திருமாமறையினை அகம்புறந்தூயராய் அன்பால் அடிநினைந்து நாளும் நலமுற ஓதிவந்தனர். அதன்பயனாக வறுமைத்துன்பம் அகன்று, சிறுமை நீங்கிச் செவ்வளம் ஓங்கிச் சீரும் சிறப்புமுற்றுப் பேரும் புகழும் எய்தினர். இத்திருப்பதிகம் ஆளுடைய பிள்ளையாரால் அருளிச்செய்யப்பட்ட அருமறையாகும். அருமறை உபதேசம். இம்மறை ஆளுடைய பிள்ளையார், தம் தந்தையார் வேண்டுகோளை நிறைவேற்றுதற்பொருட்டு ஆவடுதுறை ஆண்டவன்பால் பொன் வேண்டிப் பாடியருளப் பெற்றதாகும் ஆண்டவன் திருவருள் சார்ந்து ஒரு பூதத்தின் வாயிலாகப் "பொன்உலவாக்கிழி," பொன்று நல்குவித்தருளினன். அத்தகைய உலவாக்கிழி போன்ற செந்தமிழ்ச் சிவத்தொண்டு நம் முதலியாரவர்கட்கு வாய்க்கப்பெற்றது. ஆளுடைய பிள்ளையார் திருவருள் உந்துதலால் தாம் பாடியருளிய செந்தமிழ்த் திருமாமறையினைக் கொண்டு சிவவழிபாடு இயற்றுதல் வேண்டும் என்றும், அம் மறையினை ஓதுவதே சிவ வழிபாடாமென்றும் சிறப்புறப் பல விடங்களில் ஓதியருளியுள்ளார். அம்முறையான் வழிபாடியற்றுவார் எய்தும் பெரும் பயனுக்கு நம் முதலியாரவர்களே வழி காட்டும் எடுத்துக்காட்டாக விளங்கியிருந்தனர்.

திருமுறை ஓதலே சிறந்த வழிபாடாமென்னும் உண்மையினை விளக்கும் திருப்பதிகங்களுள் ஒரு திருப்பாட்டு வருமாறு.

"நலல புனற்புகலித் தமிழ்ஞான சம்பந்தன் நல்ல
அல்லி மலர்க்கழனி யாரூ ரமர்ந்தானை
வல்லதோ ரிச்சையினால் வழிபா டிவைபத்தும் வாய்க்கச
சொல்லுதல் கேட்டல்வல்லார் துன்பம் துடைப்பாரே."

—1. 105-11

வழிபாடு - பூசனை.

அடிகளார் தொடர்பு

நம் முதலியாரவர்கள் செந்தமிழும் சிவநெறியும் பண்டு போல் நின்று நிலவப் பொற்றாணையராய்ச் சலியாது நின்று சொல்லாலும் எழுத்தாலும், விழுத்துணை நூலாலும் முழுத்தவத் தொண்டு புரிந்து காத்து நிறுத்திய முதுபெரும் புலவர் ஆசிரியர் மறைமலையடிகளாருடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர். அடிகளாரின சீரிய தலைமையில் பல இடங்களில் பலவேறு காலங்களில் பல பொருள்களைப்பற்றி நலமுறச் சொறபொழி வாற்றியுள்ளார்கள். அடிகளாரால் நனிமிகப் பாராட்டப்பெறற நாவலருமாவர்.

நாட்டார் கூட்டுறவு

பண்டித நாவலர், ந மு. வேங்கடசாமிநாட்டாரவர்களுடன் பின்னிய தொடர்புடையவராயினர். நாட்டாரவர்கள் கழகத்தார் தூண்டுதலின் பேரில் திருவிளையாடறபுராணத்திற்கொரு பேருரை கண்டனர். அவ்வுரைக்கு உடனிருந்து எல்லாவகையான உதவியும் இயன்றவாறு ஆற்றினர். அந்நிலையில் நாட்டாரவர்கள் முதலியாரவர்களின் அகக்கோவிலில் மிகப்பெரும் தனியிடம் பெற்றனர். முதலியாரவர்களும் நாட்டாரவர்களை முதன்மையாக நன்கு மதித்துப் போற்றி வந்தனர். இஃது இறைவன் இயல்புறக் கூட்டுவித்த உடனுறைவாகும். இவ்வுண்மையினை மெய்ப்பிப்பதாகும், நம் முதலியாரவர்கள் நாட்டாரவர்களின் குருபூசை நாளாகிய 15—3—59-இல் சிவனடி நீழலெய்தினமை.

கழகத் தொடர்பு

திருவிளையாடற்புராண உரை தொடர்பாகக் கழகத்துக்கு முதலியாரவர்களின் தொடர்பு எய்துவதாயிற்று கழக நிறுவ முதல்வராய்த திகழ்ந்த சிவத்திரு திருவரங்கனாரின் அரும் பெருமுயற்சியால் திருநெல்வேலிச் சீர்மைக்கண் திருத் தொண்டர் புராண விரிவுரை மூன்று திங்கள்வரைத் தொடர்ந்து

நிகழ்ந்தது. நாளொன்றுக்கு ஒவ்வொரு மெய்யன்பர்கள் உதவிய பொருட்கொடையினைக்கொண்டு விரிவுரை மிகச் சிறப்பாக நிகழ்ந்தது.

இதுபோல் கழக ஆட்சிப் பொறுப்பாளர் திரு வ. சு. அவர்களின் நன்முயற்சியால் 1944-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் தமிழகமாநகராம் சென்னையம்பதிக்கண் பலவேறிடங்களில் திருத்தொண்டர்புராண விரிவுரைகள் பத்துப்பன்னிரண்டுக்கு மேல் நிகழ்ந்தன. ஈரிடங்களிலும் பொதுவாகச் செந்தமிழ் அன்பர்களும் சிறப்பாகச் செந்நெறிச் செல்வர்களும் திரள் திரளாக வந்து பெரும்பயன் எய்தினர்.

நுண்மாண் நுழைபுலம்

நம் முதலியாரவர்கள் உயர்நிலைப்பள்ளி ஆசிரியராகப் பல்லாண்டு பணிபுரிந்தமையானும், பலநூலாய்ந்து திட்பநுட்பச் செறிவுகொண்டமையானும், பல்பெரும் புலவர் கூட்டுறவானும், நுண்மாணுழைபுலச் செம்மலாய்த் திகழ்ந்தனர். இலக்கண இலக்கிய வன்மையால் புலவரும் மாணவரும் இவர்தம் அரிய சொற்பொழிவால் பல நலமுற்றனர். பெருமக்களின் உளப்பாங்கும் உலகியல்நுட்பமும் ஒருங்குணர்ந்தமையால் அவர்கள் நன்குணருமாறு இனிமையும், எளிமையும், நகைச்சுவையும் மிகப் பொதுளச் சொற்பொழிவாற்றுவர். அச்சொற்பொழிவு தனிச்சிறப்புவாய்ந்ததாகவிருக்கும். எல்லா இடங்களிலும் இவர்தம் சொற்பொழிவுக்குப் பெரும்பாலும் இயல்பாக அமைக்கப்பெறும் காவணங்கள் இடம் போதாமல் திறந்தவெளியிலேயே சொற்பொழிவுகள் நிகழ்த்தநேரும். எத்துணைப்பொழுது பேசினும் பெருமக்கள் ஒருசிறிதும் சலிப்பின்றிப் பெருவிருப்புடன் கேட்டின்புறுவர்.

மெய்யுணர்வு

நம் முதலியாரவர்கள் திருமுறை சித்தாந்த நூல்களின் சிறந்த பயிற்சியினாலும் சிவவழிபாட்டின் சீர்மையாலும், மெய்யுணர்வுக் கருத்துக்களை ஆங்காங்கு அவ்வந்நூல்களின் எடுத்துக்காட்டுக்களுடன் எளிமையாக விளக்குவர். சங்க நூற்பயிற்சி மேன்மையால் முற்காலப்பிற்கால இலக்கண இலக்கிய இணைப்புக்களுடன் நன்கெடுத்து விளக்குவர். உவமைச் சிறப்புக்களை விரித்து விளக்குவதில் தமக்குத்தாமே நிகராவர். பெரியபுராண விளக்கம் இவர்களால் எங்கணும் பரவியதென்பதுறுதி. அவ்வுண்மை அவர்கட்கு அமைந்துள்ள "பெருஞ்சொல் விளக்கனார்", என்னும் தனிப்பெரும் பட்டத்தினாலேயே நன்குணரலாம்.

**விரிவுரை**

தமிழக முற்றிலும் நம் முதலியாரவர்கள் தலைமைதாங்கியும் விரிவுரையாற்றியும் செய்து போந்த தொண்டின் பயன்பெறாத திருக்கோவிற்றிருவிழாக்களோ, கழகங்களோ, ஊர்களோ இரா என்பதுறுதி. ஆங்காங்கே யமைந்துள்ள நன்மாணவர்களின் கூட்டுப்பெருக்கால் சிலபல நூல்கள் வெளியாகித் தமிழ்க்கணி செய்துள்ளன.

**வெளியுலகத் தொடர்பு**

நம முதலியாரவர்களின் பெரும்புகழ் கடல்கடந்த வெளி நாட்டின் கண்ணும் பரவலாயிற்று ஆங்காங்குள்ளவர்களின் விழைவுமிக்க வேண்டுகோளின்மேல் மலேயா முதலிய பலவிடங் களுக்குச் சென்று பெருஞ்சொல்லாற்றிப் பாராட்டும் பெரு மதிப்பும் பெற்றுள்ளார்கள்.

**மகனார் மாண்பு**

நம் முதலியாரவர்கட்கு வாய்த்த நன் மகனார் திரு அ ச. ஞானசம்பந்தராவர். இவர்கள் ஆங்கிலமும், தமிழும் நன்கு கற்ற பெரும்புலவர். முதுபெரும் கலைஞர் என்னும் எம். ஏ., பட்டம் எய்தியவர். பெருஞ்சொற்பொழிவாளர். தமிழுலகும் வெளியுலகும் சென்று அருஞ்சொற்பொழிவாற்றிப் பெரும்புகழ் எய்தித் திகழ்பவர். திறனாய்வுத்துறையில் தனிப்பெரும சிறப் பினர். அத்துறையில் பலநூல் வெளியிட்டுப் பணியாற்றி வரு பவர் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பேராசிரியராகப் பணிபுரிந்து நன் மாணவர்க்கு உறுதுணைபுரிந்துள்ளவர். வானொலி நிலையத்தமர்ந்து தமிழ்ப்பணியாற்றி வருபவர். இப்பெருந்தகை யாரை மகனாகப் பெறுந் தவமே நம்முதலியாரவர்களின் உள மாண்பை வலியுறுத்துவதாகும்.

**திருவடி சேர்தல்**

நம் முதலியாரவர்கள் 15—3—1959 இல் சென்னையில் தம் அருமை மகனாரில்லத்துத் தம் எழுபத்திரண்டாம் அகவைக்கண் இறையடிநீழல் எய்தினர். இப்பெருந்தகையார் பிரிவு, தமிழகத் துக்கும் சிவனெறிக்கும் ஈடுசெய்யவொண்ணாப் பேரிழப்பே யாகும். அவர்தம் ஆவி அம்மை அம்பலவாணர் திருவடிக்கீழ்ச் செம்மையுற வாழ்ந்து பேரின்பம் எய்துமாக! அவர்தம் குடும் பத்தார்க்குக் கழகத்தாரின் பரிவும் ஆறுதலும் உரியவாகுக.

# அறிவுப்படை

[திரு. ஆசிரியர். மு.. பெ. நாபதி]

போர்ப் பயிற்சி பெற்றவர் படைக்கருவியைப் பயன்படுத்த அறிந்திருப்பர். இல்லையேல், அப்படைக் கருவிக்கே பலியாக நேரும். இதனால் அன்றோ 'பாம்பாட்டிக்குப் பாம்பினால் சாவு' என்ற பொன்மொழி முளைத்தது. இருபெரும் மறவர் வாளேந்திப் பொருகின்றனர் எனில் அவரில் எவர் வெல்வார் என்றறிய ஏலாது. அவரின் தோல்வி, வெற்றி வாளின் தன்மையில் மட்டு மில்லை. போராளரின் படைக்கலப் பயிற்சி, பயிற்சியிற் றெளிந்த அறிவு, அமயங்கண்டு வெல்லும் நுண்ணறிவு ஆயவற்றினையும் பொறுத்தே அவரது போர்த்திறன் தெளிவாகும்.

வாள், வேல், வில் கண்ணுறும் படைகள்; அறிவுக்காட்சியில் அடங்காத படை. 'படை' கருவியெனும் பொருளது. ஆனால் படை எனும் சொல் 'அழி', 'ஆக்கு' என்ற பொருள்களையும் தரவல்லது. இதற்குக் காட்டாக 'இயற்கைப் படைப்பு', 'போரிற் பட்டான்' என்ற தொடர்களைக் காட்டலாம். பட்டான் என்னும் சொல் 'படு' எனும் வேர்ச் சொல்லிற் கிளைத்த படை, படைத்தான், படுத்தான் என்ற சொற்களோடு எண்ணத் தக்கது.

வாள், வேல் முதலிய கலங்கள் மாற்றாரைப் புறங்காண உதவுவன; அவரை அழித்தற்கும் ஏதுவாவன. இவற்றால் ஒருவன் தன்னைச் சாவினின்றும் காத்திடலாம். அவ்வாறே உட்பகையையும் அறுக்க உதவுவது ஒன்றுண்டு. அஃதே அறிவாம்.

அறிவு: இதைப் பெறுமாறுகள் பல. அறிவு அறிதோறும் அறியாமையைக் காட்டும். இத்தகைய பண்பின் அறிவைப் பெறும் வழிகளில் மூன்று ஏட்டறிவு, பட்டறிவு, இயலறிவு என்பனவாகும்.

அறிவுடையவர் யார் என்றால் ஏட்டறிவு பெற்றவரையே முதலிற் குறிப்போம். ஏட்டறிவு என்பது எழுத்து எண்ணறிவு. பட்டறிவு என்பது பட்டு அறிவதாகும். அஃதாவது, வாழ்வின் இன்ப துன்பங்களிற் பெறும் அடைவு ஆகும். உலக வாழ்வில் நரைத்த தலைக்கும், தாடிக்கும் மதிப்பளிப்பது எதனால்? வயது முதிர்ந்தவர் பட்டறிவாற் சிறந்தவர் என்பதனால் அன்றோ?

இயலறிவு என்பது வள்ளுவர் 'உண்மையறிவு' என்கிறார். 'உண்மையறிவு' என்பது எத்துணைச் சிறப்புடையது என்பதைக் காண்க.

"நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும்."

இக்குறள் ஊழியலில் "ஊழ்" அதிகாரத்துட் காண்பது. இதனால் உண்மையறிவின் உயர்வு தெரிக. 'ஊழ்', 'உண்மை யறிவு' என்பவை இயல்பைக் காட்டுவது. எது இருப்பதுவோ, அதுவே, இயலாகும். இயற்கைப் பொருள் பல்வேறு செயற்கை உருவம் கொள்வதுண்டு. செயற்கை உருவத்தைக் கண்டு அது இயற்கையின் அடிப்படையில் அமையவில்லை என்பது எத் துணைத் தவறாகும்!

இயலறிவு, 'அறிவு' என்னும் இல்லத்தின் அடிப்படை. பட்டறிவும், ஏட்டறிவும் அதன் சுவரும் பிறவுமாகும். பட்டறி வாற் கெட்டிப் படுத்தப்பட்டு ஏட்டறிவால் எழிலாகி இலங்கும் அறிவு இல்லம், இயலறிவு அடிப்படை. ஆயினும் அறிவு என்னும் இல்லம் ஒன்றை ஒன்று தாங்கி அடிப்படை அமை வோடு நிலவுவது ஆகும்.

இதையே வள்ளுவர்,

"அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்கல் ஆகா அரண்."

என்றார். பகையைப் பன்மையாக்கிக் கூறியுள்ளமை எண்ணி எண்ணி மகிழற்பாலது. எனவே அறிவுப்படை தனது ஆற்றல், பயனாகும் தன்மை, இயலால் வேறுபட்டு நிற்பது தெளிவாகும் அமயம் வாயின் அறிவின் நுண்மை காண மேலும் முயலலாம்!

இயலறிவு, ஊழ்வினை எனவும் படும். இயல்பான அறிவு காணுதற்கு அரிதாகி, ஒருவனது உண்ணின்று உடற்றும தன்மையது. இதை 'நுண்ணறிவு' எனினும் சாலும். இயலறிவு என்பது தனிப் பொருண்மை உடையது.

இன்று ஏட்டறிவு, பட்டறிவு, இயலறிவு எனப்படும் வரிசை வசைக்குரியது. நாம் இயலறிவு, பட்டறிவு, ஏட்டறிவு என் போம். என் எனில் கருவின்றிக் கனியாதலில்லையாகலின். கருவின் தன்மை கனியின் சுவையிலும் விளங்கும். அவ்வாறே இயலறிவைக் கொண்ட ஏனைய 'அறிவுகள்' ஒளிகொள்ளும்.

ஒளிபடைத்த கண்ணினை உடையாரே ஒளிபெற அறிவுப் படை ஏந்தீர்!

---

# இலக்கியத் தொடர்பு

[வித்துவான். நெல்லை க. சுப்பிரமணியம்]

இலக்கியம் பஃறிறப்படும். அவற்றுள், அறிவும் உணர்வும் பண்படுதற்குப் பயன்படும் இலக்கியமே, நூலறி புலவர்களால் கொண்டாடப்படும். அதன் தொடர்பே நம்மனோர்க்கு நலம் பயக்கும். நிற்க,

பண்பாடுடையவர்களின் தொடர்பு அறிவும் இன்பமும் மேன்மேல் மிகுவதற்குக் காரணமாயிருப்பதுபோலவே, நல்லிலக்கியத்தின் தொடர்பு, உணர்வும் உவகையும் பெருகுவதற்கு ஏதுவாயிருக்கின்றது. நுண்ணறிவும் நூலறிவும் ஒருங்கமைந்த சான்றோன் ஒருவன், உண்மை அறிவு இன்பம் அமைதி ஆகிய வற்றால், தன் மனம் நிறைவதற்குத் துணைபுரியும் நூல்களையே நனிவிரும்பிக் கற்க முற்படுவான். மற்றை வெற்றாரவாரச் சிற்றின்ப நூல்களை அன்னான் அவ்வளவாகப் பண்டஞ் செய்வான் அல்லன்.

இனி, ஏடுகள் என்பன எல்லாம் ஒன்றைப் பின்பற்றிச் செய்யப்பட்டன தாம். இயற்கையைப் பின்பற்றியும் இன்னொருவரைப் பின்பற்றியுமே பெரும்பாலுங் கலைகள் அத்தனையும் முகிழ்க்கின்றன.

"காலைக்கதிரின் கண்கவர் காட்சியையோ, மாலைமதியத்தின் மண்புகழ் மாட்சியையோ, கோல மயிலின் ஒய்யாரமான ஆட்டத்தையோ, காட்டகத்தே காணப்பெறும் களவியற் செய்தியையோ, நாட்டகத்தே நடைபெறும் நற்போர்க் குறிப்புக்களையோ வேந்தரின் வேழப்படை வெட்டவெளியில் அணிவகுக்கும் நிகழ்ச்சியையோ," இன்ன பிறவற்றையோ கலையாக்குவோன், இயற்கையைப் பின்பற்றுகின்றான்.

இங்ஙனம் ஆக்கிய கலையொன்றைக் கண்டு, களிகொண்டு தனது அறிவின் துணையால் சிறிது கூட்டியும் குறைத்தும் மாற்றியும் திரித்தும் மெருகேற்றிப் புதிதாகப் படைப்போன், இன்னொருவரைப் பின்பற்றுகின்றான்.

ஆனால், இவ்விருதிறக் கலைஞர்களும் படைப்பன கலைகளென்று அறிஞர்களாற் கொண்டாடப் படவேண்டுமானால்,

அவை அழகுடையனவாயிருத்தல் வேண்டும் ஏன் எனின், கலைக்கு உயிர் அழகே ஆகும். அழகு என்றால் என்னை? எனிற் புகல்வாம் : கண்ணையும் மனத்தையுங் கவர்ந்து இன்புறுத்துவன எல்லாம் அழகென்றே அறிதல் வேண்டும். நீலநிற வானத்தில் நிலா உலா வருகின்றது: காண்பதற்கு அழகாக இருக்கின்றது. ஆனால், அக் காட்சி கலையாகாது. அதனை ஓர் ஓவியன் எழில் படத் தீட்டிக் காட்டினால் மட்டும் அது கலை என்று கண்டார் கொண்டாடும் நிலைபெறும். அதனை ஒருபுலவன் "நீலநிறமாகிய வானத்தை ஆடையாகக் கொண்டு, தன் தங்கம் போன்ற அங்கம் முழுதும் மறைத்து ஒரு பெண், தன் முகத்தை மட்டும் வெளி யே காட்டுகின்றனள். ஆ! அந்த ஒளிமுகத்தைக் கண்டதுமே உள்ளம் களிகொள்கின்றதே! அவளது வண்ண உடலின் வனப்பு முற்றுங் காணநேர்ந்தால்....என வியப்புற்று,

"நீலவான் ஆடைக்குள் உடல்மறைத்து
நிலாவென்று காட்டுகின்றாய் ஒளிமுகத்தைக்
கோல முழுதும் காட்டிவிட்டால் இன்பக்
கொள்ளையிலே இவ்வுலகஞ் சாமோ?"

என்று பாடிக் காட்டினால், அஃது அழகாக இருக்கின்றது. எனவே, அது, கவிதைக் கலை என்று கற்றறிந்தார் ஏத்தும் நிலை பெறுகின்றது. நிற்க,

அழகு, பலவகைப்படும். சிலந்தியின் வலை, விலைமகளிரின் விழி, ஏமாற்றுக்காரர்தம் மொழி, நச்சுப் பாம்புகளின் மேனி இன்னபிற வெல்லாம் அழகாகத் தோன்றினும், செயலால் துன்பஞ் செய்வன ஆதலால், அவற்றை அழகுடையன என்று ஆன்றோர் போற்றார்.

மாறாக, வெளித்தோற்றத்தில் அவ்வளவு அழகில்லா விடினும், கருத்துக்குக் களிப்பூட்டுவனவற்றைக் கவின்பெறு வனப்பின என்றே அன்னார் காண்பர், களிப்பர்; கைபுனைந் தியற்றிக் கலையாய்ப் படைப்பர்; நுகர்வர்.

இனி, அழகுஞ் சொல்லழகு பொருளழகு எனப் பல திறப் படும். செய்யுளிற் காணும் அழகு, அணி என்று பாராட்டப் படும். அழகு, இன்பந் தருவதுடன் நில்லாமல், நம் வாழ்க் கைக்கு நல்வழி காட்டுவதாயும் அமைதல் வேண்டும். எனவே, அழகுக் கலைகளுள் ஒன்றாகிய இலக்கியம், இன்பம் ஈவது, நன்

னெறி நல்குவது என்றிருவகைப்படும் என்று பிரித்து அறிந்து கொள்ளப்படும்.

இங்ஙனம் இலக்கியம் போன்ற கலைகளின் வாயிலாக வரும் இன்பம், பொதுமக்களும் ஏனை மாவும் புளளும் முதலாயினவும் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அடையும் ஐம்புல இன்பம் போலாமல், அறிவின் வாயிலாக வருவது ஆதலின், தூயது பெரியது உயர்ந்தது என்று துணிந்துரைக்கலாம

இலக்கியம், நல்லொழுக்கத்தைப் புகட்டி, நம் மனத்தைப் பண்படுத்தி நம் வாழ்க்கைக்கு நல்வழி காட்டுவதாயிருத்தலின், அஃது ஒருவனுக்கு ஆராய்ச்சி என்ற வாளும் அறிவு என்ற கேடகமும், துணிவு என்ற கவசமும், ஆன்ம நல்லுணர்வு என்ற பொன் அணிகலனுமா யமைகின்றது.

எனவே, இலக்கியத் தொடர்பு, எல்லார்க்கும் விழுப்பந் தரும்; ஏன் எனின், நல்லிலக்கியமானது, நமது அறிவு விரிதற்கும் மனம் பண்படுதற்கும் நிரம்பவுந் துணைசெய்து நிற்ப தோடு, இவ்வுலக வாழ்வில் வேறெதனாலும் விளையாத இன்ப வுணர்வை, வற்றாமல் சுரந்து வழங்கிக்கொண்டே இருக்கின்றது.

## இரண்டாவது சிற்றிலக்கிய மாநாடு

1959 ஏப்பிரல் 19ஆம் நாள் ஞாயிறு காலை மாலை திருநெல்வேலிச் சந்திப்பு தருமபுர மடாலயத்தில் **பேராசிரியர் அ மு. பரமசிவானந்தம்,** எம். ஏ., எம். லிட்., அவர்கள் தலைமையில் நடைபெறும். டாக்டர் தி இரா. அண்ணாமலைப் பிள்ளை யவர்கள் மாநாட்டைத் தொடங்கி வைப் பார்கள். பாளையங்கோட்டை நகர்மன்ற ஆணையாளர் திரு. B. சிவகுரு நாதன் செட்டியாரவர்கள், பி. ஏ , பி. எல்., சிற்றிலக்கியச் சொற்பொழிவு நூலை வெளியிடுவார்கள்.

பெரும் புலமைவாய்ந்த பேராசிரியர்கள் எண்மரால் சிறந்த பிள்ளைத்தமிழ்ப் பனுவல் பதினைறின் சீர்பற்றி அரியதோர் விரிவுரை நிகழ்த்தப்பெறும்.

---

# பதினுக்கப் பண்பொப்பு

[சித்தாந்த பண்டிதர், திரு. ப. இராமநாத பிள்ளை]

(செல்வி சிலம்பு ௩௩, பரல் ௭, ௩௧௨-ஆம் பக்கத் தொடர்ச்சி)

அதுவே வாய்மை மறையும் முறையும் ஆகும். மறை-வேதம். முறை-ஆகமம். அக் காலத்துச் சிவபெருமான் சுட்டியுணருமாறு தோன்றியருளிய பண்பமை படிமங்களும் பெயர்களும் குறிகள் எனப்படும். அக்காலத்து அவன் செய்தருளிய திருத்தொழில் களைப் புலப்படுத்துதற்குரிய கருவி முதலியன, அடையாளங்களா கும். இத்தகைய குறிப்புக்களை மறைமுறையாகிய அமிழ்தினும் இனிய தமிழ்நூல்கள் அழகுற ஓதும். அதுபோல் ஓவிய வடிவில் திருக்கோவில்களில் திருப்படிமங்களாக அவை அமைந்து திகழும். இவற்றிற்கிடமாக நின்று நன்மக்களுக்கு நாளும் உணர்த் தும் வாயில் நன்னெறி எனப்படும். இந் நன்னெறியினைக் கற்றுக் கைக்கொண்டொழுகுதற்கு எல்லார்க்கும் சிறந்த கலைக்கூட மாகத் திகழ்வது திருக்கோவில், திருமடங்கள் முதலியன வாகும். இத்திருக்குறிப்பே "குறிகளும்....நெறிகளும்" என்பது வரையும் உள்ள பொருளாகும். இவற்றால் மாந்தர்க்குச் சிவ பெருமானின் திருவிளக்கம் சிறந்து காணப்படும். இப்பொருள் "அவன் நின்றதோர் நேர்மை" என்பதனால் பெறப்படும். இவற்றை மக்களறிந்துய்ய அளவில்லாத மறைமுறைகள் ஆங் காங்கு ஓங்கி முழங்குகின்றன. மாந்தர் சிலர்க்கு இவற்றின்கண் செல்லும் மனமில்லாமை கண்டு மனமுருகி நம் நாவரசர் இத் திருப்பாட்டினை யருளுகின்றனர். இக் கிடைத்தற்கரிய அரு மறையினை ஆர்வமொடு கைக்கொள்ளும் புண்ணியப்பேறும் நல்லறிவும் அவர்கட்கு வாய்க்கவில்லையே என்று வருந்துகின் றனர். அத் திருக்குறிப்பே "பொறியிலீர் மனம் என்கொல் புகாததே" என்பதாம். இவற்றால் ஆவித் தூய்மை பெறப் படும் வாயில்கள் நன்கு விளங்குவன காண்க.

மறைமுறைகளும், திருப்படிமங்களும், திருக்கோவில்களும் மாந்தர் கைக்கொண்டொழுகி உய்தற்பொருட்டே திருவருளால் தோன்றியன என்பது வரும் சிவஞானபோத வெண்பாவானும் நூற்பாவானும் உணர்க:

"அருவுருவத் தானறிதல் ஆயிழையாய் ஆன்மா
அருவுருவ மன்றாகும் உண்மை—அருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது
தோன்றன் மலர்மணம்போல் தொக்கு." (௭. ௩ - ௧)

ஆயிழை - ஆராயப்பட்ட நூல்கள். அவை மறையும் முறையும்.

"செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே." (௧௨)

"ஏவவடிவு களுந்தானாய் எழிற்பரை வடிவதாகிக்
கவவியமலத் தான்மாவைக் கருதியே ஒடுக்கியாக்கிப்
பவவம்வின் டகலப்பண்ணிப் பாரிப்பான் ஒருவனென்று
சேவையே உயிரிற்காண்டல் சிவரூபம் ஆகுமன்றே."

—உண்மைநெறி விளக்கம், ௩.

உயிர்ப்பொருள் உயிரல்பொருள் ஆகிய எல்லாவற்றினோடும் வேறற நின்றருளுகின்ற விழுப்பொருள் சிவன். அதனால் எவ் வடிவகளும தானாய் என்றனர். அத்தகைய சிவபெருமான் மெய்யன்பர்களின் பொருட்டுப் பண்பமை திருக்கோலம் அவ்வப் போது கொண்டருள்வன். அங்ஙனம் கொள்ளும திருமேனிக்கு முதலாக விருப்பது வளரும் வனப்பமைந்த திருவருளாற்றலே யாம். அத்திருவருள் ஆக்கமே அப்பெருமானுக்குத் திருமேனி யாகும. திருவருள் எனினும் பரை எனினும் ஒன்றே. எழில்-வளரும் வனப்பு; பெருகும் அழகு அமமுறையில் சிவபெரு மான எழிற்பரையின் வடிவதாகின்றனன். தானே விடாததும் பற்றப்பட்டதனால் விடுவிக்க ஒண்ணாததுமான நிலையிற் பற்றுதல் கவ்வுதலாகும் இதனை வெளவுதல் எனவும் கூறுப. அங்ஙனம் தொன்மையிலேயே குற்றவியல்பாக ஆருயிர்களை மலம் பற்றியுள் ளது. அம்மலத்தை அகற்ற அருளாக்கத திருவுருவுடையனாய், இயற்கையிலேயே மலப்பிணிப்பின்றித் திருவருளின் நலப்பிணிப பாேடு திகழும் சிவபெருமான் திருவுள்ளங்கொண்டருளினன். அதன்பொருட்டு மாயையினின்று உலகு உடல் உறுப்பு உணா முதலிய பொருள்களைப் படைப்பித்து ஆருயிர்கட்கு அவற்றைக் கூட்டுவித்தருளினன். அங்ஙனம் திருவுள்ளங் கொள்ள அவன்றன் அன்பறிவாற்றல்கள் மேலோங்கித் துணை யாகும் அம்மூன்றினாலும் முறையே படைத்தலும் காத்தலும் துடைத்தலும் நிகழ்வனவாகும். அவற்றை முறையே ஆக்கி (நோக்கி) ஒடுக்கி என்றனர். நோக்கி-காத்து. இம்மூன்றினா லும் ஆருயிர்கட்குக் கடல்போன்ற பிறப்பும் அப்பிறப்பிற்குக் காரணமான மலமும் நீங்கி அகலுமாறு செய்தருளி, அதனால் ஆருயிர்கட்குச் செவ்விவருவித்து, சிவகுருவாகத் தோன்றியருள்வன். அங்ஙனம் தோன்றி ஆட்கொண்டருள்

புரியும் ஒப்பில்லா முதல்வன் சிவனென்று அவனருளால் செவ்வையாக ஒவ்வொருவரும் தம் உயிரில் காண்டல் சிவவடிவமாகும். அன்பு - இச்சை. அறிவு - ஞானம். ஆற்றல் - தொழில்.

ஆருயிர் திருவருளால் தன்னைச் சிவத்தினிடத்துக், அதுபோல் சிவத்தைத் தன்னிடத்தும காணும். இவற்றிற்கு ஒப்பு முழுவதும் திருநீறணிந்தா ரொருவர் அத்திருநீற்றினிடத்துத் தம் உடம்பினைக் காண்பதும் அதுபோல் அத்திருநீற்றைத் தம் உடம்பினிடத்துக் காண்பதுமாகும். ஒருபுடை யொப்பாக முத்தொழிலினையும் அன்பாற் படைப்பும் அறிவாற்றலாற் காப்போ, டின்பத்துடைப்புமாம் எண். காண்டல்-உணர்வினின் உணர்தல்.

சிவபெருமானுக்குத் திருவருளே திருமேனி என்பதனை வரும் செந்தமிழ்த் திருமறை முறைகளால் உணர்க:

"உமையலா துருவமில்லை உலகலா துடையதில்லை
நமையெலா முடையராவர் நன்மையே தீமையில்லை
கமையெலா முடையராகிக் கழலடி பரவுந்தொண்டர்க்கு
அமைவிலா அருள்கொடுப்பார் ஐயன்ஐ யாறனார்க்கே."

—௪. ௪0 ௧.

"உருவருள் குணங்க ளோடும் உணர்வருள் உருவிற் றோன்றும்
கருமமும் அருள்அ ரன்றன் கரசர ணாதி சாங்கம்
தருமருள் உபாங்கம் எல்லாம் தானருள் தனக்கொன் றின்றி
அருளுரு உயிருக் கென்றே ஆக்கினன் அசிந்தன் அன்றே."

—சித்தியார் ௧, ௨-௨௭.

இதற்கு ஒருபுடையொப்பாகக் கூடிய திருமறை வருமாறு:

"வாழ்த்த வாயு நினைக்க மடநெஞ்சம்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே"

—௫. ௯0-௭.

சிவபெருமானின் திருவடியினைக் காண்டற்கு ஆருயிரும், அவ்வுயிர்ப் பொருட்டு அவனருளால் படைத்தளித்த உலகுடற் பொருள்களும் என்றும் வாயிலாக நின்று விளங்குவன. அவ்வுண்மை இத்திருப்பாட்டால் இனிது விளங்குவது காண்க. உலகிடைக் காணப்படும் ஒவ்வொரு கருவிகளும் சிறந்த நன்மையினை எய்தும் பொருட்டே நன்மக்களால் நன்கு நாடி ஆக்கப்படுகின்றன. அத்தகைய கருவி நின்று பயன்தருதற் பொருட்டு அதனையும் நெய்பூசித் துடைத்துக் கூராக்கிப் பெருமையொடும்

பேணுகின்ருேம் அதுபோனமீற நம்முடைய உடம்பு நாயன் திருவடியை நண்ணுதற்பொருட்டு அந்நாயனுரால் நமக்கு இன்னருள் இரவலாக அளிக்கபபட்டது. நாம் அதனைக்கொண்டு அவன் திருவடித் தொண்டினைப் பெருவிருப்புடன் நாளும் புரிதல்வேண்டும். அதன்பொருட்டு உண்டு உழைத்து உதவிக்கண்டார் புகழ வாழ்தல் வேண்டும்.

அதனுல் கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமையாகிய மடமை பொருந்திய நெஞ்சினுல் அதனைத் தந்தருளிய சிவபெருமானின் திருவடியை "ஒல்லும் வகையால் ஓவாது செல்லும்" நாளெல்லாம நினைத்தல் வேண்டும்; வாயினுல் வாழ்த்துதல் வேண்டும். அங்ஙனம் நினையாது வாழ்த்தாதொழியின் "செய்ந்நன்றி கொன்றவ"ராவோம். இம்முறையில் ஓர் உயிர்க்கு உலகமும் உலகியற் பொருள்களும் பிறவும் ஆண்டவனுல் கொடுத்தருளப்பட்ட நன்றி பொது நன்றியாகும். இதனையே நாயனுர் "எந்நன்றி கொன்றூர்க்கும்" என்றருளினர். உடம்பு அவ்வுயிர்க்கு வழங்கப்பட்டது சிறப்பு நன்றியாகும். அதனையே "செய்நநன்றி" என்றருளினர். இடையறுது நினைக்க நெஞ்சினையும்அவன் பொருள்சேர் புகழ்களை நாளும் புகன்று வாழ்த்தி வழிபட்டு வாழ்தற்கு வாயினையும, மாயா காரியமாகிய முக்குணமும் கடந்து திருவருளாக்கமாகிய எண்குணமும் உடைததாய் உலகஙகளை உடைமையாகவும் உயிர்களை அடிமையாகவும்கொண்டு உய்விக்கும் அவன் திருவடியினைத் தாழ்தத 'வணங்கத் தலையினையும் தண்ணளியால் தந்தருளிய விழுமிய முழுமுதற்றலைவன் அவனே. அவன் திருவடியினைத் தேனையுண்டற் பொருட்டு வந்து வண்டுகள் சூழ்ந்துள்ள சிறந்த மலர்களை முறையாகக் கொண்டுவந்து போற்றிததொடர் புகன்று கையால் திருவடியில் தூவித் தொழாது, பண்டைத் தீவினையேன் எண்ணில் காலத்தை இம்மண்ணில் பயனின்றி வீணுகக் கழித்துள்ளேன். (இனியேனும் அங்ஙனமின்றி "வாய்நெஞ்சம்மெய்" என்னும் முப்பொறியாலும் வணங்குவேனுக.) வாயினை முறகூறியது அது முற்றும் புறக்கருவியும் ஆகாது முற்றும் அகக்கருவியுமாகாது ஈரொட்டாய் நிற்கும் எழில் குறித்தென்க. அதனை அடுத்து நெஞ்சினை வைத்தது நெஞ்சின் தொடர்பின்றி வாயும் மெய்யும் எச்செயலும் புரியா இயலபு நோக்கி என்க. நெஞ்சு நடுவாக வமைந்தது அதன் தனிச் சிறப்பு நோக்கி என்க. இத்தகைய எண்ணம் திருவருளால் ஒருவர்க்குத் தோன்றுமேல் அதுவே சிவவடிவம் தோன்றுதற்கு உணர்வின்கண் ஒளிரும் தனிச்சுடர் மணிவிளக்காகும்.

(தொடரும்)

# திரு. பி. சொ. சண்முகம் பிள்ளை அவர்களின்
# வெள்ளி விழா

இச்சான்றோர் வடலூருக்கு அடுத்துள்ள பின்னலூரில் விழுமிய வேளாண் குலத்தில் திருவாளர், சொக்கலிங்கம் பிள்ளையவர்கட்கும் அவர்தம் கற்பிற் சிறந்த பொற்புறு துணையார் சௌபாக்கியத்தம்மையார்க்கும் தவப்பேற்றால் சௌமிய ஆண்டு மாசித் திங்கள் முப்பதாம் நாள் (13-8-1910) ஞாயிற்றுக்கிழமை மகவாய்த் தோன்றினர். பெற்றோர் பருவங்கடோறும் பெரிதும பாராட்டி வளர்த்தனர்.

உள்ளூர்க் கல்வியும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் புலமைக் கல்வியும் தெள்ளிதிற் பயின்று தேறிச் சிறப்புற்றனர். அம்மட்டுமன்று; தெய்வமறையாம் தேவார முதலியவற்றை முறையுறப் பண்ணொடு பயின்று இறைவழிபாட்டினும் உறைத்து நின்றனர். சீரிய பண்பனைத்திற்கும் ஓர் உறையுளாகத் திகழ்ந்து கல்விப் பயனைக் கைக்கொண்டொழுகுங் காவலர் என்னும் பாராட்டும் பெற்றனர்.

செந்தமிழ்ப் பணியினையே இலக்குமிபுரம், விருத்தாசலம், சிதம்பரம் முதலிய இடங்களிற் சீருறவாற்றிச் சென்னைக் கோநகர்க்கு வந்து 1934 ஆம் ஆண்டு முதல் புரசை முத்தையாச் செட்டியார் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்து வருகின்றனர். மாணவர்க்குத் தனித் தமிழ் மாண்பினை இனிக்க எடுத்தோதி ஆர்வமூட்டுந் திறமையினும் அவ்வழி யொழுகுவிப் பதிலும் பேர் போனவர் நம் புலவர். மாணவர்கள் இவர்களை ஆசானாக மட்டுமன்றி ஈன்றோராகவும் கொண்டு ஏத்திப்புகழும் ஏற்றமும் பெற்றனர். கல்லூரியே யன்றி இவர்தம் இல்லமும் பயிலும் மாணவர் சிறப்பால் பல்கலைக்கழகம் போன்றே தோன்றும் கற்பிற் சிறந்த வாழ்க்கைத்துணை சிவகாமி அம்மையுடனும் தவப் பேற்றுற்றோன்றிய நம்பி குமரகோவிந்தன் (பி. ஏ., சிறப்பு), செல்வி மணிமேகலை, செல்வன் சொக்கலிங்கம் ஆகிய மக்களுடனும் மிக்கார்கள் போற்றும் விழுமிய நிலையுடன் வாழ்ந்து வருகின்றனர்.

யாண்டெல்லாம் தமிழ் வளர்ச்சித் தொண்டு நிகழுமோ ஆண்டெல்லாம் வலியச் சென்று வேண்டுமட்டும் தொண்டியற்றும் நோன்பினர். மாணவர் மன்றத் தொண்டில் மிகவும் ஈடுபட்டு உழைத்து வருபவர். அவர்கட்குச் சிறப்புறக் கொண்டாடிய வெள்ளிவிழாவை நனிமிகப் பாராட்டுகின்றோம். இது போல் பொன்விழ மணிவிழா முதலிய பல்விழாப் பெற்றுப் பல்லூழி வாழப் பரமனடியை வழுத்தி வாழ்த்துகின்றோம்.

---



29-3-59ல் சர். எம். சிடி. முத்தையா செட்டியார் உயர்நிலைப்பள்ளியில் நடைபெற்ற திரு. பி. சொ. சண்முகம் பிள்ளையவர்கள் வெள்ளிவிழா நிகழ்ச்சி

## மகாவித்துவான்

# மறைத்திரு. சி. கணேசையரவர்கள்

[பண்டித வித்துவான், திரு. க. சி. நடராசன் B. O. L, Dip. in Ed.,]

(செல்வி சிலம்பு ௧௧, பரல் ௭, ௧௨௮-ஆம் பக்கத்தொடர்ச்சி)

மாணவர் ஐயங்களைக் கேட்டால், அதற்கு அப்போதைக்கு ஏதாவது சொல்லி மழுப்பிவிடும் வழக்கம் மகாவித்துவான் கணேசையரவர்களிடம் மருந்துக்கும் கிடையாது. உடனேயே அவ்வையத்தைத் தீர்த்துவிடுவார்கள். உடனே தீர்க்கமுடியாமற் சிறிது சிந்தித்தாவது ஆராய்ந்தாவது சொல்லவேண்டியிருந்தால், "பார்த்துச் சொல்லுகிறேன்" என்பார்கள். கேட்ட மாணவன் மறந்தாலும் அவர்கள் அதை மறக்கமாட்டார்கள். ஆராய்ந்து கண்டதும், அம் மாணவனைத் தேடிச்சென்று அதைத் தெளிவிக்க அவர்கள் தவறவே மாட்டார்கள். இஃது அவர்களிடம் மாணவனாக இருந்த யான் நேரில் அறிந்ததொன்றும். இந்த இயல்பே ஐயரவர்கள் தொல்காப்பியத்துக்கு மிகத் தெளிவான உரை விளக்கக் குறிப்பு எழுதுதற்கு அவர்கட்கு உறுதுணையாக இருந்தது என்று கூறின், அது மிகையாகாது. தம்முடைய ஆசிரியர்களிடம் நேரிற் கற்றதினும் பார்க்க அவர்கள் தாமாக முயன்று ஆராய்ந்து கண்ட முடிபுகளே பலவாம். கற்கண்டை மென்று சுவைத்துக்கொண்டே சிறிதுநேரம சிந்திப்பார்கள். உடனே பதிலைத் தெரிந்துகொள்வார்கள். "அஃது இது காணும்" என்று மலர்ந்த முகத்தோடு விளக்குவார்கள். அந்தக் கற்கண்டில் ஏதோ இருக்கிறது போலும் என்று எமக்கு நினைக்கத் தோன்றும். கற்கண்டில் அவர்களுக்கு நல்ல விருப்பம் உண்டு. பாடம் சொல்லும்போது கற்கண்டை வாயிற் போட்டுக் கொள்வார்கள். சில வேளைகளில் மாணவருக்குங் கொடுப்பார்கள். பழவகைகளில் அன்னாசிப் பழத்திலும் திராட்சைப் பழத்திலும் அவர்களுக்கு அதிக விருப்பமுண்டு. கீரை வகைகளில் வல்லாரை அவர்களுக்குகந்தது. பொதுவாக மாணவர்களிடம் எதையும் ஏற்றுக்கொள்ள மறுக்கும் இவர்களை மறுக்காமல் ஏற்றுக் கொள்ளச் செய்வதற்கு இவற்றுள் ஏதாவதொன்றைக் கொண்டு செல்லுதலே வழி என்பதை மாணவர்களாகிய நாம் அறிந்திருந்தோம். பொடிபோடும் வழக்கமும் அவர்களிடம் உண்டு. வருவாயைப் பெரிதாக மதித்து அவர்கள் ஆசிரியத்தொழிலை நடத்தியதே கிடையாது. பிராசீன பாடசாலையைவிட்டு நீங்கியபின், இவர்கள் நூல்களை எழுதுவதிலும் தனிப்பட்ட முறையிற் சில

மாணவர்களுக்குப் பாடஞ் சொல்லிக் கொடுப்பதிலும் கடவுள் வழிபாட்டிலும் தம் காலத்தைக் கழித்தார்கள்.

அவர்கள் காலத்துப் புலவர்கள்

மகாவித்துவான் கணேசையரவர்கள் காலத்தில் இந்தியாவில் சேது சமத்தான மகாவித்துவான் ரா. இராகவையங்காரவர்களும் அவர் மருகர் மறைத்திரு. மு இராகவையங்காரவர்களும் அறிஞர் திரு. அரசன் சண்முகனார் அவர்களும், திரு. நாராயணையங்கார் அவர்களும், மறைமலையடிகளும், ஈழத்தில் வித்துவசிரோமணி பொன்னம்பலப்பிள்ளையும, சுன்னாகம் குமாரசுவாமிப் புலவரவர்களும் பிறரும் இருந்தார்கள். இத்தகைய பெரும் புலவர்கள் காலத்தில் அப்புலவர்களும் ஒப்பப் பல ஆராய்ச்சி முடிபுகளைக் கண்டவர்கள மகாவித்துவான கணேசையரவர்கள். இவர் தம் 25 ஆம் ஆண்டளவிலேயே மகாவித்துவான் ரா. இராகவையஙகார் அவர்களும், மு. இராகவையங்காரவர்களும் வேண்டிக் கொண்டபடி அவர்களால் நடாத்தப் பெற்றுவநத மதுரைத் தமிழ்ச் சஙக வெளியீடாகிய “செந்தமிழ்” இதழ்களில் அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதத் தொடங்கினார்கள். அக் காலத்திலேயே திரு. அரசன் சண்முகனாருக்கும் கணேசையரவர்களுக்குமிடையே கருத்து வேற்றுமை ஏற்படலாயிற்று. தொல்காபபியப்பாயிரம் முதற் சூத்திரம் என்பவற்றிற்கு அரசன் சண்முகனார் அவர்கள், “சண்முக விருத்தி” என்னும் பெயரோடு எழுதிய விருத்தியுரையில் ஆகுபெயரும் வேறு அன்மொழித் தொகையும் வேறு என்னும் கொள்கையை நிறுவ முயன்றார்கள். முன்னையோர் கொள்கைக்கு இது முரண்பாடாதலைக் கண்ட கணேசையரவர்கள் தமது ஆராய்ச்சி வன்மையால் அரசன் சண்முகனார் கொளகையை மறுத்தெழுதி ஆகுபெயரும் அன்மொழித்தொகையும் ஒன்றேயாம் என்பதை நிறுவுவாராயினர். இதனைச் “செந்தமிழி”ல் வெளிவந்த கட்டுரைகள் காட்டும். இன்னும் காலத்துக்குக் காலம் இவர்கள் “செந்தமிழி”ல் எழுதிவந்த இலக்கண ஆராய்ச்சிக் கட்டுரைகள் பலவாம். இவற்றைப் பின், இவர்கள் உரை விளக்கக் குறிப்போடும் பாடத் திருத்தத்தோடும் வெளியிட்ட தொல்காப்பியப் பதிப்புகளில் அநுபந்தமாகச் சேர்த்திருக்கிறார்கள் எழுத்ததிகாரப் பதிப்பில் “அளபெடை,” “போலி எழுத்து” என்பவையும், சொல்லதிகாரப் பதிப்பில் “தொல்காப்பியச் சூத்திரப் பொருளாராய்ச்சி,” “பிறிது பிறிதேற்றல்,” “ஆறனுருபு பிறிதேற்றல்,” “இருபெயரொட்டாகுபெயரும் அன்மொழித் தொகையும்,” “தொகைநிலை” எனபவையும், பொருளதிகாரப் பதிப்பில் “சிறுபொழுதாராய்ச்சி” என்பதும் சேர்க்கப்பட்டுள்ளன. அவற்றை

ஆண்டுக் காண்க. இவ்வாராய்ச்சிகளில் சிவஞான முனிவரின் இலக்கணக் கொள்கைகளை மறுத்து வேறு கொள்கைகளை இவர்கள் நிறுவியிருக்கின்றார்கள். இதனை இவர்கள் தமது கூர்த்த மதிகொண்டு செய்தமை இவர்தம் நுண்ணறிவைக் காட்டும். இவர்கள் எழுதிவந்த கட்டுரைகள் செந்தமிழ்ப் பத்திராதிபராலும் பிறராலும் பெரிதும் மதிக்கப்பட்டன வென்பதை 30-5-1906 இல் இவர்களுக்கு அக்காலத்துப் பத்திராதிபராகவிருந்த மறைத்திரு. மு. இராகவையங்காரவர்களிடமிருந்து கிடைத்த திருமுகம் ஒன்று சான்று பகரும். அது வருமாறு:—

மதுரைத் தமிழ்ச சங்கம்,
30—5—1906

அன்பார்ந்த ஐயா!

தாங்கள் "தொனி" என்னும் அரிய விஷயம் அனுப்பிய பின்பு, வேறு விஷயம் அனுப்பாமைக்குப் பலர் (அவாவுடன்) வருந்துகிறார்கள். தயைசெய்து "இராமாவதாரச் செய்யுட் பாடாந்தரத்"தின் தொடர்ச்சியை அனுப்பிவரின் உபகாரமாமென்பதை நாம் சொல்லல் மிகை. தாங்கள் நீண்ட நாளாகக் கடிதமெழுதாதிருத்தல் பற்றிக் கவல்கின்றேன். தங்கள் அன்பார்நத கடிதத்தை எதிர்நோக்கியுள்ளேன்.

இங்ஙனம்,
அன்பன்,
(ஒப்பம்) மு. இராகவையங்கார்.

இதுபோலவே இன்னும் பல கடிதங்களுள. விரிவஞ்சி அவற்றைத் தாரா தொழிகின்றேன், நிற்க.

இலக்கண ஆராய்ச்சிக் கட்டுரைகள் மட்டுமன்று, இலக்கிய ஆராய்ச்சிக் கட்டுரைகளும் பல இவர்களாற் "செந்தமிழ்"ல் எழுதி வெளியிடப்பட்டுள்ளன. "கவியின்பம்" என்னுந் தலைப்பில் அரசகேசரியார் இயற்றிய "இரகு வமிசம்" என்னுங் காவியத்திலுள்ள சிறப்புகளை எடுத்துக்காட்டிய கட்டுரைகளும், "ஒரு செய்யுட் பொருளாராய்ச்சி" என்னும் தலைப்பில் சிறுபாணாற்றுப்படையில் ஒரு பகுதிக்கு (அடி 15-31) நச்சினார்க்கினியர் எழுதிய உரையை மறுத்து எழுதியமையும், "நச்சினார்க்கினியர் உரை நயம்" என்னுந் தலைப்பில் சிந்தாமணிக்கு நச்சினார்க்கினிய ருரையிற் காணும் நயங்களை எடுத்துக்காட்டிய கட்டுரையும், கம்பர் கவிநயம் பற்றிய கட்டுரைகளும் பிறவும் சிறந்த இலக்கிய ஆராய்ச்சிக் கட்டுரைகளாம். அவர்தம் கட்டுரைகளைத் தொகுப்பதில் ஈடுபட்டுள்ள என் முயற்சி வெற்றி பெறுமாறு அறிஞர்கள்

மேலும் தமக்குக் கிடைப்பனவற்றைத் தந்துதவுவார்கள் என்று எதிர்பார்க்கின்றேன்.

இராமாயணத்தை இவர்கள் எவ்வளவு நுட்பமாகக் கற்றிருக்கின்றார்கள் என்பதை அவர்கள் வித்துவ சிரோமணி பொன்னம்பலப்பிள்ளை யவர்களிடம் பாடங்கேட்டபோது தாம் குறித்து வைத்த இராமாயணக் குறிபபுப் புத்தகம் (கையெழுத்துப்பிரதி) ஒன்றை என்னிடம் தந்து வைத்தார்கள். அதிலிருந்து எத்துணைச் சிரமமெடுத்துக்கொண்டு நுட்பமாக இராமாயணம் முழுவதையும் மாணவனாக இருந்த அக்காலத்திலேயே அவர்கள் கற்றார்கள் என்பது நன்கு புலபபடுகின்றது. எடுத்துக்காட்டாக, ஒரு செய்யுளின் குறிப்பை மட்டும் இங்குத் தருகின்றேன். சுந்தர காண்டத்தில் ஊர்தேடு படலத்தில வரும (146 ஆம் செய்யுள்),

“தனிக் கடக்களி றெனவொரு துணையிலான் றூய
பனிக்க டற்பெருங் கடவுடன் பரிபவந் துடைப்பான்
இனிக்க டப்பதன் றேழ்கடல் கிடந்ததென் றிசைத்தான்
கனிக்க டற்கதிர் தொடர்ந்தவ னகழியைக் கண்டான்.”

என்னுஞ் செய்யுளுக்கு எழுதப்பெற்றுள்ள குறிப்பு வருமாறு:—

“கடலின் கண்ணே தோன்றுகின்ற சூரியனை ஒரு பழமென்று கருதித் தொடர்ந்தவனாகிய ஒப்பற்ற மதததையுடைய யானையைப்போன்ற ஒரு துணையுமில்லாத அநுமனானவன அந்நகரின் அகழியைக் கண்டவனாய்க் குளிர்ந்த கடலுக்குத் தலைவனாகிய வருணனது அவமானத்தை நீக்கும்படி ஏழ்கடலும இனியவ்வநுமனால் கடத்தல் கூடாதெனறு கருதிக்கிடந்தாற போலும் என்று கூறினான் அநுமன் கடலைத் தாண்டியதனால தம் யசமானனுக்கு வந்த அவமானத்தை நீக்கும்படி சத்த சமுத்திரங்களும வநது கிடந்தாற்போன்ற அகழியைக் கண்டான் என்பது கருத்து. அவமானம்—யாவராலும கடக்கமுடியாத தன்னை ஒரு குரங்கு கடந்ததே என்றதனால் வந்த அவமானம்.”

இக் குறிப்பை யான் தெரிந்தெடுத்துத் தரவில்லை அக் குறிப்புப் புத்தகத்தைப் புரட்டியபோது முதலில் என் கண்ணைக் கவர்ந்த செய்யுளையே தந்துள்ளேன். இப்படியே ஒவ்வொரு பாட்டுக்கும் அரிய குறிப்பெழுதிப் படித்திருக்கிறார்கள். இவ்வாறே சங்க இலக்கியஙகளிலும சிலப்பதிகாரம், மணிமேகலை திருக்கோவையார், பெரியபுராணம், கந்தபுராணம், இராமாயணம் முதலிய நூல்களில் அவர்களுக்கு நிரம்பிய பயிற்சியுண்டு என்பதை அவர்கள் பாடஞ் சொல்லும்போது நாம் நன்கறிந்துள்ளோம். “கோவையென்றால் திருக்கோவையே மற்றைய

கோவைகளெல்லாம் வேலியிற் படரும் கோவையே" என்று கூறித் திருக்கோவையார்ச் செய்யுள்களைச் சுவைப்பார்கள். அகநானூற்றுக்கு உரையே இல்லாத அக்காலத்தில் அகநானூற்றை அவர்கள் எங்களுக்கு விளக்கிய சிறப்பை நாம் மறக்கமுடியாது. பதிற்றுப் பத்துக்கும் அவ்வாறே. தருக்க சங்கிரகத்தை அவர்கள் விளக்கியதைப்போலத் தெளிவாக விளக்கியவரை யான் கண்டிலேன். இவ்வாறே இலக்கிய அறிவிலும் அவர்கள் அறிவு பேரறிவாக விளங்கிற்று.

உரையாசிரியர்

1915 ஆம் ஆண்டில் (அப்போது கணேசையரவர்களுக்கு 37 வயசு) அரசகேசரியார் இயற்றிய "இரகுவமிசம்" என்னும் காவியத்துக்கும் பாயிரத்துக்கும் முதல் ஒன்பது படலங்களுக்கும் (அவையாவன: பாயிரம், ஆற்றுப்படலம், நாட்டுப்படலம், நகரப் படலம், அரசியற்படலம், குறைகூறு படலம், தேனுவந்தனப் படலம், இரகுவுற்பத்திப் படலம், யாகப்படலம், திக்கு விசயப் படலம் என்பவையாம்.) ஓர் அழகிய புத்துரை எழுதிக் கொக்குவில் சோதிட பரிபாலன அச்சியந்திரசாலையிற் பதிப்பித்து வெளியிட்டார்கள். இவ்வுரை திட்பமும் நுட்பமும் வாய்ந்தது என்பதற்கு எடுத்துக் காட்டாக அதன் காப்புச் செய்யுளையும் அதன் உரையையும் ஈண்டுத் தருதும்.

காப்புச் செய்யுள்

"உதயமா வலரி யெண்ணி லுதித்தன வொளியிற் றூய
சிதைவிலா நிலவுச செக்கர்ச் செவ்வந்தி மெய்யார் தந்த
புதைகொண்மா மதத்த வாம்ப லானனப் புனிதப் பொற்றே
னிதயவா ரிசத்த தானெ லெக்கலை மணவா தெற்கே."

இதன்பொருள்: மா உதய அலரி எண் இல் உதித்தன ஒளியிற்று ஆய-பெரிய உதய ஞாயிறு அளவில்லாதன உதித்தாற் போன்ற ஒளியினையுடைத்தாய், சிதைவு இல்லா நிலவுச் செக்கர் செம் அந்தி மெய்யார் தந்த-அழிவில்லாத நிலவினையுடைய செவ்வானம் போன்ற (விபூதியை யணிந்த) திருமேனியையுடையவராகிய சிவபிரானார் தந்தருளிய, புதைகொள்மா மதத்த ஆம்பல் ஆனன புனித பொன்தேன் - ஆழத்திற் கிடத்தலைக்கொண்ட கரிய மதத்தையுடைய யானைமுகத்தைக் கொண்ட சுத்தமாகிய அழகிய தேன் இதய வாரிசத்ததானல் - இதய கமலத்திலிருக்குமாயின், எற்கு எக்கலை மணவாது - எனக்கு எந்தக் கலைஞானம் அடையாது என்றவாறு.

ஏகாரம் அசைநிலை. இல என்னும் வினைப் பெயரினீற்றகரமும், இல்லாத என்னும் பெயரெச்சத்தீறும் விகாரத்தாற்

றுக்கன. எண்ணில் அலரி என மாற்றிப் பொருள்கோடல் இத்துணைச் சிறப்பின்று. உதித்தல் என்பது உதித்து என விகாரமாய் நின்றது. ஒளியிற்றுயமெய், சிதைவிலாமெய், செவ்வந்திமெய் எனத் தனித்தனி கூட்டி முடிக்க. ஆம்பலானைப் புனிதப் பொற்றேன் - விநாயகக் கடவுள். செந்நிறமான மேனியின்மீது வெண்ணிறமான விபூதி பரந்திருத்தல், செவ்வானத்தின்மீது வெண்ணிலாப் பரந்திருத்தல் போலுமென்பார் 'நிலவுச் செக்கர்ச் செவ்வந்தி மெய்யார்' என்றார். உவமையடைக்கிளையப் பொருளடை வருவிக்கப்பட்டது. செக்கர், செம் என்பன ஒரு பொருட் பன்மொழி. சிதைவிலா என்பதை அந்திக்கேற்றி இல் பொருளுவமை யாக்கினுமமையும். தந்த தேன் எனக் கூட்டுக. புதைகொள் மாமதம் என்பதற்கு விசையினல் வீழுமிடத்திலுள்ள பொருளைப் புதைத்தலைக்கொண்ட மதம் எனினுமாம். ஆசிரியர் தாம் எடுத்துக்கொண்ட நூல் இனிது முடியுமாறு முதலில் விநாயகக் கடவுளுக்கு வணக்கங் கூறினார் என்க. இனி, இதன்கண் அலரிப்பூக்கள் அளவிறந்தன பூத்தாற்போன்ற ஒளியையுடைத்தாய செவ்வந்திப்பூப் பூத்த ஆம்பற்பூவிலுள்ள தேன் தாமரையின் கண்ணதாயின் எப்பகுதியவான மணமுண்டாகாது என வேறுமொரு பொருள் தொனித்தல் காண்க, என்பது.

வ்வுரைக்குப் பல அறிஞர்கள் சிறப்புப்பாயிரங் கொடுத்துளளார்கள். அவர்களுள், அக்காலத்துச் சென்னை பிரசிடென்சிக் கல்லூரியில் தமிழ்ப் பண்டிதராயிருந்த மகாமகோபாத்தியாய மறைதிரு. உ. வே. சாமிநாதையரவர்கள் (அப்போது அவர்க்கு 'டாக்டர்' பட்டம் கிடைக்கவில்லை) அளித்த சிறப்புப்பாயிரம் இதுவாகும் :

"உலம்பூத்த புயவரசக்கேசரியா
 ராய்ந்துமுன முரைத்த தாய
நலம்பூத்த சுவையிரகு வங்கிசத்திற்
 கினியவுரை நன்கி யற்றிப்
பலம்பூத்த தமிழ்வலவர் மதிப்பவெளிப்
 படுத்தினன்யாழ்ப் பாண மேயோன்
குலம்பூத்த நலமுடையோன் கணேசையப்
 பெயராளன் குணமிக் கோனே."

என்பது. பின் 1932 ஆம் ஆண்டில் (அப்போது இவர்கள் பிராசீன பாடசாலைத் தலைமைப் பேராசிரியராக இருந்தார்கள்.) இரகு வமிசத்தின் அடுத்த ஏழு படலங்களுக்கு (அவையாவன: அயனுதயப்படலம், அயனெழுச்சிப்படலம், மாலையீட்டுப்படலம், கடிமணப்படலம், மீட்சிப்படலம், இரகு கதியுறுபடலம், இந்த

மதி பிறப்பு நீங்குபடலம் என்பனவாம்.) முதற்பகுதிக்கு எழுதியது போலவே இனிய உரை செய்து ஷெ அச்சியந்திர சாலையிலேயே அச்சிடுவித்து வெளியிட்டார்கள். இப் பகுதியில் வரும் மாலையீட்டுப் படலம் நைடதம் முதலிய நூல்களில் வரும் மாலையீட்டுப் படலங்களினும் பார்க்கச் சிறந்த சுவை பொருந்தியதாம். கணேசையரவர்கள் எழுதிய உரை இச் சிறப்பை மேலும் அழகுபடுத்துவதாகும். இப் பகுதியிலிருந்தும் ஒரு செய்யுளையும் உரையையும் ஈண்டுத் தருதும்:

"பழகிப் பயிலு மடநல்லார் கூடிக் காமா கமம்பயிலும்
கழகத் தினைப்பே ராரமுதைக் காட்சித் திருவைக் கணையிரண்டை
மழவிற் பிறைக்கீழ் வைத்தன்ன மடநோக் கிந்து மதியெனுமோர்
அழகைப் புதுப்பித் தழகூட்டி யழகுகாண்பா ராயினரால்."
(மாலையீட்டுப்படலம். செய். 47)

இதன்பொருள்: பழகிப் பயிலும் மடநல்லார் கூடி -(அலங்கரிக்கும் தொழிலை நெடுநாட்செய்து) பழகிப் பயின்றுள்ள மடமையையுடைய மகளிர் (தம்முட்) கூடி, காமாகமம் பயிலும் கழகத்தினை - மதன நூலைப் பழகுதற்கேற்ற கழகத்தை, பேர் ஆர் அமுதை - பெரிய அரிய அமுதத்தை, காட்சித் திருவை - கட்புலமான திருவை, இரண்டு கணைமழவிற் பிறைக்கீழ் வைத்து அன்ன மடநோக்கு இந்துமதி என்னும் ஓர் அழகை - இரண்டு அம்புகளை இரண்டு இளமையான விற்களையுடைய பிறையின்கீழ் வைத்தாற்போன்ற மடநோக்கினையுடைய இந்துமதி என்று சொல்லப்படும் ஒப்பற்ற அழகை, புதுப்பித்து அழகு ஊட்டி அழகு காண்பாராயினர் - புதுப்பித்து அழகுபெறச் செய்து அழகு பார்ப்பாராயினர்கள்.

கூடிப் புதுப்பித்து ஊட்டி அழகு காண்பாராயினர் என முடிக்க. கழகமும், அமுதமும், திருவும், அழகும் என்னும் பெயர்கள் ஒரு பொருள்மேல் வந்தன. கழகம், அமுதம், திரு, அழகு என்பன ஆகு பெயர்கள். புதுப்பித்தல் - திருத்துதல். ஊட்டுதல்-ஏற்றுதல் எனக்கொண்டு காண்பாராயினர் என்பதற்குச் செய்வாராயினர் எனினுமாம். அழகைப் புதுப்பிக்கத் தொடங்கியது, மகளிரறியாமையே பிறிதல்ல வென்பார், "மடநல்லார்.........அழகைப் புதுப்பித்து" என்றார். இங்ஙனமே

"அமிழ்திமைத் துணைகள் கண்ணுக் கணியென இமைக்கு மாபோல்
உமிழ்சுடர்க் கலன்க ணங்கை யுருவினை மறைப்ப தோரார்
அமிழ்தினைச் சுவைசெய் தென்ன அழகினுக் கழகு செய்தார்
இமிழ்திரைப் பரவை ஞாலம் ஏழைமை யுடைத்து மாதோ."

என்றார் கம்பரும், என்பது.    (தொடரும்)

# பிள்ளை இலாப் பெருந்துயரம்

[கவிஞர் மருதூர் இளங்கண்ணன், பி. ஓ. எல்.]

[செல்துறைதோறும் சிறப்புற விளங்கும் விறல்வெங் காளைக்கு விழுத்துணை ஆகிப் பிழையற வருஉம் பெரும்பெயர்ச் செல்வமொடு அன்பும் பணமும், அறிவும் அழகும், நலனும் ஓங்கிய நல்லோள் ஆயினும் "மக்களைப் பயந்த மங்கல மடந்தை"யெனும் பெயருக்கு உரியள் ஆகாத ஒருத்தி அயல்மனைத் தோழிக்கு அகத்துயர் உரைப்பது.]

மாண்ட நலத்தொடு மாசில் யாக்கையும்
ஈண்டிய செல்வமும் எவன்செயும் எமக்கே?
யாண்டுபல வாகியும் தீஞ்சொல் மதலை
யாழுற் றிலமால் யாம்நோம் புன்மொழி
கேளும் கேளல் ஊரும் கூறும்.
நாளும் கவல்தல் மாளாது கொல்லோ?
இருஞ்சினை வேம்பில் வைகும் மணிநிறக்
கருவாய்க் காக்கைதன் செவ்வாய்ப் பார்ப்பை
இரைசெரீஇ யோம்பும்; கயமீன் குஞ்சொடு
அணிபெறத் திரிதந்து இன்னூண் தேரும்;
அணிமணி கறங்கும் அணல புனிற்றான்
கன்றுக்கு அதன்முலை அருத்திக் காக்கும்;
கதழ்ந்துவீங் கெழில்முலை கன்றுணுங் காலை
உரைப்பரும் இன்பத்து உளமிக நெகிழ்ந்து
தாய்மைப்பே ரன்பு தலைத்தலை ஓங்கிக்
கன்றுமெய்ம் முழுதும் காதலொடு நக்கும்;
மன்னியவை வாழ்கதம் மகவொடு மகிழ்ந்தே!
என்நிலை அளித்துமன் தோழீஇ!
அவைபெற்ற பேறும் யான்பெற் றிலனே.

---

# சேரன் செங்குட்டுவன்

[வித்துவான், செ. சிங்காரவேலனர், தருமபுரம்]

(செல்வி சிலம்பு ௩௩, பரல் ௭, ௩௩௩-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## காட்சி 4

[பேரியாற்றங்கரையில் மலைவளங் காண வந்துள்ளான் மாமன்னன் செங்குட்டுவன்; அம்மலைச்சாரலிலே]

செங்குட்டு : ஆகா! பேரியாற்றங்கரையின் அழகுதான் என்னே! வேண்மாள்! அதோ பார் விளையாடும் மான்கள்—அலை பாயும் நதி! விண்ணாட்டைப் பொன்னாடாக்கும் விந்தையைப் பார்! மேகங்கள் மலை உச்சியிலே முத்த மழைபொழியும் மோகனக் காட்சிதான் என்னே!

வேண் : அரசே! அற்புதமான மலைக்காட்சி! அகம் குளிர்கிறது!

செங் : தம்பி! இளங்கோ! மலைவளம் காணுதற் பொருட்டு நாம் இங்கு வந்தது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று. இவ்வளவு அழகிய மலைநாட்டுப் பகுதி நம் ஆட்சியில் இருப்பதை அறியாமல் இருப்பது பெரும் பிழையல்லவா?

இளங் : அண்ணா! பேரியாறும் நேரி மலையும் சேரர் பரம்பரையின் செழிப்பு வாய்ந்த செல்வங்களல்லவா?

செங் : சாத்தனாரே! என்ன சிந்தனை?....ஏதாகிலும் கவிக்கொரு 'யா?

சாத் : அரசே! மலை என் உணர்வைத் தட்டி எழுப்பிவிட்டது. அதோ பாருங்கள் வானிலே வில்! தங்கள் சேர பரம்பரையின் வீரச்சின்னத்தை வானம்கூட ஏற்றிருக்கிறதே! என்ன விந்தை என்றுதான் சிந்திக்கின்றேன்.

செங் : அதோ! ஒரு கூட்டம்! நம்மை நோக்கித்தான்! ஒரே ஆரவாரம்! களிப்பு!

காவலன் : அரசே! வணக்கம்! தங்களைக் காண்பதற்கு மலைநாட்டுக் குறவர்கள் எல்லாரும் தங்கள் தங்கள் காணிக்கைகளோடு திரண்டு வருகிறார்கள்.

அமை : ஆகா! மலையிலே வாழ்ந்தாலும் அவர்களுக்கு இருக்கும் நன்றி உணர்வுதான் என்னே!

[குறவர்கள் காணிக்கைகளை வைத்தல்]

தலைவன் : அரசே! நேற்றைக்குத் தங்கள் ஆட்சிக்குட்பட்ட இந்த மலைச்சாரலிலே ஓர் அற்புதம் நிகழ்ந்தது. அதோ தெரிகிறதே நெடுவேள் குன்றம்! அதன் உச்சியிலே வானத்தையளாவிய வேங்கை மரத்தின்கீழே ஒரு பெண் தெய்வத்தைப் பார்த்தோம்.

குறவன் II நாங்கள், 'பத்தினித் தெய்வமே! நீ யார்' என்று கேட்டோம்; 'மதுரையும் அரசும் வினை வலிமையால் கேடுற்றதால் கணவனை இழந்து வந்த கடுவினையேன் யான்' என்று கூறினாள் அந்தப் பெண் கடவுள்.

குறவன் III நாங்கள் எல்லாம் பார்த்துக்கொண்டிருக்கும் போதே ஒரு விமானம் வானத்திலிருந்து இறங்கியது; தேவர்கள் பூமாரிபொழிய அந்த விமானத்தில் வந்த அவள் கணவன் அந்தப் பத்தினித் தெய்வத்தை அழைத்துக் கொண்டு போன செய்தியை எங்கள் கண்ணாலே கண்டோம்! அரசே! தங்கள் ஆட்சிக்குரிய நாட்டிலே நடந்த நிகழ்ச்சி யாதலால் இதைத் திருமுன்பு தெரிவித்துக்கொண்டோம

செங் : சாத்தனாரே! வியப்பாயிருக்கிறதே இது! யார் அந்த வீரம் நிறைந்த பெண் தெய்வம்! நம் மலைநாட்டுப் பகுதி யில் நிகழ்ந்ததா இது? உடம்பு புல்லரிக்கிறதே! நினைக்கும் போதே நெஞ்சு விதிர் விதிர்க்கிறதே!

சாத் : அரசே! நான் அறிவேன் அவள் வரலாற்றை. அவள் சோழ நாட்டுக் காவிரிப்பூம்பட்டினத்திலே பிறந்த கண்ணகி. கோவலன் என்பானுக்கு வாழ்க்கைப்பட்ட வனிதை; மாதவிபால் பொருளெல்லாம் இழந்த கணவன் கோவலனோடு சிலம்போடு, மதுரைமா நகரம் வந்தாள் கண்ணகி பாண்டிய மன்னர் நெடுஞ்செழியர் வினை வலி யால் கோவலனை ஆராயாது கொல்வித்த குற்றத்தால் கண்ணகி வீரபத்தினியானாள்! முழங்கினாள், ஓலமிட்டாள்! அறத்தின் கடவுள் மதுரை மாநகர்க்குத் தண்டனை கொடுத் தது. பாண்டிய மன்னர் வளையாத செங்கோல் வளைந்த தால் கொல்வித்த பாண்டியன் நெடுஞ்செழியன் உயிர் நீத்தான். அரசுக் கட்டிலிலிருந்து வீழ்ந்து உயிர் நீத்த அவனோடு கோப்பெருந்தேவியும் உடன்வீழ்ந்து உயிர் விடுத்தாள்.

செங் : என்ன! சோகமான வரலாறு! நெஞ்சு பொறுக்காத நேர்மையின் திருக்கூத்து!

சாத் : பத்தினி ஒரு முலை திருகி எறிந்தாள். பற்றியெரிந்தது மதுரை! சினம் ஆறிய அச்சேயிழை உன்னிடம் தன் உற

துயரம் சொல்வாள்போல உன் நாடு வந்து உயர் விண்ணுடு அடைந்தாள்! இதுவே அத்தெய்வ மங்கையின் திருவார்ந்த வரலாறு!

இளங்: இனிய வரலாறு! சோழ, பாண்டிய, சேர நாட்டின் பொதுத் தன்மை பூக்கும் குடிமக்கள் வரலாறு!

செங்: அரச குடியில் பிறத்தல்தான் எவ்வளவு தொல்லை தருவது! செங்கோல் முறை பிறழாத பாண்டிய மரபில் பிழை வந்ததே என்ற பெருஞ்செய்தி பிற மன்னர் காதுகளில் எட்டாத அளவில் உயிர் நீத்தனர் பாண்டிய மன்னர்! இதுவல்லவோ அரசு! இவரல்லவோ மன்னர்! வேண்மாள்!

வேண்: அரசே!

செங்: தன் கணவன் இறந்ததும் தானும் உடன் பாண்டிமாதேவி; ஆற்ருக் கற்பின் அனலால் மதுரைமா நகரத்தை எரித்து அறத்தை நிலை நிறுத்திய ஆரணங்கு கண்ணகி: இவ்விருவரில் யார் சிறந்தவர் என்று நீ எண்ணுகிருய்?

வேண்: அரசே! சிக்கலான வினு இது. எப்படிச் சொல்வேன், இப்பத்தினித் தெய்வங்களின கற்பு மேம்பாட்டை! கண்ணகி சீறிய கற்புடைய தெய்வம். பாண்டிமாதேவி ஆறிய கற்புடைய அரிவை. பாண்டிமா தேவி வானுலகில் எல்லாப் பெருமையையும பெறுதற்குரியள்; ஆயினும் நம் நாடு நோக்கிவந்த கண்ணகித் தெய்வத்தை போற்றிப் பேணுதல் நம் கடமையாகும்.

செங்: நல்லது; அன்பே!

அமை: அரசே! இமயத்தில் கல்லெடுத்துக் கங்கையில் நீராட்டுதலும், பொதியத்திற் கல்லெடுத்துக் காவிரியில் நீராட்டுதலும் பண்டையோர் கண்ட பேருண்மைகளாகும்.

செங்: இமயத்திலே கல்லெடுத்துக் கங்கையிலே நீர்ப்படை செய்தலே எம்போன்ற வீர மரபினர்க்கு ஏற்றதாகும். இமயத்துக் காவலர் கல் கொடுக்க மறுத்தால் வில்லெடுப்பேன் நான்! சொல்லெடுக்க வொண்ணுத பெரும் வீரம் சான்ற என் தோள்கள்—போர் எங்கே போர் எங்கே எனப் பூரித்திருக்கும் என் தோள்கள்—புல்லார் படைமேல் புரளும்! கூற்றுவனையும் அஞ்சாத தமிழ்ப்படை வடவர் குடர் சூடும்! முடிவில் வாகை சூடியே வஞ்சி திரும்பும்! இஃது உறுதி!

வில்லவன் கோதை: சேர வேந்தே! தாங்கள் சினந்தால் உலகமே திரண்டாலும் எதிர் நிற்க இயலாது! சினந் தணி வீர்களாக! வடநாடு செல்லத் தாங்கள் எண்ணுவது இமயத் துக் கல்லுக்கே யல்லவா? நமது வீரத்திற் குறைபுடைய வடநாட்டுச் சிற்றரசர்களுக்கு நமது இலாஞ்சனையாகிய வில் கயல் புலி பொறித்த ஓலையை விடுக்க உத்தரவிட்டருள வேண்டுகிறேன் வேந்தே!

அமைச்: வஞ்சிமா நகரத்தில் இல்லாத அயல் நாட்டு ஒற்றர்கள் இல்லை. நமது முரசு தலைநகரில் முழங்குதல் மட்டுமே போதும் கொற்றவா! ஒற்றர் துறை உலகறியச் செய்துவிடும்!

செங்: வில்லவன் கோதையும், அமைச்சரும் சொல்லுவது சரியே! முழங்கட்டும் பறை! கண்ணகித் தெய்வத்துக்குக் கற்கோயில் கட்ட வில்லுடைய சேரன் விரும்பினான்' என்று முழங்கட்டும் முரசு! 'கல் தருதற்கு இமயம் வணங்கவேண்டும்' என்று ஒலிக்கட்டும் முரசு! அந்த முழக்கம் வடநாட்டு வேந்தர்களின் செவிகளிலே புயலாக வீசட்டும்! நடுங்கட்டும் அந்தக் கோழை நரிகள்!

சாத்: அடிகளே! இந்த பத்தினித் தெய்வத்தின் காதையைத் தமிழில் இனிய காப்பியமாகத் தருதற்குத் தாங்களே ஏற்றவர்கள். முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரிய பொது நிகழ்ச்சிகள் பொருந்திய இக்கதையை, காலம், நாடு, மொழிகளுக்கு அப்பாற்பட்ட துறவியாகிய தாஙகளே இயற்றத் தக்கவர்கள்! செங்குட்டுவப் பேரரசர் கற்கோவில் கட்டினார் கண்ணகித் தெய்வத்திற்கு; அவர் தம்பி இளங்கோவடிகள் சொற்கோவில் கட்டினார் என்று வையகம் வாழ்த்தும் என்பது என் எண்ணம்!

இளங்: நண்பரே! தங்கள் எண்ணம் செயலாகப் பத் தெய்வம் அருள்பொழியுமாக!

எல்லோ: சேரர் செங்குட்டுவர்! வாழ்க! வாழ்க!

சாத்: கவி மன்னர் இளங்கோ அடிகள்!

எல்லோ: வாழ்க! வாழ்க!

## காட்சி 5

[வஞ்சிமாநகரத் தெருவில் முரசு முழங்குதல்.]

குரல்: மன்னாதி மன்னர், இமயமலையில் விற்பொறித்த சேர மண்டல சக்கரவர்த்திகள், இராஜாதி ராஜ, ராஜமார்த்

தாண்ட, ராஜ கம்பீர, சோழ பாண்டிய நாடுகளை வெற்றி கொண்ட மாவீரர், செங்குட்டுவ மகாராஜர் திருவாய்க் கேள்வி திருமந்திரவோலை திருச்சிற்றம்பல முடையார் கைச்சிட்டு; இதனால் எல்லா மக்களுக்கும் தெரிவிப்பது என்னவென்றால் வருகிற ஞாயிற்றுக்கிழமை வடநாடு நோக்கிப் படை எடுக்கப்போகிறது சேரர் படை; வீரர்கள் எல்லோரும் நாட்டின் மானம் காக்கப் புறப்படும் முன்னணிப் படையில் வந்து சேரும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்!

## காட்சி 6

[வஞ்சிமாநகர் அரசமாளிகையின் அந்தப்புரத்தில்.]

செங் : வேண்மாள்! வடநாடு நோக்கிப் படை எடுத்து வாகை சூட முற்படும் நேரம் நெருங்கிவிட்டது அன்பே!

வேண் : அரசே! தமிழர்களை இழிவுபடுத்திப் பேசிய அத் தறிதலைகளை வெட்டிச் சாய்க்கவேண்டுவது தங்கள் கடமை என்பதை நான் நன்றாக உணர்கிறேன்.

செங் : ஆகா! சேர மன்னன் செங்குட்டுவனுக்கேற்ற சிறந்த வீர பத்தினி யல்லவோ நீ!

வேண் : தங்கள் பெருமைக் கேற்றவள் என்ற நற்பாராட்டைப் பெற்றவளே நான். ஆனால்........

செங் : ஆனால், என்ன அன்பே?

வேண் : தங்களைப் பிரிந்து நான் எப்படி உயிர் வாழ்வது? மலரை மணமும், வீணையை இசையும் பிரிவதா?

செங் : கண்ணே! என்ன செய்வது! காதல் துயரம் நான் அறியாத தொன்றல்ல. இருப்பினும் கண்ணகித் தாய்க்குக் கல்லெடுக்கவேண்டும். கனகவிசயர் படைக்கு வில் எடுக்க வேண்டும் என்ற இருபெருங் குறிக்கோள் தடுக்கிறது என்னை! தடை சொல்லாதே அன்பே!

வேண் : இந்நாட்டின் அரசி என்ற நினைப்பில் போய் வருக என்று விடை தருகிறேன். தங்கள் காதலி என்ற நினைப்பில்தான் தயங்குகிறேன் அரசே!

செங் : அதோ வஞ்சி நகரின் கோட்டை வாசலில் அணி வகுத்து நிற்கும் படைகளைப் பார்! காத்திருப்பது எனக்குத் தான்! வரட்டுமா! வாகை சூடி வருகிறேன். இம்........

வேண் : (தயங்கிப்பின் துணிந்து) சென்று வாருங்கள் வேந்தே! வெற்றி நமதே.

[வீரத் திலகமிட்டு வழியனுப்புதல்—சேனைத் தலைவர் வருதல்.]

தள : அரசே! நாற் படைகளும் புறப்பட்டுவிட்டன. தங்கள் வருகையைத் தார்ப்படை நோக்கி நிற்கிறது.

செங் : தளபதி, செல்லலாம்!

[செல்ல முற்படும்போது திருமால் பிரசாதம் கொண்டு பட்டாச்சாரியர் வருதல்.]

பட்டா : ஆடக மாடத்து அறிதுயில் கொண்டருளும் திருமால் பிரசாதம் கொணர்ந்திருக்கிறேன். இந்தாருங்கள் (கொடுத்து) நிறைந்த வெற்றியோடு வாகைசூடித் திரும்ப ஸ்ரீமத் பரந்தாமன் அருள் பாலிப்பானாக!

செங் : வணங்குகிறேன் ஆச்சாரியாரே! தங்கள் வாழ்த்துப் படியே யாகட்டும்!

[தலைமேல் சிவபிரான் திருவடிகளைத் தாங்கியவனாதலின் பிரசாதங்களைத் தோள்மேல் வைத்துக்கொண்டு புறப்படுதல்.]

## காட்சி 7

[வடநாட்டில் சேரன் அவை வெற்றிக்களிப்புடன் முழக்க மிடும் முத்தமிழ் முழக்கம்]

செங் : எங்கே அந்த நரிகள்? இழுத்து வாருங்கள் இப்படி?

[கனகவிசயரையும் பிறரையும் சங்கிலியால் கட்டி இழுத்து வருகிறார்கள், தமிழ் வீரர்கள்]

செங் : 'எதனைக் காவாவிட்டாலும் நாவைக் காக்கவேண்டும்'— என்பது எங்கள் திருவள்ளுவர் சொல்லிக்கொடுத்த விதி. நாவைக் காவாமல் ஏதோ உளறி வைத்த காரணத்தால், கோழைகளே! உங்களுக்கு நேர்ந்த நிலையைப் பாருங்கள்! நன்றாகப் பாருங்கள்!

[சிரித்தல்.]

எங்கே உங்கள் வீரம்? (சிரிப்பு) எங்கே உங்கள் செருக்கு? (சிரிப்பு) எங்கே உங்கள் ஆணவம்? (சிரிப்பு) 'அந்நாளில் தமிழ் மன்னர்கள் வடநாட்டிற்கு வந்தபோது எம்மைப்போன்ற முடிமன்னர்கள் இல்லை' என்று பேசினீர்களாமே! எங்கே யந்த வீறாப்பு? பாவம்; தொடை

நடுங்கும் சோம்பேறிக்குத் தெரியுமா, தொடுக்கும் அம்பின் பெருமை! பேடிக்குத் தெரியுமா பெரு வீரன் வாளின் ஆற்றல்! வாளாண்மையற்ற பேடிகளே! தமிழர்களை இகழ்ந்தீர்கள்! தமிழ்க் கலாசாரத்தை இகழ்ந்தீர்கள்! தமிழ் இனத்தை இகழ்ந்தீர்கள்! என்னுயிர்த தமிழ்த் திருநாட்டை இகழ்ந்தீர்கள்! தமிழர் மானத்தை - வீரத்தை இகழ்ந்தீர்கள்! எவ்வளவு பயங்கரமான செயல்! அதன் பரிசுதான் கங்கைக் கரையிலே தமிழர் கைகளால் கசக்கிப் பிழியப்பட்டீர்கள்! இனியேனும் தமிழரை இகழாதீர்! தமிழர்கள் மலரினும் மெல்லியவர்கள்! சினந்துவிட்டால் மலையினும் வலியவர்கள்! எதிர்த்து வந்து அலைமோதும் காட்டாற்றினும் கடுமையானவர்கள்!

[சிரிப்பு.]

வில்லவன் கோதை: (முன்வந்து) கனகன்! விசயன்! போர்ச் செல்வம் இல்லாத புல்லனுக்குப் பெயர் கனகன்! வெற்றி என்ற சொல்லின் பொருள் தெரியாத வீரனுக்குப் பெயர் விசயன்! கோழைகளே! தமிழ்ப் படைகளின் ஆற்றலை இப்போதாவது உணர்ந்தீர்களா? அதோ பெருகெடுத் தோடுகிறதே இரத்த வெள்ளம்! அதைக் கேளுங்கள் தமிழர் ஆற்றலை! கூறும்! அதோ ஆரிய மன்னர் உடலங்களை அருந்திப் பறக்கிறதே பருந்து! அதைக் கேளுங்கள் தமிழர் ஆற்றலை! கூறும்! (சிரிப்பு) அரசே! இவர்களைத் துண்டு துண்டாக வெட்டி எறிய வேண்டும்

ஒரு வீரன்: வஞ்சிமா நகரத்தின் கோட்டை வாசலில் பார்வைப் பொருளாக வைக்கவேண்டும் இவர்கள் தலைகளை!

வில்லவன் கோதை: கழுகும் பருந்தும் கொத்தித் தின்னும் அந்தக் கோரக் காட்சியைக் கண்டு களிக்கவேண்டும் தமிழர் கண்கள்! தமிழரை இகழ்வோர் தலைவிதி இப்படித்தான் என்று உணரவேண்டும் இந்த உலகம்!....உத்தரவு இடுங்கள் அரசே! இதோ ஒருநொடி! (வாளை உருவுதல்)

செங்: வேண்டாம், வில்லவன் கோதை, வேண்டாம்! இவ்வளவு விரைவில் கொடுத்துவிடக் கூடாது இவர்களுக்கு! கண்ணகித் தெய்வத்துக்கு எடுக்கும் கல்லை முன் கூறியபடி இவர்கள் தலையிலேற்றிக்கொண்டு தமிழ்நாடு திரும்புவோம்! படை புறப்படட்டும்—பனி மாலிமயம் நோக்கி!

[முரசு முழங்குதல்.]

## காட்சி 8

[இமயமலையின் அடிவாரத்தில் தமிழ்ப் படைகளோடு சேரன் செங்குட்டுவன்.]

செங் : இந்தியத் துணைக் கண்டத்தின் எழிலார்ந்த எல்லைக் கோடாய் நிற்கும் இமயப் பெருமலையே! வேற்றவர் வரவு தடுத்து எமக்கு அரணாக நிற்கும் மலை அரசே! வணங்கா முடி படைத்த வான்மலையே! உன் திருவடி வணங்குகிறோம்; உன் திருமுடியில் எங்கள் வில்லும் கயலும் புலியும் வெற்றி மலராகச் சூடியும் பாடியும் வந்தது போதாதென்று உன் அரவணைப்பிலே பத்தினித் தெய்வத்துக்குப் படிமஞ் சமைக்கவும் துணிந்தோம்; எம்மை வாழ்த்தியருள வேண்டும்; வடகோடியில் தந்தையாகிய நீயும், தென் கோடியில் தாய் குமரியன்னையும் காப்பதாலன்றோ தமிழர் பண்பு வாழ்கிறது! தமிழகம் வாழ்க! பத்தினித்தெய்வம் வாழ்க!

[வணங்கிக் கற்களைக் கனகவிசயர் தலைமேல் ஏற்றுகிறான்]

## காட்சி 9

[வஞ்சியில் கண்ணகி புதுக் கோவில்; வழிபாடு நடந்தபின்]

இளங் : பேரரசே! பெருமக்களே! கடல்சூழ் இலங்கைக் கயவாகு மன்னரே! சோழ பாண்டிய வேந்தர்களே! புகாரிலே தோன்றி, மதுரையிலே அறம் காட்டி, வஞ்சி நாட்டிலே வானவர் நாடடைந்த பத்தினிக் கடவுள் கண்ணகித் தெய்வத்துக்கு இமயத்திற் கல்லெடுத்துக் கங்கையிலே நீர்ப்படை செய்து தமிழரை இகழ்ந்த கனக விசயர் தலை மேல் ஏற்றி வந்திருக்கிறது சேரன் செங்குட்டுவரின் வீரம்! அவ்வீரம் வாழ்க! கண்ணகி வழிபாடு நாடெல்லாம் ஓங்குக! வாழ்க அருள் வளம்! வாழ்க தமிழ் நாடு! வளர்க தமிழர்வீரம்!

செங் : கனக விசயரே! உங்களுக்கு இனி விடுதலை! பிழைத்து ஓடுங்கள்! புறமுதுகிட்டவனைக் கொல்லுதல் எங்கள தமிழ்த் திருநாட்டின் போர் விதிக்குப் புறமாகும்! தப்பிப் பிழைத்து ஓடுங்கள் உங்கள் தாய்நாட்டிற்கு! இனியேனும் வாயடக்கம் கொள்வீராக! தமிழர் பத்தினித் தெய்வமே! தமிழ்நாடு செழிக்கவும், தமிழினிமை வாழவும், தமிழ் மொழி தழைக்கவும் நின் நல்லருள்வரம் வேண்டும் அன்னையே!

[மன்னரும், பிறரும் பத்தினித் தெய்வத்தை வணங்குகிறார்கள்.]

---

# நாகரிகம்

[வித்துவான் திரு. ச. சவரிமுத்து சென்னை.]

*முன்னுரை :*

மக்கள் தம் கருத்தைத் தெரிவிக்கப் பயன்படும் கருவி மொழியாகும். கருத்துக்களை ஒருவர் மற்றொருவரிடமிருந்து பெறுவதைப்போலவே, ஒரு மொழியின் சொற்களை மற்றொரு மொழியாளர் கைக் கொள்ளலும் உண்டு. இஃது எல்லா மொழிக்கும் இயல்பு இது மொழிநூல் கண்ட உண்மையும் ஆகும் இவ் வுண்மைக்குத் தமிழ் மொழியும், வடமொழியும் கட்டுப் பட்டனவே. தமிழ்ச் சொற்கள் வடமொழியில் பல உள. அவ்வாறே வடசொற்களும தமிழ் மொழியில் பல கலந்துள்ளன. "தமிழ்ச் சொல் வடபாடைக்கண் செல்லாது, வடசொல் எல்லாத் தேயத்திற்கும் பொது" என்ற கொள்கை மொழிநூல் ஆய்வற்ற காலத்தியக் கொள்கை*. இது இன்று மறைந்தது. இவ் வுண்மைகளை அறியாத சிலர் இன்னும் தமிழ் வடமொழியின் குழந்தை என்ற கொள்கையினராய், தூய தமிழ்ச் சொற்கள் என வெள்ளிடை மலையாய் இலங்கும் பலவற்றை வலிந்து வட சொல் என நிறுவக் கருதுகின்றனர். இவ்வாறான நிலையில் எனக்கும் என் நண்பர் ஒருவருக்கும் சிறந்த ஆராய்வினைத் தந்த ஒரு சொல் 'நாகரிகம்' என்பதாகும். "இது தமிழ்ச் சொல்லா? வட சொல்லா ?"—இவ் வினவுக்கு விடையைக் காண்பாம்.

*நிலப்பாகுபாடு*

நிலத்தோற்ற முறையினைக் கருதி நிலத்தைப் பாகுபாடு செய்த பெருமை தமிழ் மகனைத்தான சாரும். நீரிலிருந்து நிலம் நிவந்து தோன்றியபோது முதலில் தோன்றியது மலை, பின்னர்த் தோன்றியது காடு, அதன் பிறகு தோன்றியது வயல்; பின்னர் நீர் ஒரு நிலைப்பட்டு கடலாக அமைய அருகே நின்றது கடற் கரையைச் சார்நத இடம். இவைகட்கு முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனப் பெயரிட்டான் தமிழன்.† வேனிற் காலத்தில் ஏனைய இரண்டு நிலங்களைக் காட்டிலும் நீர் வளம் குறைந்த குறிஞ்சியும், முல்லையும் வெப்பம் உழந்து, தன் இயல்பு கெட்டு நிற்றலான் அந் நிலத் தன்மையைப் பாலை எனறுன.‡

* தொல். சொல். 401. சேனாவரையர் உரை.

† தொல். பொருள். நூற். 5.

‡ தொல். பொருள். நூற். 11.

மருத நிலத்தே!

முதன் முதலில் மக்கள் தோன்றிய இடம் குறிஞ்சியாகும். பின்னர் மனிதன் முல்லையில் படர்ந்தான். அதன் பின்னர் மருதத்தண் பணைகளைக் கண்டான். தன் நாகரிகத்தை வளர்த்தான்; ஆற்றங்கரைகளிலே ஊர்களை அமைத்தான் பல ஊர்கள் தோன்றின; பேரூர்கள் பல உண்டாயின; நகரங்கள் பல தோற்றமெடுத்தன. மலைகளிலும், காடுகளிலும் விலங்குகளைப் போல வாழ்ந்த மனிதன் ஆற்றங்கரைகளிலே குடியேறிப் பச்சென விளங்கும் வயல்களைப் பண்படுத்தியதால் தன் நிலையினையும் பண்படுத்திக் கொண்டான். அவன் பண்பாடு உறும்படி செய்த தொழில்—அவன் முதன் முதல் கற்றுக்கொண்ட தொழில்—உழவுத் தொழிலே யாகும். இவ்வாறே மனிதன் பண்பாடு பெற்றான் ஆதலின் நாகரிகத் தோற்றம் ஆற்றங்கரைகளிலே (அ) மருத நிலத்திலேதான் என்பது உண்மை, வரலாறு கண்ட பேருண்மை ஆகும்.

திராவிடரே!

உலகில் முதன் முதலில் மக்கள் தோன்றிய இடம் லெமூரியாக் கண்டம். நெருப்புக் கோளமாக இருந்த உலகில், நிலநடுக் கோட்டை அடுத்துள்ள இடங்களே முதலில் குளிர்ந்து மக்கள் வாழ ஏற்ற நிலையை அடைந்தன. அவ்வாறாயின ஒரு காலத்தில் நிலமாக இருந்து இபபோது இந்துமாக் கடலுள் ஆழ்ந்துள்ள குமரிக் கண்டமே மனிதன் முதலில் தோன்றிய இடமாகும். கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே அக் கண்டத்தில் முன் தோன்றிய மூத்தக்குடி தமிழ்க் குடியாகும். இவர்களே உலகின் பல பகுதிகளிலும் சென்று நாகரிகத்தை உண்டாக்கினர். பஃறுளி ஆற்றஙகரை நாகரிகமே முதல் நாகரிகமாகும். பின்னர் கடல் கோளால் அது அழிய வடக்கு நோக்கிக் குடியேறினர். குமரி ஆற்றங்கரை நாகரிகமும், காவிரி ஆற்றங்கரை நாகரிகமும் தோன்றலாயின. குமரிக் கண்டத்தை முழுதும் கடல் விழுங்க இமயமலையும வடநாடும் எகிப்தும் கடலிலிருந்து நிவந்து தோன்றின. இம் மக்கள் பின்னர் இந்தியா முழுதும் குடியேறினர். இவர்களே சிந்து சமவெளியிலுள்ள "மொஹஞ்சதரோ, ஹரப்பா" நாகரிகத்தைத் தோற்றுவித்தனர். அவர்களே சிந்து சமவெளி நாகரிகத்தை ஆரியரிடம் ஒப்புவித்தனர். "இத் திராவிடப் பெருங்குடி மக்களே ஆப்கானிஸ்தானம்,

---

"முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து
நல்லியல் பிழந்து நடுங்கு துயருறுத்துப்
பாலை என்பதோர் படிவங் கொள்ளும்"

(—சிலம்பு. மதுரை - காடுகாண்காதை 64-66)

பெர்சியா முதலிய நாடுகளில் குடியேறினர். இவர்கள் சிறந்த நாகரிகங் கொண்டவர்கள், நியாய முறையில் எழுதலைக் கண்டவர்கள்; கோளியக்கங்களைக் கணித்தவர்கள்; உண்மையை விரும்பும தன்மையர்; தத்துவக் கருத்துக்களை வளர்த்தவர்கள்.* இவர்களே மெசபொட்டாமியாவிற்குக் (Mesopotamia) குடியேறினர். அங்கே தங்கினர். யூஃப்ரிட்டஸ், டைகிரிஸ் என்ற ஆற்றங்கரைகளில் வளர்ந்த சுமேரிய (Sumeru - Let us halt) நாகரிகத்தைத் தோற்றுவித்தனர். அங்கிருந்து சிரியா, மத்திய தரைக் கடற்கரை ஓரம் குடியேறினர். பின்னர் அவர்கள் எகிப்தில் நைல்நதிக் கரையில் தங்கினர். அங்கேதான் நைல் நதிக் கரை நாகரிகத்தை-எகிப்திய நாகரிகத்தைத் தோற்றுவித்தனர்.† இவ்வாறே திராவிட மக்கள் உலகு எங்கணும் சென்று நாகரிகத்தை வளர்த்தனர். எனவே நாகரிகத்தை உலகத்தில் வித்தியோர் அதற்கொரு சொல்லின்றி அமைந்திருப்பர், பின்னர் வந்தவர்களிடம் கடன் பெற்றிருப்பர் என்பது நகையையே உண்டாக்குகின்றது.‡

ஆதலின் மருத நிலங்களின் பண்பினை வளர்த்த, நாகரிகத்தைத் தோற்றுவித்த திராவிட மொழிகளிலேதான் அச்சொல்லைத் தேடவேண்டும். திராவிட மொழிகளை உள்ளவாறு அறிவிக்கும் மொழி தமிழே.§ சிந்துவெளி நாகரிக திராவிட

* The civilization discovered in the Indus-Valley in 1922-23 was not a reverine civilization of North-Western India only. The people who inhabited the cites which we now name Mohenjo-Daro, Harappa, Chanhu-Daro and others, were the same people who populated the whole of India and Ceylon, plus Afganistan and Persia. It was a nation of very high civilization, the inventors of a very logical system of writing, observers of the movements of the stars, seekers after truth and fosterers on ascetical ideas"

—"India and Ireland"—article by Rev. F. H. Heras. St.

† "St Isidore of seville in his 'Etymologies' avers that the people of the Indus Valley settled in the Valley of the Nile, whence they spread throughout Northern Africa, thus becoming the Libyans, Numidians, Bereberians."

Rev. F. H. Heras' article "India and Ireland"—note 4.

‡ 'நீர்' என்பது ஆரியச் சிதைவென்பதும் (தொல். சொல். 398. சேனா. உரை) 'மீன்' ஆரியச் சொல் (தமிழின் மறுமலர்ச்சி. பக். 71. அடிக குறிப்பு) என்பதும் நகையை ஊட்டுகின்றன. அவர்கள் வரும் வரை நீர்க்குப் பெயரின்றி, மீனக் கொடியை உடையவர்கள் மீனுக்குச சொல்லின்றி இருந்தனர் தமிழர் என்பது உள்ளத்தை வருத்துகின்றது.

§ Dr. Caldwell's "A Comparative Grammar of Dravidian Languages" p. 77 (Third Edition Reprint.)

மக்கள் பேசிய மொழியில் தமிழ்ச் சொற்கள் பல உள்ளன.* எனவே நாகரிகம் தமிழ்ச் சொல்லாதல் வேண்டும் என்பதில் ஐயம் இருத்தற்கிடமில்லை. ஆதலின் நாகரிகம் என்ற சொல் எவ்வாறு உருவாயிற்று என்று காண்போம்.

**நகர்† அகம்:**

நாகரிகம் என்ற சொல் 'நகர் + அகம்' என்ற இருசொற்களின் சேர்க்கையால் தோன்றிய சொல் ஆகும்.

**ஊர்:**

முன்பு கூறியபடி நாகரிகம் மருதநிலத்திலே தோன்றியது என்பது விளக்கமுறுகிறது மருதநிலம் நீர்வளம் நிலவளம் மிக்கது. உழவுக்கு ஏற்ற நிலம் அதுவாகையால் மனிதன் உணவுப் பொருட்களை உண்டாக்கப் பயிரிட்டான். ஆறுகள் அவனுக்குத் துணை செய்தன. மக்கள் ஆற்றங்கரைகளிலேயே வீடுகளை அமைத்துக் கொண்டனர். மக்கள் தனித்து வாழும் இயல்பினர் அல்லர் ஆதலின் கூட்டமாக வாழ வீடுகளை அமைத்தனர். இவ்வாறு மக்களின் வாழிடங்கள் அகல ஆரம்பித்தன. நிலத்திலே நீண்டித் நீண்டிச் செல்லுதல், "ஊர்தல்" எனப்படும். அதன் முதலில் நிற்கும் வழியடிச் சொல்லே பெயராக நிற்க, அவ்விடங்கட்கு "ஊர்" என்ற பெயர் உண்டாயிற்று.† இவ்வாறான ஊர்கள் பல ஏற்பட்டன. சிறிதாக நின்றவை 'சிற்றூர்' என்றும், பெரியதாக நின்றவை 'பேரூர்' என்றும், பழையதாக நின்றவை 'மூதூர்' என்றும் பெயர் பெறலாயின. மருதநிலக் கருப் பொருளில்,

"பெருகிய சிறப்பின் பேரூர் மூதூர்.' (நம்பி அக: 23)

எனக் குறிக்கப்படலும் காண்க.

"மூதூர் வாயிற் பனிக்கய மண்ணி." —புறம். 79

"பூவிரி புதுநீர்க் காவிரி புரக்கும்
தண்புனற் படப்பை யெம்மூா." —புறம். 116

---

* Being Dravidians the inhabitants of Mohenjo-Daro in Northern India, naturally spoke a Dravidian Language in which the largest population of the words used are found in Tamil. This confirms the common belief that Tamil is the oldest of the present languages."

—By Rev. F. H. Heras. (Director, Indian Historical Research Institute, Bombay)

† மருதநிலத் தலைவன் 'ஊரன்' எனப்படுதலையும் காண்க.

“ குருகு கொளக் குளித்த கெண்டை அயல
தருகெழு தாமரை வான்முகை வெரூஉம்
கழனியம் படப்பைக் காஞ்சி யூர.” —குறுந். 127

என இலக்கியங்களில் மருதநிலச் சிறப்போடும் வருதலைக் காண்க.*

**நகர் - நகரம்:**

இம் மருதநில ஊர்களே செல்வத்தில் சிறக்க, பண்பில் மிளிர்ந்து பரக்க, விரிய “நகர்தல்” என்ற பொருளில் ‘நகர்’ என்று பெயர் பெற்றன. ‘நகர்’ என்ற சொல் ‘அஃகு’ என்ற முதலடியிலிருந்து பிறந்ததாகும்.

அஃகு > அகு > நகு > நகர்

‘அஃகு’ என்பதற்குச் ‘சுருங்குதல்’ என்ற பொருள் உண்டு. ‘நுண்ணிதால்’ என்ற பொருளும் உண்டு.

“ அஃகாமை செல்வத்திற் கியாதெனின்.” —குறள். 178.

“ அஃகி யகன்ற அறிவென்னும்.” —குறள். 175.

என்ற குறட்பாக்களில் அப்பொருட்கள் படவருதல் காண்க. இம்முதலடிச் சொல்லிலிருந்து ஆய்தம்கெட, முதலில் நகரமெய் நிற்க, ‘நகு’ என்றாய், ‘அண்மைக் கோடல்,’ என்ற பொருளையும், அவ்வாறே படிப்படியாய் அகலுதல், விரிதல் என்ற பொருளையும் உணர்த்துகின்றது.

நகு - அண்மைக் கோடல்
நகைவர் - நண்பர் - அண்மையில் உள்ளோர்.
நகு - விரிதல், மலர்தல்.
நகுதல் - முகம் விரிதல், மலர்தல்.

எனவே இம்முறையானே நிலத்தைத் தீண்டித் தீண்டி ஊர்ந்து போதல்-படர்ந்துபோதல்-விரிதல் “நகர்தல்” ஆயிற்று.

இவ்வாறு நகர்ந்து செல்வன இச் சொல்லடிகளானே பெயரீடும் பெற்றன.

நாகம் - (ஊர்ந்து செல்வது) - பாம்பு.
நகுலம் - (ஊர்ந்து செல்வது) - கீரி.
நக்கலம் - (ஊர்ந்து செல்வது) - முதலை.

* “ ஆறில்லா ஊர்க்கு அழகுபாழ்” என்ற ஔவை வாக்கு ஈண்டு நினைவிற் கோடல் ஏற்புடைத்து.

'நண்டு, நந்து' முதலிய சொற்கள் எல்லாம் இம்முறையி லேயே பெயர் பெற்றன. அவ்வாறே பரந்துவரிந்த ஊரும் 'நகர்' ஆயிற்று.*

† 'நகர்' என்ற சொல்லின் பொருள் வளம்:

காலஞ் செல்ல செல்ல மக்களின் கருத்துக்களும் விரிந் தன. நாகரிகப் பண்பாடுகள் முகிழ்த்தன. 'நகர்' என்ற சொல் வீட்டையும் குறித்தது.

"பாழியன்ன கடியுடை வியநகர்." —அகம். 15.

"விளங்குநகர் அடங்கிய கற்பின்." —குறுந். 338.

வீட்டினை உணர்த்திய 'நகர்' என்ற சொல் வீட்டிற்கு உரியவளான மனையாளையும் குறித்தது.

"வருவிருந் தோம்பித் தன்னகர் விழையக் கூடி." —கலித். 8.

மக்கள் இறைவனுக்கு அமைத்த கோவிலையும் நகர் என்று அழைத்தனர்.

"பணிய ரத்தைநின் சென்னி சிறந்த
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே." —புறம். 6.

மக்களின் கருத்து மேலும் வளர்ந்தது. மக்கள் அரசனையும் இறைவனாகக் கருதினர்; 'கோ' என்று அழைத்தனர் (இறைவன்-அரசன்....) அவனது இல்லினையும் 'நகர்' என்று அழைததனர்.

"முரசு கெழு செல்வர் நகர்போலாதே." —புறம் 127

பொதுவகைச் சடங்குகள் செய்யும் மண்டபங்களையும் மக்கள் நகர் என்றழைத்தனர்.

"தூநகர் இழைத்து." (சீவக. 2633)

"அணிநகர் முன்னினனே." (சீவக. 701)

நகர் - நகரம் - நகரகம்

'நகர்' என்ற சொல் 'அம்' விகுதிபெற்று 'நகரம்' என்று யிற்று; 'தமிழ்' என்ற சொல் 'அம்' விகுதி பெற்றுத் 'தமிழம்' என்றாயதைப் போல, 'நகரம்' என்றதும் ஊர் என்ற பொரு ளையே தந்தது, இன்னும் தருகின்றது. 'நகர் + அகம்' என்ற சொற்கள் 'நகரகம்' எனச் சேர்ந்தன; 'தமிழ் + அகம்' என்ற சொற்கள் 'தமிழகம்' என நின்றதைப்போல. எனவே நகரத்தை

* "Studies in Tamil Etymology" p. 49, 50. Rev. F. Gnanapragasar.

† நகர் - மருதநிலத்தூர் - சதுரகராதி - P. 124.

மக்கள், 'நகரம்' என்றும், 'நகரகம்' என்றும் வழங்கினர், 'நாம்' 'அறை' என்றும் 'அறையகம்' என்றும் வழங்குவதைப் போல, கருத்து வளம் மிக்க பின்னர் 'நகரகம்' என்ற சொல் நகரத்தின் உள்ளிடத்தைக் குறித்தது. பின்னர் அது ஊரிலுள்ள மக்களையும் குறிக்கப் புகுந்தது, 'நகரகத்தா' என.

எனவே இவ்விரண்டு சொற்களே 'ந' என்ற முதல் நீண்டு, அகரம் இகரமாகத் திரிந்து "நாகரிகம்" என்று மக்களின் பண்பொழுக்கத்தினை-செம்மைப் பாட்டை விளக்க நின்றது. 'படு' என்றசொல 'பாடு' என்றுயதைப் போல முதல் நீண்டது. 'நகர+காவலர்' 'நகரிகாவலர்' என்றுயதைப் போல அகரம் இகரமாகத் திரிந்தது. எனவே 'நாகரிகம்' என்ற சொல் பிறந்தது.

'நாகரிகம்' என்ற சொல்லின் கருத்து வளம்:

முதலில் இந்த சொல் நகரமக்களின் ஒழுக்கத்தினைக் குறித்தது. பின்னர் ஒழுக்க மேம்பாடுறவினுல் ஏற்படும் செப்பத்தினைக் குறித்தது.

"நனி நாகரிகத் தம்மென் சாயலரிவை
மகளிர்."　　　　—(பெருங். உஞ்சை. 41 - 83)

இவ்வாறே மக்களின் ஒழுக்க மேம்பாட்டால் உண்டாகும் உள்ளச் செம்மையின் வெளித்தோற்றமான மரியாதைக்கும் உரியதாயிற்று.

"நாகரிக மாமைந்தனை."　　　　(சீவக. தாருக. 9.)

மேலும் மக்களின் உள்ளம் விரிந்தது. உள்ளத்தில் அன்பு முகிழ்த்தது; எண்ணத்தில், செயலில் கலந்தது; செயலில் வெளிப்பட்டது. அத்தகைய நல்லோர் பிறர்மாட்டு (இரக்கம்) கண்ணோட்டம் (Friendly regard) கோடலைக் குறித்தது.

"பெயக் கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்."　　　　—குறள். 580.

இத்தகைய கண்ணோட்டம் கொண்டோரே நாகரிகர் எனப்பட்டனர்.

"நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்."　　　　—நற். 355.

எனவே, மேற் கூறியவற்றால் "நாகரிகம்" என்ற சொல் நாகரிக மேம்பாட்டினை முதலில் அடைந்த தமிழ்மக்களின் கருத்துவிரிவால் வெளிப்பட்ட சொல் என்பது வெள்ளிடைமலை என விளங்குதல் அறிக.

நகர் > நகரகம் > நாகரிகம்.

பிறமொழிச்சொல்

'நாகரிகம்' என்பது வடசொல்லாயின் அது வடமொழிச் சார்பான இந்து-ஐரோப்பிய மொழிகளில் இருத்தல் வேண்டும். ஏனெனில் ஆரியமும் அம்மொழிக் குடும்பத்தைச் சேர்ந்ததனால் என்க. ஆனால் அவ்வாறு காணப்படவில்லை. 'இந்தி' போன்ற மொழிகளில் 'நாகரிக' என்று காணப்படுகின்றதே எனின் அவை திராவிடமொழிகளிலிருந்து கடன்வாங்கிக் கொண்டன எனவேபடும்: ஏனெனில் இந்து-ஐரோப்பிய மொழிகளில் அச்சொல் இல்லையாதலால் ஆரியத்திலும் இல்லையாகும். ஆதலின் அஃது ஆரியத்திற்கு நாகரிகத்தைக் கற்றுக் கொடுத்த திராவிடச்சொல் (அ) தமிழ்ச்சொல் எனவேபடும் என்க.

ஆங்கிலமொழியில் நாகரிகம் என்பதற்கு 'civilization' என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர்.

'civilization' என்ற சொல்லும் 'civitas' 'city' என்ற இலத்தீன் மொழிச் சொல்லிலிருந்தே வளர்ந்தது.

L —civitas
F —cite } (State)—city
Sp—civdad

பண்டைக் கிரேக்கப் பேரரசு நிகழ்ந்த காலத்தில் நகரக் குடியரசுகள் நிலவி இருந்ததை அறிகின்றோம். அவைகள் 'City states' எனப்பட்டன. ஏதன்ஸ், ஸ்பார்டா (Athens, sparta) ஆகியவைகள் எல்லாம் தனியாட்சி கொண்டிருந்த நகரங்களே. எனவே, *city< civil (a)<civilize (v)<civilization என்ற இம்முறையிலேயே மேலை நாட்டுமக்களின் கருத்தும்

City—(n)

Civil (a) (L—civilise from civis—citizen)
— belonging to a citizen,
— like a citizen
— polite

Civilize (v) (F—civiliser)
— to reclaim from savage life
— civilization—(n)

வளர்ந்துள்ளதை 'civilization' என்ற சொல்லும் அறிவுறுத்தல் காண்க. ஆற்றங்கரைகளிலே தோன்றிய நகரங்களே நாகரிகத்

* Black burn's 'Study of words'.

திற்கு வித்திட்டன என்ற கருத்தினை அம்மொழிகளின் சொல்லும் அறிவிக்கின்றனவே யன்றி, அம்மொழிகளில், 'நகர்', 'நாகரிகம்' என்ற சொற்களின் அடிச்சுவடுகளை முதலாய்க் காண முடியவில்லை. எனவே 'நகர்' என்பதும், 'நாகரிகம்' என்பதும் தனித்தமிழ்ச் சொற்கள் என்பதை நன்றாக உள்ளத்தில் அழுத்தல் வேண்டும்.

முடிவுரை:

'இவள் என் தாய்' என்று தன்னைப் பெற்ற தாய் உரிமை கொள்ள ஒருவன் வழக்குப்போட்டு வெற்றி கொண்டானும்! தமிழன்கொள்ளும் இத்தகைய முயற்சிகளும் அவன்செயல் செயலைப் போன்றவையே. வடமொழி வேறு, தமிழ்மொழி வேறு என திறவப்பட்ட காலம் இது. வடமொழியில் திராவிட மொழிச் சொற்கள் பலஉள என்பது அறிஞர்கண்ட முடிவாகும். இதை ஏனோ சிலர் கண்டு பிடிக்க மாட்டேன் என்கிறார்கள்! உண்மையைச் சொல்லப் போனால் கனன்று எழுகின்றார்கள்! அவர்கள் எல்லோரும் அமைந்து கேட்பார்களானால் (அ) ஆய்வார்களானால் உண்மை விளக்கமுறும் என்பதில் ஐயம் இல்லை.

## காப்பது தமிழ்!

[நாஞ்சில், கா. கணபதி]

இன்பம் தருவது தமிழ்—நமக்
கேற்ற மளிப்பது தமிழ்!
துன்பம் தவிர்ப்பது தமிழ்—நமக்குத்
துணையா யிருப்பது தமிழ்!
பண்பு தருவது தமிழ்—நம்மைப்
பயிற்றிச் சிறப்பது தமிழ்!
பண்புரு வானது தமிழ்!—நலப்
பைங்கூ ழளிப்பது தமிழ்!
அறிவு தருவது தமிழ்—நாவிற்
கமுதைத் தருவது தமிழ்!
செறிவு தருவது தமிழ்!—கவின்
செழுமை அளிப்பது தமிழ்!
தூய்மை தருவது தமிழ்—கல்வி
துலங்கச் செய்வது தமிழ்!
வாய்மை உள்ளது தமிழ்!—என்றும்
வளமை காப்பது தமிழ்!

# உலகெலாம் வாழுந் தமிழருக்கு
# ஒரு வேண்டுகோள்

எமது தமிழ்மறைக் கழகம் சென்ற பல ஆண்டுகளாக வைகாசி அனுடத்தைத் திருவள்ளுவர் திருநாளாகத் தமிழ்கூறு நல்லுலகமெங்கும் கொண்டாடச் செய்துவருகின்றது. தமிழகம், இலங்கை, வடஇந்தியா, மலாயா, சிங்கப்பூர், பர்மா, தென்னுப்பிரிக்கா, பிச்சித்தீவு, மொறிசியசு முதலிய பல நாடுகளிலும் வாழுந் தமிழர்கள் ஒன்றுபட்டுத் திருவள்ளுவருக்கு வைகாசி அனுடத்தில் விழா எடுக்கிறார்கள். கொழும்பு, சென்னை, திருச்சி, தெல்லி, சிங்கப்பூர், பி. பி. சி. (இலண்டன்) முதலிய வானொலி நிலையங்களும் எமது முயற்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் நல்கி வருகின்றன.

சென்ற ஆண்டுகளில் எமது முயற்சிக்கு ஆதரவளித்தது போல், இனிமேலும் ஒவ்வோராண்டும் தமிழ் மக்களுக்குத் திருவள்ளுவர் திருநாளை நினைவூட்டியும், சிறப்பு மலர் வெளியிட்டும் ஊக்கமளித்தலே, தமிழ் மக்கள் நடத்தும் பத்திரிகைகள் இப்பெருந் தொண்டுக்குச் செய்யும் பேருதவியாகும்.

## வைகாசி அனுடம் வள்ளுவர் திருநாள்

இவவாண்டு வள்ளுவர் திருநாள் **22-5-59** வெள்ளிக்கிழமையாகும். உலகம் போற்றும் ஒப்புயர்வற்ற திருக்குறளைச் செய்தருளிய திருவள்ளுவருக்கு உலகெலாம் வாழுந் தமிழர் எவ்வித வேறுபாடுமின்றி ஒன்றுபட்டு ஆண்டுதோறும் ஒரு நாளிற் பெருவிழா எடுக்கிறார்கள் எனும் புகழுரையை நிலைநாட்டுதற்கு உலகெலாம் வாழுந் தமிழர்கள் ஒன்றுபடுவோமாக. வாழ்க தமிழ் மறை! வளர்க தமிழினம்!

கா. பொ. இரத்தினம்
*தலைவர்: தமிழ்மறைக் கழகம், இலங்கை.*

# தமிழ் மொழியின் தனிச்சிறப்பு*

[திரு. கா. அப்பாத்துரையவர்கள் எம்.ஏ.எல்.டி.]

தமிழ்மொழி அரைக்கோடிக்கு மேற்பட்ட மக்களால் பேசப்படுவது. இந்தியத் தீவக்குறையின் தென்பாகத்தில் மாகாணமெங்கும் (Jaghirs) வழங்குவது. தென் ஆர்க்காடு, சேலம், கோயமபுத்தூர், கும்பகோணம், தஞ்சாவூர், திருச்சிராப் பள்ளி, மதுரை, திண்டுக்கல், திருநெல்வேலி ஆகிய மாவட்டங் களிலும் அகன்ற அரசாகிய மைசூரின் பலபகுதிகளிலும் அது பேசபபடுகிறது.

தற்போது நிலவும் வேறு எந்த மொழியிலிருந்தும் அது பிறந்ததன்று. மாறாக அதுவே தெலுங்கு, மலையாளம், கன்னட மொழிகளுக்குத் தாயென்றோ அல்லது ஒருவேளை இன்னும் பொருத்தமாகத் தோன்றுமுறையில், தற்போது வழக்கற்று விட்ட அல்லது தற்போதைய சேய்வடிவில் அரைகுறையளா விலேயே பேணிக்காக்கப்பட்ட ஒரு பண்டை மொழியிலிருந்து அவற்றுடன் அதுவும் பொதுப்பிறப்புக் கொண்டிருக்கலா மென்றோ கருத இடமுண்டு.

இயற்கைப் பொருள்களின் பெயர்கள், மெய்சார்ந்த செயல் கள், உணர்ச்சிகள் குறிக்கும வினைகள் ஆகிய தொன்மூலப் பண்புவாய்ந்த சொற்கள் வகையில் அது சமஸ்கிருதத்துடன் முற்றிலும் தொடர்பற்றது. அதன்பின்னர் முதிரா நாகரிக நிலையிலிருந்து மேற்போந்து மேம்பட்ட வடபுல மக்களுடன் தொடர்புகொண்ட நாளில் அது பேராளவாகப் பெற்ற இரவல் சொற்கள் தாமும் ஒழுகலாற்றுணர்வு சார்ந்தனவாகவும் உளவிய லான நுண் கருத்துக்கள் சார்ந்தனவாகவுமே அமைவதுடன், பெரிதும் பேச்சுவழக்கில் மட்டுமே காணப்படுகின்றன. குறிப் பிடத்தக்க இந்த ஒரு கூற்றில் மட்டுமன்றி, எழுத்துவடிவின் ஆக்கமுறையிலும் அது மற்றத் தென்னக மொழிகளிலிருந்தும் வேறுபடுகிறது.

உண்மையில் மற்றத் தென்னக மொழிகள் பொதுமக்கள் பேச்சு நடையில் காணப்படுவதைவிட மிகுதியாகக் கவிதை, இலக்கிய நடையிலேயே சமஸ்கிருதத்தைப் பெருவாரியாகத் தம்முள் கலக்க விட்டுள்ளன. எழுத்துவடிவின் ஒழுங்கு வரி

---

* வீரமாமுனிவர் எழுதிய பரமார்த்த குருகதை முதற்பதிப்பில் பி. ஜி. பேபிங்டன் துரைமகனார் எழுதிய ஆங்கில முன்னுரையின் பகுதியாகும்.

சையையும் அவை எத்தகைய மாறுதலுமில்லாமல் அப்படியே சமஸ்கிருதத்தினின்றும் மேற்கொண்டுள்ளன. நேர்மாறாகத் தமிழின் உயர் இலக்கிய நடை கிட்டத்தட்ட முழுவதுமே சமஸ்கிருதச்சொற்கலப்பு, மரபுக் கலப்பு அற்றதாய் இயங்கு கிறது. அதன் எழுத்துமுறை ஒரு பதினறு எழுத்துக்களுக்குள்ளேயே முற்பட அடங்கியிருந்ததென்று மரபுரை கூறு கிறது. அத்துடன் அது சமஸ்கிருதத்தின் முழுநிறைவான எழுத்துமுறையுடன் ஒப்புமை ஒருசிறிதும் உடையதென்று கூறமுடியாது. ஏனெனில் ஒருபுறம் அம்மொழியின் நேர்பாதி எழுத்துக்கள் அதில் இல்லை. அதே சமயம் அதில இல்லாத தனி மதிப்பாற்றலுடைய பல எழுத்துக்கள் உள்ளன.

தென்னகத்திலுள்ள மற்ற இனமொழிகள் எவற்றையும்விட அது தனிததன்மையும் முதன்மையும் உடையது. இது அதன் இலக்கிடப்பிலிருந்தே ஓரளவு எதிர்பார்க்கத்தக்கது. (தாய் மொழிப் பயிற்சித்திட்டத்தில் அது முதலில் எடுத்துக் கொள்ளப்படுவதற்குரிய காரணம் இதுதான் - இலக்கியச் செப் பத்தில் மேம்பட்ட வடதிசை மொழியின் அறிவுடன் இத்தென் மொழியையும் கற்றுக்கொள்பவர் இந்தியமொழிகள் எல்லா வற்றின் மொத்த அறிவிலும் ஒருபாதியை நிறைவேற்றிக் கொண்டவர் ஆவர்.

இந்தியாவின் பொதுவாட்சி நடைமுறைக்குத் தம்மை ஒப்பு வித்துக் கொண்டவர்கட்குத் கீழ்த்திசைமொழிகளின் அறிவு எவ்வளவு பயன்வளமுடையதென்று இங்கே நாம் எடுத்துக் கூறத்தேவை இல்லை. உண்மையில் பொதுமக்களுக்கும் அவர் கள் ஆட்சியை ஏற்றுக்கொண்டவர்கட்குமிடையே நேரான உடனடித்தொடர்பு ஏற்படுவதன் முக்கியத்துவம் இன்று ஒப்பி ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றுமட்டுமன்று. தாயகத்திலும் (இங்கிலாந்தில்) வெளியிலும் மேன்மைதங்கிய வாணிகக் கழகத் தாரின் (கம்பெனியாரின்) பணியாட்களின் கல்விகுறித்து எடுக்கப்பட்டுள்ள நடைமுறைகள் இவ்வகையில் ஏற்பட்டுள்ள ஆர்வத்தைத் காட்டுவன ஆகும்.

இந்நாட்டில் (தமிழகத்தில்) தமிழ்க்கல்வி தொடங்குவதற் குரிய மூலசாதனங்களைத் தெரிந்து வழங்குவது இச்சிற்றேட்டின் நோக்கமாகும். இதுவகைக்காக ஒரு கதை தெரிவு செய்யப்பட் டுள்ளது. அதற்குரிய மொழிபெயர்ப்பு, சொல் தொகுதி, வாசகக்கூறுபாட்டு ஆய்வு ஆகியவையும் உடன்தரப்பட்டுள்ளன.

---

# செய்திகளும் குறிப்புக்களும்

(க) "சாகுந்தலம்" கட்டுரைப் போட்டிப் பரிசு

காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராச்சாரியார் சுவாமிகள் ஏற்பாடு செய்துள்ள, மறைத் திரு. மறைமலையடிகள் 'சாகுந்தலம்' கட்டுரைப் போட்டி 1958 அக்டோபரில் நடை பெற்றது. இதற்குரிய பரிசுத் தொகையாகிய 100 வெண்பொற் காசுகளை லயோலா கல்லூரியைச் சேர்ந்த ஆர். ஜேம்ஸ் என்ற மாணவருக்கு வழங்குவதென முடிவு செய்யப்பட்டது. சென்னை பச்சையப்பன் கல்லூரிப் பேராசிரியர் சண்முகமுதலியார், திருஞான சம்பந்தம், திரு. ஆர். எஸ். தேசிகன் ஆகியோர் இப்பரிசுப் போட்டியின் நடுவர்களாக இருந்தனர்.

குறிப்பு: மறைத் திரு. மறைமலையடிகளாரின் 'சாகுந்தலம்' என்னும் இந்நூல், ஆராய்ச்சியாளரிடை நன்கு பரவுதற்கும் மாணவர்கள் மறைமலையடிகளாரின் பிற நூல்களை விரும்பிக் கற்பதற்கும் இக்கட்டுரைப் போட்டிப் பரிசு மிகமிகப் பயன்படும் முறையாகும். இப்பரிசுக்கு ஏற்பாடு செய்த காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராச்சாரிய அடிகளைப் பாராட்டுகிறோம். மற்ற மடாதிபதிகளும் சங்கராச்சாரிய அடிகளைப் பின்பற்றி மறைமலையடிகளாரின் தமிழ், சமய ஆராய்ச்சி நூல்களுக்கு இதுபோன்ற கட்டுரைப் போட்டிகளை ஏற்பாடு செய்வார்களாயின் அதுவே அவர்கள் சமயத்துக்குச் செய்யும் சிறந்த பணியாகும்.

(உ) குழந்தை நூல்களுக்குப் பரிசு

சிறுவர் இலக்கியத்திற்கு ஊக்கமளிப்பதற்காக இந்திய அரசாங்கம் ஒரு திட்டம் வகுத்துள்ளது. இத்திட்டத்தின்படி 13 இந்திய மொழிகளில் எழுதியுள்ள 24 நூல்களுக்குப் பரிசு அளிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு புத்தகத்திற்கும் 500 வெண்பொற் காசுகள் பரிசாக வழங்கப்பட்டுள்ளது. இத்தகைய பரிசளிப்பில் இது நான்காவது முறையாகும். தமிழில் "பறக்கும் பாப்பா" என்னும் புத்தகம் இப்பரிசுக்குரியதெனத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. திரு. கல்வி கோபால கிருஷ்ணன் என்பார் இந்நூலின் ஆசிரியராவார்.

குறிப்பு: மைய அரசியலார் சிறுவர் இலக்கியத்திற்குப் பரிசு வழங்க இத்தகைய திட்டம் வகுத்திருப்பது பாராட்டத் தக்கதே. மாநில அரசினரும் இம்முறையைப் பின்பற்றி தமிழகத்தில் மேலும் பல சிறுவர் இலக்கியங்கள் வளர வழிவகை காண்பார்களாக.

(ங) கம்பன் திருநாள்

கடந்த 22-3-59 இல் காரைக்குடியில் கம்பன் திருநாள் நடைபெற்றது. விழாவிற்குக் கம்பன் கழகச் செயலாளர் திரு. சா. கணேசன் அவர்கள் தலைமை தாங்கினார். திரு ம. பொ. சிவஞான கிராமணியாரவர்கள் துவக்க வுரை நிகழ்த்தினார். அதுகாலை அவர், "இந்நாட்டில் முதன் முதல் குடியரசுக் கொள்கையை எடுத்துக் கூறியவர் கம்பர்." என்று குறிப்பிட்டார். மாலை நிகழ்ச்சி நடுவர் பசீர் அகமது சையது அவர்கள் தலைமையில் நடைபெற்றது. பல அறிஞர்கள் சொற்பொழிவாற்றினர். நடுவர் ஏ. எஸ். பி. ஐயர், சுத்தானந்த பாரதியார், சர்தார்

வேதரத்தினம், லெ. அழகுசுந்தரம் செட்டியார், லெ. நாராயணன் செட்டியார் ஆகியோரிடமிருந்து வாழ்த்துச் செய்திகள் வந்தன.

குறிப்பு: கம்பன் கழகம் அமைத்து, ஆண்டு தோறும் இவ்வாறு நல்ல தமிழ்ப்பணியாற்றும் கம்பர் கழகத்தாரைப் பாராட்டுகிறோம். அவர்கள் பணி என்றும் சிறக்க வாழ்த்துகிறோம்.

(ச) டாக்டர் எஸ். ஆர் அரங்கநாதன் அவர்கட்குப் புதிய பதவி

சென்னைப் பல்கலைக் கழக நூல்நிலைய முன்னாள் நூலகர் டாக்டர், எஸ. ஆர். அரங்கநாதன் அவர்கள் பிரிட்டிஷ் நூலகக் குழுவின் சிறப்பு (Honarary) துணைத்தலைவராக அமர்த்தப்பட்டுள்ளார் எனவும், இப் பதவி அவர் ஆயுள்காறும் நீடிக்கும், எனவும் தெரியவருகிறது. ஆசியா விலிருந்து ஒரு சிறப்புத துணைத்தலைவரைத் தேர்ந்தெடுத்தது இதுவே முதல தடவையாகும்.

குறிப்பு: திரு. அரஙகநாதன் அவர்கள் இப்பதவிக்குப் பல்லாற் ஞானும் பொருத்த முடையவராவர். அத்தகைய அறிஞரைத் தேர்ந் தெடுத்து உரியபதவியை அளித்த பிரிட்டிஷ் நூலகக் குழுவினரைப் பாராட்டுவதுடன், திரு. அரங்கநாதனார் அவர்கட்கும் நமது வாழ்த்தி னைத் தெரிவித்துக கொள்ளுகிறோம்.

(ரு) நாடகப் பேராசிரியருக்குப் பாராட்டு

நாடகப் பேராசிரியர் திரு பம்மல் சம்பந்த முதலியாரவர்கட்கு, கடந்த 23-3-59 இல் நாடக சங்கத்தின் சார்பில் ஒரு பாராட்டு விழா தேனும் பேட்டை காங்கிரஸ் திடலில நடைபெற்றது. உள்நாட்டு அமைச சர் திரு. எம. பக்தவத்சலம் அவர்கள் தலைமை தாங்கினர்.

திரு. சம்பந்த முதலியாரவர்கட்கு மைய அரசினரால் பத்மபூடணம் என்னும் பட்டம் வழங்கப் பெற்றதைப் பாராட்டியும், 'சிறந்த நடிகர்' என்னும் மைய இசை நாடகக் கழகத்தாரால் பட்டம் வழஙகப் பெற்ற தையும் பாராட்டி, திருவாளர்கள் வி. சி. கோபாலரத்தினம், கே. சந்திர சேகரன், எஸ். பார்த்தசாரதி, டி. கே. சண்முகம், எம். ஜி. இராமச சந்திரன் ஆகியோர் பேசினர். இறுதியில் நாடக சங்கத்தின் சார்பில் ஒரு வெள்ளித் தாம்பாளம் சம்பந்த முதலியாரவாகட்குப் பரிசாக வழங்கப் பட்டது.

திரு. சம்பந்த முதலியாரவர்கள் பாராட்டுதல்களுக்கு விடைகூறும் முகத்தான் பேசிய காலை சென்னைக்குத் 'தமிழ்நாடு' எனப் பெயரிடல் வேண்டும் எனக் கேட்டுக்கொண்டார்.

குறிப்பு: கலைஞர்களையும் அறிஞர்களையும் அவர் தம் வாழ்நாளி லேயே போற்றிப் பாராட்டும் நல்ல பண்பிலே நாடும் அரசும் வளர்ந்து வருவது கண்டு மகிழ்கிறோம். திரு. சம்பந்த முதலியாரவர்கள் இவ் வனம் வாழ்த்துக்கள் பல பெற்று வளமார் வாழ்வில் பல்லாண்டு வாழ இறைவன் அருள்புரிவானாக.

---

# மதிப்புரை

## "1000 ஆண்டுகட்கு முன்னர் வள்ளுவர்"

[இதன் ஆசிரியர் கணக்காயர், புலவர் சேந்துறை முத்து அவர்கள். விலை ரூ. 1—கிடைக்குமிடம்: வள்ளுவர் பண்ணை, பிராட்வே, சென்னை-1.]

இந்நூல் திருவள்ளுவ நாயனார் காலத்தை நடுநிலைவழாது ஆய்ந்து உண்மைகண்டு உலகுக்குணர்த்த வேண்டுமென்னும் நன்னோக்கத்துடன் எழுந்ததாகும். அந்நிலையில் தொன்றுதொட்டு இன்றுகாறும் ஆராய்ந்து அறுதியிட்டுக் கூறிய மேலைநாட்டறிஞர் கீழைநாட்டறிஞர் அனைவர் கருத்துக்களையும் மிகச் செவ்விய முறையில் சுருக்க விளக்கமாக வரைந்துள்ளார்கள். அவற்றைக் காண்பார் திருக்குறள் ஆய்வுக் கட்டுரைகளும் திருக்குறளே போன்று திட்பநுட்பச் செறிவுடையதாய் அமைந்த சிறப்புடைத் தென்பதை யுணர்வர். வள்ளுவரின் காலம்வரை யறையின்றி நாலாயிரயாண்டுகட்கு முன்னர் எனபதைக் கண்டதும் கேட்டதும் நம்பமுடியாதென ஆய்வின்றியே நவின்றுவிடுவர். அதற்குக் காரணம் இடையே தோன்றிய பல பொருந்தா ஆய்வுப் புனைவுகளை அகங்கொண்டு நம்பி மருண்டமையேயாம். அவர்தம் மருட்சிமுற்றும் இந்நூலைக் கற்குங்கால் தாமே அகன்றுவிடும்.

இந்நூல் வள்ளுவர் காலத்தைமட்டும் வரையறுப்பதுடன் நின்றுவிடவில்லை. உலகத்தோற்றம் உயிர்த்தோற்றம் முதலியவற்றையும், அவ்வுயிர்கள் முதன்முதற்றோன்றி வாழ்ந்த இடம் நிலவுருண்டையின் நடுக்கோட்டின இருசார் அண்மையே என்னும் உண்மையையும் நன்கு விளக்கியுள்ளது. அந்நிலப்பரப்புக் கடலுணமறைந்த குமரிக்கண்டம் என்பதும வலியுறுத்தப்பட்டுள்ளது. இங்குவாழ்ந்து வந்த நம்முன்னோர்களாகிய தமிழச் சான்றோர்களே பண்பாட்டினும் நாகரிகத்தினும் மேம்பட்டு அவற்றை உலகெங்கணும் பரப்பியுள்ளனர் என்பதும் காட்டப்பட்டுள்ளது.

*நூலாசிரியர் ஆய்வுக்கு அடிப்படையாக எடுத்துக்கொண்டது.*

**சேங்கோன் தரைச்செலவு** அது தலைச்சங்கநூல். அந்நூலும் திருக்குறளும் சொல்லாலும் பொருளாலும் பெரிதொத்துப் போவதை நுணுகியாய்ந்து விளக்கியுள்ளார்கள. மேலும் திருவள்ளுவரின் திருக்குறளாகிய இலக்கியத்தினின்றே தொல்காப்பிய இலக்கணம் எழுந்திருத்தல் வேண்டும் என்பதற்குப் பலப்பல எடுத்துக் காட்டுக்கள் இருநூலினின்றும் நனிமிகப் பொருத்தமாகக் காட்டப்பட்டுள்ளன. எனவே இந்நூல் உலகத்தோற்றம், உயிர்த்தோற்றம், தமிழகத்தோற்றம், முத்தமிழ்ச் சிறப்பு, வள்ளுவர் காலம், வள்ளுவர் மறை உலகப் பொதுமறை என்னும் உண்மை, குறள் வெண்பாவால சங்கச் சான்றோர் நூல்செய்யாமையே அதனது காலப்பழமையைக் காட்டும் வாய்மை முதலியபலவற்றையும் அகப்புறச் சான்றுகளுடன் மிகப்பொருத்தமுற விளக்குகின்றது. திருவள்ளுவர் மேற்கொண்டுள்ள நெறி பழந்தமிழர் கைக்கொண்டொழுகிய அன்பு அருள் அறநெறிகள் என்பதுவு காட்டப்பட்டுள்ளது. உண்மை ஆய்வு காண்பார்க்கு இந்நூல் உறுதுணையாகும்.

பொதுவாகச் செந்தமிழன்பர்களும் சிறப்பாக ஆசிரியமாணவ ஆய்வாளர்களும் இதனைக்கற்று உண்மைப்பயன் எய்துவார்களாக.

**"மகாத்மா புத்தர்"**

[இதன் ஆசிரியர் திரு. தோ. ந. வீரராகவன் அவர்கள் ஆவர். விலை ரூ. ஒன்றரை. கிடைக்குமிடம் இமயப்பதிப்பகம், நாகப்பட்டினம்.]

இதன்கண் புத்தரின் வரலாறு செம்மையாக வரையப்பட்டுள்ளது. இரண்டாயிரத்தைஞ்ஞூறு ஆண்டுகட்குமுன் இருந்த புத்தர், நாட்டினுக்கு நவின்ற நலலறங்களும், அந்நல்லறங்களை அருளும் பொருட்டு அவர்மேற்கொண்டுள்ள தவநிலையும், அந்நிலையின்பயனாய்அவர் எய்திய மெய்யுணர்வும் என்றுமொன்றும் மாறாஉண்மைகளாகும். அவ்வுண்மைகளை உள்ளவாறு கள்ளமில் மனத்துடன் உலகினுக்கு உணர்த்தித் தாமும் மேற்கொண்டொழுகுவார் "வையத்து வாழ்வாங்கு வாழும்" வாய்மையராவர். அத்தகு சான்றோரை உலகோர் தெய்வமாகக்கொண்டு திருவுரு அமைத்து வழிபட்டுவரும் மெய்ம்மை நூலளவானன்றிக் கண்கூடாகக் காண்பதொன்றாகும். இவ்வுண்மை நற்பேறாக நம்காலத்து நாமறிய நாட்டுக்கும் உலகுக்கும் நன்மை புரிந்து இறையடி எய்திய காந்தியடிகளாரைத் தெய்வமாக ஞாலமெல்லாம் கொண்டாடி வருவதால் நன்கு விளங்கும்.

புத்தர் பெருமானுக்கு இறையருளால் அருள் உள்ளம் இயற்கையே அமைந்துள்ளது. அம்புபட்ட அன்னத்தின் பொறுக்கலாற்றாத் துன்பங்கண்டிரங்கினர். அதன் வாயிலாக அனைத்துயிர்களின் துன்பங்களையும் அகற்ற வழி காணவுன்னினர். பொருள்களின் நிலையாமையையும் உணர்ந்தனர். மக்கட்கு அறவழியைக் கைப்பிடித் தொழுகுமாறு போதித்தனர். அவ்வொழுக்கத்திற்கு அன்பே அடிப்படை எனவுங் காட்டினர். அவ்வன்பு நிலைப்பதற்குக் கொலையும் புலையும் அறவே நீக்க வேண்டிய இன்றியமையாமையை வலியுறுத்தினர். மேலும் சாதிகுலம் முதலியனவாகக் கொள்ளப்படும் மூடப்பழக்கங்களை முற்றும் ஒழிக்க வேண்டுமென்றும அறிவுரை பகர்ந்தனர். இவைகளையும் புத்தநெறி எங்ஙனம் உலகெங்கணும் பரவிய தென்பதும், எவ்வெவ்வுலகங்களில் சிறப்பாகப் பரவியதென்பதும் எவ்வெவ்வூர்களில் புத்தருக்குத் திருவுருவங்கள், விகாரைகள், கோபுரங்கள், கோவில்கள் அமைந்திருந்தன என்பதும், பின் எவ்வாறு குலைவுற்றன என்பதும், இப்பொழுது எந்நிலையிலுள்ளன என்பதும் ஆசிரியரால் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

புத்தரின் அழகிய பல வண்ணப்படங்களும், உலகில் சிறப்பாக எவ்வெத் தேயங்களில அவர்க்கு நினைவுக்குறிகள காணப்படுகின்றன என்பதை விளக்கப் பல படங்களும் இதன்கண் காணப்படுகின்றன. பொதுவாக நல்வாழ்வை விரும்புவாரனைவர்கட்கும் இந்நூல் சிறந்த வழிகாட்டியாகும். எளிய இனிய நடை; அழகான பதிப்பு. செந்தமிழன்பர்கள் அனைவர்களும் இதனை வாங்கியும் வாங்குவித்தும் கற்றும் நற்பயனெய்துவார்களாக.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பா அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




சிலம்பு ௩௩ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௦, சித்திரை | பரல் ௬
மே, 1959

# அப்பர் திருநாள்

தொன்மைத் தமிழர் நெறி நன்மைச் சிவனெறியேயாம். சிவனெறி யெனினும் செந்நெறி யெனினும் ஒன்றே. சைவம் எனினும் ஒன்றே. சங்கத் தொகை நூல்களுள் சிவம் என்னும் சொல் காண்டலரிதெனினும் செம்பொருள் என்னும் சொல் பரக்கக் காணலாம். மேலும் சங்கத்தையடுத்துள்ள மணிமேகலைக்கண் "நின்ற சைவ வாதிநேர் படுதலும்" (௨௭) எனக் காணப்படுதலால் சிவன் என்னும் மொழி தனிமிகத் தொன்மை வாய்ந்தது என்பது தானே போதரும்; என்னை? சைவம் என்னும் சொல் சிவத்தின் தொடர்புடையதெனப் பொருள் தருதலானென்க. மேலும் சிலப்பதிகாரத்தின்கண் "அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும்" (௧௧ காடுகாண் காதை, ௧௨௮) என்பதன்கண் ஐந்தெழுத்தருமறை கேட்கப்படுதலுங் காண்க. புறநானூற்றின்கண் "பணியிய ரத்தைநின் குடையே முனிவர், முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே" என்பதன்கண் "முக்கட் செல்வர்" என்று மொழியப்படுவது சிவபெருமானையே என்பது தேற்றம்.

இத்தகைய பழம்பெரு நெறியின் மெய்ம்மைத் தன்மையைத் தூயவாய்க் கண்டு கைக்கொள்வதற்கு வாயில்களாக நிற்பன திருமுறைகளும் மெய்கண்ட நூல்களுமேயாம். இடையே வந்தேறியவர்களால் புகுத்தப்பட்ட ஆரியம், புத்தம், சமணம் முதலிய அயன்மொழி மயல் நெறிகள் தமிழகத்துக்குச் சிறிதும் ஒவ்வா.

தமிழகநெறி உலகப் பொதுநெறியாம் உண்மை உயர்வினை யுடையது. இத்திருநெறியின் முதல்வர் நால்வராவர். அவர் முறையே திருஞானசம்பந்தப் பெருமானார், திருநாவுக்கரசு நாயனார், நம்பியாரூரர், மணிவாசகப்பெருமானார் எனப் பெறுவர். இவருள் முதன் மூவராருளிய திருமுறைகள் தேவாரம் எனப் படும். இவை தனித்தமிழ் மறையாகும். மணிவாசகர் அருளிய திருவாசகம் தனித்தமிழ்மறை முடிவாகும். அவரருளிய திருக் கோவையார் பெறும்பேறாகும். திருமூலர் பாடியருளிய திருமந்திரம் தனித்தமிழாகமமாகும்.

திருநாவுக்கரசு நாயனார் திருவரலாறு சென்ற ஆண்டிலும் சிறிது விளக்கப்பட்டுள்ளது அதனால் நினைவுகூரத்தக்க முறையில் மிகவுஞ் சுருக்கமாக ஈண்டுக் கூறுதும்: திருமுனைப்பாடி நாட்டில் திருவாய்மூரில் தொழுதகு வேளாண் குலத்தில் திருவருளால் தோன்றியவர் தந்தையார் புகழனார், தாயார் மாதினியார்; தமக்கையார் திலகவதியார். தந்தை தாயர் பிரிவின்பின் தமக்கை யார் சார்பில் இருந்தனர். கற்றுத்துறை போயினர். அறம் பல புரிந்தனர். சமணம் புகுந்தனர். தமக்கையார் வேண்டு கோளின்படி சிவபெருமானால் சூலைநோய் நீக்கி ஆட்கொள்ளப் பட்டனர். பொறாச் சமணர் புன்மொழி கேட்டுப் பல்லவன் நீற்றறை, நஞ்சு, யானை, கல்லிற் பிணித்துக் கடலில் தள்ளல் முதலிய தீயமிறைகள் செய்வித்தனன். சிவனருளால் எல்லாத் துன்பத்தினின்று நீங்கி நல்லராயினர். ஆளுடைய பிள்ளை யாரால் அப்பரென அழைத்தருளப்பட்டனர். சூலம், விடை திருவடி சூட்டப்பெற்றனர். திருவீழிமிழலையில் படிக்காசு பெற்றுப் பஞ்சம் போக்கினர் திருமறைக்காட்டில் திறக்கப் பாடினர். திருப்பூந்துருத்தியில் திருமடமமைத்தனர் திருவை யாற்றில் கைலைகண்டனர். திருப்பைஞ்ஞீலியில் பொதிசோ றுண்டனர். வடதளியில் சிவன் கோவில் கண்டனர். திங்களூர் அப்பூதியடிகளார் மகனின் அரவு நஞ்சகற்றினர். இன்னும் பல அருஞ்செயல்கள் புரிந்தருளினர். அவையனைத்தும் வரன்முறை யாகவும், சித்தாந்த நுண்கருத்துடனும், விளக்கமாகக் காண விரும்புவார் கழகவழி வெளிவந்துள்ள "திருநாவுக்கரசர் வரலாற்றில்" கண்டுகொள்க. இறுதியாகச் சித்திரைச் சதய நன்னாளில் திருப்புகலூரில் பொருவரிய சிவபெருமானின் "பூவார்ந்த பொன்னடியே" திருவருளால் பொருந்திப் பேரின்பம் எய்திப் பெருவாழ்வுற்றனர்.

நாளும் ஓதி நாமுய்ய நாயனாருளிய செந்தமிழ்த் திருமா மறையின திருப்பாட்டுப் பலவற்றுள் நம் முடல் உயிர் உணர்வு மூன்றற்கும் ஒருங்கு உறுதிதருவது ஒரு திருப்பதிகம்.

அது திருக் குறுந்தொகைத் தொண்ணூற்றேழாந் திருப்பதிகம் முப்பது திருப்பாட்டுக்களைக் கொண்டிலங்கு கின்றது. அத் திருப்பதிகத்தைச் சிறிது ஆழ்ந்துணரின் பெரிய தோருண்மை நன்கு புலனாகும். திருமுறைத் திருப்பாட்டுக் களுள் மிகச் சுருங்கிய எழுத்துக்களைக் கொண்ட வரியமை வும், முதற்சீரொழிந்த ஏனைய சீர்கள் வெண்டளை பிழையாமை யும் உள்ளது திருக் குறுந்தொகைத் திருப்பதிகங்களே. அவ் வண்மையினைத் திருக் குறுந்தொகை என்னும் திருப் பெயரே தெற்றெனப் புலப்படுத்தும். திருப் பாட்டுக்களின் வரிகள் நேரில் தொடங்கினால் தனித்தனி ஒற்று நீக்கிப் பதினொரெழுத் துக்களையும், நிரையில் தொடங்கினால் பன்னிரண்டெழுத்துக் களையும் கொண்டு திகழ்கின்றன. நேர் பதினொன்றே நிரை பன்னிரண்டெழுத், தோர்வரிக்காம் குறுந்தொகைக்கு என் பதனை நினைவு கூர்க

இத் திருப்பதிகம் முப்பத்திரண்டு திருப்பாட்டுக்களைக் கொண்டமைந்திருத்தல் வேண்டும் எனக் கொள்ள இடமிருக் கின்றது, என்னை? தமிழ் நெடுங்கணக்கு வரிசையினமைந்திருப் பதாலென்க நெடுங்கணக்கு வரிசை, அஆஇஈஉஊ எஏஐ ஒஓஔ ஆகிய உயிர் பன்னிரண்டும் (ஆய்தமும) முதற்கண் நிற்பப் பின் கசடதப என்னும் வல்லெழுத்தைந்தும் அவ்வவற் றுக்கு இனமாகிய மெல்லெழுத்தைந்தும அவ்வவற்றை யடுத்து விரவி நிற்ப, அதன்பின் இடையெழுத்தாறும் நிற்ப, அதன்பின் றன என்னும் இரண்டெழுத்தும் நிறபக் காணப்படும். அம் முறையில் மொத்தம் எழுத்துக்கள் முப்பத்தொன்றாகும். இத் திருப்பதிகமும் முதல் திருப்பாட்டு நீங்கலாகப் பார்த்தால் அம் முறையில் அமைந்திருப்பது நன்கு புலனாகும். மேலும் திருப் பதிகத்தின் ஈற்றில் இலங்கை மன்னனை ஓதும் மரபு பற்றி ஈற்றில் வைத்திருக்கிறார்கள். நம் நாயனார் திருப்பதிகங்கள் அனைத்திலும் ஈற்றில் இலங்கை மன்னன் ஓதப்பட்டுள்ளான் என்பதற்கில்லை. ஏறத்தாழ எழுபத்தைந்துக்கு மேற்பட்ட திருப்பதிகங்களினீற் றில் இலங்கை மன்னன் குறிப்பில்லை ஆகவே அத் திருப்பாட்டை இடையின வரிசையிலமைத்துக் கொள்ளலாம். கொள்ளவே திருப்பாட்டுக்கள் முப்பதுள் முதற்றிருப்பாட்டு துவக்க வாழ்த் தாகக் கொள்ள இருபததொன்பது திருப்பாட்டுக்கள் நாள்வழிப் பாட்டுக்களாக அமையும். அமைக்க வேண்டிய திருப்பாட்டுக்கள் இடையின வகரத்துக்கு ஒன்றும், வல்லின றகரததுக்கு ஒன்று மாக இரண்டு பாட்டுக்களாகும். அவ் விரண்டற்கும் இத் திருபதிகத்தின் முதற்றிருப் பாட்டினையும் (வகரத்திற்கு) ஐந்தாம் திருப்பாட்டினையும (றகரத்திற்கு) முறையே கொள்ளு தல் சாலும். முதல் திருப்பாட்டின் நான்காவது வரியில்

"வந்திப்பாரவர்" என்றிருப்பது வகரக் குறிப்பாகும். ஐந்தாம் திருப்பாட்டில் "ஈறில் கூறையணுகி" எனத் தொடங்கி எல்லா வரிகளிலும் றகரம் பயின்று வருவது றகரக் குறிப்பாகும்

இம் முறையே முப்பத்திரண்டு திருப்பாட்டுக்களாகக் கைக்கொண்டு ஒவ்வொரு நாளும் முதல் திருப்பாட்டைத் துவக்க வாழ்த்தாகவும் ஏனைய அகர முதல் துவங்குந் திருப்பாட்டுக்களை வரன்முறையாக ஒவ்வொருநாளுக்கும் ஒவ்வொரு பாட்டு நாள்வழி பாட்டுப் பாட்டாகவும் ஓதி வருதல் செந்நெறிச் செல்வர்களாகிய நம்மனோர் தலைக்கடனாகும். அங்ஙனம் ஓதிவரின் முப்பத்தொரு நாட்கள் கொண்ட திங்கள்களுக்குக் குறைவின்றி நாளொன்றுக்கு ஒவ்வொரு திருப்பாட்டாக நிறைவுறும் குறைந்த நாட்களைக் கொண்ட திங்கள்களில் கடைசி நாளில் எஞ்சிய திருப்பாட்டுக்களை முற்றும் ஓதி நிறைவுறுத்தல் வேண்டும் ஒரு திங்களில் முப்பத்திரண்டு நாட்கள் வரும். அத் திங்களில் துவக்க வாழ்த்துத் திருப்பாட்டினை இன்புற இருமுறை யோதி நிறைவு செய்து கொள்ளுதல் வேண்டும். இவையே நம்முடைய காலை மாலை வழிபாட்டுக் கருவூலங்களாவன. நம் திருமுறைப் பெருமையினை நாமறிந்து நாளும் ஓதி வழிபட்டு உய்வதற்கு வழிகாட்டுவது "திருமுறைகண்ட புராணம்". நம்மவரிற் சிலர் அயன்மொழி மயலால் நம் மொழியிலும் நம் முதல்வர்களருளிய திருவருண் முறைகளிலும் உண்மைப் பெருங்காதல் கொள்ளாது எண்மையாக ஓதி வருகின்றனர். அம் மட்டோ? இத திருமுறைகள் கைகண்ட மந்திரம என்னும் உண்மையினைக் கனவினுங்கருதாதவராய் வெறும் வழுத்துரையே என்று வாளா கழிகின்றனர் இனியேனும உண்மை யுணர்ந்து தனித்தமிழ்ப் பெருமந்திரங்களென உள்ளங்கொண்டு நாட்டிலும வீட்டிலும் நல்ல திருமடத்திலும வல்ல திருக்கோவில்களிலும் எல்லாச் செயற்கும் திருமுறைகளையே பயன்படுத்துமாறு வற்புறுத்தி ஓதியும் ஓதுவித்தும உய்வார்களாக நாம் செய்யும வழிபாடனைத்தும் நமக்கும் நம் நாட்டவர்க்கும் நற்பயன் விளைக்குமாறு நம தாய் மொழியிலாற்றுவதே நனிமிகச் சிறந்ததாகும். உலகியலிலும் நம் தாய்மொழியே தலை சிறந்தது. கடவுள் நெறியிலும் இதனினும் சிறந்தது வேறில்லை யென்பது திருமுறைகளைச் சிவபெருமான் நம் இனிய தமிழகத்து மட்டுமன்றித் திருவெள்ளிமலை (கயிலை)யினகத்தும் உகந்து திருச்செவி சாய்த்துத் திருவுள்ளத்தடைத்தான் என்னும் மெய்ம்மையினை மெய்யன்போடுணரின் நன்கு விளங்கும் அப்பெருமான "தமிழோடிசை கேட்கும் இச்சை"யன்

இவ்வுண்மைகளை நன்கு விளக்கும் திருமுறைகண்ட புராணத் திருப்பாட்டுக்கள் பலவற்றுள் ஒன்று வருமாறு:

"கொண்டுகுல சேகரனுங் கோன்பால் வந்து
குஞ்சரத்தோ னருள்செய்த கொள்கை யாலே
மண்டுபெருங் காதலுடன் சொல்லி யந்த
வண்டமிழின் பெருமைதனை வகுத்துச் சொல்வார்
கண்டபெருமந்திரமே மூவர் பாடல்
கைகாணு மந்திரங்கண் ணுதலோன் கூறல்
எண் டிசையும் சிவனருளைப் பெறுதற் காக
இம்மொழியின் பெருமையையான் இயம்பக் கேள்நீ."

—௧௬.

திரு வெள்ளிமலைக்கண் செந்தமிழ்த் திருப்பாடலைச் சிவன் திருச் செவி சாத்துதல் வருமாறு :

'பெருகு வேதமு முனிவரும் துதிப்பரும்
பெருமையா யுனையன்பாற்
றிருவு லாப்புறம் பாடினேன் திருச்செவி
சாத்திடப் பெறவேண்டும்
மருவு பாசத்தை யகன்றிட வன்றொண்டர்
கூட்டம்வைத் தாயென்ன
அருளு மீசருஞ் சொல்லுக வென்றன
ரன்பருங் கேட்பித்தார்."

—௧௨. வெள்ளானை - ௪௮.

நாள்வழித்திருப்பாட்டுக்களின் நனிமிகு சிறப்பினைத் திருமுறையுட் கண்டுகொள்க: துவக்க வாழ்த்துத் திருப்பாட்டினை மட்டும் ஈண்டுச் சிறிது விளக்குதும் :

"சிந்திப் பார்மனத் தான்சிவன் செஞ்சுடர்
அந்தி வானிறத் தானணி யார்மதி
முந்திச் சூடிய முக்கண்ண னுனடி
வந்திப் பாரவர் வானுல காள்வரே."

—இ. ௬௭ - ௧.

பொழிப்புரை: புலர்வதன்முன் எழுந்து குளிர்ந்த புனல் மூழ்கிப் புனித வெண்ணீற்றினைத் திருவைந்தெழுத்தோதி யணிந்து அகம்புறந் தூயராய்க் காதலால் நாடும் மெய்யடியார்களின் மனத்தின்கண் சிவன் மேலோங்கித் திகழ்வன். (மலர் விரிந்தால் மணம் புலனுவதுபோன்று மனம நினைந்தால் மன்னு சிவன் மேலோங்கி நிலவுவன்.) அப் பெருமான் செஞ்சுடர் வடிவினன். அவன் "காலையே போன்றிலங்கு மேனியன்;" "மாலையின் றோங்கு குருவே போலும் சடைக் கற்றையன்." இவ்விரண்டினையும் குறிப்பது 'அந்திவானிறத்தான்' என்பதாகும. ஆண்டவனைச் சார்ந்து அழகு நிறைவுறும் ஆருயிரின் அடையாளமாகிய மதியினை முன்னுளிலேயே பெரும் பேரருளினால் திருச் சடையில் சூடியருளிய மூன்று திருக் கண்களையுடையான் திருவடியினை மனமொழி

மெய்களால் தொழுவார், அவன் திருவருளால் சிவவுலகத்தின்கட் சென்று பேரின்பம் எய்திப் பெருக வாழ்வர்.

விளக்கம்: மதிசூடுதலுக்குப் புனைந்துரையாக வழங்கிவரும், திங்களின் கதை சிறிதும் பொருந்தாதென்க. பொருந்துமியல்பு விளக்க விளங்கும் மதியினையுடைய ஆருயிர் என்பதே. அவ் வுண்மை வரும் பட்டினத்தடிகளின் திருமொழியான் உணர லாம் :

"தூமதி சடைமிசை சூடுதல் தூநெறி
யாமதி யானென வமைத்த வாறே" —௧௧. திருவொற்றி-௬.

மேலும் "குறைமதியம் வளரவைத்தார்" என்னும் திருக் குறிப்பினலும் இவ் வுண்மை புலனாகும். அது வருமாறு

"உற்றுலவு பிணியுலகத் தெழுமை வைத்தார்
உயிர்வைத்தா ருயிர்செல்லுங் கதிகள் வைத்தார்
மற்றமரர் கணம்வைத்தார் அமரர் காணு
மறைவைத்தார் குறைமதியம் வளர வைத்தார்
செற்றமலி யார்வமொடு காம லோபம்
சிறவாத நெறிவைத்தார் துறவி வைத்தார்
நற்றவர்சேர் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே" —௬. ௧௪-௬.

முக்கண் என்பது இயல்பாக விளங்கும் இறைவனின் அன்பு அறிவு ஆற்றல்கள். ஞாயிறு திங்கள் தீயென்றலும் ஒன்று. அந்தி என்பது காலை மாலை இரு வேளைகளினும் காணப்படும் செவ் வானங்களாகும். வானுலகம் - சிவவுலகம். செந்தமிழ்த் திருவைந் தெழுத்து மந்திரத்தினுள் ஓங்காரம் அடக்கம். அதனல் ஐந்தெழுத்து மந்திரத்துக்கு ஓங்காரம் வேண்டுவதின்று. ஓங்காரம் சேர்க்கப்படின் அஃது ஐந்தெழுத்தென்னும் மரபகன்று ஆறெழுத்தாகிவிடும். ஏனைய மந்திரங்களுக்கு ஓங்காரம் சேர்க்கப் படாதவழிப் பயனின்றாம். அவை நெய்யில்லா வுண்டிபோல் பாழாகும். திருவைந்தெழுத்து நெய்யுணு அல்லது நெய்யாற் சமைத்த வுணப் போன்றதாகும். எனவே அதற்கு ஓங்காரம் போன்ற நெய் மிகையாம் என்க. அவ் வுண்மை இத் திருப் பாட்டின்கண் உய்த்துணரக் கிடக்கின்றது. அது வருமாறு: முதல் வரியில் "சிவன்" என்னும் மறை முதல் வெளிப்பட்டு நிற்கின்றது. முதல் வரியின் முதலெழுத்துச் "சி." நான்காவது வரியின் முதலெழுத்து "வ." இவை யிரண்டும் கூடின் "சிவ" என்னும் மறைமுதலாகும். மறைமுதல்-ஐந்தெழுத்து மந்திரத் தின் முதலில் நிற்பது. இத் திருப்பாட்டின்கண் மேலும் கீழும் பக்கமும் "சிவ" என்னும் திருமறையே நிற்பது தெளிந்தாம்.

தெளியவே, இடை நின்ற இரு வரிகளும் எங்ஙனம் அமைந்துள்ளன என்பதை நோக்குவோம. இரண்டாவது வரி "அந்தி" எனவும், மூன்றாவது வரி "முந்தி" எனவும் துவங்குகின்றன. இவற்றை முறைப்படுத்தின் 'அ+உ+ம்' என்றாகும். இம் மூன்றும் சேர்ந்ததே ஓங்காரம. இக் குறிப்பினால் ஓங்காரம் ஐந்தெழுத்தினுள் அடக்கம் என்பது தானே போதரல் காண்க.

நம்முடைய உடலுறுப்புக்கள் சிறப்பாக இறைவன் திருத்தொண்டினுக்கே அமைந்தன என்பதைத் "திருவங்கமாலை"யாற் காணலாம். அத் திருப்பதிகத்தின்கண் பன்னிரண்டு திருப்பாட்டுக்கள் காணப்படும். முதல் ஒன்பது திருப்பாட்டுக்களினும் முறையே ௧. தலை ௨. கண்கள் ௩. செவிகள் ௪. மூக்கு ௫. வாய் ௬. நெஞ்சு ௭. கைகள் ௮. ஆக்கை ௯. கால்கள் முதலிய ஒன்பது உறுப்புகளும் இறைவன திருததொண்டினுக்கே குறிக்கப்பட்டுள்ளன. எஞ்சிய திருப்பாட்டுக்கள் மூன்றும முறையே இறை உயிர் தளை என்னும் முப்பொருளுண்மை காட்டுவனவாகும். இவ் வரிய திருப்பதிகத்தினை நாடொறும் நம்மவர் ஓதிவருதல் வேண்டும் அதன் பொருட்டு இப் பதிகம் சிவதீக்கையில் "தொடுமிடம்" என்னும வரிசையில் அமைக்கப்பட்டுள்ளமையும் காண்க.

சிவ வழிபாட்டில் சிவபெருமான் திருவுருவினை எழுந்தருளப் பண்ணுவார் முதற்கண் இடமமைத்தலும, பின்னர்த திருவடி, ஆடை, கச்சு, கை, கண்டம், முகம், நெற்றி, திருமுடி, திருவடிவிரல் ஆகிய ஒன்பது திருவுறுப்புக்களைக் குறிததுத் தொழுதலும் ஆகிய மேற்கொள்ளும் நற்றவத்திற்கு வாய்ப்பாகப் "பாளையுடைக்கமு"கெனத் தொடஙகும திருவிருத்தத் திருப் பதிகம அருளிச செய்துள்ளார்கள். அதனை வழிபாட்டினர் நாளும் மேற்கொள்ளுதல் வேண்டும்.

சிவ வழிபாட்டின் உயிர் போன்றது போற்றித் தொடர் புகன்று ஆறறவும மலர்தூவி வழிபடல் இதனை அருச்சனை எனபா. இதன் பொருடடு நம நாயனார் அருளிச் செய்த போற்றித திருத்தாண்டகம் ஐந்தாகும். அவை முறையே திருவதிகை வீரட்டானததிற் கொனறு, திருவாரூர்க்கு ஒன்று, திருக்கயிலாயத்திற்கு மூன்று என்பனவாம். இவைவந்தினையும் சிவபெருமானின் ஐம்பெரும் திருவருட்டொழில்களுக்கு அமைத்துக் கொள்ளுதல் வேண்டும். அவையே ஐம்பெருங கடவுளர்க்கும் அமைந்தனவாகும். ஐம்பெருந் தொழில்களாவன: ௧. ஆக்கல் ௨. அளித்தல ௩. அழித்தல் ௪. ஆளாக்கல் ௫. அருளலென்பன. ஆளாக்கல் - மறைததல். ஐம்பெருஙகடவுளராவார் ௧. பிள்ளையாா ௨. முருகன் ௩. ஆலமர் கடவுள் ௪. அம்மை

ரு. அருளோன் எனப்படுவர். இவர்கள் முறையே மேற்போந்த ஐம்பெருந் தொழிற்கும் ஏற்புடைக் கடவுளராவர். இப்போற்றித் திருத்தாண்டகம் ஐந்தனுள் அருளோனாகிய சதாசிவக் கடவுளுக் குரியது "கற்றவர்களுண்ணுங் கனியே போற்றி" எனத் துவங்கும் திருவாரூர்த் திருத்தாண்டகமாகும். இதன்கண் ஒரு நூற்றெட்டுப் போற்றித் தொடர்கள் காணப்படுகின்றன. இத் திருக் குறிப்பால் இத் திருப்பதிகம் செந்தமிழ் மாமறைத் திரு அருச்சனைக் கென்றே ஓதியருளப்பட்டமை நன்கு புலனும். இம் முறையான் ஏனைய போற்றித் திருத்தாண்டகங்களும் அருச்சனை வழிபாட்டிற் கென்றே ஓதியருளப்பட்டமை ஓர்க அவற்றையும் ஒரு சிறிது விளக்குதும்:

க. பிள்ளையார், ஆக்கல்: "பொறையுடைய" என்று துவங்குவது. இதன்கண் எண்பத்தேழு போற்றித் தொடர் காணப்படுகின்றன. இவற்றுடன் "கற்றவர்களுண்ணுங் கனியே போற்றி" என்பதையும் அதன் கணுள்ள "நஞ்சுடைய" என்று துவங்குவதையும் சேர்த்துக் கொண்டால் நூற்றெட்டாகும்

உ. முருகர், அளித்தல்: "எல்லாஞ் சிவனென்ன"த் துவங்குவது. இதன்கண் எண்பத்திரண்டு போற்றித் தொடர் காணப்படும். இவற்றுடன் முற்கூறிய "நஞ்சுடைய" என்னும் திருப்பாட்டும், "சங்கரனே" என்னும் திருப்பாட்டும் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

ங. ஆலமர் கடவுள், "பாட்டான" எனத் துவங்குவது. இதன்கண் எண்பத்தொரு போற்றித் தொடர் காணப்படும். இவற்றுடன் "நஞ்சுடைய" என்னும் திருப்பாட்டும், "பொன்னியலும்" என்னும் திருப்பாட்டும் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

ச. அம்மை, "வேற்றாகி" எனத் துவங்குவது, இதன்கண் தொண்ணூற்றேழு போற்றித் தொடர் காணப்படும் இவற்றுடன் "நஞ்சுடைய" என்னும் திருப்பாட்டினைச் சேர்த்துக்கொள்ளுக.

மேற்போந்த திருத் தொழில்கள் ஐந்தும் ஒருங்குணர்த்தும் திருவுருவம் கூத்தப்பெருமானாகும் இவற்குத் திருவாசகத் தின்கண் காணப்படும் போற்றித் திருவகவல் மொழிந்து அருச் சித்தல் வேண்டும். இதன்கண் நூற்றைம்பத்தெட்டுப் போற்றித தொடர்கள் காணப்படும். இவை போன்றவற்றால் வழிபடுவோ மாக. நம் தாய்மொழியாம் நற்றமிழ் மறையே நமக்குயிர்.

அப்பரடி வாழ்க அருந்தமிழ்நூல் வாழ்கமறை
செப்புதிரு நீறுவாழ் க.

---

# திருநெல்வேலியில்

# கக-வது தமிழ்த் திருநாள்

திருநெல்வேலிக் கூடல் தருமபுர மடாலயம் திருஞான சம்பந்த தேசிகர் மன்றத்தில் குருஞான சம்பந்தர் திருமுறைக் கழகம், தருமையருள்பெறு நெல்லை அருணகிரி இசைக் கழகம் ஆகியவற்றின் சார்பில் ககூகூ சித்திரை முதல் நாள் (14-4-59) தொடங்கிப் பத்தாம் நாள் முடிய கக-வது தமிழ்த் திருநாள் மிகச் சிறப்பாக நடந்தேறியது

14-4-59 முதல் நாள் தருமபுர மடாலயத் திருமுன்றிலில் அமைக்கப்பெற்ற முத்தமிழரங்கத்தில் மாலை 6-30 மணிக்கு இசைவாணர் திரு. குற்றாலலிங்கம் பிள்ளையவர்களின் இறை வணக்கம், தமிழ்த்தாய் வணக்கப் பாக்களுடன் தமிழ்த் திருநாள் தொடங்கியது. அருணகிரி இசைக் கழகத் தலைவர் திரு எஸ். எஸ். பிள்ளையவர்கள் வரவேற்புரை வழங்கினர். நெல்லை மாவட்டத் துணைநீதிபதி திரு. எம். நடராசன், எம். ஏ., பி எல், அவர்கள் விழாவைத் தொடங்கி வைத்து உரையாற்றினர். விழா அமைப் பையும் நடைமுறைகளையும் பந்தலில் கூடியிருந்த பல்லாயிரக் கணக்கான மக்கள் திரளையும் கண்டு வியப்பும் மகிழ்வுமுற்ற திரு நடராசன் அவர்கள், 'இஃதோர் இனிமையான விழா! தமிழ் என்ற சொல்லுக்கு இனிமை என்ற பொருளுண்டு; இன்று என் வாழ்வில் பெருமிதம் கொள்ளும் இனிமையான விழா! இத் தமிழ் விழா! நெல்லை மாவட்ட மக்களுக்கு இன்பந் தரும் இனிமையான விழா; இதில் கலந்து கொள்ளும் எல்லோருக்கும் இனிமையளிக்கும் தனிப்பெரு விழா!' என்று பாராட்டிப் பேசினர். அன்று திருவள்ளுவர் விழா. விருதுநகர் வள்ளல் வள்ளுவவேள் திரு ச. வெள்ளைச்சாமி நாடார் அவர்கள் வாழ்த் துரை வழங்கினர். அவர்கள் தமது உரையில் பல குறட்பாக் களுக்கு அனுபவ வாயிலாகக் கண்ட புதிய உரைகளை விளக்கி யது குறிப்பிடத் தக்கதாகும்.

உலகில் சிலர் கண்ணிழந்தவராய், செவிப்புலன் இழந்தவ ராய், வாயில்லா ஊமையராய் இங்ஙனம் பொறியிழந்து வாழ் கின்றனர். அது பழித்தற்குரிய நிலையன்று. ஒருசில பொறி களை யிழந்தவரும் நூல்களைக் கற்று முயற்சியை மேற்கொள்ளா திருப்பதுதான் பழியாகும். குறளவதானி ஒருவர் தாம் கண் ணிழந்தபின் திருக்குறளைத் தெளிவாகக் கற்று அவதானம் செய்யும் ஆற்றல் பெற்றுச் சிறப்புற்று வாழ்கிறார். அவர்,

'பொறியின்மை யார்க்கும் பழியன்(று) அறிவறிந்(து)
ஆள்வினை யின்மை பழி.'

என்ற குறட்பாவுக்குத் தக்க எடுத்துக்காட்டாக இலங்குகிறூர் என்று குறிப்பிட்டனர் விருதை வள்ளல்.

அன்று திருவள்ளுவர் உரைவளம் என்ற தலைப்பில் நால்வர் அறிஞர்கள் உரையாற்றினர். 15-4-59 கமபர் விழா. 17-4-59 உலக இலக்கிய விழா. 18-4-59 திருமுறை விழா. 19-4-59 உ-வது சிற்றிலக்கிய மாநாடு 20-4-59 சித்தாந்த விழா. 21-4-59 திவ்ய பிரபந்த விழா. 22-4-59 பொது அறிவு விழா. ஒவ்வொரு நாளும் பற்பல அறிஞர்கள் கலந்து சொற்பொழிவாற்றினர். பல்லாயிரக் கணக்கான மக்கள் கலந்து மகிழ்ந்து இன்புற்றனர்.

# எது படை?

[திரு. மு. பெ. நளபதி]

படை என்பது யாது? வேற்படையா? வாட்படையா? வேறு சுழல் பீரங்கிப் படையா? அணுப்படையா? இல்லவே இல்லை. இவையெலாம் படையாக மாட்டா! பிறகு எது படை?

'படை' என்பது அழிவு அற்றது. எனவே, மேலன யாவும் படையாகமாட்டா என்பது புலன்! அறை போகாதது எதுவோ அது படை. அறை போகாதது என்பது இருள் கவ்வு மிடத்திற்குச் செல்லாதது. மலைநாடி மறைவு செல்லாதது. கீழோர்க்கு அடங்காதது எனப் பல பொருளுரை தருமென்பதை நாமறிய வேண்டும அதுமட்டுமன்று; அது வன்கணது வழி வந்தது! மறவர் வழித்தோன்றலாயிருப்பவனை எல்லாரும் சிறப்புச் செய்வர். 'வழிவந்த வன்க ணதுவே படை' என்னும் உறுதித் தொடர் இனவழியின் பெருமைக்கு முதலிடம் தந்து, சூழ்நிலை உயர்வுக்கும் வழிகாட்டுகிறது!

"அழிவுஇன்று அறைபோகாது ஆகி வழிவந்த
வன்க ணதுவே படை."

என்பதை ஆய்க. மேலும்........

"கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்றல் அதுவே படை."

ஆம், படையென்பது கருவியன்று. அஃது ஆற்றல்! எதிர் நிற்கும் என்னும் தொடர் கூற்றினுக்கொப்பான ஆற்றலினைக் குறிப்பது எனினுமாகும்!

---

# *இரண்டாவது சிற்றிலக்கிய மாநாடு

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைச் சார்ந்த அறநிலையங்களுள் ஒன்றாகிய திருநெல்வேலித் தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தின் சார்பில் சித்திரை சு-ம் நாள் (19-4-59) ஞாயிறன்று உ-வது சிற்றிலக்கிய மாநாடு நடைபெற்றது. அன்று காலை 9-30 மணிக்கு மாநாட்டு நிகழ்ச்சிகள் தொடங்கின.

முதற்கண் வித்துவான் திரு. அ. க நவநீதகிருட்டிணன் அவர்கள் அருணகிரி இசைக் கழகச் சார்பில் மாநாட்டுத் தலைவர், சொற்பொழிவாளர்களை வரவேற்று உரையாற்றினர் பின்பு சைவசித்தாந்தக் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையாப் பிள்ளையவர்கள் வரவேற்புரை வழங்கினர். அவர்கள் தமது வரவேற்புரையில் கழகம் தோன்றி வளர்ந்த வரலாற்றையும் அது செய்து வரும் தமிழ்ப்பணி சைவப்பணிகளையும் விளக்கியதுடன் அதற்கு வித்திட்ட வித்தகராம் திருவரங்கனாரின் அருஞ்செயலை நினைந்து உளங்கனிந்து உருகிய காட்சி எல்லோருடைய நெஞ்சத்தையும் நெகிழ்வித்தது.

பின்னர், சித்தாந்த சைவப்புலவர் டாக்டர் தி. இரா. அண்ணாமலைப் பிள்ளையவர்கள் மாநாட்டைத் தொடங்கி வைத்துப் பேருரை வழங்கினர். அவர்கள தமது உரையில் குமரகுருபரர் அருளிய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் ஆகிய இரண்டனையும சிறப்பாக எடுத்துக் கொண்டு பெண்பால், ஆண்பால் பிள்ளைத் தமிழ் நூல்களுக்குச் சிறநத எடுத்துக் காட்டுக்களாக விளங்குபவவை அந்நூல்கள் என்றும, அத்தகைய நூல்கள் நம் நெல்லைக கவிஞர்பெருமானால் அருளப்பெற்றவை யாதலின் பிள்ளைத்தமிழ் மாநாடாகவே விளங்கும் இச்சிற்றிலக்கிய மாநாடு நெல்லைமாநகரில் நிகழ்வது பொருத்தமென்றும், குமரகுருபரர் வீற்றிருந்து அருள் வளர்த்த இத்திருமடத்தில் நடைபெறுவது மிகப் பொருததமென்றும் குறிப்பிட்டார்.

அதன் பின்னர் மாநாட்டுத் தலைவர், பேராசிரியர் திரு அ. மு. பரமசிவானந்தம் எம்.எ, எம் லிட்., அவர்களின் தலைமைப் பேருரை நடைபெற்றது. அவர்கள் தமது உரையில் தமிழின் பெருமை, தமிழ் நூல்களின் பெருமை, சிற்றிலக்கியங்களின் சிறப்பு, பிள்ளைத்தமிழ் மாண்பு முதலியவற்றை விளக்கினர். தலைவர் பேருரைக்குப் பின் மதுரைப்புலவர் திரு. மீ. கந்தசாமிப் புலவர் அவர்கள் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழைப்பற்றி உரையாற்றினர். பின், விருதைப் புலவர் திரு. அ. இராச

---

* நெல்லைத் தமிழ்த் திருநாளில் 19-4-1959-ல் நடைபெற்றது.

கோட்டியப்பன் அவர்கள் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், காந்திமதியம்மை பிள்ளைத் தமிழ் ஆகிய இரு நூல்களைப்பற்றி உரையாற்றினர். பின், திருப்பனந்தாள் புலவர் திரு. கு சுந்தர மூர்த்தியவர்கள் முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், திருச்செந் தூர் முருகன் பிள்ளைத் தமிழ் ஆகிய இரு நூல்களைப் பற்றி உரையாற்றினர்.

இம்மூவர் உரைகளுக்குப் பின் பாளையங்கோட்டை நகர் மன்ற ஆணையாளர் திரு. B. சிவகுருநாதன் செட்டியார், B,A , B L., அவர்கள் மாநாட்டுச் சொற்பொழிவு நூலை வெளியிட்டு உரை யாற்றினர் அவர்கள் தமது உரையில் சைவசித்தாந்தக் கழகத் தின் நூல் வெளியீட்டுப் பணியைப் பாராட்டினர். பிள்ளைத் தமிழ் நூலில் 'அம்புலிப் பருவம்' அமைப்பது அருமையென்றும சாம பேத தான தண்டம் ஆகிய நால்வகை உபாயங்களால் அம்புலியைக் குழந்தையுடன் ஆடவருமாறு அழைக்கும் முறை மிகவும் அழகு வாய்ந்ததென்றும் அப்பருவத்தில்தான் புலவர்கள் தங்கள் நுட்பமான புலமைத் திறனைக் காட்டிப் பாடுவர் எனறும் குறிப்பிட்டனா. மேலும் பிள்ளைமைப் பருவத்தில் குழந்தைகளைப் பேணி வளர்ப்போர் அவர்களைப் பெற்ற தாயரே யாதலின் அவர்கள் செவிகளில் இனிய பாடல்களைப் புகுத்தினல் அப் பிள்ளைகள் எதிர்காலத்தில் தமிழ்ப்பற்று, சமயப்பற்றுள்ள குழந்தைகளாக வளர்நது நாட்டிற்கும் வீட்டிற்கும் விளக்கந தருவர் என்றனர். அச்செயலைத் திறம்படச் செய்தற்குத தாய் மார்கள் பிள்ளைத்தமிழ் நூல்களை வாங்கிப் படிக்கவேண்டும், சிறப் பாகத் தாலப்பருவப் பாடல்களைப் படிததுத் தாலாட்டும காலத்து அவற்றைப் பாடவேண்டும் என்று குறிப்பிட்டனர். பகல் 12-30 மணியளவில காலை நிகழ்ச்சி நிறைவெய்திற்று.

பகல் விருந்து, நிழற்படமெடுத்தல் முதலிய நிகழ்ச்சிகளுக் குப்பின் இரவு 7 மணிககு மீண்டும் மாநாடு தொடங்கியது. மாலை நிகழ்ச்சியில் முதற்கண் மகா வித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் 'அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ், அகிலாண்ட நாயகி பிள்ளைத் தமிழ்' ஆகிய இரு நூல்களைப்பற்றிப் பேசினர். பின் தருமபுரம் புலவர் திரு. சொ. சிங்காரவேலன் அவர்கள், 'சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், திருவிடைக்கழி முருகர் பிள்ளைத் தமிழ்' ஆகிய இரு நூல்களைப்பற்றி உரையாற்றினர். பின் மதுரைப் புலவர் திரு கு. பரமசிவன், M.A., அவர்கள் 'திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ், திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்' ஆகிய இரு நூல்களைப்பற்றி உரையாற்றினர். பின், தேவகோட்டைச் சித்தாந்தப் புலவர்மாமணி பாலகவி திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள் 'திருஞானசம்பந்தர்

பிள்ளைத்தமிழ், திருநாவுக்கரசர் பிள்ளைத்தமிழ்' ஆகிய இரு நூல்களைப்பற்றி உரையாற்றினர். பின், நெல்லைப்புலவர் திரு. வே. மாணிக்கவாசகம் பிள்ளையவர்கள் 'சுந்தரமூர்த்தி பிள்ளைத்தமிழ், மாணிக்கவாசகர் பிள்ளைத்தமிழ்' ஆகிய இரு நூல்களைப்பற்றி உரையாற்றினர். இறுதியில் மதுரைப்புலவா திரு மீ கந்தசாமிப் புலவர் அவர்கள் 'சேக்கிழார் பிள்ளைத்தமிழ்' பற்றி உரையாற்றினர்

இரவு 10 மணியளவில் மாநாட்டுத் தலைவர் திரு. அ மு. பரமசிவானந்தம் அவர்களின் நிறைவுரை நடைபெற்றது. தலைவா தமது நிறைவுரையில் மாநாட்டில் கலந்துகொண்ட புலவர் எண்மரையும் அவர்கள் சொல்வன்மை எழுத்துவன்மைகளைக் குறிப்பிட்டுப் பாராட்டிப் பேசினர் இத்தகைய மாநாடுகள் நகரந்தோறும் திஙகள்தோறும் நடைபெற வேண்டுமென்றும், அதனல் மக்களிடையே தமிழ் நூல்களைக் கற்கும் ஆர்வம் பெருக வேண்டுமென்றும், இப் பணியில பல்லாண்டுகளாக முயன்று பற்பல இலக்கிய மாநாடுகளை நடத்திவரும் கழகத்தின் தொண்டு பாராட்டுதற்குரியதென்றும், இதனை முன்னின்று நடத்தும் அருணகிரி இசைக்கழகம் தமிழகத்தின் கழகங்களுக்கே ஒரு வழிகாட்டியாக ஒளிர்கிறதென்றும் தலைவர் தமது உரையில் குறிப்பிட்டனர். இறுதியில் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையாப பிள்ளையவர்களின் நன்றியுரையுடன் மாநாடு சிறப்புற நிறைவேறியது. மாநாட்டிற்குத் தமிழகத்தின் பலதுறைப் பேரறிஞர்களும் பேராவலர்களும் வாழ்த்துச் செய்திகள் அனுப்பியிருந்தனர் தருமையாதீன மகா சந்நிதானம் அவர்களின் வாழ்த்துச் செய்தி, விழாவில் வாசிக்கப்பெற்றது.

## எங்கள் நூல்

[வித்துவான், வ. சு. வேங்கடேசன்]

உலகத்தார் உவந்தேத்தும் ஒருநூல்—எங்கள்
உளவிருளை நீக்குகின்ற திருநூல்
பலமொழியில் மொழிபெயர்த்த செந்நூல்—எங்கள்
பைந்தமிழில் உண்டாந்தத் தொன்னூல்
நலம்பயக்கும் கலைகளருள் நன்னூல்—எங்கள்
நாட்டிற்கே சிறப்பளிக்கும் இந்நூல்
புலவரெலாம் போற்றுகின்ற பெருநூல்—எங்கள்
புகழ்விளைக்கும் திருக்குறளாந் திருநூல்.

# இரண்டாவது சிற்றிலக்கிய மாநாட்டு
# வாழ்த்துக்கள்

'சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம் தமிழ்முழக்கம் செய்திடுவீர்' என்ற கவிஞனின் கருத்தினை மெய்ப்பிக்கும் வகையில் தமிழ்ப்பணி புரிந்துவரும் தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தினர் வாழ்க! அவர்கள் தொண்டு வெல்க!

மயிலை. சிவமுத்து,
தலைவர், மாணவர் மன்றம் சென்னை.

தமிழ்த் தொண்டில் தலைசிறந்து நிற்பது அரிய தமிழ்க் கருவூலங்களைப் பலகோணங்களினின்று ஆராய்ந்து சீரிய விளக்கங்களுடன் வெளியிடுவதேயாகும் இத் தொண்டினைப் பல்லாண்டுகளாக நல்ல முறையில் ஆற்றி வரும் கழகத் திருப்பணி தமிழ் நாட்டின் தனிப்பெரும் பாராட்டுக்குரியது

மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை.

படிக்க விருப்பம் மிகுகிறது, ஆனால் படிக்க முடியாமல் இருக்கிறதே என்று ஏங்கும் தமிழ்ப் பற்றுடையார் பலரும் விழைந்து படிக்க விருந்தாக அமையும் சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் நூல் என்பது உறுதி வாழ்க தங்கள் ஊக்கம்! வெல்க தங்கள் தண்தமிழ்ப் பணி!

கீ. இராமலிங்கம், எம். ஏ.

இங்கொன்று அங்கொன்றாகச் சில பேரிலக்கியங்களின் சிறு சிறு பகுதிகளைக் கண்டு தமிழின் அளவைக் கண்டுவிட்டதாக மக்கள் மயங்கித்திரியும் இக்காலத்தில் தமிழின் சிறந்த நிதியங்களாகிய சிற்றிலக்கியங்களைத் தாங்கள் அழகுறப் பிரசுரித்து வருவது மிகவும் போற்றத்தக்கது.

ரா. விசுவநாதன்,
டாக்டர், உ. வே. சா. நூல் நிலையம் சென்னை.

பேரிலக்கியம் படிப்பதற்கு வழிகாட்டி சிற்றிலக்கியம். இதுவே முன்னோடியாக விளங்கி, முற்றிய புலமைச் சான்றோர் ஆக்கிய பேரிலககியங்கள் தெற்றெனப் புலப்படும்படி செய்கின்றன. உலகில் தமிழ் தவிர வேறு எந்த மொழியிலும் பிள்ளைத்தமிழ் இலக்கிய முறை இல்லை. ஒருவரின் படிப்படியான உணர்ச்சியைப் பாகுபாடு செய்து பாங்குற விளக்குவது இது. மாநாடு வெற்றிபெற வாழ்த்துக்கள்.

மெ. சுந்தரம், எம்.ஏ., எம்.லிட்., பி.ஓ.எல்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்துச் செயலாளர் வ. சுப்பையாப் பிள்ளை அவர்கள் பலவகையிலும் சைவமும் தமிழும் தழைத்தோங்கச் செய்துவரும் பெருந்தொண்டர் என்பது யாவரும் அறிந்த உண்மை பதினெண்மேற்கணக்கு, பதினெண்கீழ்க்கணக்கு, பத்துப்பாட்டு, ஐம்பெருங்காப்பியம் முதலியவற்றை உலகம் அறியச் செய்ய அவ்வந் நூற்பெயரால் மாநாடுகள் கூட்டுவித்து, அரிய பெரிய சொற்பொழிவாளர்களை அமைத்து, அவைகளை அழகுறுத்தி, அச் சொற்பொழிவு நூல்களை நன்முறையில் வெளியிட்டுவரும் பெரியதொரு செயலைப் போற்றாதார் எவரும் இலர்

முதலாவது சிறறிலக்கிய மாநாட்டில் நிகழ்நத சொற்பொழிவுகளைத் தொகுத்து, அண்மையில் வெளியிட்ட நூலை அறிந்திருப்பர் பலரும். இரண்டாவது சிற்றிலக்கிய மாநாடு தென்னிந்திய தமிழ்ச் சஙகததின் சார்பில் நெல்லையிலுள்ள தருமையாதீன மடததில் 19-4-59-ல் நிகழ்த்த ஏற்பாடாயிருக்கிறது. அறிஞர் பற்பலர் அம் மாநாட்டில் தலைமை முதலியவற்றிற்கு அமைந்திருப்பது மிகப் பாராட்டததக்கது. பிள்ளைத் தமிழ் மாநாடு இது, பெரிய தமிழ்ப்புலவர் மாநாடும் இதுவே முதலாவது சிற்றிலக்கிய மாநாட்டில் ஆதீனக் கல்லூரி வித்துவான், சொ. சிங்காரவேலனும், இரண்டாவது மாநாட்டில் அவரும் ஆதீனப் புலவருள் இருவரும் கலநது கட்டுரை எழுதியும் சொற்பொழிவாற்றியும் தொண்டாற்றுவது குறிக்கத்தக்கது.

இலக்கியம முதலிய நூலுணர்வு பெருக இத்தகை தொண்டு சாலவும் வேண்டற்பாலது. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம வாழ்க. தென்னிந்திய தமிழ்ச் சங்கம் வாழ்க வ. சுப்பையா பிள்ளை வாழ்க. மாநாடு இனிது நிகழ்க. அருணகிரி இசைக் கழகம் சிறந்து விளங்குக. தமிழ்த் திருநாள் என்றும் பெருகுக.

ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்,
தருமபுர ஆதீனம்.

செந்தமிழ் நாடு மகிழத் தெரிந்தாய்ந்து
தந்தனர் பிள்ளைத் தமிழ்நூல்கள்—முந்தையின்
சீர்பெறு தென்னிந் தியதமிழ்ச் சங்கத்தார்
பேர்பெற வாழ்க பெரிது!

புலவர்—'அரசு'

வாழ்க தமிழ்ச்சிற் றிலக்கிய மாநாடு
வாழ்வ வதிற்சேர்ந்த மாண்புடையோர்—வாழ்கதமிழ்ப்
பன்னூல் பலவும படித்தறியும் பண்புடையோர்
பன்னாளுண் டின்பம பதிந்து.

தி. மு. சங்கரலிங்கம்,
விழுப்புரம்.

பிள்ளைத் தமிழினது பெட்பெல்லாம் நன்குணர்ந்தே
தெள்ளத் தெளிந்த செழுந்தமிழால்—அள்ளியே
வாரி வழங்கியிடும் மாபுலவர் பேருரைகள்
சீருடனே வாழ்க! சிறந்து

நா. சிவராமமுத்துக்குமாரவேல்,
தேனி

## கீழ்க்கண்டவர்களிடமிருந்தும் வாழ்த்துச் செய்திகள் வந்துள்ளன:

நாடகப் பேராசிரியர், ப. சம்பந்த முதலியார்; வித்துவான், இராஜ. சிவ. சாமபசிவ சர்மா; சிறுவை மோகனசுந்தரம், செய லாளர் நக்கீரர் கழகம், சென்னை; மீ. பொன். இராமநாதஞ செட்டியார், சர். தியாகராயர் கல்லூரி, சென்னை; மா சு. சம்பந் தன், நகராண்மைக் கழக உறுப்பினர், சென்னை; கே என் சீனி வாசன், பி ஏ., பி எல , முன்னாள் நகராண்மைக் கழகத் தலைவா, சென்னை; டி. கே. எஸ் சகோதரர்கள்; ச. சச்சிதாநநதம் பிள்ளை, சென்னை; பூ. ஆலாலசுந்தரம் செட்டியார், எம ஏ; K. N. M. M. ST. சாததபபச் செட்டியார், பாகனேரி; சிவக்கிழார் திருநாவுக் கரசு, கோவில்பபட்டி; சி. ந சுப்பிரமணியம, ஆரல்வாய்மொழி, எஸ். மீனாட்சிசுந்தரம், பி. ஏ , எல் டி., கலைமகள் கல்வி நிலையம் ஈரோடு; எஸ் ஏ ஏ. இரத்தினசபாபதிச் செட்டியார், விருதுநகர்; பெ. நா. ஏகாம்பரம், உரிமையாளர் பாண்டியன் நூலகம், பெங்களூர்; சுப. அண்ணாமலை, எம் ஏ., தியாகராசர் கல்லூரி, மதுரை; திருமதி. தே. தியாகராஜன், எம.ஏ , டோக்பெருமாட்டி கல்லூரி, மதுரை; கி.ஆ.பெ. விசுவநாதம், திருச்சி; ராய சொக்க லிங்கம், அமராவதி புததூர்; வித்துவான், ஆ. சிவலிங்கனார், மயிலம்; வரலாற்றுச் செல்வர், ஆர். பஞ்சநத பிள்ளை, திருச்சி; வித்துவான், சி. இராமசாமி, வத்தலகுண்டு; சி. காந்திமதிநாதன், பெரியகுளம்; புலவர் செந்துறைமுத்து, சேலம்; வித்துவான், ந. சண்முகசுந்தரன், பண்ணுருட்டி.

---

## மகாவித்துவான்

# மறைத்திரு. சி. கணேசையரவர்கள்

[பண்டித வித்துவான், திரு. க. கி. நடராசன் B. O. L, Dip. in Ed ,]

(செல்வி சிலம்பு ௩௩, பரல் அ, ௩௬௭-ஆம் பக்கத்தொடர்ச்சி)

இப்பாட்டுக்கும் இன்னும் பல பாட்டுகளுக்கும் எழுதப் பெற்ற உரைகளிலிருந்து உரையாசிரியராகிய கணேசையரவர் களின் உரைகாணும வன்மையும் கம்பராமாயணமும் முதலிய இலக்கிய நூல்களிலுள்ள பயிற்சி மிகுதியும் நன்கு புலப்படு கின்றன. இரகு வமிசத்துக்குக் கணேசையர் அவர்கள் உரை கண்டிராவிட்டால், கற்றோர்க்குமே அதிற் பல செய்யுள்களுக்கு உரை காணமுடியாது இன்னும் இரகுவமிசச் செய்யுள்களின் அழகெல்லாம அறிய விரும்புவோர் கணேசையரவர்கள் "செந்தமி ழில்" எழுதிய "கவியின்பம்" என்னுங் கட்டுரையைப் படிப் பாராக. ஈண்டு விரிப்பிற் பெருகும்.

இனி, செந்தமிழ்க் கருவூலமாகிய தொல்காப்பியத்துக்கு அவர்கள் எழுதிய உரை விளககமும உரையின்பாற் பட்டதே யாம அவ்வுரை நடையின் சிறப்பையும் அருமையையும் அறிஞர் களனைவரும அறிவர்; தொல்காப்பியங் கற்றார் அனைவரும் அறிவர் அவர்களது உரைநடையிலேயே பழைய உரையாசிரியர் களின் திட்பமும் நுட்பமும் அமைந்துள்ளன. அதே சமயத்தில், தெளிவும் இனிமையும் பயக்கும ஓர் எளிமையும அமைந்திருத் தலைக காணலாம். அன்றியும், முன்னைய உரையாசிரியர்களாகிய இளம்பூரணர், தெய்வச்சிலையார், கல்லாடர், சிவஞானமுனிவர், இலக்கண விளக்க நூலுடையார் கொள்கைகளையும் ஆராய்ந்து தாம் வந்த முடிபைத் தெரிவிக்கும் பகுதிகள் கற்றோர்க்குக் கழிபேருவகை பயப்பனவாம். தொல்காப்பியம் எழுத்ததிகாரப் பதிப்பைப்பற்றி டாக்டர் சாமிநாதையர் எழுதிய கடிதமொன்றை யும் இங்குத் தருகின்றேன் :

பிருமமஸ்ரீ கணேசையரவர்களுக்கு ஸ்ரீ நடராஜப் பெருமான் திருவருளால் எல்லா மங்களங்களும் மேன்மேலும் பெருக உண்டாகுக. உபயகுசலோபரி. தாங்கள் அன்புடன் இம்மாதம் 15 ஆம் தேதி அனுப்பிய கடிதமும் அதற்குமுன் அனுப்பச் செய்த தொல்காப்பியம் எழுத்ததிகாரமும் வரப்பெற்று மிக்க சந்தோஷமடைந்தேன். தஙகள் பதிப்புக்கள் மிக்க திருப்தியை உண்டு பண்ணுகின்றன. நூலில் அன்பு வைத்து அதன்பா

ளுள்ள விஷயங்களை வெளிப்படுத்துதலையே தனி இன்பமாகக் கொண்டு பலகாலம் உழைத்து ஆராய்ந்து பதிப்பிக்கும் முயற்சியுடையார் சிலரே. தாங்கள் அங்ஙனமே செய்து வருதலை மிகவும் பாராட்டுகின்றேன்: அவ்வப்போது எழுதிவந்த இலக்கணக் கட்டுரைகளையும் தங்கள் பதிப்புக்களிற் சேர்த்திருத்தல் தமிழாராய்ச்சியாளருக்குப் பெரிதும் உபகாரப்படுவதாகும்.

தாங்கள் இப்பொழுது தொல்காப்பியம் பொருளதிகாரத்தின் பிற்பகுதியைப் பேராசிரியர் உரையோடு வெளியிட வெண்ணியிருப்பது தெரிந்து மகிழ்ந்தேன். சிலகாலமாக நான் நோய் வாய்ப்பட்டுப் பெரும்பாலும் படுக்கையிலேயே இருத்தலின் தங்கள் விருப்பப்படி உடனே கை உரைச்சுவடியை எடுத்தனுப்ப இயலவில்லை இன்னும் சில நாட்களில் தேடி எடுத்து அனுப்புவேன்.

சொல்லதிகாரம்—நச்சினார்க்கினியத்தையும், பொருளதிகாரம்—முற்பகுதி நச்சினார்க்கினியருரையையும் முன்னர் வெளியிட்டுப் பின்னர்ப் பேராசிரியருரையை வெளியிடலாமே? தங்கள் விருப்பப்படியே செய்தல் நலமே.

இங்ஙனம்,
அன்புள்ள,
வே. சாமிநாதையர்.

தொல்காபபியத்துக்கு உரை விளக்கக் குறிப்பு எழுதியது மட்டுமல்ல, உரை நடையிலமைந்த நூல்களாகவும் சில எழுதியிருக்கின்றார்கள் கணேசையரவர்கள். அவர்தம் 47 ஆம் ஆண்டில் (அஃதாவது 1925 ஆம் ஆண்டில்) தமது ஆசிரியருளொருவராகிய சுன்னாகம் அ. குமாரசுவாமிப் புலவரவர்களைப்பற்றி "குமாரசுவாமிப்புலவர் வரலாறு" என்னும் பெயரோடு ஒரு வரலாற்று நூல் எழுதியிருக்கிறார்கள். இந்நூலிலிருந்து குமாரசுவாமிப் புலவரவர்களைப்பற்றி மட்டுமன்று, ஈழநாட்டுப் புலவர்களுக்கும் தமிழ்நாட்டுப் புலவர்களுக்குமிடையே இருந்த தொடர்பையும நாம் நன்கறிந்துகொள்ளலாம். "குசேலர் சரித்திரம்" என்னும் உரைநடை நூலும் இவர்களால் எழுதப்பட்டது. இதில் ஒரு பகுதியை இவர்தம் உரைநடைக்கு எடுத்துக்காட்டாகத் தருதும்:

"மதியிலிகாள்! நீவிர் இத்தபோதனரை யாரென்று நினைத்தீர்கள். இவர் பொய்ம்மையில்லார். பொறுமையுடையவர். அடக்கமுடையவர். பலவிரதங் காத்தவர் மறை நான்கும் மற்றும் ஓதினவர். கண்ணன்பாலன்றிப் பிறர்பாற் செல்லார்.

இவர் அழுக்கற்ற மெய்ஞ்ஞானியாவர். மெய்ஞ்ஞானிகளாவார்:— பொறிவழிப் போகார். மனத்தை ஒருவழிப்படுத்தி மெய்ப் பொருளையே என்றுஞ் சிந்தித்திருப்பர். மற்று எப்பொருளையும் விரும்பார். ஓட்டையும் செம்பொன்னையும் ஒக்க நோக்குவார். அஞ்சார். இயமனுக்கும் அஞ்சார். பிரளயத்துக்கும் அஞ்சார். அவர்க்கு எந்நாளும் இன்பமேயன்றித் துன்பமில்லை. அவர்க்குத் தம்மைப் புகழ்வதில் விருப்பும் இகழ்வதில் வெறுப்புமில்லை. அவர் வேர்த்தாற்குளிப்பர். பசித்தாற் புசிப்பர். துயில் வந்தாற் றுயில்வர். ஒன்றையும் நாளைக்கு வேண்டுமென விரும்பார். அட்டசித்திகளை விரும்பார் ஆடுவார்; பாடுவார்; சிரிப்பார்; பித்தர்போல் திரிவார் இன்றிருந்தவிடத்தில் நாளையிரார். கந்தையன்றி யுடார் அம்மெய்ஞ்ஞானிகளின் பெருமையை மதிப்பவர் யாவர்? எடுத்துச் சொல்ல வல்லவர் யாவர்? ஆயிரங்கவை நாவுடைய அரவத்தானும் முடியாது" என்பது. 1931 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட இந்நூலின் ஒன்பதாம் பதிப்புக்கு அணிந்துரை கொடுத்த முன்னாள் தபாற்பகுதி அமைச்சர் திரு. சு நடேசபிள்ளையவர்கள் இவர்கள் உரைநடையைப் பற்றிக் கூறுவது இதுவாகும்:

மதுரைத் தமிழ்ச் சஙகத்தின் வெளியீடாகிய "செந்தமிழ்"ப் பத்திகையில் தமிழ் இலக்கண இலக்கியப் பொருள் பற்றி இவர்கள் அவ்வப்போது எழுதியுள்ள கட்டுரைகள் இவர்களது நுண்மாண் நுழை புலத்தை விளக்கிப் பெரும்புகழை நாட்டுவன. இவர்களது கட்டுரைகள் தெள்ளிய தமிழுரை நடைக்கு எடுத்துக் காட்டாவன. இலகுவானதும், பொருட் செறிவுடையதும், வனப்புடையதுமான உரைநடை எழுதுவதில் இவ்வாசிரியருக்குள்ள ஆற்றல் பள்ளிக்கூட மாணவர்களுக்காக எழுதப்பட்ட இந்நூலினின்றும் நன்கு புலப்படும். சிறிய வாக்கியஙகளாலாகிய மிகவினிய ஓசை நயம் அமைந்தொழுகுகின்றது" என்பதாம். 1939 ஆம் ஆண்டில் இவர்கள் எழுதிய "ஈழநாட்டுத் தமிழ்ப் புலவர் சரித்திரம்" ஈழத்துப் புலவர்களுடைய வரலாறுகளை அறிய விரும்புவோர்க்குப் பெரிதும் பயன்படுவதாகச் சுவை மிக்கதாய் விளங்குவதொன்றும். இதனை இன்னும் விரிவாக எழுதி இரண்டாம பதிப்பாக வெளியிடுதற்கு எண்ணியிருந்தார்கள். அது கைகூடவில்லை. இவ்வாறே உரைநடை வல்லுநராகவும் இலக்கணப் போறிஞராகவும் விளங்கி அரிய தமிழ்ப் பணி செய்து வந்தார்கள் மகாவித்துவான் கணேசையரவர்கள்.

## கவிபாடுந்திறன்

"கவிபாடும் புலமிக்கோனே" என்று குமாரசுவாமிப் புலவரவர்கள் இவர்களைப் பாராட்டுகிறார்கள். பெரும்புலமை

படைத்த அவர்கள் அறியாது சொல்லமாட்டார்கள். கவிஞரின் பெருமையை மற்றொரு கவிஞரே நன்கறிவர். கணேசையரவர்களுடைய கவித்திறமையை அறியவேண்டுமேல், அவர்கள் இயற்றிய "மருதடி விநாயகர் பிரபந்தம்" என்னும் செய்யுணூற்றொகுதியைப் படித்தல்வேண்டும். இதில், கணேசையரவர்கள் தம் குலதெய்வமாகிய வருத்தலை விளான் விநாயகப்பெருமான் மீது பாடி 1949 ஆம் ஆண்டு வெளியிட்ட "மருதடி விநாயகர் இருபா இருபஃது"ம் 1951 ஆம் ஆண்டில் வெளியிட்ட "மருதடி விநாயகர் அந்தாதியும், அதனையடுத்து வெளியிட்ட வருத்தலை விளான் மருதடி விநாயகர் கலிவெண்பா கலிநிலைத்துறை ஊஞ்சல்" என்பனவும் அடங்கியுள்ளன இவை தனித்தனி அச்சிடப்பட்டிருந்தவற்றை அவர்கள் 1956 ஆம் ஆண்டில் தொகுத்து ஒன்றாக்கி வெளியிட்டார்கள். இந்நூல்களிலிருந்து வகைக்கோர் எடுத்துக்காட்டாகச் சில செய்யுள்களை ஈண்டுத் தருகின்றேன்.

இவற்றுள் வெண்பாவும் அகவற்பாவுமாக அமைந்த இருபது செய்யுள்களையுடையது "மருதடி விநாயகர் இருபா இருபஃது" இதில் வரும் அகவற்பாக்கள் சஙகச் செய்யுளகள் போன்ற இறுக்கமும, பொருளாழமும், ஓசைநயமும், தன்மை நவிற்சியணியும் பொருந்தியவை அவற்றுள் ஒன்று காட்டுதும்:

"தாமுழந் தீட்டிய தோமில் பொருளனும்
வேளாண் மாந்தர் தாளிழந்து வருந்த
[1] ஆமும் புலர்ந்து [2] கோளுந திரிநது
வானுந் [3] தொலைந்த [4] வறன்மிகு காலையும்
தன்னிடத் தருவிச் சின்னீ ருதவி
உலகம் புரக்கும் குலவரை போல
உள்ள து கொடுத்தும் வள்ளற பெருமை
பெறறே யறிகிலாப் பேதை மாந்தர்போல்
உற்றன பேணும் பற்றுடை யிந்திரன்
வாழ்க்கையு மிநத மண்ணோர் வாழ்க்கையும்
வேண்டலன் நின்பெரு மலரடி வேண்டுவன்
குவளைக் கானந துவளப் பகட்டினம்
சென்றுபுல லருந்து துன்றுபல் வயல்கள்
சூழும் வருத்தலைத் தொன்மா நகரிடை
எனற் கதிர்போ லிலஙகுவெண் மலர்கள்
விரிதருஞ் சினைகள் மேவு மருதடி

---

1. ஆம் - நீர். 2. கோள் - கிரகம். 3. தொலைதல் - நீட்டித்தல்.
4. வறல் - நீர் வற்றுதல்

போற்றிட வமரரும் வீற்றிருந் தருளும்
மதமா முகத்தொரு வான்பெருங் கடவுளே."

ரீ வற றுஙகாலேயின றனமையும், வளளற் றன்மைக்குக் குலவரையை உவமை கூறிய சிறப்பும், மருதின் வெண்மலர்கள் ஏனற் கதிர்போல விளங்கும் என்ற நயமும், "குவளைக் கானந்துவள, பகட்டினம் சென்று" வயல்களிற் புல்லருந்தும் பெற்றியும் தன்மை நவிற்சியணி பொருந்த ஒரு சொல்லோவியமாகத தீட்டப்பட்டிருததலே நோக்குக படிக்குங் கால், இந்தப் பாவிலுள்ள ஓசை நயததையும செவிவாயிலாக ஓர்க. இச் செய்யுள் ஒன்றுமே இவர்தம் கவிததிறனைத் காட்ட அமையும் எனினும், மற்றைய நூல்களிலுமிருநது ஒவ்வொன்று காட்டுதும். இந்த இருபா இருபஃதோடு அன்பர்கள் முக்கட்கரும் பாகிய விநாயகமூர்ததியை வழிபட்டருள்பெற்றமையைக் கூறும் விருத்தப்பாக்கள் பத்தும் தைப்பூசச் சிறப்புக்கூறும் பாக்கள் ஐந்தும் சேர்க்கப்பட்டுள்ளன. அவற்றுள், வழிபட்டருள் பெற்றோர் பெற்றியைக் கூறுவனவற்றுள் ஒன்று வருமாறு:—

"வாக்கிற் றுதித்துச் சிலர்பெற்றார் மனத்தா னினைந்து சிலர்பெற்றார்
ஆக்குஞ் செம்பொற் கோவிற்னை யடியாற் சூழ்ந்து சிலர்பெற்றா
தேக்கொ ளூன்றன் உருநோக்கிச சிரோ டருளைச் சிலாபெற்றார்
ஊக்கி யொன்று மியற்றுதே னுறுவ துண்டோ மருதீசா."

எனவருஞ் செய்யுளிற் பொருந்திய பக்திச் சுவையும் இனிமை யையும் நோக்குக. இனி, விநாயகர் அந்தாதியின் கண்ணே வரும் பெருமிதச் சுவையோடு கூடிய பாட்டொன்றைக் காண்க.

"போற்றுவன் மாமருதீசன் பதங்களைப் போற்றிமிக
மாற்றுவ னென்றன் மனத்தி னலேயினை மாற்றியின்பந்
தோற்றுறு மோன நிலேயினைப் பெற்றுச சுகமடைவன்
கூற்றுவன் றன்னை யருளெனும் வாளாற் கொலே செய்வனே."

என்பது அது. மருதடி விநாயகர் கலிவெண்பாவில் விநாயகப் பெருமான் திருவுருவததை மிக அழகாக ஒரு சொல்லோவிய மாகத் தீட்டி, அப்பெருமானுக்குப் பூசை செய்யுமாற்றையுங் கூறி, அவ்வாறு பூசை செய்வோர் அடையும் பெரும் பலனையும் எடுத்துச் சொல்லுகின்றார்கள். காட்டுக்காக அதிலுள்ள ஆறு அடிகளை மட்டும் அகழ்ந்தெடுத்துத் தருகின்றேன்.

"—தஞ்சமென
எத்திக்கும் போற்றியிடு மேரம்ப மூர்த்திதனைத்
தித்திக்கும் மேலாய தெள்ளமுதை—முத்திக்குங்
காரணத்தை மெய்ஞ்ஞானக் கண்ணுக்குத் தோற்றியிடும்

பூரணத்தை யெங்குறைகள் போக்கியிடும் வாரணத்தை
ஏற்றவுயர் பூவா லினிமையொடு மர்ச்சனைசெய்
தாற்றுமுனை யென்பா லாக்குவாய்."

என்பது.

"ஊர ராமுடிப் பிஞ்ஞக னுருவமே யுலகென்
றூரு மோர்வுற வவன்றனை வலஞ்செய்தங் கையினிற்
சேரு மாங்கனி வாங்கினோன் றனைத்தெரி சிக்க
நேரி லாதியாஞ் செய்திடு தவமெனோ நிலத்தில்"

என்பது. கவிநிலைத் துறையுள் ஒரு செய்யுளாகும்.

அவர்கள் பாடிய ஊஞ்சலிலும் ஒரு தனியழகுண்டு ஒரு செய்யுளைப் பாருங்கள்.

"வடிதருமங் குசபாசங் கரமேல் வைத்தாய்
வல்லபையங் குசபாச முரமேல் வைத்தாய்
குடிலமிசை யுளமதிநின் சடைமேல் வைத்தாய்
கொடுவினையே னுளமதிநின் புடைமேல் வைத்தாய்
படியுகநீர் காகவடி வுன்பால் வைத்தாய
பணிபுரிதற் காகவடி வென்பால் வைத்தாய்
வடிபுனலார் குளந்திகழ்வர்த் தலைமே லோங்கும்
மருதடிவா ழைங்கரரே யாடீ ருஞ்சல்."

இச் செய்யுளில் வரும் சொல்லணியும் பொருணயமும் பொருளுணர்ந்து படிப்போர்க்குப் பேருவகை யூட்டுவனவாம். இவ்வாறே இவர்கள் பாடல்கள் மிக்க சுவைபொருந்தியனவாம். இவற்றிலிருந்து "கவிபாடும் புலமிக்கோனே" என்று குமார சுவாமிப் புலவரவர்கள் கூறிய கூற்று எத்துணை உண்மை வாய்ந்தது என்பதைக் கண்போம். இஙஙனம ஒரு கவிமணி யாகவும் திகழ்ந்தார்கள் மகாவித்துவான் கணேசையரவர்கள்.

## சமய வாழ்க்கை

கணேசையரவர்கள் ஒரு சிறந்த ஞானி. பிற்காலத்தில் அவர்கள் "கல்வியென்னும் பல்கடற் பிழைத்தும்" என்றும் "கற்பனவும் இனிமையும்" என்றும் மணிவாசகப்பெருமான் கூறிய வார்த்தைகளை அடிக்கடி சொல்லிக்கொள்வார்கள். கல்விச் செருக்கற்றவராகவே அவர்களது கடைசிக்காலம் கழியலாயிற்று. அவர்கள் பக்தியிற் சிறந்து சிறந்த அநுபூதிமானாக விளங்கினார்கள். 1938 ஆம் ஆண்டில் தம் அறுபதாம் ஆண்டைக் கொண்டாடு முகத்தான் யாழ்ப்பாணத் தமிழ்மக்கள் நிகழ்த்திய பெருவிழாவின்கண் அவர்கட்கு ஈராயிரம் வெண்பொற் காசுகளைக்

கொண்ட பொற்கிழி வழங்கியபோது, அதனையும் விநாயகர் கோயிற்றிருப்பணிக்குப் பயன்படுத்தினார்களென்றால் அவர்கள் பத்தியையும் துறவுள்ளத்தையும் நாம் ஒருவாறு அறிந்து கொள்ளலாம். திருவாசகம், தாயுமான சுவாமி பாடல் ஆகிய வற்றில் அவர்கட்கு நிரம்பிய ஈடுபாடு உண்டு. அவற்றைப் பாடிய பெரியார்கள் அடைந்த அநுபவத்தைத் தாமும் அடையவேண்டு மென்ற தாகமே அவர்களுக்குப் பெரிதும் இருந்தது. தாயுமான சுவாமிகளைப்போலவே அவர்கள் வேதாந்த சித்தாந்த சமரசக் கொள்கை யுடையவர்களாயிருந்தார்கள். கந்தை மிகையாங் கருத்தும், சிந்தையில் தைவரும் விநாயகப் பெருமான் திரு வடியும், உயர்ந்த குறிக்கோளோடு கூடிய மிக எளிய வாழ்க் கையும் உடையவர்களாக இருந்து வாழ்வாங்கு வாழ்ந்து காட்டிய இத்தமிழ் முனிவர் அப்பர் சுவாமிகளையே எமக்கு நினைவூட்டு கின்றார்கள். வருத்தலைவிளான் மருதகுடி விநாயகராலயத்தின் அருகேயுள்ள தமது ஆச்சிரமத்தில் அப பெருமானோடு,

"நெஞ்சிற் பிறதே நினையேன் நினையன்றி
அஞ்சல் மறலிகடுகென் றைங்கரனே—தஞ்சவுரை
தாராம லின்றளவுந் தானிருப்ப துன்னருட்கிங்
காராயிற் சால்போ வறை."

என்றென்று உரையாடிக்கொண்டே "இனிது இனிது ஏகாந்த மினிது" என்றாங்கு ஏகாந்தமாக வாழ்ந்த இப்பெரியார் தமது எண்பதாவது வயதில் 1958 ஆம் ஆண்டு நவம்பர் மீ 8 ஆம் நாளாகிய (8-11-58) சனிக்கிழமையன்று காலை 6-30 மணி யளவில் இவ்வுலக வாழ்வை நீத்தார். இந் நீத்தார் பெருமை நினைதொறும் நினைதொறும் நெஞ்சை உருக்குவதொன்றாம். இப் பெரியார் பெருமையைத் தமிழுலகம் ஏற்றுபெற்றி போற்றுமாக இப் பெரியாரைப் பின்பற்றி வாழும் மதுகை எமக்குண்டாகுக. தமிழ் வாழ்க. தமிழன் ஓங்குக.

---

## தமிழைக் கற்பீர்!

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

தமிழே உலகில் உயர்மொழியாம்
தாழா தென்றும் கற்பீரே
அமிழ்தம் உண்ணச் சொன்னேன்நான்
அதனை லேற்பீர் அன்பர்களே!

---

# தென்னிந்திய தமிழ்ச் சங்கம், திருநெல்வேலி

# தமிழ்ப்புலவர் மாணவர் தேர்வு

1959 மாசித் திங்களில் சென்னை மாநிலத்திலுள்ள பல புலவர் கல்லூரிகளிலும் சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் பட்டத் தேர்வு வகைக்குப் பயின்று விண்ணப்பிக்கும் மாணவர்களை ஊக்கும் வகையில், 1951 முதல் இச் சங்கத்தார் நடத்தி வரும் தமிழ்ப்புலவர் மாணவர் தேர்வில் இவ்வாண்டு,

| | விண்ணப்பித்தவர் | எழுதியவர் | தேறியவர் |
|---|---|---|---|
| வித்துவான் புகுமுகம் | 9 | 7 | 7 |
| ,, முதனிலை | 46 | 43 | 40 |
| ,, இறுதிநிலை | 44 | 40 | 40 |

இவர்களில் ஒவ்வொரு வகுப்பிலும் முதற்றகுதியில் தேர்ந்த முதல் மூவருக்கும் ரொக்கப் பரிசுகள் குறித்தபடி வழங்கப் பெறும். இவர்களுக்கும் மற்றும் தேர்ந்தவர்களுக்கும் தகுதித் தாள்கள் வழங்கப்பெறும்.

### வித்துவான் புகுமுகம்

289. ம. செல்லம்மாள், திருவள்ளுவர் செந்தமிழ்ப்புலவர் கல்லூரி, திருநெல்வேலி முதற் பரிசு ரூ. 20.
290 சுவாமிநாதன் ,, 2-ஆம் பரிசு ரூ 15.
288. ச. செண்பகவல்லி ,, 3-ஆம் பரிசு ரூ. 10

### வித்துவான் முதனிலை

480. P. கோதண்டராமன், K. V. S. S. கல்லூரி திருப்பனந்தாள். முதற் பரிசு ரூ 40.
490. மா. கு இராமன், அரசர் கல்லூரி, திருவையாறு. 2-ஆம் பரிசு ரூ. 30.
503. து. பிச்சை, பல்கலைக் கல்லூரி, தருமபுரம். 3-ஆம் பரிசு ரூ 20.

### வித்துவான் இறுதிநிலை

327. பொன். சதாசிவன், பல்கலைக் கல்லூரி, தருமபுரம். முதற் பரிசு ரூ. 50.
310. S. பழனிசாமி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள், 2-ஆம் பரிசு ரூ. 35.
330. G. ஆனந்தவல்லி, திருவள்ளுவர் செந்தமிழ்ப்புலவர் கல்லூரி, திருநெல்வேலி. 3-ஆம் பரிசு ரூ. 25.

### புகுமுகம்

முதற்றகுதி

286. பாக்கியம், திருவள்ளுவர் செந்தமிழ்ப்புலவர் கல்லூரி, திருநெல்வேலி.

இரண்டாந்தகுதி

287. மைக்கிள் ரோஸ் ,, ,,
284. முகம்மது ஜக்கிரியா, திருவையாறு.
285. அப்துல் ரஸாக் ,,

## முதனிலை

### முதற்றகுதி

505 திருஞானசம்பந்தன், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
474. சடானனன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
496. அருணகிரி, அரசர் கல்லூரி, திருவையாறு.

### இரண்டாந்தகுதி

'8. மீனாட்சிசுந்தரன், K. V. S S. கல்லூரி, திருப்பனந்தாள்.
499. பத்மலோசனி, அரசர் கல்லூரி, திருவையாறு.
467. முத்து, K. V. S S. கல்லூரி, திருப்பனந்தாள்.
475 R மதனகோபால் ,, ,,
479. S பொன்னப்பன் ,, ,,
482. K. குமாரசாமி ,, ,,
478. M V. பசுபதி ,, ,,
504. பிச்சாண்டி, பல்கலைக் கல்லூரி, தருமபுரம்
497. K. M. இராயர், அரசர் கல்லூரி, திருவையாறு.
501 வள்ளி, பல்கலைக் கல்லூரி, தருமபுரம்
469. K. N கோபாலன், K V. S S கல்லூரி, திருப்பனந்தாள்.
473. R தமிழ்மணி ,, ,,
476. கோவிந்தராஜன் ,, ,,
477. ரத்தினம் ,, ,,
502. இராசேசுவரி, பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
487 அத்தியப்பன், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை
483 R. கிருட்டிணன் ,, ,,

### மூன்றாந்தகுதி

465. குமாரசாமி, K. V. S S கல்லூரி, திருப்பனந்தாள்
481 P. ஆதிமூலம் ,, ,,
484 இராசாக்கவுண்டன், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
470. K. திருநாவுக்கரசு, K V. S S கல்லூரி, திருப்பனந்தாள்.
466. K. சின்னராஜ் ,, ,,
491. மாணிக்கவாசகம், அரசர் கல்லூரி, திருவையாறு.
488. K. சுயாராம் ,, ,,
493. R. சிராஜுதீன் ,, ,,
486. R. ஜெயராமன், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
500. மு. சண்முகம் ,, ,,
492. கோவிந்தசாமி, அரசர் கல்லூரி, திருவையாறு.
506. ஜோசப் சுந்தரராஜ், திருவள்ளுவர் செந்தமிழ்ப்புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
472 M. நடராஜன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
489. இராமச்சந்திரன், அரசர் கல்லூரி, திருவையாறு.
507. காந்திமதி, திருவள்ளுவர் செந்தமிழ்ப்புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
509. சாவித்திரி, ஆம்பூர்.
485. இராமச்சந்திரன், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.

## இறுதிநிலை

முதற்றகுதி

328. குலோத்துங்கன், கோயம்புத்தூர்.
295. T. வாசுதேவன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
291. M. வீரபோகு ,, ,,
293. M. ஆபத்சகாயம் ,, ,,
311. K. தனபாலன் ,, ,,
312. K M. கண்ணப்பன் ,, ,,
301. T. S. ஜெயராமன் ,, ,,
292. A. சண்முகம் ,, ,,
296. N. குருசாமி ,, ,,
303. T. S. பாலசுப்பிரமணியன் ,, ,,
323. சிவகுருநாதன், அரசர் கல்லூரி, திருவையாறு.
324. சுப்புராமன் ,, ,,
318. S. சூசை, கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
305. P. பாலுசாமி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.

இரண்டாந்தகுதி

304. S. ராசு, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
313. R. வேங்கடகிருஷ்ணன் ,, ,,
294. S அண்ணாமலை ,, ,,
306. K. கதிரேசன் ,, ,,
302 P. சிவராமன் ,, ,,
298. சுந்தரராசன் ,, ,,
309 A வேங்கடேசன் ,, ,,
297. M. ஜெகந்நாதன் ,, ,,
314. S. மருதையன், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
290. P. முத்து. K V. S S கல்லூரி. திருப்பனந்தாள்.
325. மு. சிவகுருநாதன், அரசர் கல்லூரி, திருவையாறு.

மூன்றாந்தகுதி

300. V. துரைராசன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
299. S. V. மருதமுத்து ,, ,,
308. T. ஆடியபாதம் ,, ,,
317. V. சொக்கலிங்கம், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
307. R. பழனிச்சாமி, K. V. S S. கல்லூரி, திருப்பனந்தாள்.
320. சிவஞானம், அரசர் கல்லூரி, திருவையாறு.
319. K. ஐயாரன், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
329. K. தமயந்தி, திருவள்ளுவர் செந்தமிழ்ப்புலவர் கல்லூரி, திருநெல்வேலி.

332. அபுரூபம், ஆம்பூர்.
315. இளங்கோவன், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
316. M பொன்னையன் ,, ,,
331. பொன்னுசாமி பிள்ளை, ஆம்பூர்.

நெல்லை }
30-4-59 }

பு. சி. புன்னைவனநாதன்,
புலவர்குழுத் தலைவர்.

# பதினுக்கப் பண்பொப்பு

[சித்தாந்த பண்டிதர், திரு. ப. இராமநாத பிள்ளை]

(செல்வி சிலம்பு ௩௩, பரல் ௮, ௩௫௯-ஆம் பக்கத் தொடர்ச்சி)

"பரையுயிரில் யானெனதென் றறநின்ற தடியாம்
பார்ப்பிடமெங் குஞ்சிவமாய்த் தோன்றலது முகமாம்
உரையிறந்த சுகமதுவே முடியாகு மென்றிவ்
வுண்மையினை மிகத்தெளிந்து பொருள்வேறொன் றின்றித்
தரைமுதலிற் போகாது நிலையினின்நில் லாது
தற்பரையி னின்றழுந்தா தற்புதமே யாகித்
தெரிவரிய பரமானந் தத்திற் சேர்தல்
சிவனுண்மைத் தரிசனமாய்ச செப்பு நூலே."

—உண்மைநெறி விளக்கம், ௪.

பண்டே புல்லிய மலத்துடன் ஆவி பிணிப் புண்டிருக்குங் காறும் யான் எனது என்னும் செருக்கு அவ்வாவியை விட்டு அகல்வதின்று. திருவருளால் சிவகுரவன் தோன்றி அவ்வாவியினைச் சிவதீக்கை முறையான் ஆட்கொண்டருள்வன். அப்பொழுது அச்செருக்கு ஒளிமுன் இருள்போல் வலியழிந்தடங்கி அகலும். அகலவே "உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞான"மாகிய இரண்டினையும் முறையே விளக்கியருளும் சிவபெருமானின் இரண்டு திருவடிகளும் தோன்றும். விழுமிய அவையே அவன் திருவடியாகும். திருவடிப் பேறுபெற்ற செந்தமிழ் மறைதேர் சீரியோர், "அவன் அவள் அது" எனும் மூவகை உலகியற் பொருள்களைக் காணுந்தோறும் அப்பொருள்களின் உள்ளும் புறமுமாய் ஓவாது விரவிநின்று அன்பு அறிவு ஆற்றல்களின் வாயிலாக அவ்வாவிகளின் உணர்வினை எழுப்பி உய்வித் தருளும் மாறுவுண்மையினையே காண்பர். காணவே காணுமிடம் எங்குஞ் சிவமாகத் தோன்றும். தோன்றும அத்தோற்றமே சிவபெருமானின் திருமுகம் என்ப. மாணவன் ஆசானை வாலறிவனாகக் காண்கின்றான்; ஏனையார் ஆன்றவிந தடங்கிய கொள்கைச் சான்றோராகக் காண்கின்றனர். சிற்றினத்தார் முற்றும் வேறாகக் காண்கின்றனர். இவையும், ஒருவனையே ஈன்றார் மகன் எனவும், ஆசான் மாணவன் எனவும், நண்பன் தோழன் எனவும், மனைவி கணவன் எனவும், மக்கள் தந்தை எனவும், ஒக்கல் உறவெனவும், விருந்து தக்கான் எனவும், அவையோர் மிக்கான் எனவும் தாந்தாம் தொடர்புகொண் டறிந்தவாறு கூறுபவையும் மேலதற்கு ஒப்பாகும்.

இந்நெறியில் நிற்பார் தம்மைச் சிவபெருமானுக்கு அடிமை என ஒப்புவித்த முடிவிலாப் பேற்றினராவர். அதனால் தம்வய மிழந்து அவன்வயம் உழந்து வருவோராவர். அதனால் "நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்றிருப் பர். அந்நிலையில் அவர்தம் பொறிபுலன்கள் நெறிமுறைச் செல் லினும், அவர்தம் உணர்வு சிவன் திருவடியினை மறவாத பேரின் பத் துய்ப்பிலேயே நிற்கும் அதுவே மாற்றம் மனநகழிய நின்ற மாப்பேரின்பமாகும். அதுவே சிவபெருமானின் திருமுடியு மாகும். திருவடி திருமுகம் திருமுடி என்னும் திருவருள் நிலை யின் பெருமையினை அன்பு அறிவு ஆற்றல்களாய், உண்மை யறி வின்பங்களாய், ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் நிலைகளாய் ஆண்டான் காண்டற்கரிய காட்சிநல்கும் உண்மையினை அருளால் மிகதெளிந்து, உள்ளீடாம் இம்மெய்ப்பொருளன்றிப் புறந் தோன்றும் "விரிசுடாபார் ஆகாச"மாம் பொருள்களில் நாட்டம் செல்லாது; அதனால் மண்முதற் சிவமதீறாகக் காணப்படும் முப் பத்தாறு மெய்களிலும் பற்றுக்கொள்ளாது செல்வர். இவற்றிற் பற்றுக் கொள்ளுங்கால் ஆவிக்கு, இது புணர்வு நிலை எனப்படும். புணர்வு-சகலம். பற்றுக்கொள்ளாத விடத்துப் புலம்பு நிலை எனப்படும். புலம்புநிலை-கேவலம். அந்நிலையும் இல்லாத இதுவே நிலையினில்லாது என்பதாம். இவ்விரு நிலையும் அகலவே, திரு வருள் வெளியில் ஆவிமுதல்வனின் முற்றுணர்வோடு தனித்து நிற்பின் தற்பரையினின்றமுழுந்துதலாகும் அங்ஙனமும அழுந தாது சிவகுரவன் அருளிச் செய்தவழி சிவனிறைவாகிய பேரறி வில் தானடங்கித் தற்செயலனைத்தும் இறைபணியாய்த் திருவடி யின்பம் ஒன்றே மேற்பட்டுத்தோன்ற அவ்வின்பத்தினையே துய்த்து நிற்றல் சிவக்காட்சி எனப்படும் ஆவி புலனுகர்வுகளை நுகருங்கால் சிவஇன்பம் தன்னுள்ளிருப்பினும் அவ்வின்பினை உணர்ந்து நுகராது புலன் நுகர்வுகளையே நுகரும். இதுபோல் சிவ இன்பத்தினை நுகருங்கால் புலன் இன்பத்தின்கண் நாட்டஞ் செல்லாது சிவ இன்பத்தினையே நுகரும். இதுவே சிவக்காட் சியாகும். இது சொல்லொணு மருட்சியினையுடையது. மருட்சி எனினும் வியப்பு எனினும் ஒன்றே. வியப்பு-அற்புதம்.

"எழுது பாவைநல் லார்திறம் விட்டுநான்
தொழுது போற்றிநின் றேனையும் சூழ்ந்துகொண்
டுழுத சால்வழி யேயுழு வான்பொருட்
டிழுதை நெஞ்சமி தென்படு கின்றதே." —கி. க0-அ.

உலகுடல் பொருள்களைத் தண்ணளியால் படைத்தளித் தருளிய முழுமுதல்வன் சிவபெருமான். திருவருளால் அவன் திருவடியினை இடையறாது எண்ணித் தொழுது போற்றி அவன்

நிறைவில் அழுந்தவேனாயினேன் அங்ஙனம் அழுந்துங்கால் உல குடல் பற்றுக்கள் தாமே நீங்கின. இக்குறிப்பு எழுதியமைத்த வனப்பு மிக்க பாவைபோன்ற பெண்களின் திறத்தினை விட்டேன் என்பதனால் விளங்கும். அத்தகைய எளியேனை அறிவில்லாத என்நெஞ்சம் முன் பற்றுக்கொண்டு பின் அருளால் விட்டகன்ற அப்பொருள்களின்மேல் பற்றுச் செய்வதாயிற்று. இங்ஙனம் பற்றுச் செய்யும் நிலை நுகர்ந்ததையே நுகர்வதாகும். அதனை விளக்கவே "உழுதசால்வழியே உழுதல்" என ஓதுவாராயினர். "சால்" என்பது ஒருமுறை உழுத இடத்தில் விழும்பள்ளம் சால் எனப்படும்- அது மேலும் பள்ளமாதற்பொருட்டு மீட்டும்மீட்டும் அவ்விடத்தே உழுவதற்கு ஒன்று இரண்டு மூன்று முதலாகிய எண்ணின் அடைசேர்த்து மூன்றுசால் நான்குசால் முதலாக வழங்குவர். எனவே அவ்வெண்ணம் அடங்குதல் வேண்டும் ஆண்டவன் திருவடிநினைவே மீண்டும்மீண்டும் எண்ணுவதால் பெருகுதல் வேண்டும். இதனால் இத்திருப்பாட்டுச் சிவக்காட் சிக்கு ஒருபுடை யொப்பாமென்க.

"எப்பொருள்வந் துற்றிடினும் அப்பொருளைப் பார்த்தங்
கெய்துமுயிர் தனைக்கண்டிங் கவவுயிர்க்கு மேலாம்
ஒப்பிலருள் கண்டுசிவத் துண்மை கண்டிங்
குற்றதெலாம் அதனாலே பற்றி நோக்கித்
தப்பினைச்செய் வதுமதுவே நினைப்புமது தானே
தருமுணர்வு புசிப்புமது தானே யாகும்
எப்பொருளும் அசைவில்லை எனஅந்தப் பொருளோ
டிசைவதுவே சிவயோகம் எனுமிறைவன் மொழியே."
—உண்மைநெறி விளக்கம், ௫.

இவ்வுலகத்தின்கண் உயிர்ப்பொருள் உயிரல்பொருள் களானவற்றுள் எப்பொருள் புலன்களுக்குப் புலனாய் வந்து சேரினும் அவற்றால் நேரும் இன்பதுன்பங்களும் அப்பொருள் கள் தம்மால் மட்டும் வருனவல்ல. அப்பொருள்களை இயைந்து இயக்கும் திருவருள் இயக்கத்தாலேயே வருவன. நூலும் நூலினை நுணுகிக் கற்கும் மாணவனதறிவும் முறையே ஆசானின் அறிவு விளக்கத்தால் ஆவதும் விளங்குவதுமாம் இயல்பினவன்றித் தாமே இயங்குவன அல்ல என்பது மேலதற்கு ஒப்பாகும். வநது பொருந்தும் அப்பொருள்களையும் அவற் றுடன் வாநிற்கும் ஆவிகளையும் திருவருள் துணையால் காணுதல் வேண்டும். அப்பொருளகள் மாயா காரியங்களாதலால் அவை தாமே வாரா. அவற்றுடன் விரவிநிற்கும் ஆருயிர்களும் திரு வருள் இயக்கினாலன்றி இயங்கா. எனவே அவ்வுயிர்க்கு மேலாக நின்றும் அவற்றுடன் என்றும் இயைந்தியக்கும் ஒப்பில்லாத

திருவருளினை அத்திருவருளின் நற்றுணையால் காணுதல்வேண்டும். நற்றுணையாற் காணுதல் என்பது திருவிளக்கினைத் தீந்தமிழ்த திருமாமறையால் வழிபடுவார் அவ்விளக்கின் ஒளி கொண்டு அவ்விளக்கினை வழிபடுவதுபோன்றதென்பதாம்.

அத்திருவருளையே தனக்குத் திருமேனியாகக்கொண்டு திகழும் சிவபெருமானின் மெய்ம்மையினைச் சிவகுரவன்பாற் கண்டு, இங்கு வந்து பொருந்தும் "சுவையொளி ஊறோசை நாற்றமென் றைந்தின் வகை" யாக விளங்கும் பொருள்களினைத்தினையும் அத்திருவருளாலேயே குறிக்கொண்டு நோக்கி, அப்புலன் நுகர்வின் வாயிலாக நிகழும் தீவினையும் நல்வினையும் திருவருளின் திருஆணை வழிநிகழும் செயல்களேயன்றி நம் செயல்களாகா எனவும், இச்செயல்களினும் இவற்றிற்கு முதலாய் வந்து பொருந்திய துன்பஇன்ப நுகர்வுகளினும் நம்முள்ளம் சென்றதும் அத்திருவருள் ஆணையேயாகும் என்றும், உயிர்ப பொருள் உயிரல் பொருள் அனைத்தும் திருவருள் இயக்கம் இல்வழி இயங்கா ஆதலின் அப்பொருள்கட்குத் தனித்த புடைபெயர்ச்சி இல்லையெனவும் கண்டு, அம்மெய்ப்பொருளுடன் திருவருளாகிய வனப்பாற்றல் இயைவிக்க வேறற இயைந்து இறை நிறைவில் முறையுற அடங்கி நிற்பதுவே சிவத்தொடுங்குதலாகிய சிவயோகமென்று செந்தமிழ்ச் சிவாகமங்களாகிய இறைவன் நூல இனிதியம்பா நிற்கும். இறைவன் நூல் எனினும் அறிவன் நூல் எனினும் ஒன்றே.

"நெக்கு நெகநு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்
பொக்க மிககவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்ப ரவர்தம்மை நாணியே."

விழுமிய முழுமுதற் கடவுள் சிவபெருமான். அவன் "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிச் "செந்தமிழ்த் திருமாமறையினை ஓதி நனிமிக உருகி இடையறாது நினைபவர்தம் தூய அன்பு கலந்த நெஞ்சினுள்ளே, பொன்போலும் திருச்சடையினையுடைய வடிவினனாகித் திகழ்ந்து திருவருளால் புகுந்து மேற்பட்டு விளங்கி நின்றருள்வன். அவன், ஆகாவென்று நூலானும் நுண்ணுணர்வானுயர்ந்த நூலோரானும் இடையறாது அவ்வப்போது அகம்புறமாய் நின்று விலககிவரும் தீச்செயல்களைப் பொக்கம் என்பர். பொக்கம் - உள்ளீடற்றது, பயனில்லது என்றாகும். எனவே அச்செயல் தீவினையாகிய பாவமாகும். அப்பாவததை மிகுதியும் செய்த கயவர் தம் அறியாமையினால் பூவும் நீருங்கொண்டு சிவபெருமான் திருவடியை வழிபட்டு விட்டால் அப்பாவங் கழிந்தொழியும் என்று கருதுகின்றனர்.

அது தவறு; அக் கருத்தினாலும், தாம் சிவபெருமானை வழிபடும் மெய்யன்பர்போல் நடித்து உலகம் தம்மை நல்லவரென்று எண்ணி ஏமாந்துவிடும் என்ற கருத்தினாலும் வழிபாடு புரிகின்றனர். அங்ஙனம் கரவுடையார்தம்மைக் கண்டு கரவிலாப் பெருமானார் அவர்க்கு நாணி எள்ளற் சிரிப்புச் சிரித்து நிற்பர்.

_ ரகண் திருவருள துணையால திருவடியுணர்வு கைவரும் மெய்த்தவம் இல்லாதார் தீமைபுரிபவரெனவும், அவரைக் கண்டு சிவபெருமான் எள்ளி நாணி விலகுவன் எனவும் காண்கின்றோம். அங்ஙனமில்லாது நன்னெறி நான்மையினைக் கைக்கொண்டு நற்றவவழியில் நின்று நெக்குருகி நினைப்பவர் அவன் திருவடியிற் கூடும் சிவச் செறிவாம் சிவயோகினை எய்துவர். இஃது ஒருபுடை யொப்பாகக்கொண்டு உணர்வது நன்றாகும்.

"பாதகங்கள் செய்திடினும் கொலைகளவு கள்ளுப்
பயின்றிடினும் நெறியல்லா நெறிபயிற்றி வரினும்
சாதிநெறி தப்பிடினும் தவறுகள்வந் திடினும்
தனக்கெனவோர் செயலற்றுத் தானதுவாய் நிற்கின்
காதலவன் உடலுயிராய் உண்டுறங்கி நடந்து
நானுபோ கங்களையும் தானாகச் செய்து
பேதமற நின்றிவனைத் தானாக்கி விடுவன்
பெருகுசிவ போகமெனப் பேசுநெறி யிதுவே."

—உண்மைநெறி விளக்கம், ௬

திருவருளால் ஆருயிர் சிவநிறைவில் ஒடுங்கிப் பொருள் நோக்கற்று, "எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப் பொருள், மெய்ப்பொருள் காண்பதறிவு" (௩௫௫) ஆகையால் அப்பொருளின் வாயிலாக மெய்ப்பொருளை உணர்ந்துஇன்புற்றுத் தம்செயலற்றுச் சிவன் செயலாய்த் திகழும். அங்ஙனம் திகழ்வது அணைந்தோர் தன்மையாகும். அணைந்தோர் எனினும் சிவனடியார் எனினும் ஒன்றே அத்தகையோர்பால் பாதகங்களாகிய சண்டாளத்தன்மை காணப்படினும், கொலையே களவே கள்ளே என்றித்தன்மையவான பெருந் தீமைகள் தொடர்ந்து காணப்படினும், நன்னெறியல்லாத புன்னெறிப்பயில்வு காணப்படினும், இனவொழுங்கு மீறிய நனவுச்செயல் காணப்படினும், பொறுக்கலாற்றுப் பிழைகள் காணப்படினும், அவர்கள் தமக்கெனவோர் செயலற்றுச் சிவனினைவாய்நிற்கும் சீரிய செம்பொருட்டுணிவினராகிய நீர்மையராதலின் சிவபெருமான் அவர்களுடன் மிக்கோங்கிய விரவுதலாய் நின்று அவர்களின் அன்பு அறிவு ஆற்றல்கள் தன் அன்பறிவு ஆற்றல்களுள் அடக்குவித்து அவர்கட்கு வரும் உலகியல் நுகர்வுகளைத் தனக்காக்கி அவர்கட்குத் தன் திருவடி நுகர்வொன்றனையே துய்ப்பாகச் செய்து, வேறற

நின்று தானாக்கி விடுவன். இந்நிலையினையே சிவன் நிறைவில் அழுந்தியறிதலாகிய சிவபோகமெனப் பேசப்பெறும். அங்ஙனம் பேசப் பெறுவதனைத் "தெள்ளத் தேறித் தெளிந்து தித்தி"க்கு மாறு செந்தமிழ்ச் சிவஞானபோத முதலிய மெய்கண்ட முறை நூல்கள் நிறைவுறப் பேசும். இதுவே நன்னெறியாகும்.

இறைவன் நானுபோகங்களையும் தானாகச் செய்தலென்பது அணைந்தோர் உள்ளத்தின் கண்ணும் உணர்வின் கண்ணும் தன் நினைவும் தன் திருவடியின்புமே தழைத்தோங்கச் செய்வது. அவர்தம் உடற்கண் வந்துறும் இன்பதுன்பங்கள் அவரின் உள்ளத்திற்கும் உணர்வுக்கும் எட்டாமையால் அவை அவர்தம் உடலூழாய் இறைவனை ஏன்றுகொள்ளும் முறையாய்க் கழி கின்றன. பால் ஒன்றே பருகும் பச்சிளங்குழவிக்குப் பணிபூட்டி உடையுடுத்துப், பொட்டிட்டு ஒப்பனை செய்து பார்த்து இன்புறுவதெல்லாம தாய் முதலியோரேயாவர் ஒப்பனை செய் யாத வழியும், செய்த ஒப்பனை குலைவுற்ற வழியும் முறையே பெரிதும் சிறிதுமாகத் துன்புறுபவர்களும் அவர்களேயன்றே! அம்மகவு "வேண்டுதல் வேண்டாமையிலா"த விழுமிய நிலையில் இருக்கின்றது. அம்மகவின் உள்ளத்தில் தாய் நினைவும உணர் வில் தாய்ப்பால் இன்புமே தழைத்து நிற்கின்றன. மேலும் அம்மகவின்மாட்டுப் பிறரால் செய்யப்படும் இன்பதுன்பங்களைக் கண்டு தமக்குச் செய்தனபோன்று உளங்கொண்டு முறையே மகிழ்வும் வருத்தமும் எய்துவது தாய் முதலிய பிறரேயாவர். அம்மட்டோ அங்ஙனம் புரிந்தார்மாட்டு இன்றியமையாது செய் தக்கன செய்வதூ உம் அவர்களேயாகும. இவையே ஒப்பாகும்.

இந்நிகழ்வின் விளக்கங்கள் வருமாறு:

க. பாதகம்: சண்டேசுர நாயனார்; உ. கொலை: கோட்புலி நாயனார்; ந. களவு: இடங்கழி நாயனார் திருவரலாற்றில் வரும் ஒரு மெய்யடியார்; ச. கள்ளு (சூது): மூர்க்க நாயனார்; ரு. நெறி யல்லா நெறி: இயற்பகை நாயனார்; சு. சாதி நெறி தப்பல்: திருநாளைபோவார்; எ. தவறுகள வருதல்: கண்ணப்ப நாயனார். இவர் தம் திருவரலாறுகளைப் பன்னிரண்டாந் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணத்தின்கண் விளக்கமாகக் காண்க. திருத்தொண்டர் புராணம் - பெரிய புராணம். இஃதொன்றுமே புனைவில் மெய்ம்மையாம்.

"விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே." (ரு - க0 - க0)

தொடரும்

# கலிங்கத்துப் பரணியில் ஓவியம்

[திரு. தி. நா. அறிவு ஒளி]

கலிங்கத்துப் பரணி, புலவர்பெருமான் செயங்கொண்டாரால் இயற்றப்பெற்ற அரிய நூல். இஃது இயற்றமிழின் பாற்பட்டதே யாயினும் இசைத்தமிழாகவும் இலங்கும் இனிமை சான்ற நூலாகும். கி. பி. ௧0௭௮—௧௧௧௮ (பதினோராம் நூற்றாண்டு) ஆண்டுகளில் இருந்த முதற் குலோத்துங்க சோழனின் அவைக்களப் புலவராக விளங்கியவர் சயங்கொண்டார். தமிழிலுள்ள பரணிகளிலே மிகச் சிறப்புடையது கலிங்கத்துப் பரணியே என்பது புலவர் யாவரும் ஒப்ப ஏற்ற ஒப்பில கருத்து. இதனை,

"வெண்பாவிற் புகழேந்தி பரணிக் கோர்
சயங் கொண்டான் விருத்த மென்னும்
ஒண்பாவி ற்குயர்கம்பன் கோவையுலா
அந்தாதிக் கொட்டக் கூத்தன்
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள்
வசைபாடக் காளமேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காச
லாலொருவர் பகரொணாதே."

என்ற பலபட்டடைச் சொக்கநாதப் புலவரின் திறனாய்வுப் பாட்டால் தெளியலாம். பரணி என்பது தமிழிலுள்ள தொண்ணூற்றாறு வகைப் பிரபந்த வகைகளுள் ஒன்று. போர்க்களத்தில் ஆயிரம் யானைகளைக் கொன்று வெற்றிபெற்ற மறவன்மீது பாடப்படுவது இந்நூல் கலித்தாழிசையாற் பாடப்பட்டது. "காடு கிழவோன் பூதமடுப்பே, தாழிபெருஞ் சோறு தருமனாள் போதமெனப், பாகுபட்டது பரணிநாட் பெயரே" என்ற திவாகரக் கருத்தினால் பரணி நாண்மீன் காரணமாக இந் நூற்குப் பரணி என்று பெயர் உண்டாயிற்றென்பர் பரணி நாண்மீன் ஒளிரும் நாளில் இந் நூலைப் பாடத் துவங்குவராம். 'பரணி பிறந்தான் தரணியாள்வான்' என்பதொரு பழமொழி தமிழில் வழங்குகிறது. அதை நோக்கப் பரணி உருவானது வெற்றிக் குறிகுறி என்பதும் வென்ற மன்னனைப் பாடுவதனால் பரணி எனப் பெயர்பெறுமென்பதும் பெறலாயிற்று.

இனி, இந்நூல் 1. கடவுள் வாழ்த்து. 2. கடை திறப்பு. 3. காடு பாடியது. 4. கோயில் பாடியது. 5. தேவியைப் பாடியது. 6. பேய்களைப் பாடியது. 7. இந்திரசாலம். 8. இராச பாரம்பரியம். 9. பேய் முறைப்பாடு. 10. அவதாரம். 11. காளிக்

குக் கூளி கூறியது. 12 போர் பாடியது. 13 களம் பாடியது எனப் பதின்மூன்று பகுதிகளைக் கொண்டது. மொத்தம் 596 தாழிசைகளான் இயன்றது.

புலவர் சயங்கொண்டார் சந்த அமைப்புக்களில் ஒப்பற்ற மேதை உடையவர் என்பதைப் பரணியின் ஒவ்வொரு பாட்டும் மெய்ப்பிக்கிறது. உலகிலுள்ள 'அச்சச்சுவை' விளக்கும் நூல்களிலேயே கலிங்கத்துப் பரணிக்கு வேறு இணையாகக்கூட ஒப்பிட்டுரைக்கும் நூல் இல்லை என்ற நிலையில் மிக அழகாக இந் நூலை இயற்றியுள்ளார் செயங்கொண்டார்.

இவருடைய புத்தம் புது உவமைகளும், மொழியாட்சியும், கவிதை வேகமும், நயமும், இருபொருட் பாக்களும், அழகு விளக்கங்களும கற்பார் அகத்தைக் கவர்ந்திழுத்து அடிமையாக்கும் 'மயக்க ஆற்றல் உடையன. தாள ஒழுங்குக்கு உட்பட்ட யாப்பு, இவருடைய பாக்களின் சுவைக்கு உயிர்நாடியாக விளங்குகிறது. உணர்ச்சிக்கேற்ற பண் வேற்றுமைகளை நூல் முழுவதும் இவர் ஆண்டுள்ளார். சமபனுக்கும் அருணகிரியாருக்கும் கலிங்கத்துப பரணியே வழிகாட்டியாக அமைந்திருக்கும என்று நான் கருதுகிறேன் !

இந் நூலின் ஒவ்வொரு பாட்டுக்கும ஒவ்வொரு பொன் தேங்காய் பரிசாகக் குலோத்துங்கன் வழங்கிச் சிறப்பு செய்தானாம

இத்தகைய அரிய இலக்கியத்தில் ஓவியக் கலைக் கட்டிடக் கலைக் குறிப்புக்கள் மிக அருமையாக நமக்குக் கிட்டியுள்ளன. அவை பிற்காலச் சோழர் காலத்துக் கலைச் சிறப்பினை நமக்குத் தெளிவாகக் காட்டுகின்றன. இடைக்காலத் தமிழகத்தில் ஓவியக்கலை வாழ்ந்த முறையையும், நிலையையும் தெளிவாகப் பரணி தெளிவாக்குகிறது.

ஓவியக் கலையில் பல்வகைப் பிரிவுகள் உண்டு. அவற்றுள் மனித உருவ ஓவியம் (Human Drawing) ஒன்று. பண்டு மனித உருவங்களை எழிலொழுக ஓவியமாகத் தீட்டியிருந்தனர். இத்தகைய மனித உருவ ஓவியத்திற்கு வியர்வை வெளிவருமேயாகில் அஃது தீயகுறி என நம்பினர் பழங்காலத்தினர். இதனை,

"பூவிரிய மாலைகள் புலால் கமழு மாலோ
பொன்செய்மணி மாலைஒளி போயொழிய மாலோ
ஓவியமெ லாம் உடல் வியர்ப்பவரு மாலோ
ஊறுபுனல் செக்குருதி நாறவரு மாலோ."

(கலிங்கத்துப்பரணி: ௨௨௪)

உயிர்த்தோற்ற ஓவியம் (Life Drawing) என்று வழங்கும் ஓவியமுறை அன்று இருந்தது. ஒருவனை நேரே பார்த்து அப்படியே ஓவியம் தீட்டும் வல்லுநர்கள் இருந்தனர். அரசரின் உருவங்களை ஓவியமாகத் தீட்டுவது வழக்கமாக இருந்தது. ஒரு கதை ஒன்று பரணியில் குறிக்கப்படுகிறது. கரிகாலன் தன் பகைவனை பிரதாப ருத்திரனின் உருவை ஓவியமாகத் தீட்டுமாறு கூறினன். பிரதாப ருத்திரன் ஓவியம் தீட்டி முடிந்து வந்ததும், அவனுக்கு இரு கண்கள் மிகுதியானது என்று கூறி அப்படத்திலிருந்த ஒரு கண்ணைக் கரிகாலன் அழித்தானும். உடனே உயிருள்ள மனிதனை பிரதாபருத்திரனின் உண்மைக் கண்ணும் அழிந்துபட்டதாம். இஃது உண்மை வரலாறோ, புனைகதையோ யாம் அறியோம். ஆயின் இக் கதையான் பெறப்படும் ஒருண்மை யாதெனின் கரிகாலன் காலத்தேதொட்டே ஒருவரை அவரைப் போன்றே ஓவியமாகப் புனையும் கலைத்திறமை நம் தமிழகத்து உயிரோவியந் தீட்டும் கலைஞர் மாட்டு அமைந்திருந்தது என்பதே. இதனை,

> "தொழுது மன்னரே கரைசெய் பொன்னியில்
> தொடர வந்திலா முகரியைப் படத்து
> எழுதுகென்று கண்டு இது மிகைக்கண என்று
> இங்கழிககவே அஙகழிநததும் .." (க. பரணி : கஅஎ)

எனக் குறிக்கிறார் புலவர்.

கரிகாலன் புலிக்குறியை இமயமலையின் நடுவிடத்தில் பொறித்தான் என்ற குறிப்பை,

> "செண்டு கொண்டு கரி காலனொரு காலின் இமயச
> சிமயமால் வரைதி ரித்தருளி மீள அதனைப்
> பண்டு நின்றபடி நிற்கஇது வென்று முதுகில்
> பாய்புலிக் குறிபொறித்து அது மறித்தபொழுதே."
> (க. பரணி: கஎஅ)

என்ற தாழிசையில் தருகிறார். எட்டு மலைகளில் இராசாதிராசன் புலிச்சின்னத்தைப் பொறித்ததாக,

> "கம்பிலிச் சயத்தம்ப நட்டதும்
> கடியரண் கொள் கல்யாணர் கட்டறக்
> கிம்புரிப் பணைக்கிரி யுகைத்தவன்
> கிரிகளெட்டினும் புலிபொறித்ததும்." (க. பரணி: உ0௯)

என்ற தாழிசையில் கூறுகிறார். இதனால் மலைகளில் வெற்றிச் சின்னத்தைக் கல்தச்சரால் ஓவியமாகச் செதுக்கும் உண்மை கண்டோம்.

மேற்பாட்டில் வெற்றித் தூண்களைத் தோற்ற மன்னர்களின் தலைநகரில் நாட்டும் மரபைக் கம்பிலி நகரில் இராசாதிராசன் நாட்டிய உண்மையைக் கூறுவதால் அறியலாம். இதேபோலக் கலிங்க நாட்டை வென்று அங்கே சோழரின் வெற்றிக்கு அறிகுறியாகக் கருணாகரன் ஒரு வெற்றித் தூண் நாட்டியதாக 471 ஆம் பரணித் தாழிசையில் குறிக்கிறார் புலவர்.

"கடற் கலிங்கம் எறிந்து சயத்தம்பம் நாட்டிக்
கடகரியும் குவிதனமும் கவர்ந்து தெய்வச
சுடர்ப் படைவாள் அபயனடி அருளி னாலே
சூடினான் வண்டையர்கோன் தொண்டைமானே"
(க. பரணி: சஎக)

இத்தகைய வெற்றித் தூண்களில் சிற்ப வேலைப்பாடுகள் செய்வது வழக்கம். வென்ற மன்னரின் இலச்சினையும், சின்னமும், கொடியும், பொறிப்பர்.

கரிகாலன் இமயமலை வரையில் கல்வெட்டுகள் பொறித்ததை,

"இப்புறத் திமயமால் வரையின் மார்பி னகலத்து
எழுதி னானெழுது தற்கரிய வேத மெழுதி
ஒப்புறத் தனது தொன்மரபு மம்மரபின்மேல்
உரைசெய் பல்புகழுமொன் றுமொழி யாதபரிசே."
(க பரணி: உ0அ)

என்று குறிப்பிடுகின்றார்.

மன்னரின் கொடிகளில் அவரவர்க்குரிய சின்னத்தை ஓவியர்கள் தீட்டுவர். சேரர் கொடியில் வில் உருவம் தீட்டப் பட்டமையை,

"வழுதியர் வரைமுறை நுழைவடிவு இதுஎன
மதகரி வயிறுகள் புகநுழை வனசில
எழுதிய சிலையவர் செறிகடல் விழுமவை
இதுஎன வழிகுருதியின் விழுவனசில." (க. பரணி: ௩அஅ)

என்று குறிப்பிடுகின்றார்.

மன்னர்கள் தங்கும் அரண்மனைகளில், ஓவிய வேலைப் பாடுகள் செய்யப்பட்டிருக்கும். காஞ்சிமா நகரில் செம்பொன் மாளிகை ஒன்று சோழர்க்கு உரியது இருந்தது. அவ்வரண்மனையின் தென்மேற்குப் பக்கத்தில் செய்தமைத்திருந்த ஓவிய மண்டபத்தில் குலோத்துங்கன் திருவோலக்கம் அமைந்திருந்ததாம். இதனை-

" அம்பொன் மேருவது கொல் இதுகொல் என்று
ஆயிரங்கதிர் வெய்யவன் ஐயுறும்
செம்பொன் மாளிகைத் தென்குட திக்கினில்
செய்த சித்திர மண்டபந் தன்னிலே." (க. பரணி: ௩௧௫)

எனக் குறிக்கிறார். இதனால் காஞ்சிமா நகரின்கண் அரிய ஓவியக் கலைஞர்கள் வாழ்ந்தமையும், மன்னர் தாம உறையுமிடங்களை எல்லாம் கலைவிளை தொட்டிலாக ஆக்கி அமைத்துக்கொண்டிருந் தமையும் பெறலாம்.

கலிங்க நாட்டிலே ஓவியக்கலை மிகச் சிறப்பாகப் புரக்கப்பட்டு வந்தமைக்கு பரணியில் அரிய குறிப்பொன்று கிட்டியுள்ளது. கலிங்க மக்களைக் கொன்று குவித்தனர் சோழ மறவர்கள் கலிங்க ஓவியர்கள் படத்தில் எழுதிய உடல்களைத் தவிர மற்றைய உடல் களை எல்லாம் அறுத்து முடித்தனராம் சோழ மறவர்.

" இவர்கள் மேல் இனியொருவர் பிழைத்தார் இல்லை
எழுகலிங்கத்து ஓவியர்கள் எழுதி வைத்த
சுவர்கள் மேல் உடலன்றி உடல்களெங்கும்
தொடர்ந்து பிடித்து அறுத்தார்முன அடைய ஆங்கே."
(க. பரணி : ௪௭௦)

சோழ மறவர்கள் கலிங்கரைப் பகைவராகக் கருதி அழித் தனரே தவிரக் கலிங்கநாட்டு ஓவியக் கலையைப் போற்றி அதை அழிக்காமல் விட்டமை எண்ணத்தக்கது. தமிழரின் கலைக் காதலுக்கு இஃதொன்றே போதிய சான்று. வெளி நாட்டாரின் கலையையும், பண்பாட்டையும் தமிழ்நாடு தக்க மதிப்பளித்துப் போற்றி வந்தமை என்றும் உலகறியும். இந்த உயிர் நிலையான உண்மையை வெளிப்படையாகப் பாடியருளிய புலவர் சயங் கொண்டாரை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

கலிங்க நாட்டுச் சுவர்களிலே அழகிய ஓவியங்கள் வரையப் பட்டிருந்தன; என்ற உண்மையையும் அவர் கூறுகின்ற காரணத் தால் மாற்றானின் உயர்வையும் தக்க முறையில் வெளியிடுகிறார் என்று அறியும்போது சயங்கொண்டாரின் நடுவு நிலைமை உள்ளம் தெரியும். புலவர்களுக்கு ஓவியக் கலையின்பாலும், ஓவியர்பாலும் மிகுந்த நன்மதிப்புண்டு. அந்த உண்மையைச் சயங்கொண்டார் இக் குறிப்பை அளித்தமையால் மேலும் மெய்ப்பித்துவிட்டார்.

கொல்லன், உலைக்கூடம் பற்றிய குறிப்பை,

" பிறைப் பெரும்பணை வேழம் முன்னொடு
பின்துணிந்து தரைப்படும்
குறைத் தலைத்துணி கொல்லன் எஃகெறி
கூடம் ஒத்தமை காண்மினே." (க. பரணி: ௪௧௭)

என்ற தாழிசையில் குறிப்பிடுகிறார். பிறைநிலவு போன்ற மருப்புக்களையுடைய யானைகள் தலைவேறு உடல்வேறாக வெட்டப்பட்டு வீழ்ந்துகிடக்கும் போர்க்களத் தோற்றமானது கொல்லனுடைய உலைக்களத்தில் போர்க்கருவி செய்யும் பட்டடை, சம்மட்டி ஆகியவைகள் பரப்பியமைத்துள்ள வகையில், அமைந்துள்ளது என்கிறார் புலவர். மிக அரிய உவமை இஃது. இயற்கையான பொருத்தமான உண்மை உவமையை அமைத்துள்ளார்.

இனிக், கட்டிடக் கலையைப்பற்றிச் சிறப்பான சில உண்மைகளைச் சயங்கொண்டார் அளிக்கிறா. இக் குறிப்புக்கள அக்கால சோழநாட்டுக் கட்டிடக்கலை அமைப்புக்களாகக் கொள்ளலாம்.

வீடு கட்டும்போது கடைக்காலில் இன்று சிறிது பொன்—வெள்ளி—முத்து அல்லது மணிகள்—பவளம் ஆகியவைகளை இடுவது வழக்கம். இஃது, கோயில் கட்டும்போது செய்யப் பட்டதாகக் குறிக்கிறார் சயங்கொண்டார். போரில் தோற்று விட்ட மன்னனின் பட்டத்தரசியரின் அணிகலன்களிலுள்ள பலவகை மணிகளைக் கடைகாலில் இடுவராம்.[1]

கல்லை அடுக்கிச் சேற்றை இடையில் பூசுவர் [2]

எதிரிமன்னரின் கோட்டைவாயிற் கதவின் குறுக்கே பொருத்தி வைக்கக்கூடிய கணைமரங்களைக்கொண்டு சுவரின்மேல் எழுதுதூணும் உத்திரமும் நிறுவுவர்.[3] தூணின்மீது முக்கோண வடிவுடன் நிறுத்தும் மரமான துலாம் இடுவர். பாளைறு சொல்லப்படும் கூரையில் இருபக்கமும் பரப்பும் கைகளை யானை மருப்பினாலே அமைப்பர்.[4]

---

1. "வட்டவெண் குடைசசென்னி மானதன்
வாளின் வாயினல் மறலி வாயிடைப்
பட்ட மன்னர்தம் பட்ட மங்கையர்
பருமணிக் கருத்திரு இருத்தியே" (௬அ)

2. "துவர்நி றக்களிற்று உதிய ரேவலின்
சரிகை போர் முகத்து உருவி நேரெதிர்த்து
அவர்நிணத் தொடுஅக் குருதிநீர் குழைத்து
அவர்கருந் தலைச்சுவா டுக்கியே" (௬௯)

3. "அறிஞர் தம்பிரான் அபயன் வாரணம்
அரசர் மண்டலத் தரணறப் பறித்து
எறிதரும் பெருங் கணை மரங்கள் கொணடு
எழுது தூணொடு உத்திர மியற்றியே." (௭00)

4. "கடிதழிந்து போர் மிதிலையிற் படும்
கரிமருப் பினைத் திரள்து லாமெனும்
படிபரப்பி அப்பரும யானையின்
பழுஎலும்பினில் பா அடுக்கியே." (௭0௧)

அக் கோயிலுக்குக் கூடல்வாய் (நாசிகை) பலகொடிகளைக் கொண்டு அமைக்கின்றனர்.[1] யானையின் முகபடாமில் (பொன் னாலாயது) சிறிதும் இடைவெளியின்றி மேற்கூரை (மிசை) வேய்கின்றனர். பொன்கூரை வேய்கின்றனராம்![2] வெள்ளியைக் கொண்டு கோபுரமும் மதிலும் அமைக்கின்றனர்.[3] கோயிலுக்கு மகரதோரணம் நாட்டுகின்றனர்.[4] அதுமட்டுமின்றி நீர்தெளித்து, பூச்சிந்தி விளக்கும் ஏற்றிவைப்பர்.[5]

அக்காலச் செல்வர் இல்லங்களும், கோயில்களும் (அரண் மனைகள்) எவ்வாறு கட்டப்பட்டிருந்தன என்ற உண்மையை மேல் பாட்டுக்கள் விளக்குகின்றன.

இத்தகைய அரிய கலைக்குறிப்புக்களையும், வரலாற்றுக் குறிப்புக்களையும் அளிக்கிறது பரணி.

புலவர் சயங்கொண்டார் ஓவியக்கலையின்பால் நல்ல ஆர்வமும், கருத்தும் கொண்டிருந்ததோடு கலைச் சுவைஞராகவும் விளங்கிய தன்மைகளைப் பரணியின் பாட்டுக்களைக்கொண்டு தெளியலாம்

1. "மீளிமா வுகைத்து அபயன் முன்னொர் நாள்
விருதராசரைப் பொருது கொண்டபோர்
ஆளிவாரணங் கேழல் சீய மென்று
அவை நிரைத்து நாசிகை யிருத்தியே." (க0உ)

2. "துங்கபத்திரைச செங்க ளத்திடைச்
சோள சேகரன் வாள றிந்தபோர்
வெங் கதக் களிற்றின் படத்தினால்
வெளி அடங்கவே மிசை கவிக்கவே." (க0ங)

3. "கொள்ளிவாய்ப் பேய் காக்கும்
கோபுரமும் நெடுமதிலும்
வெள்ளியால் சமைத்ததென
வெள்ளெலும்பினால் சமைத்தே." (க0ச)

4. "காரிரும்பின் மகரதோ ரணமாகக் கரும்பேய்கள்
ஓரிரண்டு கால்நாட்டி ஓரிருமபை மிசை வளைத்தே." (க0ரு)

5. "பரிவி ருத்தி அலகிட்டுப் பசுங் குருதி
நீர்தெளித்து நிணப்பூச சிந்தி
எரிவி ரித்த ஈமவிளக்கு எம்மருங்கும்
ஏற்றியதோர் இயல்பிற் றாலோ." (க. பரணி: க0சு)

# திருவள்ளுவர் சமணரா?

[திரு. A. பாலசுந்தர குருக்கள்]

தெய்வப் புலமைத் திருவள்ளுவரைச் சமணர் என்றும் பிராகிருதமொழியில் சமயசாரம் முதலிய நூல்களை இயற்றியுள்ள திரு குந்தகுந்தாசாரியர் திருக்குறளை இயற்றினர் என்றும் கூறுவர்.

வள்ளுவர் பெருமானின் வாழ்க்கையை உள்ளவாறு அறிய அவரைப்பற்றி இக்காலத்து வழங்கும் கதை துணைபுரியாதென்பது அறிஞர்களின் கருத்தாகலின் திருக்குறளைக் கொண்டே அவர் சமணர் என்பது பொருந்தாதென்றும், குந்த குந்தர் இயற்றிய சமயசாரம் முதலிய நூல்களுடன் திருக்குறளை ஒப்பு நோக்கி அவர் திருக்குறளை இயற்றினரென்றல் பொருந்தாதென்றும் அறிவிக்கவே இக் கட்டுரை எழுதப்படுகிறது.

திருவள்ளுவரைப் பல சமயத்தவரும் தத்தம் சமயத்தைச் சார்ந்தவர் எனக் கொண்டாடுகின்றனர். திருக்குறள் தோன்றிய நாளிலிருந்தே அது யாவருக்கும் உரியதெனக் கூறப்பட்டு வருகின்றது—பொது மறையெனப் போற்றப்பட்டு வருகின்றதென்பதை,

> "ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
> அன்றென்ப ஆறு சமயத்தார்—நன்றென
> எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
> முப்பால் மொழிந்த மொழி."

என்ற கல்லாடர் இயற்றிய செய்யுளாலும்,

> "செய்யா மொழிக்கும் திருவள் ளுவாமொழிந்த
> பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா
> அதற்குரியர் அந்தணரே ஆராயி னேனை
> இதற்குரியர் அல்லாதா ரில்."

என்ற வெள்ளி வீதியார் இயற்றிய செய்யுளாலும் அறியலாம். திருக்குறள் எச் சமயத்தினருக்கும் பொருந்துமாறும், யாவரும் படித்துப் பயனடையுமாறும் அமைந்துள்ளது. நான்மறை பல ராலும் போற்றப் படுவதுபோல் திருக்குறளும் போற்றப்படு

செய்யா மொழியெனப்படும் நான்மறைகள் பல காலத்துப் பலவேறிடங்களில் வாழ்ந்த இருடிகளால் கூறப்பட்டதாகலின் அவற்றுள் பலவேறு கருத்துக்கள் காணப்படல் இயல்பே. அதனல் சிறப்பின்ரும். திருக்குறளோ ஒருவரால் செய்யப்பட்டு

யாவரும் கொண்டாடும் சிறப்பினைப் பெற்று மிளிர்கின்றது இஃது திருக்குறளுக்கே உரிய தனிச் சிறப்பாம்.

திருக்குறள் இவ்வாறு அமைந்திருப்பினும் அதன் ஆசிரியராகிய திருவள்ளுவர் தாம் மேற்கொண்டொழுகிய சமயநெறி யொன்றுண்டென்பதும், அவர் காலத்துச் சிறப்புற்று விளங்கிய சமயங்களுள் ஒன்றனைச் சார்ந்தவர் என்பதும் திண்ணம். அச் சமயம யாது என ஆராய்தல் இக்கட்டுரையின் குறிக்கோள் இல்லை. வள்ளுவர் சமணரா அல்லரா என ஆய்ந்தறிதலே நோக்கமாகும்.

வள்ளுவர் கடவுள்வாழ்த்து என்ற அதிகாரத்தை முதற்கண் வைத்து நூலைத் தொடங்குகின்றார் "அகர முதல வெழுத்தெல்லா மாதி, பகவன் முதற்றே யுலகு" என உலகம் கடவுளை முதன்மையாக உடையதெனக் கூறுகின்றார். 'அகர முதல எழுத்தெல்லாம்' என்ற எடுத்துக் காட்டால் அவன் தானும் படைத்தளிக்கும் முழுமுதற் கடவுள் ஆவன் என்பதைப் புலப்படுத்தி மற்றை ஒன்பான் குறள்களாலும் கடவுளுக்குரிய பொது இயல்புகளைக் கூறி அவனை வணங்கலே பிறவிப் பயன் என்பதை அறிவிக்கின்றார். இவற்றைத் திருக்குறளைப் பயிலுவோர் யாவரும் உணர்வர்.

தாமியற்றும் நூன்முகத்துப் பிறர் உரைக்கும் தற்சிறப்புப் போலாது வள்ளுவர் வாழ்த்தும் முறை விதியாக அமைந்திருத்தல் நோக்கத் தக்கது

கடவுள் வாழ்த்தில் காணப்படும். 'ஆதிபகவன்' 'மலர்மிசை யேகினன்', 'வேண்டுதல் வேண்டாமை இலான்' 'அறவாழி யந்தணன்' என்ற சொற்களைக்கொண்டு திருவள்ளுவர் சமணர் எனக் கூறல் பொருந்தாது. இச் சொற்கள் அருகந்தருக்குப் பொருந்தினும் பொருள் முடிபு பொருந்தாது.

நிகண்ட வாதம் எனக் கூறப்படும் சைன தருமத்தின் தத்துவங்கள் சீவம், புற்கலம், தருமம், அதருமம், ஆகாசம் என்ற ஐந்து என்றும்; இவற்றுடன் காலம் சேர ஆறு என்றும்; சீவம், அசீவம், புண்ணியம், பாவம், ஆசிரவம், சம்வரை, நிர்ச்சரை, பந்தம், மோட்சம் என்ற ஒன்பது என்றும் கூறப்படுகின்றன இவற்றை முறையே பஞ்சாஸ்தி காயம், சட்திரவியம், நவபதார்த்தம் என வழங்குவர். இவற்றை,

"மன்றன் றுறு மணிமுடிமேன் மலிந்த சூளா மணிபோலும்
வென்றோர் பெருமா னறவாழி வேந்தன் விரிபூந் தாமரைமேல்
சென்ற திருவா ரடியேத்தித் தெளியும் பொருள்க ளோரைந்தும்
அன்றி யாறும் ஒன்பானும் ஆகு மென்ப ரறவோரே."

என்ற சீவக சிந்தாமணிச் செய்யுளாலும்,

"இந்திரர் தொழப்படும் இறைவனெம் மிறைவன்
தந்த நூல்பொருள் தன்மாத்தி காயமும்
அதன்மாத்தி காயமும் காலா காயமும்
தீதில் சீவனும் பரமா ணுக்களும்
நல்வினை யுநதீ வினையுமவ் வினையாற்
செய்வுறு பந்தமும் வீடுமித் திறத்த." —கஎக - கூ.

என்ற மணிமேகலைப் பகுதியாலும், தத்துவார்த்த சூத்திரம் முதலிய சைன தரும நூல்களாலும் உணரலாம்.

இவற்றால் சைன தருமத்துள் சீவனின் வேறாகிய கடவுட் பொருள் ஒன்றில்லை என்பதை அறியலாம். அற்றேல், சமணர்கள் தாமியற்றிய நூல்களில்,

"முச்சகம் நிழற்று முழுமதி முக்குடை
அசசுதன் அடிதொழு தறைகுவன் சொல்லே"

என்பதுபோல் கடவுள் வாழ்த்துக்கூறிய தென்னெனின், அது ஞானத்தாலும், சீலத்தாலும் உயர்நிலை யெய்தி அறம் உணர்த்திய அரகந்த தீர்த்தங்கரரை வியவகார நயத்தால் கடவுள்போல் வாழ்த்திக் கொண்டாடியதாம். அரகந்தர், சித்தர், ஆசாரியர், உபாத்தியாயர், சாதுக்கள் ஆகிய பரமேட்டிகள். ஐவருள் அரகந்தர் அறமுணர்த்தியதால் வாழ்த்தல் அவர்கள் மரபு. மற்றச் சமயத்தினர் கடவுளுக்குக் கூறும் முழு முதற்றன்மை அரகந்தருக்குப் பொருந்தாது.

திருவள்ளுவர் வாழ்த்திய கடவுள் முழுமுதற்றன்மை வாய்ந்தவர் என்பது பலரும் கொண்ட முடிபாம். அரகந்தரை வாழ்த்தி இருப்பின் மரபு வழாமல் முக்குடை, அசோகு முதலியவற்றைக் கூறியே வாழ்த்தி இருப்பார்.

திருவள்ளுவர் யாவருக்கும் பொருந்துமாறு நூல் செய்தார் ஆகையால் அவற்றைக் கூறவில்லையெனின் நூல் செய்தோன் தான் வழிபடு கடவுளை வாழ்த்தல் நூல்நுதல் பொருளின் பொதுமைக்கு இடையூறாகாது, 'நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி' என்றும், 'நாலடி ஈரடியாமே' என்றும் திருக்குறளோடு சேர்த்துப் புகழப்படுகின்ற நாலடியாரிலும், பிற சமணர்கள் நூல்களிலும அரகந்தரை வாழ்த்தியதால் நூல்நுதல் பொருளுக் குண்டான இழுக்கொன்றும் இல்லை. யாவரும் போற்றுகின்றனர். நாலடியார் திருக்குறள் ஆகிய இரண்டு நூல்களுள் திருக்குறள் ஒன்றையே பொதுமறை யெனச் சிறப்பித்தலே இக் கருத்தை வலியுறுத்தும்.

(தொடரும்)

# வையகத்தில் மனிதன் இருப்பிடம்

[வித்துவான் மாவை. துரை. பழநி மகாதேவன், ஆம்பூர்]

வையகந் தன்னில் வளம்பெறு மனிதன்
வையகந் தன்னை நோக்க எத்துணை
அளவாவன் தோழரீர்! ஆழ்ந்து நோக்குமின் !!
வையந் தன்னை நோக்குதற் கிசைந்த
தொலைநோக் காடியும்[1] ஒளிநிற ஆடியும்.[2]
ஆண்டுமுந் நூறு முன்னர்த் தோன்றிய ;
நமபரிதி யினை நாளும் அறிஞர்
கண்டும் ஆய்ந்தும் கணக்குறும் ஆறா
யிரமுதல் ஐம்பதி னாயிரனா சுழியாம்[3]
அளவுடை வெப்ப முளதெனத் தெரிந்தார் ;
பரிதி தானும் பகாரும் பத்துக்
கோடிகல் நமக்கப் பாலாகுமாம் அதில்
நீர்உயிர்க் கரிக்காற் றுருவிலும் பெறுதற்(கு)
அரிதா முலோக மவையும[4] வேர்ப்பொருள்களும்
நுண்ணணு வாவி யுருவின் அமைவ ;
நுவலுமநம் திங்களோ,
ஈரிலக் கம்முடன் முப்பதி னாயிரக்
கற்றொலை வுமேற் கருவிபாற் காணுறின்
மண்ணிடத் துக்காண் கன்மலை எரிமலை
பாலை நிலமிவை காண்குவ அங்ஙனே ;
இவ்வள வேகொல் ? இயம்பிய வையகம் !
இல்லை யில்லை, கூறுவன் மேலும்,
ஒரோவொர் நாள்,
நள்ளிருள் யாமத்துத் தலைநிமிர்ந்து வானினை
நோக்குமின் ! வடமுனை முதலாகத் தென்முனை
காறு நோக்குதிர் கணக்கறும் உடுக்குழாம் !
ஈருயர் வழியென இலங்கிடும் அவை
இருநான்கு கோடி ; ஒருநம் பரிதியின்
அவையொவ் வொன்றும ஆயிரம் நூறு
ஆகும் பருமைய ; பேரொளி ஆயிரம்.
பத்தாயிரம் பங்கு உற்றவை ; அவற்றிற்
சிலஉடுக் குழாம்நூறு ஆயிரம் பங்கு
சிறியன ; பகரு மவற்றில் பரிதியில்

---

1. Telescope.
2. Spectroscope.
3. Degrees.
4. Helium, Thorium, Uranium முதலிய உலோகப் பொருள்கள்.

காணும் பொருள்கள் உறுவன ; அவைதாம்
பால்வழி[1] உடுக்குழாம் எனப்பேர் பெறுவன ;
பால்வழிக் கப்பால் பாழ்வெளி யாகும்,
" முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்
அப்பாலும் பாழென் றறி"யென் றுரைத்த
மேலோர் மொழிதான் மெய்ப்படக் காணுதிர் ;
கண்டம் இன்மையின்[2] அகண்டா காரப்
பாழதில் அங்கொன் றிங்கொன்றாக
மூலக் கொன்றென இருநான்கு கோடி
உடுக்கள் உளவால் உவமை கூறின்,
சென்னை நகரில் ஈக்கள் நூறே
உளவெனின் எங்ஙனம் பாழ தாகுமோ.
அன்னண முன்னுதற் கும்மரி தாக
உடுக்களி னிடையே பாழோ ! பாழ் !!
இவ்வள வேசொல், இல்லை இல்லை,
பாழாம் பாழினுக் கப்பால் விளங்குவ
புகைமே கங்கள் ; நெபுலே[3] யென்ன.
ஆங்கிலம் கூறும் அங்ஙன் என்கோடி காணுறின்
உடுக்களா மவையிற் றின் வேர்ப்பொருள்[4]
மன்னிடைக் காண்பவிற் சிலவுள அவைதமை
மாபெரும் பால்வழி யென்றறை குவரால் ;
இன்னும் அப்பால்,
ஒன்றல, இரண்டல, மூன்றல, நான்கல,
நூறா யிரம்பத் தாயிர மிலக்கமென்
றெண்ணிலாப் பால்வழி[5] யுளவாம் அவற்றை
மெடகா லாக்சியென்[6] றறிஞர் கூறுப ;
ஆகையின்,
வையமென் னில்நம் மண்ணும், கோள்களும்,
திங்கள் களும்,பால் வழியுடுக் கள்,புகை
மேகங் கள்மா பெரும்பால் வழியிவை
மா,மா பெரும்பால் வழியெனு மெடகா
லாக்சி யாகுமிவை யனைத்து மாகும் ;
அதுதா[7] னென்றும் உள்ளது ; முடிவு
அற்றது எல்லை அற்றது ; அதன்பொருள்[8]

(தொடரும்)

---

1. Galaxy.
2. அளவின்மையால்.
3. Nebulae.
4. Elements.
5. Super Galaxy
6. Meta ,,
7. அவவையகம்.
8. Substance.

# செய்திகளும் குறிப்புக்களும்

(க) கல்லூரிகளில் தமிழ்

கல்லூரிகளில் தமிழைப் பயிற்சி மொழியாக்குவதற்கான திட்ட மொன்று தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சிக் கழகத்தினால் ஒப்புக்கொள்ளப் பட்டு 1960-61-ஆம் ஆண்டிலிருந்து இத்திட்டத்தை ஒரு கல்லூரியில் பரிசோதனை முறையில் நடைமுறைக்குக் கொண்டுவருவதென்று கடந்த 8-4-59-இல் முடிவு செய்யப்பட்டது.

குறிப்பு: விரைந்து நடைமுறைக்கு வரவேண்டிய திட்டங்கள் பல. அவற்றுள் கன்னித் தமிழைக் கல்லூரிகளிலும் ஆட்சிப்பீடமேற்று வது ஒன்று. இஃது இதுகாறும் செய்து முடித்திருக்கவேண்டிய வேலை. இன்னும் இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளிலாவது இது நடைபெறும் என்ற செய்தி மகிழ்ச்சிக்குரியதே

(உ) ஆங்கிலம் பற்றித் திரு. அந்தோணியின் கருத்து

"இந்தியாவில் பல விடங்களில் ஆங்கிலம் அறிந்தவர்கள் வாழு கின்றனர். நாட்டில் மிகுதியாக வழங்கப்படும் பொதுமொழி அதுதான். வேறு எந்த மொழிகளையும்விட ஆங்கிலத்தை அதிகமாகப் படித்துத் தேறியவர்கள் பத்து மடங்கு அதிகம். தென்னாட்டிலிருந்து டில்லிக்கு வருகின்றவர்கள் ஆங்கிலம் அறிந்திராவிடில் அந்நியராகத் தவிப்பர். பார்லிமெண்டில் இன்று எல்லோரும் அறிந்துகொள்ளக் கூடிய மொழி யாக விருப்பது ஆங்கிலம்தான். தற்போது ஆங்கிலத்தை நாடுவோர் தொகை 10 மடங்கு அதிகரித்துள்ளது நாட்டவர் அனைவரையும் பிணைக்கும் மொழி ஆங்கிலம்தான் இதை ஒப்புக்கொள்ளாவிடில் நாட் டில் பிளவுதான் ஏற்படும்" என்று 24-4-59 இல் மக்கள் மன்றத்தில் பேசிய திரு. பிராங் அந்தோணி குறிப்பிட்டார்

குறிப்பு: திரு. அந்தோணியாரின் கருத்துப்படி ஆங்கிலம் இன்று மிக முதன்மைபெற்று விட்டது எனவே அஃது அயல்மொழி எனக் கருதாமல் பொதுமொழியாகக் கொண்டால் மக்களுக்கும் நன்மை உண்டு, ஆட்சி முறையிலும் அல்லல் இராது.

(ங) இந்தியே பொதுமொழி ஆதற்குரியதாம்!

"ஆங்கிலம் எவ்விதம் இந்தியரின் ஆட்சிமொழியாக இருக்கமுடியும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அந்தந்த வட்டாரங் களின் மொழியை வளர்க்க முற்படுவது முற்றிலும் நியாயமே. ஆனால் மக்களுக்குப் பொதுமொழி ஒன்று இருக்கவேண்டும். அரசியல் சட்டத் தில் வகைசெய்யப் பட்டபடி இந்தி பொதுமொழியாக இருப்பதற்குத் தகுதி வாய்ந்தது, என ஆட்சிமொழிக் குழுவினரில் பெரும்பான்மை யினர் கருதுகின்றனர் இன்றில்லாவிட்டாலும் 10 ஆண்டுகட்குப் பிறகாவது இந்தி பொதுமொழியாக முடியும்" என்று அண்மையில் கல்கத்தாவில் நடைபெற்ற 'பாரதீய இந்தி சிக்ஷா பரிஷத' ஆண்டுக் கூட்டத்தில் பேசிய, மைய அரசின் வணிகத்துறை அமைச்சர் திரு லால்பகதூர் சாத்திரியார் குறிப்பிட்டார்.

**குறிப்பு:** திரு •சாத்திரியார் அவர்களின் பேச்சு வட்டாரமொழிக ளுக்கு ஆதரவு தருவது போன்று அதே நேரத்தில் இந்தி ஆதிக்கத் துக்கு வக்கோலுவதாகவும் அமைந்துள்ளது. இன்றில்லாவிடினும் இன்னும் 10 ஆண்டுகளில் இந்தியாவில் இந்திமொழி ஆதிக்கம் செலுத் தும்—செலுத்த வேண்டும் என்பது அவரது ஆவல். அந்த ஆவலை அடிப்படையாக வைத்து இந்தியே பொதுமொழியாதற்கு ஏற்றது என வாது புரிகிறார். இந்தியாவை ஒரே நாடெனக் கருதுகின்ற எவர்க்கும் இது சரியெனத் தோன்றலாம். ஆனால் நடைமுறைக்கு அஃது ஒவ்வாது என்பது தமிழரின்வாதம். இந்தியையும் பொதுமொழியாக்கிவிட்டு தமிழ் போன்ற வட்டார மொழிகளையும் வளர்ப்பது என்பது பொருந்தாக் கூற்றேயாகும்.

## (ச) இந்தி வேண்டாம்: 18 பெருமக்கள் வேண்டுகோள்

"ஆங்கிலமே ஆட்சிமொழியாக நீடிக்க வேண்டும். இந்தியை ஆட்சி மொழியாக்க எடுக்கும் நடவடிக்கைகளைக் கைவிடவேண்டும் என்று கோரி ஒரு விண்ணப்பத்தைத் திரு சி. இராசகோபாலாச்சாரியாரும் மற்றும் 18 பெருமக்களும் கையொப்பமிட்டு, காங்கிரஸ் உறுப்பினரும், ஆட்சிமொழிக்குழு உறுப்பினருமான டாக்டர், பி. சுப்பராயன் அவர்கள் மூலம் கடந்த 29-4-59 இல் மக்கள் மன்றத்துக்கு அனுப்பியுள்ளனர்.

**குறிப்பு:** திரு. லால்பகதூர் சாத்திரியார் போன்றவர்கள் ஆங்கிலத்தை அகற்றி இந்தியை அரியணையேற்ற முயலும் இவ்வேளையில் 'இந்தி வேண்டாம்' எனப் பதினெண் பெருமக்கள் விடுத்திருக்கும் விண்ணப்பம் மிகமிக இன்றியமையாததும் காலமறிந்து ஆற்றிய பணியு மாகும்.

## (ரு) 'ஆகாஷ்வாணி'யில் பேசச் சென்னை மாநகர் மன்றத் தலைவர் மறுப்பு

தேர்தலுக்குப் பிறகு மக்களுக்குச் செய்தி என்ற தலைப்பில் சுருக்க மாகப் பேசுவது மாநகர் மன்றத் தலைவர்கட்கு வழக்கம். இவ்வழக்கத் தினை யொட்டி சென்னை வானொலி நிலையத்தாரிடமிருந்து புதிய மாநகர் மன்றத் தலைவர் திரு. அ. பொ. அரசு அவர்கட்கு அழைப்பு அனுப்பப் பட்டது. சென்னை, திருச்சி நிலையங்களில் 'ஆகாஷ்வாணி' என்னும் சொல்லை விடுத்து 'வானொலி' என்ற சொல்மட்டுமே வழங்கப்படல் வேண்டும் எனத் தமிழர்கள் போராடிக் கொண்டிருப்பதற்கு நிலையத் தார் முற்றும் இணங்காத வேளையில் தாம் அவ்வழைப்பினை ஏற்று 'ஆகாஷ்வாணியில்' பேச இயலாதென அவர் மறுத்து விட்டார்.

**குறிப்பு:** தமிழகத்தின் தலைநகராம் சென்னையின் நகர்மன்றத் தலைவரவர்கள் உண்மைத் தமிழ்ப் பற்றின் காரணமாகவும் தன்மானம் காரணமாகவும் 'ஆகாஷ்வாணி' என வழங்கப்படும் வானொலியில் தமது முதல் கருத்தைத் தெரிவிக்க மறுத்தது பெரிதும் பாராட்டத்தக்கதே. மற்றப் பணிகளிலும் இங்ஙனம் தமிழாக்கம் வளர அவர் முனைவார் என நம்புகிறோம்.

---

# மதிப்புரை

**"சைவசமய வளர்ச்சி"**

[இதன் ஆசிரியர் டாக்டர் மா. இராசமாணிக்கனார், M. A., L. T., M.O.L., Ph. D. தமிழ்த்துறைத் தலைவர், தியாகராசா கல்லூரி, மதுரை. வெளியீட்டகம்: ஔவை நூலகம், 4/141, பிராட்வே, சென்னை - 1. விலை ரூபா 5-00.]

ஒரு நாட்டின் உயர்ந்த பண்பாட்டை ஆடி நிழல்போல் அனைத்துலகிற்கும் எடுத்துக்காட்டி வழிப்படுத்துவது சமயமேயாகும். சமயம், மொழி கல்வி நாகரிகம் முதலியனபோன்று வளரும் தன்மைத்து. வளரும் தன்மையுடைய உடலினுக்கு உணவு இன்றியமையாது வேண்டப்படுவதுபோன்று சமயவுணர்வு வளம்பெற வளர்வதற்கு உளங்கொளத்தக்க உயர்ந்த உண்மை நூல்களாம் உணவு இன்றியமையாததாகும். "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்" ஆவதுபோன்று உணர்வுக்கு வேண்டும் நூல்கொடுத்தோர் உயிர் உய்வு கொடுத்தோராவர்.

சமயம் சாதிப்பிணக்கையும், தாழ்வு உயர்வையும், உரிமை ஒற்றுமை உறவு முதலியவற்றிற்குக் கேட்டினையும் தருவதென்னும் தப்பான எண்ணம் எப்படியோ உலகிடை நிலவுவதாயிற்று. உண்மையில் இவையும் இவைபோன்ற பல தீமைகளையும் அறவே நீக்கி நன்மைகளனைத்தையும் ஆக்கி நல்வாழ்வுக்கு உறவாய் உறுதியளித்து நிற்பதே உண்மைச் சமயமாகும். ஓர் உயர்ந்த கல்லூரியில் பலதிறப்பட்ட வகுப்புகளும், நூல்களும், ஆசிரிய மாணவர்களும் கலந்திருப்பதால் பிணக்கு முதலிய தீமைகள் வர யாண்டுங் காணப்படுவதற்கில்லை. அதற்கு மாறாக ஒற்றுமையும், உறவும், உதவியும், உணர்வுமே பெருகி வளர்வதற்குத் துணைநிற்கக் காண்கின்றோம். அதுபோன்றதே சமயம். கல்லூரி மாணவரிடையே ஒற்றுமையை வளர்ப்பதுபோன்று சமயம் மாந்தரிடையே ஒற்றுமையை வளர்க்கும் ஒப்பிலாஒன்றாகும். இவ்வுண்மையினை இந்நூல் பற்பல சான்றுகளுடன் நன்குவிளக்கிக் காட்டுகின்றது. இடையே சமயப்பூசல்கள் நிகழ்ந்தனவாகக் கேட்கப்படுவதற்குக் காரணம் வயிற்றுப் பிழைப்பை மேலென்றெண்ணி வாழ்ந்த போலிச் சமயக் குருமார்களே யாகும். இவ்வுண்மை தெரிந்தால் சமயம் வீட்டாட்சிக்கும் நாட்டாட்சிக்கும் இரு கண்போன்று ஒப்ப வேண்டத்தக்க தொன்று என்பதாம். அதனையும் இந்நூல் நன்கு விளக்குகின்றது. சமயவுண்மைகள் தாய்மொழியிலேயே இருத்தல் வேண்டுமென்பதையும், நடைமுறையில் கையாளப்படவேண்டு மென்பதையும் காரணங்காட்டி விளக்குகின்றது. சமயவுண்மைகளைத் தாய்மொழி வாயிலாக வுணராத திருக்கோவிற் குருக்கண்மார் அலுவலாளர்கள் அக் கோவில் வழிபாட்டினைத் தாயில்லாப் பிள்ளைபோன்று வருத்தமுற விடுகின்றனர். அது திருக்கோவில் களை நிறுவிய தெய்வப்பெற்றிவாய்ந்த வேந்தர் பெருஞ்செல்வர் முதலியோரின் கருத்திற்கும் மாறெனக் கூறுகிறது.

இந்நூலின்கண் சங்ககால முதல் தற்காலம் வரை சைவசமயமும், சமயநூல்களும், திருக்கோவில்களும், கல்வெட்டுகளும், வேந்தர் ஆட்சி முறைகளும், மாந்தர் வாழ்க்கையும் காலவரையறைகளுடன் ஆசிரியரவர்களால் நன்கு விளக்கப்பட்டுள்ளன. சைவசமயத்துக்குரிய திருமுறைகள், சித்தாந்த நூல்களனைத்தையும் கற்றுணர்வார்க்குக் கைச்

சுவடிபோன்று நன்கு விளக்கப்பட்டுள்ளன. இவ்வொரு நூலே அவ் வுண்மைகளை யுணர்வதற்குப் போதுமானதாக விருக்கின்றது. பெயரள வில் சமயநூல் எனக் காணப்படினும் உண்மையான தமிழக வரலாறு, பாரதநாட்டு வரலாறு, வெளிநாட்டுத் தொடர்பு, தமிழ்மொழி மாண்பு முதலிய பலவும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. பல நிற ஓவியங்கள் காணப்படுகின்றன. அதனால் பொதுவாக நூலகங்களிலும், சிறப்பாகத் திருக்கோவில்களிலும் செந்தமிழன்பர்களிடையும், ஆசிரியர் மாணவர்க ளிடையும் இந்நூல் நின்று நிலவவேண்டுவ தொன்றாகும். நாடு மொழி நன்னெறி மூன்றும் பீடுற இந்நூல் பெருந்துணையாமெனக் கூறுதல் பொருந்தும்.

**“ அண்ணல் சுப்பிரமணியனார் மணிமலர் ”**

[இதன் விலை ரூபா, 3-00.] இம் மணிவிழாத் தலைவர் உண்மையான நற்றொண்டர். கல்விக்கும் தமிழ் மொழிக்கும் ஆற்றிவரும் கைம்மாறு கருதாத் தொண்டுகள் அளப்பில. அம்மட்டோ? பல்லாயிரக்கணக்கான கைப்பணத்தை வரையா தீந்து பல்லோரைக் கற்றுவல்ல புலவராய், உற்ற கலைத்துறை முதல்வராய், பெருநிலை மாண்பினராய், அரும் பொருட் செல்வராய் ஆக்கி வைத்துவரும் ஆன்றோருமாவர். இத்தகைய வள்ளற் கோமகனுக்கு வாய்த்த இளவல் உளமொத்த—அன்று உளமே யாய ஒண்மையரென்னும் உண்மையை உணர்த்தாமலிருப்பதற்கில்லை. இதனால் மணிவிழாத் தலைவர் உலகுக்கும், ஊருக்கும், உறவுக்கும், குடும்பத்திற்கும் ஒத்த நல்லாண்மைசேர்வள்ளல் எனப.

மணிவிழாமலர் வெறும் அணிமட்டுமன்று. அரிய பெரிய வரலாற்று நூற் கருவூலமுமாகும். பிற்காலத்துத் தமிழக வரலாறு எழுதும் ஆசிரியர் கட்குக் கருவி நூலாகும். கற்கும் மாணவர்க்கு ஒற்கத்தினூற்றும் துணையாகும். கற்பிக்கும் ஆசிரியர்கட்கு அற்புளம்பேணும் பொற்பாகும். ஆட்சியாளர்கட்கு மாட்சிமிகு வனப்பாகும். எல்லா நூல்நிலையங்களுக்கும் இத்தகைய வைப்பனைய நன்மலர்கள் இன்றியமையாச் செல்வங்கள்.

இதன்கண் “கலைச் சுவையும் கலையுணர்வும்” என்பது முதலாக (டாக்டர், மு. வரதராசனார், M. A., M O L.) “A Survey of Saiva Siddhanta Works” என்பது (Prof S. Arumuga Mudaliar, M A., B O L, L.T.) ஈறாக அரிய பெரிய கட்டுரைகள் முப்பது காணப்படுகின்றன. இவையேயன்றி விழாவிற் கலந்து வேண்டுவபுரி ஆன்றோர் அரும் பொருளுரைகள் பலவும் காணப்படுகின்றன. மேலும், மணிவிழாத் தலைவர், அவர்தம் தொடர்புறும் சான்றோர், விழாப்பெருந் தலைவர் முதலிய பல்லோரின் அழகிய நிழலுருவப் படங்கள் காணப்படுகின்றன. அழகிய பதிப்பு; வனப்புறு கட்டடம். மணிவிழாத் தலைவரையும் தொடர்ந்தாரனைவரையும் மனமார வாழ்த்துகின்றோம். அண்ணல் சுப்பிரமணியனார் நீடு வாழ்ந்து மேலும் தமிழ்த்தொண்டு புரிவாராக.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.

## இரண்டாவது சிற்றிலக்கிய மாநாடு (19-4-1959)



நிற்பவர். 1. வித்துவான், அ. க. நவநீதகிருட்டிணன், 2. பண்டித, மீ. கந்தசாமிப் புலவர், 3. கு. பரமசிவம், எம்.ஏ., 4. வித்துவான், கு. சுந்தரமூர்த்தி, 5. வித்துவான், சொ. சிங்காரவேலன், 6. வித்துவான், அ. இராசகோட்டியப்பன், 7. இராம. கனகசபாபதி.

இருப்பவர்: 1. பாலகவி, வே. இராமநாதன் செட்டியார், 2. மகாவித்துவான், ச. தண்டபாணி தேசிகர், 3. ந. சிவகுருநாதன் செட்டியார், பி.ஏ., பி.எல்., 4. அ. மு. பரமசிவானந்தம், எம்.ஏ., எம்.லிட்., (தலைவர்) 5. டாக்டர் தி. இரா. அண்ணாமலைப் பிள்ளை, எல்.சி.பி.எஸ்., 6. வ. சுப்பையா பிள்ளை, 7. வித்துவான், வே. மாணிக்கவாசகம் பிள்ளை.




சிலம்பு திருவள்ளுவர் ஆண்டு ககூகூ௦, வைகாசி பரல்
ங௩ ஜூன், 1959 க௦

உ

திருச்சிற்றம்பலம்

# செந்நெறி பரப்பற்காம் சீர்மை

செந்நெறி எனினும் சித்தாந்த சைவம் எனினும் ஒன்றே. சிவத்துடன் தொடர்புடையது சைவம் என்பர். சிவம் என்னும் சொல் குறைவிலா மங்கலக்குணத்தன் என்றும், பேரின்ப வடிவினன் என்றும பொருள்தரும. துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் பெற்று வாழ்தற்பொருட்டே ஆருயிர்கட்கு மாயா காரிய உடம்புகளுடன் பொருந்துவதாகிய பிறப்பு ஏற்பட்டது. அங்ஙனம் பொருந்துமாறு திருவுள்ளக் குறிப்பால் புரிந்தருள் பவன் சிவன்.

அச் சிவபெருமான் ஒருவனையே விழுமிய முழுமுதல்வனைக் கொண்டு தொழுதுய்யுமாறு வழிவகைகளை முறைப்படுததிக் காட்டுவது செநநெறியாகிய சித்தாந்த சைவம். இச் செந்நெறி யானது எல்லை காணவொண்ணுத வரலாற்றுக் காலத்துக்குப் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னிருந்து தொடர்நது வருகின்ற பெரு நெறியாகும். இந்நெறி தமிழகததில் முளைத் தெழுந்து செழிப்புற வளர்ந்து இன்றுகாறும் ஒன்றுபோல் நின்று நிலவும் தமிழர் திருநெறி. அனைத்துலகிற்கும் நினைப் பரிய நனிநாகரிப் பண்பை வழங்கிய வழுவிலாப் பெருமக்கள் செந்தமிழ் மக்கள். அவர்கள் சிவபெருமானைச் செந்தமிழ் மொழி யான் வழிபடாமல் வேறு வந்தேறியவர் மொழியான வழிபட் டிருப்பரென்பது எங்ஙனம வாய்மையாகும் ?

புறப்புறச் சமயத்தாராகிய கிறித்துவ அன்பர் சென்ற சென்ற நாடுகளிலெல்லாம் அவ்வந் நாட்டுத் தாய்மொழிகளில் தங்கள் மத நூலை மொழிபெயர்த்துப் பரப்பி வருகின்றனர். நம்நாட்டில் அதற்கு மாறாக நம் தாய்மொழியில் மட்டும் திருவருட் செல்வர் வாயிலாகத் தோன்றியருளிய புகழ் நூல் பொருள் நூல்களாகிய மறை முறைகட்கு முதன்மைச் சான்று முற்றும கொடாமல் அயன்மொழி நூல்களுக்கு முதன்மை கொடுத்துவரக் காண்கின்றோம். அதனால் நம் செந்நெறியுண்மை பெருமக்களிடையே பரவ வழியின்றிப் போகின்றது. அதுமட்டு மன்று; அம்மாந்தர் அவற்றினிடத்து ஆர்வமோ, அன்போ, அறிவோ கொளவதற்கும் இடனில்லாமல் போகின்றது மேலும் வடமொழியே மந்திரமென்றும், திருமுறைகள் மநதிரங்கள் அல்லவெனறும் பொதுமக்களிடையே அழுத்தமாகப் பதிந்து கிடக்கின்றன. அதறகுக் காரணம் திருக்கோவில் வழிபாட்டில் தேவார திருவாசகஙகள் மந்திரமாயிருநதும் மந்திரம்போல் கையாளப்படாமையேயாம். அவைகள் சிறந்த மந்திரங்கள் என்னும் மெய்ம்மையினைப் பெருமக்களுக்கு உணர்த்தவேண்டு வது செந்நெறிச் செல்வர்களின் பெருங்கடனாகும் அதற்குரிய எளியவழி திருக்கோவில்களிலும் திருமடஙகளிலும் நிகழும் நாள்விழா சிறப்புவிழா முதலிய எல்லா வழிபாடுகளிலும திருமுறைத் திருமாமறையாம் தமிழ் மந்திரங்களுக்கே முதன் மையும் முதலிடமும் நல்கிவருவனவாகும்.

சிலோர் கருதுமாறு திருமுறை வழிபாடாகிய பூசைக் கமைந்ததன்று; பூசைமுடிவில் ஓதப்படும் புகழ் வழிபாட்டிற்கு மட்டும் அமைந்ததென்பது ஒருசிறிதும் பொருந்தாது. வழி பாட்டிற்கும் பொருள்சேர் புகழ்மொழிக்கும் ஒருங்கமைந்தது திருமுறையென்பதே யுண்மை வழிபாட்டிற்கும அமைந்த தென்பதனை வரும் தேவாரத் திருமாமறையான் உணர்க.

"அந்தண் சோற்றுத் துறையெம் ஆதியைச்
சிந்தை செய்ம்மின் அடியா ராயினீர்
சந்தம் பரவு ஞான சம்பந்தன்
வந்த வாறே புனைதல் வழிபாடே." —க உஅ - கக.

"நல்ல புனற்புகலித் தமிழ்ஞான சம்பந்தன் நல்ல
அல்லி மலர்க்கழனி யாரூ ரமர்ந்தானை
வல்லதோ ரிச்சையினால் வழிபாடிவை பத்தும் வாய்க்கச
சொல்லுதல் கேட்டல்வல்லார்துன்பந் துடைப்பாரே."
—க. க05 - கக.

இதுபோன்று தேவாரத் திருமாமறை தமிழ் மந்திரங்களும் மறையுமாம் என்னும் மெய்ம்மையினையும் வருமாறுணர்க:

"பிறைவள ரும்முடிச் சென்னிப் பெரும்புலி யூர்ப்பெரு மானை
நறைவள ரும்பொழிற் காழி நற்றமிழ் ஞானசம் பந்தன்
மறைவள நந்தமிழ் மாலை வல்லவர் தந்துயர் நீங்கி
நிறைவளர் நெஞ்சின ராகி நீடுலகத்திருப் பாரே." —உ. ௬௭ - ௧௧.

மேலும் வழிபாட்டில் எல்லாப் பெருமக்களும் பங்குகொள் வதும், நன்கு பொருளுடன் புரிந்து உளங்குளிர்ந்து பேருளில் திளைத்துப் பேரின்பம் எய்துவதும் மேற்கொள்ள வழி செய்வது மலர்தூவிப் போற்றுதலாகிய அருச்சனையாகும். "அர்ச்சனை பாட்டேயாகும் ஆதலான் மண்மேல் நம்மைச், சொற்றமிழ் பாடு கென்றார் தூமறை பாடும் வாயார்" என்னும் திருவருண் மொழியும் தமிழ் மாமறை அருச்சனையினையே வலியுறுத்து கின்றது. அங்ஙனம் திருமுறைத் தமிழ் மந்திரங்கள் ஓதி அருச்சனை புரிவரேல் செந்நெறிச் செல்வர்கள் எத்துணை எழுச்சியும் கிளர்ச்சியுங்கொண்டு எல்லையிலா இன்பம் எய்துவரென் பதனை இசைக்கவும் ஒண்ணுமோ? "சொல்லிய பாட்டின் பொரு ளுணர்ந்து சொல்லுவாரே" செந்நெறிச் செல்வராவர் என்பது திருவருள் கைவந்த தவத்தோர் மறைமொழி.

அருச்சனைக்கென்றே அமைந்தனவாகப் "போற்றித் திருத் தாண்டகம்" ஐந்தும், "போற்றித் திருவகல்" ஒன்றும் ஆகிய ஆறு செந்தமிழ்த் திருமாமறைகள் காணப்படுகின்றன. அவற்றை ஐந்தொழிற்கும், திருவடிச் சேர்ப்பிற்குமாக உளங் கொண்டு ஓதி வழிபடுதலவேண்டும். ஐங்கடவுளர்க்கும் அம்பல வாணர்க்கும் இவையே அமைவுடையனவாகும். அஞ்சுமுகத் தோடு அம்மை திருமுகமும் சேர்ந்து அறுமுகச்சிவனைத் திகழும் பன்னிருகைச் செல்வர்க்கும் இவையே பாங்குடையவாகும். இம் முறையில் வனப்புற வகுத்துள்ள வண்ணம் வருமாறு.

௧. "பொறையுடைய பூமிநீ ரானாய் போற்றி" எனத் தொடங் கும் திருத்தாண்டகத் திருப்பதிகம் பிள்ளையார்க்கும், படைத்தற் குறிப்பிற்குமாம்.

௨. "எல்லாஞ்சிவ னென்ன நின்றாய் போற்றி" எனத் தொடங் கும் திருப்பதிகம் முருகர்க்கும், காத்தற்குறிப்பிற்கு மாம்.

௩. "பாட்டான நல்ல தொடையாய் போற்றி" எனத் தொடங்கும் திருப்பதிகம் ஆலமர்கடவுளர்க்கும், துடைத்தற்குறிப்பிற்குமாம்.

௪. "வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி" எனத் தொடங் கும் திருப்பதிகம் அம்மைக்கும் மறைத்தற்குறிப்பிற்கு மாம்.

ௌ. "கற்றவர்க ளுண்ணும் கனியே போற்றி" எனத் தொடங்கும் திருப்பதிகம் சிவபிரானுக்கும் அருளற்குறிப்பிற்கு மாம்.

௮. "நான்முகன் முதலா வானவர் தொழுதெழ" எனத் தொடங்கும் திருவாசகப் போற்றித் திருவகவல் அம்பல வாணர்க்கும் திருவடி சேர்த்தற்குறிப்பிற்குமாம்.

மேலும் நாள்வழிப்பாட்டாக ஓதியுய்தற்குத் திருக் குறுந்தொகைத் திருப்பதிகம் ஒன்று திகழ்கின்றது அதுவே "சித்தத்தொகைத் திருக்குறுந்தொகை" இது தொண்ணூற்றேழாந் திருப்பதிகமாகும். இதன்கண் துவக்க வாழ்த்துத் திருப்பாட்டு "சிந்திப் பார்மனத் தான்சிவன் செஞ்சுடர்" எனத் தொடங்குவது. அதன்பின் அகரமுதலாக ஔகாரம் ஈறாக நிரல்பட உயிரெழுத்துப் பன்னிரண்டுக்கும் பன்னிரண்டு திருப்பாட்டுக்களும், அதன்பின் ஆய்தவெழுத்திற்கு ஒரு திருப்பாட்டும் அமைந்துள்ளன. மேலும் 'க, ச, ட, த, ப' என்ற வல்லெழுத்து ஐந்திற்கும், அவ்வவற்றிடையே அவ்வவற்றிற்குரிய இன எழுத்துக்களாகிய 'ங, ஞ, ண, ந, ம' என்ற மெல்லெழுத்து ஐந்திற்கும் ஆகப் பத்துத் திருப்பாட்டுக்களும், இவற்றின்பின் 'வ'கர மொழிந்த இடையெழுத்து ஐந்தினுக்கும ஐந்து திருப்பாட்டுக்களும், 'ன'கர மெல்லெழுததிற்கு ஒரு திருப்பாட்டும் ஆக முப்பது திருப்பாட்டுக்கள் காணப்படுகின்றன. உயிர் பன்னிரண்டு, ஆய்தம் ஒன்று, மெய் பதினெட்டுத், துவக்க வாழ்த்து ஒன்று ஆக முப்பத்திரண்டு திருப்பாட்டுக்கள் காணப்படுதல் வேண்டும். இப்பொழுது காணப்படுவன முப்பது திருப்பாட்டுக்கள். காணப்பெறுதன 'வ'கரத்திற்கும் 'ற'கரத்திற்கு முரிய இரண்டு திருப்பாட்டுக்கள். இவ்விரண்டற்கும் முறையே இத் திருப்பதிகத்தின்கண் காணபபடும். "சிந்திபபார்மனத் தான்" என்னும் முதல் திருப்பாட்டையும், "ஈறில் கூறையன்" எனத் துவங்கும் ஐந்தாம் திருப்பாட்டையும் அவ்வவ்விடங்களி னமைத்து ஓதுதல தகும. இங்ஙனம் ஓதுங்கால் ஒவ்வொரு திங்களின் முதல் நாள் தொட்டு முறையே ஒவ்வொரு திருப் பாட்டாக முடிவு வரையும் ஓதிவருதல் சிறப்பு வழிபாடாகும். இதனையும் வற்புறுத்துதல் வேண்டும்.

சிவதீக்கையின்கண் தொடுமிடத்திற்கு அமைந்துள்ள "திருவங்கமாலை" திருப்பதிகம்போன்று சிவபெருமானின் திருப்படிமங்களி லமைந்துள்ள திருவுறுப்பு முதலியவற்றைக் குறித்து வழிபடுதற்கு வாய்ப்பாக நான்காம் திருமுறைக்கண் ஒரு திருப்பதிகம காணப்படுகின்றது. அதனை யோதி வழிபாடு செய்வதும் பெருங்கடனாகும். அத் திருப்பதிகம'

"பாலை யுடைக்கமு கோங்கி" எனத் துவங்கும் திருப்பாட்டு முதலாகத் "தருக்கு மிகுத்து" எனத் துவங்கும் திருப்பாட்டு ஈறுகவுள்ள திருப்பாட்டுக்கள் பத்தும் கொண்டதாகும். இதன்கண் படிமம் எழுந்தருளுவித்தற்குரிய திரு இடமுதல் திருவடி விரல் ஈறுகப் பததுறுபபுகள் காணடபடும. அக்குறிப்பு வருமாறு :

"இடமடி துகில்கசச, கைகழுத்து முகம்நுதற்கண்
திடமுடி திருஅடி விரல்பத்துஞ் சிறப்பே."

இவை போன்று இன்னும் பலவேறு தொண்டுகளுக்கும் ஏற்புடைத்தாகவுள்ள திருப்பதிகங்களை ஆய்ந்தெடுத்தமைத்துப் பரப்புதல் வேண்டும். ஒவ்வொரு மனையின் கண்ணும் நிகழும் திருமண முதலிய எல்லாச் சடங்குகளாகிய கரணங்களிலும் திருமுறைத் தனித்தமிழ் மந்திரங்களையே ஓதி அவ்வக்கரணங்களை இயற்றப் பயிற்றுதல் வேண்டும்.

## தமிழ் பரப்புதல்

பண்டு செந்நெறி முதல்வர் நால்வரும் திருவருள் வலத்தால் இடமிடந்தோறும் எழுந்தருளிச் செந்நெறிக்குரிய செந்தமிழினைப் பரப்பியருளியமை போன்று இந்நாள் திருமடங்களிலெழுந்தருளியிருக்கும் ஆதீன முதல்வர்களாகிய குருமகா சந்நிதானங்கள் தம் அருமைப் பரிவாரங்களுடன் எழுந்தருளித் திருவுலாப் போந்து ஆங்காங்கே தங்கிச் செந்நெறி மாந்தர்க்குத் திருக்காட்சி அளித்துத் திருமுறை வழிச் சிவதீக்கையும், திருமுறைப் பரப்புதலும், செந்நெறி விரிவுரைகளும் செய்வித்தருளி ஆட்கொண்டருளுதல் அரும்பெருந் தொண்டாகும். தாய்முகங் கண்ட சேய்போன்று மக்களும் அடிகண்மார் திருவடிகளைக் கண்டு அகமிக மகிழ்வர். தமிழ் பரப்புமுண்மை வருமாறுணர்க :

"நாளு மின்னிசை யாற்றமிழ் பரப்பு
ஞான சம்பந் தனுக்குல கவர்முன்
தாள மீந்தவன் பாடலுக் கிரங்குந்
தன்மை யாளனை யென்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின் றாடு
மங்க ணன்றனை யெண்கண மிறைஞ்சும்
கோளி லிப்பெருங் கோயிலு ளானைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே."—எ. ௬௨ - அ.

எழுந்தருளித் திருவுலாப் போவதால் மக்களிடையே பெருங்கிளர்ச்சியும், புதுமலர்ச்சியும், சமய உறைப்பும் உண்டாம் என்ப

தைக் காஞ்சி காமகோடிப் பீடாதிபதிகள் ஏறத்தாழ ஓராண்டுக் காலம் சென்னைக்கோநகர்க்கண் தங்கிச் சூழவுள்ள அளவிறந்த பட்டறைகள் தோறும் எழுந்தருளிச் சொற்பொழிவுகளாற்றிச் சமயவுண்மைகளைப் பரப்பி மக்களிடையே எழுச்சியை உண்டாக்கினமையால் யாவரும் நன்குணரலாம்.

பரப்பும் வகை

செந்நெறித் திருமட முதல்வர்கள் அனைவர்களும் ஒருங்கு குழீஇத் தமிழக மாவட்டங்களுள் இன்னின்ன பகுதிக்கு இன்னின்னார் எழுந்தருளுவதெனு முடிவுசெய்து அவ்வப் பகுதிக்கு அவ்வவர் எழுந்தருளுதல் வேண்டும். எழுந்தருளுங்கால் தத்தம வழிபடு கடவுளரின் திருப்படிமங்களுடன், திருமுறை பன்னிரண்டும் சித்தாந்த நூற்கள் பதினான்கும் வனப்புற முதன்மையிடம் பெற்றிருத்தல் வேண்டும். திருமுறையோதும் செல்வக் குழுவினர் இன்னிசைத் துணைவருடன் சிவனெறிப் பொலிவுடன் தோன்றுதல் வேண்டும். திருமுறை வல்லாரும் சித்தாந்த வல்லாருமாகிய செந்தமிழ்ப்புலவர் குழு உடன் வருதல் வேண்டும். திருவெண்ணீற்றுக் கோவிலும (திருநீற்றுப்பை) சிவமணியும் காணவரும் மெய்யன்பர்கட்கு வழங்குதற் பொருட்டுத தொகுத்து வைததிருத்தல் வேண்டும். சமயவுண்மைகள் சித்தாந்தவுண்மைகள் நிரம்பிய சிறு நூல் வெளியீடுகளும், துண்டு வெளியீடுகளும் வேண்டுமளவு வழங்க மேவியிருத்தல் வேண்டும். ஏனை இலக்கண இலக்கியச் சுவடிகளும் நிரம்ப இருத்தல் வேண்டும்

தங்குமிடங்களினெல்லாம் ஓதுவா மூர்த்திகள் உளங்கனிய ஓதுதலும், செந்தமிழ்ப்புலவர் பெருமக்கள் செவ்விய விரிவுரையாற்றுதலும் சிறக்க நிகழ்தல் வேண்டும். "தென்னா டுடைய சிவனே போற்றி, எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி" என்னும் சிறப்பும் பொதுவுமாகிய பெருநெறிச் சிறப்புச் செந்தமிழ் மந்திரம் இடையறாது முழங்குதல் வேண்டும் ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் என்னும் உயர்ந்த வுண்மையினை எல்லாருள்ளத்தும் பல்லாற்றானும் நல்லவாறு பதிவித்தல் வேண்டும். எழுந்தருளுமிடங்களை முன்னரே வரையறை செய்து ஆங்காங்கு அறிவித்து விடுதல் வேண்டும்.

இவைகளனைத்தும் பொற்புற அமையப்பெற்ற தமிழ்மறை புகன்றுசெல் தனிப் பொறியூர்தியின்கண் அழகுற அமைத்தல் வேண்டும். அணிபெற ஆனேற்றுக்கொடி பணியாளர் பாலும், ஊர்தியின் முன்னும் பின்னும் சீர்பெற அமைதல் வேண்டும்.

தமிழ்மறையுண்மை

"சுழிந்தகங்கை தோய்ந்ததிங்கள் தொல்லராநல் விதழி
சுழிந்தசென்னி சைவவேடம் தானினைந்தைம் புலனும்
அழிந்தசிந்தை யந்தணாளர்க் கறம்பொருளின் பம்வீடு
மொழிந்த வாயான் முக்கணாதி மேயதுமு துகுன்றே." க. ௫௩-௬.

மேலோதிய அருள்திருப் பாட்டின்படி நாயனருளால் நால்வரால் ஓதியருளப்பெற்ற திருமுறைகள், நான்மறையாகவும், திருச்சிற்றம்பலக் கோவையார் மறைமுடியாகவும் இருக்கும் மாண்பினை விரித்து விளக்குதல் வேண்டும். திருமூலர் திருமந்திரம் செந்தமிழாகமம் என்பதனை யாண்டுந் தேற்றுதல் வேண்டும். எந்நாட்டகத்தும் எம்மொழியகத்தும் இன்றுகாறும் தோன்றப்பெறாத செந்தமிழ்ச் "சிவஞானபோதச் செழும் பொருட் சீரிய நூலை" விழுமிய முழுமணியாக அனைவர்களும் கற்றுக் கருத்திருத்தித் தொழும்படி செய்தல் வேண்டும்.

அப்பனருளிய ஒப்பில் திருப்பாசுரமும், அம்மையருளிய செம்மைசால் முத்திறத்திருப்பதிகத் தொகுப்பும், சேந்தனாருளிய திருப்பல்லாண்டும், எஞ்சிய திருவிசைப்பாவும், பதினொராந் திருமுறையிற் காணப்படும் ஏனையவும, பன்னிரண்டாந் திருமுறையும் ஆகிய ஆறும் உறுப்புக்களாகக் கொண்டு தனித் தமிழுமாமறை திகழும் உண்மையினையும் பசுமரத்தாணியெனக் கசிவுறும் உளளத்துப் பதியுமாறு பரப்புதல் வேண்டும்.

வழிபாட்டு முடிவில் "தேவாரம், திருவாசகம், திருக் கோவையார், திரு விசைப்பா, திருப்பல்லாணடு, திருமந்திரம், பதினொராந் திருமுறை, திருத்தொண்டர் புராணம்" என்னும் எண் பெரும் மறையும ஓதுதல் வேண்டும் இவை சிவபெருமானின் எண்பெருங் குணஙகளையும் நினைவுறுத்துவன.

ஐந்தெழுத்துண்மை

நால்வகைப் பாகுபாட்டுடன் அமைநத நற்றமிழ்த் திருவைந் தெழுத்தினை நன்னெறி நான்மையார்க்கும் நானிலத்தார்க்கும் மேனிலை எய்தச் சன்னிதானங்கள் குருமொழி மொழிதல் வேண்டும். இவை போன்றன பிறவும் ஏற்புடையன இடம் பெறுதல் வேண்டும்.

**வாழ்க செந்நெறி! வாழ்க வண்டமிழ்!! வாழ்க வெண்ணீறு!!! வாழ்க சிவமணி! வாழ்க வைந்தெழுத்து! வாழ்க திருமடம்! வாழ்கவுலகே!!!**

---

# டாக்டர் தருமாம்பாள் அம்மையார் மறைவு

தமிழ்மொழி—தமிழ்நாடு—தமிழினம் ஆகியவற்றின் முன்னேற்றமே தமது வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு அவற்றுக்காகச் சிறை வாழ்வையும் ஏற்று நாட்டுப் பணியாற்றிய நற்றமிழ்ப் பெருமாட்டியார் டாக்டர் தருமாம்பாள் அம்மையார் அவர்கள் கடந்த 19—5—'59 அன்று பிற்பகல் 2 மணிக்கு தமது 69 ஆவது அகவையில் இம் மண்ணுலக வாழ்வை நீத்தனர் என்ற செய்திகேட்டு ஆற்றொணாத் துயரமெய்துகின்றோம். பொது வாழ்வில் பணியாற்றுவோர் சிலர். அவருள் பெண்டிர் மிகச் சிலரே. அச் சிலருள்ளும் ஆண்களோடு சரிநிலை நின்று அரசியல், சமுதாயத் துறைகளில் முன்னணியில் நிற்போர் தொகை மிகக் குறைவு. அத்தகைய குறைபாட்டினை மாற்றிய பெருமை அம்மையாரவர்களையே சாரும். 1938 இல் தோன்றிய இந்தி எதிர்ப்பின்போது அம்மையார் தமிழகத்துப் பெண்களிடையே விழிப்புணர்ச்சி தோன்றச் செய்தார்கள் பெண்கள் மாநாடு கூடுதற்கு முதல்வியாகத் திகழ்ந்தார்கள். மேலும் அம்மையார் சிறந்த சொல்லாற்றல் படைத்தவர்கள். இறுதிக் காலம் வரை நாட்டு நலமே அவர்தம் மூச்சாகத் திகழ்ந்தது. அம்மையார் சீர்திருத்த இயக்கத்திலும், பெண்கள் முன்னேற்றத்திலும் சீரிய கருத்துடையவர்கள் இத்தகைய மூதாட்டியாரின் பிரிவு பொதுவாகத் தமிழ்நாட்டிற்கும் சிறப்பாகப் பெண்ணுலகிற்கும் ஈடு செய்ய இயலாத பேரிழப்பேயாகும். வீரத் தமிழன்னையைப் பிரிந்து வருந்தும் அவர்தம் குடும்பத்தார்க்கும, உற்ற உறவினர்க்கும் பொது வாழ்வில் அவரோடு பணியாற்றிய அன்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம். அம்மையார் ஆவி இறையடியில் இன்புறுமாக.



டாக்டர், எஸ். தருமாம்பாள் அம்மையார்

தோற்றம்: 1890 மறைவு: 1959

# பதிகக் பண்போப்பு

[சித்தாந்த பண்டிதர், திரு. ப. இராமநாத பிள்ளை]

(செல்வி சிலம்பு ௩௩, பரல் ௩, ௪௨௪-ஆம் பக்கத் தொடர்ச்சி)

விழுமிய முழுமுதலாம் சிவபெருமான் ஆருயிரினிடத்தும் ஏழுலகினிடத்தும மறைந்து நின்றருளுகின்றனன். அம்மறைவு மூவிடத்தானும் மூச்சுட்டானும் உலகியற்பொருள்களை உணருமாறு போன்று மூவகைப்படும். அவை விறகினிடத்துத் தீ, பாலினிடத்து நெய், மணியினிடத்துச் சோதி என்பன. விறகிற்றீ படர்க்கையிடமும் அகரச்சுட்டுமாம. பாலில் நெய் முன்னிலையிடமும் உகரச்சுட்டுமாம் மணியில் சோதி தன்மையிடமும் இகரச்சுட்டுமாம். இம்மூன்றும் ஒருபுடையொப்பாக முறையே மும்மலமுடையார், இருமலமுடையார், ஒருமலமுடையாராகிய உயிரினங்களைக் குறிக்கும் குறிப்புமாகும். இவற்றின் மறைந்து நிற்கும் தீ, நெய், ஒளிகளால் பயன்பெற நினைப்பார் அரும்பெரும் முயற்சிகளை மேற்கொள்ளுதல் வேண்டும்.

விறகினின்றும் தீயினைக் காண்பதற்குக் கடைகோலும் கயிறுங்கொண்டு கூடுதலாக இழுத்துக் கடைதல் வேண்டும்; பாலின்கண் நெய்யினைக் காண்பதற்கு இழுத்துக் கடைதல் வேண்டும்; மணியின்கண் சோதியினைக் காண்பதற்குக் கடைதல் ஒன்றே போதுமானது. இவைபோன்று இறைவனைக் கண்டின்புறுதற்கும் உள்ளம் உரை உடல் என்ற மூன்றும் ஒருங்கு கூடி உழைத்தலும், உள்ளமும் உரையுமாகிய இரண்டும் ஒருங்கியைந்து உழைத்தலும், உள்ளமட்டும் உழைத்தலும் ஆகிய முததிறப் பணிகளும வேண்டுமென்க. சிலமும் நோன்புமாகிய இருதிறத்தார்க்கும் முத்திறப்பணிகளும் வேண்டுமென்க. செறிவு நிலையினர்க்கு இருதிறப்பணிகளும் வேண்டும். அறிவு நிலையினர்க்கு உள்ளத்தொழில் ஒன்றுமே அமைவுடைத்தாம்.

சிவனடியாராகிய உறவினை விழுத்துணை உறவுகோலாக நட்டு, செந்தமிழ்த் திருவைந்தெழுத்தாகிய "சிவ சிவ" என்னும் மாமறையினை மறவாது உணர்விற் புணர்ப்பதாகிய கயிற்றினைப் பூட்டி நன்னெறி நான்மை நற்றவத் திருத்தொண்டினைப் புரியச் சிவபெருமான் சிவகுரவனுக வெளிப்பட்டு முன்னின்று அடிமை கொண்டருள்வன்.

இங்ஙனம் சிவபெருமானை நேர் நிற்குமாறு அன்பினுற் புரியும் அகத்தொண்டொடத்துப் புறத்துப் புரிந்து சிவக்கொழுந்

திலை நேர் நிறுத்திய குங்குலியக் கலயநாயனர் திருத்தொண்டும் இதனுடன் ஒப்பு நோக்கி இன்புறுதற்கேற்றதொன்றாகும். அது வருமாறு : சிவக்கொழுந்து - சிவலிங்கம்.

"விண்பயில் புரங்கள் வேவ வைதிகத் தேரின் மேருத்
திண்சிலை குனிய நின்றார் செந்நிலை காணச் செய்தீர்
மண்பகிர்ந் தவனுங் காணா மலரடி யிரண்டும் யாரே
பண்புடை யடியா ரல்லாற் பரிந்துநேர் காண வல்லார்."
(கஉ - குங்குலியக் - ௩0)

நேர்காண்டல் - முன்போல முன்னின்றருளக் காண்டல். இந்நாயனர் எங்ஙனம் நேர்கண்டார் என்னும் விளக்கம் இத்திருப் பாட்டின் மேற்போந்த உ௭, உ௮, உ௯ ஆகிய மூன்று திருப் பாட்டுக்களான் நன்குணரலாம்.

"உறவுகோல் நட்"டென்பதற்கு ஆண்டான் அடிமை என்னும் உறவென்றலும் ஒன்று. ஆண்டவன் முன்னின் றருளவே ஆருயிர் செய்யும் செயல் அனைத்தும் இறைபணியாய், உய்யுமுயிரின் நுகர்வாகிய அழுந்தியறிதலனைத்தும் திருவடிப் பேரின்பமாய்த் திகழும். இதுவே சிவபோகம் எனப்படும். மேலோதிய திருப்பாட்டு ஒருபுடையொப்பாக இயைந்து திகழ்வது காண்க.

ஒருபுடை யொப்பாகக்கொள்ளும் இவைகளை ஏற்ற பெற்றி எண்ணி அமைத்துக்கொள்ளுமாறு அன்பறிவாற்றல்களான் மிக்க ஆன்றோர்களைப் பெரிதும் வேண்டிக்கொள்கின்றேன். செந்தமிழ் முழுமுதற் சிவஞானபோதச் செம்பொருள் நூல் பன்னிரு நூற்பாக்களைக் கொண்டு திகழ்கின்றது.

இந்நூற்குக் கருவாய்த் திகழ்வது ஆளுடையபிள்ளையார் அருளிய "ஏருய் முதலொன்ருய்" எனத் தொடங்கும் திருமா மறைத் திருப்பாட்டாகும் "வாழ்க வந்தணர்" எனத் தொடங் கும் திருப்பாசுரம் பன்னிரு திருப்பாட்டுககளைக் கொண்டது. இப்பன்னிரண்டும், பன்னிரு நூற்பாவிற்கும் வித்தாய்த் திகழ் கின்றன. பின் விளக்குதும்,

"காண்டல் கருதல் கடைப்பிடித்த லாம்விளக்கம்
ஈண்டுண்டாம் உண்மை நெறிவிளக்கத்—தாண்டசெய்புள்
ஓராறல் ஆய்ந்தோர் புடையொப்பா மாசில்பத்தும்
சீரா விளக்கினன்றுள் சேர்ந்து."

# பெயர் சொல்லாப் பெரும் புலவர்

[வித்துவான். திரு. பாப்பு இராமநாதன்]

பண்டு தொட்டு நம் தமிழ்நாட்டில் வாழ்ந்த பெரும் புலவர்கள் அனைவரும், அவர்கள் கண்ட காட்சிகளையும், மனதிற் றோன்றிய கருத்துக்களையும் பாவடிவில் யாத்துப்போயினர். அவை நமக்கு இன்று பெருவிருந்தாகவும், பழங்காலச் செய்திகளை அறிவிக்கும் பறையாகவும் நின்று நிலவுகின்றன.

அத்தகைய புலவர்கள் சிறந்த கருத்தடங்கிய பாக்களை யாத்தனர் என்பது ஒருபுறம் மகிழ்வு தருவதாயினும், அவர்கள் தமது வரலாற்றினை யாண்டும் கூறுமற் போந்தது மிகவும் குறைபாடுடையதாகவும் இருக்கின்றது. அம்மட்டோ? தம் பாக்களுக்கடியில் இயற்றினோர் தம் பெயரை எழுதாமற் போந்தமை குறையினும் குறையாகும். அவர்கள் தம் பெயரைக் குறிப்பிடாதது மறதியாலோ அன்றி, பெயரை வெளியிட விரும்பாததாலோ, யாதுபற்றியோ அறியோம் ஆயினும் அந்தப் புலவர்களின் பெயரை ஒருவாறு அறிய முயல்வதே எமது நோக்கமாகும்.

பண்டைப் பனுவலாகிய புறநானூற்றில் ஆசிரியர் பெயரில்லாப் பாட்டுக்கள் பதினொறு இருக்கின்றன. உகூஎ, உகூஅ ஆகிய இருபாட்டுக்கள் முழுமையுமே யில்லை. பிறபாட்டுக்களில் முதல், இடை, கடைப்பகுதிகள் இல்லாமலிருக்கின்றன.

அணிலாடு முன்றிலார், நெடு வெண்ணிலவினார், மீனெறி தூண்டிலார், விட்ட குதிரையார், செம்புலப் பெயல் நீரார் ஆகிய புலவர்கள் அவரவர் பாடலால் பெயர் பெற்றதாகக் குறுந்தொகை கூறுகிறது.

> "காதல ருழைய ராகப் பெரிது வந்து
> சாறுகொ ளாரிற் புகல்வேன் மன்ற
> அத்த நண்ணிய வங்குடிச் சீறூர்
> மக்கள் போகிய அணிலாடு முன்றில்
> புலப்பில் போலப் புல்லென்
> றலப்பென் தோழியவர் அகன்ற ஞான்றே." (குறுந். சுக)

இச்செய்யுளில் அணிலாடு முன்றில் கூறப்பட்டமையின் இதனாசிரியர் அணிலாடு முன்றிலார் என அழைக்கப்பட்டார்.

"கருங்கால் வேங்கை வீயுறு துறுகல்
இரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை
எல்லி வருநர் களவிற்கு
நல்லை யல்லை நெடுவெண் ணிலவே."

இதில் நெடுவெண்ணிலவு குறிக்கப் பெற்றமையால் இவ்வாசிரியர் நெடு வெண்ணிலவினார் என அழைக்கப் பெற்றார்.

"திண்டேர் நளளி கானத் தண்டர்
பல்லா பயந்த நெய்யிற் றொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோ
றெழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி
பெருந்தோ ணெகிழ்த்த செல்லற்கு
விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே." (குறுந். ௨௧0)

இப்பாடல் காக்கையைப்பற்றிப் பாடினமையால் இப்பாடல் செய்த புலவர் காக்கை பாடினியார் என அழைக்கப்பட்டார். நச்செள்ளை என்பது இவரது இயற்பெயராகும்.

"யானே யீண்டை யேனேயென் னலனே
ஏனல் காவலா கவணொலி வெரீஇக்
கான யானை கைவிடு பசுங்கழை
மீனெறி தூண்டிலி னிவக்கும்
கானக நாடனொ டாண்டொழிந் தன்றே." (குறுந். ௫௪)

இப் பாடலில் மீனெறி தூண்டில் உவமிக்கப் பட்டமையின் இவ்வாசிரியர் மீனெறி தூண்டிலார் என அழைக்கப்பட்டார். விட்ட குதிரையார், செம்புலப் பெயனீரார் என அழைக்கப் பட்டமையும் ஈண்டு கருதற் பாடுடையனவாகும்.

மயானத்தின் இயல்பை ஒரு புலவர் பாடியதாக, புறநானூற்றில் ௩௬௪-வது பாடல் தெரிவிக்கின்றது. அப்பாடலில்,

"முதுமரப் பொத்திற் கதுமென வியம்பும் கூகைக் கோழி."

எனக் கூறினமையின் இப் பாடலாசிரியர் 'கூகைக் கோழியார்' என அழைக்கப்பட்டார்.

"கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே
அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய
சிறுவெண் பல்லி போலத் தன்னொடு
சுரம் பலவந்த வெமக்கு மருளி
வியன்மல ரகன்பொழி லீமத் தாழி
அகலி தாக வனைமோ
நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே."

இப்பாடல் இயற்றிய ஆசிரியர் பெயர் யாதெனத் தெரியவில்லை. அவரின் பெயர் யாதாயிருக்குமென ஆராயுமிடத்துக் குறுந்தொகையுள் வந்துள்ள பாடலில் சொல்லப்பட்ட உவமை கொண்டு அவ்வாசிரியர் பெயர் அழைக்கப்பட்டமை போல இவ்வாசிரியரும் அழைக்கப்படுவதால் படும் இழுக்கென்னை ?

இச்செய்யுளில் 'சிறுவெண்பல்லி' உவமை செய்யப்பட்டிருத்தலின் அப்புலவர் சிறுவெண் பல்லியனார் என அழைக்கப்படலாமன்றோ?

"கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே."

எனத் தொடங்கும் உஉஅ ஆம் புறப்பாடல் ஐயூர் முடவனார் பாடியதாகக் காணப்படுகின்றது.

இப்பாடலின் முதலடியும் உஙிசு ஆம் பாடலின் முதலடியும் "கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே" —என விளிக்கப்பட்டிருத்தலானும், உஙிசு-வது பாடலில் ஏழாவது வரி— "நளந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே" எனவும் உஉஅ-வது பாடலில் "நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே" எனவும் கூறியிருத்தலானும் இவ்விரு பாடல்களையும் இயற்றிய ஆசிரியர் ஒருவரேயன்றி இருவரல்லர் எனத் துணிய இடமேற்படுகின்றது. அன்றி உஙிசு ஆம பாடல் பாடியவர் வேறொருவராகக் கொள்ளின் என் எனின், அதையும் ஆராய்தும்.

இவ்விருவகை ஏதுக்களால் பாடல் ஒத்திருத்தலின் இதனைப் பாடியவர் ஐயூர் முடவனாரே யன்றிப பிறராகார்.

இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த "சூரிய நாராயண சாஸ்திரியாரவர்கள்," தமது இயற்பெயரோடு, "பரிதிமாற் கலைஞன்" என புனைபெயர் கொண்டு விளங்கியமைபோல ஐயூர் முடவனாரும், சிறுவெண் பல்லியனார் எனப் புனைப்பெயர் கொண்டு ஏன் விளங்கியிருத்தல் கூடாது?

இன்னும் பழங்காலப்புலவர் பெருமாட்டியாகிய நச்செள்ளையாரும் குறுந்தொகையுள உகo-வது பாடலில் காக்கையைப் பாடினமையால் காக்கைப் பாடினியார் எனும் புனைப்பெயர் கொண்டமையும் ஈண்டு ஒப்பு நோக்குக.

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை." (குறுந். நகங)
என்ற வரியில உளள காக்கைக்கு வந்துள்ள 'சிறுவெண்' அடைமொழியும், உஙிசு வது பாடலில் உள்ள 'சிறுவெண்' அடைமொழியும் ஒன்றாயிருத்தலின், ஐயூர் முடவனாருக்கு, சிறுவெண் காக்கையார் என்றோ, சிறுவெண் காக்கைப் பாடியார் என்றோ

வேறொரு புனைபெயரும் கொண்டு விளங்கியிருத்தல் வேண்டு மென்பது இதனாற் புலப்படுகின்றது.

காக்கை பாடினியாரின் காலமும், ஐயூர் முடவனாரின் காலமும் வேறுபட்டிருத்தலின், ஐயூர் முடவனாரினின்றும் தன்னை வேறு பிரிக்கவே, "காக்கையது பலியே" என அடை மொழியின்றிக் கூறினார் போலும்.

அன்றி, காக்கை பாடினியாரே, காக்கையின் சிறப்பைக் கூறச் 'சிறுவெண்' என அடைமொழி கூறியிருக்கலாமன்றோ?

இவையனைத்தையும் ஒருங்கு வைத்து ஒப்பு நோக்கின் உஉஅ, உருக ஆகிய பாடல்கள் ஒரே புலவரால் பாடப்பட்ட தென்றும், அப்புலவர் ஐயூர் முடவனாராயிருக்கலாமென்றும் அவருக்குச் சிறுவெண் பலியனார் என்னும் புனைப்பெயர் ஒன்று இருந்த தென்றும் அறிகிறோம்.

சிறுவெண் காக்கையெனக் காக்கையைச் சிறப்பித்திருத் தலின், இப்பாடலைக் காக்கை பாடினியாரே பாடியிருக்கலாம். சிறுவெண் என்னும் அடைமொழியால், 'சிறுவெண் பல்லி'யென வரும் பாடலும் காக்கை பாடினியாரே பாடியிருக்கலாம் எனத் துணியினும் இழுக்காது.

ஆகவே, பிற தமிழ்ப் பெரும் புலவர்களும் இது ஆராய்ந்து உண்மை புலப்படுத்துவார்களாக.

நாவொன்றே நானிலத்தில் நன்னலமெல் லாம்பயக்கும்
பாவினால் நல்லுரையால் பல்லோரும்—தேவரென
வாழுமா செய்யுமந்த வண்மை விளக்கமென்றும்
வாழுமா செய்வோம் மகிழ்ந்து.

## குடமுழுக்கு விழா

குன்றத்தூர் சேக்கிழார் அடிகள் திருக்கோயில் புதுப்பிக்கப் பட்டு (10—6—59) புதன்கிழமையன்று கும்பாபிடேகமும் பிறவும் முறையே 8, 9, 10 ஆம் நாட்களில் சிறப்புற நடைபெற்றன. இவற்றின் விரிவான செய்திகள் அடுத்த இதழில் வெளிவரும்.

# ஆக்காஷ்வாணி மறியல்

எத்தனையோ மாநாடுகளில் முடிவு செய்தும், எத்தனையோ கூட்டங்களில் பேசியும், எத்தனையோ பத்திரிகைகளில் தலையங்கம் எழுதியும் இந்திய சென்னை மந்திரிகளுக்கு அறிவித்தும், தமிழகப் புலவர் குழு மறுத்தும், பொதுமக்கள் வெறுத்தும் கூடப் பல ஆண்டுகளாக இருந்துவந்த வானொலி என்ற பெயரை ஆக்காஷ்வாணி என்று மாற்றும் கொடுமை நீங்கியபாடில்லை. அதற்கு மாறாகப் பல தமிழ்ச் சொற்கள நாள்தோறும் அழிக்கப் பெற்று வருகின்றது. தமிழ் நிகழ்ச்சிகள் ஒழிக்கப்பெற்று, ஹிந்தி நிகழ்ச்சிகள் அதிகமாகி வருகின்றன. மற்ற நிகழ்ச்சிகளுக்கு அந்தந்த அறிஞர்களை வைததிருப்பதுபோல தமிழ் நிகழ்ச்சிகளை தமிழ்ப் புலவர்களைக் கொண்டு நடத்த மறுத்து வருகின்றனர். பொதுவாகத் தமிழகத்து வானொலி நிலயங்கள் இரண்டும் தமிழ் மக்களின் மொழி, கலை, நாகரிகம், பண்பாடு ஆகியவைகளை அழிப்பதற்கு என்றே பயன்படுததப்பட்டு வருகின்றன. இவைகளைப் பாதுகாக்கத் தமிழ் மக்கள் இவ்வானொலி நிலய நிகழ்ச்சிகளில் பங்குகொள்ளாமல் வெறுப்பது ஒன்றே சிறந்த வழியாகும் என்று முடிவுக்கு வர நேர்நதது.

அத்தகைய முடிவுக்கு வந்த தமிழ் அறிஞர்களும், கலைஞர்களும், பெருமக்களாக நூற்றுக்கு எண்பது வீதம் இவ்வானொலி நிகழ்ச்சிகளில் பங்குகொள்வதில்லை என வெறுத்து ஒதுக்கிவிட்டனர். அப்படி இருந்தும் நிலயத்தினர் ஆக்காஷ்வாணி என்றே ஊளையிட்டு வருகின்றனர். ஆக்காஷ்வாணி என்பது தமிழ்ச்சொல்லும் அல்ல, கன்னடச் சொல்லும் அல்ல. அது வடமொழியைத் தழுவிய அழுத்தமான ஹிந்திச் சொல். ஆக்காஷ்வாணி என்பது ஒரு வான தேவதையின் பெயர். பூமாதேவி என்பதும் அப்படியே அது ரேடியோ என்பதையோ, வானொலி என்பதையோ குறிக்காது. வானொலி என்பது ஒரு நல்ல தமிழ்ச் சொல். அது வானத்தின் வழியே வருகின்ற ஒலி என்பதைக் குறிக்கும். நிலய அதிகாரிகள் இதை அறியாமலிருக்க முடியாது அறிந்துதான் முன்பு இப் பெயரை வைத்திருந்தனர். இப்போது வேண்டும் என்றே இச் சொல்லை அழித்து வருகின்றனர்.

சில கைக்கூலிகளைத் தேடிப்பிடித்தும் தமிழ்ப் பகைவர்களின் துணையைக் கொண்டும் நிலை நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து நடத்தி இக் கொடும் செயலை நிலைநிறுத்தப் பார்க்கின்றனர்.

இதை ஒழிப்பதற்கு மறியல் செய்வதைத் தவிர வேறு வழியில்லை. அது நிலையங்களில் பேச, பாட, நடிக்கச் செல்லும் மக்களை அவ்வாறு பங்கு பெறாமல் இருந்து நிலையங்களை வெறுத்து ஒதுக்கும்படி கேட்டுக்கொள்வதாக இருக்கும். இம் மறியல் ஜூன் மாதம் 10-ஆம் தேதி புதன்கிழமை அன்று தொடங்கி நடைபெறும்.

இது எந்த அரசியல் கட்சியையும் சாராமல் தமிழகப் பொதுமக்களின் தாய்மொழிப் போராட்டமாக இருக்கும். போராட்டத்தில் பங்குபெற்று வெற்றி பெறும்வரை ஒத்து உழைக்க எல்லா அரசியல் கட்சியினர்களையும் தமிழ் மகன் என்ற முறையில் அன்போடு அழைக்கிறேன். அவரவர்கள் தங்கள் தங்கள் அரசியல் கட்சிக்கொள்கைகளைச் சிறிதும் விட்டுக் கொடுக்காமல் அப்படி அப்படியே இருந்து இம் மொழி உரிமைப் போராட்டத்தில் பங்குபெற வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். உணர்ச்சி உள்ள எல்லா மக்களின் ஒத்துழைப்பும் வரவேற்கப்பெறும்.

திருச்சி,
19—5—59.

கி. ஆ. பெ. விசுவநாதம்.

## வாருங்கள் !

இந்திக்குத் தமிழ் நாட்டில் ஆதிக்கமாம்—நீங்கள்
எல்லோரும் வாருங்கள் நாட்டினரே
செந்தமிழ்க்குத் தீமை வந்தபின்னும்—இந்த
தேகம் இருந்தொரு லாபமுண்டோ ?

—பாரதிதாசன்.

# சாவகத் தீவில் இந்து சமயம்

[கோவைகிழார், C. M. இராமச்சந்திரன் செட்டியார்,
B A. B. L., F. R. G. S.]

12 நூற்றாண்டுகளுக்கு முன் தென்னாட்டு மக்கள் கீழ்க் கடலைக் கடந்து சாவகத் தீவு முதலிய பரந்த தீவுகளில் படை யெடுத்து அவற்றைக் கைப்பற்றி இந்து சமயத்தைத் தாபித் திருந்தார்கள். தமிழர்களும் அங்கே குடியேறி அந்நாட்டு மக்களைச் சைவ சமயத்திற்குத் திருப்பி மிகப் பெரிய ஆலயங் களைக் கட்டி வைத்தனர் அவ்வாலயங்கள் பாதுகாப்பின்றியும் இதுகாறும் பெருமை பொருந்திய சின்னங்களாக விளங்கு கின்றன மேற்கு நாட்டு வெள்ளையர்கள் அச் சின்னங்களைப் பார்த்துவிட்டு வியப்படைந்து அவைகளை மீண்டும் முன் னிருந்த நிலைமைக்குக் கொண்டுவர முயற்சித்து வருகிறார்கள். தமிழ் நாட்டார் தம முன்னோர்கள் இயற்றி வைத்த பெருங் கருவூலங்களைக் காப்பாற்றாமல் பாழ் அடைய விட்டுவிட்டனர். மறநதும் போய்விட்டார்கள் ஆனால், மேல்நாட்டு டச்சுக் காரரகள அவற்றின் அருமை பெருமைகளை யுணர்ந்து நூல்கள் எழுதிச் சிறநத சிற்பிகளைக் கொணடு பெருந் தொகைகளைச் செல விட்டுத் திருப்பணி செய்து வருகின்றனர். நமது முன்னோர்க ளுடைய பெருமைகளை யறிந்துகொள்ளும் நினைவுகூடத் தற்கால மக்களுக்கு இலலை. அப்படியாயின் அவைகளை நல்ல நிலைமைக் குக் கொணடுவர வேண்டுமென்ற எணணமதான் இஙகே தோன்றுமா? சில வரலாற்று ஆசிரியர்கள் சாவகம் முதலிய தீவுகட்குச் சென்று அச் சின்னங்களைப் பார்ததுவிட்டு வந்து வாளா இருக்கிறார்களே ஒழிய, ஒரு புல்லளவும செயல் முறை யில் யாதொன்றும செய்யவில்லை.

## 1. பெரம்பனன்

சாவக நாட்டில் இப்படிப்பட்ட சின்னங்களில் ஒன்று பெரம்பனன் தேவாலயம். கிழக்கிந்தியத் தீவுகளில் ஜாவா என்ற சாவகம நடுவில் உள்ளது அது மிகச் செழிப்பு வாய்ந்த ஒரு தீவு. நிலககடலைக காய்போல நீண்டிருக்கும் அத தீவில் முது கெலும்புபோல மலைத்தொடர் உண்டு. அதில் பல எரிமலைக ளுண்டு. மலைத் தொடரின் இரு புறங்களிலும் கணக்கற்ற ஆறுகள் ஓடும. நிலம மிகச் செழிப்பு வாய்ந்தது. நெல், கரும்பு, வாழை ஏராளமாய் விளையும். ஆண்டு முழுவதும் மழை பெய்த

வண்ணமாக இருக்கும். கரும்பிலிருந்து சர்க்கரை எடுத்து உலகமெங்கும் அனுப்பிவைத்துப் பொருள் சேர்ப்பது ஜாவாத் தீவு மக்களின் உழைப்புகளில் ஒன்ருகும். சாவகத் தீவினிடையில் ஜோக்கியா என்ற ஊர் இருக்கிறது அது அவ்வூர முசுலிம் சுல்தான் இருக்கும் இடம். அதிலிருந்து 10 மைல் தொலைவில் பெரம்பனன் என்ற ஒரு புனித இடம் இருக்கின்றது. அதற்கருகில் மெரப்பி என்ற எரிமலை வானை எட்டிக்கொண்டு நிற்கின்றது. அம்மலை அடிக்கடி வெடித்துவிடும். நெருப்பையும் குழம்புக் கற்களையும் கக்கும். அப்போது இருபுறமும் நெருப்பாறு ஓடி நிலத்தை முழுவதும் அழித்துவிடும. ஆனாலும், நெருப்பு ஆறின பிறகு எஞ்சி நிற்கும வண்டல் மண்ணில் விலையுயர்ந்த விளைபொருள்கள் எளிதில் விளையும். அப்படிப்பட்ட செழிப்பான நிலம் பெரம்பனன் ஆகும். ஜோக்கியாவிலிருந்து பெரமபனன் எட்டும வரையில் பாதைக்கு இருபுறஙகளிலும் பச்சைபபசேலென்ற நஞ்சை நிலங்கள் கண்ணுக்கெட்டும் தொலைவு வரையில் பரவி இருககும். இடையிடையே பளிங்கு போன்ற நீரோட்டஙகள் பாய்ந்த வண்ணமாக இருக்கும் கரும்பு வயல்களும் புகையிலைத் தோட்டஙகளும் வரிசையாகக் கடந்து சென்ருல பெரம்பனன் திருககோயிலை யடையலாம்.

### கோயில்

பெரமபனன் கோயிலானது கி. பி. 860-ல் நடு சாவகத்தின் இந்து மன்னர்களால் கட்டப்பட்டது. அந் நாளில் அவர்களுடைய பெருமை உச்ச நிலையில் இருந்தது. உயர்ந்த நாகரிகம் படைத்திருந்தார்கள். சைவ சமயத்தினராய்ச் சிறந்த அன்புடையராய் விளங்கினர்கள். இறைவனிடத்தில் கொண்ட பேரன்பினல் மிகச் சிறந்த கோயிலொன்றை எழுப்பினர்கள். ஆனல், செல்வமானது ஆறிடும் மேடும் மடுவும்போலாம் என்பர் மூதாட்டியார். அதுபோல இந்த மன்னர் வமிசமானது வெகுகாலம் இருக்கவில்லை. கி பி. 915-ல் அழிந்துவிட்டது. ஆனல் அவர்கள் கட்டி வைத்த பெருங்கோயில் அன்னுருடைய செல்வாக்கை இதுகாறும் காட்டிக்கொண்டு நிற்கிறது.

அந்த இந்து வம்சம் கி. பி. 915-ல் நிலைகுலைந்தபின் கோயில் பாதுகாப்பின்றி வழிபாடுகள் நின்றுவிட்டன. கோயிலைச் சுற்றிலும் செடிகொடிகள் முளைத்துவிட்டன. எஙகும் காடுகளாகி மனித சஞ்சாரம் அற்றுப்போய்விட்டது. கி. பி. 1594 வரை அதனை எட்டிப்பார்ப்பார் ஒருவரும் இருக்கவில்லை. பிறகு மெரப்பி எரிமலை நெருப்பைக் கக்கதொடங்கிற்று. அக்கம் பக்கத்து நிலப்பகுதிகள அசையத் தொடங்கின. அந்தப் பூமி அதிர்ச்சியினல் கோயிலில் இருந்த சிற்பக் கற்களெல்லாம் நிலை

மாறிவிழத் தொடங்கின. இந்த நிலையில் மிகச் சிறப்புற்றிருந்த பெருங்கோயிலானது பாழ் அடைந்த கோயிலாகிவிட்டது.

ஆங்கிலேயர் முயற்சி

கி பி 1811-ல் ஆங்கிலேயர் சாவகத்தைப் பிடித்து ஆட்சி புரியத் தொடங்கினர். அப்போது அங்கே ஆட்சித் தலைவராக இருந்த ஒரு பெருமகனார் இக் கோயிலினுடைய சிறப்புக்களைக் கண்டு வியந்து ஒரு புதைபொருள் ஆராய்ச்சி வல்லுனரை அனுப்பி வைத்தார். அவர் சிற்பச் சிறப்புக்களை எல்லாம் கண்டு ஒரு சிறந்த அறிக்கையை வெளியிட்டார். அதுமுதற் கொண்டு சென்ற 150 ஆண்டுகளாக ஆராய்ச்சிகளும், புனர் வேலைகளும் நடந்துகொண்டே இருக்கின்றன. இன்னும் முடிந்தபாடில்லை.

ஆங்கிலேயர்கட்குப் பிறகு டச்சுக்காரர்கள் ஜாவாவைப் பிடிதது ஆண்டனர். அவாகளில் சில நிபுணர்கள் பெரம்பனன் கோயிலை நல்ல நிலைக்குக் கொண்டுவர முயன்றனர் ஆனால் அக் காரியம் மிகவும் கடினமாக இருந்தது 10 நூற்றாண்டுகளாகச் சூறையாடப்பட்ட கோயில் அல்லவா? சமயத்தில் பற்றில்லாதவர்களும் பேராசைபிடித்தவர்களும் கொள்ளைக்காரர்களும் சிற்பங்களை அழித்தும் துண்டித்தும் எடுத்துக் கொண்டும் போய்விட்டனர். அக்காலத்து அரசியலார்கள் கோயிற் கற்களைக் கட்டிடங்களுக்கும் பாலங் கட்டுவதற்கும் சர்க்கரை ஆலைகள் கட்டுவதற்கும சொந்த வீட்டுப் படிகட்கும் கொண்டு சென்றுவிட்டனர், வெவ்வேறு நாட்டுச் சிற்ப ஆராய்ச்சியாளர்கள் தங்கள் தங்கள் கண்காட்சிகளுக்கு அருமையான சிற்பங்களைக் கொண்டுபோய் விட்டார்கள். துண்டிக்கப்பட்ட சிற்பங்கள் கோயிலைச் சுற்றிலும் சிதறிக் கிடக்கின்றன. இந்த நிலையில் கோயிலை நல்ல நிலைக்குக் கொண்டுவருவதென்றால் மிகவும் கடினமான செயல் அல்லவா? அப்படி இருந்தும் டச்சு அரசியலார் சிறிது சிறிதாகத் திருப்பணி செய்து வருகிறார்கள்.

சீர்திருத்தம்

பண்டைக் கோயிலைப்போலச் சீர்திருத்தம் செய்து பார்க்கும் அளவில் பெரம்பனன் கோயில் உலகத்திலேயே சிறந்த கோயில் என்று சொல்லக்கூடிய வகையில் அமைந்திருக்கின்றது. நாற்புறங்களிலும் பல அடுக்குகள் ஒத்த அளவு கொண்டவைகளாக இருக்கின்றன. வெளியடுக்குகளில் அக் காலத்து மன்னர்கள் மாதரத்து மடாதிபதிகளின் அடக்க அறைகள் நூற்றுக்கணக்கில் இருக்கின்றன. உச்சியில் உள்ள அடுக்குகளில் எட்டு ஆலயங்கள் இருக்கின்றன. அவைகளில் மூன்று பெரியவை,

ஐந்து சிறியவை நடுமையத்தில் உள்ள கோயில் சிவபெருமானுடைய மூலத்தானம். அதற்கு இருபுறங்களிலும் அதைவிடச் சிறிய அளவில் திருமால், பிரமன் இவர்களுடைய கோயில்கள். அங்கிருக்கும் கோயில்கள் எல்லாவற்றிலும் மிகச் சிறந்த சிற்ப வேலைப்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

**வேலைப்பாட்டின் திறம்**

சிற்பங்களைக் கண்டவுடனே பண்டைய இந்தியச் சிற்பிகளுடைய கைவேலைத் திறத்தை மெச்சமுடியாமல் இருக்கமுடியாது. பெண் உருவங்களின் அழகும் ஆண் உருவங்களின் கம்பீரமும் நாடக மேடையிலும் காணமுடியாது. மேலும் எங்கும் நகைச்சுவை மிக்குக் காணப்படுகின்றது. சிவபிரானுடைய திருஉருவங்களில் ஒன்று ஆள் உயரத்தில் இருப்பது மட்டுமின்றி மிகக் கம்பீரமாகவும் அமைந்திருக்கிறது. கொள்ளைக்காரர்கள் அதனை நெருங்கவும் அஞ்சினர்கள் போலும். அது வீற்றிருக்கும் நிலையில் ஒரு அழகிய அரியாசனத்தின்மீது அமர்ந்து தன் இரு கைகளையும் தொடைகளின்மீது வைக்கப்பட்ட இருக்கின்றது. அதன் வேலைத் திறத்தை உளளபடி எழுதுவதும் கடினம். அரியாசனத்திலிருந்து கீழே தொங்கும் துணிகள் உண்மைத் துணிகள்போலக் காட்சி தருகின்றன. திருவுருவத்தின் முகத்தில் தாடி தொங்குகிறது. அதில் ஒவ்வோர் உரோமமும் பிரிவுபட்டாற் போலத் தெளபடுகின்றது. இத் திருஉருவத்தின் அருகிலே மூன்று அழகிய பெண் உருவங்கள் நிற்கின்றன. அவ்வுருவஙகளின் தனங்கள் உயிர் உள்ள மக்களைபபோல் காட்சி தருகின்றன. உடல்களில் அணிந்திருக்கும் முத்துமாலைகள் அழகாக ஆக்கப்பட்டிருக்கின்றன. அவ்வுருவஙகளின் முகச்சாடை புன்னகை செய்யும வண்ணமாக இருக்கின்றது. சைகை காட்டினல் அடுத்த கணமே ஓடிவரும் பவனியில் இருக்கின்றன.

மேலும் ஆலயங்களைச் சுற்றி நடந்து செல்லும்பொழுது மதில்களிலெல்லாம இந்திய நாட்டு இதிகாசக் கதைகள் அழகாகத் தீட்டப்பட்டிருப்பதைக் காணலாம் கற்சுவர்கள் சிற்பியினுடைய திறததிற்குததக்கபடி கீழ்ப்படியும்போல் இருக்கின்றது. ஒருபுறத்தில இராமனுடைய துணைவியாகிய சீதையை இராவணசன்னியாசி திருடிசகொண்டு செல்லும் காட்சி சிததிரிக்கப்பட்டுளளது. இராவணன் எப்படியாவது சீதையைத தன்வயப்படுததிக்கொள்ள வேண்டுமென்று பார்க்கின்றான். சீதையோ இராவணனுடைய நோக்கத்தைக் கண்டுகொண்டு ஒத்துக்கொளள முடியாதென்று காட்டும் பாவனையில இருககிறாள். இக காட்சி மானிட இயற்கையை வெகு நன்றாகப் பிரதிபலித்துக் காட்டுகிறது அம மதிலில் காணும் காட்சிகள் எல்லாம்

மானிடக் குடும்பங்களில் நடைபெறும் சச்சரவுகள் கல்லிலும் தீட்டக்கூடும் என்று கூறுகின்றன.

சம்மதிக்காத அப் பெருமாட்டி தப்பித்துப் போவதற்கு முயலுகையில் ஒரு அரிசிப்பானையின் மீது தடுக்கி விழுகின்றாள். அதுகண்டு பக்கத்தில் போகின்ற ஒரு பன்றி சமயம் அறிந்து அரிசியைத் தின்னச் செல்லுகின்றது. சீதையினுடைய தோழி அதுகண்டு அஞ்சி அப் பன்றியைத் துரத்த முயலுகின்றாள். அத் தோழியினுடைய அழகிய சடைகளும் மார்பின் வளைவுகளும் வெகு அழகாக அமைந்திருக்கின்றன. அவள் அச் சன்னியாசியின் செயலைக் கண்டு அருவருக்காது பன்றியினுடைய சாகசத்தைக் கண்டு அருவருக்கிறாள் போலும். மேலும் தோழிக்குப் பின்னால் ஒரு குரங்கு நின்று கொண்டு ஒரு வாழைப்பழத்தைப் பிடுங்கிக்கொண்டிருக்கிறது. அக் குரங்கைப் பார்த்து மூன்று பல்லிகள் கொக்கரித்துக்கொண்டிருக்கின்றன. அந்த அழகிய காட்சியை இன்னும் விவரிக்க வேண்டுமா?

சித்திரங்கள் எல்லாம் வாழ்க்கை பளவிலேயே ஆக்கப்பட்டிருக்கின்றன இந்தக் கொடிய நாடகத்தின் காட்சிகள் முழுவதும் கல்லில் வெகு நுணுக்கமாக வெட்டப்பட்டுள்ளன. பானையில் உள்ள அரிசி, பன்றியின் வாலில் உள்ள மயிர்கள் இவைகளும்கூட உள்ளது உள்ளபடி செய்யப்பட்டுள்ளன கபட சன்னியாசியாகிய இராவணன் சீதையின்மீது வைத்திருந்த மோகத்தினால் தனது கைக்குடையையும் விசிறியையும் குண்டிகையையும் கீழேவிழ விட்டுவிடுகிறான். இத்தனை நுட்பமான வேலைப்பாடு முழுவதும் 6 அடி உயரமும் 12 அடி நீளமும் உள்ள ஒற்றைக்கல்லில் செதுக்கப்பட்டுள்ளது. 1000 ஆண்டுகள் ஆகியும் கூட வேலைப்பாடு சிறிதும் மங்கவில்லை மேலும இப்படிப்பட்ட காட்சிகள் நூற்றுக்கணக்கில் அவ்வாலயத்தில் இருக்கின்றன. அப்படிப்பட்ட சிற்பியின் திறம் என்னவென்று புகழ்வது? சித்திரங்களில் தெய்வங்கள், பூதங்கள், போர் வீரர்கள், பெண்மணிகள், பறவைகள், குரங்குகள், காளை மாடுகள், சிங்கங்கள் இவை முதலாகிய உயிர்வகைகள் உயிர் உள்ளவைகள் போலச் சித்திரிக்கப்பட்டுள்ளன. மேலும் செடி கொடிகள் பூமாலைகள் இலைகள் முதலிய தாவர வர்க்கங்களும் வெகு நன்றாகச் செதுக்கப்பட்டுள்ளன.

**தற்கால வேலை**

இப்படிப்பட்ட அருமையான வேலைப்பாடு எவ்வாறாக அழிக்கப்பட்டுள்ளன என்பதைப் பார்த்தால் மிகப் பரிதாபகரமாக இருக்கும். ஒரு தெய்வத்திற்கு மூக்கில்லை. மற்றொன்

றுக்குக் காதில்லை. ஒன்றுக்கு விரல்போய் இருக்கும். மற்றொன்றுக்குக் கால் உடைந்திருக்கும். இவைகளெல்லாம் சில்லரைக் குறும்புக்காரர்கள் செய்த வேலை என்பர். நம்பிக்கையில்லாத இளைஞர்கள் வேடிக்கைக்காகச் சென்று கற்களை வீசி விளையாடுகையில் இவ்வாறு அழிமானம் ஏற்பட்டிருக்கக் கூடும். மேலும் காட்டு விலங்குகளும், நம்பிக்கையில்லாத காட்டாட்களும் அழிமானம் செய்திருக்கலாம. ஆனால், சிற்பத்தில் அன்பு கொண்ட டச்சு அரசியலார் இக் கோயிலுக்குப் புதுமலர்ச்சி தந்து கொண்டு வருகிறார்கள். உடைந்து போனவைகட்கெல்லாம் புதிதாக அடைப்புக்கள் கொடுத்து முன்னிருந்தபடியே செய்கிறார்கள். 1000 ஆண்டுகளுக்கு முன் சில ஆண்டுகளில் உண்டாக்கபபட்ட கோயிலைத் தற்போது விஞ்ஞான முறைகளை அறிந்த வெளளையர்கள் பல ஆண்டுகளாக முயன்றும் முன்போலச் செய்ய முடியவில்லை. இந்த நிலையில் இந்து நாகரிகத்தை வெள்ளையர்கள் ஏன் பழிக்கிறார்களோ ?

## 2. போரோ பூதூர்

போரோ பூதூரென்பது பௌத்தர்களுடைய புனித இடம். அது சாவத் தீவில் ஜோக்கியா என்ற நகரத்திலிருந்து 25 கல் தொலைவில் உள்ளது. வழி நெடுகக் கரும்புத் தோட்டங்களும் சிற்றூர்களும் நிறைந்திருக்கின்றன. மிகச் செழிப்பான நாடாகையால் வழிதோறும் வழிப்போக்கர்கள் நிறைய நடநது கொண்டே இருப்பார்கள். கிராமங்கள் தூய்மையாக வைக்கப் பட்டிருக்கின்றன. குடிகள் தூய்மையாக இருப்பார்கள். நாளொன்றுக்கு இரண்டு முறையாவது குளிப்பார்கள். குடிசைகளையும் சுற்று வளைவுகளையும் யாராவது ஒருவர் பெருக்கிக் கொண்டே இருப்பர். ஒவ்வோர் ஊர் ஓரத்திலும் ஒரு நீரோடையோ அல்லது வாய்க்காலோ ஓடும. அவைகளில் துணிகளைத் துவைப்பது இயல்பாகக் காணலாம். தாம்பூலம் போடுவதை நிறுத்திவிட்டால் போதும், சாவகத்தார்களைப் போலத் தூய்மையான மக்கள் உலகில் இல்லை என்று ஒரு வெள்ளையன் எழுதி வைத்திருக்கின்றான். ஆனால் அம் மக்கள் பொது அறிவில் சிறிது குறைந்தவர்களாக இருப்பார்கள். இந் நாட்டில் எப்பொழுதும் மழை பெய்தவண்ணமாக இருக்கும். 25-வது கல்லில் உலகத்திலேயே மிகப் பெரிய தூபியைக்கொண்ட பௌதத ஆலயத்தைப் பார்க்கலாம்.

தூபி என்றால் புத்தருடைய ஏதாவது ஒரு சின்னம் வைக்கப்பட்டு அதன்மேல் கட்டப்படுகின்ற ஒரு பெரிய ஆலயமாகும். அச் சின்னம் புத்தருடைய சாம்பலோ, எலும்போ,

மயிர்த்துளியோ அல்லது பல்லாகாகவோ இருக்கும். இந்தப் பெரிய தூபியானது கி பி. 9-வது நூற்றூண்டில் கட்டப்பட்டது. அதில் என்ன சின்னம் வைக்கப்பட்டுள்ளதென்று ஒருவருக்கும் தெரியாது.

பௌத்த சமயம்

கி. மு. 6-ம் நூற்றூண்டிற்கு முன் பௌத்த சமயம் தோன்றிறது. அதைத் தோற்றுவித்தவர் இந்தியாவில் வட பகுதியில் இமயமலைக்கருகில் அவதரித்த கௌதமர் என்ற ஒரு இந்திய அரச குமாரர். இளவயதிலே இன்பமே துய்த்துக்கொண் டிருந்த அவர் நோய், வறுமை, முதுமை, சாவு என்ற காட்சிகளை ஒருமுறை பார்த்தபோது இவைகளைக் கொண்ட உலக வாழ்வு நிலையாதது என்று எண்ணித் துறவியானுர். அப்போதும் அவருக்கமைதி ஏற்படவில்லை வெகுதொலைவு சுற்றிவிட்டு ஒரு நாள் கயாவுக்கருகில் பல்குண நதிதீரத்தில் ஒரு வெள்ளரசமரத் தின்கீழ் அமர்ந்து தியானித்துக் கொண்டு இருக்கும்போது பேரறிவு தோன்றிற்று அதுமுதல் தான் கண்ட பேறறிவை உலகோருககு உபதேசித்து வந்தார். கணக்கற்ற சீடர்கள் ஏற்பட்டார்கள். தற்போது புத்த மதத்தினர் 45 கோடி உள் ளார்கள். உலகத்துச் சமயங்களில் அஃது ஒரு பெரிய சமயம்.

சமயக் கொள்கைகள்

ஒவ்வொருவனும் இறந்தால் மறுபடியும் பிறப்பான். அவனவ னுடைய வினைகளுக்குத் தக்கபடி மேல் அல்லது கீழ் நிலையில் பிறப்பான். இவ்வாறு பல பிறவிகள் எடுத்துத் தூய்மையான வாழ்க்கையினுல் ஒருயிர் அர்ஹத் என்னும் நிலை அடைய முடியும் அது நீங்கா அமைதியைக் கொண்டது. அதன் பிறகு பிறக்க வேண்டியதில்லை.

புத்தர் இறந்ததும் அவருடைய உடல் தகனம் செய்யப் பட்டது. அதில் கிடைத்த நீறு எட்டுப் பகுதிகளாகப் பிரிக்கப் பட்டு இந்தியாவில் எட்டு இடங்களில் புதைக்கப்பட்டது. அவ் வாறு புதைத்த இடங்களில் கவிழ்த்த மணி போன்ற பெருங் கல்லும் எழுப்பப்பட்டது. அதுதான் தூபம் என்பது.

பிறகு புத்த சமயம் சீனு, ஜப்பான், பர்மா, இந்தோ-சீனு, இந்தோனிஷியா முதலியவைகளில் பரவினபோது பௌதத சின்னங்கள் சிறிது சிறிதாக எடுத்துச் செல்லப்பட்டு அவை களின் பேரில் தூபிகள் கட்டப்பட்டன. அப்படிக் கட்டப் பட்ட தூபிகளில் ஒன்றுதான் போரோ பூதூர் தூபியாகும். மதரத்தில் ஆட்சிபுரிந்த இந்து மன்னர் மிகச் செழிப்புட

இருந்த காலத்தில், அதாவது கி. பி. 850-ல் அந்தத் தூபி கட்டப் பட்டது.

ஆனால் யாதோ ஒரு காரணத்தால் அந்த இடம் ஒதுக்கப் பட்டது. கி. பி. 915 முதல் அங்கே குடிவளம் இல்லாமல்போய் மரங்கள் முளைத்துப் பெரிய வனாந்தரம் ஆகிவிட்டது.

கி பி 1500 இல் முஸ்லிம் சமயத்தார்கள் சாவகத்தில் படையெடுத்து மக்களை முஸ்லிம சமயத்திற்குச் சேர்த்துக் கொண்டது முதல், இந்தத் தூபியைக் கவனிப்பாரில்லை பின்னர்க் கிறித்துவர்கள இந்த நாட்டைப் பிடித்தபோதும் இந்தப் புனிதக் கட்டடஙகளைக் கவனிக்கவில்லை.

ஆனால், ஆங்கிலேயர்கள் கி. பி 1812 இல் இந்நாட்டை யாண்டபோது அக்காலத்து ஆட்சித் தலைவர் இந்தப் பாழ் அடைந்த தூபியைப் பார்த்து வியந்து அதனை மீட்க முயன்றார். அதன் காரணமாகத் தற்போது பல்லாயிரககணக்கில் வெளிநா யர்கள் இந்த இடத்திற்கு வந்து காட்சிகளைக் கண்டு மகிழ்ந்து செல்லுகிறார்கள.

கட்டிட அமைப்பு

இந்தப் பெரிய தூபமானது 350 அடி சதுரம் கொண்ட அஸ்திவாரத்தின் பேரில் கட்டப்பட்டுள்ளது அதன்பேரில் நான்கு அடுக்குகள் ஒன்றுக்குள் ஒன்றாகக் கட்டப்பட்டுள்ளன. அவைகள ஒவ்வொன்றிலும் கணக்கற்ற விமானஙகள், சிகரங்கள், சிற்பஙகள், ஓவியங்கள் முதலியவைகள் கட்டபபட்டுள்ளன. நான்காவது சதுர அடிக்குமேல் மூன்று வட்ட அடுக்குகள் ஒன்றின்மேல் ஒன்று கட்டப்பட்டு அதன் உச்சியில் மணி வடிவங்களாகப் பல சிறு தளிகள் கட்டப்பட்டுள்ளன. எல்லா வற்றின் உச்சியில் ஒரு பெரிய மணி கட்டப்பட்டுள்ளது. அவ் வடிவத் தூபிக்குள்தான் புத்தருடைய சின்னம் வைக்கப்பட் டுளளது. அதன் சுற்றிலுமுள்ள 72 சிறு தூபிகளுள் ஒவ் வொன்றிலும் வீற்றிருக்கும் புத்தர் வைக்கப்பட்டிருக்கின்றது.

இக் கட்டிடததைப் பார்ததவாகள இதனை மனிதன கடடி இருப்பானோ என்று ஐயுறுவர். எகிப்து நாட்டுச் செய்குன்றுகள இக் கட்டிடத்திற்குத் தோற்றுவிடும். ஏனெனில் செய்குன்றைப் போல மொட்டையான கட்டிடமல்ல எஙகுப் பார்த்தாலும் சரிசமன் என்ற உணர்ச்சி தோன்றும். சிற்ப வகைகள் மிக அற்புதமானவை அவைகளின் எண்ணிககை பல வருடங்கள் ஆராய்ந்து பார்த்தாலும் ஒரு அதிகாரியால் கணக்கிட முடியா தென்றால் அதன் மேன்மையைப் பற்றிக் கூறவும் வேண்டுமா?

(தொடரும்)

# திருவள்ளுவர் சமணரா ?

[திரு. A. பாலசுந்தர குருக்கள்]

(செல்வி சிலம்பு ௩௩, ௧, ௪௩௨ ஆம் பக்கத் தொடர்ச்சி)

எனவே வள்ளுவர், முழுமுதற் கடவுள் ஒருவன் உண்டு, அவனைப் பல சமயத்தவரும பல பெயர்களால் வழங்குவர் ஆதலின் ஒரு சமயத்தார் கூறும் பெயரால் விதந்தோதாமல் யாவருக்கும் பொருந்துமாறு பொது இயல்புகளையே கூறி வாழ்த்தினார் ஆதலால்தான் திருக்குறள் பொதுமறையெனக் கொண்டாடப்படுகின்றது.

[illegible]வா 'நிமித்தகாரணமாகிய முழுமுதற் கடவுள் ஒருவன் உண்டு' என்னும் கொள்கையினர் ஆகையால் அவர் சைனர் அல்லர் என்பதைச் சென்ற பாலிற் கண்டோம்.

நிகண்ட வாதம் என்று கூறப்படும் சைன தருமத்தை விரிவாக அறிந்துகொள்ளப் போதிய நூல்கள் தமிழ் மொழியில் இல்லை தமிழில் சமணர் எனப்படும் சைனர் செய்துள்ள நூல்களை மூவகையாகப் பகுக்கலாம. அவை தரும நூல், நீதி நூல், இலக்கண நூல் என்பவையாம்.

தரும நூல்கள் சைன தருமத்துக்கே உரியவைகளான ஸ்ரீபுராணம், மேருமந்தரம், நீலகேசி, அருங்கலச் செப்பு முதலி யவைகளாகும்

நீதி நூல்கள் அறநெறிச்சாரம், ஏலாதி, நாலடியார் போன்ற வைகள். இவற்றுள் சைன தருமத்துக்கு மாறுபாடில்லாத பொதுவான ஒழுகலாறுகள் காணப்படுகின்றன நாலடியாரை இப் பகுதியில் சேர்த்துக் கூறியது வரலாற்று முறையாகும். அறிஞர்கள் சிலர் இதனைச் சமணர் செய்ததாக ஒப்புக்கொள்ள வில்லை.

இலக்கண நூல்கள் நன்னூல், காரிகை, நேமிநாதம் போன்ற வைகள். இவை பெரும்பாலும் தொல்காப்பியத்தின் சார்பு நூல்களாகக் கொள்ளத்தக்கன.

மேற்கூறிய மூவகையாகக் கொண்டு ஆராய்வோருக்கு அருங் கலச் செப்பிற்கும் அறநெறிச்சாரததிற்கும், அறநெறிச்சாரத் திற்கும் நாலடியாருக்கும் உள்ள வேற்றுமை புலனாகும். தொல் காப்பியத்துக்கும் மேற்சொன்ன இலக்கண நூல்களுக்கும் உள்ள வேற்றுமையும், மரபும் தெற்றென விளங்கும். இவற்றை விரிக்

கின் மற்றொன்று விரித்தலாகும் ஆகையால் சுருக்கமாகக் கூறினேன்.

மூவகுணர்த்திய மூவகையுள் ஒன்றினும் அடங்காதது திருக்குறள். இவ்வாறு யான் துணிந்து கூறுவதற்குரிய காரணங்கள் பலவுள.

சைன தருமத்தின் மூல நூல்கள் பெரும்பாலானவை பாகத மொழியில் உள்ளன. ஆகையால் தமிழ் நூல்களை மட்டும் நோக்கி முடிவு கூறல் பொருந்தாது.

சைன தருமம் தோன்றிய நிலைக்களத்தில் உள்ள நூல்களுக்கும் தமிழில் சமணர்கள் செய்த நூல்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளையும பகுத்துணர வேண்டியது இன்றியமையாததாகிறது. சைன தருமதத்தின் முதல் நூல்களுள் ஒன்றேனும் தமிழில் ஆக்கப்படவில்லை. இங்குள்ள சைனாகள் வடமொழியும் தமிழும் கலந்த மணிப்பவள நடையில் அவற்றுள் சிலவற்றிற்கு உரை எழுதிப் படித்து வருகின்றனர். சைனர் அன்றி மற்றையோர் பெரும்பாலும் அவற்றை அறியார்.

"மகாவீரர் காலத்துக்குப் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர் சமணர்கள் தென்னாடு நோக்கி வந்தனர். வந்தவர்கள் இங்குத் தங்கள் கொள்கையைப் பரவச் செய்யப் பெரிதும் இடர்பட்டனர். அவர்களுடைய மொழியும், கோட்பாடுகளும் இந் நாட்டு மக்களுக்கு ஒவ்வாதனவாயிருந்தன என்னலாம். காரணம் தமிழர் தனித்தன்மை வாய்ந்தவர்களாக இருந்தனர். அன்றியும் வடமொழியும் ஆரியர் கொள்கைகளில் பலவும் இந் நாட்டில் அவர்கள் வருவதற்கு முன்பாகவே ஊறிப்போய்விட்டன என்னலாம். ஆதலின் முன்னர் நீதி நூல்களையும் இலக்கணங்களையும் செய்தனர். இவற்றுள் இடையிடையே தங்கள் கொள்கைகளையும் கலந்து கூறினர். தஙகள் கொள்கைகளுக்கு மாறான வழக்குகளை நீக்க மேற்படி நூல்களின் வாயிலாக முயன்றனா. பின்னரே தரும நூல்களை யாத்தனர்." இவ்வாறு கோடல் பொருந்தும்.

மேற்கூறிய மூன்று வகையுள்ளும் திருக்குறள் அடங்காமைக்குரிய பல காரணங்களுள் சிலவற்றைக் காண்போம்.

ஐம்பெரும் பூதங்கள்: மாயை என்னும் தத்துவமும், அதன் காரியமே நிலம், நீர், தீ, காற்று, வானம் ஆகிய ஐம்பெரும் பூதங்கள் என்பதும், அவற்றின் சேர்க்கையாலானதே உடல் என்பதும் சைன தருமத்துக்குப் பொருந்தாத கொள்கைகளாம்.

சைன தருமத்துள் கூறப்பட்ட தத்துவப் பொருள்கள் "சீவம் (உயிர்ப் பொருள்) அசீவம் (உயிரல் பொருள்) என இரு

வகைப்படும். தருமம், அதருமம், ஆகாசம், புற்கலம் (அணு) ஆகியவை உயிரல் பொருள்கள். சீவம் உயிர்ப்பொருள். உடல், மொழி, மனம், பிராணன், அபானன் ஆகியவை புற்கலத்தின் உபகாரங்கள். அஃதாவது அணுவினாலானவை," என்று கூறப் படுகின்றன. இவற்றை விளக்கமாகத் தத்துவார்த்த விருத்தியுள் காணலாம்.

நிலம், நீர், தீ, காற்று என்ற நான்கும் ஏகேந்திரிய சீவங்கள் (ஓரறிவுயிர்கள்) என்றும், ஆகாயம் உயிரல் பொரு ளாகிய தனிப் பொருள் என்றும் கூறப்படுகின்றன.

நிலம், நீர், தீ, காற்று ஆகிய நான்குடன் புன் மரம் ஆகிய வற்றையும் சேர்த்துத் தாவரம் என்று வழங்கப்படுகின்றன. ஆகாயம் தனிப்படவே யாண்டும் கூறப்படுகின்றது, இவற்றைப் பூதம் என வழங்குதல் சைன நூல்களில் எங்கும் இல்லை.

இவ்வாறே புலன்களைக் கூறும்போதும் சுவை, ஒளி, ஊறு, நாற்றம் என்ற நான்கினையும் தனியாகவும், ஒலியை வேறாகவும் வழங்குவர்.

இவற்றால், உயிரல் பொருளாகிய ஐம்பெரும் பூதங்களுள் நிலம், நீர், தீ, காற்று ஆகியவை உயிர்ப் பொருள்கள் என்பா என்பதும், ஆகாயம் உயிரல் பொருளாகத் தனித்தோதுவர் என் பதும், இவற்றைப் பூதம் என்ற சொல்லால் வழங்குவதும், இவற் றின் சேர்க்கையாலானது உடல் என்று கொள்வதும் சைன தருமக் கொள்கைகள் அல்ல என்பதையும் அதற்கு நேர்மாறான கொள்கைகள் என்பதையும் உணரலாம்.

திருவள்ளுவர்,

"ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி."

என்றும்,

"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு."

என்றும் புலன்களை ஐந்தென்றே தொகையாகக் கூறுகின்றார். இவற்றால் வள்ளுவர்க்குப் பூதம் ஐந்து என்பது உடன்பாடு எனக் கொள்ளலாம்.

இதனைப் பொறிகளை நோக்கிப் புலன்கள் ஐந்து எனக் கூறினார். இங்ஙனம் கூறல் மாறாகாது என மறுப்பின்,

"வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்து மகத்தே நகும்."

என்ற குறள் பூதங்கள் ஐந்து என்றும் அவற்றாலானதே உடல் என்றும் வெள்ளிடைமலையாக விளக்குகின்றது. எனவே திருவள்ளுவருக்குப் பூதங்கள் ஐந்து என்பதும், அவற்றின் சேர்க்கையாலானதே உடல் என்பதும் உடன்பாடாம். ஆகையால் அவர் புலன்களையும் ஐந்து எனக் கூறினார் என்பது திண்ணம்.

சமணர்கள் செய்த நூல்களில் ஐம்பூதங்களும், அவற்றாலானது உடல் என்பதும யாண்டும் கூறப்படாமையே திருவள்ளுவர் பெருமான் சமணர் அல்லர் என்பதை வலியுறுத்தப் போதிய சான்றாம். கூறி இருப்பின் அது சைன தருமக் கொள்கைக்கு ஒவ்வாததொன்றாம்.

**ஆறு சுவைகள் :** நாவினால் உணரப்படும் சுவைகள் ஆறு என்பதும் வள்ளுவர் கொண்ட முடிபாகும். சைன தத்துவ நூல்கள் சுவை ஐந்து எனக் கூறுகின்றன. புலன்களைக் கூறும் இடங்களில் சுவை, ஒளி, ஊறு, நாற்றம் என்ற நான்கினையே கூறி அவற்றின் [illegible]

தத்துவார்த்த வார்த்திகம் ஐந்தாவது அத்தியாயம் இருபத்து மூன்றாம் சூத்திரவுரையுள், 'உப்புச் சுவை மற்ற ஐந்து சுவைகளிலும் கலந்து இருப்பதால் அது தனிச் சுவையாகாது' எனக் காரணம் கூறப்படுகின்றது.

சித்தர் நூல்கள் உப்பும் புளிப்பும், கைப்பும் துவர்ப்பும், இனிப்பும் கார்ப்பும் மாறுபட்ட வெவ்வேறு சுவைகள் எனக் கூறுகின்றன. 'உப்பில்லாப் பண்டம் குப்பையில்' என்ற மொழிக்கிணங்க உலகம் உப்பையே முக்கிய உணவாகக் கொண்டுள்ளது.

சைன தருமத்துள் உப்புச் சுவையை விலக்கியது ஆழ்ந்த மதக் கோட்பாடாகும். திருவள்ளுவர் இதற்கு மாறாக,

" உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல் "

என்றும்,

" துப்புர வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்குங் காடிக்குங் கூற்று "

என்றும் கூறுகின்றார். மற்றைய சுவைகளையுங் கூறுகின்றார் என்பதை உய்த்துணரலாம்.

எனவே உப்புச் சுவை தனித்த சுவை என்பதும், சுவை ஆறு என்பதும் வள்ளுவர் கொண்ட முடிபாம் என்பது திண்ணம்.

(தொடரும்)

# குறுநகைத் தோழி! குற்றாலம் சென்றேன்

[செல்வி எஸ். ஜமலாதேவி, நாகர்கோவில்]

தமிழின் வந்த தகைசால் தோழி,

வணக்கம். கருத்து நிறையும் நின் கைவண்ணம் பெற்றேன் உதகை சென்றமையால் எழுந்த உவகை வெள்ளம் அதனிடைப் பொங்கிப் பாய்கிறது அந்நிலையில் யானும் என் கல்லூரித் தோழியரும் சென்ற குற்றாலச் செலவு பற்றி இங்கு சில வரைய விழைகிறேன் செந்தமிழ்ச் செல்வி! செவி சாய்ப்பாயோ? பெண்மையும இளமையும் ஒருங்கே நிலவும் போழ்து, யாம் கண்டு இன்புறுவன வாழ்விற் பல அவ்வகையில் தோன்றி என்னை மகிழ்வித்த ஒன்றே யான் சென்ற செலவும.

"வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர்வேங்கை
கொம்பார் சோலை கோல வணடு யாழ் செய் குற்றாலம்".

எனும் இலக்கிய ஓவியம் பன்னாளின் முன்னரே என் செவி நுகர் கனி எனத் திகழ்ந்தது இயற்கை அன்னை களி நடம் புரியும அழமலைச் சாரல் நண்ணி, மந்தியொடு விளையாடி மாநிலத்து அழகு காணும் விருப்பு என் உள்ளததுச் சின்னாள் அரும்பியது. எனினும் அண்மையி லன்றோ அவ்வரும்பு போதாகி மலர்ந்தது.

சென்ற கிழமை காலைப் போழ்து காய் கதிர்ச் செல்வன் கதிர் ஒளி காட்டு முன்னர் என் கல்லூரித் தோழியர் எழுபத்து ஐவரும் குறிப்பிட்ட இரு ஊர்திகளில் புறப்படலாயினோம். புதியன காண்டல் பொறிபுடைத்தாகலின் எங்கள் மாணவ உள்ளமும் ஊர்தியொடு விரைந்தது தோவாளை, ஆரல்வாய்மொழி, காவல் கிணறு, பணகுடி எனும் சிற்றூர்கள் அவ்வேளையில் அமைதியிற் றோய்ந்து நிலவின. சிறிது போழ்தில் செங்கதிர்ச் செல்வன் எங்களை நோக்கி,

'செல்வச் சிறுமீர்காள்
செவ்வனே சென்று வருக.'

என வழி காட்டுவான் போல வெண்ணொளி பரப்பி விரைந்து எழுந்தான். விண் மீன்கள் மறைய, தண்மை கலந்த தென்றல் வீச, பறவை இனங்கள் வானிடை இவர, அவற்றின் இனிமை பொதுளிய மென்மை ஒலியும், கண் கவர தோற்றமும் என் இளமை உள்ளததினுககு நல் விருந்தாயின. காலைப் போழ்

தாகலின் பல் வேறு எண்ணத்தோடு மண்ணிடைச் செல்லும் மக்களையும் கண்டோம்.

இவ்வளவில், என் அயலே அமைந்த அருந் தமிழ்த் தோழி, "என்னடி நங்காய்! எந்தெழில் செல்வி! பலா மா பாதிரியைப் பார்," என்றாள். ஆம், பலா மா போன்ற பண்பு சான்ற பலவும் காண நேர்ந்தது. பாதிரி ஒன்றை மட்டும் யான் காண இயலாது போயினும், என் தோழியின் இலக்கிய உள்ளத்தை எண்ணி உவகை எய்தினேன். தமிழ் இலக்கியத் தொடர்களை இயன்ற வண்ணம் வாழ்க்கையில் நினைவு கோடலும் தமிழ் அன்னைக்கு யாம் அளிக்கின்ற நல்விருந்து என்ற ஆன்ற கொள்கையும் என் நினைவிடைத் தோன்றி மறைந்தது

ஏறக்குறைய எட்டு மணியளவில் பாளையங்கோட்டை அண்மினோம். அது நெல்லையஞ் செல்வியின் நாகிள நங்கை. கல்வி வளரும் பண்ணைகள் பல அவண் இலங்குதல் கண்டேன். ஆங்கமைந்த மகளிர் கல்லூரி ஒன்றில் சிறிது போழ்து தங்கிக் காலை உணவு பெற்றோம். யான் இளையோள் எனினும் இளையாள் என்பது அறிவாயோ? கன்னித் தமிழ் நாடு விடுத்துக் கடல் கடந்து, இன்றமிழ் விருப்பினால் இலங்கை போன்ற பிற நாடு சுற்றிய பழக்க முடையளாகலின் இளைப்பு என்னை வாட்ட வில்லை.

"செவிக்கு உணவு இல்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்."

என்ற வள்ளுவரின் பொன்னுரை பொய்க்கா வண்ணம் சிற்றுணவு சிறிது அருந்தினேன்.

விரைவினில் ஊர்தியும் உள்ளமும் ஒருவழிப் பட்டமையால், குற்றாலம் செல்லும் வழி நோக்கி விரைந்தோம். ஊர்கள் பலவும் கண்டேன். உவகை மிகவும் கொண்டேன். பழமையும் புதுமையும் கொண்ட பதிகள் பல எங்களை வரவேற்று, நகை முகம் காட்டி நல்விருந்தளித்தன. ஐயனே ஒல்லை வா என அழைத்த அருங் கொடிகள் பல அவ்வழியிடைத் தோன்றின. ஒன்பதரை மணி யளவில் பொதிகை மலையின் தோற்றம் பொலியக் கண்டேன். அவ்வளவில் என் தோழி எழிலரசி இன்னுரையாடினாள். "அன்பின் வந்த அருந் தமிழ்ச் செல்வி! மந்தியும் அறியா மரம் பயில் அடுக்கத்தைப் பார்" என என்னைத் திருமுருகாற்றுப்படையின் சொல்லோவியங்களிடை இழுக்கலாயினள். ஆம், கை புனைந்து இயற்றாக் கவின் பெறு வனப்பினைக் கண்ணாரக் கண்டேன். கரு முகிலும் வெண் முகிலும்

கலந்து உறவாடின. பசுமை தோய்ந்த கொடிகளும், வானுற ஓங்கி வளம் பெற வளர்ந்த பெரு மரங்களும் என் கண்ணையும் கருத்தையும் கவர்ந்தன. தேனினும் இனிய தென்றற் காற்று இன்ப ஊற்றை என் உளத்திடைக் கொட்டியது. குறிஞ்சியும் முல்லையும் குழையக் கண்டேன். மானும் மரையும் மருளக் கண்டேன். இறைவன் படைப்பில் இத்தகைய கண் கவர் காட்சிகள் கலந்தமையாலன்றோ பண்டைத் தமிழர் இயற்கை அன்னையை இலக்கிய வாயிலாக வழிபட்டனர் போலும்! கம்பன் காவியதது ஓவியத்து எழுத ஒண்ணு இயற்கைக் காட்சிகள் பல தோன்றி மிளிாதலும இத்தகைய தன்மையாற் போலும். கபிலர் கணட குறிஞ்சிப் பாட்டில் தோன்றிய அத்துணை மலரும் அவ்வழியில் அரும்பி முகிழ்த்து இணர் ஊழ்ததக் கண்டேன். சுருங்கக் கூறின் தமிழ் இலககிய இயறகை வண்ணங்கள் தமிழ் நாட்டு நங்கையாய எனனை தமிழ் தழுவிய தகை சால் செல்வி என ஆக்கின. நாஞ்சில் நாட்டின நாகிள நங்கை நற்றமிழ் அன்னையின் நறு மணச் செல்வியானேன்.

இந்நிலையில் என் தோழியர் பலர் நாற்புறமும் நிலவிய இயற்கையில் ஆழ்ந்தனர். என் உள்ளமோ எனில்,

> "முல்லையும் முறு நகை முகிழ்த்தது,"
> "அனிச்சப்பூக் கால் களையாள் பெய்தாள்."

போலும் இலக்கியத் தொடர்களை நினைந்து பெருமிதம் எய்தியது. தன்னை மறந்து தமிழ்ப் புலவரின் சொல்லோவிய மலரிடை மறைந்த என் உள்ளம் சிறிது போழ்தில் இலக்கிய உலகினின்றும் இறங்கி, இயற்கை உலகில் தோய அவ்வேளையில் என் ஐம்புலன்களுக்கும் நல் விருந்து பெற்றேன். வெண்மை நிறம் பெற்றுப் பாயும் பேரருவியின் இன்னிசையும் கிளைகளின் ஊடே தாவி விளையாடும் மந்திகளின் பேரொலியும் இளமை உள்ளத்தினுக்கு இனிய விருந்தன்றோ?

> "செல்வம் மல்கும் செண்பகம் வேஙகை,சென்றேறி
> கொல்லை முல்லை மெல்லரும்பு ஈனும் குற்றாலம்,"

> "பக்கம் வாழை பாய்கனியோடு பலவின் தேன்
> கொக்கின் கோட்டுப் பைங்கனி தூஙகும் குற்றாலம்."

என்றமையின் இலக்கிய நயத்தை நேரிலே சுவைக்க நேர்ந்தமையின் என் இன்பம் யாரே அறிய வல்லார்!

முதலில் யாங்கள் ஐந்தருவியினுக்குச் சென்றோம். வியப்பும் உவகையும் கலநதன. கண்டார் உள்ளத்தை உவகை நீரால் நனையச் செய்யும் நீர்மையது அந்நீர். அவ்வுவகையில்

ஓடியாடினோம். அருவியில் தோய்ந்தோம். வாழ்வில் இதுகாறும் காணாத இன்பக் காட்சி அது. என் தோழியர் மீது அருவி நீரை அள்ளி வீசினேன். அஞ்சி நின்ற சில வஞ்சியரையும் குளிக்கச் செய்தேன். அன்று நிகழ்ந்த அத்துணையும் இன்று வரையக் காலமும் இடனும் போதா அன்றோ? என யான் வரை வேனாகில், பொறுப்பின் செல்வி பொறுத்தருள்வாயாக. அவண் கோயில் கொண்ட கைலாசநாதரையும், குழல்வாய் அம்மையாரை யும் வணங்கி வழிபட்டேன். அப்பால் சிற்றுண்டி அருந்தினோம். சிறு மலர் கொய்து கொண்டே செண்பகாதேவி அருவியினை அடைய விழைந்தோம். மலைமீது இவர்ந்து மேலே செல்ல இயற்கை அன்னையின் அருள் வெள்ளம் சிறிது உதவியது. இடையிடையே பல காட்சிகள். வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சவில்லை. எங்கள் கையகத்து அமைந்த கனி களுக்குக் கெஞ்சின யான் அஞ்சவில்லை வஞ்சியார் வஞ்சி யார் என்ற முதுமொழிக்கு ஏற்பக் கனிகளை வாரி வழங்கினேன்.

> "ஓடக் காணபது பூம் புனல் வெள்ளம்.
> ஒடுங்கக் காண்பது யோகியர் உள்ளம்
> தூங்கக் காண்பது மாம்பழக் கொத்து
> துவளக் காண்பது தீந்தயிர் மத்து."

எனுமவற்றுள் ஓடும் பூம்புனலும், தூங்கும் மாம்பழமும் குற்று லத்தின் வற்றாத வளத்தினுக்கு இலக்கியமாயின. சிற்றருவிகள பல சிறக்கக் கண்டோம் மங்கும் மாலைப் பொழுதாயிற்று. பொதிய மலையினுக்கும் பொற்புடைய வானரங்களுக்கும் விடை யளித்தோம். சோலை மரங்களையும் சுந்தரக் கிளிகளையும் பிரிந் தோம். "நாஞ்சில் நாட்டின் நற்றமிழ் நங்காய், இன்று போல் என்றும் நின் தமிழ் உளளம் வாழ்க, வளர்க!" என வாழ்த்துரை வழங்குவன போல பெரு மரங்கள் தலையசைத்தன. மாலைக் கதி ரவன் மலைவாயில் மறையலானான். மங்கும மாலை சென்ற பின் னர் பொங்கும் பெரு நிலவு பொலிந்து தோன்றியது. வழி நெடுக மல்லிகை முல்லை மணம கமழ—கண்ட காட்சிகள் தோன்றித் தோன்றிச் சுடர்விட இயற்கை அன்னையின் சிறு குழவி யாய யான் அந்நாள் இரவு ஒன்பதரை மணி யளவில் என் சிற் றார் நண்ணிச் சிறு மனை எய்தினேன். இறைவன் இன்னருள் நிலவில் அண்மையில் உதகையும் சென்று உயரிய பல காண்பேன்.

திருநெல்வேலியில்

## அப்பரடிகள் அருட்பணிக் கழகச் சார்பில்

# தோத்திர சாத்திர விழாக்கள்

[வித்துவான், திரு. அ. க. நவநீதகிருட்டிணன் அவர்கள்]

திக்கெலாம் புகழுறும் திருநெல்வேலி நகரில் சித்திரை கஅ, கக, உ0 (1959 மே 1, 2, 3) ஆகிய மூன்று நாட்களிலும் நெல்லையப்பர் திருக்கோவிலைச் சார்ந்த அம்மன் சந்நிதியில் அமைக்கப் பெற்ற அப்பரடிகள் அருட்காவணத்தில் தோத்திர சாத்திர விழாக்கள் மிகவும் சிறப்பாக நடைபெற்றன.

விழாவில் முதல்நாளாகிய மே 1ஆம் நாள் பன்னிரு திருமுறை விழா நடைபெற்றது. அன்று மாலை 6-30 மணிக்கு அப்பரடிகள் அருட்பணிக் கழகத் தலைவரும், நெல்லைக் கணபதி ஆலை ஆட்சியாளரும் ஆகிய சைவப் புரவலர் வள்ளல் திரு சி ச. அருணாசலம் பிள்ளையவர்கள் வரவேற்புரையுடன் விழாத் தொடங்கியது. வரவேற்புரை வழங்கிய வள்ளல் அவர்கள், உலகில் நிலவும் சமயங்கள் பலவற்றுள்ளும் பழமையும் தலைமையும் வாய்ந்தது சைவ சமயமென்றும், அதனைப் பின்பற்றி ஒழுகும் சைவர்கள் மக்களுள் தலையாயவர்கள் என்றும், அத் தலைமைப்பேறு பல பிறவிகளில் செய்த நல்வினையால் வாய்த்தது என்றும், அதனைத் தக்க வகையில் போற்றிப் பேணிச் சிவபெருமான் திருவருளைப் பெறுதற்கு முயல்வதே வாழ்வின் குறிக்கோளாகக் கொள்ளவேண்டும் என்றும், அக் குறிக்கோளை நெல்லை நாட்டுச் சைவ நன்மக்கள் எய்துவதற்குத் தான் ஒரு கருவியாக என்றும் நின்று பணியாற்ற விழைவதாகவும், அப்பணிக்கு ஆளாக்கிய திருவருளை எப்பொழுதும் வந்தித்து வாழ்த்தித் துதிப்பதாகவும் கூறி, எல்லோரையும் வரவேற்றனர்.

இலஞ்சி வள்ளல் திரு. ஐ. ஏ. சிதம்பரம் பிள்ளை M. A. அவர்கள் விழாவைத் தொடங்கி வைத்து உரையாற்றினர். அவர்கள் தமது உரையில் சைவப் புரவலர் சி. ச. அருணாசலம் பிள்ளையவர்களின் சைவப் பற்றினையும், பணியையும் பாராட்டினர். திருமுறைகள் சைவ நன்மக்களுக்குத் திருவருளால் கிடைத்த சைவத் தமிழ்வேதமாகும். அவற்றை அருளிய திருஞானசம்பந்தர் போன்ற அருளாளர்கள் சிவபெருமான் திருவருளைப் பெரிதும் பெற்ற ஞானச் செல்வர்கள். அவர்களே, நம் சைவத்

தைக் காத்த தெய்வப் பெருமக்கள். அவர்கள் அருளிச்செய்த திருப்பாசுரங்களால் ஆகிய திருமுறைகளைப் பேணிக் கற்பதும், சிவபெருமானை மறவாது வாழ்த்தி வணங்குவதும், ஐந்தெழுத்து மந்திரத்தை உச்சரித்து வழிபாடு செய்வதும் சைவர்கள் கடமையாகும் என்று வற்புறுத்திப் பேசினர்.

அதன் பின்னர்ச் சிவத்திரு ஈசான சிவாசாரிய சுவாமிகள் அருளாசியுரை வழங்கினர். ஞானசம்பந்தர் திருமுறைகளைப் பற்றி ஈரோடு சித்தாந்த அறிஞர் திரு. அ. ஞானசம்பந்தம் அவர்களும், நாவுக்கரசர் திருமுறைகளைப்பற்றி திரு. மறை. திருநாவுக்கரசு அவர்களும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுறையைப்பற்றி மதுரை திரு. தி. கி. சுந்தரமூர்த்தியவர்களும், மாணிக்க வாசகர் திருமுறையைப்பற்றி நெல்லை திரு. வே. மாணிக்கவாசகம் பிள்ளையவர்களும், ஒன்பதாம் திருமுறையைப் பற்றி மதுரை திரு. கு. பரமசிவன் M. A அவர்களும், பத்தாம் திருமுறையைப்பற்றி மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்களும, பதினோராம் திருமுறையைப்பற்றி வித்துவான் திரு. ந. பாலம்மாள் அவர்களும், பன்னிரண்டாம் திருமுறையைப்பற்றி திரு. ஞா. உலகம்மாள் அவர்களும் பேசினர். அப்பரடிகள் அருட்பணிக் கழகச் சித்தாந்தப் பாடசாலை மாணவர் திரு. அ. கணபதி 'ஆலய வழிபாடு' என்பதுபற்றிச் சிற்றுரை நிகழ்த்தினர். மாணவர் திரு ச திருநாவுக்கரசு, திரு. ம. இராமசந்திரன் ஆகிய இருவரும் 'பதி இலக்கணம்' என்பது பற்றி ஓர் உரையாடல் நிகழ்த்தினர் இறுதியில விழாச் செயலாளர் திரு. அ. க. நவநீத கிருஷ்ணன் அவர்கள் நன்றியுரையுடன் பன்னிரு திருமுறை விழா நிறைவேறியது.

## உ-ஆம் நாள் விழா

சித்திரை ௧௯ (2-5-59) இரண்டாம் நாள் அப்பரடிகள் குருபூசை விழா அன்று மாலை 5 மணிக்கு அப்பரடிகள் கழக வாயிலிலிருந்து அப்பரடிகள் திருவுருவப் படம் யானைமேல் அணிசெய்யப்பெற்று நான்கு தேரோடும் வீதிகளிலும் திருவுலா வந்தது. அவ் ஊர்வலததில் நூற்றுக் கணக்கான சிவபூசைச் செல்வர்களும் சைவ நன்மக்களும் சிவபுராணம் ஓதிவரச் சிவநாம முழக்கத்துடன் உலா வந்த காட்சி எல்லோருடைய உள்ளத்தையும பக்தி வெள்ளத்தில மூழ்குமாறு செய்தது.

மாலை 6-30 மணிக்கு அப்பரடிகள் அருட்காவணத்தில் விழா நிகழ்ச்சிகள் தொடங்கின. டாக்டர் தி. இரா. அண்ணாமலைப் பிள்ளையவர்கள் வரவேற்புரை வழங்கினர். அறநிலைய உதவி ஆணையாளர் திரு. T. H. விவேகானந்தம் பிள்ளை, B. A. L. T.

அவர்கள் விழாவைத் தொடங்கி வைத்தனர். 'என்கடன் பணி செய்து கிடப்பதே' என்னும் பொருள்பற்றிச் சைவப் புரவலர் திரு. சி. ச. அருணசலம் பிள்ளையவர்கள் பேசினர். 'அப்பரும் திலகவதியாரும்' என்பதுபற்றித் திரு. ஆ. சிவகாம சுந்தரியம்மாள் அவர்களும், 'அப்பரும் சம்பந்தரும்' என்பதுபற்றி ஈரோடு அ. ஞானசம்பந்தம் அவர்களும், 'அப்பரும் அப்பூதியாரும்' என்பதுபற்றி திரு C. E. N. ஈசுவரவடிவம்மாள் அவர்களும், 'அப்பரின் அற்புதங்கள்' என்பதுபற்றித் தேவகோட்டை பாலகவி திரு. வே இராமநாதன் செட்டியார் அவர்களும், 'அப்பரும அடியரும்' என்பதுபற்றிக் குலசை திரு. வீரசிவசுப்பிரமணியம அவர்களும், 'சுத்தாதவைதம்' என்பதுபற்றி மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்களும் பேசினர். 'திலகவதியார்' என்பதுபற்றிக் கழகப் பாடசாலை மாணவர் திரு. சால்வாடி முருகன் பேசினர். 'பசு இலக்கணம்' பற்றித் திரு. சி. அருணசலம், திரு. வி. சுப்பிரமணியன் ஆகிய மாணவா இருவரும உரையாடல் நிகழ்த்தினர்.

இடையிடையே அப்பரடிகள் தேவாரப் பாசுரங்களைத் திரு. இராமலிங்க தேசிகர், திரு. சங்கரநாராயண தேசிகர், திரு. கணேச முதலியார் ஆகிய மூவரும் பண்ணோடு பாடி மகிழ்வித்தனர்.

## ௩-ஆம் நாள் விழா

சித்திரை உ0 (3-5-59) மூன்றும் நாள் பதினன்கு சாத்திர விழா நடைபெறறது. அன்று காலை 9-மணிக்கு விழா நிகழ்ச்சிகள தொடங்கின. நெல்லையப்பர் திருக்கோவில் நிருவாக அதிகாரி திரு. T. R. பெரியநாயகம் பிள்ளை, B. A., L. T. அவர்கள் வரவேற்புரை வழங்கினர். பாளையங்கோட்டை நகர்மன்றம் ஆணையாளர் திரு. B. சிவகுருநாதன் செட்டியார் B. A., B. L. அவர்கள் விழாவைத் தொடங்கி வைத்தனர். நெல்லை மாவட்டத் துணை நீதிபதி திரு. எம். நடராசன் M A., B. L. அவர்கள் வாழ்த்துரை வழங்கினர். 'வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி' என்பதுபற்றி வள்ளல் திரு. சி. ச. அருணசலம் பிள்ளையவர்கள் பேசினர். அவர்கள் மனிதப் பிறவியின் மாண்பையும், சைவ சமயத்தவராகப் பிறந்த தவப்பெருமையினையும், அதிலும் தென் பாண்டி நாடாகிய திருநெல்வேலி மாவட்டத்தில் சைவ மரபினராகப் பிறந்த சிறந்த தவப்பேற்றையும் ஊனுருக உள்ளுருகக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிய வண்ணம் பேசிய திறம் எல்லோரையும் பரவசப் படுத்தியது.

அதன் பின்னர் விழாச் செயலாளர் வித்துவான் திரு. அ. க. நவநீத கிருஷ்ணன் அவர்கள் 'திருக்குறளும் சைவசித்தாந்த

மும்' என்பது பற்றியும், 'உந்தி, களிறு, உண்மை விளக்கம்' என்னும் மூனறு சாத்திரங்களைப் பற்றித் தேவகோட்டைப் பாலகவி திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்களும், 'சிவ ஞானபோத மாபாடியம்' என்பதுபற்றி வித்துவான் திரு. வே, மாணிக்கவாசகம் பிள்ளையவர்களும் பேசினர். இவ்வளவில் காலை நிகழ்ச்சிகள் முடிந்தன.

மாலை 6-30 மணிக்கு மீண்டும் விழா நிகழ்ச்சிகள் தொடங் கின. 'தினமலர்' ஆசிரியர் திரு இராமசுப்பய்யர், M. A., B. L. அவர்கள் வாழ்த்துரை வழங்கினர். 'மெய்கண்ட சாத்திர ஆசிரியர்கள்' என்பதுபற்றிச் சிவத்திரு. ஈசானசிவாசாரிய சுவாமிகள் அருளுரை வழங்கினர். 'அருணந்தி சிவாசாரியர் சித்தாந்தம்' என்ற தலைப்பில் சிவஞான சித்தியார், இருபா இருபஃது என்ற இரு நூல்களைப்பற்றி மகாவிதத்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் உரையாற்றினர். 'திருவருட் பயன்' என்ற நூலைப்பற்றி திரு. ஆ. ஈசுவரமூர்த்திப் பிள்ளையவர்கள் பேசினர. 'சிவபபிரகாசம், போற்றிப் பஃறொடை, நெஞ்சுவிடு தூது என்ற மூன்று நூல்களைபபற்றி அம்பாசமுத்திரம் திரு. ஆ முத்துக்குமாரசாமி பிள்ளையவர்கள் பேசினர். 'வினா வெண்பா, உண்மை நெறி விளக்கம், கொடிக்கவி, சங்கற்ப நிராகரணம்' ஆகிய நான்கு நூல்களைப்பற்றிப் பாலகவி திரு வே இராமநாதன் செட்டியார் அவர்கள் பேசினர். கழகப பாடசாலை மாணவர் திரு. சுந்தரராசன் 'பெண்கள் கடமை' என்ற பொருள்பறறிப் பேசினர். 'பாச இலக்கணம' பற்றிய உரையாடலை மாணவாகள் திரு கோமதிநாயகம, திரு. கணேசன ஆகிய இருவரும நிகழ்த தினர். சைவசித்தாந்தக் கழக ஆட்சியாளா, வ. சுப்பையா பிள்ளையவர்கள் 'அருட்கவி இராமநாதனைப்'பற்றி அறிமுகம் செய்தனர். உரையாடல், சிற்றுரைகள் நிகழ்ததிய மாணவர் கட்குச் சிவத்திரு. ஈசான சிவாசாரிய சுவாமிகள் நூற்பரிசுகள் வழங்கினர்.

இரவு 10 மணிக்குத் திருவருட்பெருநாவலர் திருமுருக கிருபானநதவாரியார் அவர்கள் 'தோத்திரமும் சாத்திரமும' என்பதுபற்றித் தனிச் சொற்பொழிவு நிகழ்த்தினர். இரவு 1-மணியளவில் பதினொன்கு சாத்திர விழா நிகழ்ச்சிகள் நிறை வெய்தின. விழாச் செயலாளர் திரு. அ. க. நவநீத கிருஷ்ணன் எல்லோருக்கும் நன்றி கூறினர்.

நான்காம் நாள் 4-5-59 காலை 11-மணிக்கு நெல்லையப்பர் திருக்கோவில் பொற்றாமரைக் குளக்கரையில் சிவத்திரு. ஈசான சிவாசாரிய சுவாமிகள் நூற்றுக்கணக்கான சைவ அன்பர்கட்குச் சமயதீட்சை செய்து வைததனர்.

# நெல்லையில் பெருவிழா நிகழ்த்திய
# வள்ளல் சைவப்புரவலர்,
# திரு. சி. ச. அருணாசலம் பிள்ளையவர்கள்

சீர்காழியில் தோன்றியருளிய ஞானச் செல்வராகிய திருஞானசம்பந்தப் பெருமான் பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசியாரோடும் நின்றசீர் நெடுமாறராகிய கூன்பாண்டியரோடும அமைச்சர் குலச்சிறையாரோடும் எழுந்தருளிச் செழுந்தமிழ்த தேவாரப் பாசுரங்களால் பாடிப் பரவிய பெருமை வாய்ந்தது திருநெல்வேலி நகரம். அப்பர் பெருமான் எழுந்தருளிய அருமை வாய்ந்தது இத் திருநகரம். இத்தகைய சிவமணம் கமழும திருநகரில் அவ் வருள்மணத்தைப் பல்லாண்டுகளாகப் பல வழிகளில் பரப்பிவரும் வள்ளல் சிவத்திரு. சி. ச. அருணாசலம் பிள்ளையவர்களைப்பற்றி இற்றைநாள் சைவ உலகம் நன்கறியும். அவர்கள் இன்று நெல்லைமாநகரில் சைவத்தைக் கட்டிக் காத்து வரும் சைவப் புரவலராகத் திகழ்ந்து வருகின்றனர்.

நாங்குநேரியைச் சார்ந்த கரந்தானேரிக் கிராமத்தில் சைவ வேளாளர் மரபில் தோன்றிய பிள்ளையவர்கள் இளமையில் நெல்லையைச் சார்ந்து நூல்கடையொன்றில் அலுவல் பார்த்துக் கொண்டிருந்தனர். பின்னாளில் தாமே தனிக்கடை அமைத்து நூல் வணிகத்தை நடத்தி வந்தனர். அவர்கள் வாணிகத்தில் காட்டிய நேர்மையும் அறம் திறம்பாத உரமும் அவர்கள் வருவாயைப் பெருக்கின. அதன் பயனாக உடன்பிறந்த சகோதரர் ஐவருடன் சேர்ந்து ‘சங்கர் பஞ்சாலை’ யொன்றை நெல்லையையடுத்த தாழையூத்தில் நிறுவினர். அவர்கள் நாணயமும் நற்பண்பும் நகர மக்களால்—நாட்டு மக்களால் பெரிதும் பாராட்டப் பெற்றன. செல்வர் பலரின் நம்பிக்கைக்கு ஆளாயினர் திரு. பிள்ளையவர்கள்

அதன் பின்னர்த் தம் பெரு முயற்சியால் செல்வர்கள் பலரைப் பங்காளிகளாச் சேர்த்துக் ‘கணபதி ஆலை’ என்னும் ஆலையொன்றை நிறுவினர். இவ் ஆலைகளின் வாயிலாகக் கிடைக்கும் ஊதியத்தைக் கொண்டு பிள்ளையவர்கள் நெல்லைமா நகரில் பல்லாண்டுகளாகப் பற்பல அறப்பணிகளைப் பொற்புற நடத்தி வருகின்றனர். நெல்லைமாவட்டத்தில் அவர்கள் ஆதரவையும் கொடையையும் நாடிப் பெறாத சங்கமோ, விழாவோ இல்லையென்றே சொல்லலாம். எவர் எவ்வறத்தைச் சொல்லிச் சென்றாலும் முகங் கோணாது அகங்கனிந்து கொடுக்கும் அருள் வள்ளலாக இன்று பிள்ளையவர்கள் விளங்கி வருகின்றனர். அவர்கள் சிவனருளால் இன்னும் வளம்பெற வாழ்ந்து அறம்பலபுரிவர் என்பதுறுதி.

சைவ சமயாசாரியருள் ஒருவராய அப்பர் பெருமானிடத்து ஒப்புயர்வற்ற பேரன்பு பூண்ட பிள்ளையவர்கள் 'அப்பரடிகள் அருட்பணிக் கழகம்' ஒன்றை நிறுவி அதன் வாயிலாகப் பல சைவத் திருப்பணிகளை ஆற்றிவருகின்றனர். அக் கழகச் சார்பில் சித்தாந்தப் பாடசாலை ஒன்றை நிறுவி முப்பதுக்கு மேற்பட்ட மாணவர்கட்குச் சித்தாந்த பாடம் கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளனர். அப் பாடசாலை ஆசிரியராக நெல்லைப் புலவர் சித்தாந்தமாமணி, திரு. வே. மாணிக்கவாசகம் பிள்ளையவர்கள் பணியாற்றி வருகின்றனர். அம் மாணவர்கள் பயிலும் வகுப்பிற்குரிய பள்ளிச் சம்பளத்தை வள்ளல் அவர்களே கொடுத்து வருகின்றனர். கழகக் கட்டிடத்தின் கீழ்ப்பகுதியில் தம் மனைவியார் பெயரில் 'தர்ம வைத்தியசாலை' ஒன்றை அமைத்துள்ளனர்.

இங்ஙனம் ஏழை பங்காளராக விளங்கிவரும் பிள்ளையவர்கள் அப்பர் பெருமான் அமைத்தருளிய திருப்பூந்துருத்தித் திருமடத்தைக் கண்ணுற்ற போழ்து, அது சிதைந்து கிடக்கும் நிலையைக் கண்டு உடன் அதனைப் புதுப்பிக்குமாறு பதினாயிரம் ரூபாய்களைக் கொடையாக வழங்கினர். இன்னும் எண்ணில்லாத புண்ணியச் செயல்களை நாளும் பண்ணிவரும் சைவப் புரவலர் அவர்கள் இவ்யாண்டில் அபபரடிகள் அருட்பணிக் கழகத்தின் சார்பில் பெரியதொரு சமயவிழா எடுக்கவேண்டுமென்று திட்டமிட்டனர் அத் திட்டத்தின் விளைவால் மே 1, 2, 3 ஆகிய மூன்று நாட்களிலும் நெல்லைத் திருக்கோவில் அமமன் சந்நிதியில் அமைந்த அப்பரடிகள் அருட்காவணத்தில் 'தோத்திர சாத்திர விழாக்கள்' மிகச் சிறப்பாக நடைபெற்றன. நாள்தோறும் பல்லாயிரக் கணக்கான மக்கள் விழாவில் கலந்து பயன் பெற்றனர். திருநெல்வேலி நகரில் இத்துணைப் பெருஞ் சிறப்புடன் பெருந்திரளான மக்களைக் கூட்டிச் சமய விழா ஒன்று நடத்தினோர் எவருமிலர் என்று, கண்ட அறிஞர்கள் எல்லாரும் வாயார மனமாரப் பாராட்டினர். இத்தகைய பெருவிழா நிகழ்த்திய சைவப் புரவலர், வள்ளல் திரு. சி. ச. அருணாசலம் பிள்ளையவர்கள் நீடு வாழ்க! அவர்கள் சமயப்பணி தழைத்தோங்குவதாக!

# கல்வெட்டுக்களினால் அறியப்படும்

# இரு நாடக நூல்கள்

[வித்துவான், வை. சுந்தரேசவாண்டையார்]

* ஆராய்ச்சியாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

## முதல் கல்வெட்டைப்பற்றிய குறிப்பு

உத்தமசோழதேவரைத் திருவயிறு வாய்த்த பராந்தகன் மாதேவடிகளான செம்பியன் மகாதேவிப் பிராட்டியார், திருப்பந்தணைநல்லூர் பசுபதிதேவர்க்கு திருநுந்தா விளக்கு ஒன்றுக்கு நாள் ஒன்றுக்கு நறுநெய் உழக்காக மூன்று நுந்தா விளக்குகளை எரிப்பதன் பொருட்டு முப்பத்தாறு கழஞ்சு பொன்னை, முதலாம் இராசராச சோழதேவரின் பதினொன்றும் ஆட்சியாண்டில் அதாவது கி. பி. 996 இல, பசுபதிதேவர் கோயிலில், நட்டுவப் பங்கு மெய்மட்டிப் பாங்கு இவைகளை உடைய ஹாஸ்யன் விக்கிரமமாதித்தன் ஆச்சானான ராஜராஜ நாடகப் பேரியன் பக்கல் கொடுததிருந்தார் அவனும் அநநிவந்தத்தைத் தவறாது நடத்திவந்தான். அவனுக்குப் பிறகு அவனது புதல்வர்களான சிங்கப்பிரான், இராசேந்திரசோழன் இவர்கள் நடத்திவந்தனர். இவர்கள் இருவரும் சந்ததி இல்லாது இறந்து போயினர்.

முதற் குலோத்துங்கசோழதேவா மேற்குறித்த இருவர்களின் மருமகன் (உடன்பிறந்தாள் மகன்) அரையன் உய்யநின்று ஆடுவானான ராஜஸ்ரீய திருத்தப்பேரய்யனை அந்நிவந்ததை நடததிவரக் கட்டளை இட்டனர். இவனும் முப்பது ஆண்டுகள் இந் நிவந்தத்தை நடத்திவந்தான். பின் விக்கிரமசோழதேவரின் ஆறும் ஆட்சியாண்டில் இராசேந்திரசோழனுக்குப் புக்கு அமங்கலியாய் இருந்த வேளான் துக்கை பல்கல், அதை, திருத்தப்பேரய்யன் விலைக்கு வாங்கி அநுபவித்து வநததை முதற் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.

இக் கல்வெட்டினால் விக்கிரமாதித்தனுக்கு ராஜராஜ நாடகப் பேரியன் என்னும் பட்டம் இருப்பதை முன்னிட்டு ராஜராஜ நாடகம் என்ற நூல் ஒன்று முதலாம இராசராசன் காலததில் இருந்தது என்பது தெள்ளிது. இக்காலம் இந்நூல் கிடைத்திலது. இதை உணர்த்தும் கல்வெட்டைக் கீழே குறிப்பிடுகின்றேன். இது இன்றுவரை தென் இந்தியக் கல்வெட்டுத் தொகுதிகளில் வெளிவந்திலது. இதனைப் படித்து எழுதியுள்ளேன்.

**இடம்:** பந்தணைநல்லூர், பசுபதிதேவர் திருக்கோயில் அர்த்த மண்டபத்தின் தென்புறச் சுவர்.

**வரி:**

பூமாது புணர புவிமாது வளர ஞமாது விளங்க
ஜயமாது விரும்ப தன்
னிருபது மலர் மன்னவர் சூட மன்னிய உரிமையால்
மணிமுடி சூடி செங்
கோல்சென்று திசைதொறும் நடப்ப வெங்கலிநீங்கி
மெய்யறந் தழை
ப்பக் கலிஙகமிரியக் கடல்மலை நடாத்தி வலங்கொளாழி
வரையாழி நடா
த்தி எரிசுடரளவும் ஒருகுடை நிழற்ற வீரஸிம்ஹா ஸநத்து
கோக்கிழா நடிக ளொடும்
வீற்றிருந்தருளிய கோப்பரகேஸரி பந்மரான திரிபுவ
நச்சக்கரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரம
சோள தேவற்கு யாண்டு ஒன்பதாவது ‖ ஸ்வஸ்திஸ்ரீ
சாலைகல மறுத்து கங்கபா
டியும் னுளம்ப பாடியும் தடிகை பாடியும் வேங்கை
நாடுங்கொண்ட கோப்பர
கேஸரி பந்மராநஸ்ரீ ராஜராஜ தேவற்கு யாண்டு
௰௧ (பதினொன்றாவது) வடகரை விருதராஜப
யங்கர வளநாட்டு விளத்தூர் ஞட்டு பந்தணைநல்லூர்
பசுபதி தேவற்கு உத்தமசோ
ழ தேவரை திருவயிறு வாய்(த்)த நம்பிராட்டியார்
பிராந்தகந் மாதவடிகளா நசெம்பியந்
மஹாதேவிப் பிராட்டியார் இத்தேவற்கு வைத்த
திருனுந்தா விளக்கு ஒன்றுக்கு பொந்
பந்நிரு கழஞ்சாக விளக்கு மூன்றுக்கு பொந்முப்பத்தறு
கழஞ்சும் கைகொண்டு இத்தேவர்
ஸிமந்தக் காறரில் ஹாஸ்யந் விக்கிரமாதித்தந் ஆசசா
நாநராஜராஜ நாடகப் பெரியநேந் நாள்ஒ
ன்றுக்கு திருவிளக் கொன்றுக்கு நறுநெய் உழக்காக
நெய்மூவுழக்காக இந்நாள்முதல் ஆசந்தி
ராதித்வற் செலுத்தக் கடவே நாகவும் எந்நில் பிந்பு
எந்நட்டுவப் பங்கும் மெய்மட்டிப்பங்
கும் அநுபவிக்கும் எந் வற்கத்தார் செலுத்தக்கட வாகமுக
(வாராக) செலுத்தி வருகிற..... ந்வி

க்ரமாதித்தந் மக்களில் சிங்கபிரானும், ராஜேந்திர சோழநும்
அநுபவித்து வந்து இவர்களு
க்குபிந்பு ஆண்பிரஜைகள் இலாமையில் இவர்கள் மருமகந்
அரயநய்ய நிந்றுவோராக

20. ராஜஸ்ரீய நிருத்தப் பேரயந் சீ குலோத்துங்க சோள
தேவர் திருவாய் மொழிந்த ருளிந பிரஸாத
படியாலும் முப்பதிற் றண்டு அநுபவித்து வந்து முந்பு
சொல்லப்பட்ட ராஜேந்திர சோழ
நுக்குப்புநகு அமஙகலி யாயிருந்த வேளாந்
துகை பக்கல் ஸ்ரீ விக்கிரம சோள தேவற்குயா
ண்டு ௬ (6) ஆவது விலைகொண்டு உடைமையாலும்
அநுபவித்து வாராநிந்று இதுதேவற்கு

24. ..........பற்று அபரபக்ஷத்து திங்கள் கிழமை
பெற் சோதி ந ............. ..　(Left unfinished)

## இரண்டாம் கல்வெட்டைப்பற்றிய குறிப்பு

தென்கரைத் திரைமூர் நாட்டைச் சேர்ந்த சாத்தனூர் சபையார், திருவாவடுதுறை ஆழ்வார் திருக்கோயிலில், புரட்டாசி மாதம் பூரட்டாதி நட்சத்திரத்தில் ஆரியக்கூத்து ஏழு அங்கம் ஆடுவதற்கும், புரட்டாதித் திருநாளில் திருமூலநாயனாரது நாடகம் நடிப்பதற்கும் நிவந்தம் அளித்ததைக் குறிப்பிடுகின்றது. இக்கல்வெட்டு, இதுகாறும், தென்இந்தியக் கல்வெட்டுத் தொகுதியிலோ அல்லது ஆண்டு அறிக்கையிலோ வெளிவரப்பெறாதது திருவாவடுதுறை ஆதீனத்தில் இதுபொழுது அருளாட்சி நடத்திவரும் பெருங்கொடை வள்ளலாகிய ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் கட்டளையிட்டருளிய வண்ணம் அடியேன் இக்கோயில் கல்வெட்டுக்கள் அனைத்தையும் படித்து எழுதிய பொழுது இந்தச் செய்தி கிடைத்தது. ஆதலால் ஆராய்ச்சி உலகத்திற்குப் பயன்படுமென்று இதனை வெளியிடலானேன். இங்குக் குறிக்கப்பெற்ற திருமூலநாயனாரது நாடகம் இதுபொழுது கிடைத்திலது.

## II

**இடம்:** திருவாவடுதுறை மாசிலாமணி ஈஸ்வரர் திருக்கோயில் கர்ப்ப இல்லின் மேற்புறச் சுவர்.

கோராஜராஜ கேசரிவன்மற்கு யாண்டு ஒன்பதாவது தென்கரை திரைமூர் நாட்டு பிர்மதேயம் சாத்தனூர் சபையோம். இவ்வாட்டை துலா நாயற்று சனிக்கிழமை பெற்ற திருவோணத்து

நாள் அறச்சாலை அம்பலத்தே கூட்டங்குறைவறக் கூடியிருந்து செய்த பரிசாவது :—திருவாவடுதுறை ஆழ்வார் திருஉற்சவம் புரட்டாதிப் பூரட்டாதிக்கு ஆரியக்கூத்து ஏழு அங்கம் ஆடுவதுவுக்கு சந்திராதித்தவல் ஆட நிர்த்தபோகம் செய்து கொடுத்த நிலமாவது. முன்புரட்டாதி புரட்டாதி திருநாளில் ஆடி உளக்கின்ற வடுகமாங்குடி பாண்டிகுலாசனிக்கு தென்கரை சாக்கை வேலி ஆன நிலம் அளவுபடி அரையே இரண்டு மாவும் திருவாவடுதுறை ஆழ்வார் தேவதானம் நெற்குபபை பதினறு வேலியிலும் வடகிழக்கடைய மாம்பள்ளி வாய்க்காலினுக்கு வடக்கு நிலன் முக்காலும் ஆக நிலன் ஒன்றே எழுமாவும் தாங்கள் வேண்டும் பரிசு அநுபவித்து புரட்டாதித திருநாளில் திருமூலநாயனாரவது நாடகம சொல்லிவரவிட ஏழு அங்கம் ஆடுவதாகவும். இப்பரிசு சந்திராதித்தவல் செய்யக்கடவாராகவும்.

## சில குறிப்புக்கள்

முதல் கல்வெட்டு : இக்கல்வெட்டில் முதலாம் இராசராச சோழனை, பரகேசரி என்று குறித்திருப்பது கல்வெட்டுத் தச்சனால் நேர்ந்த பிழையாகும். அவன் இராசகேசரி என்ற பட்டம் உடையவன். இங்ஙனம நேர்வது கல்வெட்டுக்களில் உண்டு. திருப்பந்தணைநல்லூர், முதலாம் இராசராசன் காலத்தில் வடகரை இராசேநதிர சிஙகவளநாட்டுக்கு உட்பட்டிருந்தது. முதற் குலோத்துங்கசோழன், தன் காலத்தில் இராசேந்திர சிங்கவள நாடு என்னும் பெயரை மாற்றி, விருதராச பயஙகர வளநாடு என்று பெயர் வைததுள்ளான். அஙஙனமிருக்க, முதல் இராசராசன் காலத்தில் இந்நிவந்தத்தை உணர்த்தும் கல்வெட்டில், விருதராச பயஙகர வளநாடு என்று குறிததிருப்பது, விக்கிரம சோழன் கல்வெட்டில், இச்செய்தி குறிக்கப்படுவதால் அவன் காலத்து நாட்டின் பெயருக்கு ஏற்ப, விருதராச பயங்கர வளநாடு என்று பொறிக்க நேர்ந்தது என்று கொள்ளவேண்டும்.

# அறிவைப் பெறு!

[நாஞ்சில், கா. கணபதி]

செல்வம் தழைத்த தமிழ்நாடே!
செம்பொன் போன்ற கருத்தாலே
அல்லல் தவிர்க்க வழிகண்டு
அறிவை நிலையில் பெறுவாயே!

---

# வையகத்தில் மனிதன் இருப்பிடம்

[வித்துவான் மாவை. துரை. பழநி மகாதேவன், ஆம்பூர்.]

(செல்வி சிலம்பு ௩௩, பரல் ௧, ௪௩௯-ஆம் பக்கத்தொடர்ச்சி)

பொருளும்[1] சத்தியும்[2] எனவிரு திறத்ததாய்
அளக்கொணாப் பரப்பினை நிரப்பி என்றுமே
சலன[3] முறுவது; அச்சல னந்தான்
எல்லையில் காலம இடையறாப் பெருக்குடன்
குறித்த கால வரையறை பிறழாது
மாறுத லுறுமுயிர்ப்பு மறித்த லும்மே;
அகண்ட மாயஇவ் வையகத் தெண்ணிலா
அண்டம் சிதறிக் கிடப்பன, அவை
“நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன,”
இனுமிவை விரிவன என்பர் ஜேம்ஸ்ஜீன்ஸ்
ஈதர் பரவிய இடையறாப் பரப்பில்;
அவைதாம் பொருண்மை விதியினுக் கடங்குவ,[4]
தம்மைத் தாமே தம்மச்சிற் சுற்றுவ,
பைய வையகத் தொருபால் மறிப்ப
மற்றவை மற்றோர்பால் உயிர்ப்பினைப் பெருகுவ;
நமது கதிரவ னவ்வகை எண்ணிலாக்
கோளங்கள்[5] பலவற்றுள் ஒன்றாம்; நம்பூமி
பரிதியைச் சுற்றிடும பல்நிலையில் கிரகத்துள்[6]
ஒன்றாம்; அதுதான் பல்காலம் நீர்கங்கு
நிலைக்குமுன் குளிர்ச்சி யுற்றது உயிர்த்தோற்றம்[7]
பெருக்கம்[8] பையதாப் பல்வே றுயிர்வகை
ஒருநூறு கோடி யாண்டுகள் நிகழ்வன;
பூமியிற் றோன்றிய பல்வேறு விலங்குகள்
முதுகந் தண்டுடையவை[9] முன்னைய வற்றினும்

---

1 2. Matter and energy. 3. Eternal motion.

4. Law of substance: This establishes the eternal persistence of matter and force keeping their unvarying Constancy throughout the entire universe வையத்துள் நிறைந்துள்ள பொருளின் பொருட்கூறும், சத்திக் கூறும் மாறுபடாத தன்மை வாய்ந்ததை என்றியம்பும் இப் பொருண்மை விதி.

5. Perishable bodies. 6. Transitory planets.

7. Biognetic process.

8. Developoment and transformation.

9. Vertebrates.

உயிர்ப்புப் போட்டியில்[1] உயர்ந்து விளங்குவ;
முதுகந் தண்டு விலங்குக ளுள்ளே
முலைப்பா லூட்டுவ[2] மூன்றும் பூகற்ப
யுகத்தில் நீர்த்தரை வாழ்வன[3] ஊர்வன.[4]
இவற்றால் தோற்றம் உற்றன; முலைப்பால்
விலங்குள் உயர்முழு வளர்ப்பினை[5] எய்திய
பிரிமேட் டென்னும் வரிசை தானும
மூப்ப திலக்க யாண்டுகள் முன்னே
தோன்றிய; அவ்வரி சைப்பிரி மேட்டின்
சிறுகிளை ஒன்றனுள் மனிதனை யொத்த
மனிதக் குரங்கின் வழிவந்த மாண்புளான்
மனிதன்; ஆகையின் உலக வரலாறு
எனபபடும் நாகரிக மெய்திய காலமாம்
சில்லா யிரமாண்டு உயிர்தோன் றியநாள்.
எல்லை காணின் கைந்நொடிப் பொழுதாம்[6]
உயிர்த் தோற்றந்தான் கோள்வர லாற்றின்
குறுகிய சொல்லாம்; நந்தாய்ப் பூமியும்
எல்லை யற்ற இவ்வை யகத்தில்
கதிரவ னொளியிற் சிறுகரும் புள்ளி;[7]
மனிதனோ வென்னில் அழியுயிர்த் தோற்றத்தில்
நுண்ணுயிர்த் தாதுவா லாமசிற் றணுவாம்;[8]
இங்ஙனம்,
வையக நுண்ணறி வெய்திய மனிதன்
உண்மை ஞானத்தினை எய்துதல் ஒருதலை;
எய்திய பின்,
இயற்கைப் பெருமையைக் கண்டுதன் சிறுமையை
உணர்ந்தறி வொழுக்க மெய்தி யமையாது
“ஞானமுண் டாக்குதல் நலமாகும் நாட்டிற்கே.”

1. Evolutionary Race: Struggle for existence, survival of the fittest உலகில் வாழும் ஒவ்வோர் உயிரும் தம் நிலைபேற்றிற்கு ஓயாது போரிடலும், அப் போரில் வலிமை மிக்கன எஞ்சுதலும்

2. Mammals. 3. 4 Amphibia and reptiles.

5. The most perfect and most highly develeped.

6. வரிகள் 103-106. The history of the world that is, the brief period of a few thousand years which measures the duration of Civilisation—is on evanescently short episode.

7. Our mother earth is a mere speck in the sunbeam in the illimitable universe.

8. Man is but a tiny grain of protoplasm in the perishable frame-work of Organic nature.

# திருப்புத்தூர் திருமுறை மாநாடு

17-5-1959 முதல் 22-5-1959 வரைக் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்துக்குரிமையான திருப்புத்தூர்த் திருத்தளித் திருக்கோவிலின் கண் குன்றக்குடி யடிகளாரின் அருட்பெரு முயற்சியால் மிக்க சிறப்பாக நடைபெற்றது. சுருக்கம் வருமாறு :

காலை ஒன்பது மணிக்கு ஆனேற்றுக் கொடியினைத் திரு. உ. ராம. மெ. சுப. சேவு. மெ மெய்யப்பச் செட்டியாரவர்கள் ஏற்றி வைத்தனர். அருள்நெறிக்கொடி வெ. திருநாவுக்கரசு அவர்களால் ஏற்றப்பெற்றது மாலை 6-30 மணிக்கு என். வி. சொக்கலிங்கம் அம்பலம் அவர்கள், எம். எல். ஏ., வரவேற்புரை வழங்கினர் தவத்திரு. இராமசாமி அடிகள் தலைமையில் பல அறிஞர்கள் சொற்பொழிவாற்றினர்.

18-5-'59, மாலை, திரு. ஆ. த. மெ. ராம. மெய்யப்பச் செட்டியாரவர்கள் வரவேற்புரை வழங்க, டாக்டர் மா. இராசமாணிக்கனார் தலைமை பூணப் பல அறிஞர்கள் சொற்பொழிவாற்றினர்.

19-5-59, திரு. மு. வெ. மு. இராமநாதன் செட்டியாரவர்கள் வரவேற்புரை வழங்க, இலங்கை திரு. முதலியார் செ. சின்னத்தம்பி அவர்கள் தலைமைபூண திரு வீர. சா. மெய்யப்பன் அவர்கள் வழக்கினைத் துவக்கிவைக்க அடிமைப் பண்பில் சிறந்தவர் சுந்தரரா – நாவுக்கரசரா? என்பதுபற்றி நந்நால்வராக எணமர் வழக்குரைக்கப் பட்டிமண்டபம் நிகழ்ந்தது.

20-5-59 நிகழ்ச்சிகளும் ஒவ்வொருநாள் இரவுகளில் இசையரங்குகள் வழிபாடுகள், பிற நிகழ்ச்சிகள் எல்லாமும செவ்வையாக நிகழ்ந்தன.

21-5-1959 இல் விசாகத் திருநாளை முன்னிட்டு குன்றக்குடித் திருவண்ணாமலைத் திருமடத்திற்குத் திருமலையினின்றும் ஆறுமுகக் கடவுள் எழுந்தருளினர். வைகறையில் திருமடத்தார் தனிப்பெருஞ் சிறப்புடன் வரவேற்குங் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக விருக்கும். திருமடத் திருக்கொலு மண்டபத்தின்கண் நீர்த்தடம்போல் நறுமணநீர் நிரம்பப் பெற்று வேறுபல ஒப்பனையும் செய்யப்பெற்றுத் தெய்வத் திருக் காட்சியாக அம்மண்டபம் விளங்கும். இக்காட்சிகளுக்கிடையே காலந்தோறும் வழிபாடுகளும் சிறப்புற நிகழும் இவ்வாண்டிலும் அங்ஙனமே நிகழ்ந்தது. மாலை வழிபாட்டில் ஆறுமுக அருச்சனை திருநாவுக்கரசு நாயனார் அருளிச் செய்துள்ள போற்றித் திருத்தாண்டகம் ஐந்தும், மணிமொழிப் பெருமான் அருளிய போற்றித் திருவகவல் ஒன்றும் ஆகிய ஆறு தீந்தமிழ் மந்திரப் போற்றித் தொடர்களைத் தனித்தனியே அறுவர் நின்றேத அருச்சகர் அறுவர் மலருந் தளிரும் முகமலர்ந்து தூவ நிகழ்ந்தது.

22-5-1959 இல் திருப்புத்தூரில் திருமுறை விழாத் தொடர்பாக நடந்த இலக்கிய வட்டப் பேரவைக்குக் கழகப் புலவர், சித்தாந்தப் பண்டிதர் திரு. ப. இராமநாத பிள்ளையவர்கள் தலைமை தாங்கினர். அறிஞர் பலர் அரிய சொற்பொழிவாற்றினர்.

குன்றக்குடி யடிகளாரவர்கட்கு அத் திருக்கோவிலைச் சார்ந்த பதினெட்டூர் நாட்டவர்கள் மனமுவந்து பூமாலையாலும் பாமாலையாலும் பாராட்டுச் செய்தனர். அடிகளாரும் அரியதோர் வாழ்த்துரையருளி அவையை நிறைவுறுத்தினர்.

---

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) வடநாட்டார் மொழிப்பித்து

"தேசீய நெடுஞ்சாலைகளை அயல் நாட்டினர் உட்பட அனைவரும் பயன்படுத்துகின்றனர். இத்தகைய நெடுஞ்சாலைகளில் உள்ள மைல் கற்களில் பொறிக்கப்பட்டிருந்த எண்களை இந்தியில் மாற்றப்பட்டுள்ளது மத்தியப் பிரதேசத்தில். அந்த அளவுக்கு அங்கு மொழிப்பித்து வளர்ந்து விட்டிருக்கிறது" என்று அமைச்சர் பக்தவத்சலம் அவர்கள் கடந்த 18-5-59 இல் மயிலை இந்தி வித்தியாலய ஆண்டு விழாவில் பேசிய காலை குறிப்பிட்டார் அவர் மேலும் பேசுகையில், "வட இந்தியாவில்மட்டும் இத்தகைய மொழிப்பித்து இல்லை. சென்னை ராஜ்யத்திலகூடக் கோவில் களில தமிழிலேயே அர்ச்சனை செய்ய வேண்டும் என்று சிலர் கூறுகின் றனர். ஆண்டவனைப் பற்றிய 'நாமாவளி' எந்த மொழியில் இருந்தால என்ன? இத்தகைய மொழிப்பித்துத்தான் வெறுப்பை வளர்ப்பது. வட்டார மொழிகளைத் தவிர மற்ற மொழிகளையும் தெரிந்துகொள்ள வேண்டும். பிற மொழிகளைத் தெரிந்துகொள்வதால் வட்டார மொழிக குத் தீங்கு ஒன்றும் ஏற்பட்டு விடாது" என்றும் கூறியுள்ளார்.

**குறிப்பு:** வடநாட்டில் மைல் கற்களில இந்தி எண்களைப் பொறிக கும் அளவிற்கு மொழிப் பித்து வளர்ந்திருப்பதையும், தமிழகத்தில் தாய் மொழியில் இறைவனை வழுத்தவேண்டும என்பதையும் ஒன்றாக இணைத் துக் காட்டி 'இவைதாம் மொழிப்பித்து' என அமைச்சரவர்கள் கூறுவது மிக மிக இரங்கத்தக்கதும், பொருத்தமற்றதுமாகும். அமைச்சர் குறிப் பிடும் இரு செய்திகளில் முன்னது மொழிவெறியின் பாற்படும்; பின்னது மொழிப் பற்றின் பாற்படும் வெறி தள்ளத்தக்கது; பற்று கொள்ளத் தக்கது; அருளொழுகும் தமிழ்மொழியில் ஆண்டவனை அருச்சிப்பது எங்ஙனம் மொழி வெறியாகும்? பிற மொழிகட்கும் இடம் தரவேண்டும் என்ற பெரிய மனத்தால் தாயையே மறக்கவேண்டுமா? அம்மையும் அப்பனுமாகிய இறைவனை 'அம்மையே அப்பா' என அழைத்துப் போற் றுவது மொழிப பித்து என்றும், புரியாத வடமொழியில் எதையோ சொல்லுவதுதான் அருச்சனை—அதுதான் பாரத நோக்கம் என்றும் அமைச்சர் போன்றோர் கருதுவதானல்—சொல்வதானல், அத்தகைய மொழிப் பித்து தமிழ் மக்களுக்கு உடனடியாகத் தேவை என்றே கருது கின்றோம். அயல் மொழிப் பயிற்சி தேவை என்பது வேறு. அவவழிச் சென்று தன்னை மறந்து வாழ்தல் வேறு. பின்னது தான் அமைச்சர் காட்டும் பாதை. இத்தகைய அயல் மொழி மயக்கில திளைப்பதுதான் பாரத நோக்கமென்றால், அத்தகைய நோக்கமுடைய ஆட்சி முறை முறையொடுபடாதது என்றது வேறென்ன சொல்வதென்றே புரிய வில்லை.

## (உ) சித்தர் விழா

"ஆலய நிதியிலிருந்து ஏழை எளியவர்கட்கு குறைந்த செலவில் சித்த வைத்திய மருந்துகளைக் கொடுக்க ஏற்பாடு செய்யப்படுமானல் அதற்கு எவவிதத் தடையும் இராது" என்று திரு டி. புருசோத்தம முதலியார் எம். எல். சி. அவர்கள் கடந்த 24-5-59 இல் சென்னையில் நடைபெற்ற சித்தர் விழாத் தலைமையுரையில் குறிப்பிட்டார். அடுத்து,

விழாவைத் துவங்கி வைத்த சென்னை மாநகர மன்றத் தலைவர் திரு. அ. பொ. அரசு அவர்கள், மூலிகைச் செடிகள் வளரும் காடுகளைப் பாதுகாக்க அரசாங்கம் ஆவன செய்யவேண்டுமென்றும், கிடைக்கின்ற மூலிகைகளைக் கொண்டு நம் நாட்டிலேயே மருந்துகளைத் தயாரிக்க வேண்டுமென்றும் குறிப்பிட்டார். பின்னர்ப் பேசிய மாநகர் மன்ற ஆணையாளர் திரு. பாலசுந்தரம் அவர்கள், மக்களுக்கு எளிய வகையில் மருந்துகள் கிடைக்கச் செய்யவேண்டுமென்றால் அதற்கேற்றது சித்த வைத்தியமேயாகும், என்று குறிப்பிட்டார்.

குறிப்பு: சித்தா விழாவில் பேசிய இம் மூன்று பெருமக்களின் பேச்சுகளும் மிக மிக நல்ல கருத்துக்களை உள்ளடக்கியவையாகும். மக்களின் உளப்பிணி போக்குதற்கென ஏற்பட்ட ஆலயங்களின் நிதி அவர்தம் உடற்பிணியையும் போக்குதற்கும் பயன்படல் வேண்டுமென்பது மிகச் சிறந்த கருத்தாகும். ஏனெனில் உளமும் உடலும் நெருங்கிய தொடர்புடையன. எனவே, மக்கள் தொண்டே மகேசன் தொண்டு எனக் கொண்டு ஆலயநிதியில் ஒரு பகுதி மக்களின் உடற்பிணி நீக்கப் பயன்பட அரசியலார் வழிகோலுவாராக. அடுத்துப் பேசிய மாநகர் மன்றத் தலைவரின் பேச்சும் அங்ஙனமே நல்ல கருத்துடையதாகும். மூலிகைகளைப் பாதுகாப்பது நாட்டாள்வோர் கடன். புதிய முறையில் மருந்துகளைத் தயாரிக்க நம் அரசினர் முயன்றால் தமிழ்நாடு பலவழிகளிலும் முன்னேறும் என்பது பொருளாதார உண்மையாகும். அங்ஙனமே ஏழைகட்குச் சித்த மருத்துவத்தின்மூலம் மருத்துவ வசதி எளிதில் கிட்டச் செய்யலாம் என்னும் நல்ல கருத்தை நல்கியுள்ளார் திரு. பாலசுந்தரம் அவர்கள். இம் மூவருடைய கருத்துக்களும் முறையே அறம், பொருள், இன்பம் பயப்பனவாகும். ஆனால் இதற்கெல்லாம் அரசியலார் செவி சாய்த்தல் வேண்டுமன்றோ?

## (௩) ஆங்கிலத்தின் இடம் இந்திக்குத்தானாம்!

“இந்தியாவிலுள்ள மக்களில் 18 கோடி பேருக்கு இந்தி தாய்மொழியாக உள்ளது. எனவே இந்தி இந்தியாவின் பொதுமொழியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. இன்னும் 20 ஆண்டுகளுக்குள் இந்தி இந்தியாவின் மிக முதன்மையானதொரு மொழியாக ஆகிவிடும். ஆங்கிலம் நீங்கிவிட்டால் அந்த இடம் இந்திக்குத்தான் கிடைக்கும்.” என்று இந்திய மக்கள்மன்ற அவைத் தலைவர் திரு. அனந்தசயனம் ஐயங்காரவர்கள் 30-5-59 இல் கூடிய ஆந்திர மாநில 23 ஆம் இந்தி மகாசபைக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கிப் பேசிய காலை குறிப்பிட்டார்.

குறிப்பு: திரு. அனந்தசயனம் ஐயங்காரின் ஆசையைக் கண்டு வியப்படைகிறோம். ஏதேதோ காரணங்களைக் காட்டி இவ் விந்தியத் துணைக்கண்டத்தில் பொதுமொழியாகத் தகுதி உடையது இந்தியே என அவர் கனவு காண்கிறார். காணட்டும்; ஆனால் தமிழகத்தைப் பொறுத்தவரையில் இந்தி எவ்வாற்றானும் ஆங்கிலத்தின் இடத்தைப் பெற இயலாது. ஆங்கிலத்தின் இடம் இந்திக்குத்தான் என்று ஐயங்கார் கூறுவது ஆங்கில ஆட்சியின் இடம் வட இந்தியருக்குத்தான் என்று கூறுவதுபோலிருக்கிறது. ஆனால் ‘நாமார்க்குங் குடியல்லோம்’ என்ற தமிழினத்தாரிடம் எம்மொழியும் உறவாடலாமே தவிர உயர்நிலை நின்று ஆதிக்கம் செலுத்த இயலாது என்பது திண்ணம்.

# மதிப்புரை

**"சிந்து வெளிதரும் ஒளி"**

[இதன் ஆசிரியர் திரு. க. த. திருநாவுக்கரசு எம். ஏ, (தமிழ்) எம். ஏ. (வரலாறு) வெளியீடு: வள்ளுவர் பதிப்பகம், புதுக்கோட்டை. விலை ரூபா. 1 - 50.]

ஒரு நாட்டின் தொன்மை நாகரிக வுணர்ச்சியானது அந் நாட்டு மக்கள் எல்லாவகையான நன்முயற்சியிலும் ஈடுபட்டு முன்னேறுவதற்கு வன்மையளிக்கும் பெரும் பொருளாகும். நம் நாவலந் தீவாகிய இவ் இந்திய நாட்டின் பழங்குடிகள் தமிழ்ப் பெருமக்களே. வரலாற்று ஆசிரியர் இந் நன்மக்களைத் திராவிடர்கள் என வழங்குகின்றனர். இது காறும வரலாற்று ஆசிரியர்கள் ஆரியர்கள் இந்நாட்டுக்கு வந்த பின்னரே நாகரிகம் தோன்றிற்று எனச் சான்றேதுமின்றி உரைத்தனர்.

அவ்வுரை "சிந்துவெளிப் புதைபொருளாராய்ச்சி"யினால் பொருந்தா தென்பது எல்லார்க்கும் நன்கு புலனாகிவிட்டது. அம் மெய்ம்மையினை நன்கெடுத்து நடுநிலையுடன் விளக்குவதே இந்நூல். இந் நாட்டிற்கு ஆரியர் வந்தேறு குடிகளாக வந்து புகுந்தது, கி. மு. ஆயிரத்தைஞ்ஞூறு ஆண்டளவென்பது நினையளவும் ஐயத்திற்கிடனின்றி அனைவர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டதொன்றாகும். சிந்துவெளி நாகரிகம் கி. மு. மூவாயிரத்து நானூறு ஆண்டுகட்கு முற்பட்டதென ஆசிரியர் இந் நூலின்கண் தக்க பல சான்றுகளுடன் வலியுறுத்தி நாட்டியுள்ளார். அக்காலத்துச் சிந்துவெளி மக்கள் நகர அமைப்பிலும் நாகரிக மேம்பாட்டிலும், உழவு, நெசவு, வாணிகம், கடல் கடந்து சென்று பிற நாட்டாருடன் செய்து போந்த வாணிகப் பெருக்கம், அதனால பிற நாட்டார் பலர் இங்கு வந்து குடியேறிக் கலப்புற்றிருந்தமை, தொல் தமிழர் வழிபாடாகிய சிவலிங்க வழிபாடு, சில பொருட் குறிப்புணர்த்தும் முத்திரைகள், ஓவிய எழுத்துக்கள் முதலிய சீர் சிறப்புக்களிலும் உலகோர் பெருவியப்புக் கொள்ளும்படியும், உலகத்தில் எப்பகுதியிலும் இதற்கு இணையான நாகரிகம் இருந்ததில்லை யென்று சொல்லும்படியும் வாழ்ந்து வந்தனர் என்னும் மெய்ம்மையினை இதன் கண் காணலாம்.

இந் நூல் "இருளில் ஒளி" முதல் "சிந்து வெளியின் சிறப்பியல்புகள்" ஈறாக எண் பெருந் தலைப்புக்களையும் பல வேறு உட்டலைப்புக்களையும் கொண்டு திகழ்கின்றது. இந் நூலை யாக்குதற்குப் பன்னிரு பேராசிரியர்கள் ஆங்கில மொழியில் எழுதியுள்ள சிறந்த பன்னிரு நூல்களும், சிறந்த ஆங்கில வெளியீடுகள் நான்கும், "பண்டைத் தமிழ் எழுத்துக்கள்" என்னும் தமிழ் நூல் ஒன்றும் துணையாகக் காணப்படுகின்றன.

ஆசிரியர் இந் நூலை எளிய இனிய தூய தமிழ் நடையில் ஆக்கியுள்ளார். நல்ல பதிப்பு. கல்லூரிகளில் வரலாற்றுப் பகுதிக்குத் துணைப் பாடமாக வைப்பதற்கு ஏற்புடைய திந்நூல். இதனை ஆசிரிய மாணவர்களும் பிறரும் கற்றுப் பயன் எய்துவார்களாக.



---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




| | | |
|---|---|---|
| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௦, ஆனி | பரல் |
| ௨௨ | ஜூலை, 1959 | ௧௧ |

# திருமணம்

தொன்றுதொட்டு நின்று நிலவும் தென்றமிழ் நாட்டுத் திருமண வாழ்க்கை, தெய்வத் தொடர்புடைய தூய செந்நெறி வாழ்க்கையாகும்; இவ் வாழ்க்கைக்கு வேண்டுவனவாய் நிகழ்த்தப் பெறும் கரணங்கள் முதலியன தமிழகத்த தனிமுதற் செயல்களே யாம். கரணங்கள்—சடங்குகள் இக் கரணங்கள் தூய தமிழ்ச் சான்றோரால் தொன்மையாய தமிழ் மந்திரங்களால் நடைபெற்ற காலங்களில் இவற்றின் வாய்மையையும் இன்றியமையாமையை யும் எல்லாரும் நன்கு புரிந்து இன்புற்றிருந்திருப்பர் என்பதற்கு எட்டுணையும் ஐயமின்று. இடைக் காலத்தே அயன்மொழி மயலால் வந்தேறிய வம்பலர் புகுத்திய பொருந்தாக் கொள்கை களும் சில சேரலாயின. மேலும் அவரை ஆசிரியராகக் கொண்டு அவர்தம் மொழியாலும் நிகழலாயின. தாய்மொழியல்லாத பிற மொழிவாயிலாக நடக்கும் இந் நிகழ்வினைப் புரிந்துகொள்வார் எவரும் இலராயினர். இலராகவே உளளக் கிளர்ச்சியும் களிப் பும் பெருகும் வாயிலின்றி வெறும் கட்டுப்பாட்டளவில் நிகழ்ந்து வரலாயின. அதனால் தற்காலத்திளைஞர்கள் இவற்றினை ஆரியச் சடங்கென அறையலாயினர். ஆரியர் நம் நாட்டுக்கு வரும் பொழுது எழுத்தில்லா மொழியினராய், நெறிப்பட்ட ஒரு தெய்வ உண்மை ஒரு சிறிதும் அறியாராய், நாகரிகமும் பண் பாடும் நன்னும் நலமிலராய், நிலைத்த வாழ்க்கையும் குலவொழுக் கமும் நினைவினும் தோன்றப் பெறாதவராய் இருந்தனர் என்ப தனை வரலாறுணர்ந்த எவரும் நன்குணர்வர். அங்ஙனமிருந்தவர் நம்மனோர் வாழ்க்கையை நன்குணர்ந்து கைக்கொண்டு சிறி துயர்ந்து பெரிது மயக்கினர். இம் மயக்கமே இந் நாளிலும்

பலர்பால் இருந்து வருகிறது. இம் மயக்கத்துள் தலையாயது வருணாசிரம தருமம் என்னும் பொருந்தாப் புனைவாகும். அஃதகன்ற ஞான்றுதான் தொன்மைத் தமிழக நன்னெறி மெய்ம்மையாகத் திகழும் நன்னாளாகும்.

தமிழகக் கரணவுண்மையினை வரும் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத்தான் உணர்க :

"கற்பெனப் படுவது கரணமொடு புணரக
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே."
—தொல். பொருள். ௧௪௨.

இச் சூத்திரத்து எடுத்துக்காட்டின்கண் "உழுந்து தலைப் பெய்த...." எனத் துவங்கும் அகநானூற்று(அ௬)ப் பாட்டொன்று காணப்படும். அதன்கண், வதுவைச சடங்கின் சில குறிப்புககள் காணபபடுகின்றன. அஃது ஆரியக் கலப்பில்லாத தூய தமிழக மரபாகும். அதன்கண் சொல்லப்பெறாத மண வினைகளைச் சேர்த்துக்கொள்வது நம்மனோர் கடனாகும். சிறப்பாக "வாலிழை மகளிர் நால்வர் கூடி" மணவினைச் சிறப்பினை மனமகிழ்வொடு செய்தமை நனகு பெறபபடும். அந் நிகழ்வு இன்றும நடைபெற்று வருகின்றது. அததகைய மகளிர் பங்கின வாய் திருமுறைச் செந்தமிழ்த தமிழ் மந்திரமும் கிளர்நதெடுதது ஓதா நிறகின்றது. அது வருமாறு :

"உன்னியிரு போதுமடி பேணுமடி யார்தமிட ரொல்கவருளித்
துன்னியொரு நால்வருட னாலிழலி ருந்ததுணை வன்றனிடமாம்
கன்னியரொ டாடவாகள் மாமணம்வி ரும்பியரு மஙகலமிக
மின்னியலு நுண்ணிடைநன் மங்கையாி யற்றுபதி வேதிகுடியே"
—சம்பந்தர், ௩. ௭௮-௭.

இந் நன்முறையில் திருப்பாடல்பெற்ற பாண்டி பதினன்கனு ளொன்றாய்க் கூடற்கூடலயின் ஆடற்பெருமான் வீற்றிருந்தருளும் திருபபரங்குன்றத் திருநகாக்கண், திருவள்ளுவர் யாண்டு ஆயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூறு ஆனித் திஙகள் ஏழாம் நாள் (21-6-1959) ஞாயிற்றுக்கிழமை காலையில் "தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக கழக" நிறுவலாளர் செந்தமிழும் செந்நெறியுமாகிய இரண்டினையும் இரு கண்ணெனப் போற்றி இடையறாது வளர்த்து வநத ஈடும் எடுப்புமில்லாப் பீடுடைச் செம்மலார் சைவத்திரு வ. திருவரஙகம் பிள்ளையவர்கள் மகளார் மங்கையர்க்கரசியார்க்கும் பாம்பக் கோயில் ‡திரு. சே. அணைந்தபெருமாள் பிள்ளையவர்கள் மகனார் (தொலைபேசி இயக்

குநர்) கோமதிநாயகத்துக்கும் செந்தமிழ் முறைப்படி திருமணம் முருகப்பெருமானருளால் நிகழ்ந்தது.

இதுவே போன்று ஆனித்திங்கள் பத்தாம் நாள் (24-6-'59) புதன்கிழமை காலையில் திருவரங்கனாரின் இணையொத்த இளவலராய்க் கழக ஆட்சியாளராய்க் கழகத்தை அணிபெற நன்முறையில் நடத்திவரும திருவாளர் வ. சுப்பையா பிள்ளையவர்கள் மகளார் வயிரமணியம்மைக்கும் திருவாளர் ஆ. இராசகோபால பிள்ளையவர்கள் மகனார் (மறைமலையடிகள் நூல் நிலைய நூலகர்) முத்துக்குமாரசாமி, எம். ஏ-க்கும சிறப்புறத் திருமணம் நிகழ்ந்தது. இத் திருமணங்கள் திருப்பரங்குன்றத்தின்கண் நிகழநேர்ந்தமைக்குரிய காரணங்களைப் பின் விளக்குதும் நேர்பெற நிகழ்ந்த சீர்மையினை எல்லாரும் கைக்கொண்டு இனிதின் ஒழுகுமாறு ஒரு சிறிது விளக்குதும். ஒப்பனை செய்து வனப்புற அமைக்கப்பெற்ற திருமண அறையின்மீது கிழக்கு நோக்கித் திருமணமக்களிருவரும் வீற்றிருப்ப அவர்கட்கு நேர்முகமாய் வடகிழக்கு மூலையிலிருந்து முறையே "பிள்ளையார், நிறைநெல்நாழி, நிறைகுடம், திருவிளக்கு" ஆகிய நாற்பெரும் பொருளும நன்குற நாட்டப்பெற்று அவற்றிற்குத் திருமுறைவழி வழிபாடு ஆற்றப் |து. மணவறையின் நாப்பண் விழைதகு தழலோம்பல்

இந் நிகழ்ச்சிகளைக் கழகப் புலவர், சித்தாந்த பண்டிதர், ப. இராமநாத பிள்ளையவர்கள் ஆசானாகவிருந்து நிகழ்த்துவித்தனர். இவர்கட்குத் துணையாகத் திருமுறைத் திருப்பாட்டுக்களைச் சங்கரநயினார் கோவில் திருக்கோவில் ஓதுவாமூர்த்தி திருவாளர் அ. திருஞானசம்பந்த ஓதுவாரவர்கள் பண்ணுடன் பாடிச் சிறப்பித்தனர். இங்ஙனம் செய்ய விழைவார்க்குத் துணையாதற் பொருட்டு வேண்டும் திருப்பாட்டின் முதல் நினைப்புக்களைத் தருகின்றும். முதற்கண் விளக்கிய நாற்பொருள்களின் குறிப்புத்தரும் திருப்பாட்டு வருமாறு :

"பாரவன்காண் பாரதனிற் பயிரா னான்காண்
பயிர்வளர்க்கும் துளியவன்காண் துளியில் நின்ற
நீரவன்காண் நீர்சடைமேல் நிகழ்வித் தான்காண்
நிலவேந்தர் பரிசாக நினைவுற் றோங்கும்
பேரவன்காண் பிறையெயிற்று வெள்ளைப் பன்றி
பிரியாது பலநாளும் வழிபட் டேத்தும்
சீரவன்காண் சீருடைய தேவர்க் கெல்லாஞ்
சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் றானே."

—௬. ௮௭-௬

இத் திருப்பாட்டின்கண் ஓதப்பெறும் க. பார், உ. பயிர், ௩. நீர், ௪ சீர் ஆகிய நான்கும் முறையே பிள்ளையார், நிறைநாழி, நீர்க்குடம், திருவிளக்கு நான்கினையும் குறிப்பனவாகும். பிடித்து வைக்கும் பிள்ளையார் சிவலிங்கப் பெருமானே. நிறைநாழி முருகப்பெருமானே. நீர்க்குடம் உமையம்மையாரே. திருவிளக்கு கூத்தப்பெருமானே. சிவலிங்கப் பெருமான் அடையாளத்திலேயே பிள்ளையாரையும் அமைத்துக்கொள்ளுதல் வேண்டும். இவற்றிற்குரிய திருப்பாட்டுக்களின் முதனினைப்புக்கள் வருமாறு: க: 1. தழைத்ததோ. 2. காணுத. 3. பிடியத. 4 எடுக்கு. உ: 1. நெஞ்சார. 2. படைமலிந்த. 3. பத்தியின். ௩: 1. ஏவியிடர்க். 2. பந்துசேர். 3. பூமருவு. ௪: 1. உடம்பெனும. 2. இல்லகை. 3. செய்ஞ்ஞின்ற 4 கற்பனை. இத திருவுருவங்களில் இறைவன் எழுந்தருளிய குறிப்பு: செஙகணனும்.

செய்ம்முறைக் குறிப்பு வெண்பா :

> ஆடை நாள்முன்இறை நீறுமறை காப்பு
> முறைஈன்றார் ஓம்பழல்நீர் வாககல்—நிறைதாலி
> கட்டுரைஆ சான்பட்டம் மாலையிடம் மிஞ்சிபொரி
> ஒட்டறுகேற் றல்காப்பு வாழ்த்து.”

க. இறை: இது மேலே குறித்தபடி ஆசான் செய்துகொள்ளும் இறை வழிபாடாகும். உ. ஆடை: மணமக்களுக்கு நல்கும் புத்தாடை. மணமகனுக்குக் கொடுக்கும்போது ஓதவேண்டிய திருப்பாட்டு. 1. தம்மையே புகழ்ந். மணமகளுக்கு. 2. பட்டுடுத்துப். ௩. நாள்: மணமக்கள புத்தாடையணிந்து வந்தபின் நாளும் கோளுமநன்றாதற் பொருட்டு, 1. வேயுறு. காளமேகந். ௪. முன்: (ஈருதுதல்) வாயானை. ௫ முன். (ஆசான்) தெளிவு குருவின் ௬. இறை: (மணமக்கள் செய்யும் இறைவணக்கம) செல்வியைப். ௭. நீறு: (மணமக்களுக்கு நீறணிவித்தல்) 1. மந்திரமாவது 2. பூசவினியது. ௮. மறை: (மணமக்களுக்கு ஓதுவிக்கும மந்திரம்) 1. காதலாகிக். 2. பூவினுக். ௯. காப்பு: மணமகன்—மாறில்நிறை. மணமகள்—முற்றுமமெய்ஞ். க0. ஈன்றார்: (மாப்பிள்ளைக்கு) 1. கொண்டுவந்து. 2. ஈன்றளுமாய். (பெண்ணுக்கு) 1. கொண்டுவந்து. 2. தந்தையாய்த். கக. அழலோம்பல்: 1 செந்தளிர்மா 2. காலமுநாள்கள் (சுள்ளியிடுதல்) 3. கற்றவர்களுண்ணும் (என்னும் போற்றித் தாண்டகத்தில் இயன்றளவு) கஉ. நீர்வாக்கல்: பெருகொளி க௩. நிறைதாலி: 1. பொங்குவிடந் 2. குரும்பைமுலை 3. மணவன்காண் 4. பொன்னுமெய்ப் 5. அப்பன்நீ க௪. கட்டுரை: மணமக்கள், ஆசான். க௫. பட்டம்: (மணமகன்) 1. பட்டநெற்றியர் (மணமகள்) 2 கொட்டமுழ. க௬. மாலை

மாற்று: பூந்தார் நறுங் ௧௭. மணமகள் இடப்பாகத் தமர்தல்: ஓதி நன்குணர்வார்க் ௧௮. மிஞ்சி: மணிநீண் ௧௯ பொரியிடல்: அகனமர்ந்த ௨0 ஒட்டு: (செய்பணியை இறைவன் பால் ஒப்பு வித்தல்) 1. யாதே செய்தும 2 அஞ்செழுத் ௨௧. அறு கெடுத்தல் (சேடை) 1. அறுகெடுப் 2. குழலொலி. ௨௨. எதிரேற்றல்: மறைக்குல ௨௩ காபபுக்களை தல: ஆறுலவு ௨௪. வாழ்த்து: 1. மண்ணினலல 2. வாழ்கவநதணர் 3. நமச்சிவாய வாழ்க 4 என்றுமின்பம்

அம்மான் சடஙகில் மூளைப்பாலி பூரித்தல்: மன்னுபெருஞ்.

மணமக்கள் மோதிரமணிதல்: வாள்விடு.

கைப்பிடித்தல்: வண்டுலாங்.

**கட்டுரை: நீர்வாக்குங்காலத்து மணமகளின் தந்தை:**

அன்பு மகட்கொடையால் ஆகும் அருள்பிறக்கும்
இன்ப மருகநின் இன்னிழலாய்—அன்பருளால்
நீரேற்றுக கொள்நாள்போல் நீடூழி வாழ்கமக்கள்
பாரேற்றுக் கொள்சொல் பயினறு.

**,, மணமகனின் தந்தை:**

எம்மகன்தன் இல்லத் துணையாய் இயைசெல்வி
எம்மகளே யாவை இருவீரும்—செம்பொருளால்
வாழ்க்கையறம் பேணிவளர் மக்களொடும் பல்லூழி
வாழ்கவருள அன்பால் மகிழ்ந்து.

**,, திருப்பூட்டியதும் மணமகன்:**

ஈன்றூர் உடன்பிறந்தார் ஒக்கல் விருந்தீகை
ஆன்றமொழி நாடுநிறை ஆக்கமுறச்—சான்றஇறை
தாள்பேணல் வேளாண்மை மககள்நலம் நாளோங்கக்
கேள்துணையாக் கொண்டேன் கிளர்ந்து.

**,, மணமகள்:**

அன்பு பிறந்திடத்தாம் ஆர்வம் சிறந்திடத்தாம்
முன்புமனை பேணலினும் மூவாத—இன்புநலம்
காதலினும் நான்கும் கணவன் மனைவியினும்
ஓதுதுணை யானேன் உவந்து.

**இருவரும் சேர்ந்து:**

ஈருடற்கும் ஓருயிராய் என்றநாம் செம்பொருட்குப்
பேருடலாய் அன்பருளே பேணியிவண்—யாருடனும்
நண்பாய் மொழிநாடு மக்கள் நலத்தொண்டு
பண்பாகச் செய்வோம் பரிந்து.

,, படைக்கலமாகவுன்

" ஆசான் : 1. ஒழுக்க மன்பருள் (சிவஞானசித்தியார் : வேண்டிய பேறுகள் பதினாறும் ஓதப்பெற்றுள்ளன.) 2. காரணி கற்பகம் (திருக்கோவையார்) 3.

வாழ்க மணமக்கள் வாய்மைபீ ரெட்டெய்திச
சூழுசெல்வம் மக்கள்நாள் சுற்றமொடும்—வாழ்க
திருக்குறள் தொண்டர்சீர் சித்தாந்தம் தொன்னூல்
உருக்கமுடன் ஓதிவாழ் க.

இந் நிகழ்ச்சிகள் அனைத்திற்கும் நிறையுயிர் போன்று நிலை பெற்றிருக்கும் மறை செந்தமிழ்த திருவைந்தெழுத்தாகிய தனி முதல் மந்திரம். ஒவ்வொரு நிகழ்ச்சியினையுங் குறிக்கும் அருங் குறிப்புக்களமைத்த திருமுறைத் திருப்பாட்டுக்களை அவ்வந் நிகழ்ச்சியின்போது ஓதுதல் வேண்டும். அம் முறையாகவே மேற்கண்ட திருப்பாட்டுக்கள் தொகுக்கப் பெற்றுளளமை காண்க. இவற்றை வரும் வெண்பாவாயிலாக நினைவு கூர்க :

எல்லாத் திருமுறையும் இன்பத் தமிழ்மறையே
சொல்லும் செயற்பாக்கள் தூவுடலாம்—ஒல்லுமுயிர்
ஐந்தெழுத்தாம் நாளும் அருளால் இவையோதி
முந்துசெயல் செய்க முயன்று.

தனிமுதல் தமிழ் மந்திரமாகிய திருவைந்தெழுத்தின் ஒப்பில் முதன்மை வருமாறு :

" மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே." —க. உஉ - உ.

" மந்திரங்க ளானவெலாம் அருளிச் செய்து
மற்றவற்றின் வைதிகநூற் சடங்கின் வந்த
சிந்தைமயக் குறுமையந் தெளிய வெல்லாஞ்
செழுமறையோராக கருளியவா தெருளு மாற்றால்
முந்தைமுதன் மந்திரங்க ளெல்லாம தோன்றும்
முதலாகு முதல்வனுர் எழுத்தஞ் சென்பார்
அந்தியினுள் மந்திரமஞ் செழுத்து மேயென்
றஞ்செழுத்தின் திருப்பதிகம் அருளிச் செய்தார்."
—கஉ. சம்பந்தர். உக - சு.

அந்தி - காலை மாலை ஆகிய இருபொழுதுமாம்.

"அஞ்செழுத்தா லுள்ளம் அரனுடைமை கண்டரனை
அஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தில்—அஞ்செழுத்தால்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கில்
அண்டனுஞ் சேடனும் அங்கு." —சிவஞான. கூ - ௩ - க.

"அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
புராண
ஆனந்தத் தாண்டவமும் ஆறாறுக் கப்பாலாம்
மோனந்த மாமுத்தி யும்" —உண்மை விளக்கம், ௪௫.

திருப்பூட்டியதும் மேளதாளத்துடன் சுற்றமும் நண்பும் சூழ்தர, ஆன்றோர் வழிநடத்த மணமக்கள் திருக்கோவில் சென்று திருமுறை முழங்க எல்லாம்வல்ல இறைவனையும் இறைவியையும் முறையுறத் தொழுது வழிபாடியற்றி மனையகம்புக்க காட்சி கண்கொளாக் காட்சியெனக்

திருப்பரங்குன்றத்தின்கண் திருமண நிகழ்நேர்ந்த காரணம்:

நம்மைவிட்டு நாளுலந்து பருவுடலினின்று நீங்கிச் சென்ற நம் நெருங்கிய உறவினரும், குடும்பத்தாரும், நண்பரும் பிறரும் வாழுங்காலத்து நம்பாற்கொண்டிருந்த அன்பினும் கூடிய அன்புடன் ஆவியுலகத்தில் உலவுகின்றனர். அவர்கள் நம்முடன் உரையாடி மகிழ்ந்து அளவளாவுதற்குப் பெருங்காதலுடையவர்களாகவிருக்கின்றனர். அவர்கள் நம்முடைய நல்வாழ்வில் மிக்க நாட்டமுடையவர்களாகவு மிருக்கின்றனர். நமமுன் நின்று நம்மைக் கண்ணாரக் காண்கின்றனர். ஆனால் நாம் அவர்களுடைய நுண்ணுடலைக் காணும் தன்மையில் இல்லை. அவர்கள் பேசுகின்றனர் அப் பேச்சைச் செவிகருவியாக வுணர்ந்து எழுதிக்கொள்ளும் தன்மையிலும் நாமிலம். ஆனால் இயற்கையாகவே அதற்குரிய தனியாற்றல் வாய்க்கப்பெற்ற பொதுவர் ஒருவர் வேண்டப்படுகின்றனர். இவ்வுண்மை நம் நாட்டில் பண்டுதொட்டுப் பயின்று வந்ததொன்றெனினும், இந் நாள்போல் யாண்டும் விரிவடையவில்லை. மேற்புல அறிஞர்கள் இவற்றைத் துருவியாய்ந்து பன்னிறப் படங்களுடன் ஆங்கிலத்தில் பலநூல் வெளியிட்டுள்ளார்கள். தமிழிலும் மதுரைத் திருஞான சம்பந்தர் திருமடத்து முதல்வரும குருமகாசன்னிதானமுமாகிய சிவத்திரு சோமசுந்தர பரமாசாரிய சுவாமிகள்.... ....அவர்கள் வெளியிட்டுள்ளார்கள்.

ஆவியுலகத் தான்றோர் எழுத்துப் பலகை வழியாகவும், பேச்சு வழியாகவும் தங்கள் கருத்தை வெளியிடுகின்றனர். அம் முறையில் ஆவியுலகம்புக்க மறைமலையடிகளாரும், திருவரங்கனாரும், நீலாம்பிகையம்மையாரும், திருநெல்வேலித் திருவாளர்

குற்றாலலிங்கம் பிள்ளையவர்கள் வாயிலாக 1959 இல் கழக ஆட்சியாளர் திரு வ. சு. அவர்களுக்குச் செய்தியறிவித்துள்ளார்கள். அத்துடன் உலக நன்மையின் பொருட்டுச் சில இனிய எளிய கட்டுரைகளும் செல்வியில் வெளியிடுமபடி விடுத்துள்ளார்கள். அவர்களுடைய திருவாணையின் வழியே மணமக்கள் தேர்வும் இநகு மணநிகழ்வும நிகழலாயின என்க.

மேலும் திருமண வாழ்த்துப்பாக்களும், கட்டுரைகளும் பொதுவர் வாயிலாக வெளிப்போந்து அச்சிட்டுத் திருமணத்தின் போது மறைமலையடிகளாரின் திருவாணைப்படி அவர தம் மகனார் திரு. மாணிக்கவாசகனாரால் படித்தளிக்கப்பெற்றன மறைமலையடிகளார் முதலிய ஆவியுலகத்தான்றோர் திருவாணைப்படி நிகழ்ந்த இத திருமணங்கள் அவர்கள் கண்டுகளித்து வாழ்த்தும் சிறப்பினால் எல்லாவகையாலும மிக்க சிறப்பாகவே நடநதேறின. அன்பர்தம வாழ்த்துக்களும் பலவந்தன. அவ் வாழ்த்துகளுட் சில பின் தருதும்.

திரு டி. கே. சி. அவர்கள் ஆவிவடிவிலிருந்து அவர்தம் நெருங்கிய உறவினராகிய ஓர் அமமையாரைப் பொதுவராகக் கொண்டு சில செய்திகள் நிகழ்த்தி வருகின்றனர் அவை காணவும், கேட்கவும், கருதவும் பெருவியப்பினைத்தரும் புதுமை நிகழ்ச்சிகளாகக் காணப்படுகின்றன. அவற்றுட் சில வருமாறு: அவ்வம்மையாருக்கு வேண்டும்போதெல்லாம் வெண் பொன் நல்குதல், கடைக்கு அழைத்துச் செல்லுதல், வேண்டுமபொருள், இன்ன இடததிலிருக்கினற தெனவுணர்த்துதல், கடைக்காரன் இன்னவிலை சொல்லுவான், இன்னவிலைக்குக் கேட்டால் தநது விடுவான எனக கூறுதல், அங்ஙனமே பெறுவித்தல், குறைந்த தொகையை வரச்செய்தல், பணம் ஏதும் இல்லாதவிடத்து முழுப்பணமும் வரச்செய்தல் முதலியன இந நிகழ்ச்சிகள் ஒரு நாள் இருநாள் அல்ல, பன்னாளும் தொடர்நது நிகழ்ந்து வருகின்றன.

மேலும் திரு. டி. கே சி அவர்கள் இன்னின்ன உணவுப் பொருள்களை இன்னின்ன வகையாகச் சுவைபடச் சமைக்கக் கற்பித்துச் சமைத்தவுணவுகளை எல்லாருடனும் தமக்கொரு கலத்தில் படைககச்செய்து தாம் பிறர் காணுவண்ணம் உண்டு விடுகின்றனராம். இஃதோர் அரிய நிகழ்ச்சியாக விருப்பதென அனைவரும் மொழிகின்றனர் இவறறால் உலகில் கண்டதும் உண்டதும் அன்றிக் கருதும் நிகழ்ச்சிகளாகிய 'இறை உயிர் தளை'' என்னும் முப்பொருள் தன்மை இல்லையென்பார் இனி நூலளவானன்றிக் காட்சியளவானுங் கண்டு மெய்ம்மையோர்ந்து திருந்துவர் என்பதுறுதி.

மணமக்களை வாழ்த்தி அன்பறிவாற்றல்களால் சிறந்த ஆன்றோர் பலராலும அனுப்பப்பெற்ற வாழ்த்துப் பாக்களும், வாழ்த்துரைகளும், தொலைவரைவாகிய தந்திகளும் ஏறத்தாழ முந்நூற்றைம்பதுக்கு மேலிருக்கும். அவற்றுள் ஒரு சில பாக்களையும், ஒரு சிலர்தம் திருப்பெயர்களையும் அடியில் தருகின்றோம். அனைவர்கட்கும் மணவீட்டாரின் உளநிறைந்த அன்பும் நன்றியும் என்றென்றும் உரியவாகுக:

க. எங்கள் வயிர மணியம்மை
எழிலார் முத்துக் குமரரையே
பொங்கும் அன்பாற் றிருமணஞ்செய்
பொற்பார் கோலம தனைநினைந்தே
இங்கித் திருவார் தம்பதிகள்
எல்லாச் சுகமும் பெறவருள்செய்
துங்கப் பரங்குன றத்தலத்துச்
சுவாமீ! நீதான் எனத்தொழுவேன்.

உ. எங்கள் வயிர மணியம்மை
எழிலார் முத்துக் குமரரையே
அங்கு மணக்கும கோலந்தான்
அண்ணல் முத்துக் குமரதுரை
துங்க வயிர மணிமாலை
தோன்றப் பொலியும் கோலமதை
இங்கென் மனக்கண் தனிலெழுப்பி
இன்பப் பெருக்கை ஈந்திடுமே.

ராவ்பகதூர், தணிகைமணி,
வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம் ஏ.,

ஈ. திருவருள் இறைஎம் சிவபெரு மான்சேய்
திருப்பரங் குன்றமென் பதியில்
மருவுசீர் ஐயாத் துரைமட மதனில்
மணம்பெரு மங்கையர்க் கரசி
பொருவறு குணமார் தொலைபேசி
இயக்கு பூமான்கோ மதிநா யகவேள்
இருவரும் மனைவாழ் வின்பநல் ஏற்றும்
இருநிலத் தெய்திவா ழியவே.

பெருநாவலர், பு. சி. புன்னைவனநாத முதலியார்.

ச. முன்னுசோ மாஸ்கந்தர் முன்னருளால் இல்லறத்தே
மன்னு வயிரமணி மங்கையுடன்—தன்னிநலம்
முத்துக் குமார சுவாமிவேள் வாழ்ந்திடுக
உத்தம மக்கட்பே றுற்று.

காஞ்சிபுரம், ச. சிவஸ்வாமி தேசிகர்

ரு. முத்து வயிர முழுமணிகள் சேர்ந்தாற்போல்
முத்துக் குமாரவேள் மொய்தவத்தாய்!—முத்தமிழைப்
பேணுவார் தந்த வயிரமணி பெற்றனையால்
மாணுறநீ டூழிவாழ் வாய்

வித்துவான், அ. க. நவநீதகிருட்டிணன்

சூ. எங்கள் வயிரமணி முத்துக் குமரனையே
மங்களமா மாலையிட்டாள் மால்மருகா—செங்கமல
மாதருளும் செம்மையும் மன்னியிவர் நீடூழி
காதலுடன் வாழிநீ கா.

டாக்டர். இ. மு சுப்பிரமணிய பிள்ளை

எ. முத்துக் குமார சாமி வயிர மணியமையார்
ஒத்துக் கரண மூன்றும் ஊழி பலவாழி
வித்துத் தெளிக்க வேண்டா விருந்தின் மிகநுகர
நத்தித் தமிழ் மறைநூல் நயமும் நானிலத்தே.

பண்டித ஞா. தேவநேயப் பாவாணர்

மதுரை ஆதீனம்; சென்னை நிதியமைச்சர்; உயர்நீதிமன்ற நடுவர் வி. சுப்பிரமணிய நாடார்; டாக்டர் மு. வரதராசனர், கருமுத்து தியாகராசச் செட்டியார்; பொதுக்கல்வி இயக்குநர் நெ. து. சுந்தரவடிவேலு; ப. சுப்பராயன், எம். பி.; டாக்டர். பி. நடராசனர்; டாக்டர். அ. சிதம்பரநாதன் செட்டியார்; சென்னை நகராண்மைக் கழக ஆணையர், நா. சங்கரன், எம்.ஏ, எல்.டி.; சைவப்புலவர், டாக்டர். தி. இரா. அண்ணாமலைப் பிள்ளை; ஜே சிவ சண்முகம் பிள்ளை; தமிழ்ப்பேராசிரியர், லெ ப கரு. இராம நாதன்செட்டியார்; தமிழ்ப்பேராசிரியர், கோ. சுப்பிரமணிய பிள்ளை, பெரியசாமித்தூரன்; காஞ்சிநகர் ஆட்சி ஆணையாளர், இ. வே. சோமசுந்தரம், ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி முதல்வர். மு. ரா. பெருமாள் முதலியார்; ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி முதல்வர். எஸ். ஆறுமுக முதலியார்; நல். முருகேச முதலியார்; கிருபானந்தவாரியார்; பு. ஆ. முத்துக்கிருட்டிணன் முதலியோர்.

---

# தென்காசித் திருவேந்தன்

[இரா. இளையநம்பி]

## காட்சி க

[கரிவலம் வந்த நல்லூர் அந்தப் புரத்தில், வரதுங்க ராம பாண்டியரின் மனைவி சங்க இலக்கியச் சுவடிகள் சூழ, சில ஓலைச் சுவடிகளில் சிந்தை செலுத்தி அமர்ந்துள்ளாள். வரதுங்க ராமரும் புலவரும் வருகின்றனர்]

தோழி: வாழிஎம் பேரரசி! நம் தலைவர், வழுதியின் வழிவந்த வள்ளலார் வருகின்றார்கள்.

[அரசி எழுந்து நிற்கிறாள்]

வரதுங்கன்: கண்ணே! கரும்பனையாய்! அந்தப்புரமென்றால் அரங்கிலே அனுபவிக்க ஆடலுண்டு; பாயலிலே சுவைக்க பாடல் உண்டு; பூவையும், குயிலும் புரியாத இசைபாடும்; சோலைமலர்களில் சுந்தர வண்டுகள் பண்பாடும்; அன்னம் நடைபயிலும்; அழகுக்கிளி மொழிபயிலும்; கோலாட்டம், கும்மி, கோலப்பயிற்சிகள், கூறுணப் பலகோடி: இத் துணைக்கும் இடையே அரசியின்வாடல்; அதுபற்றிப் பாங் கியரிடம் எழும்ஊடல்; மன்னன் வருங்காலை மருவிடும் கூடல்! இதுதானே எங்கெங்கும் காணலாம்? ஆனால், அன்பே! ஆடலும் பாடலும் விழையாது, ஊடலும் கூட லும் உன்னாது,—பைந்தமிழ்ப் பாவாய்! பனை ஓலைச்சுவடி களின் இடையே உள்ளமும் புலனும் ஒருங்கே நிறுத்தி, உன் கருத்தை எல்லாம் பொருத்தி ஓயாது படிக்கின்றாயே, அவற்றுள் என்னதான் கண்டாய்?

தோழி: ஓலைச்சுவடிகளின் இடையே ஒளிந்திருக்கும் செல்லும், கறையானும் ஒருநூற்றுப் பதினைந்து என்று எண்ணி இருக் கின்றார்கள்..........

அரசி: போடி,..........

தோழி: வேறென்ன அரசி, ஏடுகளிலுள்ள கறையான் எண்ணு பவர்களைப்போல எப்பொழுதும் இவ்வோலைச் சுவடிகளோடு என்னதான் செய்கிறீர்களோ? பனையின் கள்தான் நினைவை இழப்பிக்கும்; மயக்கம் பயக்கும். பனையின் ஓலையுமா உங்கள் மனதை மயக்குகிறது?

அரசி : ஓலைதானடி நீ அறிவாய்! அதன் உட்பொருள் நான் அறிவேன். சிந்தாமணியின் சந்தம், சிலம்பின் புலம்பல், குண்டலகேசியின் குழைவு—இவற்றிலுள்ள இன்பவெள்ளத்தை எப்படியடீ நீயுணர்வாய்?

வரது : அதுமட்டுமா? அருமந்த கொழுந்தன் அதிவீரராமன் எழுதிய 'நைடதத்'தை யல்லவா இவள் படித்துக்கொண்டிருக்கிறாள்? 'நைடதம்' பயின்ற பலர், 'நைடதம் புலவர்க்கோர் ஔடதம்' என்றல்லவோ கூறியுள்ளனர்? அந்த நைடதத்தில் இவள் உள்ளம ஆழ்ந்துவிட்ட பொழுது உன் உரையாடலும் என்வருகையும எப்படி இவளுக்குப புரியும்?

அரசி : புரியாதடி புரியாது. புலவர், புரவலர், சிவநெறிச் செல்வர், சிந்தைக்கு இனிய அண்ணர் என்றெல்லாம் எண்ணி அருமநத இளவல் அதிவீரராம பாண்டியர் அன்போடு 'நைடதத்'தைக் கொண்டுவந்தால, 'அண்ணியிடம் மதிப்புரை வாங்கிக்கொள்' என்று மதிப்பாகக் கூறிவிட்டு இப்பொழுது என்னசொல்கிறார், பார்

வரது : அரசி, அதிவீரராமன் நூல்களைப்பற்றி அளவற்ற மதிப்புரைகள் அவனிடமே கூறிவிட்டேன். அதனால்தான் 'அண்ணியிடம் வாங்கிக்கொள்' என்று அனுப்பினேன். 'நைடதம்' முழுவதையும் படித்துப் பார்த்தாயா?

அரசி : பார்ப்பதென்ன? படித்தே முடித்துவிட்டேன் புலவர் பெருமான் அவர்களே! 'நைடதத்'தைப் பற்றிய தங்கள் கருத்தென்ன?

புலவர் : 'நைடத'த்தின் நயத்தை நாவால் உரைக்க இயலா. அருமையான மூலம்! அழகுத்தமிழ்! உயர்நடை! ஒப்பற்ற உவமை! உள்ளத்தை ஈர்க்கும் கருத்து!

அரசி : குணம் கூறினீர்கள். குற்றமொன்றும் தாங்கள் காணவில்லையா?

புலவர் : 'நைடத'த்தில் இல்லை. அதிவீரராமரின் நடத்தையில் இருக்கிறது.

அரசி : நடத்தையில் என்றால்?

புல : எழுதத்துடிக்கும் எழுத்தாளர்கள் எண்ண அலைகளின் விரைவால் ஏதேனும் தவறாக எழுதிவிட்டால், அனுபவமற்ற இளம்புலவர்கள் உணர்ச்சித் துடிப்பால் ஓரிரு குறைகளோடு கவிதைகளை உருவாக்கிவிட்டால், பிழைக்க

வழியற்றோர் பிழைப்புக்காக வாயில்வந்தபடி இலக்கண மற்ற பாமரநடையில் பாட்டுக்களைப் பாடிவிட்டால் அவர் களுக்கு அதிவீரராமர் அளிக்கும் பரிசுகள் எவை தெரியுமா?

அரசி: தெரியாது.

புல: தவறுள்ள சொற்களைத் தந்த தலையில் தன் கைநோகக் குட்டுவதாம். கொடுமையாக அல்லவோ உள்ளது?

அரசி: (சிரித்துக்கொண்டு) கொடுமை என்ன கொடுமை? குட்டுப்படினும் மோதிரக்கையா லன்றோ குட்டுப்படவேண்டும? அந்த நற்செயலை அதிவீரராமர் செய்வதுபற்றி அகமகிழ் கின்றேன்

வரது: குலைகுலைகளாய்க் கூந்தலைமுடித்து வெட்டக் கூத்தர் விளங்கியதைப்போல், குறும்பி அளவாகக் குடைந்து காதை எட்டினமட்டும் தரிக்க வில்லி விளங்கியதைப்போல் குட்டிக் கொடுமைசெய்ய அதிவீரராமன் விளங்குகிறானோ? புலவர் பெருமான் அவர்களே, குட்டிக்கொடுமை செய்வதாகத் தாங்கள் கூறுவது கொடுமையாகத் தோன்றவில்லை. குழநதைகளின் விளையாட்டைப்போல் தோன்றுகிறது.

புல: கொடுமையல்ல. குழந்தைச் செயலாகவே கூறுவோம். தென்காசித் திருக்கோமானா இந்தத் தீரச்செயல் ஆற்று வது? பிள்ளைகளின் விளையாட்டை ஒரு பேரரசனா செய் வது! பேதைமை பேதைமை! இந்தப் பிள்ளைப் பேதை மையை எண்ணியே “பிள்ளைப்பாண்டியன்” என்று பேசுகின் றனர் பலரும.

வரது: ஆம். உண்மை. [அரசியை நோக்கி] பைந்தமிழ்ப் பாவாய்! பண்பட்ட அறிவில் மிக்கவனதான் அதிவீர ராமன். குயிலே! கோமளமே!....ஆனாலும் கொழுந்தனின் புலமையிலும குறையிருக்கத்தான் செய்கிறது.

புல: ஆம். அதிவீரராமருக்கு ஆணவம் வளர ஆரம்பித்து விட்டது.

வரது: அஃதிருக்கட்டும். ‘நைடத’த்தைப் பற்றி உன்மதிப்புரை என்னவோ?

அரசி: உங்கள் கருத்து..........

வர: தென்காசி வேந்தனுக்கு என் ஆசி என்றுமே உண்டு; உன் மதிப்புரையைச் சொல்.

அரசி : திறனாய்ந்து தெளிந்த—வெல்லும் சொல்லில்லா விவேக மிக்க சொற்களாக—இதோ என்மதிப்புரையை ஏட்டில் எழுதி இன்றே அனுப்புகின்றேன்.

[ஏட்டில் எழுதுகின்றாள்]

## காட்சி ௨

[தென்காசி அரண்மனை அரசப் பேரவை. கட்டியங்காரன் வருதல்]

கட் : சேரன், செம்பியன், ஈழன், இராட்டிரகூடன் எனும் பல மன்னரை வென்று புகழ்கொண்ட வீராதிவீரன்—வாகை, வஞ்சி, தாய்நல் உழிஞை, தும்பை, வெட்சி மலரொடு வேம்பணி மாலையன்—குடிதழீஇக் கோல் ஓச்சி, அடிதொழும் பகைவரை அஞ்சேல் என்று அருளும் அறநெறிபிழையா அரசருள் ஏறு—வடமொழி தென்மொழி ஆயிருகடலும் ஆய்ந்துணர்ந்தறிந்த அறிவானுயர்ந்த புலவன்—குற்றாலத்து அருவி என அந்நாட்டு மன்னனாய் வற்றாத கவிபொழியும் புவிராச சேகரன்—'நைடதம்' தந்த நற்றமிழ் அண்ணல்—தண்டமிழ்ப் புலவரெனத் தகுதி அற்ற மொழிபொழியும் போலிப் புலவர் தம் புன்தலைகள் பொடிப்பொடியாகக் குட்டிப் புடைக்கும கோவுள்கோ—குலசேகரன்—குணசேகரன்—கவிபுவி அரசு—முத்தமிழ்ப் புலவருக்கு முத்தும் மணியும் ஒத்து உவமை இலா உயர்நிதி, பெருநிலம், வாரிவழங்கும் வள்ளலுள்வள்ளல்—வல்லபதேவன்—மங்கையர் மனங்கவரும் திங்கள் குலதிலகம்—தென்காசித் திருக்கோமான் அதிவீரராம பாண்டியர் வருகிறார்! அதிவீரராம பாண்டியர் வருகிறார்!! அதிவீரராம பாண்டியர் வருகிறார்!!!

அவையினர் : [எழுந்து] அதிவீரராம பாண்டியர் வாழ்க! வாழ்க!

[அதிவீரராமபாண்டியன் வருதல்]

அதி : வாழ்த்தும், வரவேற்பும் தந்த அவையினருக்கு என்நன்றியும் மகிழ்வும்

[வணங்கி அமர்கிறான்.]

அமைச்சர் : நம் மன்னர்பிரான் முதற்கண் போலிப் புலவர்கட்குத் தண்டனையும் நற்புலவர்களுக்குப் பரிசில்களும் நல்குவார்.

அதி : நேற்றுவந்த கவிகள், முழுவதையும் ஆராய்ந்தேன். குசக்கண்ணன் பாடியவை சொற்சுவை, பொருட்சுவை ஒன்றுமே இல்லாதவை. தீம்பாலன் பாடியவைகளோ

வயிற்றுப் பிழைப்புக்காகப் பாடப்பட்டவை. வடசொற்கள் மிகுதியாகவுள்ளன. இன்தமிழ்ச் சொற்கள் இருக்க, ஏன் பிறமொழிச் சொற்கள்? அழகன் பாடியவைகளுள் இழிந்த கொச்சைச் சொற்கள் காணப்படுகின்றன. மூவரும் இங்குவந்து நிற்பார்களாக!

[மூவரும் வந்துநிற்க மூவரையும் குட்டுதல். அவையினர் சிரித்தல்.]

இத்தகைய கயமைமிக்க கவிகளை எழுதாதீர்கள். அவை தமிழகத்தே இழுக்கு. இறுதியாக நல்நந்தனார் பாடியவை நற்கவிகள். அவருக்கு நவமணிகள் கொண்ட கிழி பரிசாகத் தருகின்றேன். இத்தகைய நற்கவிகள் தமிழன்னையின் திருவடிகட்கு நனமலர்கள் ஆகுக.

[நல்நந்தனா பரிசுபெறுகிறார். ஒருதூதுவன் வருகின்ன்.]

தூது : வையகம் ஏத்தும் வரதுங்க பாண்டியரின் அரண்மனைத் தூதுவன் அடியேன். தென்காசித் திருவேந்தா அதிவீர ராம பாண்டியரின் திருமுன்பு சேர்ப்பிக்குமாறு அவர்கள் அண்ணியார், எங்கள் பேரரசியார் தந்தருளிய திருமுகம் இது.

[அதிவீரராமனிடம் தருதல்.]

அதி : அண்ணனார் அவர்கள் திருவடிகட்கும் அண்ணியார் அவர்களின் திருமுன்பிற்கும் எனதாழ்ந்த வணக்கங்கள் உரியதாகுக. இதை அவர்களிடம் கூறுக.

[தூதுவன் போகிறான்.]

(தொடரும்)

---

## தமிழ்நாடு உறுவோம்

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

தமிழே உலகின் தலைமொழியாம்
தளரா மொழியும் அதுவேயாம்
அமிழ்தே போன்ற செம்மொழியாம்
அன்பின் பிழிவும் அதுவேயாம்
கமழ்தேன் போன்ற சுவைமொழியாம
கனியின் சாறும் அஃதேயாம்
தமிழே ஆட்சி தருமொழியாம்
தமிழ்நா டுறுவது மஃதேயாம்.

---

# எழுந்திடடா, என்தோழா !

[ஆங்கில மூலம்: வில்லியம வொர்ட்ஸ்வொர்த்*
தமிழாக்கம்: திரு. கு. பரமசிவன், எம். ஏ ]

எழுந்திடடா என்தோழா ! ஏட்டைக் கட்டு;
இல்லையேல் இளமையிலே மூதியோ னவாய்.
எழுந்திட டா என்தோழா ! ஏட்டை வீசு;
ஏனிந்த உழைப்புக்கள், தொல்லை யெல்லாம்? (க)

அடைகின்ற ஞாயிறுமலை முகட்டி னின்றும்
அகன்றபசும் வயல்களி னூடே யெல்லாம்
படைக்கின்றான் இனியபொன் னொளியை ! ஆஆ !
பார்ப்போரைப் புதுப்பிக்கும் தகத்த காயம் ! (உ)

ஏடுகளவை சோர்வூட்டும்: ஒழியாப் பூசல் !
எழுந்துவாராய் ! சோலைக்குயில் இசைப்பக் கேளாய் !
பீடுடையின் னிசையிதென் உயிர்மீ தாணை:
பெறலாகும் அறிவிதனால் பெரிதும் உண்டு. (ங)

எத்துணைக்களி வெறியுடனே இசைக்கும் புட்கள் !
இவைசிறிதும் ஆசாற்குச் சளைத்த அல்ல
இத்துணைய பொருளொளியை நேரிற் காண்பாய் !
இயற்கைதனை ஆசானாய் ஏற்றுக் கொள்வாய் ! (ச)

உடல்நலத்தால் உயிர்ப்புடைய, இயல்பாம் ஒட்பம்;
உளமகிழ்வால் உயிர்ப்புடைய வாய்மை; மற்றும்
தடச்செல்வ வுலகுண்டவ் வியற்கை தன்பால்;
தருவள்நம் உள்ளமொடு மனமும் துள்ள. (ரு)

முனிவர்பல ரிடத்தும்நீ கற்ற லாகா
மூதொழுக்க நலத்தினொடும இழுக்கத் தீங்கும்
மனிதர்தம் இயல்புகளும விரிவாய்க கற்பாய்:
வேனில்வனத் தெழுநதிடுமோர் உணர்வா லன்றே! (சு)

இயற்கைதரும் புலமைமிக இனிய தாகும் !
எவற்றிலுமே தலையிட்டு நமதுசொந்தச்
செயற்கையறி வெழில்நலத்தைக் குலைத்தல் செய்யும்;
சிதைத்தறியக் கொலைகள்பல செய்து மன்றே? (எ)

அறிவியலும் கலையறிவும் போதும், போதும் !
அம்மலட்டு நூலெல்லாம் மூடித் தள்ளு.
அறிவதற்கும் பெறுவதற்கும் ஆற்ற லுள்ள
அகத்துடனே எழுந்திங்கு முன்னே வாராய். (அ)

* William wordsworth—Up! Up! My Friend!

# சாவகத் தீவில் இந்து சமயம்

[கோவைகிழார், C. M. இராமச்சந்திரன் செட்டியார்,
B. A., B. L., F. R. G. S.]

(செல்வி சிலம்பு ௩௩, பரல் ௧௦, ௪௬௪-ஆம் பக்கத் தொடர்ச்சி)

ஒவ்வொரு அடுக்குக்கும் செல்வதற்குக் கற்படிகள் உண்டு. நான்கு திக்குகளிலும் நானகு வாயில்கள் உண்டு. அவ்வாயிலின் வழியாக மேல் ஏறினல் ஓர் அற்புதமான வளைவு எதிரே தோன்றும். அவ்வளைவு பூமாலைபோலக் கல்லால் சித்திரிக்கப்பட்டிருக்கும். இந் நாட்டில் மழை மிகுதியாகப் பெய்வதால் கற்கள் பாசமபிடித்திருக்கும். ஆண்டுதோறும் பாசங்களைச் சுத்தப் படுதத வேண்டி இருக்கின்றது.

**சிற்பங்கள்**

முதல் அடுககு ஏறினதும் புத்தருடைய வாழ்க்கை வரலாறு கருங்கல்லில் தீட்டப்பட்டிருப்பதைக் காணலாம். அவற்றில் நூற்றுக்கணக்கான காட்சிகள் கண்முன் தோன்றும். புத்தருடைய பிறப்பு முதல் மகாநிர்வாணம வரை நடந்த சரிதையை இக்கல சிற்பங்களே ஒரு காவியமாகக் கூறுகின்றன. புத்தருடைய தாயார் மாயாதேவி ஓர் அழகிய யானையைக் கனவில் காண்கிறுள அவளுடைய தோழிகள் அவள் கைகால்களைத் தடவுகிறார்கள். இக் காட்சியே அவள் ஒரு திவ்வியக் குழவியைப் பெறப்போகிறுள் என்று காட்டுமாம். உருவங்களெல்லாம் உயிருள்ள அளவைகள் கொண்டவை. இரண்டாம் பகுதியில் புத்தருடைய அவதாரத்தைக் காண்கிறேம். தோழிகள் அரசிக்குத் தொண்டு செய்கிறார்கள். பிறந்த குழந்தை 7 தாமரை மலர்களின் மீது நடக்கிறுன் சுற்றிலும் தேவர்கள் இதனைக் கண்டு மெச்சுகிறார்கள். இதுமுதல் வெள்ளரசு மரத் தின்கீழ் வீற்றிருந்து பேரறிவு பெறும் வரையில் உள்ள வரலாறு முழுவதும் தீட்டப்பட்டிருக்கின்றன.

இரண்டாவது, மூன்றுவது அடுக்குகளின்மேல் ஏறினல் 2000-க்கும் மேலான சிற்பங்களைக் காணலாம். மனித வடிவங் களேயன்றி செடி கொடி மரங்கள், பறவை விலஙகு யானை சிங்கம முதலியவை தீட்டப்பெற்றுள்ளன. மூலை முடுக்குகளில் எல்லாம புத்த உருவங்கள் வைக்கப்பட்டுள்ளன. அங்கே 505 புத்தர்கள் இருந்தனராம். மேலும் சென்றுல் புனித பாவனைகள் கணக்கற் றிருப்பதைப் பார்க்கலாம். அறிவாராய்ச்சி, வரம் தருதல்,

அமைதியுள்ளம், கொள்கையுபதேசம், தியானம், உலகச் சான்று முதலான பல நிலைகளையும் காட்டுவிக்கும் திருவுருவங்கள் அங்கங்கே இருக்கின்றன. மேலடுக்கில் 72 தூபிகள் அமர்ந் திருக்கும புத்தர்கள் மக்களுக்கு அருளபுரியும் பாவனையில், வீற்றிருக்கிறார்கள். ஒரு புதத வடிவம 'அதிர்ஷ்ட புத்தா' என்ற பெயரால் வழஙகப்படுகிறார். அதைத் தொட்ட மாத்தி ரத்தில் கோரிக்கைகள் நிறைவேறுமாம். உச்சியில் இருக்கும் தூபியின் சிகரம் சிறிது பழுதுபட்டிருக்கின்றது. காரணம் தெரியவில்லை. மெராபி எரிமலை வெடித்ததால் உண்டாகி இருக்கலாம்.

சமயம் அன்பு மயமாய் இருந்தபோது எங்கும் நலமே பரவி இருந்தது அது மூடத்தனத்தில் புகுந்தபோது தீமை ஏற்பட்டது. அத் தீமையை எடுத்துக் காட்டவே எரிமலை வெடிததது போலும் உலகில் தீமையதிகரிக்க இப் பெரிய புனித தூபி பாழ் அடையதொடங்கிற்று. தற்போது அரசிய லார்கள் தூபியை முன்னிருந்தபடி செய்ய முயற்சிதது வருகி றார்கள். ஆனால், இதுவரை அந்த வேலை நிதானமாகவே செல்லு கின்றது.

## கம்போடியாக் கோயில்கள்

### 1. அங்கோர்வாட் கோயில்

இந்தியாவிற்கும் சீனாவிற்கும் இடையில் உள்ள தீபகற்பம் இந்து சீனா என்ற பெயரில் வழங்குகிறது. அதில் பல நாடு களும், மொழிகளும் இருக்கின்றன பர்மாவில் பர்மிய மொழியும், சீயத்தில் சீயமொழியும், கம்போடியாவில் கமபோடிய மொழி யும, அன்னாமில் அன்னாமிய மொழியும், மலேயாவில் மலேய மொழியும் பேசப்படுகின்றன. இவையே தவிர இடையிடையே சிறுசிறு பகுதிகளும் அவைகளில் வெவ்வேறு மொழிகளும் பேசப்படுகின்றன. இவைகளில் கம்போடியா என்பது சீயத் திற்கும் அன்னாமுக்கும் இடையில் உள்ளது. இந்தப் பிரதேசங் கள் எல்லாவற்றிலும் தற்போது புத்தமதம் பரவி இருக்கின்றது. ஆனால், 1000 ஆண்டுகளுக்குமுன் இந்நாடுகளில் இந்துமதம் சிறபபாகப் பரவி இருந்தது. அநதச் சின்னங்கள் நிரம்பக் காண லாம். மக்கள் பேர்கள் மட்டும் இன்றி ஊர்களின் பேர்களும்கூட இந்தியத் தொடர்பு கொண்டிருக்கின்றன. இந்தோ சீனா நாடு களில சீயமும கம்போடியாவும் இந்திய நாகரிகத்தால் சிறப் படைந்திருக்கின்றன. மக்களுடைய பழக்க வழக்கங்களில் இந்து சமயக் கொள்கைகள் நிரம்பக் காண்கிறோம். இதைத்

தவிர இந்துக்கள் கட்டிய கோயில்கள் அவர்கள் தொடர்பை நிரூபிக்கும் சான்றுகளாக இருக்கின்றன.

இந்து - சீன துறைமுகமாகிய சைகோனை விட்டு மேற்கே 350 மைல் சென்றால் அங்கோர் கோயில்களைப் பார்க்கலாம். வழிநெடுக இரப்பர்த் தோட்டங்களும், சிற்றூர்களும் நிரம்பிக் கிடக்கும். ஒவ்வோர் ஊரிலும் நீலநிறம் பூசிய புத்தர் ஆலயங்களைப் பார்க்கலாம். நஞ்சை நிலங்களில் எருமைகளைக் கொண்டு ஏர் உழுவார்கள். கணக்கற்ற நீரோடைகளைக் கடந்து செல்ல வேண்டும். இடையில் மீகாங் என்ற ஒரு பெருநதியைக் கடக்க வேண்டும். அதைக் கடந்ததும் வழி படர்ந்தகாடுகளின் வழியாகச் செல்லுகின்றது. மரங்கள் ஆகாயத்தை பளாவி நிற்கின்றன. எங்குப் பார்த்தாலும் குரங்குகள் மரங்களில தாவி ஓடுகின்றன. அழகிய தோகைகள் கொண்ட பறவைகள் விளையாடிக்கொண்டிருக்கின்றன. திடீரென்று காட்டுயானைகள் மரஙகளை உடைத்துக்கொண்டு செல்லும். சில சமயஙகளில் புலிகளையும பார்க்கலாம். இப்படிப்பட்ட அடர்நத வனஙகளின் இடையில் மிகப் பெருமை கொண்ட கோயில்கள் இருக்குமா என்று ஐயபபடுவோம. ஆனால், உண்மையில் மனிதன செல்ல முடியாத வனஙகளுக்கு இடையில்தான் அங்கோர் கோயில்கள் அமைந்திருக்கின்றன. தற்போதும்கூட இக்கோயில்களின் அருகிலே பரதநாட்டியம் ஆடப்படுகின்றது. இரவில் நடத்தும் அவ்வாட்டம மிக மனோரம்மியமாக இருக்கும்.

கோயில் அமைதி

அங்கோர்வாட் என்ற இந்துக்கோயில் சுமார் 1000 ஆண்டுகட்கு முந்திக் கட்டப்பட்டதாம். 2 நூற்றாண்டுகள் வரை சிறப்புடன் பாராட்டப் பெற்றதாம். ஆனால் சென்ற 800 ஆணடுகளாக அக் கோயிலை அந்நாட்டு மக்கள் மறந்துவிட்டார்கள். காரணம் தெரியவில்லை. கி. பி. 1860 இல் தான் ஒரு பிரெஞ்சு உயிர்நூல் நிபுணன் இந்த வனாந்தரங்களின் வழியாகப் பொருள்களைச் சேகரிககச் சென்றபோது இநதக் கோயிலைக் கண்டுபிடித்தான். எகிப்து செய்குன்றுகள, சீனப்பெருமதில், அமெரிக்கா ஆகாய வீடுகள் இவைகளெல்லாவற்றிற்கும மீறின வேலைப்பாடுகள் கொண்ட அங்கோர்வாட் கோயிலைக் கண்டவுடன் அவன் அடைந்த வியப்புக்கு அளவில்லை. அதன்பிறகு ஆயிரக் கணக்கான பேர்கள் அக்கோயிலைப் பார்க்கச் சென்ற வண்ணமாக இருக்கிறார்கள்.

கோயிலானது அடிமட்டத்தில் ½ மைல் நீளமும் அகலமும் உள்ள ஒரு சதுரக் கட்டிடம். அதனைச் சுற்றிலும் ஒரு பெரிய அகழி இருக்கின்றது. அடி மட்டத்தின்மேல் அடுககுகளாகப்

பிரகாரங்களும் மதில்களும் இருக்கின்றன. அவைகளில் கணக்கற்ற மண்டபங்கள் கட்டப்பட்டுள்ளன. உச்சியில் உள்ள அடுக்கில் சிறுசிறு கோபுரங்கள் நூற்றுக்கணக்காக இருக்கின்றன. எல்லாவற்றிற்கும் மேல் முகடாக 5 பெரிய விமானங்கள் இருக்கின்றன. மதில்களும் கோபுரங்களும் கருங்கல்லால் ஆக்கப்பட்டு இந்தியப் புராண வரலாறுகள் இழைக்கப்பட்டுள்ளன. அவைகளில் பல விளங்காத அடையாளங்களைக் கொண்டிருக்கின்றன.

கோயிலில் எது எடுத்தாலும் அளவுக்கு மீறிய பருமன் காணப்படுகின்றது. ஒவ்வொன்றிலும் நுட்பமான வேலைப்பாடுகள் காணலாம். மரம் செடி கொடிகள் அவைகளில் உள்ள இலைகள் இழைக்கப்பட்டிருப்பதில் இலை நரம்புகளும்கூடத் தொட்டு அறியலாம் மனிதனுடைய உருவம் இயற்கை மனிதனைப்போல் அளவும் கொண்டிருக்கும். தலையில் மயிரும்கூடப் பிரித்துக் காணப்படும் முறையில் வேலைப்பாடு அமைந்திருக்கின்றது. சிற்பியினுடைய அறிவும் ஆற்றலும் எளிதில் அளவிட முடியாது. மதில்களில் ஆயிரக்கணக்கான உருவங்கள் சித்திரிக்கப்பட்டிருப்பதில் விலங்குகள் தேவர்கள் பூதங்கள் இவைகளின் உருவங்கள் பயங்கரமாகவும் இருக்கின்றன. நாளாவட்டத்தில் பல சிற்பங்கள் அழிந்துபோயின. காட்டுக் கொடிகளும், மரத்து வேர்களும் பாசிகளும பலவிடங்களில் பிளவுகளை ஏற்படுத்திக் கட்டிடங்களை நாசம் செய்திருக்கின்றன. இப்படிப்பட்ட அழிமானங்கள் பலவிடங்களில் கண்டபோதிலும் அக்கோயிலின் பெருமையை அவர்கள் முற்றும அழித்துவிடவில்லை உலகத்திலேயே மனிதனால் செய்யப்பட்ட வேலைகளிலே அங்கோர் கோயிலானது மிகச் சிறந்தது என்று கூறினால் அது மிகையன்று.

இந்த அங்கோர் கோயில் ஒன்றுமட்டுமா இந்நாட்டில் உள்ளது? அந்நாளில் இருந்த இந்து சமயத்தினர் தாங்கள் தொழுவதற்காக 20 பெரும கோயில்களைக் கட்டினார்கள். அவைகளில் அங்கோர் என்பது ஒன்றுதான். காலத்தின் கோலம் என்ன என்று சொல்வது? அதறகு அழிக்கும் ஆற்றல் உருத்திரனிலும் கொடிய தெனலாம். கம்போடியாவில் இந்து மதத்தினர் கட்டிய 20 கோயில்களும் கொடிய வனங்களில் அகப்பட்டுக்கொண்டு பயனற்றுக் கிடக்கின்றன. வழிபாடு இல்லை என்ற ஒன்றைத்தவிர பழைய பெருமை உள்ளவாறு இருக்கின்றது.

இந்தக் கோயில்களைக் கட்டினவர்கள் எங்கே? அவர்கள் வாழ்ந்த நகரங்கள் எங்கே? அவைகள் எப்படி அழிவுற்றன?

இவைகளைப்பற்றி விவரம் சொல்லுவாரில்லை. வேறு நாடுகளில் ஊர்களும் கோயில்களும் அழிந்து போனாற்போல் கம்போடியாவிலும் அழிந்தன. சின்னங்கள் முழுவதும் மறைந்து போகாத வண்ணம் தற்போதைய அரசியலார்கள் வாயிற் காப்போர்களை வைத்துக் காப்பாற்றி வருகிறார்கள்.

மனிதன் மகத்தான வேலை செய்கிறான். அவன் இறந்து மண்ணாய்ப் போன பிறகும் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வரை அவைகள் நிலைநிற்க வேண்டும என்ற எண்ணம் அவன் ஏன் கொண்டான்? இதற்குத் தக்க விடை கூறுவார் இல்லை. உலகில் உள்ள சிறந்த கட்டிடங்களான எகிப்து செய்குன்று, ஐப்பானிய இயோடோ கோயில், மஞ்சூரியா ஜோஹோல் அரண்மனை, சீனா பீகிங் மண்டபம், இவைகளைப் பார்த்தபோதெல்லாம் இந்த எண்ணம்தான் தோன்றும்.

தற்போதும் மனிதன் கோயில்களைக் கட்டுகின்றான். ஒரு கடவுளுக்கோ பல தேவதைகளுக்கோ கட்டுகின்றான். தான் வாழுகிற வாழ்க்கைக்கு மட்டும் கட்டுகிறானா? இல்லை. தான் ஏழையாய்ப் போனாலும் பிறர் வழிபாடு செய்யவும் கட்டுகிறான். கோயிலைக் கட்டுவதில் மனிதனுடைய பெரும் நோக்கம் என்னவென்றால் அது அழியாமல் நிரந்தரமாக இருக்கவேண்டும் என்பதுதான். நீரின் குமிழிபோல் அவன் ஒருநாள் இறந்து மறைவான் என்பது அவனுக்குத் தெரியும். ஆனால், அவனுடைய பெரும்நோக்கம் என்னவெனில் சிரஞ்சீவியாக இருக்க வேண்டும் என்பதுதான் தான் இருக்கமுடியாமல் போன போதிலும தான் செய்த வேலைக்கு அமரத்துவம் கொடுக்கின்றான். அந்த எண்ணத்தில் அவனுக்கு நம்பிக்கை உண்டு. அங்கோர்வாட் கோயிலின் பெருதத அளவைகளைப் பார்க்கும் போது இவைகளைக்கட்ட நூறாயிரக் கணக்கான தேர்ந்த சிற்பிகள் வேண்டி இருந்திருக்குமென்றறியலாம். இப்படி இந்த நாட்டிலே 20 கோயில்கள் கட்டப்பட்டு இருந்தால் அந்தக் காலத்து அரசர்கள் என்ன முறையிலே ஆட்களைச் சேர்த்தினார்கள்? வேலையை வாங்கினார்கள்? மேற்பார்வை பார்த்தார்கள்? உணவு முதலிய வசதிகளைத் தேடிக் கொடுத்தார்கள்? இவைகளுக்காகப் பணத்தை எவ்வாறு சேகரித்தார்கள்? இவைகளை எண்ணும் போது நமது மூளை வெடித்துவிடும் போலிருக்கிறது.

**மற்ற கோயில்கள்**

30 மைல் சுற்றளவில் பல கோயில்களைக் காணலாம். அங்கோர்வாட் என்ற கோயிலைவிட்டுச் சில மைல்கள் சென்றால் அங்கோர்தோம் என்ற மற்றொரு கோயிலை அடையலாம். இது

முந்திய கோயிலைவிட நான்கு மடங்கு பெரியது. ஆகவே அதன் பெருமையை அளக்க முடியுமா? மீண்டும் சென்றால், க்ரஹ் நான் என்ற கோயிலையும் நீக்பீன் என்ற கோயிலையும் காணலாம். பிறகு பண்டேசரை என்ற கோயிலுக்கும் செல்லலாம். இவைகளை யாரால் கட்டப்பட்டன? அவர்களின் சரித்திரம் எது? என்பன விடையிடமுடியாத கேள்விகள்.

கம்போடியா நாட்டில் 1000 ஆண்டுகளுக்குமுன் கைமர் என்ற ஒரு வகுப்பார் இருந்தனர். அவர்கள் நாகரிகத்தில் சிறந்து விளங்கினார்கள். அவர்கள்தாம் இந்தக் கோயில்களைக் கட்டினார்கள். ஆனால் அவர்கள் ஏன் விரைவில் அழிந்தார்கள் என்பதற்குத் தக்க காரணம் அறிய முடியவில்லை தக்க ஆராய்ச்சி செய்யும்போதுதான் உண்மைச் சரிதம் விளங்கும். தற்போதைய அரசியல் இதனை முயற்சிக்கவேண்டும்.

1000 ஆண்டுகட்கு முந்தி இந்து மதத்தைத் தழுவிய கம்போடியர்கள் தற்போது பௌத்தர்களாக இருக்கின்றனர். தற்போதைய பௌத்த கம்போடியர்கள் சிற்பத்தில் சிறந்தவர்களாகத் தெரியவில்லை அங்கோர் வாட் என்ற கோயிலுக்கருகில் ஒருசிறு பௌத்தக் கோயில் தற்போது கட்டப்பட்டுள்ளது. அதில் பௌத்த பிட்சுக்களும் சீடர்களும் இருந்துகொண்டு வழிபாடு செய்கிறார்கள். அடிக்கடி பௌத்தத் திருவிழாக்களை அவர்கள் நடத்துவதுண்டு. இந்த ஆலயத்திலுள்ள ஆண்--பெண் உருவங்களைப்போலத் தற்காலக் கம்போடியர்கள் ஆலயத்திற்கு முன் உள்ள முற்றத்தில் நாட்டியமாடுகின்றார்கள். அந்த வேடிக்கைகளைப் பார்க்கும்போது தற்கால மக்களின் நிலை எங்கே, பண்டைக்கால இந்து நாகரிகத்தின் மேன்மை எங்கே என்று வியக்கவேண்டி இருக்கின்றது. இந்த வேற்றுமைப்பாடு ஒன்றே போதும் பண்டைய இந்துக்கோயில்களின் மேன்மையை எடுத்துக் காட்டுவதற்கு. முன் செல்லுகிறோமா, பின்னடைகிறோமா என்பது விடைதரமுடியாத கேள்வி. இந்து மக்கள் மிகத்தொலைவில் இருக்கும்படியான கம்போடிய நாட்டிற்கு வந்து மக்களை இந்து சமயத்திற்குச் சேர்த்தி இந்திய அரச வம்சத்தையும் ஏற்படுத்தி அவர்களைக் கொண்டு 20 பெரும் ஆலயங்களை வியக்கத்தக்க முறையில் இயற்றினார்களென்றால் அச் சரித வரலாறு எவ்வாறு மறைந்ததோ தெரியவில்லை. அதனை ஆராய்ச்சி செய்ய நமது வரலாற்று ஆசிரியர்கள் ஏன் முற்படவில்லையோ? அதையும் அறியக்கூடவில்லை.

---

# திருவள்ளுவர் சமணரா ?

[திரு. A. பாலசுந்தர குருக்கள்]

(செல்வி சிலம்பு ௩௩, பால் ௧௦, ௪௯௮-ஆம் பக்கத்தொடர்ச்சி)

தேனும் திருவள்ளுவரும்: சைன தரும நூல்கள், மது (தேன்) மாமிசம (புலால) மாத்தியம் (கள் முதலிய போதப் பொருள்) ஆகியவை முற்றும உண்ணத்தகாதன எனக் கூறி அவற்றை விலக்குகின்றன. இவ் விலக்குச் சிராவகராகிய சைன இல்லறத்தார்க் குணர்த்தியது. இவை யுண்ணாமையே சீலம் என்று கூறப்படுகின்றது.

> 'ஒழுக்கமே யன்றித்தஙக ளுள்ளுணர் வழிக்கு மட்டும்
> புழுப்பயில் தேனு மன்றிப் பிறவற்றின் புண்ணு மாந்தி
> விழுப்பயன் இழக்கு மாந்தர் வெறுவிலங கென்று மிககாா
> பழித்தன வொழித்தல் சீலம் பார்மிசை யவர்கட் கென்றான்.'

என்ற சிந்தாமணிச் செய்யுளாலும்,

> 'கரும்பிற் றொடுத்த பெருந்தேன் சிதைந்து
> சுரும்புசூழப் பொய்கைத தாநீர் கலககும்
> அடஙகா வேட்கையி னறிவஞர் எய்திக்
> குடஙகையி னெண்டு கொளளவுங கூடும்.'

என்ற கவுந்தியடிகளின் கூற்றாலும் தேன், புலால், கள் ஆகிய மூன்றும் உண்ணாமையே சைன தருமத்தின் சீலம் என்பதும், இவற்றுள் ஒன்றையுண்டல் இல்லறத்தாருக்கும் சீலமாகாதென் பதும் பெறறாம. சைன தருமம் சீலத்தையே அடிப்படையாகக் கொண்டது என்பர் இவ்வாறு இருக்க வள்ளுவர் பெருமான் 'பாலொடு தேன்கலந் தறறே பணிமொழி, வாலெயி றூறிய நீர்' என்று கூறுகின்றார் திருவள்ளுவர் எந்த நிலையில் நின்று இவ்வாறு கூறுகினறார் என்பதை அறிஞர்கள் உணர்வார்கள. இதனல், வள்ளுவர், பாலையுந் தேனையும் சுவைததுண்டவர் என்பதும், தேனுண்டல் சீலத்துக்கு மாறாகாதென்ற கொள்கை யினர் என்பதும் போதரும் அவர் சமணராக இருந்திருப்பின் 'தேனுண்ணாமை' என்றோர் அதிகாரத்தையே விரித்திருப்பார். இல்லாவிடின், 'பாலொடு தேன்கலந் தற்றே' என்று கூறாமல் வேறொன்றாலும் கூறியிருப்பார்.

சைன தருமமாகிய நிகண்ட வாதம் காட்சி, ஞானம், ஒழுக்கம் ஆகிய மூன்றையும் அடிப்படையாகக் கொண்டது.

சைன நூல்கள் இவற்றையே முறைப்படுத்திக் கூறுகின்றன. திருக்குறள் அறம், பொருள் இன்பம் என்ற முறையை வலி யுறுத்துகின்றது. இவற்றையெல்லாம் ஆராய்வோருக்கு உண்மை வெளியாகும்.

வேத, வேள்வி : நான்மறையாம் வேதத்தையும் வேள்வி யையும் ஒப்புக்கொள்ளாதவர்கள் சைனர்கள். இதனை "வேத வேள்வியை நிந்தனை செய்துழல்" என்றும், "அந்தணாளர் புரியும் அருமறை சிந்தை செய்யா அருகர்" என்றும் வரும் ஞான சம்பந்தர் தேவாரத்தால் உணரலாம். திருவள்ளுவர், 'தென் புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு ஐம்புலத் தாறு ஓம்பல் தலை' என்ற குறளில் தெய்வத்தையும் அத் தெய் வத்தை ஓம்புதல் இல்வாழ்வானுக்குத் தலையாய அறம் என்ப தையும் கூறுகின்றார். செவியுணவின் கேள்வியுடையார் அவி யுணவின் ஆன்றாரோ டொப்பர் நிலத்து' என்ற குறளில் தேவர் தாமும் அவியுணவினை யுடையவர்கள் என்று கூறுகின்றார். எனவே தெய்வத்தை யோம்புவோர் அவியுணவினை வேள்வி வாயிலாக அளித்தல் வேண்டும என்பதே வளளுவர் கொண்ட முடிபாம். 'அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை நன்று' என்ற குறளால் வேள்வி என்பது தேவரை நோக்கி அவிசொரிநது ஆற்றுவது என்பதைக் கூறு கின்றார். வேள்விப் பயனைக் கூறியே விருந்தோமபலின் பயனைச் சிறபபிக்கின்றார் என்பதை 'இனைத்துணைத்து என்ப தொன்றில்லை விருந்தின், துணைத்துணை வேள்விப் பயன்' என்ற குறளால் அறியலாம. இக் குறள்களையும, 'மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான், பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்' என்ற குறளையும் நடுநிலைநின்று நோக்குவோர்க்கு வள்ளுவர் பெருமான் வேதவேள்விக்குப் பகைவர் அல்லர் என்பது விளங்கும். வள்ளுவர் பெருமான் இவற்றையெல்லாம் பிறன் கோட் கூறலாகவோ அன்றி மறுத்தல் என்னும் மதம் பற்றியோ கூறினார் எனறு கூறல் பொருந்துமா ? 'பரிந்தோம்பிப் பற்றற் றேம் என்பர் விருந்தோம்பி வேள்வி தலைப்படாதார்' என்று வள்ளுவர் விருந்தோம்பலையும் வேள்வி எனக் கூறலால் 'தென் புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு, ஐம்புலத் தாறோம்பல்தலை' என்னும் குறளில் வரும் ஐந்தும் வேள்வி என்பதே வள்ளுவர் கொண்ட முடிபாகும். வள்ளுவர் பெரு மான் இங்குணர்த்திய வேள்விகள் ஐந்தும உயிர்க்கொலையின்றிச் செய்யப்படும் வேள்விகளே. இவ்வேள்விகளுக்குச் சைன தருமத் துள் சிறிதும் இடமேயில்லை. ஆதலின், வள்ளுவர் சமணர் என்றல் பொருந்தாது. நான் மறையாளர் எனப்படும் பார்ப்பனர் செய்த

தாகக் கூறப்படும் அசமேதம், அசுவமேதம் முதலிய கொலை வேள்விகள் அவருள் ஒரு சாரார் கொண்ட முடிபாகும். நான் மறை எல்லாவிடங்களிலும் இவற்றையே வலியுறுத்தவும் இல்லை. இந்திரன் முதலிய பதங்களை அடையவும் தமது வீரத்தை மெய்ப்பிக்கவும் அரசர்கள் அந்தணரைக் கொண்டு கொலை வேள்வி செய்தனர். இதை வைத்துப் பார்ப்பனர் யாவரும் கொலை வேள்வி இயற்றுவோர் எனக் கூறல் பொருந்தாது. பார்ப்பனரிடைக் கொலையிலா வேள்வியே பயின்று வந்ததாகும். கொலையிலா வேள்வியே வள்ளுவர் கூறும் வேள்வி என்பதை 'நன்றாகு மாக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக், கொன்றாகும் ஆக்கம் கடை' என்னும் குறளாலும் உணரலாம். சைனர்களுக்கு வேள்வி உடன்பாடு இல்லை.

மானம, குரோதம், லோபம், மாயை ஆகியவை நான்கும் கஷாயங்கள் என்று சைன தருமம் கூறுகின்றது. கஷாயங்கள் உயிரைத் துன்புறுத்துவன ஆதலின் அவை கூடாதென விலக்குகின்றது.

திருவள்ளுவர் 'வெகுளாமை' என்ற அதிகாரத்தால் குரோதம் கூடாதென்று விலக்கினர் என்றும், 'பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும், எண்ணப் படுவதொன் றன்று' என்பது போன்றவைகளால் லோபத்தை விலக்கினர் என்றும் கொள்ளலாம். மாயை என்பது கபடம் அல்லது வஞ்சனை என்று சைன நூல் கூறுகின்றது. இதனைக் கூடாவொழுக்கம் என்னும் அதிகாரத்தில் 'தவமறைந்து அல்லவை செய்தல் புதல் மறைந்து, வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று' என்பது போன்ற குறள்களால் விலக்கினர் என்று கொள்ளலாம். மானம், என்பதைச் சைன நூல் அகங்காரம் என்று கூறுகின்றது. வள்ளுவர் இதனைத் துறவறவியலில் 'துறவு' என்ற அதிகாரத்தில் 'யானெனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு, உயர்ந்த உலகம் புகும்' என்று கூறுகின்றார் என அடக்கினும் 'மானம்' என்ற ஓர் அதிகாரத்தையே விரிதது 'இளிவரின் வாழாத மானம் உடையார், ஒளிதொழுது ஏத்தும் உலகு' என்பதுபோல் மானம் வேண்டுமென்பதை வலியுறுத்திக் கூறல் சைன தருமத்துக்கு எவ்வாறு பொருந்தும்? சைன தருமத்துள் 'மானம்' யாண்டும் நீக்கத் தகுந்த தென்றே கூறப்படுகின்றது.

(தொடரும்.)

"கசாரணியத் திராவிடக் கவிமணி"

# மறைத்திரு. வே. முத்துசாமி ஐயர் எம்.ஏ., எல்.டி.

**தோற்றம்**

சீர்பெறு திருக்காட்டுப்பள்ளியைச் சார்ந்த பேர்பெறு அரங்கநாதபுரத்து விழுமிய அந்தணர்குலத்து ஆன்றமைந்த சான்றோராகிய தந்தையார் மறைத்திரு வேங்கடராம ஐயரும் தாயார் சிவகாமியம்மாள் என்னும முத்தம்மாளும் செய்த அரும் தவப்பேற்றால் தோன்றியவர் மறைத்திரு வே. முத்துசாமி ஐயராவர். இப்பெருந்தகையார் 1884 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 2 ஆம் நாள தோன்றினர். பாராட்டி வளர்க்கப் பெற்றனர். இவ்வூரின்கண் கோச்செங்கட் சோழனால் எடுப்பிக்கப் பட்ட மாடகோவில் ஒன்றுளது. ஆங்கெழுந்தருளியிருக்கும் இறைவர் திருப்பெயர் கசாரணியேசர் என்ப. 1890 ஆம் ஆண்டு தந்தையார் ஆவி நீத்தனர்.

**கல்வி**

1899 ஆம் ஆண்டு லோயர் சக்கண்டரித் தேர்வில் முதல் வரிசையாகத் தேறினர். அதன் பயனாக மெட்ரிக்குலேசன் முடிய அரசினர் உதவிப்படி பெற்றுப் பயின்றனர்.

1902 இல் மெட்ரிக் தேர்விலும் முதல் வரிசையில் தேறினர். அதன் பயனாக பி.ஏ. முடிய உதவிப்படி பெற்றுப் பயின்றனர்.

1904 இல் எப். ஏ. யில் கலாசாலைப் பரிசுகளும் பெற்றனர். மதுரைத் தமிழ்ச்சங்கத் தேர்வில் முதல் வரிசையிற் றேறினர். அதன்பொருட்டு வழங்கப்பெறும் பொற்பதக்கம் பெற்றனர்.

1905 இல் சென்னை இராசதானிக் கல்லூரியில் டாக்டர், உ. வே. சாமிநாத ஐயரவர்களிடம் பி. ஏ. வகுப்பில் தமிழ்ப் பயின்றனர். கல்லூரியில் வழங்கும் தமிழ்ப்பரிசும் பெற்றனர்.

1906 இல் பி. ஏ. வகுப்பு மதுரைத் தமிழ்ச்சங்கத் தேர்வில் முதன்மையாகத் தேறினர்.

1908—1909 வேலூர்க் கல்லூரியில் ஆசிரியராகப் பணி புரிந்தனர். "தனிப்பா நாற்பது" என்னும் நூலொன்றும் வெளியிட்டனர்.

1910 இல் எல்.டி. தேர்வில் தேறினா.



கசாரணியத் திராவிடக் கவிமணி

**வே. முத்துசாமி ஐயர், எம்.ஏ., எல்.டி.**

தோற்றம்: 1884 மறைவு: 1957

1911—1913 இல் மதனப்பள்ளி உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியப் பணி புரிந்தனர். "பத்மினி" என்னும நூலும் வெளியிட்டனர். இந்நூல் இண்டர்மீடியேட் பாடப் புத்தகமாக விருந்தது.

1913 இல் எம் ஏ. தேர்வில் தேறினர். பால பாடசாலைத் தேர்வாளர்ப் பணி புரிந்தனர்.

1914 இல் "தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சியும்," "கதையும பாட்டும்" என்னும் இரு நூல்கள் வெளியிட்டனர். இவை பி. ஏ. பாடப் புத்தகமாக விருந்தன.

1918 இல் "தனிப்பாக் கோவை" என்னும் நூல் வெளியிட்டனர்.

1928 இல் "ஸ்ரீ சங்கர சற்குரு ஆற்றுப்படை" பாடினர். அதன்பொருட்டு மயிர்க்கம்பளமும் பட்டும் பரிசு பெற்றனர்.

1932 இல் ஸ்ரீ சஙகர சற்குருமீது "அன்புவிடு தூது" பாடினர்.

1939 இல் முப்பத்தோராண்டுகள் கல்வித்துறைக்கண் ஆற்றிய அரும் பணியினின்றும் விடுதி பெற்றனர்.

1942 இல் தாம் 1920 இல் பாடிய மாயூரநாதரந்தாதி என்னும் நூலைப் பதிப்பித்து வெளியிட்டனர்.

1943 இல் பல யாண்டுகளாகப் பத்திமேலீட்டால் பாடப்பட்டுளள விநாயகர் முருகர் துதிப்பாக் கோவைகள் வெளியிட்டனர். ஆதிசங்கரர் பாதுகை நூறுநெட்டுப் பாடினர். அதன் பொருட்டுக் "கஜாரண்யத் திராவிடக் கவிமணி" என்னும் கவினுறு பட்டம பெற்றனர்.

1944 இல் பல யாண்டுகளாகப் பாடப்பட்டுள்ள ஆசிரியர் துதிப்பாக் கோவை என்னும் நூல் வெளியிடப்பெற்றது அறுப தாம ஆண்டு நிறைவு விழாவும் கொண்டாடப் பெறறது.

நம் ஐயரவர்கள் பொதுநல ஈடுபாடு மிக்குடையவர். அவர் புரிந்த பொதுநலத் தொண்டுகள் அளப்பில. அவற்றுள் சில வருமாறு :

க. மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் நீண்ட நாள் உறுப்பினராக விருந்து பணி புரிதல்.

உ. மதுரைத் தமிழ்ச்சங்கத்திலும் வேறு பல சங்கங்களிலும் பல்லாண்டுகள் தொடர்ந்து தேர்வாளராயிருத்தல்.

௩. தமிழ் நாட்டில் பல அவைகளில் அடுத்தடுத்துப் பல சொற்பொழிவுகளாற்றல்; பல அவைகளில் தலைமை பூண்டு பணியாற்றுதல்.

௪. உள்ளூர்க் கோவில்களின் பாதுகாவலராகவிருந்து பணிபுரிதல்.

௫ திருக்கோவில் திருப்பணியைப் பொறுப்புடன் மேற்பார்த்தல்.

௬. வாய்க்காலுக்குப் பாலமும் குளத்துக்குப் படித்துறையும் இவைபோன்ற பிறவும் புரிவித்தல்.

௭. ஒன்பானிரவாகிய நவராத்திரியில் திருக்காமாட்சியம்மனுக்கு நூறுயிரமெனப்படும் இலட்சார்ச்சனை புரிவித்தல்.

௮. கிராம முத்திராதிகாரி, திருக்காட்டுப்பள்ளி முத்திராதிகாரி ஆகிய இவர்களின் சங்கத்தலைவராய்ப் பணியாற்றல்.

ஆசாரிய அனுக்கிரகம்:

1. ஞானசிரியர் ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடத்துச் செகத்குரு சங்கராசாரிய சுவாமிகள், 1924 இல் பிச்சை ஏற்றருளி ஒரு சண்முக உருத்திராக்கம் உதவியது.

2. 1920 இல் ஆற்றுப்படையை உகந்து பட்டும் சால்வையும் அருளியது.

3. 1943 இல் வீட்டில் பாதுகை நூற்றெட்டைக் கேட்டு அந்த 108 பாக்களால் பாதபூசையை ஏற்று அடுத்தவூர் முகாமில் அடியிற்கண்ட சன்னதுடன் கசாரணியத் திராவிடக் கவிமணி என்னும் விருதால் அனுக்கிரகித திருக்கிறோம் என்றருளியது.

4. 1944 இல் அறுபது வருஷப் பேராலாகிய அருள் வேண்டற் பாடலைக் கேட்டு நடுநாயகமாக நன்முத்தைப் பொன்னிற் சேர்த்துக் கட்டிய உருத்திராக்ஷ மாலையை "இது முத்துசாமி மாலை" (சாமி-பொன்) என்று சொல்லிக் கொடுத்தருளியது.

இவர்தம் அரும்பெறற் கற்புநிறை வாழ்க்கைத் துணைவியார் திருப்பெயர் பார்வதியம்மையார் என்ப. இவ்விருவர் பெருந்தவத்தால் தோன்றிய மக்கள் ஆண்பாலார் மூவர்; பெண்பாலார் அறுவர். அவர்தம் பெயர்கள் வருமாறு:

P. நாராயணி, M. வைத்தியநாதன், M. காசிவிசுவநாதன்,
R. விசாலாட்சி, S. மீனாட்சி, S. மங்களம், N. பொன்னம்மாள்,
V. கமலாம்பாள், M. கோதண்டராமன்.

குடும்பச் சிறப்பு அனைத்திற்கும் மிக்க பொருள் நல்கிச் சீர்பெறச் செய்துள்ளனர். இமைப்பொழுதும் குடும்பக்கருத்தும் கண்காணிப்பும் மறந்தவரல்லர். மக்களின் மேற்கல்வியின் வளர்ச்சிப்பொருட்டு இவர் மேற்கொண்டுள்ள முயற்சி அளப்பில. தம்மருமை மக்கள் மூத்தார் இருவரும சென்னையில் கல்லூரிப் படிப்பைப் பயின்று வருங்காலத்து நான்காண்டுகளுக்கு மேல் தம்மருமை மனைவியாரைச் சென்னையிலேயே குடும்பத்தை நடத்தும்படி அமைத்தனர். கல்வியின் பொருட்டு வேறு பல கருவிதுணைகளைத் தாமே நேரிற் செய்து போந்தனர். அம் மட்டோ? திங்கட் கணக்கில் விடுமுறை எடுத்துக்கொண்டு வநது உடனிருந்து கற்பித்தும் ஊக்கியும் ஆக்கமளித்தனர்.

கடைசிப் பிளளையாகிய சி. கோதண்டராமனைத் தம்மிடமே வைத்துக்கொண்டு இயற்றமிழ் கற்பித்தனர். மகாமகோபாத்தி யாய ஐயர், நாவலா வேங்கடசாமி நாட்டார், கவி சிகாமணி தேசிகவிநாயகம் பிள்ளை முதலிய பெரும்புலவர்களுடன் செய்யு ளாலேயே கடிதம் எழுதும் முறைமையினை மேற்கொண்டுள்ளனர்.

தமிழவைகளில் மிக்க ஆர்வமுடன் கலந்துகொள்ளும் எழிற் பண்பு வாய்ந்தவர் இவர் கலந்துகொண்ட சங்கங்கள் அளப்பில. அவற்றின்கண்ணெல்லாம் இவா தலைமை பூண்டும், சொற்பொழி வாற்றியும் தொண்டு பூண்டுள்ளார். 1944 ஆம் ஆண்டில் அறுப தாமஆண்டு நிறைவு விழா மிக்க சிறபபுடன் நிகழ்நதது. பல பெரி யார்கள் நிறைவு விழா வாழ்த்துக்களை ஆங்கிலத்திலும தமிழிலும் அணிபெற யாத்து அளித்துள்ளனர். மேலும் வடமொழிக்கண் யாத்த வாழ்ததும் உள்ளது. அவ்வனைத்தும் தொகுக்கப் பெற்றுப் "பாராட்டுகளும், வாழ்த்துக்களும்" என்னும் பெயரான் ஒரு நூல் வெளிவந்துளளது.

இப்பெருந்தகையார் அளவிறந்த சிவப்பற்றுடையார். பாடல் பெற்ற திருவூர்கள் பலவும சென்று வழிபட்டுள்ளனர். யாபபுறவாக மாசிவனிராத்தோறும் சிவவழிபாடியற்றும் சீரிய காதற்கடப்பாட்டினர். யாப்புறவு-நியமம். அம்மட்டோ! அத் திருவிரவின்கண் நிகழும் நான்குயாமவழிபாடுகளையும் தனித்தனி ஒவவொரு பாடல் பெற்ற திருவூர்கள் நான்கிற் சென்று வழிபடும பண்பினர். இப்பெரியார் தனிப்பாடல்களாகவும், நூற் பாடல்களாகவும் ஏறததாழப பதினாயிரத்திற்கு மேற் பாடல்கள் பாடியுள்ளார். நூற்களுட் சிறந்தவை வருமாறு:

க. திருஆரூர்த்துதிப்பாக்கோவை, உ. திருவள்ளுவர் ஒருதுறைக்கோவை, ந. திரு ஆனேசர் திருபபள்ளி எழுச்சி முதலியன.

திருப்பணிகளுட் சிறந்தவை வருமாறு:

தம ஊருக்கு வருதற்கு வேண்டும் நேர்சாலை வாய்ப்புக்கும், நன்காடெனப்படும உருத்திர பூமிக்குச் செல்லச் செவ்வையான வழியமைபபுக்கும் பெருமுயற்சியுடன் நான்கு ஏக்கர் நஞ்சை நிலத்தைப் பெருவிலை கொடுததுப் பெற்றுப் பெருஞ்சாலைக ளமைததனர். இதற்கு வேண்டும் பொருளை ஊரவர்பால திரட்டியதுடன் தாமும் நன்கொடையாகப் பெரும்பொருள் நல்கியுள்ளனர்.

உள்ளூர்த் திருக்கோவிலின்கண் கூத்தப்பெருமான், சிவகாமி அம்மையாா, மணிமொழிப் பெருமான் ஆகியோரின் படிமங்களைத் தம் செலவிலேயே நிலைநாட்டி, ஆறுகாலத் திருமுழுக்குகளுக்கு வேண்டும் படித்தரங்களும் நிலைபெற அமைத்துள்ளாாகள். கசாரணியேசுராககுத் திருப்பள்ளி யெழுச்சியும், திருமுருகப்பெருமானுக்குக் கார்ததிகை தோறும் வழிபாடுகளும நிகழ வழி செய்துள்ளார்கள். படிமங்கள்-மூர்த்தங்கள் நிலைநாட்டி-பிரதிட்டை செய்து ஒய்வு பெற்றது முதல் பதினைந் தாண்டுகள் தொடர்ச்சியாகத திருககோவில் அறஞெம்பாளராக இருந்து அரும்பணியாற்றியுள்ளார்கள்

இபபெருந்தகையார் ஏவிளம்பி யாண்டு ஆடித திங்கள் இருட்பக்கம் ஞாயிற்றுக்கிழமை பிரதமை அவிட்டததில் (11-8-1957) சிவபெருமான் திருவடி நீழலை யெய்தினர். பலா கையறுநிலைச் செய்யுட்கள் யாத்துள்ளனர். கடிதங்களும வரைந்தனர். இவையனைத்தையும் தொகுத்தும் "இரங்கற் பாடல்கள் அனுதாபக் கடிதங்கள்" என்னும் பெயருடன் ஒரு நூல் வெளிவந்துளளது.

---

# தமிழ்த்தாய்த் திருப்பள்ளியெழுச்சி

[வித்துவான், திரு. ஆ. சிவலிங்கனர், மயிலம்]

அருணனும் அணுகினன் அணிகீழைத் திசைக்கண்
அம்மநின் முகம்போல அலர்ந்தன மரைகள்
குருகுகள் பெடையுடன் இரைதேட வெங்கும்
கூவியே பறந்தன குறையொன்று மின்றி
யிருகரம் ஏந்திய வெழில்மல ருடனே
வெய்தினர் அன்பரும் ஏத்திட நின்னைத்
திருமுடி மன்னர்கள் மடியினில் தவழ்ந்த
செந்தமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே. (1)

சலசல வெனவரும் சலம்நிறை யாற்றில்
சலநிறை குளம்வாழும் தாமரைப் பூவில்
நலமுடன் அதையூதும் நலவிசை வண்டில்
நாளுமவ் வண்டுறுங் கோதையர் சொல்லில்
நலந்தரு மவர்குழ வியின்மழ லையில்
நன்கதைச் சிறப்பிக்கும் நற்குறள் நூலில்
நிலைபெறும் தமிழ்கண்டோம் நின்னையும் கண்டோம்
நிகழ்தமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே (2)

கண்ணனும் குழல்கொண்ட கையுடன் வந்தான்
கவின்கன்னிப் பண்ணுடன் நின்புக ழோத
நண்ணுறும் நினதருள் வடிவொளி கண்டு
நறைகமழ் தன்னிருப் பதைமலா விக்கக்
கண்ணிய முடனந்தக் கஞ்சனும் வந்தான்
கனிமொழி யுமையையும் நின்மொழி பயிற்றத்
திண்ணிய வரனுமவந் தெய்தினன் கண்டாய்
செந்தமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே. (3)

உறங்கின தமிழரும் உறக்கத்தை விடுத்தார்
உண்மையாய் உன்னிலை தனைநாளும் நினைத்தார்
மறங்கொண்டே யெழுந்தனர் மாற்றலர் தம்மை
மாய்த்திடும் நோக்கொடு மடங்கலே றென்ன
அறங்குன்றா ஆண்மையோ டாண்டிட நாட்டை
அடைந்தனர் அகத்தெண்ணம் அன்னைநின் னருளின்
திறங்கண்டு வணங்கவே நின்றனர் திரளாய்ச்
செந்தமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே. (4)

தத்தம தில்லங்கள் தம்மிற்பிள் ளைகள்
தனிக்காலை வந்திடத் தாம்படிக் கின்றார்
தத்தையை வெல்லுறும் தமிழ்மொழி மாதா
தளும்புறு நீர்க்குடத் துடன்குளம் சென்றார்
வித்தகத் தமிழரும் பாடினர் வேண்டி
விரிந்தபூம் பள்ளியின் எழுந்தரு ளென்றே
எத்திறத் தோர்களும் ஏத்திட வொன்றாய்
இன்றமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே. (5)

விண்ணினைத் தொடவளர் வியன்மர மெல்லாம்
இன்னிசைப் புட்களின் வாயொலி யாலும்
கண்ணனின் உருக்கொளும் கடல்சேரும் யாறும்
கடுகியே சலசல வெனுமொலி யாலும்

வண்ணம்சேர் மலர்வாழும் வாவிகள் எல்லாம்
வளர்வாளை வன்மையாய்த் துள்ளொலி யாலும்
திண்ணமாய் அழைப்பதைச் சிறப்புடன் காணச்
செந்தமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே. (6)

காலையிற் காகமும் கரைந்தது கண்டாய்
கன்னியர் பலரும்நீ ராடினர் சென்றார்
சோலையிற் சென்றனர் பூக்கொண்டு வண்டார்
சுந்தரப் பொற்கொடி மாதரார் கண்டார்
ஆலையில் தொழிலாளர் வேலைமேற் சென்றார்
ஆண்டவன் கோயிலில் மணியசைக் கின்றார்
மாலையாய் அன்பர்நின் னருள்வேண்டி நின்றார்
மாண்தமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே. (7)

வாயினாற் சொல்லவென் வாயினுக் கினிமை
வளர்காதி னாற்கேட்கக் காதினுக் கினிமை
ஆயின வொலியையும் காணநல் லினிமை
கண்ணுக்கு மாயின கவின்வடி வினையும்
ஏயினாய் நின்புகழ் எங்கணும் அடியேன்
இயம்பியே நிற்பன்காண் எனையருள் நல்ல
தாயினும் இனியசெந் தண்ணளி கொண்டாய்
தண்டமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே. (8)

தமிழர்கள் தம்முளத் தனியிருள் நீங்கத்
தனிச்சிறந்த மணிதனைத தகுதியிற் கொண்டே
தமிழரை வென்றிடத் தங்கிடும் பகையைத்
தங்காமல் ஓட்டிடச் சிலம்பொலி கொண்டே
தமிழர்க்கும் தமிழர்கள் அல்லாத பிறர்க்கும்
தகுமுறை யுரைபொய்யா மொழியதும் கொண்டே
தமிழன்னை யெமமுடை யுயிரன்னை நீயே
தண்ணரு ளுடன்பள்ளி யெழுந்தரு ளாயே. (9)

தண்டமிழ் நாட்டினில் தனிவளம் ஓங்கத்
தமிழ்க்கவி திசையெட்டும் தனித்துமு ழங்க
ஒண்டொடி யார்களின் ஒண்ணிறை யோங்க
உத்தம ரென்றென்றும் உரையுடன் தங்க
மண்டிய பிணிகளும் மாயமாய் நீங்க
மாமழை தாழாது பொழியவே யெங்கள்
திண்டிறற் பகைகளும தீரவே தூங்கச்
செந்தமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே. (10)

# மறைமலையடிகள் ஆராய்ச்சித் திறன்*

[திரு. தமிழன்பன்]

தென்சொற் கடல்கடந்து, வடசொற்கெல்லை தேர்ந்து ஆங்கிலத்தின் கரைகண்ட புலமை வல்லாளர் எனப் புலத்துறை முற்றிய நலத்தகையாளர் உழுவலன்போடு உயர்த்திப் பாராட்டும் மறைமலையடிகளார் தமிழ்நலம் பேணிய தனிப்பெருந் தொண்டராவர். தனித்தமிழ் இயக்கத்தின் தந்தையாகிய இவர் தொடாத துறையில்லை; தொட்டுப் பின் அழகு செய்யாத துறையுமில்லை. கவிதை புனைதல், கட்டுரையாக்குதல், சொன்மாரி பெய்தல், ஆய்வு நிகழ்த்துதல, மெய்ப்பொருள் காணல், இலக்கணந் தெளிவித்தல், உரை வரைதல், நாடகம் இயற்றுதல், புதுவது புனைதல் என்னும் பறபல துறைகளிலும் அடிகளாரின் அறிவுமணி சுடர்விட்டு ஒளிர்கின்றது. மதிநுட்பம் நூலோடுடைய அவர்தம் ஆராய்ச்சித் திறனை இக் கட்டுரையில் சற்றே காண்போம்.

அடிகளாரின் ஆராய்ச்சி நூல்கள்

இப் பேரறிஞரின் ஆராய்ச்சி நூல்களைச் சமயத் தொடர்புடையவை சமயத்தொடர்பில்லாதவை என இருதிறப்படுத்தலாம. "மாணிக்கவாசகர் வரலாறுங் காலமும்," "பழந்தமிழ்க் கொள்கையே சைவசமயம்," "கடவுள் நிலைக்கு மாறான கொள்கைகள் சைவம் ஆகா," "சாதி வேற்றுமையும் போலிச் சைவரும்," "தமிழர் மதம்" என்பனவெல்லாம் சமயத் தொடர்பு உடைய ஆராய்ச்சி நூல்கள். "சாகுந்தல நாடக ஆராய்சசி," "முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை," "பட்டினப் பாலை ஆராய்ச்சி உரை," "வேளாளர் நாகரிகம்," "இந்தி பொது மொழியா?" "முற்கால பிற்காலத் தமிழ்ப்புலவோர்", "தமிழ் நாட்டவரும் மேல்நாட்டவரும்," "பண்டைக்காலத் தமிழர், ஆரியர்" என்பன சமயத்தொடர்பில்லா ஆராயச்சி நூல்கள்.

ஆயும் முறை

ஆராய்ச்சி ஓர் அரிய கலை. ஆக்க ஆய்வு அழிவு ஆய்வு என ஆய்வு இருபாற்படும். இவையிரண்டு மல்லாத 'குழப்ப ஆய்வு' என ஓர் ஆய்வும் உண்டு! குழப்பத்தை விளைவித்தலும், அழிவை வருவித்தலுமே ஆய்வின் பயன் எனக் கருதிப் பெருந் தீங்கு செய்யும் பேரறிஞர்களும் உள்ளனர்! சிறந்த ஆய்வாளர்கள் நெஞ்சில் உரமும் நேர்மைத் திறனும் உடையராய், நடுநின்று காய்தல் உவத்தலின்றி ஆயும் ஆக்க ஆய்வாளர்களே ஆவர்.

---

* சென்ற ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக் கழகம் நிகழ்த்திய மறைமலையடிகள் நினைவு நாள் கட்டுரைப் போட்டியில் முதற் பரிசு பெற்ற கட்டுரை.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்னும் வள்ளுவர் வாய்மொழியே சீரிய ஆய்விற்குரிய இலக்கண மெனலாம். சிலர் ஆராயப் புகுந்த பொருளையும் மறுவறத் தெரியாது அப் பொருள் பற்றி 'அவர் கருத்து அது', 'இவர் கருத்து இது' எனத் தொகுப்புரை தந்து தமகருத்து இதுவென முடிவொன்றுங் கூறாராய்ச் செல்வர். நூல் நுதல் பொருளைத் தம் நுண்மாண் நுழைபுலத்தின் எழில் நலத்தால் நன்கறிந்து தேர்ந்து குறை நிறைகளை எடுத்துக் காட்டும் மறைமலையடிகளாரின் ஆய்வு நூல்களிலே செம்பொருள் சிறந்து விளங்கக் காணலாம். நடுநிலை, மெய்ப்பொருள் நாட்டம், அயரா உழைப்பு, என்னும் பண்பு நிலைகள் பளிங்கில் உருவென அவர்தம் நூலுள் திகழ்கின்றன. "மேல் நாட்டு நெறிவழி நின்று தமிழ் நூல்களை வரலாற்றுச் சான்றுடன் ஆராயவும் எழுதவும் வல்லுநராவர் என்பது என் சிறந்த எண்ணம்" எனப் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள், அடிகளாரின் இளமைப்போதில் சான்றிதழ் தந்து சாலவும் புகழ்ந்தது முற்றிலும் பொருநதுவதொன்றாய்ப் பிறங்கி யொளிர்ந்தமையை அவர்தம் நூல்களே முரசடித்து முழங்குகின்றன. அழிவு ஆய்வும, குழப்ப ஆய்வும் செய்யாது ஆக்க ஆய்வு புரிந்த பெருந்தகையாளர் இவரே!

ஓர் ஆராய்ச்சி

அடிகளார்தம் ஆராய்ச்சி நூல்களுள்ளே ஒப்புயர்வற்று விளங்குவது 'மாணிக்கவாசகரின் வரலாறுங் காலமும்' என்பதேயாம. திருவாசகம், திருக்கோவையார் என்னும் தீஞ்சுவைச் செழுந்தேன் நிறைபொலன்கலன்களை நல்கியருளிய மணிவாசகப் பெருமகனாரின் வரலாறு, வாதவூரார் புராணம், திருப்பெருந்துறைப் புராணம், உத்தரகோசமங்கைப் புராணம், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல், பழைய திருவிளையாடல் ஆகிய பல நூல்களிலே விரித்துரைக்கப்படுகின்றது. இவரிருந்த காலம் இன்னதெனஅறிவான் புகுந்த ஆய்வாளர்கள் இடையே எழுந்த கருத்து வேறுபாடுகளுக்கோ கணக்கே இல்லை. கிறித்துவின் பிறப்பிற்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்து கி. பி. பதினோராம் நூற்றாண்டின் இடைப்பட்ட காலம் வரை பற்பல ஆண்டுகளை அவர்கள் குறித்துச் சென்றனர். சங்க காலத்தவரே மணிவாசகர் என்பர் சிலர். அதை மறுத்துச் சங்க காலத்திற்குப் பிந்தியவரே என மொழிவர் சிலர். இவரிற் சிலர் தேவாரம் பாடிய மூவர்க்கும் முந்தியவர் மணிவாசகர் என அதனோடு முரணி அம் மூவர்க்கும் பிந்தியவராம் என்று பேசுவர் சிலர். இவ்வாய்வு செய்தாருள் திரு. கனகசபைப் பிள்ளை, திரு.

கோபிநாதராயர், திரு. வெங்கையா, தஞ்சை, திரு. சீனிவாசப் பிள்ளை, திரு. அனவரத விநாயகம் பிள்ளை, திரு. கா. சுப்பிர மணிய பிள்ளை ஆகியோர் குறிப்பிடத் தக்கவராவர்.

திரு. கனகசபைப் பிள்ளை, திரு. கோபிநாதராயர், திரு. வெங்கையா, தஞ்சை, திரு. சீனிவாசப் பிள்ளை, திரு. அனவரத விநாயகம் பிள்ளை ஆகியோர் மணிவாசகர் தேவாரம் பாடிய மூவர்க்கும் பிந்தியவர் என்னுங் கொள்கையினர். 'இலக்கிய வரலாறு', எழுதிய திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் தம் ஆராய்ச்சியால் மணிவாசகர் தேவாரம் பாடிய மூவர்க்கும் முந்தியவர் என வரையறை செய்வார். 'கி. பி. மூன்றுவது நூற்றுண்டில் மலையாளக் கரைக்கு வந்த சிரியக் கிறித்துவப் பாதிரிமாாகள் மாணிக்கவாசக அடிகளைக் குறித்துத் தம் நாட்டினருக்கு எழுதியுள்ள கடிதங்களிலுலே மூன்றும் நூற்றுண்டின் இறுதியே அடிகள் காலமென விளங்குகின்றது,' என இலக்கிய வரலாற்றில் குறித்தனர். இதை உடன்பட்டாருமுளர்.

இங்ஙனம் ஆராய்ந்த இரு திறத்தார் கூற்றையும் சமன் செய்து சீர்தூக்கிய அடிகளார் மணிவாசகர் தேவாரம் பாடிய மூவர்க்கும முந்தியவரே என முடிவு தந்தனர். "பொய்யடிமையில்லாத புலவ" ரென்று திருத்தொண்டர் தொகையில் சுந்தரர் குறிப்பதும் திருவாரூர்ப் பதிகததில் திருநாவுக்கரசர் 'நரியைப் பரி செய்வானும்' என்று சொல்வதும் மணிவாசகரின் பெயரும் அவர்தம் காலத்துச் செயலுமாம் என அடிகள் கருத்துரை வெளியிட்டார் திருவாசகத்தின் சொல்லமைப்பும், செய்யுட் பாங்கும் சங்க காலத்துடன் துன்னிய தொடர்புடையவை என விளக்கம் செய்தனர். பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்களும் இவர்தம் கருத்துடன் இசைவுடையவராய் "திருவாசகம் தேவாரத்திற்கு முன் என்பது பாவியல் வேற்றுமையால் அறியற்பாலது" என எழுதிச் சென்றனர்.

இவ்வாராய்ச்சிக்குச் செலவிட்ட காலம்

ஆராய்ச்சி ஒரு தொடுமணற்கேணி என்றுணர்ந்த அறிஞர் ஆராய்ச்சிக்கு முடிவில்லை என மொழிவர். நிறை தமிழ்ப் புலமை மறைமலையடிகள் வாழ்நாள் முழுவதும ஆராய்ச்சிச் சுரங்கத்திலே அயராது பாடுபட்ட ஒரு பாட்டாளியாவர். மணிவாசகரின் கால ஆராய்ச்சியில் அடிகள் மும்முறை ஈடுபட்டார். 'அறிவுக்கடல்' முதலிழிதல் மணிவாசகர் இன்றைக்கு ஆயிரத் தெழுநூறு ஆண்டுகட்கு முன்னிருந்தவர் என எழுதினர். இக் கருததிற்கெழுந்த மறுப்புரைகளைத் தீரத்தெளிந்தாராய்நது தாம் முன் கண்ட முடிவே முடிந்த முடிபென 'அறிவுக்கடல்' நான்காம்

இதழில் கருத்து வெளியிட்டனர். மூன்றும் முறையாக ப பொருள் பற்றிய பல நூல்களையும், தொல்காப்பியம் முதல் பல நூல்களையும் ஆராய்ந்தார். வடமொழி தமிழ்மொழி நூல்கள் பலவற்றின் காலஙகளை வரையறுத்தார். பல முனைகளிலிருந்தும் கூர்மையாக நுனித்தாய்ந்து மணிவாசகர் தேவார ஆசிரியர் களுக்கு முந்தியவராய், கி பி. மூன்றும் நூற்றுண்டினராய் இருத்தலை எடுத்து நாட்டினர். மூன்றும் முறையாக எழுதிய பெருநூல் இருபது ஆண்டுகள் இடையறுதாய்ந்த ஆய்வின் விளைவாகும்! அதனை எழுதி முடிக்க ஆறு ஆண்டுகள் ஆயின வாம்! தம் இளமைப் பருவத்திலிருந்து முதுமைக் காலம்வரை இவ்வாய்வில் ஈடுபட்டுழைத்த இவர் மாண்பு உரையிலடங்கா.

### ஆராய்ச்சியின் பயன்கள்

இவ்வாராய்ச்சியின் பயனுகக் கிடைத்துள்ள சில முடிபு களைப் பார்ப்போம் இவ்வரிய ஆராய்ச்சியால் தமிழகத்தின் வரலாறே விளக்கமுறுகின்றது. தமிழ்மறை வேறு; ஆரிய மறை வேறு; பண்டைச் சிவாகமஙகள் தமிழே. திருமந்திர மும், பெரிய புராணமும் மொழிபெயர்ப்பல்ல. மணிவாசகரின் வரலாற்றை அறிய அவர் தம் நூல்களுட் காணப்பெறும் குறிப்புக் களையே துணையாகக கொள்ளவேண்டும். வரகுண பாண்டியர் மூவரில் மணிவாசகரால் குறிக்கப்பட்டவன் தமிழகத்தில் கல் வெட்டுக்கள் தோன்றுவதற்கு முன் (கி. பி 4 ஆம நூற்றுண் டுக்கு முன்) இருந்தவன். ஏனைய இருவர் கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டவர்கள். அப்பர் தம தேவாரத்தில் குறிப்பிட்ட சில திருவிளையாடல்கள் மணிவாசகரின் பொருட்டேயாம், இவையேயன்றித் தொல்காப்பியம் தமிழாசிரியர் தமிழ் நூல் களின் காலமும் இந் நூலால் பெறபபடுகின்றன.

### ஆராய்ச்சிக்குரிய கருவிகளும் நடையும்

மணிவாசகர் வரலாறு கூறும் புராணங்கள், மூவர் பாடல்கள், சொல்லாராய்ச்சி, பாவியல், சொற்பொருள் வேறுபாடு, மேற் கோள்கள், முற்கால பிற்கால இறைவணக்கம், அரசர் வரலாறு, வட, அயல் மொழிகளில் தமிழர், ஆரியர் பற்றிக் கூறும் நூல்கள், அறிஞர்கள் ஆய்வுக் கட்டுரைகள், மறுப்புரைகள், முதலியன அடிகளார் ஆய்வுக்குக் கொண்ட அரிய கருவிகளாம்.

ஆராய்ச்சிக் கருத்துக்களை அடிகளார் தெள்ளிய தீந்தமிழ் நடையில் தருகின்ற முறை மிகவும் வியக்கற்பாலதாம். இவ ருடைய நடை எவரும் எளிதில் பின்பற்ற முடியாதவோர் ஏற்ற மிக்க நன்னடையாகும். பரிமேலழகரின் உரைநடை இனிமையும், நக்கீரரின் தருக்கநெறி பிறழாத் தடைவிடை நலமும், சேனவரை

யரின் திட்ப நுட்பமும், சிவஞான முனிவரின் சொற்றொடர் நீட்சியும், மறுப்புரை மாட்சியும் கொண்டு இழுமெனும் ஓசையுடன் செல்லும் விழுமிய நடையே அடிகள் கையாண்ட பைந்தமிழ் நடை. திரு. பரிதிமாற் கலைஞர், "உரைநடை கைவந்த வல்லாளர்" என இவரைப் போற்றியுரைத்தது பொய்யுரையோ வீண் புகழ்ச்சியுரையோ அன்று; உண்மை உரையே!

அடிகளாரின் சமயத் தொடர்பில்லாத ஆராய்ச்சி நூல்களில் தலைமை சான்றது 'வேளாளர் நாகரிகம்' என்பதாம். ஆரியர் இந் நாட்டிற் குடிபுகுமுன் பீடும் பெருமையும் சான்றவராய் விளங்கியவர் வேளாளர் சீர்த்த நாகரிகமும் செவ்விய பண்பாடும் உடைய இவர்களே வந்தேறிகளாகிய ஆரியரை அவர் தம் இறப்ப இழிந்த கொலைபுலை வாழ்வினின்றுந் திருத்தினர் என்பதும், ஆரியப் பிரிவினராகிய சூத்திரராய் வேளாளரைக் கொள்ளல் கூடாதென்பதும், தமிழர்கள் உபநிடதம், சாங்கியம் முதலிய நூல்கள் யாத்தனர் என்பதும் இவை போன்ற பல உயரிய கருத்துக்களும இந் நூலுள்ளே பரக்கக் காணலாம்.

அடிகளாரின் "சாகுந்தல நாடக ஆராய்ச்சி" ஒரு நூலை ஆராயும் முறையிதுவென எடுத்துக்காட்டும் ஒரு வழிகாட்டி எனலாம். கவி காளிதாசனின் குறைநிறைகளை நடுநின்று ஆயும் பாங்கு அறிந்தின்புறற்பாலது.

இன்னும் அடிகள் தம் ஆராய்ச்சியால் சிவஞானபோதம் செந்தமிழ் நூலாயிற்று. பல கரிகாலர்களும், வரகுணபாண்டியர்களும், சேரமான்களும், ஔவையார்களும், அகத்தியர்களும் வெளிப்பட்டுள்ளனர். கருததுக் கருவூலங்களாகிய இப் பெருமகனது ஆராய்ச்சி நூல்கள் இறவாத தமிழுக்கு என்றும் உறவாக விளங்கும் என்பது ஒருதலை.

**ஆராய்ச்சிக் கடல்**

அடிகளாரின் ஆராய்ச்சி அறிவலை வீசும் ஓர் ஆழ்கடலாகும். அங்கே, ஒளிவீசும் முத்தும், பவளமும் கொட்டிக்கிடக்கின்றன. இங்கே ஓரிரு முத்துக்களைக் கண்டோம் அவற்றின் உருவில் ஒளியில், அழகில் ஈடுபட்டோம்; இன்புற்றோம்.

முடிவு

இந் நூற்றாண்டில் விளங்கிய இணையற்ற ஆராய்ச்சியாளர் என எல்லோராலும் புகழப்படும் மறையாமலையாகிய மறைமலையடிகள் நம் நாட்டிற்கும் மொழிக்கும் புரிந்த பணிகள் என்றும் நெஞ்சில் நிலைக்கற்பாலன. தமிழக வரலாற்றில் இவர் பெயர் "ஆராய்ச்சிப் பேரரசர்" என விளக்கமுறல் திண்ணம்!

---

# டாக்டர் தருமாம்பாள் அம்மையார்

# நினைவு மலர்

தமிழகத்தில் மாணவர் மன்றத்தைப்பற்றி அறியாதார் இரார். பொதுவாகத் தமிழுலகிற்கும் சிறப்பாக மாணவர் உலகிற்கும் இம்மன்றத்தார் ஆற்றிவரும் பணிகள் மிகப் பல. தமிழ்ப் பெருமக்களை வாழ்த்துவதிலும், அவர்களை நாட்டுக்கு அறிமுகப்படுத்துவதிலும், மலர்கள் வெளியிட்டுத் தமிழ்ப்பணி புரிவதிலும் முன்னின்று பணிபுரியும் இம் மன்றத்தாராதாம் காலஞ்சென்ற டாக்டர். எஸ். தருமாம்பாள் அம்மையாரவர்கட்கு வீரத்தமிழன்னை என்னும் பட்டத்தையும் வழங்கியவர்களாவா. மேலும், அம்மையாரவர்களின் நினைவு தமிழக மாந்தரிடமிருந்து நீங்கா வண்ணம் "வீரத்தமிழன்னை டாக்டர். எஸ். தருமாம்பாள் அம்மையார் நினைவு மலர்" ஒன்றினை வெளியிட்டுள்ளனர். இம்மலர் 144 பக்கங்களுடன், எழிலுற அமைந்துள்ளது. அம்மையாரின் வாழ்க்கை வரலாறும் அவர்தம் தொண்டின் சிறப்புப்பற்றி அறிஞர்கள வழங்கியுள்ள கருத்துரைகளும் இதன்கண் நன்கு தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. அம்மையாரின் உருவப்படங்கள் பலவும், அவர்தம் இறுதி ஊர்வலப் படங்களும் பெருமக்கள பலர் இரங்கல் உரை வழங்குங் காட்சிகளும் இதில் அடங்கியுள்ளன.

**இரங்கற் கூட்டம்**

கடந்த 4—6—'59 இல் அம்மையாரவர்களின் மறைவு குறிதது இரங்கற் கூட்டம் குருசாமி முதலியார் உயர்நிலைப்பள்ளியில் நடைபெற்றது. அக்கூட்டத்தில் அறிஞர். சி. என். அண்ணாதுரையவர்கள் அம்மையாரின் உருவப் படத்தைத் திறந்துவைத்து அவர்தம் தொண்டின் சிறப்புப் பற்றிய அரிய சொற்பொழிவாற்றினர். பேராசிரியர் மயிலை சிவமுத்து, டாக்டர். சத்தியவாணிமுத்து அம்மையார, திரு. எம். கே. தியாகராச பாகவதர் மற்றும் பலர் இரங்கலுரை வழங்கினர்.

**நன்றி**

சென்ற திங்கள் 'செந்தமிழ்ச் செல்வி'யில் டாக்டர். தருமாம்பாள் அம்மையாரவாகளின் மறைவு குறித்து ஓர் இரங்கல் குறிப்பும் அம்மையாரின் உருவப்படமும் வெளிவந்துள்ளதை அன்பர்கள் அறிவர். அப் படத்திற்குரிய பட அச்சை (Block)த் தந்துதவிய மாணவர் மன்றத்தார்க்கு எமது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். சென்ற இதழ் கடைசி நேரத்தில் வெளிவர நேரிட்டதால் அம்மையாரவர்களைப் பற்றிய இரங்கற் குறிப்பொன்றினையே வெளியிட நேரிட்டது. அதனால் சேர்க்கப்பட வேண்டிய செய்திகள் பல விடுபட்டுள்ளன. அதனுள் மாணவர் மன்றம் பற்றிய விளக்கமும் ஒன்று. மாணவர் மன்றம் வாழ்க

# தமிழ் மொழிச் சிறப்பு

[புலவர், வை. முரு.

பரந்து பட்ட இந்நிலவுலகில் பயின்று மக்களிடையே வழங்கிவரும் பல்வேறு வகைப்பட்ட மொழிகளில், நம் தமிழ் மொழி எல்லாவகையாலும் சிறந்ததொன்று. தொன்று தொட்டிருவகை வழக்கிலும் நின்று நிலவுவது அத்தகைய தமிழ் மொழியின் மாண்பினை நோக்குவேமாயின், இற்றை நாளில் வளம் பெற்றுத் திகழும் புதிய கலை இலக்கியங்களே யன்றிப் பழைய இலக்கிய இலக்கணங்களும் அளவிறந்தனவாம். அவைகளில், மிகப் பல காலவேறுபாட்டான் அழிந்தொழிந்தன. எஞ்சி இருப்பவை தொல்காப்பிய முதலிய இலக்கண நூல்களும், பத்துப்பாட்டு எட்டுத்தொகை பதினெண்கீழ்க் கணக்குகளாகிய சங்க இலக்கியங்களும், சிலப்பதிகாரம் மணிமேகலை முதலிய காப்பியங்களும் இடைக்கால பிற்கால இலக்கிய புராண இதிகாசங்களும், பிற சிற்றிலக்கியங்களுமாம். இவையிற்றின் தொகையும் அளவிறந்தன.

இனிப பாதுகாக்கப்படாத தவறுல் மறைந்தும் பிறமொழியாளர் சூழ்ச்சியால் அழிந்தும் வழக்கொழிந்த செந்தமிழ் நூல்களுள் தலையாய அகததியம் என்னும் பரந்து விரிந்த ஒப்புயர் வற்ற முத்தமிழ் இலக்கண நூல்பற்றி இக் காலத்தறிஞரும் இடைக்காலது உரையாசிரியர்களும் கடைச்சங்கப் புலவர்களுமாகிய சான்றோர் அனைவரும் ஒருமுகமாக ஒப்பக்கூறும் முடிவு ஒரு தன்மைததாகவே யுளது. அஃதாவது,

அகத்தியம், செந்தமிழ் முனிவராகிய அகத்திய முனிவரால் கடல் கோளின் முன்னர் இருந்து தென் கடலுள் மறைந்த பழைய மதுரையில வளர்ந்த முதற் சங்ககாலத்தே இயற்றப் பெற்றது. அது இயல் இசை நாடகம் என்னும் மூவகையவாகச் செந்தமிழின் இலக்கண வரம்பு கூறுவது. பன்னீராயிரம் நூற் பாக்களையுடையது என்பதாகும்.

அகத்தியத்தின் முடிவான உண்மை இதுவாயின் பன்னீராயிரம் சூத்திரங்களால் விரிந்து பரந்த இலக்கணப் பரப்பை யுடையதான தெய்வத் தமிழின் இலக்கியப் பரப்பு எத்துணை விரிந்ததாக இருந்திருத்தல் வேண்டும் என்பதைச் சிந்திபபின் தமிழின் வரம்பிலாப் பரப்பு உரம்பெறத் தோன்றுமற் போகாது. அங்ஙனம் உள்ளத் துணர்விற் றேன்றுமது கொண்டாராயின் அத் தமிழ் வழங்கிய நாடும் இன்றுள்ளவாறன்றி, இதனினும் அகன்று விரிந்தே இருந்திருத்தல் வேண்டும். அது, 'குணகடல் குமரி குடகம் வேங்கடம்', என நன்னூலாரும், 'நெடியோன் குன்றமுந்

தொடியோள் பவ்வமும்' என இளங்கோவடிகளாரும், 'வட வேங்கடந் தென்குமரியாயிடைத் தமிழ் கூறு நல்லுல'கெனத் தொல்காப்பியப் பாயிரத்துட் பனம்பாரனாரும் ஓதிய வெல்லையினும் விரிந்ததாயே பரந்திருத்தலும் வேண்டும்.

இனி இக் கொள்கை வலியுறுவதற்கொரு செய்தியும் நந்தமிழ் நூல்களினும் மேல்நாட்டறிஞர் பலர் கூறும் வரலாற்று ஆய்வு நூல்களினும் அறியக்கிடக்கின்றது. அஃதென்னெனில் பல்லாயிரவாண்டுகளின் முன்னர் இப்போதுள்ள குமரிமுனைக்குத் தெற்கே பன்னூறு காவதங்கட் கப்பால் கடலெல்லை இருந்த தெனவும் அவ்வெல்லைக்கும் குமரிமுனைக்கும் இடையில் பலமலைகளும் சில நதிகளும பெருநிலப் பரப்பிற் பல பகுதிப்பட்ட நாடுகளும் இருந்தனவெனவும் அவற்றுள் பஃறுளியாறும் குமரியாறும் ஏழ்தெங்கநாடு முதலிய சிலப்பதிகாரத்து அடியாக்கு நல்லார் விரித்துக் கூறும் நாடுகளும் குறிப்பிடத் தகுவனவெனவும், அவையாவும் முதற் சங்ககாலத் திறுதியிற் றோன்றிய கடல் வெள்ளததாலும் இடைச் சங்ககாலத்திற் றோன்றிய அப்பெருங் கடல் வெள்ளத்தாலும் கடலுள் மூழ்கி மறைந்தன வெனவும் வருவனவேயாம்.

இங்ஙனங் கடல் கொண்ட தென்னாடெனத் தமிழ்நாட்டகத்தும் கடலுள் மூழ்கிய இலெமூரியாக் கண்டம் என மேல்நாட்டறிஞர் ஆராய்ச்சியினும் வழங்கும் மறைந்த மாநிலப் பெரும் பரப்பிற் கெல்லை காலஞ்சென்ற பரிதிமாற் கலைஞர் (திரு. வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியார்) அவர்கள் தமது தமிழ்மொழி வரலாறு என்னும் நூலில் அடியார்க்கு நல்லார் உரை விளக்கங் கொண்டும் பிற குறிப்பு ஏதுக்களைக் கொண்டும் மேற்கே மடகாஸ்கர் தீவும் கிழக்கே சாவா சுமத்திரா தீவுகளும் ஆகிய இடங்கட்கிடையில் இரண்டாயிரம் கல்தொலைவும தெற்கே எழுநூற்றுக் காவதம் ஆகிய ஏழாயிரம் கல்தொலைவும் உடையதாதல் வேண்டுமெனக் குறித்துள்ளார்.

ஆகவே அப்பெருநிலப் பரப்பினுட்டங்கி வாழ்ந்த தமிழ்மொழியை வழங்கி வந்த மக்கட் டொகையும் இஞ்ஞான்றைத் தமிழகத்திற் கணக்கிடும் இருநூறு நூறாயிரத்தின் மேலும் எத்துணை யளவிற்றாதல் வேண்டும்! பலவாய கோடியாகவன்றோ பகுத்துணர்தல் வேண்டும்!

தமிழ் மக்களாகிய யாம் இவை போல்வனவாய நந்தமிழின் பேரியல்புகளைச் சிந்தித்துணர்ந்து தமிழின் வளர்ச்சிக்குரிய பெருமுயற்சியிலீடு படுவேமாக!

வளர்க தமிழ்மொழி! வாழ்க தமிழ்மக்கள்!

---

# *தமிழ்த் திருநாள்

[சித்தாந்த சைவப் புலவர், இராவ்சாகிப், டாக்டர், தி. இரா. அண்ணாமலைப் பிள்ளையவர்கள்]

தாய்மார்களே, மெய்யன்பர்களே, வணக்கம். தருமை அருள்பெறு நெல்லை அருணகிரி இசைக்கழகத்தார் இன்று 5 ஆவது திருவிழாவை நடத்தி நம்மை மகிழ்விக்கின்றனர்; இக் கழகத்தார் போன்று, தமிழையும் சிவநெறியையும் வளர்ப்பதற் காகவே ஓயாது உழைத்து வரும் சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தாரும் உயர்திரு வ. சுப்பையா பிள்ளை அவர்களின் சீரிய ஆட்சியில், இன்றையத் திருவிழாவை 2ஆ-வது சிற்றிலக்கிய மாநாடாக நடத்த முன்வந்துள்ளனர்; 16 தூய பிள்ளைத்தமிழ் நூல்களை, தமிழ்ப்பெரும் புலவர் எண்மர்கொண்டு சிறந்ததோர் உரை இயற்ற ஏற்பாடு செய்து, தனி நூலாகவும் வெளியிடு கின்றனர். இவ்விரு கழகங்களும் பல்லாண்டு ஒளிர்வதாக.

*பிள்ளைத்தமிழ்*

தாங்கள் எல்லோரும் நன்கறிந்தபடி, பிள்ளைத்தமிழ் நூல் கள், பொதுவாக, தெய்வீக மூர்த்திகளைக் குழந்தைப் பருவங் களில் அமைத்து பத்திச்சுவையுடன், தொண்டர்கள் உளங் கனிந்துபாடி இன்புறுவதற் கேற்றனவாகும். யான் எளிய முறையிற் படித்தது முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்—1; மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்—2. இவையிரண்டும நெல்லை மாவட்டத்தில் உதித்த குமரகுருபர அடிகளார் உலக முய்ய, அருளியதேயாம். சொல்விருந்து அளிக்கும் புலவர் எண் மருக்கும் வாழ்த்துரித்தாகுக. பிள்ளைத்தமிழ் வருமாறு:

பிள்ளைத்தமிழ் இருவகைப்படும்; 1 ஆண்பாற் பிள்ளைத் தமிழ்—முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்; 2 பெண்பாற் பிள்ளைத்தமிழ்—மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்; இவை ஒவ் வொன்றிலும் பத்துப்பருவஙகளே காணப்படும்; இவைகளில் முதல் ஏழு பருவங்கள்—காபபு, செஙகீரை, தாலப்பருவம், சப்பாணி—முத்தப்பருவம், வருகை, அம்புலி, இருவகைப் பிள்ளைத்தமிழிலும் ஒருங்கே காணப்படும்: ஆனல் 8, 9, 10-ஆவது

---

* நெல்லை அருணகிரி இசைககழகச சாரபில் 19—4—59 இல் நடைபெற்ற 11 ஆவது தமிழ்த்திருநாளில் சை. சி. நூற்பதிப்புக் கழகச் சார்பில் நடைபெற்ற இரண்டாவது சிற்றிலக்கிய மாநாட்டில் ஆற்றிய தொடக்கவுரைச் சுருக்கம்.

பருவங்கள் ஆண்பாற் பிள்ளைத்தமிழில் சிற்றிற் பருவம், சிறுபறைப் பருவம, சிறுதேர்ப் பருவம் என மூன்றுமாகும்; பெண்பாற் பிள்ளைத்தமிழில், அப்பருவங்கள் அம்மானை, நீராடல், ஊசற்பருவம் என மூன்றுகும். இத்தகைய முறையில் யாம் ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய குறிப்பொன்று உள்ளது. தெய்வீக மூர்த்திகளை ஆணுகவும் பெண்ணுகவும் அமைத்து "நினைப்பற நினைந்து" பாடும் பொழுதுங்கூட, ஆணுக்கொருமுறை பெண்ணுக்கொரு முறை நம் முன்னேர் வரையறுத்துள்ளனர். பொதுவாக ஆண்கள் அம்மானை யாடுவதுமில்லை; பெண்கள் சிறுபறை கொட்டுவதும், சிறுதேர் உருட்டுவதுமில்லை. சிறுவர் வட்டாடு வதிலுங்கூட ஆணுக்கும் பெண்ணுக்கும் தனித்தனி அரங்கு வகுத்துள்ளனர். நமது பண்டை நாகரிகம் இங்ஙனமிருக்க, இன்று நமது பெண்பாலர்களை மோட்டார் வண்டி ஓட்டுவதற்கு (Bus Drivers and Conductors) முற்படுத்துவது நமது பண்பாட்டுக்குப் பொருந்துமா? நன்கு சிந்தித்தருள்க.

இன்றைய உலகத்தில், நம் நாட்டவர் செல்வத்திற் சிறியர்; ஆயினும் நமது சீரிய பண்டைக்கலையையும் நாகரிகத்தையும் திருக்கோயில்களையும் கண்டு மேனுட்டார் வியந்து நமக்கு உயர்ந்த மதிப்பளிக்கின்றனர். இவை நம் நாட்டில் கடந்த 10,000 ஆண்டுகளுக்கு முன்னரேயிருந்து, படிப்படியாக உருவானவை. இவைகளை, நமது போலி முன்னேற்றங் கருதிச் சிதைத்து விடக்கூடாதென்பதே எனது பணிவான வேண்டுகோள்—நிற்க.

ஏழு கன்னிமார் வணக்கம் பண்டைய நூல்கள் பலவற்றிலும் காணப்படும். நம் திருக்கோயில்களிலும் சதுக்கங்களிலும் சந்திகளிலும் இன்னும் ஏழு கன்னிமார் உருவச்சிலைகள் காணப்படுகின்றன. கலிங்கத்துப் பரணியில் ஏழு கன்னிமாரின் கொடிகளும் எடுத்தோதப் பட்டுள்ளன—"மேதி, புள், அலகை, தோகை, ஏறு, உவணம், வேழம் என்று கொடி ஏழுடைச்சோதி மென்கொடிகள் ஏழின் ஏழ்இரு துணைப்பதம் தொழ நினைத்துமே" என்று கூறி, பின்னர் புலிக்கொடியை வாழ்த்துகின்றனர் சயங்கொண்டார். ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய நாகரிகமாகக் கருதப்படும் மொகஞ்சதாரோ—புதைபொருள் முத்திரைகளிலும், ஏழு கன்னிமார் ஒரே வரிசையில் முனி ஒருவரின் திருவடியின் கீழ் நின்று வணங்குவதை நாம் பார்க்கிறேம். ஏழு கன்னிமார்களுக்கும், ஏழிசைகளுக்கும் நெருங்கிய தொடர்புண்டு: ஏழிசையும, தமிழ் நெடுங் கணக்கு நெட்டுயிர் எழுத்துக்கள், ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்பவைகளால் குறிக்கப்படுகின்றன. ஏழு கன்னிமார்களும் ஏழு நெட்டுயிர் எழுத்துக்களால் குறிக்கப்படுகின்றனரா என்பது சிறந்த ஆராய்ச்சிக்

குரியது. ஏழு நெட்டுயிர் எழுத்துக்களையும் பெண்ணெழுத்துக்களென்று பின் வருமாறு கூறியதும் இங்கு நோக்கத் தக்கது. "நெடிலேழ் இருவகை பெண்பால் என்ப." இனி ஏழு கன்னியருட்பட முப்பத்துமூன்று தேவர்களைப் பற்றியன ஆய்வாம்.

## தொகுப்பு 33-ன் சிறப்பு

பண்டைத்தமிழ்—தொல்காப்பியம்; சங்க இலக்கியம்—திருமுருகு — பிற்கால நூல்கள் — திருவாசகம், திருமந்திரம்; உடற்கூறு—முதுகெலும்பு—முள்ளந்தண்டு 33; யாழ்—முதுகெலும்பு வடிவம்—33 நரம்பு; திருக்கோயில் கொடிமரம்—33 வளையங்கள்; கழுத்தில் அக்கமணி—33; அக்பர் அரசர்—33 அலுவலகங்கள், புத்தர்பிரான் ஞானம பெற்றது—33 ஆண்டு முடிந்தஉடன்; இயேசுநாதர் சிலுவையில் அறையப்பட்டது—33 ஆண்டு முடிந்தபிறகு; வடமொழி நூல்கள் — 33 இன் பெருமை; முருகனது ஊர்திகள்—33 பூக்கள்:

## தமிழ் நெடுங் கணக்கெழுத்துக்கள்—33

டால்ஸ்டாய் மில்டன் முதலியவர்களின் நூற்குறிப்பு:

வானநூல்—பால்வீதி மாண்டபம்—33,000 ஒளி ஆண்டுகள்;

புதைபொருள் ஆராய்ச்சி — 33 சிந்துவெளி நாகரிகத் தெருக்கள் 33 அடி அகலம்;

திருவள்ளுவர்—1000 + 33 பத்து, 1330 குறட்பாக்கள்.

"மூவரும் முப்பத்து மூவரும் மற்றொழிந்த
தேவரும் காணசிவபெருமான்—மாவேறி
வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க
மெய்யகத்தே இன்பம் மிகும்"—திருவாசகம்.

இத்தகைய தனிச்சிறப்பு வாய்ந்த முப்பத்துமுக்கோடி தேவர்களுக்குத் தனிநாயகராக விளங்கும் முழுமுதற் கடவுள் சிவபெருமான் உயர்திரு. கனகசபையை அமைச்சராகக்கொண்ட நெல்லை, அருணகிரி இசைக் கழகத்தாரையும், உயர்திரு. வ. சு. அவர்களை ஆட்சியாளராகக் கொண்டு விளங்கும் நெல்லை சைவ சி. கழகத்தாரையும், இன்று நமக்குச் செவிஉணவு அளிக்க முன்வந்துள்ள பெரும் புலவர்களையும் தமிழ்த் திருவிழாவில் கலந்துகொள்ளும் பெருமக்கள், தொண்டர்கள் யாவரையும், வாழ்த்துமாறும் பிள்ளைத்தமிழ் விழா இன்று சீர்சிறப்புடன் நடக்குமாறும் இறைவன் திருவடிகளைப் பணிந்து வழுத்துகின்றேன்.

---

# இன்றியமையா வேண்டுகோள்

செந்தமிழ் நலமும் சிவனெறிச் செல்வமும்சேர் பெரியீர்!

"திருப்பாதிரிப்புலியூரை யடுத்த வண்டிப்பாளையம் கரையேற விட்டகுப்பத்தில் அப்பர் கரையேறிய திருக்குளத் திருப்பணி" என்னும் சிவபுண்ணியத்தைச் சீர்பெற அமைத்தற்பொருட்டுத் திருப்பணிக்குழு அங்கத்தினர்களால் வெளியிடப்பட்டுள்ள வேண்டுகோள் வெளியீடு வரப்பெற்றேம். அஃதோர் அழகிய கைச்சுவடி வடிவில் அமையப்பெற்றுள்ளது. முதற்கண் அப்பர் பெருமானின் திருவுருவம் வனப்புறப் பொலிந்து திகழ்கின்றது.

அந்நாயனுர் பாடியருளி நம்மனோர் பொருட்டுத் திருவடிக் கருவூலமாக நின்று பொன்றாப் பயனருளுகின்ற நான்கு, ஐந்து, ஆறு ஆகிய மூன்று திருமுறைகளினின்றும் தனிப்பெரும் சிறப்பு வாய்ந்த எண்பத்துமூன்று திருப்பாட்டுக்களைத் தொகுத்து அழகுற அவ்வெளியீட்டில் அமைத்துள்ளார்கள். இத்தொகுப்பு செங்நெறிச் செல்வர்களை நன்னெறிக்கு உய்க்கும் நயனுர் நற்றமிழ் மந்திரமாகும். இதுபோன்ற தொகுப்பைத் திருக்கோவிலார் ஒவ்வொருவரும் வெளியிட்டுப் பரப்புவரேல் உண்மைச் செந் நெறியும், மெய்ம்மைத திருமுறைச் செந்தமிழ்த் திருமந்திரமும் ஞாலமெலாம் பெருகுவது மாருவுறுதியாகும்.

குறித்த திருப்பணிக்குத் திரு. ப வே தேவராச முதலியார் முதல் திருப்பாடலேசுரத் தேவததான நிறைவேற்ற ஆணையாளர் ஈருகத் தக்கார் பதினறு பேர் உறுப்பினராயுள்ளார். திருப் பணியில் திருக்குளததினைப் படித்துறையுடன் செம்மையாக அமைததலும், அப்பர் பெருமான் திருப்படிமம் கருங்கல்லில் அமைத்தலும், கல்மண்டபம் ஆக்கலும், அதன்கண் "நமச்சி வாயத் திருப்பதிகம்" பளிங்குக் கல்லில் பொறித்தமைத்தலும் நிகழவிருக்கின்றன. இவற்றிற்கு இருபதினயிர ரூபா மதிப்பீடு. அதற்கு மலாயா நாட்டுத் தமிழன்பர்கள் நன்கொடையாக அளித்த வெண்பொன் நாலாயிரம். அரசினர் நன்கொடை மூவாயிரம். இவை போக எஞ்சிய ரூபா பதின்மூவாயிரமும் பெருமக்கள்பாலிருந்து பெறவேண்டியதிருக்கிறது. மெய்யன் பர்கள் மனமுவந்து தனித்தும் கூட்டாயும் பெரும்பொருள் தொகுத்து விடுத்து வைப்பதுடன் ஏனையன்பர்களையும் தூண்டி விடுத்து வைக்கவும் செய்வார்களாக. இவ்வரும்பணி மிக்க சிவ புண்ணியமாகும். பொருளைக் கீழ்வரும் முகவரிக்கு விடுப் பார்களாக:

"திருப்பணிக்குள அலுவலகம்"
12, போடி செட்டித்தெரு,
திருப்பாதிரிப்புலியூர்.

# செய்திகளும் குறிப்புக்களும்

### (க) 'ஆகாஷ்வாணி' அழிப்புக் கிளர்ச்சி

வானொலி என்னும் தனித்தமிழ்ச் சொல்லைத் தனியாகப் பயன் படுத்த விரும்பாத அரசினர், 'ஆகாஷ்வாணி' என்னும் இந்திச் சொல்லையும் வேண்டுமென்றே இணைத்துக் கூறித் தமிழ்மொழிக்கும், தமிழ் மக்கட்கும் இழிவை உண்டு பண்ணிவரும் செய்தியும், அதனை எதிர்த்து முத்தமிழ்க் காவலர் திரு கி ஆ பெ. விசுவநாதம் அவர்களும் அவரது கருத்துக்குத் துணைசெய்யும் பிற இயக்கத்தினரும் கடந்த 10-6-59 முதல் அறப்போர் நடத்தி வருவதைத் தமிழர் அறிவர். இந்த 'ஆகாஷ்வாணி' எதிர்ப்புப் போர் கடந்த சில நாட்களாக 'ஆகாஷ் வாணி' அழிப்புப் போராக மாறி வருகிறது. கடந்த 21-6-59 இல் திரு. விசுவநாதம் அவர்கள் திருச்சி வானொலி நிலையத்தின் முன்னுள்ள பெயர்ப் பலகையில் காணப்படும் 'ஆகாஷ்வாணி' என்னும் சொல்லை தார்பூசி அழித்தார். அதனால் அவர் கைது செய்யப்பட்டு 2 கிழமைகள் சிறையில் வைக்கப்பட்டார். இவ்வறப்போர் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. நாடோறும் பலர் கைது செய்யப்பட்டு வருகின்றனர். இவ் வறப் போருக்குத் தமிழ்மக்கள் ஆதரவு தந்து தமிழுக்கு வெற்றி தேடித் தருவார்களாக.

### (உ) அஞ்சல் நிலையத்தின்முன் அறப்போர்

திருச்சியில் மற்றுமோர் அறப்போர் துவங்கியுள்ளது அஃதாவது, தமிழ்நாட்டிலுள்ள அஞ்சல் நிலையங்களில் தமிழில் அச்சிட்ட அஞ்சல் அட்டைகளும், அஞ்சல் உறைகளும் பணவிடைத் தாள்களுமே வழங்கப் படல்வேண்டு மெனக் கோரிக் கடந்த சிலநாட்களாகத் திருச்சி தெப்பக் குளம் முன்பு திரு. அரங்கரத்தினம் என்பார் உண்ணாநோன்பு இருந்து வருகிறாராம்.

**குறிப்பு:** அரசினர் துரிதமாக இந்தியைப் பரப்பத் திட்டமிட்டு அதனைச் செயற்படுத்தவும் துவங்கியுள்ள இந்நேரத்தில் இத்தகைய எதிர்ப்புப் போராட்டங்கள் மிகமிக இன்றியமையாதனவேயாகும். இதற்கு வழிகாட்டிகளாக அமையும் திருச்சித் தீரர்களைப் பாராட்டு கிறோம்.

### (ங) அயல்மொழி கற்க அமைச்சர் தரும் அறிவுரை

''மக்கள் தம்முடைய மொழியை அறிந்து இன்புறவும், அதனை மேலும் வளம்பெறச் செய்யவும் வேறு சில அயல்மொழிகளைக் கற்றறிதல் வேண்டும். இதனால் பிற மொழிகள்மீதுள்ள வெறுப்பை அகற்றவும் முடியும்'' என்று, கடந்த 26-6-59 இல் சென்னையில் நடைபெற்ற உருது மொழிக் கழக ஆறும் ஆண்டுவிழாவில் பேசிய அமைச்சர் திரு. பக்த வத்சலம் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

**குறிப்பு:** அமைச்சரவர்கள் தரும் அறிவுரை நல்ல அறிவுரைதான். பிறமொழி அறிவும் தேவை என்பதைத் தமிழறிஞர் எவரும் மறுத்த தில்லை. ஆனால், அவரவர் விரும்பிப் பிறமொழிகளைக் கற்றல் வேறு. பிறமொழிக்கு அடிமையாவது வேறு. ஒருமொழி அரசியல் காரணமாகப் பிற நாட்டவர்மீது வலியத் திணிக்கப்படுமானால் அது மொழி ஆதிக்கத் தின் பாற்படும். இந்தி இந்நாட்டில் அவ்வகையிலேயே புகுத்தப்படு

கிறது. இதைத்தான் நாட்டுப் பற்றும் மொழிப்பற்றும் உடையோர் வெறுக்கின்றனர். இதைக் கருத்தில் கொண்டோ என்னவோ அமைச்சரவாகள், பிறமொழிகள் அனைத்தையும் யாரோ வெறுப்பதுபோல் பேசுகின்றார்போலும்! அஃது உண்மையாயின் வருந்தத் தக்கதே.

### (௪) ஆங்கிலத்தின் தேவைபற்றி முன்ஷி கருத்து

"தற்கால உலகப் போககிற்கு மட்டுமன்றித் தம்முடைய சொந்த மொழியை வளர்த்துக் கொள்வதற்கும் நல்ல ஆஙகில அறிவுதேவை" என்று 26-6-59 இல் மீனம்பாக்கம் ஜெயின் கல்லூரியில் பேசியகாலை திரு. கே. எ. முன்ஷி அவர்கள் குறிப்பிட்டார்கள். அவர் மேலும் பேசியபோது குறிப்பிட்டதாவது: "சிலா ஆஙகிலத்தை வெறுக்கின்றனர். அஃது உலகப் பொதுமொழி என்பதை அவர்கள் உணரவேண்டும். நான் 1951 இல் ரோமுக்குச் சென்றிருந்தபோது அங்கு நான் ஆங்கிலத்தில் பேசியதை அஙகு வந்திருந்த அயல நாட்டினர் பலரும் நன்கு புரிந்து கொண்டனர்," என்று கூறினர்.

**குறிப்பு:** ஆஙகிலம் உலகப் பொதுமொழி என்பதைப் பல அறிஞர்கள எடுத்துக காட்டி வருகின்றனர். இங்கும் அடுத்தடுத்து எடுத்துக் கூறியும் இநதிவெறியர்கள பலருக்கு இன்னமும் தெளிவு பிறக்கவில்லை. திரு. முனஷி போன்றோர் அவவப்போது ஆஙகிலத்தின் சிறப்புப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பதால் நல்ல பலன் விளையும் என்று நம்புகிறோம்.

### (௫) சீக்கியத் தலைவரும் செப்புகின்றார்!

ஆஙகிலமே இந்தியாவுக்குப் பொது மொழியாக இருக்கத் தகுதியுடையது என்பதைப் பல பெருந்தலைவர்கள் கூறினர்கள—கூறியும் வருகின்றனா. அங்ஙனமே சீக்கியத் தலைவராகிய மாஸடர் தாராசிங அவர்களும அண்மையில் செய்தி எழுத்தாளரிடம் பேசியகாலை "இநதிய அரசின் ஆட்சிமொழியாக ஆஙகிலமே தொடர்ந்து இருந்தால் அது இந்தியாவுககு நன்மை பயக்கும். ஆங்கிலம் உலகப் பொது மொழியாக மாறிவருவதால் அதனையே நாம் தொடர்நது வைத்துககொள்ள வேண்டும்," எனறு கூறியுள்ளார்.

**குறிப்பு:** இங்ஙனம் சீக்கியத் தலைவரும் செப்பியிருப்பது வரவேற்கத் தக்கதே.

---

## "சென்னைச் சிவனடியார் திருக்கூட்டம்"

இதன் சார்பாகத் திருக்கழுக்குன்றத்தில் 14 ஆம் ஆண்டு ஆனி மகத்திருமுறை இனனிசைப் பெருவிழாவும், திருககூட்டத்தின் 60 ஆம் ஆண்டு நிறைவு விழாவும நிகழும் விகாரி, ஆனி 24 (8—7—'59) புதன்கிழமை முதல் 27 (11—7—'59) முடியத்தக்க சான்றோர், அறிஞர், இசைவல்லார், திருமுறைச செல்வர் முதலியோர்களின் தலைமை தாங்குதல், விரிவுரை, இசையரஙகு முதலிய பல சிறப்புக்கள் நிகழுமெனத் தெரிகின்றது. திருக்கூட்டத்தாரும் ஆசிரியர் இளவழகனும் செந்தமிழுக்கும் சிவநெறிக்கும் ஆற்றிவரும் சீரிய தொண்டு பெரிதும் போற்றற்குரிய தொன்றாகும்.

---

# மதிப்புரை

(க) **“ தமிழ் வளர்த்த பேராசிரியர்கள் ”**

[இதன் ஆசிரியர் திரு. பி. சி. **கணேசன்,** பி.எஸ்.ஸி., பி.டி. அவர்கள். இதன் விலை சாதா பதிப்பு: ரூ. 1.75. நூலகப் பதிப்பு: ரூ. 2-25. வெளியீடு: இமயப் பதிப்பகம், நாகப்பட்டினம்.]

இதன்கண் தமிழ்ப் பெரும் சான்றோர் ஒன்பதின்மர் வரலாறுகள் மிகத் தெளிவாக வரையப்பட்டுள்ளன. அவ்வொன்பதின்மா திருப் பெயர்களும் வருமாறு:

க. மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, உ. வித்துவான், தியாகராசச் செட்டியார், ங. டாகடர் உ. வே. சாமிநாதய்யர், ச. பரிதிமாற் கலைஞர், ரு. மறைமலையடிகள், சு. பண்டிதமணி கதிரேசச செட்டியார், எ. தமிழ்த்தென்றல் திரு. வி. க அ. பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார், கூ. சுவாமி, விபுலானந்தர்.

ஒவ்வொருவர் வரலாற்றிலும் அவரவர் தம் பெருமை மிக்க பிறபபு, வளர்ப்பு, கல்வி, ஆசிரியப்பணி, தமிழ்த்தொண்டு, ஆககித தந்துள்ள தமிழ் நூல்கள், தனிசசிறப்புப் பண்புகள், வாழ்க்கை வரலாறுகள், இறையடிக்கலப்பு முதலிய பலவும் குறித்த ஆணடுகளுடன் மிகசசெம்மையாகக காணப்படுகின்றன. இவவரலாறுகள் தமிழாசிரியர்கட்கும், மாணவாகட்கும், செந்தமிழ் வளர்சசிக்குச சிறப்புறப் பாடுபடும் மெய்யன்பர்கட்கும், கழகம், படிப்பகம், நூலகம் முதலிய இடஙகட்கும் சிறப்புத் தருவன. உயர்நிலைப்பள்ளி, கல்லூரி முதலிய விடங்களில் வரலாற்றுத் துணைப்பாடமாக வைத்துப் போற்றுதற்குரியன. நூலாசிரியர் அரும் பாடுபட்டு வரலாற்றுக்கு வேண்டுவன அனைத்தும் வரன்முறை வழுவாது தொகுத்துள்ளார். இனிய எளிய நடை, திட்பநுட்பச செறிவு முதலிய நயங்கள் அமைந்தன. தமிழக வரலாறுகளைச சால்புற விளக்குவன. செந்தமிழன்பர்கள் எல்லார் கையிலும் இன்றியமையா திருத்தற்குரியன.

(உ) **“ இலக்கியப் படைப்பு ”** (முதற் பாகம்)

[இதன் ஆசிரியர் **வித்துவான்** நெல்லை, க. **சுப்பிரமணியன்.** தலைமைத் தமிழாசிரியர், பேரன் புரூக் உயர்நிலைப்பள்ளி, சுரண்டை. விலை ரூபா ஒன்று. கிடைக்குமிடம்—மணி நிலையம், வேம்படித் தெரு, திருநெல்வேலி நகர்.]

இந் நூலின்கண் இளமைப்பருவ முதல், உரைப்பாட்டு நடை யீறுகப் பதினைநது அரிய பொருள்கள் பற்றிய சிறப்புக்கள் காணப்படுகின்றன. ஒவ்வொரு பகுதியும் எல்லாரும் கற்றுத் தெளியவேண்டிய இன்றி

யமையாப் பகுதிகளே. இலக்கியமே ஐம்புல இன்பத்திற்கு மேலான அழியா அறிவின்பத்தைத் தருவதெனப் பல சான்றுகளுடன் நன்கு விளக்கியுள்ளார் ஆசிரியர். பொருளுணமையும், கடவுள் நெறியும், கடவுளைச சார்ந்து பேரின்பமுறுதலும் பிறவும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. இதனைப் பொதுவாகச் செந்தமிழன்பர்களும் சிறப்பாக ஆசிரிய மாணவர்களும் வாங்கியும் வாங்குவித்தும், கற்றும் கற்பித்தும் பயனெய்துவார்களாக.

(௩) “ நான் கண்ட கலைப்புலவர் ”

[ஆசிரியர் திரு. கா. மாணிக்கவாசகர், நூல்நிலையப் பொறுப்பாளர், யாழ்ப்பாணம் மத்திய கல்லூரி—யாழ்ப்பாணம்.]

இந்நூலின்கண் “ கலையென்னும் ” சொற்பொருளை நன்காய்ந்து ஆசிரியர் நிலைநாட்டியுள்ளார். இந்நூலின் தலைவராகிய “ கலைப்புலவர். க. நவரத்தினம் ஆசிரியர் யாழ்ப்பாணம் மத்திய கல்லூரி ” அவர்களின் அரிய வரலாற்றினையும் பெரிய தொண்டினையும் சுருக்கமும் விளக்கமும் பொதுள நூலாசிரியர் செவவிதின் விளககியுள்ளார். கலைப்புலவரவர்கள் 1920 ஆம் ஆண்டில் தோன்றியவர். 1958 இல் இளைப்பாறுதல் பெற்று வாழ்கின்றனர். இவர் தம் வாழ்க்கைத் துணைவியார் திருமதி “ மகேசுவரி தேவியார் ” வீணை, சலதரங்கம், சித்தார், கோட்டு வாத்தியம் ஆகிய நனிமிகு நுட்ப இசைக்கருவிகளை நன்கு மீட்டும் திறலினர். தம் இசைக்கலை யறிவு பலர்க்கும் பயன்படுமாறு ‘ A First Book of Indian Music ’ ‘ Veena Tutor ’ ஆகிய நூல்களை வெளியிட்டவர்கள் எனவும் தெரிகிறது மேலும் வங்ககவி டாக்டர் ரவீந்திரநாத் தாகூரின் கலைககோவிலாகிய “ விசுவ பாரதியில் ” இரண்டாண்டுகள் கலை பயின்றனர் எனவுந் தெரிகிறது. கலைப்புலவரவர்களாலும் பயனுர் பல நூல்கள் வெளிவந்துள்ளன. இவற்றின் விளக்கம் நூலின்கண காணலாம். இத்தகைய நூல்கள் வெளிவருவது கலைவளர்ச்சிக்கும் புலவர்களின் நல்வாழ்விற்கும் பெருந்துணையாகும். அழகிய பதிப்பு. பலரும் கற்றுப் பயனும் இன்பும் எய்தற்குரிய பண்பு வாய்ந்தது. கலைப்புலவரின் வரலாற்றை விரித்து எழுதுவார்க்குப் பெருந்துணை புரியும் பெற்றியது.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.




சிலம்பு ௩௩ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௦, ஆடி | ஆகஸ்ட், 1959 | பரல் ௧௨

# ஆயிரம் பிறைஆர் அருந்திறல் நாவலர்
# சோமசுந்தர பாரதியார்

"எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே" என்பது பழந்தமிழ்ச் சான்றோர் பட்டறிவாற் கண்ட பயனார் முதுமொழி. அம் முதுமொழியினை மறையெனக் கொண்டு முயன்று பிறரை வாழ்வித்துத் தாமும் வாழ்ந்து வளமுற்றுத் திகழ்ந்தோர் நம்முன்னோர். அவர்கள் உள்ளம் உரை உடல் மூன்றினானும் வாய்மையும் தூய்மையும் அகலாது வாழ்ந்த வள்ளியோர் தாய்மொழி, தாய்நாடு, தனிப்பெரு நன்னெறி ஆகிய மூன்றினும் உயிரினும் சிறந்த ஒப்பிலாக் காதலர். இம் மூன்றினும் முழுக்காதல் கொண்டு வாழ்பவரே நனிநாகரிகம் படைத்த தனித்தகலைமை வாய்ந்தவராவா தாய்மொழி முதலிய மூன்றும் முறையே உள்ளம் உடல் உயிர் என்னும் நீங்காப் பெற்றிமை வாய்ந்ததாகும். பண்டுள்ளோர் தமிழில் நூற்றுக்கு இரண்டு விழுக்காடு வடசொல் வந்து புகுந்த காலத்தே மிகவும் விழிப்பாகவிருந்து தடைவிதி விதிப்பாராயினர். அவ்விதி வருமாறு:

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே." —தொல். எச். ௫.

இவ்விதியினால் இருக்கிற செந்தமிழ் மொழிச் சொற்கு வேறோர் அயன்மொழிச் சொல்லைப் புகுத்தாது நீக்கமுடியாத பெயர்ச்சொற்கள் வருமாயின் தக்கவாறமைத்துக் கொள்ளத் தந்த தடைவிதியே யாகும். எடுத்துக்காட்டாகக் கிருஷ்ணன் என்னும் சொல் தமிழில் வரநேர்ந்தால் அப்பொருள்

பயக்கும் கரியன் என்று ஆளவேண்டுமென்பதேயாம். அவ வுண்மை சதகரணி என்பதை "நூற்றுவர்கன்ன"ரெனவும், சாம்பு நதம் என்பதை "நாவலொடு பெயரிய பொலம்" எனவும் அறி வொடுபொருந்தக் கையாண்டுவந்த பெருவழக்கானுணரலாம. பின்னுள்ளார் அளவிறந்த மடியானும், இன்றியமையாது வேண டத்தக்க தாய்மொழிப்பற்றின்மையானும், பிறமொழிக்கும் பிற மொழி பயலினர்க்கும் அடிமைப்பட்டுத் தன்மானம் இழந்த தன்மையானும், புன்னெறி புகுந்த புரையானும் அம்முறை யினைக் கைவிட்டு மனம்போனவாறு ஒழுகி இனப்புன்மை யாக்கினர்; இன்றும் ஆக்குகின்றனர். என்னே இவர்தம் புன்மை. இவர் வழியே நம் தாய்மொழி சென்றிருப்பின் ஆந் திரம் முதலிய தமிழ்ச்சேய் மொழிபோல் தூயதமிழும் ஆரியச் சேய்மொழியாய் உருமாறி அழிந்துபட்டிருக்கும.

அங்ஙனம் ஆகவிடாமல் தடுக்கக் கன்னித்தமிழின் மன்னிய மக்களாய்ச் சில தன்மானச் சான்றோர் தோன்றினர். அவருள் எல்லாவகையானும் தலையாய நல்லார் ஆசிரியர் மறைமலையடிக ளாரும, அவர்தம் மாணுக்கர் பல்லோருள்ளும் சிறந்த நம் நாவலர் பாரதியாரும் ஆவர். இவ்விருவரும் இருகண் போன்றும், அகம்புறம் போன்றும் அரும்பெரும் தொண்டாற்றித் தமிழன் னையைப் பண்டுபோல் அரியணையமர்ந்து வாழச்செய்துள்ள தாழ்வில் சான்றோராவர்.

நம் நாவலரவர்கட்கு இப்பொழுது எண்பதாண்டு நிறைவுற்று எண்பத்தோராவதாண்டு 27-7-59 முதல் நிகழ்கின்றது. அப் பெருந்தகையார் "தமிழைப் பழித்தாரைத் தாய்தடுத்தாலும் விடேன்" எனப் பெருமுழக்கம் செய்து வெற்றியும கொள்ளும் உற்ற பேராண்மை யொழுக்கினர். ஆயிரம் பிறைகண்டார் பெருமை யினைத் திருவிளையாடற் புராணத்துள் "திங்களாயிரம் தொழு தாள்" எனப் பிட்டு வாணிச்சியம்மையைச் சிறப்பிக்குமாற்று னுணர்க. ஆயிரம் பிறைக் கணக்குச் சிறிதேறக்குறைய எண்பதி யாண்டுகள் ஆகலாம். இந்தி எதிர்ப்புக் காலத்துத் தமிழ்க் கொடி தாங்கித் தன்னொப்பில்லாத் தானைததலைவராய்த் திகழ்ந்து வெற்றிகொண்டமையினை எல்லா வுலகமும அறியும். அஞ்ஞான்று அடுத்தடுத்தாற்றிய அறந்திறம்பா மறஞ்சார் ஆண்மை மொழி அனைவரையும விழிப்பூட்டிப போர்முனைக்கு இழுதது வந்தது. அம்மட்டுமன்று; "கெடுக சிந்தை கடிதிவள துணிவே" என்பதற்கிணங்கத் தாய்மார்களும் போர்முனைபுக்கு ஆர்வமுடன் வீரத்தொண்டுபுரியும் வியத்தகு நிலையினை விளைத் தது. அஞ்ஞான்று முதலமைச்சராக இருந்து அடாது செய்த சர்க்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியாருக்கு நீண்டதோர்

ஆங்கில வெளிப்படைக் கடிதம் தெளிவுற விடுத்தனர். இயற்கை யும் செயற்கையுமாய நுண்ணறிவும், சட்ட நுணுக்கமும், மன்ற மாண்பும், அஞ்சா நெஞ்சமும், அறமுறையார்வமும், மற மாண்பும் ஒருங்கமைந்த இவர்தம் வடுவிலா நடுநிலை எழுத்து நாடெங்கும நல்லதோர் விழிப்பை உண்டாக்கியதோடு எதிரி களுக்கு ஆற்றொணு அச்சத்தையும் மாற்றொணு அகச்சோர்வை யும், மனத்தளர்ச்சியையும் நல்கி மருளச் செய்தது. நம் நாவலர் கோமானை நற்றமிழ் வாழவும், நாடு செழிக்கவும், தமிழர் தனி நாகரிகம தழைததினிதோஙகவும், அன்பு அருள் இன்பம், அற முறை வாழ்வு, ஒற்றுமை ஒழுக்கம் உலகெலாம் ஓங்கி அனைத் துயிரும் நலமுறவும் எண்பத்தோராண்டுகள் எய்தியமைபோன்று எண்ணிலாண்டுகள் எய்தி வாழ்க பல்லாண்டென வாயார வாழ்த்து வோமாக. ஆனேறனைய அண்ணலாரின் வாழ்க்கைச் சுருக்கம் நற்றமிழரனைவர்கட்கும் உற்ற பெருந்துணையாகும். அவர் யாததளித்த அரும்பெருந் தமிழ்நூல்கள் என்றும் குன்று எழி லொடு திகழும் ஈடில் வைப்பாகும் அவைகளைக் கற்குந்தோறும் எண்ணுந்தோறும் உண்மைப் பெரியாரைப் பேணும் வண்மைய ராவோம பெரியாரைப் பேணும் பெற்றி நற்றமிழர்க்கேயுரிய பிறப்புரிமையாகும். அததகைய பெருவரலாறு வருமாறு:

பிறப்பு

இற்றைக்கு எண்பதாண்டுகளுக்குமுன் தென்றலும் பொருநையும் மன்று நிறை தமிழும் இன்றும் குன்று வளமுடன் இலஙகு எழின் நகராகிய திருநெல்வேலிச் சீர்மைக்கண் நம் பாரதியாரவர்கள் திருத்தோற்றமுற்றனர். அவர்தம் முழுப் பெயர் ‘சச்சிதானந்த சோமசுந்தர பாரதியார்’ என்ப இவர்தம் அருமைத் தந்தையார் எட்டயபுரம் குறுநில மன்னர் அரண் மனைப் பண்ணைத் தலைவராய் வாழ்ந்துவந்த எட்டப்ப பிள்ளை யென்னும் சுப்பிரமணிய நாயகராவர். பிள்ளைப்பேற்றின் பொருட் டுப் பெற்றோர்கள் செல்வருறை திருநெல்வேலி சென்றிருந்தனர். திருவருளால் பிள்ளை பிறந்து ஒரு திங்கள்காறும் அந்நகர்க் கண்ணே உறைந்திருந்தனர்.

வளர்ப்பு

அதன் பின்பு இருமுதுகுரவரும் பெருந்திறற் சேயுடன் இறைவன் திருவருளால் எட்டயபுரமாகிய மூட்டில் வளஞ்சார் தம்மூர்க்கு மகிழ்வொடும் வந்தனா வந்ததும் பிள்ளையின் தோற் றமும் தனிப்பேரெழிலும் குறுநில மன்னரின் அரும்பெறற் றுயாகும் உலகமாதாவென்னும் இலட்சுமியம்மையாரின் கண்ணை யும் கருத்தையும் ஒருங்கு கவர்ந்தன. அம்மட்டோ? நம்

நாவலராம் நயனுர் பிள்ளையைத் தாமே வளர்த்தல் வேண்டு மென்று நனிமிக விழைந்தனர். பெற்ருேரும் உற்ருேர்ந்துவந்து நல்கினர். இத்தகைய நிகழ்வு எட்டாம் நூற்ருண்டில் நாவலூராகிய நம்பியாரூரர்க்கு நிகழ்ந்ததாகப் பெரிய புராணத்துட் காண்கின்ருேம். உண்மைத் தமிழ்ப்பெருஞ் சானருேர் உடைமை முதலியவற்ருல் பிறருள்ளததை உவப்பிப்பதுமட்டுமன்றி அருந்தவமிருந்து ஈன்றெடுதத நன்மக்களேயும் நயந்தளித்து நிறைவெய்தச் செய்துள்ளாரா என்பது மேற்போந்த வரலாறுகளின் வாயிலாகக் காண்கின்ருேம்.

எட்டயபுர அரசியார் உண்மகிழ் கண்காணிப்பில் நம் பாரதியார் பத்தாண்டுவரையில் மண்களிகூர் அரசிளங்குமரராய் வளர்ந்தனர். செல்வமாய் வளர்த்த அவ்வரசியார் கல்விற் கருத்தூன்றிலர். எனினும் பிற்காலக் கல்வி வளர்ச்சியின் முதலீடாக அரசியார் பன்னிரண்டு ஏக்கர் நிலம் தன்னுரிமையாக வாங்கி நம் பாரதியார் பெயருக்கு எழுதிவைத்திருந்தனர். அதுவே பாரதியாரின் கல்விக்குப் பெருந்துணையாக விருந்தது.

**கல்வி**

அரசியாரின் மறைவுக்குப்பின் நம் பாரதியாரவர்கள் பெற்ருேருடன் வந்துறைந்து வளர்வாராயினர். பதிஞேராவது ஆண்டிலிருந்து நம் பாரதியார் வீர சைவராகத் திகழ்நதனர்.

**தனித்தமிழ்க் காதல்**

மேலும் நம் பாரதியார் தேசிய கவியாகிய சுப்பிரமணிய பாரதியாருடன் இளமையிலிருந்தே இணக்கமறிந்திணங்குங் குணத்தினராய் நெருங்கிப் பழகி வருவாராயினர். நம் பாரதியார்க்குப் பண்டைப் பழந்தொடர்பு கிழமைகொண்டு அகமிருந்து உந்துதலால் அவர் தாய் மொழிக்குந் தாய்மொழியாம் தனித்தமிழின்கண் இனித்த உள்ளங்கொள்வாராயினர். இதற்கேற்றவாறு சூழ்நிலைகளும் வாய்த்திருந்தன. அவர்தம் நுண்மாண் நுழைபுலமும உறுதுணையாயிற்று. அவரை அருந்தவமிருந்து பெற்றெடுத்த தாயார் பேசிவந்த மொழி தெலுங்காகும். அதனை அறவே மறந்தனர் நம் பாரதியார் மேற்புல வரலாற்றிலும் இதுபோன்ற நிகழ்ச்சியொன்று காணப்படுவதனை இதனுடன் ஒப்புக்காண்க. அது வருமாறு :

பேருலகு புகழும் பேராண்மை வாய்ந்த பிரஞ்சு நாட்டு மன்னன் நெப்போலியனின் தாய்மொழி இத்தாலியாகும். ஆனல் அம்மாண்பார் மறவன் உள்ளம் உரை உடல்களால்[3] தூய பிரஞ்சு மன்னனேயாயினன். பிரஞ்சு மொழியே அவன் உரஞ்சார் உறுமொழியாய்த் திகழ்ந்தது.

நாவலர் பாரதியார் ஆங்கிலத்தையே ஊன்றிக் கற்கத் தூண்டப்பெற்றனர். எனினும் அவர் உள்ளம் கன்னித்தமிழின் பாட்டு மன்னி நின்றது. அதனால் எட்டயபுரம் திருக்கோவிலின் கண்ணுள்ள ஊர்தி வைப்பறையில் பாவலர் பாரதியாருடன் மறைந்துறைந்து செந்தமிழ்க் கல்விகற்றுத் திளைத்தனர். அதன் பயனாக இஞ்ஞான்று நம் பாரதியார் அஞ்சாநெஞ்சம் படைத்த தனிதமிழ்ப் பேராசிரியராகத் திகழ்கின்றனர். தமிழகமும் அம்மிக்காரைத் தக்கவாறு பாராட்டுகின்றது.

#### கலைக்கல்வி

பதினோராம அகவை வரையும் கல்வி கற்கும் வாய்ப்பு எய்தப்பெறாத நம் பாரதியார் எட்டயபுரத்தில் எட்டாம் வகுப்பு வரை கல்வி கற்றனர். "விளையும் பயிர் முளையிற்றெரியும்" என்பதற்கிணங்க இவர் பூங்கணித பாடத்தில் வல்லுநராயினர். பின்னர்த் திருநெல்வேலியில் சி. எம். எஸ். கல்லூரியில் இளங் கலைவாணர் (F. A.) பட்டம் பெற்றனர். இஞ்ஞான்று அறிஞர் சாஃப்டர் (Schafter) துரைமகனாரின் நற்சார்பு நம் பாரதியாருக்கு எய்திற்று. பின் சென்னைக் கிறித்துவக் கல்லூரியிற் கற்றுக் கலைவாணர் (B. A) பட்டம் பெற்றனர். அப்பொழுது டாக்டர் மில்லர் துரைமகனாரின் நற்றுணை நயமுற எய்திற்று. பின் சட்டம் பயின்று பட்டம் பெற்று அலுவலும் பார்த்தனர். அஞ்ஞான்று கலைவல்லுநர் (M A.) நிலை எய்தினர். இத்துறையில் நம் பாரதியார் தமிழை முதன் மொழியாகவும், மலையாளத்தைத் துணைமொழியாகவும் கற்று மாண்புற்றனர். இந்நாளில் இவர்தம் ஆசிரியன்மாராகத் திகழ்ந்த பெரியார் பலருள்ளும் ஆசிரியர் மறைமலையடிகளாரும், வி. கோ. சூரியநாராயண சாத்திரியாரும் சிறந்தோராவர்.

#### மனையறமாண்பு

நம் பாரதியாருக்கு அகவை பதினைந்தில் முதல் திருமணம் செந்நெறித் திருமாமறை வாயிலாகச் சிறப்புற நிறைவெய்தியது அககட்டிளம் பருவத்தே நம் பாரதியார் தம் அருமைத் தந்தையாரையும் தம் அன்பறிவாற்றல்களாலிணக்கித் தெய்வநாட்டம் சிறிதும் வழுவாது செந்தமிழ்த்திருமணம் முடித்துக்கொண்டனர் என்றால் அது மிகவும் போற்றற்குரிய தொன்றாகும. ஏறத்தாழ அறுபத்தைந்து ஆண்டுகளுக்குமுன் நம் பாரதியார்க்கு இததுணிவு பிறந்தது செந்தமிழன்னையின் திருவருளேயாம். இதனை யுன்னுவார் இத்துணையாண்டுகளாகியும் நம்மனோரிற் பலர் நம்மவரும் நம்மொழியும் அல்லாத ஆரியரையும் ஆரிய மொழியையும் உடும்புப் பிடியாகப் பற்றிக்கொண்டு

கடும் பற்றுள்ளத்தால் செய்வதும் சொல்லுவதும் இன்ன வென்று புரியாது திருமண முதலிய சடங்குகளைச் செவிடரும் மூகரும் போன்று செய்து நற்பயனிழக்கின்றனர். ஒருவர் மொழியினை ஒருவரறியாமல் இருவர் நண்போ காதலோ கொள்ளுதல் முடியுமா? ஒருவேளை கொள்ளினும் நாளடைவில் ஒரு மொழியாளராக ஆனுற்றான் உண்மை யன்பினராதல் கூடும்.

நம் பாரதியார் தம் திருமணத்தில் ஆரியப் புரோகிதரையும் ஆரிய மொழியினையும் அறவே ஒழித்துக்கட்டிச் செந்நெறி ஓதுவார் தம்மைக்கொண்டு தேவார திருவாசக முதலிய திருமுறைகளை இனிமையுற ஓதுவித்துத் தாம மணம் புரிந்துகொண்டனர். இதனால் அவர்தம் மெய்ம்மைச் சைவசமயப்பற்று நன்கு விளங்கும். இந்நெறியொழுகுவதே நற்றமிழரின் நயனுர் தலைக்கடனுகும். சிலர் தமிழ்த் திருமணம், சீர்திருத்தத் திருமணம் எனக்கூறிக் கொண்டு தெய்வத்தை மறுத்துச் செய்கின்றனர். இது தமிழர் பண்பாடாகாது என்னும் மெய்ம்மையினைப் பாரதியார் திருமணம் நன்கெடுத்துக் காட்டுகின்றது. தந்தையார் ஆரியத்தையும் ஆரியரையும் ஒழித்துத் திருமணம நிகழ்ந்தால மஙகை மாங்கலியம் இழப்பள் என மறுத்தனர். அவற்றைப் பொருத்தமற்றதென எடுத்துக்காட்டி இணக்கினர் என்பதூஉம ஈண்டு நினைவு கூரற்பாற்று.

குடும்பம்

கற்பும் பொற்பும் ஒருங்கமைந்த முதல் மனைவியராம் மீனுட்சியம்மையார்பால் அங்கயற்கண்ணம்மை ஆரருளால் ஆண்பாலர் இருவரும் பெண்பாலர் ஒருவரும் தோன்றினர்.

முதல் மகன் இராசாராம் பாரதியார் எனப்படுவர். இவர் நாட்டாண்மைக் கழக மருத்துவ நிலையங்களில் மிக்க புகழொடும் பணியாற்றி இப்போது எட்டயபுரத்தில் மருத்துவ நிலையம் அமைத்துப் பொதுப்பணி யாற்றுகின்றனர். எட்டயபுரத்தில் நம் பாரதியாரவர்களால் "தமிழகம்" என்னும் பெயருடன் வளமனை யொன்று கட்டப்பட்டுத் திகழ்கின்றது. அதன்கண் இம்மகனுர் வாழ்ந்து வருகின்றனர்.

இரண்டாவது மகனுர் இலக்குமிரதன் பாரதியாராவர். இவர் எம்.ஏ., பி.எல்., பட்டம்பெற்று வழக்கறிஞராயவர். இப்பொழுது சமுதாயநல மாநில அலுவலராகப் பணியாற்றிவருகின்றனர். சென்னை அடையாறு காந்தி நகரில் ஒரு வளமனையமைத்து அதன்கண் வாழ்ந்து வருகின்றார்.

அருமைப் பெண்மகள் இலட்சுமி அம்மையாராவர். இவ்வம்மையாருக்கு நம் பாரதியார் தம்மைப் பேரன்புடன் அகவை

பதினொன்று முடிய மகவினும் சிறப்பாக வளர்த்து மாநிலம் ஏக்கர் பன்னிரண்டும் அறியாப்பருவத்தே அமைத்து வழங்கிய அரசியாரின் திருப்பெயராகிய இலட்சுமியம்மையார் என்னும் நற் பெயரினையே செய்ந்நன்றி மறவாச் சிறப்பாக இட்டு வழங்குவா ராயினர். இவ்வம்மையார் முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் திரு. எல். கிருட்டிணசாமிப் பாரதியாரின் வாழ்க்கைத் துணைவியா ராவர்.

இரண்டாம் மனைவி

இரண்டாம் மனைவியார் மீனாட்சி நாட்டினார். அவ்வம்மை யாரின் பெயர் வசுமதி என்பதாகும். இது கலப்புத்திருமணம். இவ்வம்மையார்பால் பெண்கள் இருவர் பிறந்தனர் முதன்மகள் திருமதி மீனாட்சியென்னும் பெயரினள். இவ்வம்மையார் எம்.ஏ., வரை கற்றவர். தந்தையாரின் வீர சைவ ஒழுக்கத்தைப் பின் பற்றிக் கணவரொடு வாழும் கற்பினராவர்.

இரண்டாம் மகள் திருமதி லலிதா ஆவர் இவர் டாக்டர் ஒரு டாக்டரை மணந்திருக்கிறார். இப்பொழுது மதுரை மருத்துவக் கல்வி விரிவுரையாளருள் திருமதி லலிதா ஒருவராவர்.

வாழ்க்கைப் பணி

நம் பாரதியார் 1905-லிருந்து பதினைந்து ஆண்டுகள் தூத்துக்குடியில் வழக்குரைஞராகப் பணியாற்றினர். அக் காலத்து நாட்டுப்பற்றின் முடிமணியாக விளங்கிய வ. உ. சிதம் பரனாரிடம் நெருங்கிப்பழகினர். அவர் பாரதியாரின் அறிவுத் திறனை வியந்து தங்கள் ஒன்றுக்கு வெண்பொற் காசுகள் ஒரு நூறு நல்கித் தம் கப்பல் கம்பெனிச் செயலாளராக அமர்த்திக் கொண்டனர். வீர சிதம்பரனாரின் கூட்டுறவு நம் பாரதியார்க்கு உறுதுணையாகி இன்பம் பயந்ததேனும், உடனடியாகத் துன்ப மும் பயவாநின்றது பாரதியாரை அஞ்ஞான்றை மாட்சியில் ஆட்சியினர் அச்சுறுத்தினர். அதற்கெல்லாம உரனுடை யுள ளத்தினராய் அஞ்சாது நரிமுன் அரிபோன்று விஞ்சி நின்றனர்.

நாட்டுக்கோட்டையாரின் வழக்குகள் பலவற்றையும் நன் முறையில் வென்று கொடுத்தனர். அவர்தம் வேண்டுகோளுக் கிணங்கி 1920 ஆம ஆண்டு மதுரைவந்து வாழ்ந்தனர்.

செட்டிநாட்டு அரசர் இராசா சர். அண்ணாமலைச் செட்டி யார் அழைப்பை ஏற்று நம் பாரதியார் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்குத் தமிழ்ப்பேராசிரியராகச் சென்று பணியாற்றினர்.

தமிழர்களைக் காட்டுமிராண்டிகள் என்று தம் தொல்காப் பிய ஆராய்ச்சி நூலில் திரு. மு. இராகவையங்கார் பொருத்த

யின்றிப் புரைபட வரைந்துள்ளனர். அன்னாரின் பிழைபாட்டுரையை வன்மையுறக் கண்டித்து நம் பாரதியாரவர்கள் தொல்காப்பியர் காட்டியது களவறமும் கற்பறமும் ஆகும் எனத் தம் ஆராய்ச்சிவன்மையால் திடுநிலையாளர் எவரும் மறுக்கொணா நிலையில் வலியுறுத்திக் காட்டித் தமிழர்கள் காட்டுமிராண்டிகள் அல்லரென நாட்டினர். அதனைக் கண்டு பாரதியாருடன் பலர் பகைத்தெழுந்தனர் தம் சொல்லாலும் எழுத்தாலும் தம் கூற்று முற்றும் வாய்மையென முடித்துச் செந்தமிழின் தூய்மை காட்டினர் தாய்மைப் பாரதியார்.

நூற்றிரண்டு

1926 இல் 'தசரதன் குறையும் கைகேசி நிறையும்' என்னும் மாசற்ற நூலையும், 1929 இல் 'திருவள்ளுவர்' என்னும் நூலையும், 1935 இல் 'சேரர் தாயமுறை' என்னும் ஆராய்ச்சி நூலையும், 1936 இல் 'சேரர் பேரூர்' 'மாரிவாயில்' என்னும் நூல்களையும் நன்முறையில் யாதது வெளியிட்டனர்.

மேலும் "தொல்காப்பியப் பொருட்படலம், அகத்திணையியல், புறத்திணையியல், மெய்ப்பாட்டியல், என்பனவாகிய சீர்மிகு ஆராய்ச்சி நூல்களும் பிறவும் வெளிவந்துள்ளன. இவர் இயற்றிய செய்யுள் நூல்கள் "மாரிவாயில், மங்கலக்குறிச்சிப் பொங்கல் நிகழ்ச்சி" என்பனவாகும்.

தொன்மை அருந்தமிழ் இலக்கண நூலாகிய ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத்திற்குப் பொருத்தமான புத்துரை கண்டு 1942 இல் அரிய நூல் வெளியிட்டுள்ளார்கள். 1947 இல் "மங்கலக் குறிச்சிப் பொங்கல் நிகழ்ச்சி" வெளிவந்துள்ளது. இவையேயன்றி அவ்வபபோது செவ்வையுற வரைந்த பல சிறந்த கட்டுரைகள் பல்வேறு வெளியீடுகளை அணிசெய்து திகழ்கின்றன

பட்டங்களும் பாராட்டுகளும்

நம் பாரதியார், பாவலர் பாரதியாருடன் கூடித்திரிந்த காலத்து இருவர் தம் புலமையையும் வியந்து பேரவையாரால் இருவர்க்கும " என்னும பட்ட வழங்கினர். யாழ்ப்பாணத் தமிழர் சங்கததார் திரு ச. சோ. பாரதியாரின் தமிழ் ஆராய்ச்சியையும் சொல்லாற்றும திறமையினையும் கண்டு வியப்பும் உவப்புங்கொண்டு 1944 இல் "நாவலர்" என்னும் நானிலம் போற்றும மேனிலைப் பட்டம் வழஙகினர்.

மதுரைத் திருவள்ளுவர் கழகத்தார் 1944 சனவரியில் நாவலர் பாரதியாரை அழைத்துப் பெருவிழாக் கொண்டாடி

'மதுரை மீனாட்சி ஆலை' உரிமையாளர் உயர்திரு. கருமுத்து. தியாகராசச் செட்டியார் தலைமையில் பொன்னாடை போர்த்திக் "கணக்காயர்" என்னும் பட்டமும் வழங்கிக் களிகூர்ந்தனர்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தார் நாவலர் பார(தியாரின்) தமிழ் ஆராய்ச்சியையும், தமிழார்வத்தையும் பாராட்டவேண்டு மென்னும் நன்னோக்கதுடன் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவின்போது 'டாக்டர்' என்னும் தனிச்சிறப்புப் பட்டம் வழங்கினர். இதனைத் தொடர்ந்து இராசா சர். முத்தையாச் செட்டியாரவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலேயே ஒரு பொன்னாடை போர்த்து விழாக்கொண்டாடி மகிழ்ந்தனர்.

நாவலர் பாரதியாரின் எண்பதாவது ஆண்டு நிறைவு விழாக் கொண்டாட்டம் மிகச் சிறப்பாக அவர்தம் வளமனைக்கண் கண்டார் உளமகிழ்ந்து களிகூர நிகழ்ந்தது. சுருக்கம் வருமாறு:

தமிழகத்துள்ள பல்வேறிடத்து ஆன்றோர் பலரின் நல் வாழ்த்துககள் வந்து நவிலப்பெற்றன. நாவலர் பாரதியாரவர்கள் "தமிழர்கள் எதையும் சிந்திக்காமல் துஞ்சியே வாழ்கின்றனர். அவர்களின் முன்னேற்றத்திற்குச் சிந்தனையும் அஞ்சாமையும் இன்றியமையாதனவாகும்" என நவின்றனர் மேலும் தமிழுக்குக் கேடு பயப்பவர்களைத் துரத்தியடிக்கவே தாம் வாழ்வதாகவும், ஆரிய வேதம் கேட்கவும் காணவும் பொறுக்காத கொலைபுலை நிறைந்திருப்பதால் அதனை அற்ற மறைத்தல்போல் மறையென்றனர் எனவும் பகர்ந்தனர். ஒழுக்கக்கேடும் மனிதனைக் கொன்று உண்பதும் வேதத்தில் மலிந்துள்ளன என்றனர்.

அண்ணாமலைப் பல்கலைககழகத தமிழ்த்துறைத தலைவா பேராசிரியர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் பாராட்டினர். அவர் துணைவேந்தர் சார்பிலும் பல்கலைக்கழச் சார்பிலும் பாராட்டினர். மதுரைத தியாகராயர் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் சி. இலக்குவனார் பாராட்டினர்.

இராமநாதபுர மாவட்ட நடுவர் திரு. எஸ். மகாராசன் பாராட்டு விழாவிற்குத் தலைமை பூண்டனர். அரிய முன்னுரை நிகழ்த்தினர். சுருக்கம் வருமாறு: 'தமிழுக்கும் தமிழனுக்கும்' பகையானவர்களைப் பாரதியார் நுண்ணறிவால் புறமுதுகிடக் காணும் போர் வல்லார். அவர்தம அஞ்சாநெஞ்சை என்றும் போற்றுதல் வேண்டும். எண்பதாண்டு நிறைந்தும் இன்றும் இளைஞராகவே காட்சியளிக்கின்றார். இன்தமிழின் பண்பெல்லாம் பாயும் பாவலராகத் திகழ்கின்றார். ஐம்பதாண்டுகளுக்கு முன் துணிச்சலாக எவரும் எதுவும் பேசமுடியாது. கப்பலோட்டிய வ. உ. சியுடன் கலந்து பேசித்திரிந்தவர் நம் பாரதியார்.

நம் பாரதியார் மதுரைமாவட்டக் கூட்டுறவு வங்கியிலிருந்து ஒப்பனை செய்யப்பட்ட சாரட்டு வண்டியில் திரளான கூட்டத்திடையே வாழ்த்தும் வாழ்த்தியமும் முழங்க மதுரைத் தமிழ்ச் சங்கத்துக்கு அழைத்துவரப்பட்டனர் பாராட்டுக் குழுத் தலைவர் திரு. பி. டி. இராசன், செந்தமிழ்க் கல்லூரி முதலவர் திரு. ஆர். வி. நாராயணன், தமிழ்ச் சங்கச் செயலாளர் திரு. சோமசுந்தரம், திருவள்ளுவர் கழகத் தலைவர் திரு. கி. பழனியப்பன் முதலியோர தமிழ்ச்சங்க வாயிலில் மிக்க சிறப்புடன் வரவேற்றனர்.

பாராட்டுக் குழுவின் சார்பில் வேலைப்பாடமைந்த வெள்ளிக் கலம் ஒன்று திரு. கி பழனியப்பன் அவர்களால் பாரதியார்க்கு வழங்கப்பட்டது. விழாவை முன்னிட்டுக் காலையில் ஏழைகள் ஆயிரவர்கட்குமேல் சோறளிக்கப்பட்டனர்.

பாராட்டுக்குழுவின் சார்பில் புலவர் முத்துசாமியும், செந்தமிழ்க் கல்லூரிச் சார்பில் அன்புகருணையானந்தாவும், மதுரை எழுத்தாளர் மன்றச் சார்பில் இரவியும், திருச்சித் தமிழ்ச்சங்கச் சார்பில் திரு. வீ. அ. பரிமேலழகரும் வரவேற்பிதழ்களைப் பாரதியாருக்குப் படித்தளித்தனர். விழாவிற்கு வந்துள்ள வாழ்த்துச் செய்திகளைத் திரு. சண்முகம் படித்தார். விழா முதல்வர் நம் பாரதியாரவர்கள் உணர்ச்சி ததும்ப, ஊக்கம் ஓங்க, ஆக்கம் பெருகக் கேட்டார் மகிழக் கேளார் வேட்கத் தமிழ்த்தாயுள்ளம் எழிலுற, தமிழரனைவர்களும் தனித்தமிழாக்கத்தில் தளரா வுள்ளக்கிளர்ச்சியுற ஆக்கமொழி புகன்றனர். திரு. இராமையா நன்றியும் வாழ்த்தும் நவில, விழா இனிது நிறைவுற்றது.

நாமும் நம் பாரதியாரவர்கள் நூற்றாண்டு விழாவும், அதன் மேலெய்தும் வேறு பல்லாண்டு விழாக்களும் விழைவுறப்பெற்று நீடுவாழ அம்மை அம்பலவாணரடியினை இறைஞ்சுதும்.

தாயே தன்னைத் தடுத்தாலும் சாவே வந்திங் கடுத்தாலும்
பேயே யனைய தமிழ்ப்பகைஞர் பிறக்கிட் டோடப் போர்புரிவேன்
ஏயே யென்ன அவர்மாள்வர் என்னுங் கோமான் பாரதியார்
நோயே யின்றி முழுநலத்தால் நீடு வாழ்க வாழியரோ.

# தனிமாண்பு படைத்த சண்முகனூர் மறைவு

இம்மாபெரு முதல்வர் வெள்ளுடை வேந்தர் தியாகராயரின் நினைவுக்குறியாக நிலவும் 'சர். பி தியாகராயர் கல்லூரி'யின் முதல்வராவர். இவர் உருவும், திருவும், அறிவும் ஆற்றலும், அன்பும் அருளும், ஆண்மையும் பண்பும், நண்பும் நாட்டமும் நன்கமைந்த நல்லாராவர்.



ம. கி சண்முகனூர் 1908 ஆம ஆண்டில் தவப்பேற்றால் தோன்றிய தனிச்செல்வர். நன்றாக வளர்க்கப்பெற்றனர் முறையாகக் கற்றுக் வல்லராயினர். மொழியில் ஓங்கிய எம். ஏ, எல். டி. பட்டம்பெற்றனர். பின்னர்ப் பச்சையப்பன் கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியராகப் பாங்குறப் பணியாற்றினர். பின்பு விருதுநகர்க் கல்லூரியில் சின்னாள் பணிபுரிந்தனர் அதன்பின்னர் சென்னை மாநில வண்ணைப் பகுதியில் சர். பி. தியாகராயர் கல்லூரியில் முதல்வராகப் பணியேற்றுப் பெருந் தொண்டாற்றினர்.

விரிந்த மனப்பான்மையுடன் ஒல்லும்வகை ஓவாது உஞற்றிய படியிலாப் பணிகள் பல. அவற்றுள் சில வருமாறு:

சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆட்சிக்குழு உறுப்பினராகவும், ஆங்கிலப்பாடக்குழு உறுப்பினராகவும், பல்கலைக் கழகக் கல்லூரியாசிரியர் கழகத் தலைவராகவும், காஞ்சி பச்சையப்பன் கல்லூரியின் இயக்குநர் உறுப்பினராகவும், சென்னை முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளி இயக்குநர் உறுப்பினராகவும், அதிராம்பட்டினம் • கல்லூரி இயக்குநர் உறுப்பினராகவும், சென்னை மேற்குத் தியாகராயநகர் உயர்நிலைப்பள்ளியின் இயக்குநருறுப்பினராகவும் அமர்ந்து பல்லாண்டு பயனுர் பணிபல புரிந்து அவ்வவற்றை அணிசெய்துள்ளார்கள். நல்லாசிரியர்களுக்கும் மாணவர் கூட்டத்திற்கும் அவராற்றிய தொண்டுகள் அளப்பில.

சென்னை மாணவர் சமூகப்பணித் தலைவராகவும் செயலாற்றினார். ஒய். எம் சி. ஏ. இலக்கியச் சங்கத்திலும், நுங்கம்பாக்கம் இலக்கிய மன்றத்திலும் மற்றும் பல மன்றங்களிலும் பொறுப்பேற்றுப் பெருந்தொண்டு புரிந்துள்ளனர். சென்னைப் பல்கலைக் கழகச் சார்பில், 'யுனஃச்க்கோ' மாநாடுகளில் பங்குகொண்டு மாண்புறு தொண்டுகள் புரிந்துள்ளனர் உலையாவூக்கமளிக்கும் கலை முன்னேற்றத்தில் மிக்க ஆர்வமுடையவர். பேச்சு, எழுத்து, பெருமிதமிக்க யாப்பு முதலியவற்றில் தனி முதன்மை வாய்ந்தவர். சேக்ஃச்பியர் நூலில் தனித்திறல் வாய்ந்த தக்கோர். அந் நூலிலுள்ள நாடகங்களைச் செவ்விய முறையில் எளிய இனிய நடை பொலிய மொழி பெயர்த்துள்ளனர். டாக்டர். அ. சிதம்பரநாதச் செட்டியாருடன் மலேயா சென்று தனித்தமிழ்ப் பணியாற்றிய சால்பினா அத்தொடர்பாக இந்தியாவில் "மலேயாத் தமிழர் சங்கம்" நிறுவித் தொண்டாற்றியவர்.

இடையே ஆறுதிங்களாகப் புற்று நோயால் நலிவுற்றனர். 29-7-1959 புதன்கிழமை காலைத் தம் இல்லத்தில் இறையடி எய்தினர். இவ்விழப்பு ஈடு செய்யவொண்ணாத பேரிழப்பு. மிகவும் வருந்துகின்றோம் அப்பெரியார் ஆவி திருவடி நிழலில் அழிவில் இன்பம் அடையுமாக இவர்கட்கு அருமை வாழ்க்கைத் துணைவியும், ஆண்மக்களிருவரும், பெண்மக்கள் மூவரும் உளர். இத்தகைய குடும்பத்தாருக்கு எங்கள் பரிவும் ஆறுதலும் என்றும் உரியவாகுக.

## "சிலப்பதிகாரம்"

[வெண்பாவூர், பொ. திருஞானம்]

செந்தமிழ்க் காப்பியமாம் சிலப்பதி காரமதில்
நந்தமிழர்க் கற்பினையே நயமுடனே கூறினரே!
செந்தமிழ்ச் செல்வரெலாம் செம்மையுற அறிந்ததனை
நந்தமிழர் வாழ்வினிலே நிறையுறுக என்றனரே!

முத்திறமும் முறையாக முன்னோர்தம் வாழ்வினையே
தித்திக்கும் தேன்தமிழில் தெவிட்டாநற் பாவாக
இத்தரணி இனிதுறவே எழுதிவைத்த இளங்கோதான்
சித்திக்கும் வழியெனவே செப்பிவிட்டார் செகமறிய.

# திருவள்ளுவர் சமணரா?

[திரு. A. பாலசுந்தர குருக்கள்]

(செல்வி சிலம்பு ௩௩, பரல் ௧௧, ௫௧௩-ஆம் பக்கத்தொடர்ச்சி)

திருக்குறள் அறம் பொருள் இன்பம் ஆகிய மூன்றையே முப்பாலாகப் பகுத்துரைக்கின்றது. 'வீடு' என்பதைக் கூறவில்லை. பரிமேலழகர் 'வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகலின், துறவறமாகிய காரண வகையாற் கூறப் படுவதல்லது இலக்கண வகையாற் கூறப்படாமையின், நூல் களால் கூறப்படுவன ஏனை மூன்றுமேயாம' என்று கூறுவர். பரிமேலழகர் கூற்று எச்சமயத்துக்குப் பொருந்தினும் சைன தருமத்துக்குப் பொருந்தாதென்பது திண்ணம். எவ்வாறெனின், சைன தருமத்துள் மோட்சம் ஒரு திரவியம் என்று கூறப்படு கின்றது. இதனைச் சிந்தாமணிச் செய்யுளாலும் தத்துவார்த்த சூத்திரத்தாலும் உணரலாம் வீடு பேறறையும் பொருளாகக் கணக்கிட்டு அதனைப் பாவமோட்சம் திரவிய மோட்சம் என இருவகைப்படுத்தி இலக்கண வகையால் கூறுவதே சைன தரும வழக்காகும். வள்ளுவர் சைனராக இருந்திருப்பின் வீடுபேற்றை இலக்கண வகையால் உணர்த்தி இருப்பார். அங்ஙனம் உணர்தலுவதே சைன தருமத்தின் முடிபாகும்.

சைன தருமம் ஆகிய நிகண்ட வாதம் காட்சி, ஞானம், ஒழுக்கம் ஆகிய மூன்றையும் அடிப்படையாக் கொண்டது. சைன தரும நூல்கள் இவற்றையே முறைபபடுத்திக் கூறுகின் றன. திருக்குறள் அறம பொருள் இன்பம் என்ற முறையை வலியுறுத்துகின்றது என மேலே குறிப்பிட்டேன். இங்கு அதன் விளக்கத்தைக் காண்போம்.

'நற்காட்சி நல்லறிவு நல்லொழுக்கம் நன்கமைந்த
வுட்காத காப்பிவையே யோருங்கால்—திட்காது
தீவினைவந் தூறுமோ திண்மையா லுண்மை யினைப்
பாவனையால் மேவுதலே பாங்கு:' —ஜீவ சம்போதனை-௩அ௪.

நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் ஆகிய இவை மூன்றுமே தீவினை வராமல் தடுப்பதற்கேற்ற சிறந்த காப்பாம் என்பது மேற்கண்ட செய்யுளின் கருத்து ஆகும். பிற சைன தரும நூல் களும் இவ்வாறே இவை மூன்றையுங் கூறியே வீடுபேற்றை வலி யுறுத்தும். அறம், பொருள், இன்பம், வீடு என்ற முறையைச் சைன தரும நூல்களில் காணவியலாது. ஆதலின், அறம்,

பொருள், இன்பம், வீடென்ற முறை சைன தருமத்துக்கு மாறான முறையென்றே கூறலாம்.

பவணந்தியார் சைன சமயத்தவர் ஆவர். அவரும் தாம் இயற்றிய நன்னூலில் 'அறம்பொரு ளின்பம் வீடடைதல் நூற் பயன்' என்று கூறியிருக்கின்றாரே? என்று சிலர் வினவலாம். பவணந்தியாரது நூல் இலக்கண நூலாகும் அவர் நூலியற்றிய காலத்தில் நிலவிய உலக வழக்கும் நூல் வழக்குமாகிய இலக்கியங் கண்டு அவற்றிற்கு இலக்கணம் கூறினார் என்றே கொள்ள வேண்டும் ஆகலின், பவணந்தியார 'அறம்பொரு ளின்பம் வீடடைதல் நூற்பயனே' என்று சைன தருமத்தை நோக்கிக் கூறினார் எனக் கொள்ளற்கிடமில்லை. சைன தரும நூல்களைப் பயின்றவர்கள் இதனை நன்குணர்வர். அகம் புறம் பொருட் பாகுபாடு நோக்கியே விகற்பித்துக் கூறினார் என்று கொள்ளலாம்.

கொலை, களவு, பொய், காமம, பொருட்பற்று ஆகிய ஐந்தும் தீவினைகள் என்றும் இவற்றை நீக்கி ஒழுகுவதே நல்லொழுக்க மாகும் எனறும் சைன தருமத்துள் கூறப்படுகின்றது.

'உடலாதி யொண்பொருளும் ஒண்மனைவி மக்கள்
கடலுமோ கவவழி கண்டும்—மிடைவாகித்
தீவினைவந் தாறுவாய் தோந்துரைப்பி னேர்தாகும்
பாவனையி னீங்குவதே பாங்கு.' —ஜீவசம்போதனை-௩௩௬.

இதனால் உடல் முதலியவற்றில் உண்டாகும் மோகம் காரண மாகத் தீவினை வந்துறும வாயில்கள் ஐந்து என்றும்,

'கொலைகளவு பொய்காமம் கூடுபொரு டானும்
நிலையைந்தா மோரொன்றே நேரி—னுலைவின்றிக்
காமாதி மும்மையுங் காதற் பழமையினு
மாமாதி யாகுமா லாஙகு.' —ஜீவசம்போதனை.

இச் செய்யுளால் அவை கொலை, களவு, பொய், காமம், கூடுபொருள் என்பனவாம் என்றும்,

'கொல்லாமை பொய்யாமை கள்ளாமை காமத்தை
யொல்லாமை யொண்பொருளை யுண்ணமை—பொல்லாத
தீவினையூர் வாய்தல் தெறுக்கும் வதமைந்தும்
பாவனையான் மேவுதலே பாஙகு.' —ஜீவசம்போதனை-௩௭௫.

இச் செய்யுளால் கொல்லாமை பொய்யாமை முதலிய ஐந்தையும் மேற்கொள்வதே விரதமாகும் என்றும் கூறப்படு வதை அறியலாம் இவை ஐந்தும் பஞ்சபாபங்கள் என்று கூறப் படுகின்றன.

இவை ஐந்தனுள் கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை ஆகிய மூன்றையும் தனித்தனியதிகாரங்களாற் கூறுகின்றார்.

காமம், கூடுபொருள் ஆகிய இரண்டு பற்றியும் வள்ளுவர் கருத்தென்னவென்று அறிதல் வேண்டும்.

காமத்தை ஒரு பாலாகவே அமைத்துக் கூறுகின்றார் வள்ளுவர். அவருடைய முறையும் 'அறம் பொருள் இன்பம் வீடு' என்ற முறையாக அமைந்து விளங்குவதைக் காணலாம். சைன தருமத்துள் 'காமம்' என்பது கூடாதென்றே யாண்டும் வலியுறுத்தப்படுகின்றது இதனால் திருக்குறள் காமத்தைப் பற்றிக் கூறும் முறை சைன தருமத்துக்கு மாறானதென்று உணரலாம்

'கூடுபொருள்' என்பது மிகுபொருள் விரும்புதல் என்றும், அதனை விலக்குவதே மிகுபொருள் விரும்பாமையாகும் என்றும் சொல்லப்படுகின்றது. இது பரிக்கிரகம் என்று வழங்கப்படுகின்றது கஷாயங்கள் என்று கூறப்பட்ட நான்கனுள் உலோபம் கூறப்பட்டதை அறியலாம். ஆகவே இது உலோபத்தின் வேறானது என்றுணரலாம். மிகுபொருள் விரும்பாமையே சைன தருமத்துள் சிறப்பாக அமைந்த ஒழுகலாறெனக் கூறுவர். மிகுபொருள் விரும்பாமை பற்றி வள்ளுவர் கூறவில்லை உலோபம் கூடாதெனக் குற்றங்கடிதலென்னுமதிகாரத்தால் விலக்கிய வள்ளுவர் மிகுபொருள் விரும்பாமை பற்றிக் கூறாததேன்? என்று சிந்திக்கவேண்டும். திருவள்ளுவர் சமணராக இருந்திருப்பின் இதனையும் வலியுறுத்தி இருப்பார். வள்ளுவர் பொருள் பற்றிக் கூறும் முறையை நோக்குதல் வேண்டும். பேராசை வேண்டாம் என்று வெஃகாமையதிகாரத்தில் கூறினார். 'பொருள் செயல் வகை' என்ற அதிகாரத்தில் சைன தருமத்துக்கு மாறாக மிகுபொருள் ஈட்டுமாறு கூறுகின்றார். பொருள் ஈட்டுவதில் அளவு வேண்டாமென்று கூறுகின்றார். 'ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க் கெண்பொருள் ஏனை இரண்டும் ஒருங்கு' என்ற குறளால் வள்ளுவர் பொருள் பற்றிக் கொண்ட முடிபென்னவென்பதை நாம் அறியலாம்.

சைன தருமத்துள் வீடுபேற்றை அடையக் கூறும் விரதங்கள் திருக்குறளில் காணப்படவில்லை. திருவள்ளுவர் கூறும் ஒழுக்க முறைக்கும் சைன தருமத்தின் ஒழுக்க முறைக்கும் என்ன தொடர்பிருக்கின்றது? சைன தருமத்துக்கே சிறப்பான தத்துவ முறையும், ஒழுக்கமும் திருக்குறளில் காணப்படவில்லை. சைன தருமத்துக்கு மாறானவைகளே திருக்குறளில் மலிந்திருக்கின்றன என்பதை மேலே நான் எடுத்துக் காட்டியவைகளால்

நன்குணரலாம். திருவள்ளுவர் அறத்தை இல்லறம் துறவறம் என இருவகைப்படுத்தியிருப்பதை நோக்குவோம். இந்த முறை சைன தருமத்துக்குப் புறம்பானதாகும். திருவள்ளுவர் கூறியது சிராவக, சிரமண பேதஙகளுக்கு மாறானது. பெண்களைப் பற்றி வள்ளுவர் கொண்ட முடிபு உயர்ந்ததாகும். சைன தருமத்துள் இவ்வாறு கருதப்படவில்லை. இவற்றையெல்லாம் ஆராயுஙகால் எக்காரணத்தால் வள்ளுவரைச் சமணர் என்று கூறுகின்றனர் என்பதை நினைக்க வியப்புண்டாகின்றது.

திருவள்ளுவர் சைனர் என்று திரிபுணர்ச்சியாலும் பற்றுள்ளத்தாலும் கொண்ட முடிவையே நிலைநாட்ட முற்படுகின்றனர். எல்லா மதத்தினருக்கும் பொருந்தும் கடவுள் வாழ்த்தில் காணப்படும் சொற்களையும், புலான் மறுத்தல், கொல்லாமை ஆகியவற்றையே கொண்டு திருவள்ளுவர் சைனர் என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்? திருக்குறளில் சைன தருமத்தின் தத்துவம் உண்டா? ஒழுகலாறுகள் உண்டா? நேர்மாறாக ஒன்றைக் கூறுவோர் பற்றி என்ன நினைப்பது? கொல்லாமை புலான் மறுத்தல் ஆகியவற்றை எல்லாச் சமயங்களும் புறக்கணித்தே உள்ளன என்றல் பொருந்துமா? சைன தருமத்துக்கே உரியவை அவையெனக் கூறல் அறிவுடையமையாகுமா?

தத்துவம், ஒழுக்கமுறை ஆகியவைகளைச் சிறப்பாக நோக்காமல் பொதுவாகப் புலான்மறுத்தல், கொல்லாமை ஆகியவற்றை நோக்கி வரலாற்று ஆசிரியர்கள் நேர்மாறாகத் திருக்குறள் பற்றிக் கூறியுள்ளனர்.

நீதி நூலாகும். அதன் ஆசிரியர் உள்ளிட்ட யாவரையும் கட்டுப்படுத்தும் நூலாகும் அது. தனக்கொரு நீதியும் பிறருக்கு ஒரு நீதியும் திருக்குறளில் வள்ளுவர் உணர்த்தவில்லை என்பதைச் ‘சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம் சொல்லிய வண்ணஞ் செயல்’ என்ற குறளால் நாம் அறியலாம். இவற்றையெல்லாம் கருதுவோர்க்குத் திருவள்ளுவர் சமணர் என்றல் பொருந்தாமை தெரியவரும்.

சைன தருமத்தை நோக்கத் திருக்குறள் ஆகம மலைவு அல்லது ஆகம விருத்தம் என ஆன்றோரான் உணர்த்தப்பட்ட குற்றமுடையதாகவே கருதப்படும்.

# தென்காசித் திருவேந்தன்

[இரா. இளையநம்பி]

(செல்வி சிலம்பு ௩௩, பரல் ௧௧, ௫0௩-ஆம் பக்கத் தொடர்ச்சி)

அதி : புலவர் பெருமான் அவர்களே! அண்ணியாரின் மதிப் புரையைப் படியுங்கள். ஓலையுள் இருப்பதென்ன? ஆழ்ந்த அன்பும், அகன்ற அறிவும் உடையவர் அண்ணியார். தம யந்தியும், நளனும் தழுவிக் காதல்கொள்ளும் இடமெல்லாம் தாமும அண்ணாரும் அடைந்த அளவற்ற இன்பநினைவுகள் அலைபுரண்டு அகததிரையில் ஓடியிருக்கும் அண்ணியார் தந்த அன்பான மதிப்புரைக்கு எங்ஙனே கைம்மாறுசெய் வேன்? யான்பெற்ற இன்பம், யார் பெற்றார்? கல்லாற் சிலை செய்துகையலுத்த சிற்பி, கல்லையே கட்டி யழுவதேன் என் றெண்ணி ஓய்ந்துள்ள காலத்தில் உளமகிழ்வு தான் அடைய ஒப்பற்ற முடிவுசெய்து மண்ணால் பொம்மைகள் செய்து பால் எழில் இயற்கைச் சிற்பியும் வன்மன ஆடவர், வாளவிழியால் வெட்டியுழல் கன்மனத்துக் காரி கையர் என்போரைப் படைதது அலுத்து, ஏன்படைத் தோம் என்றேங்கித் தான்தான் மகிழ்வதற்குத் தக்கது எனத தேர்ந்ததைப்போல் பூவால் இதழ்படைத்து பூவால் இமைபடைத்து பூவாலே காலிரண்டும் கையிரண்டும் படைத்து, பின் சின்னவண்டைப் பிடித்துச் சின்னவிழி யாய் வைத்து கன்னத்து முத்து ஈந்து களிப்பதற்கு வைத் திருந்த வன்னததுப் பொமமை ஒன்று மண் நழுவி வந்தது போல் வார்த்தெடுத்த ஒருகுழந்தை அவ் - எழிற்குழவிதனை ஈன்ற பொழுதினும் சான்றோன் எனக் கேட்டால் மகிழ் வாளே அதன்தாய், அம்மகிழ்வு என்மகிழ்வுக் கீடாமோ? ஆகாது, ஆகாது. புலவரே, மதிப்புரையைப் புகலுங்கள்.

[ஓலையைப் புலவரிடந் தருதல்]

புல : [படித்தல்] "தென்காசித் திருவேந்தர் அதிவீரராம பாண் டியருக்கு,

வரதுங்க வழுதியார் மனைவி, நுங்கள் அண்ணியார், நலங்கூறி, உசாவிவரையும் திருமுகம்

நுங்கள் நைடதம், வேட்டைக்குச் சென்றுமீளும் நாய் போன்றும் கரும்பை அடியினின்றும் நுனிவரை சுவைப்பது போன்றும் உள்ளது.

வரதுங்கவழுதி மனையாள்

கரிவலம் வந்தநல்லூர்."

அதி : [சினத்துடன்] என்ன? என் நைடதம் எப்படியிருந்ததாம்?

புல : வேட்டைக்குச் சென்றுமீளும் நாய்போன்றும், கரும்பை அடியினின்றும் நுனிவரை சுவைப்பது போன்றும் உள்ளதாம்.

பின் குரல் : விலங்கினத்தில் தாழ்ந்த நாயெங்கே? வீரமும் விவேகமும் கொண்ட நீயெங்கே? ஓடி இளைத்துவரும் நாயின் ஓய்ந்த நடையெங்கே? ஆடிப்பாடி அமுதத்தேன் வடியும் நைடதத்தின் நயமெங்கே? அடியில் இனித்து இடையில் குறைந்து நுனியில் கரிக்கும் கன்னலெங்கே? சிலேடையும் சந்தமும் சிந்து பாடும் தந்திரமாம நைடதம் எங்கே? ஐயகோ, அவமானம்! ஆற்றொணுப் பழிச்சொற்கள்! 'குட்டுதற்கோர் பிள்ளைப் பாண்டியன் இல்லை' எனும் பிள்ளைப் பாண்டியா, நீயோ குட்டுப்படுவது? "நைடதம் புலவர்க்கோர் ஔடதம்" எனும் நைடதமே, நீயோ நையாண்டி செய்யப்படுவது?

அதி : [பற்களை நறநறவென்று கடித்துக்கொண்டு], ஆ! அண்ணனும் அண்ணியாம். உடன்பிறந்தே கொல்லும் நோயென உடன்பிறந்து அன்பென்று புறத்தே கூறி அகத்தே பகை கொண்டு அதிவீரராமனை அழிக்க எண்ணியவனே! துரோகி வரதுங்கா! தொலைந்தாய் நீ! அண்ணியின் உருக்கொண்ட அப்பேய் மகள் மூலமா நின் பேதைமையைக் காட்டுகிறாய்! மணிமுடியைக் கேள்; மறுக்கவில்லை, ஆவியைக்கேள்; அன்புடன் அளிப்பேன். வரதுங்கன் வழியினருக்கு அதிவீரன் மரபினர் வழிவழியாக அடிமைகளாக வாழவேண்டுமென்று கேள்; அதையும் மறுக்கவில்லை! ஆனால் என்னையோ இகழ்ந்தனை? இல்லை. நைடதத்தையோ நகைத்தனை? இல்லை. நந்தமிழ் மொழியை அன்றோ நகையாடினை!

தமிழினைப் பழித்தவனை தாய், சேய், தமர்—ஏன்? தமிழே தடுத்தாலும விடேன்! விடேன்!! விடேன்!!!

ஒழிந்தான் வரதுங்கன்! உயர்ந்தான் அதிவீரன்! நந்திக் கலம்பகம் தராசின் ஒரு தட்டிலே நின்றால நைடதம் மற்றொரு தட்டிலே நிற்கும். நந்திவர்மனைக் கொல்லக் கலம்பகம் பாடினான் அவன் தம்பி. ஆனால் நைடதத்தின் புகழுக்காக அண்ணனைக் கொல்வான் இவ்வதிவீரன். உடன்பிறந்த இருவர் வரலாறுகளை உலகம் உள்ளளவும் நந்திக் கலம்பகம் நவில்வதுபோல் நைடதமும் வரதுங்கன் வாழ்ந்த வாழ்வையும் வீழ்வையும் நவிலும்!

நாயென்றாளே நயவஞ்சகி, வெறிபிடித்த நாயென்ன, வேஙகையாகப் புறப்பட்டுவிட்டேன். கொடியோர் இருவரையும் கொன்று கூறிட்டு அக்குருதிநீரை நாடு மணக்க வந்த நற்றமிழ் ஏடாம நைடதத்தின்மீது பூசுவேன். [அவையை நோக்கி] அமைச்ச! அருமபடைத் தலைவ! அலறட்டும் போர்ப்பறை! அடிக்கட்டும் போர் முரசு! செம்பியனுக்குப் பரணி என்றால் சேரனுக்குப பதிற்றுப் பதென்றால் என்குலத்திற்கோர் இணையற்ற போர் நூல்கள் எங்கெங்கும் புலவர்கள் இயம்பட்டும! வரதுஙகன் வீழும் வரை, அவன் மனையாள் ஆவிபிரியும்வரை இவ்வதிவீரராமன் உண்ணான், உறஙகான், ஒருதுளிநீர் பருகான், போர்க்கோலமபூண்டு விட்டான்; புறப்படட்டும் படைகள்! ஹஹ்ஹஹா.

[வெற்றிச சிரிப்பு]

## காட்சி ௩.

[கரிவலம்வந்தநல்லூர் அரண்மனை உட்புறம். அமைசசர் விரைவாக உளளே நுழைகிறா ]

வாயிலோன் : நம்பெருமான் நீராடுகிறார்கள். சற்றுநிற்பீர்களாயின் இவ்வழியில் வரதுங்க வழுதியார் வருவார்கள்.

அமை : நல்லது! [வரதுஙகர் நீராடி நெற்றியில் நீறணிந்து வருகிறார்] வாழி! எம்பெருமான், பூசைவேளையில் கரடியாக, இறைவனை வழிபடும் இந்நேரத்தில் இடையூறாக வந்தமைக்கு வருந்துகின்றேன்.

வரது : சிவசிவ. அனைத்தும் அவன் செயல். சொல்லுங்கள்.

அமை : எதைச் சொல்வது, எப்படிச் சொல்வது? ஓர் முகத்தில் இரண்டு கண்கள் ஒன்றோடொன்று போட்டியிட்டால், ஓர் உடலில் ஒன்றாய் இணைந்த இருகைகளும் எதிர்த்துப் போராடினால் எப்படியிருக்குமோ அப்படித்தான்....அதிவீரராமரும, படைகள் புடைசூழ எல்லைப் புறத்தில் நம்மை எதிர்நோக்கி நிற்கிறார்.

வரது : நின்றால் என்ன? வேற்று மன்னன் எவனாவது வீரம் பேசியிருப்பான். அழிக்கப் புறப்பட்டிருப்பான் அதிவீரராமன். நம்மையும் அழைத்துச் செல்ல நகர்வழியில் தங்கியிருப்பான். நல்லது. நமபடைகளும் உதவிக்கு உடனே புறப்படட்டும். உடன் பிறந்தானுக்கு உதவாத ஊரும் பேரும், ஒங்கிய படைகளும் ஏன்? வீரம்மிக்க நம்படைகள், வில்லேந்தி வேலேந்தி வீரவாளேந்தி உடனே புறப்படட்டும். பூசைமுடித்து நானும் புறப்பட்டு வருகிறேன்.

அமை : அல்ல அரசே! அல்ல! அதிவீரராமர் தங்களை எதிர்க்கவே போர்க்கோலம் பூண்டிருக்கிறார்.

வரது : என்ன? என்ன?

அமை : ஆம். நம்மை எதிர்க்கவே நகர்ப்புறத்தில் நால்வகைப் படைகள் புடைசூழ வந்துள்ளார். போருக்குப் புறப்படுமாறு அவர் அனுப்பிய ஓலைஇதோ!

[ஓலையைத் தருதல்]

வர : நம்பமுடியவில்லையே அமைச்ச! இருமூன்று திங்களாய் எவ்வித ஓலையும் நான் எழுதவில்லையே. அவன் அண்ணி தான் அதிவீரராமனுக்கு மதிப்புரை ஒன்று அனுப்பியிருந்தாள். அதற்கோ இப்படி ஆத்திரம்? இருக்காதே. குறுநில மன்னனொருவன் குறும்புகள் செய்துவந்தான். அவனை மிரட்டி ஓர் ஆணை அனுப்பியிருந்தேன். அதையும் என் மனைவி எழுதிய ஓலையையும் எடுத்துச் சென்ற தூதவன் முன்பின்மாற்றி அடங்குமாறு எழுதிய ஆணை ஓலையை அதிவீரராமனிடம் தந்திருப்பானோ? அப்படியே இருப்பினும் அவ்வளவு அறிவற்றவனா அதிவீரராமன்? நைடதம் தந்த நம்பியன்றோ என் தம்பி ...[சிந்தித்தல்] அண்ணன் மீது பகையென்றால் அதற்குப் பரி கரிப் படைகள் ஏன்? பறை தண்ணுமை முழவு பற்பல வாச்சியம் ஏன்? நகர்ப் புறமுகாம் ஏன்? வேண்டாம் அமைச்சே! வேண்டாம். பாண்டியர் இருவர் பகைகொண்டு நின்றாரென்றால் சேரன் சிரிப்பான்; செம்பியன் நகைப்பான்; ஈழத்தான் எள்ளுவான்; குறுநிலமன்னர் சிறுநகை செய்வார். ஐயகோ! பாண்டிய மரபிற்கே பழியல்லவா?.... ... .. ......நடப்பது நடக்கட்டும். அமைச்சரே! அண்ணன் வரதுங்கன் அழைத்தான் என்று அதிவீரராமனை அழைத்து வாருங்கள்.

அமை : அப்படியே மன்னவா!

வர : [தனக்குள்] ஆம். வாள் முனையில் வரதுங்கன் உயிர் நீப்பானே அன்றி வாள் முனையில் வாளேந்தி நில்லான்.

## காட்சி ௩

[பூசனை அறையுள் வரதுங்கர் இறைவன் திருமுன்பு நிற்கிறார். பூசை அறைவாயிலில் அதிவீரராமன் சுழலும் வாளுடன் விழிகளில் சினத்தீ பொங்க சீறிவருகிறான். அமைச்சர் முதலானோர், அவனை இறுகப் பற்றிக்கொண்டு வருகின்றனர். வெளியில் வரட்டும் என்று அதிவீரராமன் வெளியே நிற்கிறான்.]

வீர: [இறைவனை நோக்கி] எந்தையாம் சிந்தையுள் நின்ற சிவமே, செல்வமே, அறிவுக்கு எட்டாதோய்! அகத்துள் நின்றோயே! கண்ணுக்குப் புலனாகாய்! கண்ணுள் நின்றோயே! உன்கழலடிகளைக் கைகூப்பித் தலைகவிழ்ந்து வணங்குகின்றேன் ஒப்பற்ற அறிவுடையான், உயர்ந்த நற்புகழுடையான், குற்றாலநாடாள்வோன், குன்றன்ன குணம் உடையோன், அன்பார்ந்த அதிவீரராமன், அவன் என் தம்பி [மார்பைத்தட்டி] ஆம் அதிவீரராமன் என் தம்பி,- அங்ஙனமெல்லாம் கூறி அகமகிழ வாய்ப்பளித்து உடன்பிறந்த பெருமையை உடன்தோற்றிய ஒப்பிலா மணியே! ஓர் உடலில் இருகை—ஈருடலில் ஒருயிர்—ஒருறையுள் இரு வாள்—பறவையின் பக்கங்கள் இரண்டினும் இணைந்த இருஇறகுகள், இவைகள் இணைந்து நில்லாது எதிர்த்து நிற்பதும் உண்டோ? உண்டென்று கூற ஓங்கிய படைகளுடன் வந்துவிட்டானே அதிவீரராமன். ஒருவயிற்றில் பிறந்தோம்; ஒன்றாக உண்டோம்; உறங்கினோம்; உறவாடினோம்; அன்னையின் கொங்கைகள் இரண்டிலும் ஆளுக்கொன்றாகப் பாலுண்டோம்; ஒருடலில் உட்கார்ந்த ஈ கடித்தால் மற்றதோர் உடல் மணிகொண்ட பாம்பு கடித்ததெனக் கருதும்; மற்றதோர் உடலின் மனதில் தோன்றும் சிற்சிறு துன்பமதால் இவ்வுடலின் இம்மனம் எண்ணாத எண்ணி ஏங்கும்; அழும்; புலம்பும்; ஆற்றும். அங்ஙனம் ஒன்றாய் வளர்ந்த, உடன் பிறந்த எங்கள் மாசற்ற அன்பின் மீதாணை! [அதிவீரராமன் கண்கலங்குகிறான்.] பண்டை எம் மன்னர் வளர்த்த தண்டமிழே உன்மீதாணை! அத்தமிழ் ஆய்ந்தபிரான் அறுமுகப் பெம்மானே உன்மீதாணை! குறுமுனிக்கு உறுதமிழ் ஓதிய குற்றாலத்து எம்மானே, தோன்றாத் தோற்றியாய்த தொன்மதுரையில் அரசோச்சிச் சுந்தரத்தமிழ்காத்த சொக்கநாதா! உன்மீதாணை! பொற்கொல்லன் சொற்கேட்டுப் பொன்றாப் புகழ்குன்றியதால் நின்ற உயிர் நீத்த நெடுஞ்செழியா, நேமிதனில் நீதிநிலைப்பிக்கத் தன் கைக்குறைத்துப் பொன்கைப் பூட்டிய பொற்கைப் பாண்டியா! இத்தகு எங்கள் மரபினர் எல்லோர் மீதாணை! பிறந்த தம்பிக்கு ஒருபிழையும் கனவிலும் செய்தறியேன்; கருத்திலும் நினைத்தறியேன்; ஆயினும் பகை ஏற்றேன்; பகைத்துவந்த பழி ஏற்றேன். [அதிவீரன் கண்களில் நீர்வழியத் தேம்புகின்றான்] மயிர்நீப்பின் உயிர் நீக்கும் கவரி மான்போன்ற மானமுடைய மரபின் வழிவழிவந்த நான் மானம் இழந்தபின் மணிமுடிவேண்டேன்; மனையாள் வேண்டேன்; மாண்புவேண்டேன். அனைத்தும் இழந்தேன்.

இனி அரசுஎதற்கு? ஆண்மை எதற்கு? அறிவு எதற்கு? ஏன், ஆவிதான் எதற்கு? ஆலமுண்டகண்டனே அடுத்த பிறப்பிலேனும் நல்வாழ்வு, நல்லதம்பி, இவர்களையுடைய நற்பிறப்பைத் தந்து அருளசெய்

[இடையிலிருந்த சிறுவாளை எடுத்துத் தற்கொலை செய்து கொள்ள முயற்சிக்கிறான். இதற்குள அதிவீரராமன ஓடிவந்து தடுக்கிறான்.]

அதி : அண்ணா! அண்ணா! அன்புத்திருவுருவே! வேண்டாம் இச்செயல். நீங்களோ பகையேற்றீர்? பழியேற்றீர்? இல்லை. நானே பகை ஏற்றேன். பழிஏற்றேன்.

வர : அதிவீரராமா! என்னைத் தடுக்காதே. அதிவீரராமன் அழிக்க வேண்டிய ஒரு பகைவனை அவன அண்ணன் அழித்து விட்டான் என்ற புகழ்ச்சொல்லை ஏறபடுத்து. உனககு ஆகாத ஓர் உலுத்தனை உன் அண்ணனின் கரஙகளே கொன்றுவிட்டன என்று மகிழ். அதிவீரராமனுடன் போர் செய்ய ஆற்றாது, வரதுங்கன் வாளமுனையில் வாளேந்தி நில்லாது அஞ்சியழிந்து ஒழிநதான் என்று வரலாறு உன்புகழ் பாடட்டும், ......... என்னைத் தடுக்காதே.

அதி. அண்ணா! பழிக்கஞ்சுதல் எனும் பாகில் பண்பெனும் தேன்பெய்து அன்புக்கனி பிழிந்து அனைத்தொன்றாய்க் கூட்டிய அன்புத்திருவிளக்கே! அணையாத குலஒளியே! பாண்டியர் குலத்துதித்த தங்கள் உயர்ந்த பண்பெஙகே? குடிக்கே கேடாய் வந்த கொடியோன் என்கயமை எஙகே? ..........மன்னியுங்கள் அண்ணா மன்னியுங்கள்

வர : இல்லை அதிவீரா! இல்லை. நான் சாகத்தான் வேண்டும்; என்னைத் தடுக்காதே.

அதி : அண்ணா! வரதுங்கராமர் வாள்முனையில் உயிர் நீப்பார் என்றால் விண்ணுலகில் உலவிவரும் அவர் ஆவியை எதிர் கொண்டு வணஙகி, "என்னை மன்னியுங்கள் அண்ணா மன்னியுங்கள்" என்று மன்றாடி இரந்துகேட்க இவ்வதி வீரராமனும் அதற்குமுன் உயிர் நீப்பான். அண்ணார் ஐம்பெரும் பாவங்களையும அருள்செய்து மன்னிக்கும் மனம் உள்ளவர். அவரும் மன்னிக்க முடியாத மாபெரும்பிழை செய்த எனக்குத்தான் ஏன்வாழ்வு?

[வாளையுருவித் தற்கொலை செய்துகொள்ள முயலுகிறான்]

வர : [திகைப்புடன்] அதிவீரா! என்மீதாணை! நெடுவாளை நிலத்தில் போடு.

அதி : [உடனே வாளை வீசிவிட்டு] அண்ணு! அதே அன்பின்மீ தாணை! தங்கள் கையிலுள்ள வாளைத் தாருங்கள் இப்படி!

[அதிவீரன் வரதுங்கன் வாளைப் பிடுங்கிக்கொள்கிருன். இதற்குள் கூட்டத்தை விலக்கிக்கொண்டு வரதுங்கரின் மனைவி ஓடோடி வருகிருள். அதிவீரன் கையில் வாளையும் அஃதின்றி நிற்கும் வரதுங்கரையும் காண்கிருள் துடிக்கிருள்]

அரசி : பூசையறையில் அண்ணன்! போர்வாளோடு தம்பி! கண்மூடி நிற்கும் இக்கும்பல்! ஐயகோ! கொடுமை! கொடுமை! கடவுளே உனக்குக் கண்ணில்லையா? கல்லுருவில் நிற்கும் நீ கல்லாகவே மாறிவிட்டாயா? கொடுமை உயரக் குடிமை தாழ்ந்ததே! இத்துணையும் இறைவா, உன் திருமுன்பா? அதிவீரராமா! நீ ஒருதுரோகி! உடன்பிறந்தே கொலலும் நோய் என்பது உனககே ஒக்கும. தென்னிலஙகை வேந்தன் இராவணனுக்கோர் வீடணன். வாதுலவும் வாயுவின் மைந்தன் வாலிக்கு ஒரு சுக்கிரீவன். குமணனுக்கு ஓர் அமணன். அப்படித்தான் நீயும். அதிவீரராமா! உனக்கு அழிவுகாலம் வந்துவிட்டது.

அதி : உண்மை அண்ணி உண்மை. கூறிவந்த கொடுமைகளின் குடிலே நான்தான்.

அரசி : அரும்படைவீரர்! அமைச்சர்! அனைவரும் வெளியே! அண்ணி எதிரே! இந்நிலையில் என்செய்வது என்று ஏமாற்று மொழிகளை என்னிடம் வீசுகின்ருய்? [அதிவீரன் முன் கீழே எறிந்த வாளை, அரசி எடுத்துக்கொண்டு] வேல் கொண்ட வீரர்களே! விலகுங்கள்! நீங்கள் வேண்டாம்! அறிவு சான்ற அமைச்சர்களே! அகலுங்கள், நீங்கள் வேண்டாம். கொண்ட கொழுநரும் கூரிய வாளேந்த வேண்டாம்! கண்ணகி வழிவந்த நான் கணவரைக் காப்பேன். அதிவீரராமா! உனக்கு மானமிருந்தால் பெண் ஒருத்தி என்னிடம் உன் போராண்மையைக் காட்டு! வண்தமிழ்க் குடியுதித்த வாள்விழி நங்கை என்ருலும் வாள்முன்பும் வாளேந்தி நிற்பாள். எடு உன்வாளை! எங்கே உன் ஆண்மை...........மைத்துனி வாளுடன் நிற்கிருள், மானமில்லை உனக்கு?..........

வர : அரசமாதேவி! அமைதியாயிரு! அதிவீரராமன் திருந்திவிட்டான். குற்றமுணர்ந்த அவன் உள்ளத்தைக் கூரிய வாளினும் கொடியசொற்களால் குத்திக்கொல்லாதே.

அதி : ஆம் அண்ணி! ஆம்! நான்பெற்ற செல்வம், நற்றமிழின் 'நைடதம்'—அதை நாயென்று நையாண்டி செய்து மதிப்புரை எழுதியிருந்தீர்கள். அதன் விளைவுதான் இவ்வளவும். உள்ளன்பு கொண்ட நீங்கள், உட்பொருள் ஏதோகொண்டு அதை உருவாக்கியிருக்கவேண்டும்.

அரசி : [வியப்புடன்] உண்மையாகவே உணருகிறீர்களா?

அதி : ஆம் அண்ணி. ஆம். தென்காசி வேந்தன் திருந்திவிட்டான் அண்ணி!—திருந்திவிட்டான்.

அரசி : புகழுரைகள் வீணுகப் புகலாமல், பொய்க்காமல், உள்ளதை உள்ளபடி உருவாக்கி அனுப்பினேன். அம்மதிப்புரையா இங்ஙனம் போர்க்கோலம் பூண்டுவரச் செய்துவிட்டது? நாயென்றால் என்ன? எஙகெங்கும் உலவி எச்சிலும், மலமும் உண்ணும் இழிந்தநாயா? வேட்டைக்குச் சென்று மீளும்வீரம் கொண்ட நாயல்லவோ, நான்கூறியது? ......... நாயனையார் நட்பு நன்மையேதரும் எனும் நாலடியாரை மறந்து விட்டீர்களா?..........நாய் எவ்வளவு நன்றியுள்ள விலஙகு?..........

அதி : ஆம். நான் நாயினும் நன்றிகெட்டவன்தான்.........

அரசி : அப்படி ஒன்றும் இல்லை. தென்காசித் திருமன்னு! தங்கள் நைடதத்தை நான்பயின்ற பொழுது, ஊறிய உள்உணர்வை உருவாக்கினேன் மதிப்புரையாய். நைடதம் துவக்கத்திலிருந்து உயர்ந்த உவமைகளும், உள்ளத்தைக் கவரும் கருத்துக்களும், ஓட்டமுள்ள நடையும்கொண்டு நைடததுக்கு நன்மணம் ஊட்டுகின்றன. துவக்கத்திலுள்ள சிறபபும செழிப்பும் இறுதியில் இல்லாமல் இளைத்துத் தேய்நது எப்படியோ முடிததிருக்கிறீர்கள். முதலில் உள்ள உணர்ச்சி முடிவில் இல்லை அப்படித் தான் வேட்டை நாயும் வேட்டைககுச் செல்லும் பொழுது உள்ள விரைவும் உணர்ச்சியும், வீடுதிரும்பும பொழுது இலலாமல் இளைத்துக் களைத்துத் தள்ளாடித் தள்ளாடித தளர்ந்துவரும். முதலில் உள்ள உணர்ச்சி முடிவில் இருக்காது. கரும்பிலும் அடியிலுள்ள சுவை, சுவைததுக்கொண்டே சென்றால், நுனியில் இருப்பதில்லை. நைடதத்திலும் முதலில் உள்ள சுவை முடிவில் இல்லை.

அதி : உணர்ந்தேன் அண்ணி, உணர்ந்தேன்.

அரசி : இவ்வளவு பயின்ற தாங்கள் இதையோ உணரவில்லை? வாயுசங்கிதை, வளமிகு கூர்மபுராணம் இவைகளை வண்ணத்

தமிழில் வார்த்தெடுத்துத்தந்த தங்கள் கரங்களா வாளேந்தி வந்தன? காசிக்காண்டம், கவின்மிகு இலிங்க புராணங்களைக் கன்னித் தமிழில் உருவாக்கித்தந்த உள்ளமா தீரத்தெளியாது தேர்பரிகளைத் திரட்டி வந்தது?.........நைடதம் பாடிய நாவா நகர்ப்புறத்தில் முகாம் இட்டு அருமை அண்ணனைப் போருக்கு அழைத்தது? தீந்தமிழ் வளர்த்த தென்னவன் திருமிகு வல்லவதேவன், குலசேகரன், குணசேகரன் என்றெல்லாம் கூறும் உங்கள் புகழும் பட்டமும் குறைபட்டுவிடாதா?

அதி : அண்ணி! இனிச் சிந்தித்துத் தேறிதெளிந்தபின்பே செயலாற்றுவேன். அண்ணா! மன்னியுங்கள்.

வரது : அதிவீரராமா! அன்பார்ந்த இளவல்! திருந்திய தென்காசித்திருவேந்தா! மன்னித்தேன்..........உனக்கு அறிவும் அன்பும் பண்பும் புலமையும் பொங்க, ஆணவம் மங்கப் பன்னலமும் தங்கப் பரமன் அருள்செய்யுமாறு அவன் திருவடிகளில் முடிசாய்த்து வணங்குகிறேன்.

[அனைவரும் வணங்குகின்றனா]

[பின் ஒலி]

[இசையுடன்]

தென்னாடுடைய சிவனே போற்றி! எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!!

---

## அன்பே நிலைக்கும்

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

செல்வம் இன்று வரும் போகும்
  செழுமை நிலையும் அங்ஙனமே;
அல்லல் குறையும் நலம் பெருகும்
  அன்பே என்றும் நிலையாமே.

அலுவல் பெருகும் நிலைமாறும்
  ஆட்சி கைக்குக் கைமாறும்
பலவும் பாரில் சுழன்றாலும்
  பண்பு என்றும் நிலையாமே.

அண்ணன் தம்பிபகை கலக்கும்
  அருமை நிலையும் திரிந்துவிடும்
திண்ணன் போன்ற உள்ளன்பு
  திரியா தென்றும் நிலைத்திடுமே.

---

# கல்லூரிகளில் கன்னல்தமிழ்!

* [கா. வேழவேந்தன், கு. தண்டாயுதம்]

1. நாவிலெலாம் நெஞ்சிலெலாம் ஆட்சி செய்யும்
நற்றமிழாள் எம்மன்னை அரசில் ஏறி
பூவிரித்துப் புகழ்விரித்து விளங்கும் நேரம்
புதுச்செய்தி வந்ததடா! மகிழ்வால் உள்ளம்
தாவியது வானகத்தில்! அறிவு சேர்க்கும்
தமிழகத்துக் கல்லூரி எங்கும் நந்தம்
ஆவிநிகர் தென்தமிழே பயிற்று விக்கும்
அருமொழியாய் அமைந்திடுமாம், இன்பம் என்னே

2. "கரிகாலா வாஸ்திகிரேட் கிங்கு" என்று
கல்லூரி தனில்நேற்றுப் பயின்றோ ரெல்லாம்
"கரிகாலன் ஓர்பெரிய அரசன்" என்று
கனித்தமிழில் பயின்றிடுவார்! இனியு மிங்கே
புரியாத மொழியில்லை! பாட மில்லை!
பொருளியலும் அறிவியலும் கணித நூலும்
தெரிந்துசொலத் தமிழணங்கு புகுந்தாள்! ஆகா!
செகமெல்லாம் தமிழ்மணக்க அட்டி யேது?

3. நேற்றுவரை அறிவுக்கு அரண மைத்து
நேர்மையின்றி ஒருசிலரே பயிலும் வண்ணம்
வேற்றுமொழி ஆட்சிசெய்த கால மெல்லாம்
வெற்றுரையாய்ப் போனதடா! இன்று கன்னல்
சாற்றினைப்போல பெருமகிழ்ச்சி சேர்த்து ஆட்சித்
தமிழ்வளர்ச்சி ஆராய்ச்சிக் கழகம் செய்த
ஏற்றமிகு முடிவென்னே; இனிமேல் சங்கத்
திருந்ததமிழ் பரவுமடா உலக மெங்கும்;

4. என்றுமுள தென்றமிழே! தாயே தொன்மை
இடமுனக்கு அளித்தவரை வாழ்த்து! வண்மை
குன்றாத பொருட்செறிவால் சொல்லால் எங்கள்
கூரறிவு பெருகச்செய்! நாங்க ளெங்கும்
வென்றியினைச் சூடிவர வழிகள் காட்டு!
வியப்பூட்டும அறிவியலில் மேன்மை காண
என்றென்றும் அருள்புரிவாய், தாயே! உன்றன்
இணையடியைத் தொழுதார்க்குக் குறைதான் ஏது?

---

* பச்சையப்பன் கல்லூரி மாணவர்கள்.

# களிறும் குளிறும்

[வித்துவான், திரு. ஆ. சிவலிங்கனுர், மயிலம்]

“கருங்கால் வேம்பின் ஒண்பூ யாணர்
என்னை யின்றியும் கழிவது கொல்லோ
ஆற்றய லெழுந்த வெண்கோட் டதவத்து
எழுகளிறு மிதித்த வொருபழம் போலக்
குழையக் கொடியோர் நாவே
காதலா அகலக கல்லென் றவ்வே.” (குறுந். உச)

இது குறுந்தொகைப் பாடல். பரணரால் பாடப்பட்டது. தலைவன் ‘இளவேனிற் பருவத்தில வருவேன்’ என்று கூறிப் பிரிந்தான். அப்பருவம் வருந்துணையும தலைவி ஆற்றியிருந்தாள். பருவமும் வந்தது. தன் தலைவன் இன்னும் வரவில்லையே என்று ஆற்ருதவளானள். அப்போது தோழி முதலானோர், ‘இளவேனிற் பருவத்தில் வருவதாகக் குறித்துசசென்ற தலைவன் பருவம் வந்தும வாராமையின் ‘கொடியோன்’ எனப் பழித்தனர். கேட்ட தலைவி, ‘தலைவன் கொடியன் அல்லன்; சொலவாரே கொடியோர்’ என்னும் நினைப்பே

“இளவேனில் பூக்கும் வேம்பினது பூவானது, புது வருவாயை நாடிச்சென்ற என் தலைவன் இல்லாமல் யான்கூடாது கழியுமோ? கழியாது. காதலராகிய அவர் என்னை விட்டுச் சென்ற மாததிரத்தே ஆறறஙகரையில் முளைத்தெழுந்த அத்திமரத்தினது ஏழு களிறுகளால் மிதிக்கப்பட்ட ஒரு பழம் குழைந்து ஒழிவதுபோல யான் குழைந்து கெடுமாறு கொடியோர், நாவெல்லாம் அலர்கூறிக் கல்லென்றன”

என்பது இப்பாடலின் பொருள்.

மேற்பாடலில், ‘எழுகளிறு மிதித்த’ என்ற பாடத்துக்குப் பதில் ‘எழுகுளிறு மிதித்த’ என்ற பாடம் கொண்டார், குறுந்தொகைப் பதிப்பாசிரியர் ஐயரவர்கள். ‘எழுகளிறு’ என்பதும், ‘எழுகுளிறு’ என்பதும் ஓலைப்படிவங்களில் காணப்படுவனவாம். குறுநதொகையை முதன் முதலில் பதிப்பித்தவரான திருக்கண்ணபுரத்தலத்தான் திருமாளிகைச் சௌரிப்பெருமாளரஙகஞர் என்பவர் ‘எழுகளிறு’ என்ற பாடமே கொண்டார். ‘செந்தமிழ்ச்செல்வி’ சிலம்பு கூஉ பரல் கo-ல் ‘எழுகளிறு’ என்ற பாடமே சிறக்கும் எனக்கொண்டு ஐயாற்றுப்புலவர், திரு. இராமாநுசம் அவர்கள் “எழுகளிறு மிதித்த ஒரு பழம்” என ஒரு குறிப்பு எழுதினர். அவரை மறுத்துக் “குளிறு களிறு” எனச் சிலம்பு உக பரல் கஉ-ல் ஒரு கட்டுரை எழுதினர், மாயூரம், திரு.

சாமி-செல்வவிநாயகம் அவர்கள். 'குளிறு' என்ற பாடம் சிறக்கும் என்பது இவர்கள் கொள்கை. முன்னவர் எழுகளிறு என்பதில் 'எழு' என்பதை எண்ணாகக் கொள்ளாமல் எழுதல் என்னும் வினையாகக்கொண்டு எழுதலையுள்ள களிறு என்றார்கள். அவர்கள், எழுதல் வினையும் மிதிக்கும் தொழிலும் குளிறுக்கு இல்லையாதலின் 'களிறு' என்றலே சிறப்பாம் என்றார்கள். பின்னவர் கூறியன பின்வருவன :

"யானையின் காலிற்பட்ட அத்திப்பழம் நசுங்கி உருமாறிக் கண்டுபிடிக்க முடியாதபடி மண்ணோடு மண்ணாக ஒன்றிவிடும்; அழிந்துவிடும். இது இயல்பு. இப்பாடலில் தலைவி அத்திப் பழமாகக் கூறப்பட்டாள். அலரும் பிரிவும் களிறுகள் எனக் கொண்டால் தலைவி அழிந்துவிட்டாள் என்பதே பொருள். ஆனால் அவள் இன்னும் வாழ்கிறாள். குழைந்து வாழ்கிறாள். அது எவ்வாறு முடியும்? யானையடிப்பட்ட அத்திப்பழம் அழிந்தன்றோ போகும்? எனவே களிறு அன்றெனத் தெளிக."

"இயற்கைச் சூழலாலும் இது விளங்குகிறது. நண்டுகள் ஆற்றோரத்தில் அளையில் வாழும். பழங்களைத் தின்னும் அவாவினால் அவைகள் மேலேறி ஓடிவருகின்றன. அத்திப்பழத்தைப் போட்டியிட்டுச் சிதைக்கின்றன பழமும் குழைந்துபோகிறது. நண்டுகள் நீரில் வாழும் இயல்பினதாலன்றோ 'ஆற்றயலெழுந்த வெண்கோட்டதவத்து' என்று கூறினார்? குளிறு ஆதல் இயற்கைச் சூழல் மூலமாகவும் விளங்குவதைக் கண்டு மகிழ்க."

இவ்வாறு பின்னவர் கூறிக் 'குளிறு' என்றலே சிறப்பென்றார். திரு. ரா. இராகவ அய்யங்கார் அவர்கள் தமது குறுந்தொகை விளக்கத்தில் குளிறும் களிறுமாகியவற்றை விட்டுக் 'குளிர்' என்ற பாடம் கொண்டார்கள் 'குளிறு' என்பதற்கு 'நண்டு' பொருளன்று; 'குளிர்'க்கே பொருளெனக் கொண்டு,

"களவன் குளிரெண்டு கற்கடகம் அட்டை
செளகம் சுறையான் சிதல்." (உரிசொல் நிகண்டு. விலங்கு, உ௬)

"குளீர : கற்கடக :" என்பது அமரகோசம் என மேற்கோள் காட்டி, "இவற்றால் குளிறு என்பது நண்டின் பெயரன்மை உணரலாம்" என்று எழுதினார்கள்.

திரு. அய்யங்காரவர்களின் குறுந்தொகை ஆராய்ச்சி முகவுரையளித்த டாக்டர், திரு. அ. சிதம்பரநாதச் செட்டியார் இதற்கு வெழுதியன காண்போம்.

"அத்திப்பழம் நன்கு முற்றியளிந்ததாயினும் எழு நண்டுகள் ஏறி மிதித்த அளவே அப்பழம் உருவறக் குழைந்து சிதை

யும் என உறுதியாகக் கொள்ளுதல் இயலாது. என்னை? நண்டுகளின் கால்கள் மிதித்த அளவே அப்பழத்தினைக் குழைவித்தற்கேற்ற வன்மையுடையன அல்லவாதலின் என்க. ஏழு யானைகளால் அடுத்தடுத்து மிதித்தற்கேறறவாறு வழியிற்கிடந்த அத்திப்பழம் அவ்யானைகளின் கால்களால் அடுத்தடுத்து மிதிக்கப்பெற்ற நிலையில் உருவின்றிக் குழைந்து சிதைதல போலக் கொடியோருடைய நாவானது உருவறக் குழைந்து சிதைக வென்பதே தலைவியின் கருத்தாதலின் முதலுரையாசிரியர் கொண்ட "எழுகளிறு மிதித்த வொருபழம் போல" என்ற பாடமே பொருட்சிறப்புடையதாகும் இதனால் முதல் உரையாசிரியராகிய சௌரிப்பெருமாளரஙகனார் உரையும் ஆராய்ச்சியாளரால் உற்று நோக்கும் சிறப்புடையதென்பது பெறப்படும்"

திரு செட்டியார் அவர்கள் 'குழைதல்' வினையைக் கொடியோர் நாவுக்கும், மற்றவர்கள் தலைவிக்கும் கொண்டார்கள். களிறு குளிறு என்ற ஐயத்தைத் தெளிவதற்கிடையே குழைதல் வினை தலைவியதா அல்லது கொடியோர் நாவினதா என்ற ஐயமும் தோன்றியுளது இவ்வையத்திலும் பாடபேதம் வேண்டும். குழைதல் வினை தலைவியினுடையதாயின் 'குழையக் கொடியோர்' என்ற பாடமும், கொடியோர் நாவினுடையதாயின், "குழைய கொடியோர் நா" என்ற பாடமும் அமைதல் வேண்டுவதாம். குழைய என்பது வினையெச்சமாயின் வல்லின முதல மொழி வர வநத வல்லொற்று மிகுதல் வேண்டும் என்பது விதி.

குழைய + கொடியோர் = குழையக் கொடியோர்

குழைய என்பது வியங்கோள் வினைமுற்றாயின் மிகுதல் இல்லை.

குழைய + கொடியோர் = குழைய கொடியோர்

குழைதல் வினையை வினையெச்சமாகக்கொண்டு தலைவியினுடையதாகக கொண்டால் எழுகளிறு மிதித்த பழப்போல அழிவதாகத் தலைவி தன்னைக கூறிக்கொண்டாள் என்பது சிறவாது. அதனால் குளிறு என்ற பாடம் கொள்வதே சிறக்கும். குழைதல் வினையை வியங்கோள் வினைமுற்றாகக் கொண்டு கொடியோர் நா குழைய என்று கொண்டால் எழுகளிறு மிதித்த பழம்போல உருவிழந்து கெடுக எனத் தலைவி கூறினாள் என்பதே சிறக்கும். ஆதலின் களிறும் குளிறும் ஆகிய இரண்டும் கொள்ளலாம்.

குளிறு என்ற தமிழ்ச்சொல் வடமொழியில் குளிர் என்றாயிற்று.

# *தமிழ் விருத்தம்

[வித்துவான், நெல்லை. க. சுப்பிரமணியன்]

இடைக்காலத்திலிருந்த இயற்றமிழும் இசைத்தமிழும் வல்ல நல்லிசைப்புலவர்களான நஞ்சமய ஞானிகள், சங்கத்தமிழ்ப் பழம் பாடல்களை ஒத்த முறையில் தித்திக்குஞ் செய்யுட்களை இயற்ற முற்படாமல், புதுப்புதுவகையான விருத்தப்பாக்களை ஆக்கு வதில் மனநிறைவடைந்தது ஏன்? என்ற வினாவை, இளந் தமிழ் மாணாக்கர் எல்லோரும் கேட்க வேட்கையுறுவது இயல்பே. விடைக்குரிய காரணங்களோ பல்; கழறுவம் ஈண்டுச் சில:

ஒன்றுமன்னொன்று விரவி நடக்கும் ஒழுங்கற்ற ஓசையமைந்த செய்யுட்களும சங்க காலத்தில் வழங்கின; ஆயினும், அவற்றை ஒருபுறம் ஒதுக்கி, ஏனை நால்வகைத் தமிழ்ப்பாக்களுள்ளும், வெண்பா கலிப்பா என்னும் இரண்டும் வழங்கிய பான்மையைக் காண முற்பட்டால், அவை அக்காலத்தில் மிக்க செல்வாக்குட னும் அமைப்பு முறையில் சிக்கலான நிலையிலும் திகழ்ந்தன என்பது புலப்படும. எனவே, ஒரு தனிப் புலமைத்திறன் அமையப்பெற்ற நமது சமயச் சான்றோர், தங்கள் உள்ளத்தில் எழும உணர்ச்சிகளையும் எண்ணங்களையும், எளிதாகவும் இனி தாகவும விரைவாகவும வெளிப்படுத்துவதற்கு, அத்தகைய பாட்டுக்களில் எதுவும் ஏற்புடைத்தன்று எனக் கண்டு கொண்டனர்.

சம்பந்தரின் தேவாரத் திருமுறைத் திரட்டுகளில் ஒரே ஒரு ஆசிரியப்பா மட்டுமே காணப்படுகின்றது. அதுவும், அப்பர் சுந்தரர் ஆகியோர் பாடிய திருமுறைகளில் ஒன்றுமே இல்லை. நாலாயிரத் தெய்வப்பனுவலுள் மிகச்சில அகவல்களே உள. திருவாசகத்துள காணப்படும வெண்பாக்கள் தவச்சிலவே. ஆத லால், உயர்தனிச் சங்கத் தமிழ்ப் பழம்பாக்கள், இடைக்காலத்தில் இருந்த நஞ்சமய குரவர்க்கு, ஏற்றுப்போற்றிப் பின்பற்றிப் பாடத்தகுஞ் சிறப்புடையவாய்த் தோன்றிற்றில. அவை அவ் வாறாக, விருத்தப்பா வகைகளோ, படைத்தற்கு எளியன; பாடு தற்கு இனியன ஆதலால், அவை விரும்பிப் போற்றிப் பேணப் பெற்றன.

சான்றாக, நளவெண்பாவின் ஆசிரியர், வெண்பாக்களால் மட்டுமே தம் இலக்கியப்படைப்பை நிறைவேற்றினர். ஆனால்,

* மூலம்: The Evolution of Tamil Viruthams.

நைடதம், சிற்சில குறைபாடுகள் உடையதாயினும், பாடும் ஓசையில் இனியதாயும், பரந்தபுகழ் எய்தியதாயுந் திகழ்கின்றது. விருத்தத்தின் பலவகை, நைடதத்துள் இருத்தலின், ஓசை மாறி மாறிச்சென்று, கற்போருக்கு மனக்கிளர்ச்சியுண்டு பண்ணுகிறது. பாடல் ஓசையால் நைடதம் அங்ஙனம் இருக்கப், புகழேந்திப்புலவரது வெண்பாக்களோ, நூன் முழுதும் ஒரே ஓசையாய் நடத்தலின், பயில்வோர்க்கு மந்தத்தன்மையையே ஏற்படுத்தி விடுகின்றன நிற்க,

இக்காலத்துப் புலவர்க்கு, விருத்தப்பாவின் வகை சில, இயற்றுதற்கு எளிமைய வாதலால், கல்வியினல் இறுமாப்புடையவரே அல்லாமல் வேறெவருங் கலிப்பாவோ வஞ்சிப்பாவோ ஆக்குதற்கு முனையமாட்டார். ஆகவே, தறகாலத் தமிழிலக்கிய வுலகில், தமிழ்ப்புலவர் பலரா லும இயற்றப்பட்டு வழங்கிவரும் விருத்தப்பா வகைகளை அறிந்துகொள்ளவேண்டுவது, இன்றைப் புலவரது இன்றியமையாத கடமையாகும் ஏன் எனின், யாப்பியலில் விதிகளைப் புறக்கணித்திருந்தாலும, இசை இனிமை மிக்கதாய் இராமலிங்க அடிகள் பாட்டுக்கள் இயற்றினமை போன்று, நம்மனோர் செய்தல் ஒல்லாது; அல்லாமலும், விருத்தப்பா இலக்கணம் கல்லாமையால் ஏற்படும பொல்லாங்கினை, நம காலத்து இலக்கியத் திறனய்வாளா சுட்டிக் காட்டவும் இடம உண்டாகும்

இனி, நஞ் சைவ வைணவச் சமயச் சான்றோர் பாடியருளிய பாட்டுக்களின் பலவேறு வகைகளையும், பின்வந்த தமிழ்ப் புலவர் எல்லாரும் அப்படியே பின்பற்ற முடியாமற் போனது ஏன்? என, மீண்டும, இலக்கிய வுலகிலேயே உலாவும் இளந்தமிழ் மாணக்கர் வினவுதல் இயல்பே. பாருங்கள்! சீகாமரம் என்னும பண், அப்பர் தேவாரத்துள் இருபதிகங்களுள் உள்ளது. தமிழ் யாப்பியலின் விதி எதிலும் முழுதும் அடங்காததாகும். ஏனைப் பிற பண்களும், அந்தச் சமய குரவர் வாழ்ந்த காலத்துப் புலமக்களாலும பொதுமக்களாலும் நன்கறியப்பட்டு விளங்கினவே; எனினும், இடைநெடுங்காலம் வழக்கின்றிக் கழிந்தமையும், இசைத்தமிழ் நூல் எல்லாம் அழிந்தமையும் காரணமாகப் பின்வந்தோர் அறிந்து பின்பற்ற முடியாமற் போயிற்று.

இன்னும், சைவசமயப் பாடல்களையெல்லாம் திருமுறைகளாக வகுத்த நம்பியாண்டார் நம்பிகள் காலத்தில், ஒவ்வொரு பாடலுக்கும் உரிய பண் இது என்று தெரிய அரிதாயிருந்தது. அன்றியும், அங்ஙனம் அததற்குரிய பண், உண்மையாகவே கல்லாத பெண்களால் மட்டும் கூறமுடிவதாயிருந்தது ஆகவே, நம்பியாண்டார் நம்பிகள் காலத்தவர்க்கும் அவர்க்குப் பின்

வநதோர்க்கும், எவ்வெப்பாக்களின் இலக்கணம் எளியதாய்ப் புலப்படும முறையில் காணப்பட்டதோ, அதுகொண்டு அன்னார் புதுப்பாக்கள் புனையப்புகுவாராயினர்.

கம்பரும் அவர்தங் காலத்தில் இருந்த ஏனைப்புலவரும் இத்தகைய முறையில் பாப்புனையுந் திறனில் வென்றியுடன் திகழ்ந்தனர். அவர்தம் விருத்தப்பாக்களெல்லாம் எண்ணிக்கையில் ஒரு வரம்புக்குட்பட்டிருக்கின்றன. கம்பர் பாடியுள்ள சந்த விருத்தங்கள் தொண்ணூற்றாறே யாகும்; அவை விருத்தப்பாவியல் என்னும் நூலில் பொருத்தமாக எடுத்துக்காட்டப் பட்டுள்ளன.

தேம்பாவணி என்ற நூலின் ஆசிரியரான வீரமாமுனிவர், கம்பரினும் மிகப் பல சந்த விருத்தங்களை ஆக்கவேண்டும் என்ற வீண் பெருமைகொண்டு முயன்றிருக்கின்றார். கம்பரைப் பின் பற்றிச்சென்ற இடமெல்லாம், அவரின் பாட்டுக்கள் தங்கு தடையின்றி நடக்கின்றன; ஆனால், தமக்குத் தோன்றியவாறே, பல பழையவிருத்தங்களைப் போல்வனவாகப் புனைந்தியற்றிய இடம் எல்லாம் தவறுறக் காண்கின்றோம்.

விருத்தப்பாவியல் என்னும் புத்திலக்கணம் காட்டும் பாட்டுக்களை அல்லாத பிறவற்றை விருத்தம் என விளம்புதல் அரிதே யாகும். ஒவ்வோரடியின் கண்ணும் அறுசீர்களை நீவிர் நிரந் தினிது அமைத்தல் ஒல்லும்; ஆயினும், அதனை விருத்தம் என உரைத்தல் செல்லாது. இங்ஙனமே, ஐஞ்சீர், எழுசீர் அடுக்கி அமைத்த பாட்டுக்களும் விருத்தமாகா. இதை வீரமா முனிவர் பகுத்துணர்ந்திருந்தாராயின், அவரது இலக்கியப் படைப்பாகிய தேம்பாவணி நமது இலக்கியவுலகில் ஒருபெருஞ் சின்னமாகப் புகழுடன் திகழும்.

இனி நாம விரும்பினும் விரும்பாவிடினும், விருத்தப்பா இலக்கணம் நிலைத்து நின்று விட்டது என்றும், அதனை விலக்கி விடுதல் பெரும்பாலும் அருமையாம் என்றும்; அதனைப் புது முறையில் புதுக்கி மாற்ற முற்படுதல் ஒல்லாது என்றும் எல் லாரும் அறிதல் வேண்டும். எனவே, இந்த விருத்தப்பா இலக் கணம் விதிப்பதற்கு, வேறு ஒரு தனிச்சிறந்த முழுநூல் இல்லாத குறையை, இக்கால இன்றமிழ் விருத்தப் பாக்களின் இலக்கணம் முற்றும் எடுத்து நிலைநாட்டும் விருத்தப்பாவியல் என்னும் நூல், நீக்கி நின்று வழி காட்டும் என நாம் உறுதியா யுரைக்கலாம்.

# மாடல மறையோன்

[திரு. மது. ச. விமலானந்தம், எம்.ஏ.,]
(சரபோஜி மன்னர் கல்லூரி, தஞ்சை.)

*முன்னுரை*

இளங்கோ தந்த இன்தமிழ்க் காப்பியம் சிலப்பதிகாரம். இப்பெருங் காப்பியத்தில் அமையும் பாத்திரங்கள் பல; அப் பாத்திரங்கள் பலவற்றுள்ளும் படிப்போர் மனத்தைப் பற்றி இழுக்கும் பான்மையன சில. இங்ஙனம் அமைந்த சில சிறந்த பாத்திரங்களின் செயலாற்றலினாலேயே சிலம்பும் சீர்மை யுறுகின்றது; சிறந்தோங்குகின்றது. சிலம்பினைச் சிறக்கச் செய் யும் சிறு பாத்திரங்களில் அனைவருள்ளத்திலும் அமைந்து, அருந் தமிழ்க் காப்பியத்தை அழகுபடுத்துபவன்—அணிபெறச் செய் பவன் மாடல மறையோனேயாவன். சிலம்பில் விளங்கும் வியத்தகு பாத்திரமும் இவனே! செயற்படு மனமும் செம் மொழிப புலமையும் மிக்க இவனின்றேல் இன்தமிழ்க் காப்பியமே இல்லையெனும் அளவிற்கு இன்றியமையாதவன். அன்றியும் புகார்க் காண்டத்தே கண்ணகி, கோவலன், மாதவியும்; மதுரைக் காண்டத்தே கண்ணகி, கோவலன், பாண்டிமன்னனும் நம் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளுமாப் போன்றே, இறுதிக் காண்டமாம் வஞ்சிக் காண்டத்தே இடம்பெறும் செங்குட்டுவன், கண்ணகி, மாடலன் ஆகிய மூவரிலே நம் முழுக் கவனத்தையும் பெறுபவன் இம் மாடலன்தான் எனின் அஃது எத்துணையும் மிகையாகாது. இவ் வியத்தகு பாத்திரம் செந்தமிழ்ச் சிலம்பில் செயலாற்றும் சீர்மையும் சிறப்பையும் காண்பதே இக் கட்டுரை யின் கருத்தாம்.

*அருந்தமிழ்க் காப்பியத்தில் அருமறையந்தணன்*

தமிழ்ப் பெருங்காப்பியத்தில் இம் மாடலன் தோன்று மிடங்கள் நான்கு. காப்பியத்தில் நுழையுமிடம் மதுரைக் காண்டத்தில் அடைக்கலக் காதையில்; காப்பியத்தினின்றும் விடுதலை பெறுமிடம் வஞ்சிக் காண்டத்தில் வரந்தரு காதையில். இதற்கிடையே இவன் பேசுமிடங்கள் ஒன்பது. விவரம் வருமாறு:

காப்பிய நுழைவு............மதுரைக் காண்ட, அடைக்கலக் காதை—அடி 11.

பேசுமிடங்கள் :

அடைக்கலக்காதை அடி 21-94; 106-112;
நீர்ப்படைக்காதை „ 48-52; 56-111; 116-140;
நடுகற்காதை „ 112-186; [162-171;
வரந்தருகாதை „ 72-96; 118-146;

காப்பிய நீக்கம்..........வஞ்சிக் காண்ட, வரந்தருகாதை அடி 168.

மறையவன் உறைபதி

தாழ்நீர் வேலித் தலைச்செங்கானத்திற் பிறந்தவன். (தலைச் செங்கானம் காவிரிப்பூம்பட்டினத்திற்குத் தென்மேற்குத் திசையில் நான்கு நாழிகை வழித் தூரத்தில் உள்ள ஓர் ஊர்-தேவாரப் பாடல் பெற்ற பெருவூர்) இவ்வூரில் பிறந்து சிறந்து மறையவர்கட்கெல்லாம் முதல்வனாகத் திகழ்ந்தவன் மாடலன்; நான்மறை ஓதி நல்வழி நின்ற வல்லோன்; நாடறிந்த நல்லவன்; ஏடறிந்தவனும்கூட. விருத்தகோபாலனும் கோவலன்பால் விடுதலறியா விருப்புடையவன். திங்கள்முடி சூடுமலை, தென்றல் விளையாடு மலை, தங்குமுகில் சூழுமலை, தமிழ் முனிவன் வாழுமலையாம் பொதிய மலையை வலம்வந்து, நீலத்திரைக் கடலோரத்திலே நித்தம தவம்செய் குமரி எல்லையிலே—குமரியம் பெருந்துறை முறைமையின் ஆடிய அருமறையாளன். இங்ஙனம் குமரித் துறை மூழ்கிக் கொள்கையிற் பெயருங்கால மதுரையை அடுத்த புறஞ்சேரியிலே, வழிவந்த வருத்தம் களைவான் வேண்டிப் பள்ளியிடத்தே புகுந்தான்; அதுபோது தொலைதூரம் நடந்த துயர் நீக்கக் கவுந்தியடிகளுடனும் கண்ணகியுடனும் அவண் இருந்த கோவலன் மாடலனைக் காண்கிறான். இதுவே மாடலன் காப்பியத்தில் வந்து நுழையும் வாயிலாகும்.

மாடலன் மாண்பு

மாடலன் என்றதும் அவனது பரந்து சிறந்த அனுபவத் திறனே அனைவருக்கும் நினைவிற்கு வரும். கோவலன் மாமலர் நெடுங்கண் மாதவியைப் பிரிந்தது முதல், செங்குட்டுவன் செந்தமிழ்ப் பாவைக்குக் கல் சமைக்க வடவரையடக்கி, வடபேரியயத்தில் கலலெடுத்துக் கனகவிசயர்தம் கதிர்முடியேற்றிக் கொணர்ந்தமை ஈறாக அடங்கிய அனைத்தையும் நமக்கு அறிவிப்பவன் இவனேயாவான்.

கோவலன் ஆடலரசியாம் மாதவியை நீத்து, கற்பின் செல்வி கண்ணகியோடு மதுரை போந்ததும், அங்கு அவன்

கொலைக்களப்பட்டதும், கோமுறை செய்தானைத் தீமுறை செய்த பத்தினிப் பெண் வஞ்சி நகர் புகுந்ததையும் செங்குட்டு வற்குச் செப்புகின்றான். அடைக்கலம் ஏற்ற இடைக்குல மூதாட்டியாம் மாதரி இடையிருள் யாமத்து எரியகம் புக்கதும்; தவந்தரு சிறப்பின் கவுந்தியடிகள் உண்ணுநோன்பிருந்து உயிர் துறந்ததும்; கோவலனுக்குற்ற கொடுந்துயர் கேட்டுக் கண்ணகி தாதையும, கோவலன தாதையும் துறவு பூண்டமையும்; இவ் இருவர்தம் மனைவியர் இன்னுயிர் நீத்தமையும்; மாதவி மடந்தை, கணிகையர் கோலம் காணுதொழியுமாறு மணிமேகலையைப் போதிமாதவன்முன் புண்ணியதானம் செய்து துறவு பூண்டமை யும் போன்ற செய்திகளையும் மாடலன் மூலமாகவே அறி

தீதில் தென்னவனுக்குப் பின் வந்த வெற்றிவேற் செழியன் பொற்கொல்லர் ஆயிரவரை உயிர்ப்பலி யூட்டி உரைசெல வெறுத்த மதுரை மூதூரில் அரசு ஏற்றனன் என்ற செய்தியை இவன் வாயிலாக அறியும்போது அகமகிழ்கின்றோம்.

பாண்டிநாடு பற்றிப் பகர்நத மறையோனிடத்துத தன மைத்துனன் கிள்ளிவளவனின் ஆட்சிச் சிறப்பை அறிய விரும்பிய செங்குட்டுவனுக்கு,

“வெயில்விளஙகு மணிப்பூண் விண்ணவர் வியப்ப
எயில்மூன் றெறிந்த இகல்வேற் கொற்றமும்,
குறுநடைப் புறவின் நெடுந்துயர் தீர
எறிதரு பருந்தின் இடும்பை நீஙக
அரிந்துடம் பிட்டோன் அறந்தரு கோலும்;
திரிந்துவே றாகும் காலமும் உணடோ?
தீதோ இல்லை செல்லற் காலையும்
காவிரி புரக்கும் நாடுகிழ வோற்கு.” (நீர்ப்படை கஙச-களக)

எனச் செம்பியன் சிறப்பைச் செவிகுளிரக் கூறுகின்றான்.

இதுவன்றிச் சேரன் வியலூரை அழித்து வெற்றிகொண்ட தும், சோழ அரசர் ஒன்பதின்மர்க்கும் இவனுக்கும் நேர்ந்த போரில் நேரிவாயில் என்னுமிடத்தில் வெற்றி பெற்றதும், பின்னர் உடன்று மேல் வந்த ஆரிய மன்னர் சிலரைக் கஙகைப் பேராற்றங்கரையில் வென்றமை போன்ற செய்திகளும் அருமறை முதல்வன் மூலமே அறிய வருகின்றோம்.

அன்றியும் கோவலன் தாயும், கண்ணகி தாயும், மாதரியும் செட்டி ஒருவனுக்குச் சிறுமகளாகப் பிறந்தமையும், கண்ணகி கோவலன் பற்றியும் அரிய செய்திகளை அறியச்செய்கின்றான்.

இங்ஙனம் மூவேந்தர் பற்றியும், மாசாத்துவான் மாநாய்கன் இருவர்தம் குடும்பங்கள் பற்றியும், காப்பியத்திற்கு வேண்டிய கனிவுறு செய்திகளையும் கூறும் மாடலனை எண்ணும்போது வியக்கின்றோம். இத்துணைச் செய்திகளையும் எப்படித்தான் அறிந்தானோ? நாடுபல சுற்றி நல்லபல செய்திகளை ஏற்ற சமயத்தில் இனிதே பகரும் இவனை ஓர் வியத்தகு பாத்திரம் (Wonderful Character) என்றே கூறவேண்டும்.

காப்பிய ஆசிரியர்களும் நாடக ஆசிரியர்களும் தாங்கள் கூறவேண்டியவற்றைத் தாம்தாம் படைக்கும் பாத்திரங்களின் வாயிலாக வெளியிடுதல் மரபு. அங்ஙனமே காப்பியத்திற்கு வேண்டிய—கதைக்கு இன்றியமையாத செய்திகளைச் செப்பும் சிறந்த பாத்திரமாக அமைகின்றான் மாடலன்—அல்ல, அமைத்துள்ளார் இளங்கோவடிகள்! இங்கே ஆசிரியர், நாடகப் பெரும் பேராசிரியர் சேக்ஸ்பியரையும்விட (Shakespeare) ஒருபடி மேல் சென்று வென்றுவிடுகின்றார் என்றே கூறலாம். சேக்ஸ்பியர் இறுதிக் காலத்தில் யாத்த 'சூறுவளி' (Tempest) நாடகத்தில் கடந்தகால நிகழ்ச்சிகள் பலவற்றை மன்னன் பிராஸ்பரோ (Prospero) மூலமாகத் தெரிவிக்கின்றார். அதனைச் செவிமடுக்கும்போது சலிப்புத் தட்டுகின்றது; வலிந்து, தேவையின்றிக் கூறுவதாகவே அமைகின்றது. ஆனால் நம் மாடலனும் பலவாய செய்திகளைப் பல சந்தர்ப்பங்களில் பகருகினான்; அவற்றை அறியும்போது அயர்ச்சியோ, தேவையின்றித் திணிப்பது போன்றோ தெரியவில்லை. பலவாய செய்திகளைச் சிலவாய மொழிகளில் சிறந்த முறையில் எடுத்தியம்பும் மாடலன் மாண்பும் இயம்பச் செய்யும் இளங்கோவின் திறமும் சொல்லும் தரமன்று.

இதுகாறும், அரிய பல செய்திகளை அறிவிப்பதற்காகவே அடிகள் மாடலனைப் படைத்துள்ளார் என்றும், படைத்த தன்மையும் பகரும் திறனும் பாராட்டுமாறு அமைந்துள்ளன என்றும் கண்டோம்.

அறிவும் ஆற்றலும்

புறஞ்சேரியில் புகுந்த மாமறை முதல்வனைக் கண்ட கோவலன், சென்று அவன் சேவடி வணங்கவும்; அவனையும் அவன் குடும்பத்தையும் முன்னரே நன்கறிந்த மாடலன், கோவலனுகுற்ற கொடுந்துயர் கண்டு கலங்கி 'நான் அறிந்தவரை நீ செய்தன அனைத்தும் நல்லனவாயிருப்ப, இங்ஙனம் இழிநிலையடைந்ததேன்?' என்று வருந்துகின்றான்:

"இம்மைச் செய்தன யானறி நல்வினை
உம்மைப் பயன்கொல்? ஒருதனி யுழந்துஇத்

திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது
விருத்தகோ பால! நீயென வினவுகின்றான்."
(அடைக். கக-கச)

இவண், கோவலனுக்கு ஆறுதலளிக்குமாற்றானும், அதே சமயத்தில் இங்ஙனம இன்னல் அனுபவிக்கக் காரணம் உண்டெனும் உட்குறிப்புத் தோன்றவும் பேசும் மாடலன் அறிவுத் திறம் போற்றற்பாலது.

'உம்மையிலும நல்லனவே செய்திருப்பின் இம்மையில் இங்ஙனம் இன்னல் நேர இடமில்லை; இன்னல் நேர்ந்தமையால் இம்மையிலும நீ தீயனவே செய்திருகக வேண்டும்; ஆயினும் யானறிந்தவரை கடக்களிறடக்கிய கருணை மறவனையும்; ஒல்காச் செல்வத்து உறுபொருள் கொடுத்து நல்வழிப்படுத்திய செல்லாச் செல்வனையும்; பசிப்பிணி யறுத்துப் பல்லாண்டு புரநத இல்லோர் செம்மலாகவும் இருந்து நல்லனவே செய்தனை' எனத் தொனிப் பொருள் தோன்றக் கூறிய திறம் வியந்து செயல் மறந்து பாராட்டற்பாலது.

இவனது அறிவுத்திறத்திற்கோர் எடுத்துக்காட்டினைக் கண்டோம்; இவனது ஆற்றலுக்கோர் அரிய செயலைக் காண்போம். குன்றாக் கொள்கைக் கோவலன் தான் நனவுபோல நள்ளிருள் யாமத்தில் கண்ட கனவைக் கூறி 'கடிதீங்குறுமெனக்' கழறிக் கலங்கிய ஞான்று, ஏற்ற விடையோ, எளிய மாற்றமோ கூறாது வேறு கூறுவது மாடலனது நுண்மாண் நுழைபுலத்தையும் நனவாற்றலையும் (Presence of mind) நன்கு காட்டுகின்றது. கனவு கண்டு கலங்கும் கோவலனுக்கு உடனே 'ஐயோ! கண்ட கனவு பொல்லாததாயிற்றே! என்னென்ன நடககப் போகின்றதோ?' என்றெல்லாம் எடுத்துக்கூறி இன்னலடையச் செய்யாது, அவன் கூறியதையே கவனியாததுபோல் சட்டை செய்யாது சர்வசாதாரணமாகச் செயலாற்றும் மாடலன் மாண்பே மாண்பு!

இங்ஙனம் மாற்றம் உரைக்காது மனத்தைத் திருப்பியமையால், கோவலனும் கனவு பற்றிய கவலையை மறந்துவிடுவான்; அப்படி மறக்காவிடினும் கனவொன்றும் அங்ஙனம் தீமையுடையதன்று என்ற எண்ணமும் தோன்றக் கூடுமன்றோ? இதனால் மறையோனது நிறையாற்றல் நன்கு விளங்கும்.

### மண்தேய்த்த புகழினானும் மாடல மறையோனும்

மாடலன் நூலில் நுழைந்தமையும் நுவன்றமையும் காணும் போது, கோவலன் புகழ்பாடவே இவனை இளங்கோ அமைத்தாரா

என ஐயுறவேண்டியுளது. ஏனெனில் அடைக்கலக் காதையில் அடியெடுத்து வைத்தவுடனேயே, அந்தணன் ஒருவன்பால் அருளுள்ளம் கொண்டு அவ்வுயிர் பிறப்பாளனை மதயானையிடமிருந்து காத்த கருணை மறத்தையும்; 'கடவதன்று நின் கைத்தூண் வாழ்க்கை'யெனக் கூறி மனைவியை விடுத்து வடதிசைப் பெயர்ந்த மாமறையாளனையும் அவன் மனைவியையும் ஒன்று சேர்த்து உறுபொருள் கொடுத்து நல்வழிப்படுத்திய நற்பண்பையும்; பொய்ச் சாட்சி கூறிப் பூதத்தின் வாய்ப்பட்ட வறியோன் சுற்றத்தோர்க்கும் பற்றியகிளைஞர்க்கும் பசிப்பிணியறுத்துப் பல்லாண்டு புரந்த பெருமையையும் பலபடப் பாராட்டுகின்றான்.

இங்ஙனம் எடுத்தியம்பாவிடில் நாம் காப்பியத் தலைவனும் கோவலனை ஒரு சிறந்த தலைவனாகவும் கருதியிருக்கமாட்டோம; அவன் கொலையுறக் கண்டபோது கலக்கமோ கவலையோ கொண்டிருக்கமாட்டோம். இங்ஙனம் கருணை மறவனாகவும், செல்லாச் செல்வனாகவும்; இல்லோர் செம்மலாகவும்; விருந்த கோபாலனாகவும் விளக்கியமையாலேயே நாமும் பாத்தரும் பண்பினனும் கோவலன்பால் பேரன்பும் பெருமதிப்பும் கொள்கின்றோம்.

புகார்க் காண்டத்தில் பெரிதும் பங்குகொண்டோர் கண்ணகி, மாதவி, கோவலன் ஆகிய மூவரே. காப்பியம் நடைபெற இம் மூவரில் எவர்மேலாவது குறை கற்பிக்க வேண்டுவதாயிற்று; எனவே கோவலன் குறையுடையனாகக் காட்சியளித்தான். ஆனால் அடுத்த காண்டத்தில் கொலையுறப் போகின்றான்; கொலையுறப் போகும் கோவலன், கொங்கச் செல்வி—குடமலையாட்டி கண்ணகியை நீத்த கயவனாகவே காட்சியளிப்பின் இவன்பால் எவரும் இரக்கமோ ஏக்கமோ கொள்ளார். எனவே தான் இளங்கோவடிகள் கொலையுறப்போகும் கோவலனை மாண்புடையனாக மாடலன் வாயிலாகத் தீட்டுகின்றார்.

இப் பகுதியில் கண்ட கருத்தின் சுருக்கம் வருமாறு: கண்ணகிக்கு ஆதரவாகவும், அவள் புகழ்பாடவும் கவுந்தியடிகளை இளங்கோவடிகள் ஏற்படுத்தியமை போன்றே கோவலனைப் போற்றவும் அவன் புகழ் பேசவுமே மாடலனை அமைத்தார் அடிகள் என்றும்; அடைக்கலக் காதையிலேயே அடிகள் மாடலனை அறிமுகப்படுத்தியமையே இதற்கொரு சான்றெனவும் கண்டோம்.

அஞ்சாநெஞ்சன்

மாடலன் மாண்பிற்கு அவன்பால் அமைந்த அஞ்சா நெஞ்சமே ஆதாரமாகும்: அருந்தமிழாற்றல் அறியாது மலைந்த

கனகவிசயரை ஏனை இருபெரு வேந்தர்க்கும் காட்டிவரச் செய்கின்றான் குட்டுவன். காட்டி வந்த கஞ்சுக மாக்கள்:

"நீளம ரழுவத்து நெடும்பே ராண்மையொடு
வாளுங் குடையு மறக்களத் தொழித்துக்
கொல்லாக் கோலத்து உயிர்உய்ந் தோரை
வெல்போர்க் கோடல் வெற்ற மன்று." (நடுகற். கூ0-கூக)

எனச் செம்பியர் பெருந்தகை செப்பியமையும்,

"அமர்க்கள மரசன தாகத் துறந்து
தவப்பெருங் கோலங் கொண்டோர் தம்மேல்
கொதியழற் சீற்றங் கொண்டோன கொற்றம்
புதுவது அன்று." (நடுகற். க0ச-க0எ)

போர்வேற் செழியன் புகன்றமையும் சாற்றினர்; சாற்றிய உரை கேட்டுச் சீற்றங்கொண்டான் சேரன்; வேங்கை நிகர் வேந்தன் வெகுண்டமையும், அவனுடைய தாமரைச்செங்கண் தழல் நிறம் கொண்டமையும் கண்ட அவையோர் அவனை அணுகவும் அஞ்சினர். ஆனால் குன்றாக்கேள்வி மாடலமறையோனே அஞ்சாது துணிந்து நல்லறங் கூறி அவனை நல்லாற்றுப் படுத்துகின்றான் எனின் இவனது அஞ்சாநெஞ்சத்தையும ஆண்மைத் திறத்தையும் என்னென்பது?

இங்ஙனம் துடித்தெழுந்த செங்குட்டுவனைத் தடுத்து நிறுத்தியிராவிடில், சேரன் இருபெரு வேந்தரின்மேல் வெகுண்டு போருக்கு எழுந்திருக்கக்கூடும்; அச் செயல் செங்குட்டுவன் சிறப்பிற்கு இழுக்கையும், தமிழர் வேந்தரின் ஒற்றுமைக்கு ஊறையும் விளைத்திருக்கும். அந்நிலை ஏற்படாதவாறு அஞ்சாது, சினமிகு செங்குட்டுவன் சீற்றத்திற்கு ஆளாவதையும் எண்ணாது மாற்றமுரைத்து ஏற்றது புரிந்த மாடலன் மாண்பே மாண்பு!

## ஊழின் பெருவலி உணர்ந்தோன்

இவனது பேச்சினூடே சென்று பார்ப்போமாகில் இவன் ஊழ்வினையில் நம்பிக்கையுடையோன் என்பதும்; ஊழ்வினை உருத்துவந்தூட்டும் என்ற திண்ணமான எண்ணம் கொண்டோன் என்பதும் இனிது பெறப்படும். 'உம்மைப் பயன்கொல்' (அடை-கூஉ) எனக் கோவலனிடத்தும்; 'ஊழ்வினை உருத்தெழ' (நீர்ப்படை-ருகூ) என்றும், ஊழ்வினைப் பயன்கொல் (நீர்ப்படை-எ0) எனவும் செங்குட்டுவனிடத்தில் கூறுவதாலும் ஊழ்வினையின்பால் உறுதியான நம்பிக்கையுடையோன் என்பதை நன்கறியலாம்.

**மறையோனும் இறையோனும்**

காதற்கினிய கோவலன் கற்பிற்கினிய மாதவியைப் பிரிந்தது முதல், கண்ணகிக்குக் கல் கொணர்வான் செங்குட்டுவன் வடதிசைச் சென்று மீண்டமை ஈறாக அனைத்தையும் அறிவுறுத்திய அருமறை யந்தணன்பால் தலையாய அன்பும் நிலையாய மதிப்பும் கொண்ட குட்டுவன் மறையோனைப் பேணி,

"ஆங்கு அவற்கு
ஆடகப் பெருநிறை ஐயைந்து இரட்டித்
தோடார் போந்தை வேலோன் தன்நிறை
மாடல மறையோன் கொள்கென் றளித்தான்."
(நீர்ப்படை - ௧௭௩-௧௭௬)

தன்நிறையான ஐம்பது துலாபாரம் பொன்னைச் சேரர் பெருந்தகை செங்குட்டுவனே அளித்தான் என்றால் அம்மாடலன் அருமையையும் பெருமையையும் என்னென்பது?

**மறவாழ்வும் அறவாழ்வும்**

அறக்கள வேள்வி செய்யாது யாங்கணும் மறக்கள வேள்வியே செய்துவந்த செங்குட்டுவற்கு, மீக்கூற்றாளர் எவரும் இன்னுளில் இல்லாதொழிந்ததை எடுத்துக்காட்டி "யாக்கை நில்லா" தென்பதையும்; அருந்தமிழாற்றலை இகழ்ந்த ஆரிய மன்னரைக்கொண்டே "செல்வம் நில்லா"தென்பதையும்; செங்குட்டுவன்தன் நரைமுதிர் யாக்கையினைச் சுட்டிக் காட்டி "இளமை நில்லா" தென்பதையும் அறிவுறுத்தி,

"விண்ணோர் உருவின் எய்திய நல்லுயிர்
மண்ணோர் உருவின் மறிக்கினும் மறிக்கும்;
மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்
மிக்கோய்! விலங்கின் எய்தினும் எய்தும்;
விலங்கின் யாக்கை விலங்கிய வின்னுயிர்
கலங்கஞர் நரகரைக் காணினுங் காணும்;
ஆடுங் கூத்தர்போல் ஆருயிர் ஒருவழிக்
கூடிய கோலத்து ஒருங்குநின் றியலாது,
செய்வினை வழித்தாய் உயிர்செலும் என்பது
பொய்யில் காட்சியோர் பொருளுரை; ஆதலின்."
(நடுகற் - ௧௫௧-௧௬௮)

"அருமறை மருங்கின் அரசர்க் கோங்கிய பெருநல்வேள்வி நீ செய்தல் வேண்டும்' என வேண்டி வேள்வி நடைபெறவும் செய்கின்றான். இதனால் இவனது சமயமறிந்து பேசி எண்ணியது முடிக்கும் திறனும்; மறவழிச் சென்ற மன்னனை அறவழிப்

படுத்திய அருமையும் அறிந்தோம். தலையானங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு மாங்குடி மருதனார் காஞ்சித் திணையுணர்த்திய மாசறு காட்சியையும் கடந்து ஒருபடி மேற்சென்று செங்குட்டுவற்கு நிலையாமை யுணர்த்தி நிலைபெறச் செய்த அருமறையந்தணனின் ஆற்றலே ஆற்றல்!

பழியஞ்சும் பண்புடையோன்

கோவலன் கொலையுற்றதும், வலம்படுதானை மன்னவன் தன்னைச் சிலம்பால் வென்றனள் சேயிழை (கண்ணகி) என்றும் தான் கூறக்கேட்ட கோவலன், கண்ணகி ஆகியோரின் அருமைத் தந்தையர் துறவு பூண்டனர், அன்னவாதம் மனைவியர் உயிர் துறந்தனர், மாதவி மணிமேகலையைப் போதிமாதவர்பால் அளித்துத் தானும் துறவு பூண்டாள் என்று கூறி,

"என்வாய்க் கேட்டோர் இறந்தோ ருண்மையின்
நன்னீர்க் கஙகை யாடப் போந்தேன்."

(நீர்ப்படை - க0க-கக0)

எனத் தான் வந்த கதையைக் குட்டுவனிடம் கூறுகின்றான். இங்ஙனம் எல்லாம் தன்வாய்ச் சொல் கேட்டே நடந்தமையால் அக்கருமந் தொலையக் கங்கையாடப் போகின்றான் இம்மறையவன் எனின் இவனது பழி நாணும் பண்பையும், தீமை கண்டஞ்சும் திறத்தையும் என்னென்பது?

அறிவுரை பகரும் ஆசான்

காப்பியத்தில் மாடலன் ஒன்பது முறை பேசிய பேச்சினூடே உலகியலும், உயரிய உண்மைகளும் ஒளிரக் காண்கின்றோம்.

"யாக்கை நில்லா (நடுகற்காதை கரு0)
செல்வம் நில்லா ( ,, கருஉ)
இளமை நில்லா ( ,, கருரு)
ஆடுங் கூத்தர்போல் ஆருயிர் ஒருவழிக்
கூடிய கோலத்து ஒருங்குநின் றியலாது
செய்வினை வழித்தாய் உயிர்செலும்." (நடுகற் - கசரு-கசஎ)

"நாளைச் செய்குவம் அறமெனின் இன்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும்;
இதுவென வரைந்து வாழுநாள் உணர்ந்தோர்
முதுநீர் உலகில் முழுவதும் இல்லை." (நடுகற் - களக-கஅஉ)

" நற்றிறம் புரிந்தோர் பொற்படி யெய்தலும்,
அற்புளம் சிறந்தோர் பற்றுவழிச் சேறலும்,
அறப்பயன் விளைதலும், மறப்பயன் விளைதலும்;
பிறந்தவர் இறந்தலும், இறந்தவர் பிறத்தலும்,
புதுவ தன்றே; தொன்றியல் வாழ்க்கை." (வரந் - ௧௩௬-௧௪0)

இங்ஙனம் உலகியலையும் உயர்நிலைகளையும் நல்கும் நான்மறையாளனை அறிவுரை பகரும் ஆசான் என்றழைக்காது பின் எங்ஙனம் அழைப்பது?

சொல்லின் செல்வன்

இறுதியாக, இவனைப் பற்றி எண்ணும்போது அரசன்முதல் ஆண்டிவரை, அரசியல் முதல் அன்றாட நிகழ்ச்சி அனைத்தையும் அறிந்தோன என்ற எண்ணம ஏற்படுவது போன்றே, மாடலன் என்றதும் 'சொல்லின் செல்வனா'கவே காட்சியளிக்கின்றான்.

சீற்றமுற்ற செங்குட்டுவனைச் சினமாறச் செய்யும் திறமும், மறவழிச் சென்ற மன்னனை அறவழி திருப்பிய அருமையும் கேட்டார்ப் பிணிக்கும் தகைமையன; கேளாரும் வேட்ப மொழியும் நீர்மையன.

கோவலனைக் கண்ணுற்றஞான்று அவன் துயருறக் காரணம் என் என வியக்கும்போதுகூடக் கோவலனை உயர்த்தியும் தன் கூற்றில் எள்ளளவும் தவறில்லாதவாறும் காத்து, அதே சமயத்தில் அவனது உம்மைப்பயனை உட்குறிப்போடு உணர்த்தியமையும் இவனது எடுத்தியம்பும் திறத்திற்கோர் ஏற்ற சான்றாகும்.

சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் இவனது திறம் வியக்கத்தக்கது. கேட்போருக்கு வினவிக் கேட்கும் விருப்பையும் வியப்பையும் உண்டாக்குமாறு இவன், கோவலன் மாதவியைப் பிரிந்ததுமுதல் குட்டுவன் கண்ணகிக்குக் கல் சமைத்தமை ஈறாக அமைந்த நீண்ட வரலாற்றை இரண்டே அடிகளில்,

" மாதவி மடந்தை
கானற் பாணி கனக விசயர்தம்
முடித்தலை நெரித்தது." (நீர்ப்படை - ௪௧-௩௧)

எனச் சுருக்கிக் கூறிய திறம் வியந்து செயல் மறந்து பாராட்டற் பாலது. பல சொல்லக் காமுறாது சில சொல்லிச் சிந்தை மகிழ்விக்கும் மாடலன் சொற்றிறமும் செயற்றிறமும் சிறப்புடைத்து. இதனை எண்ணியே இளங்கோவடிகளும் இவனை "நாவலந்தணன்" (அடைக்கலக்காதை-20) என நவில்கின்றார் போலும்! அடி

யார்க்கு நல்லாரும் 'நாவாற் சொல்வன்மையுடைய அந்தணன்' என உரை செய்கின்றார். சொல்லின் செல்வனுக மட்டும் அமையாது செயல் வீரனுகவும் விளங்கும் மாடலன் புகழ் நந்தமிழ்ச் சிலம்பு நிலைபெறுமளவும் நின்று நிலவுவதாக!

இவனின்றேல்!

மாடலன் ஒருவன் மட்டும் செந்தமிழ்ச் சிலம்பில் இடம் பெருவிடில் சிலப்பதிகாரமே சீர்பெற-சிறப்புற அமைந்திருக்காது எனத் துணிந்து கூறலாம். இளங்கோ தோற்றிய மாதரி, கவுந்தியடிகள், மாசாத்துவான், மாநாய்கன், அன்னவர்தம் மனைவியர், மாதவி - மணிமேகலை இவர்கள்தம் இறுதிநிலையை எடுத்தியம்பா தொழியின் இளங்கோ தந்த காப்பியம் இன தமிழ்க் காப்பியமாக இலங்காது; அங்ஙனம அனைவர்தம பிற்றை நிலைகளைப் பகரும் பாத்திரமாக அமையும் பெருமை மாடலனுக்கே உளது.

பெருங்காப்பியத் தலைவனுன கோவலனும் தன்னிகரில்லாத் தலைவனுகவும், அழிவிலும் சிறந்ததோர் அவலத் தலைவனுகவும் அமையுமாறு செய்தமை மாடலனது கூற்றுக்களே (அடைக்கலக்காதை உஉ-கூ0) ஆகும். மாடலனின் இம்மொழிகள் இன்றேல் அவலத் தலைவன்பால் எவருள்ளமும் ஈடுபடாது. அங்ஙனமின்றி அனைவரையும் அவன்பால் ஈடுபடச் செய்த மாடல மறையோன் உயரிய காப்பியத்திற்கு உயிரூட்டியுள்ளான் என அறுதியிட்டு உறுதி கூறலாம் இங்ஙனம் காப்பியததின் இறுதி நிலையை இனிதே இயக்கிச் செல்லும் அருமறையந்தணனின் அவசியத்தை யாரே மறுக்க வல்லார்?

இளங்கோ படைப்புத் திறம்

ஈய இன்றியமையாப் பாத்திரத்தைப் படைதத இளங்கோவின் கைவண்ணத்தை எண்ணுதிருக்க இயலாது. கதை நிகழ்ச்சிகளைக் காப்பியத்திற்கு வேண்டிய வழி, வேண்டிய அளவு எடுத்தியம்பும் பாத்திரமாக இவனைப் படைதத இளங்கோ, தனக்கு உறுதுணையாகப் படைக்கப்பட்ட பாத்திரமே மாடலன் என்ற எண்ணம் எள்ளளவும் ஏற்படாதவாறும், காப்பிய உறுப்பினர்களில் ஒருவனுகவே கருதச் செய்த கைத்திறமும், கவிதையாற்றலும் கவனிக்கற்பாலது. அன்றியும் மாடலனைக் காப்பியத்தில் நுழைக்கும் சுவடும் பொருத்துவாயிலும் படிப்போர்க்குப் புலப்படாதவாறு, படிப்போர் மனத்தை எங்கோ ஈர்த்துச் சென்று இறுதியில் (தேவை நிறைவேறியவுடன்) காப்பியத்தினின்றும் நீக்குவதாகவே நம் நினைவிற்குத் தோன்றுதவாறு

செலுத்திச் செல்லும் சீர்சால் அடிகளின் அறிவுத்திறமும் ஆற்றல் சிறப்பும் போற்றற்பாலது.

முடிப்புரை

இதுகாறும் கண்டவற்றால், செந்தமிழ்ச் சிலம்பாம் சிலப்பதிகாரத்தில் அமைந்த சிறுபாத்திரங்களில் சீர்சால் சிறப்புடை உறுப்பினன் மாடலன் என்றும்; இவன் தமிழ்ப்பெருங்காப்பியத்தில் தோன்றுமிடங்கள் நான்கு-பேசுமிடங்கள் ஒன்பது என்றும்; தலைச்செங்கானம் தந்த தகுதி மிகுதியுடைய மாடலன், குறுமுனிவன் மலையை வலம்வந்து குமரிப்பெருந்துறை யாடி வந்து அடைக்கலக் காதையில் நுழைகின்றான் என்றும்; பாத்திரம் பலவற்றின் பிற்றைநிலை பகரும் பாத்திரமாக அமைந்து அழகுபடுத்துகின்றான்-அணிசெய்கின்றான் என்றும்; அறிவும் ஆற்றலும் மிக்க இவனை இளங்கோவடிகள் (கண்ணகி புகழ்பாடக் கவுந்தியடிகளை அமைத்தமை போன்றே) கோவலன் புகழ் பேசவே அமைத்துள்ளார் என்றும்; அஞ்சாநெஞ்சமும் அறிவுரை பகரும் திறமும் மிக்க மாடலன், ஊழின்பால் உறுதியான நம்பிக்கையுடையோன் என்றும்; இம்மறையோன் இறையோனும் குட்டுவனால் ஏற்றிப் போற்றப்பெற்ற சிறப்பினன் என்றும்; இவனை மறவழிச் சென்ற அம்மன்னனை அறவழியில் திருப்பி, மறக்கள வேள்வியை விடுத்து, அறக்கள வேள்வியைச் செய்யுமாறு செய்த செயற்றிறம் மிக்கோன் என்றும்; எல்லாவற்றிற்கும் மேலாக, சொல்லின் செல்வனாகத் திகழ்ந்த தக்கோன் என்றும்; இவனை இன்தமிழ்க் காப்பியத்தை இனிதே இயக்கிச் செல்லும் சீர்மையும் சிறப்பும உடையோன் என்றும்; இறுதியாக, சொலல் வல்லன்-சோர்விலன்-அஞ்சான்-இவனை இகல் வெல்லல் யார்க்கும் அரிது என்றும்; இத்தகைய வித்தக-வியத்தகு பாத்திரத்தைப் படைத்த இளங்கோவின் திறம் வியந்து செயல் மறந்து பாராட்டற்பாலதாகும் என்றும் கண்டோம்.

## ஏனொலிப்போம்?

ஏனொலிப்போம் வானொலியை ஆக்காச வாணியென?
தேனொக்குந் தென்றமிழா, துள்ளியெழு—நானொலிக்கும்
நல்ல தமிழிடத்தில் நாசமொழி "யிந்தி" வரின்
கொல்லாம லுய்வாயோ சொல்?

---

# நடைப் பிணம்

[ஆங்கில மூலம்: சர். வால்டர் ஸ்காட்*
தமிழாக்கம்: திரு. கு. பரமசிவன், எம்.ஏ.]

" தங்கத்திரு நாடீதென் அன்னை நாடு ;
தரணியிலே ஈதெனக்குச் சொந்தம் " என்றான் ;
எங்கெங்கோ அயல்நாட்டுக் கரைகள் தம்மில்
இழிந்தலைந்து திரிந்தும்தா யகத்தை நோக்கிச்
செங்கழற்கால் திரும்புங்கால், பொங்கும் இன்பம்
செறிந்திடலால் உளந்துள்ளும் செய்கை யில்லான்;
அங்கவனைப் பார்மின்கள் ; அவனைப் பாரீர் !
அலைகின்றான் ; உயிர்ப்புண்டு ; உயிர்தான் இல்லை ! (க)

உருப்பற்றி அலையுமந்தப் பிணத்தை நன்றாய
உள்ளங்கால் ஆதிதலை வரையும் பார்மின் !
பருப்பதில்லை களிவெறியால் அவன்பேர் கேட்டுப்
பாணர்கள் எவருந்தாம் ; பாடல் ஏது ?
விருப்பத்தின் அளவெல்லாம் விரிந்த செல்வம்,
மேம்பட்ட பட்டங்கள், பெருமைப் பேரும்
இருப்பினுமக் கயவன்தன் னலத்தில் ஒன்றி
இவ்வுலகில் வாழ்தலால் இழப்பான் சீர்த்தி. (உ)

இறப்பினுமவ் வெளியன்சா விரட்டைச் சாவாம் ;
இறந்தபிணம் மறித்தொருகால் இறத்தலாகும்
சிறப்பித்துப் பாடுதற்கும், சிறப்பை யெல்லாம்
தெரிந்தெடுத்துப் பேசுதற்கும், உளங்க சிந்து
வறக்கின்ற வரைகண்ணீர் வடிப்ப தற்கும்
வையத்தில் ஒருயிரும் இல்லை யாக,
வெறும்மண்ணில் தோன்றியஅவ் வீணன் மீண்டும்
வீழ்ந்தந்த மண்ணோடு மண்ணாய்ப் போவான். (ங)

* Sir Walter Scott— " Breathes there the man, with soul so dead"—"The Lay of the Last Minstrel."

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) கல்லூரிகளில் தமிழ் பயிற்சி மொழியாகும்

கல்லூரிகளில் தமிழைப் பயிற்சியாகுவதற்கென அமைக்கப்பட்ட குழுவினர் தமது அறிக்கையைக் கல்வி அமைச்சரிடம் அளித்துள்ளனர். தமிழில் பாடப்புத்தகங்கள் வெளியிடவும் தயாரிக்கவும் மற்றும் அரசின் உத்தரவுக்கு ஏற்பத் தமிழில் கலைச் சொற்களைத் தயாரிப்பதற்கான யோசனைகள் இந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளன. தமிழில் கலைச் சொற்களைத் தயாரிக்கப் பல்வேறு துறைகட்கும் அவ்வத்துறைகளில் திறமை மிக்கார் அடங்கிய ஒவ்வொரு குழு அமைக்கப்பட்டுள்ளது. விரைவில் இக்குழுவினர் கலைச்சொற்களடங்கிய பட்டியலைத் தயார் செய்து விடுவர் எனவும் அதற்கான முயற்சிகள் விரைந்து நடைபெறுவதாயும் தெரிகிறது.

குறிப்பு: கல்லூரித் தமிழ்க் குழுவினரும் அரசினரும் இங்ஙனம் விரைந்து தமிழ்ப்பணியாற்ற முனைந்திருப்பது மகிழ்ச்சிக்குரியதே. கலைச் சொற்களைத் தயாரிக்கும் திறமைக் குழுவினர் தனித்தமிழ் ஆட்சியைக் குறிக்கோளாகக் கொண்டு ஆவன செய்வார்களாக.

## (உ) பனைசைத் தமிழ்க் கல்லூரியின் வெற்றி

திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியிலிருந்து சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் தேர்வுக்கு இவ்வாண்டு முதனிலை, இறுதி நிலை வகுப்பு மாணவர்கள் 67 பேர் அனுப்பப்பட்டனர். அவர்களனைவரும் தேர்ச்சியுற்றனர். இத்தேர்வில் இங்ஙனம் நூற்றுக்கு நூறு மாணவர்கள் வெற்றிபெற்றது குறிப்பிடத் தக்கது.

குறிப்பு: பனைசைச் செந்தமிழ்க் கல்லூரி மாணவர்களின் வெற்றி அக் கல்லூரித் தலைவர், ஆசிரியர்கள் ஆகியோரின் வெற்றியாகும். வெற்றி பெற்ற மாணவர்களைப் பாராட்டுகிறோம்—வாழ்த்துகிறோம். மற்றக் கல்லூரிகளும் பனைசைக் கல்லூரியின் பாதையில் சென்று தமக்கும் தமிழுக்கும் வெற்றி தேட இதுவொரு நல்ல வழிகாட்டியாகும். வாழ்க பனைசைச் செந்தமிழ்க் கல்லூரி!

## (ரு) தமிழில் தந்தி

"பல்வேறு அறிஞர்கள், தலைவர்கள், நினைவைப் போற்றும் வகையில் வெளியிடப்படும் அஞ்சல் தலைகளில் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்களின் உருவப் படத்தை வெளியிடாதது வருந்தத்தக்கது. வ. உ. சியின் உருவம் பதித்த அஞ்சல் தலைகள் வெளியிடும்படி மக்கள் அரசினரை வற்புறுத்தவேண்டும். அதிலும் குறிப்பாகத் தொழிலாளர்கள் இதனை வலியுறுத்தவேண்டும். இந்தியில் தந்தி அனுப்ப வசதி செய்யப்பட்டுள்ளது. அதுபோல் தமிழ், தெலுங்கு, மலையாளம் ஆகிய வட்டார மொழிகளிலும் தந்தி அனுப்ப அரசினர் வசதி செய்து தரவேண்டும் என்ற தீர்மானம் ஒன்றை நிறைவேற்ற வேண்டும்" என்று கடந்த 5-7-59 இல் சென்னையில் நடைபெற்ற அனைத்திந்திய தந்திப் போக்குவரத்து 4 ஆவது வகுப்பு ஊழியர்கள் சங்கத்தின் சென்னை வட்டார ஆறாவது

மாநாட்டில் பேசிய சென்னை சட்டமன்ற உறுப்பினர் திரு. க அன்பழகன் அவர்கள் வலியுறுத்திப் பேசினர்.

**குறிப்பு:** பல தலைவர்கள், பெருமக்கள் ஆகியோரின் உருவங்கள் அஞ்சல் தலைகளில் அடுத்தடுத்து வெளிவந்துகொண்டிருக்கின்றன. ஆரும் இந்திய நாட்டு விடுதலை வீரர்கள் பட்டியில் முதல் இடம் பெறத் தக்க வ உ. சியின் படம் இதுகாறும் வந்தபாடில்லை. இத்தகைய நிலை மிகமிக வருந்தத்தக்கது. அங்ஙனமே தந்தி அனுப்ப இந்திக்குத் தரப் பட்டுள்ள ஏற்றம் தமிழுக்கும் பிற தென்னாட்டு மொழிகட்கும் தரப்படா திருப்பதும் வருந்தத்தக்கது இஃது இந்தியப் பேரரசினரின் ஓரவஞ் சனையைக் காட்டுவதாகும் இதனைச் சுட்டிக் காட்டிய திரு. அன்பழகனு ரவர்களைப் பாராட்டுகிறோம்

(ச) **நவமணிகள் வெளியீட்டு விழா**

இவ்வெளியீட்டு விழாத் திருவாவடுதுறை ஆதீனச் சார்பில் சென்னைக்கோநகர்க்கண் சென்னைநகர்மாந்தர், பாராட்டுக்குழு, எழுத் தாளர்வட்டம் ஆகியவற்றின் நன்முயற்சியால் 14-7-1959 செவ்வாயன்று திருமயிலாப்பூர் இரசிகரஞ்சன சபையில் நடைபெற்றது.

இவ்விழாவிற்குத் தலைமை தாங்கி டாக்டர் சி. பி. இராமசாமி ஐயர் இந்நூலை வெளியிட்டுள்ளார். இந்நூலாசிரியர் திரு. டி. எஸ். வைத்திய நாதனுவர். திரு. எம். எம் தண்டபாணி தேசிகர் கடவுள் வாழ்த்துப் பாடினர். காஞ்சி காமகோடி திரு. சங்கராசசாரியசாமிகள், தருமை ஆதீன முதல்வா முதலியோர்களின் வாழ்த்துக்கள் வந்துள்ளன. திருமதி, உருக்குமணிதேவி எம் பி., சாமிநாதய்யர் நூலநிலையச் சார்பாக நூலா சிரியர்க்குப் பொன்னாடை வழங்கினர்.

பொருளமைச்சர் திரு சி. சுப்பிரமணியம் ஆசிரியரையும் ஆதீனத் தையும் பாராட்டி ஒரு செய்தி விடுத்துள்ளனர். திருவாளர்கள் ம. பொ. சிவஞானக்கிராமணியார், தெ. பொ. மீனாட்சிசுந்தரனா, கி. வா. சகன் னாதன், டி. புருசோத்தமன் எம. எல். சி. ஆகியோர் நூலைப்பற்றிப் பாராட்டிப் பேசினர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சி யாளர் திரு. எஸ். தண்டபாணி தேசிகர் நன்றிமொழிய விழா நிறை வுற்றது.

(ரு) **திருக்குறள் வேண்டாச் சில்லோர்**

முத்தமிழ் அமிழ்தினை என்றும் வளர்த்துவரும் உளமார்ந்த உணப்பு வாய்ந்து திகழும், மதுரைமாநகர் அன்றும் இன்றும் என்றும் ஒரு தனிச் சிறப்பமைந்து விளங்கும் பொற்பினது. ஆங்குள்ள நகரமன்றத்தின்கண் "எப்பொருள் யாராயார்வாய்க் கேட்பினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்னும் திருவள்ளுவா அருளிய செந்தமிழ் மாமந்திரத் தைப் பொன்னெழுத்திற் பொறிக்கவேண்டுமென்று தலைசிறந்த உறுப் பினராகிய ஒரு தமிழன்பர் ஓர் அரிய தீர்மானத்தைக் கொண்டுவந்தன ரெனத் தெரிகின்றது. அதனைப் பொதுவுடைமைச் சாரபினர் எதிர்த்தன ராம் என்னே இவர்தம் தாய்மொழிப் பற்று? இவர்கட்குத் தலையிடமாகிய உருசிய மாசுக்கோவில் உலகப் பொதுமறையாம் திருக்குறளையும், அதன ஆசிரியர் திருவள்ளுவ நாயனாரையும் நனிமிகப் பாராட்டி மாநாடுகள

நிகழ்த்துகின்றனர். அதனை எண்ணியேனும் எதிர்த்த உறுப்பினர் மனந் திரும்புவாரென நம்புகின்றோம். நிறைவெண் (கோரம்) இன்மையால் நிறைவேறாது கழிந்த அத்தீர்மானம் மீண்டும்வந்து நிறைவேறுமாக! இதுபோன்ற அரிய தீர்மானங்கள் ஏனைய நகரமன்றம், ஐங்குழு மன்றம் முதலிய இடங்களிலும் ஒரு மனமாக நிறைவேற்றப்பட்டுத் திருக்குறளும் பொறிக்கப்பட்டுச் சிறப்புறுமாக.

## (சு) தனித்தமிழ் வேண்டாத் தமிழர்

தமிழ் எழுத்தாளர் சங்கக் கூட்டத்தில் தம்மையுமோர் தமிழர் எனச் சொல்லித் திரியும் ஒருவர் தூய தனித்தமிழ் வெறுப்பினால் இடமுங் காலமும் அறியாது மடமை வந்துறுமே என மனம் துணுங்காது அயன்மொழி மயலால் மறைமலையடிகள் தமிழ் தமிழாகுமா? என்று வாய் சோர்ந்தனர். அவர்தம் புன்மைக்கிரங்கி ஆண்டுத் தலைமைபூண்ட தமிழ்க் காவலர் டாக்டர் சிதம்பரநாதச் செட்டியாரவர்கள் 'வேறெது தமிழ்? கலப்பில்லாத தூய இனிய தண்ணார் தமிழன்றோ மறைமலையடிகளார் தமிழ்! இது புரியவில்லை யென்பார் பழந்தமிழ் மேன்மையறியாதவராவர். புரியப்படித்துக் கொள்ளுதல் வேண்டும். மடியராய்த் தமிழைக் கெடுக்கும் நிலைக்கு வருதல் தகாது. இத்தகையோர்க்குமிடமிருக்கிறதே என்று வருந்த வேண்டுவதுதான்' என்று உணர்ச்சி மிகவுரைத்துள்ளார்கள். உலகத்துப் பல்வேறிடங்களிலும் தோன்றிய பண்புறுமாந்தர் ஒவ்வொருவரும் தம்மின்னுயிரினும் சிறப்பாகத் தம் தாய்மொழியையும், தாய்நாட்டையும் ஓம்பி வருகின்றனர். உலகுணர்ந்தாரனைவர்க்கும் நன்றாகப் புரியவரும். அதுவுமில்லாத இவர் நிலையை என்னென்பதென விசைத்தனர்.

குறிப்பு: இத்தகையோர் இனியேனும் உண்மையோர்ந்து திருந்துவாராக. கூடாருடன் கூடிக் கேளாதன கேட்டு முன்னோர் வைப்புப் பொருளைப் புறக்கணித்துவிட்டு "நறுவிய, வாயின வேனும் உமிழ்ந்து கடுத்தின்னும், தீயவிலங்கிற் சிலர்" போன்று, என்னும் மாறாத் தனி மரண்பு உள்ள உயர்தமிழையொழித்துப் பிச்சை யெடுத்து வாழ்வார் போல் பிறமொழிச் சொல்லைக் கலந்து தம்மில் மகிழுவோர் தாய்க் கொலைஞர் என்னும் உண்மை வரும் வெண்பாவால் உணர்க:

பெற்றபெரு மக்கடமைப் பேணாது மாளவிட்டு
மற்றவரை யோம்பு மதியுறழ்வார்—பெற்றதமிழ்த்
தாய்மொழியை விட்டொழித்துச் சார்வேற்றுச் சொற்புகுப்போர்
தாய்மையினைக் கொன்றொழிப்பார் தாம்.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.